# ஸ்ரீ மஹாபாரதம்:

## கர்ணபர்வம்

திரிசிரபுரம்
ஸெண்ட் ஜோஸப் காலேஜ் ஸம்ஸ்கிருத தலைமைப்பண்டிதர்,
மஹாவித்வான், ஸாரஸ்வதஸாரஜ்ஞர், கவிசிகாமணி,
ஸ்ரீ. உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்
அவர்களால் மொழிபெயர்க்கப்பெற்று,

திருப்பனந்தாளாதீனகர்த்தர்களாக இருந்த
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி - சொக்கலிங்கத்தம்பிரான்
அவர்களுடைய பேருதவியைக்கொண்டு,

கும்பகோணம் காலேஜ் ரிடயர்ட் தமிழ்ப்பண்டிதர்
மணலூர் - வீரவல்லி
இராமாநுஜாசாரியரால்
பதிப்பிக்கப்பெற்றது.

சென்னை:
கமர்ஷியல் பிரஸ்.

விலை ரூபா 3 : தபால் சார்ஜ் வேறு.

1923.

ஸ்ரீ

# முகவுரை

ஸ்ரீ மஹாபாரதத்தில், யுத்தபர்வங்களுள் மிகச்சிறந்ததான கர்ணபர்வம் இப்போது பூர்த்தியானதைப் பெருமகிழ்ச்சியுடன் அன்பர்களுக்குத் தெரிவிக்கலானேன். சிலமாதங்களுக்குமுன்னமேயே வெளிவந்திருக்கவேண்டிய இந்தப்பர்வம், போதுமான ஸௌகர்யங்களில்லாமையால் வெளிவராமல், இப்போதாவது வெளிவந்தது ஸ்ரீ கண்ணபிரானுடைய பூர்ணகிருபையினாலேயே.

கர்ணனுக்கு முன்னும் பின்னும் படைத்தலைமை வகித்தவர்கள், க்ஷத்ரியதர்மத்தில் சிறிதுந்தவறாமல் போர்செய்திருந்தாலும், பாண்டவர்கள்பக்கம் நியாயமிருந்ததால் அவர்களிடத்து அன்புடையவர்களாகி, அவர்களோடு நட்புக்கொள்ளும்படி துர்யோதனனுக்குப் பலமுறை நற்புத்தி கூறினவர்கள். கர்ணனோ, பாண்டவர்களிடத்து ஆழ்ந்த பகைமைகொண்டவனும் அவர்களிடத்துத் துரியோதனனுக்குப் பகைமை மேன்மேலும் வளர்ச்சியடைவதற்கு முக்யகாரணமாயிருந்தவனுமாவான். ஆதலின், அவன் படைத்தலைமைவகித்து நடத்திய யுத்தம் இவ்வளவு கடுமையாக இருந்திருக்குமென்பது சொல்லாமலே விளங்கும். * அனுக்ரமணிகாத்தியாயத்தில், ஸ்ரீ மஹாபாரதத்தை ஒருவிருக்ஷமாக உருவகப்படுத்தியவிடத்து இந்தக் கர்ணபர்வம் அதன் புஷ்பமாகக் கூறப்பட்டிருத்தலே, இதன் பெருமையை நன்குவிளக்கும்.

பர்வஸங்கிரஹாத்யாயத்தில், † 'இதில், புத்திசாலியான சல்லியனை ஸாரதியாக் நியமித்ததும், புராதனசரித்திரமாயுள்ள திரிபுரஸம்ஹாரமும், யுத்தப்பிரயாணத்தில் கர்ணனுக்கும் சல்லியனுக்கும் நடந்த குரூரமான ஸம்வாதமும், தூஷணமடங்கிய ஹம்ஸகாகீயமென்னும் கதையும், பாண்டியன் மஹாத்மாவான அஸ்வத்தாமாவினால் கொல்லப்பட்டதும், ‡ தண்டஸேனன் தண்டன் இவர்களுடைய

---

* ஆதிபர்வம், 11-ம் பக்கம். † ஆதிபர்வம் 49-ம் பக்கம்.

‡ இவனுடையபெயர் தண்டதாரனென்றே மற்ற இடங்களில் காணப்படு

வதமும், தர்மராஜாவாகிய யுதிஷ்டிரரும் கர்ணனும் இரண்டுதே ராளிகளாகச் சண்டைசெய்தபோது வில்லாளிகள் யாவரும் பார்த் திருக்கையில் கர்ணனால் யுதிஷ்டிரருக்கு ப்ராண ஸந்தேகமுண் டாக்கப்பட்டதும், யுதிஷ்டிரருக்கும் அர்ஜுனனுக்கும் பாஸ்பரம் கோபமுண்டானதும், அந்தச் சமயத்திற் கிருஷ்ணன் அர்ஜு னனைச் சமாதானப்படுத்தியதும், பீமஸேனன் பிரதிஜ்ஞை செய்து யுத்தத்தில் துச்சாஸனன்மார்பைப் பிளந்து ரக்தத்தைக் குடித்ததும், கர்ணனும் அர்ஜுனனும் இரண்டு தேராளிகளாகச் செய்த சண்டையில மகாரதனாகிய கர்ணனை அர்ஜுனன் கொன்ற தும் சொல்லப்பட்டன' என்று இதன் கதைச்சுருக்கம் கூறப்பட் டுள்ளது. நண்பின் லக்ஷணங்களையும் பலவகையான தர்மங்களை யும் நீதிகளையும் இந்தப்பர்வத்தில் நன்றாக அறிந்துகொள்ளலாம்.

இந்தப்பர்வத்தை நான் பரிசோதித்து வருகையில், அச-வது அத்யாயத்தின்இறுதியில் *அர்ஜுனன் திருதராஷ்டிர குமாரர்களில் பதின்மரைக் கொன்றதாக இருந்தது. அங்ஙனம் பொருள்கொள் வது, திருதராஷ்டிர குமாரர்கள் நூற்றுவரையும் தானே கொல்லுவ தாகப் பீமஸேனன்செய்த ப்ரதிஜ்ஞைக்கு விரோதமாவதுபற்றி, என் மனத்தில் பெருங்கவலையை உண்டாக்கிற்று. இந்தச் சந்தேகத்தைக் குறித்துப் பண்டிதர்களிடம் விசாரித்துவருகையில், சென்னை ப்ரெஸிடென்ஸி காலேஜ் ஸம்ஸ்கிருதபோதகாசிரியராகிய ப்ரம்மஸ்ரீ Prof. S. குப்புஸ்வாமிசாஸ்திரிகள், M. A., அவர்களிடம் தெரிவித்த போது, அவர்கள், 'புனாவில 'Bhandarkar Oriental Research Institute' என்று டாக்டர் பந்தர்க்கார்பெயரால அமைக்கப்பட்டுள்ள கீழ்நாட்டுப் பாஷா ஆராய்ச்சிக் கழகத்தார், ஸ்ரீ மஹாபாரதத்தை ஆராய்ச்சி செய்துவருகிறார்கள். இதுவிஷயமாக அவர்கள் ஒரு நிச்சயம் செய்திருப்பார்கள். அவர்களுக்கு எழுதினால் உண்மை விளங்கும' என்று சொன்னார்கள். அங்ஙனமே அவர்களுக்கு எழுதலாமென்றெண்ணி, என்னிடமுள்ள வடமொழி மஹாபாரதப் பிரதிகளையெல்லாம் வைத்து ஒப்புநோக்கினேன். என்மொழிபெயர்ப் பிற்கு மூலமாயுள்ள கும்பகோணம் பதிப்பில் 'அங்யே மூடா:' (கூ௰ - ௨௰) என்றபாடம் காணப்பட்டது. அப்போது, தற செயலாக, 'இதற்கு வேறுபொருள் செய்யலாமே' என்ற ஆலோசனை என்மனத்தில் தோன்றிற்று. பிறகு, முன்பின்சுலோகங்களைப் பல

* இதன் விவரத்தைக் காணபர்வம் 377-ம் பக்கத்தில் காண்க.

முறை படித்துப்பார்த்ததில் எனக்குத்தோற்றிய அர்த்தமே சரியான தென்று எனக்கு ஓர் உறுதியுண்டாயிற்று. இதனை, ஸ்ரீமான், குப்பு ஸ்வாமிசாஸ்திரிகளவர்களிடம் திரும்பவும் தெரிவித்தபோது, அவர்கள், இந்தப் பொருளே சரியானதென்றும் பொருத்தமானதென்றும் சந்தோஷித்துக்கூறி, அப்படியே பதிப்பித்துவிடலாமென்று மிகவும் வறபுறுத்திச் சொன்னார்கள். அவ்விதமே பதிப்பித்திருக்கிறேன். புனவிலுள்ள ஷை கழகத்தாருக்கு இதைப் பற்றி எழுதியதில், அவர்கள், 'இந்த இடம் இன்னும் ஆராய்ச்சி செய்யப்படவில்லை' என்றும் 'இப்பொழுது அவகாசமில்லாமையால் இதைப்பற்றிப் பின்பு தெரிவிப்போம்' என்றும் பதிலெழுதி விட்டார்கள். நீலகண்டீயவ்யாக்யானபாடத்திற்கும் ப்ரதாபசந்திராய் C. I. E. மன்மதநாததத்தர் இவர்களுடைய ஆங்கிலமொழி பெயர்ப்புக்கும், நான்கொண்டபொருள் மாறாயிருத்தலால், உண்மை ஏதுவாயிருக்குமோவென்று மனம் அஞ்சுகிறது.

யுத்தபர்வங்கள் ஐந்தினையும் மொழிபெயர்த்துக்கொடுத்து எனக்குப் பேருதவிசெய்த திரிசிரபுரம், ஸெண்ட் ஜோஸப் காலேஜ், ஸம்ஸ்கிருத கலைமைப்பண்டிதர், மஹாவித்வான், கவிசிகாமணி, ஸாரஸ்வத ஸாரஜ்ஞர், ஸ்ரீ. உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்ஸ்வாமிகளவர்கள் இவ்விஷயமாக எடுத்துக்கொண்ட பரிஶ்ரமத்திற்கு நான் என்றும் நன்றிபாராட்டக் கடமையுறறிருக்கிறேன்

ஸ்ரீமஹாபாரத மொழிபெயர்ப்பை மிகவும் ஆதரித்து எனக்கு ஊக்கமளித்துவந்த திருப்பனந்தாள் ஆதீனகர்த்தரவர்களாகிய மகாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ, காசிவாஸி சோமசுந்தரத்தம்பிரானவர்கள் காலஞ்சென்ற பிறகு, அந்த ஸ்தானத்திற்குவந்த மஹாகனம் பொருந்திய ஸ்ரீலஸ்ரீ, காசிவாஸி சொக்கலிங்கத்தம்பிரானவர்களோடு ஒருஸமயம் நான் ஸல்லாபம்செய்துகொண்டிருந்தபோது, அவர்கள, 'கர்ணபர்வத்திற்கு வேண்டிய செலவை நாமே பொறுத்துக்கொள்வோம்' என்று பரமதிருப்தியோடு கூறி, வேண்டிய பொருளுதவியும் உடனே செய்தார்கள். அல்லாமலும், எனக்கு முட்டுப்பாடு உண்டாகுங்காலத்திலெல்லாம் குறிப்பறிந்து வேண்டிய உதவிகளைச்செய்து அவர்கள் என்னை ஆதரித்துவந்தார்கள். அங்ஙனம் உதவிபுரிந்த அந்தப் பெருந்தகையாளர்களை நான் கர்ணனென்றே நினைத்தேன். அவர்களுக்குப்பின், இப்போது அந்தஸ்தானத்தில் வீற்றிருக்கும் மகாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ, காசிவாஸி சொக்கலிங்கத்

தம்பிரானவர்களும், அவர்களுடைய இளவரசான மகாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ, காசிவாஸி சாமிநாதத்தம்பிரானவர்களும், இந்த மஹாபாரதப்பதிப்புவிஷயத்தில் எனக்கு வேண்டிய உதவிகளைச்செய்து ஆதரித்துவருகிறார்கள். இவர்களுடைய பெருமைகளை முன்பு துரோணபர்வமுகவுரையில் தெரிவித்திருக்கிறேன். இந்த ஆதீனத்திலிருந்து நான்அடைகிற உதவிகள் மிகப்பல. இந்தஆதீனம் நீடூழி தழைத்தோங்கவேண்டுமென்று நெஞ்சார நினைத்தலும் வாயார வாழ்த்தலுமன்றி யான் செய்யக்கூடிய கைம்மாறு யாதுளது !

இந்தப்பர்வத்தையும் முன்ஸஞ்சிகைகள் பலவற்றின் இரண்டாம் பதிப்பையும் மிக்கஊக்கத்தோடு நடத்திக்கொடுத்த சென்னை கமர்ஷியல்' அச்சுக்கூடத்தாருடையஉதவி மிகவும் பாராட்டற்பாலது.

இந்த மஹாபாரதப்பதிப்புவிஷயத்தில் நான் அடைந்துள்ள பலவகையான சிரமங்களைச் சுருக்கமாகவாவது இங்கே கூறாமலிருக்க முடியவில்லை. நான் மஹாபாரத கைங்கர்யத்தைத் தொடங்கியபோது பதிப்புவேலை நடந்தமாதிரி நடந்துவந்தால் பலவருஷங்களுக்கு முன்னமே இந்த மஹாபாரதம் பூர்த்தியாகியிருக்கும். இந்தப்பதிப்பு வேலையை நான் தொடங்கியபொழுது, இதற்குவேண்டிய ஸகாயங்களெல்லாம் செய்வதாக வாக்களித்து எனக்கு ஊக்கமுண்டாக்கிப் பிறகு ஏனென்று கேளாமையோடு தாம் மற்றச் சந்தாதார்கள்போல ஸஞ்சிகைகள் வாங்கிவந்ததையும் நிறுத்திவிட்ட கனவான்கள் சிலர். சொல்லளவில் மிகத்தாராளமாகக்கூறி எனக்கு நம்பிக்கையை உண்டாக்கிப் பலமுறை என்னைஅலையச்செய்து என்காலத்தை வீணாக்கி என்மனத்தைப் புண்ணாக்கியவர் சிலர். இந்தவேலையை நிறுத்திவிடலாம் என்று நற்புத்திகூறின பெருஞ்செல்வர் சிலர். பலவருஷங்கள் புத்தகத்தை விரும்பிவாங்கிவந்து பணம்கேட்டபொழுது ராமாயணபாரதங்களை இழித்துக்கூறி என்மனத்திற்கு மிக்கவருத்தத்தை உண்டுபண்ணின கனவான்கள் சிலர். இவர்களுடைய ஒழுக்கங்களால் என்மனத்திலுண்டானபுண் ஆறுவதற்கு, இளமைதொடங்கி என்னிடத்தில் மிக்க அன்புடையவர்களும் இந்த மஹாபாரதப் பதிப்புவிஷயமாக அடிககடி என்னைத் தூண்டியும் பலமுறை லிகிதங்கள் எழுதியும் பொருள்உதவிசெய்தும் என் மனத்திற்கு மிக்க ஊக்கத்தைஅளித்துவருபவர்களும் ஸதாசாரஸம்பன்னர்களும் ஸத்தர்மபரிபாலகர்களுமான கும்பகோணம் ப்ரம்மஸ்ரீ

Prof. K. சுந்தரராமையர் M. A., அவர்களும், வித்வஜ்ஜனபோஷகர்களும் பரோபகாரசீலர்களுமாகிய சென்னை ஹைகோர்ட்டு வக்கீல், ஸ்ரீமான், V. V. ஸ்ரீநிவாஸஐயங்கார் B.A., B.L., அவர்களும்போன்ற சில உத்தமபுருஷர்களுடைய இன்சொல்லும் நன்றூற்றலும் ஸல்லாபமுமே நன்மருந்தாக உள்ளன.

'கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித், தம்மாலியலுதவி தாம்செய்வர்' என்றபடி, சிலநண்பர்கள் புதிய சந்தாதார்களைச் சேர்த்துக்கொடுத்தல் முதலிய பல உதவிகளை இந்தமஹாபாரதப் பதிப்புவிஷயமாகச் செய்துவருகின்றனர். ஸ்ரீகண்ணபிரான் திருவருளால் அவர்களுக்கு எல்லாநன்மைகளும் உண்டாகுக.

இந்த நற்காரியம், தக்க உதவியில்லாமையால், நான் எண்ணியபடி விரைவில் நடைபெறுமலிருப்பதைப்பற்றிப் பலமுறை தெரிவித்துக்கொண்டிருக்கிறேன். ஆதிதொடங்கி இந்த மஹாபாரதத்தைச் சிரத்தையுடன் வாங்கிப் படித்துவரும் சந்தாதார்களான ஆப்தர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கையொப்பமாவது சேர்த்துக்கொடுத்து இந்த மஹாபாரத கைங்கர்யத்தைப் பூர்த்திசெய்வித்து அதனால்வரும் புகழ்புண்ணியங்களைக் கைக்கொள்ளும்படி அவர்களை மீட்டும் பிரார்த்திக்கிறேன்.

இனி வெளிவரவேண்டிய பர்வங்களை விரைவில் வெளிவரச்செய்யவும், ஸ்ரீ மஹாபாரத சம்பந்தமாக நான் வெளியிட எண்ணியிருக்கிற ஆராய்ச்சிக்குறிப்பு அபிதானவிளக்கம் முதலியவற்றை இனிது நிறைவேற்றவும்வேண்டிய எல்லாவித ஆற்றல்களையும் எனக்கு அளித்தருளும்படி பாண்டவஸஹாயனை ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமானுடைய திருவடித்தாமரைகளை எப்பொழுதும் வணங்குகிறேன்.

மயிலாப்பூர்,
5—1—1923.

இங்ஙனம
ம. வீ. இராமானுஜாசார்யன்.

# பிழையும் திருத்தமும்



ஆதிபர்வம், 49-ம் பக்கம் 21, 22-ம் வரி 'பாண்டியன், தண்டஸேனன், தண்டன் இம்மூவரையும் மகாத்மாவான அஸ்வத்தாமா வதம்செய்ததும்' என்பதை, 'பாண்டியன் மகாத்மாவான அஸ்வத்தாமாவினால் கொல்லப்பட்டதும் * தண்டஸேனன் தண்டன் இவர்களுடைய வதமும்' என்றும்,

துரோணபர்வம், 764-ம் பக்கம் 33-ம் வரியில், 'பாண்டவர்களே !' என்பதை, 'பாண்டவர்களிடமிருந்து' என்றும்,

கர்ணபர்வம், 99-வது பக்கம் 27-28-29-ம் வரிகளில் 'அரசர்களெல்லாரும் மிக்க மதிமயக்கம் உண்டாய்விட்டதென்று நிச்சயம் செய்துகொண்டு தர்மார்த்தங்களுடைய நிச்சயங்களைச்செய்ய முயற்சிசெய்கின்றார்கள்' என்பதை, †'நற்குலத்தில் பிறந்த அரசர்களனைவரும் தர்மார்த்தங்களுடைய நிச்சயத்தைக் கேட்டுத் தெளிந்துகொள்ளாவிட்டால், அதுவே பெருங்கலக்கமென்பது நிச்சயம்' என்றும்,

383-வது பக்கம் 23-வது வரி 'ஸுதேவன்' என்பதையும் 28-வது வரி 'ஸுஷேணன்' என்பதையும், ‡ 'ப்ரஸேனன்' என்றும், 24-வது வரியில் 'கொன்றான்' என்பதை 'அடித்தான்' என்றும்,

394-வது பக்கம், 2-4 வரி 'அம்பறாத்தூணிகளையுடையவர்களும கவசம்பூண்டவர்களும் கத்தியுள்ளவர்களும் தண்டங்களைத் தரித்தவர்களும் விற்பிடித்தவர்களுமான' என்பதை 'நிஷங்கி, கவசி, கட்கி, தண்டதாரன், தனுர்த்தரன்' என்றும், திருத்திக்கொள்க.

ஷை பர்வம் 86-வது பக்கத்தில் 21-வது அத்யாயமுடிவில் 'பதினோருவதுநாள் யுத்தம் முடிந்தது' என்று சேர்த்துக்கொள்க.

* இவனுடைய பெயர் தண்டதாரனென்றே மற்ற இடங்களில் காணப்படுகிறது.

† வேறுபாடம்.

‡ இது நீலகண்டீயவ்யாக்யான பாடம்; கிருஷ்ணாசார்யர் பதிப்பில், 'ஸுதேவன்' 'ஸுஷேணன்' என்றே யிருக்கின்றன.

ஸ்ரீ

ஸ்ரீ மஹாபாரதம்

# கர்ண பர்வம்.



## * விஷயஸூசிகை.



* அதிகபாடங்களுக்கு விஷயஸூசிகை எழுதப்படவில்லை.

# விஷயஸூசிகை.

அத்யாயம். பக்கம்.

# விஷயஸூசிகை.

# விஷயஸூசிகை.

அத்யாயம். பக்கம்.

ஸ்ரீ

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயநாய நம:

# ஸ்ரீ மஹாபாரதம்.

## கர்ணபர்வம்



### முதலாவது அத்யாயம்.

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ||

(ஸஞ்சயன் பாசறையினின்று ஹஸ்தினபுரம் சென்று திருதராஷ்டிர னுக்குக் கர்ணன் முதலானவர்களுடைய வதத்தைக் கூறியதும் அதனைக்கேட்டு மூர்ச்சையடைந்த திருதராஷ்டிரனை ஸஞ்சயன் முதலானவர்கள் தேற்றியதும்.)

வைசம்பாயனர் சொல்லுகிறார். "பாரதரே! மிக்க புஜபலமுள்ளவனான ஸஞ்சயன் பாசறையினின்று ஹஸ்தினபுரத்தை அடைந்து திருதராஷ்டிரனுடைய அரண்மனையில் பிரவேசித்தான். ஸூத புத்ரனான அவன் பாண்டவர்களாலேசெய்யப்பட்ட கோரமான கர்ண

---

முதல்அத்யாயம் முதல் 20-சுலோகங்களின் ஸ்தானத்திலிருக்கும் அதிக பாடம். நீலகண்ட வியாக்யானத்துடன்கூடிய பொம்பாய்ப் பதிப்பிலும் கல்கத்தாப் பதிப்பிலுமுள்ள பாடம் இதுவே.

### அதிகபாடத்தின் முதலாவது அத்யாயம்.

(துரியோதனாதிகள் கர்ணனுக்குச் சேனாதிபதி ஸ்தானத்தில் அபிஷேகம் செய்வித்து அவனுடனே யுத்தத்திற்குப் புறப்பட்டதும், ஜனமேஜயர் கர்ணனுடைய மரணத்தைக் கேட்ட திருதராஷ்டிரன் என்ன செய்தானென்று வைசம்பாயனரைக் கேட்டதும்.)

வைசம்பாயனர், "அரசரே! துரோணர் கொல்லப்பட்ட பிறகு, துரியோதனனைத் தலைமையாகக்கொண்ட அரசர்கள் மிக்க மனவருத்தமுற்றவர்க

---

இதன் உரை விசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கத்திற் காண்க.

னுடைய வதத்தை நினைத்துச் சோகத்தால் பீடிக்கப்பட்டு மிக்கதுயர முற்று அழுதுகொண்டு அந்தப்புரத்தில் பிரவேசித்தவுடன், கண்களில் நீர் ததும்பியவனாகி அரசர்களுள் சிறந்தவனான அரசனை அணுகினான். அரசரே! அவன் அரசனருகில் சென்று பெருமூச்சு விட்டுக்கொண்டு அதிக ஸந்தோஷமில்லாத மனத்தை யுடையவனாகிப் பின்வருமாறு வசனிக்கலானான்:—

"மஹாராஜரே! நான் ஸஞ்சயன். பரதஶ்ரேஷ்டரே! உமக்கு வந்தனம். சூரியகுமாரனான கர்ணன் (ஒருவராலும்) செய்ய முடியாத காரியத்தைச் செய்தும் கொல்லப்பட்டான். அந்தக்கர்ணன் ஸோமகர்களுக்கும் சேதிதேசவீரர்களுக்கும் காசிதேசவீரர்களுக்கும் கரூசதேசவீரர்களுக்கும் மச்சநாட்டுவீரர்களுக்கும் துன்பத்தைச்செய்து காற்றினால்தள்ளப்பட்ட மரம்போலப் படுத்திருக்கிறான். பசுக்கொட்டிலின்நடுவில் பசுக்கூட்டங்களால் நாற்புறமும் சூழப்பட்ட ஒரு விருஷபமானது கொடிய மிருகத்தால் கொல்லப்படுவதுபோல இந்தக்கர்ணன் பகைவர்களால் கொல்லப்பட்டான். அரசரே! சூரியகுமாரனான கர்ணன் ஸாத்யகியுடன் கூடினவர்களான பாண்டவர்களை (ஜயத்தில்) நம்பிக்கையற்றவர்களாகச்செய்தும், பாஞ்சாலர்களுடைய ஆயிரக்கணக்கான தேர்களை நாசஞ்செய்தும், மகாவில்லாளிகளான சூரர்களை ஜயித்துப் பத்துத்திக்குக்களிலும் ஓடும்படிசெய்தும், (முடிவில்) பாண்டுபுத்திரனான கிரீடியினால் கொல்லப்பட்டான். மஹாராஜரே! பாண்டுபுத்திரனான அர்ஜுனன் கர்ணனைக்கொன்று, துராத்மாக்களாலே அடையமுடியாததான பகை முடித்தலென்னும் கடனிலிருந்துவிடுபட்டு, மனக்கவலை நீங்கினவனானான். கர்ணன்மரித்ததானது, கடல்கள் வற்றியதுபோலவும் சூரியன் பூமியில் விழுந்ததுபோலவும் மேரு சிதறியதுபோலவுமிருக்கிறது. மன்னரே! அந்த யுத்தத்தில் ஜயத்தை விரும்பிய யுத்தவீரர்களும் சூரர்களும்

ளாகி அஶ்வத்தாமாவை அடைந்தார்கள். அவ்வரசர்கள் துரோணரைக் குறித்துத் துக்கிப்பவர்களும் மனக்கலக்கத்தினால் வல்லமையிழந்தவர்களும் துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்களுமாகி அஶ்வத்தாமாவைச் சூழ்ந்தார்கள். அவ்வரசர்கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள காரணங்களால் ஒரு முகூர்த்த காலம் (அஶ்வத்தாமாவைத்) தேற்றி இரவு வந்தவுடனே, தங்கள் வாஸஸ்தானங்களை அடைந்தார்கள். கௌரவரே! அந்த அரசர்கள் துக்கத்தோடும் சோகத்தோடுங் கூடியவர்களாகக் கோரமான அழிவை நினைத்துத் தங்கள் வீட்டிலும் சுகத்தை அடையவில்லை. விசேஷித்துச் சூதபுத்திரனும் ராஜாவான துரியோதனனும் துச்சாஸனனும் ஸுபலனுடைய

பரிகாயுதம்போன்ற கைகளையுடையவர்களுமான அரசர்களும் ராஜ புத்திரர்களும் கொல்லப்பட்டார்கள். வேந்தரே! அந்த மஹாயுத்தத்தில் ரதிகர்களுடைய கூட்டங்களும் காலாட்படைகளும் ஆயிரம் ஆயிரமாகக் கொல்லப்பட்டன. அந்த மகாயுத்தத்தில் யானைகளும் குதிரைகளும் கொல்லப்பட்டன. மஹாராஜரே! இருதிறத்துச் சேனைகளிலும் ஒருவருக்கொருவர் தீங்கிழைத்தவர்களான க்ஷத்திரியர்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொல்லப்பட்டார்கள். மேன்மை தங்கியவனும் ஸூரியனுடைய குமாரனுமான கர்ணன் பகைவர்களைப் பெரும்பாலும் அழித்துப் பாண்டவ சேனையாகிய நதியைக் கடந்து பார்த்தனுகிறகரையை அணுகி (சத்துருவினால்) கொல்லப்பட்டான். அரசரே! உம்மைச் சேர்ந்தவர்களுக்கு ஜயத்திலுள்ள ஆசையும் வைரத்துக்கு முகமுமாயிருந்ததான (கர்ண ஸகாயமாகிற) அது தாண்டப்பட்டது. மஹாராஜரே! நன்மையில நோக்கமுள்ள பந்துக்களால் முன்பு உரைக்கப்பட்டதும் நீர் தெரிந்து கொள்ளாததுமான அப்படிப்பட்ட மஹாபயங்கரமான இந்தத் துன்பம் உம்மை அடைந்திருக்கிறது. புத்திரர்களுக்காக ராஜ்யத்தை விரும்புகிறவரும் நன்மையை விரும்புகிறவருமான உம்மால் தீமையான காரியங்களே செய்யப்பட்டன. அவற்றின்பயன் உமக்கு வந்து விட்டது. அரசரே! பாண்டவனாகிய பீமஸேனனால் அவன் சொற்படியே துச்சாஸனனும் கொல்லப்பட்டமையால் அவனது பிரதிஜ்ஞையும் படைமுகத்திலே நிறைவேற்றப்பட்டது. மஹாராஜரே! ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச்செய்து பாண்டவனாகிய

---

குமாரனும் மகா பலசாலியுமான சகுனியும் மகாத்மாக்களான பாண்டவர்களுக்கு (தங்களாலுண்டான) கிலேசங்களை நினைத்துக்கொண்டே துரியோதனனுடைய பாசறையில அன்றிரவு வாஸஞ்செய்தார்கள். பாண்டவர்கள் சூதாட்டத்தில, தங்களால வருத்தப்பட்டதையும் த்ரௌபதி ஸபைக்குக் கொண்டுவரப்பட்டதையும் நினைத்துத் துக்கித்தவர்களும் மிகக மனநடுக்க மடைந்தவர்களுமானார்கள். மன்னரே! அவ்வாறு சூதாட்டத்தால் உண்டு பண்ணப்பட்ட (பாண்டவர்களுடைய) அவ்விதமான கிலேசங்களை எண்ணுகிறவர்களான அவர்களுக்குத் துக்கத்தினால அந்த இரவானது நூறுவருஷங்களுக்குச் சமமாகச் சென்றது. பிறகு, வெள்ளென விடிந்தவுடன், அவர்களனைவரும் தெய்வத்தினுடைய ஆஜ்ஞையினால நிலைபெற்றவர்களாகிச் சாஸ்திரத்தினால காணப்பட்ட முறைப்படி அவசியமான நித்திய கருமத்தைச் செய்தனர். பாரதரே! அவர்கள் அவசியம் செய்யவேண்டிய காரியங்களைச் செய்து மனத்தில ஆறுதலை அடைந்து (சேனைகளுக்கு) யுத்தத்திற்கு

பீமனால் உமது குமாரனாகிய துச்சாஸனனுடைய இரத்தமானது ரண களத்தில் பானம் செய்யப்பட்டது " என்றான்.

மகாராஜரே! அம்பிகாபுத்திரனான திருதராஷ்டிரன் இந்த வார்த்தையைக் கேட்டுச் சோகத்தின் முடிவைக்காணாமல் துர்யோதனனையும் மாண்டவனாக எண்ணி மனத்தளர்ச்சியடைந்து புத்தியை இழந்த யானைபோலப் பூமியில் வீழ்ந்தான். பாரதர்களுட் சிறந்தவரே! அந்த ராஜஸ்ரேஷ்டனான திருதராஷ்டிரன் மனத்தளர்ச்சியடைந்து பூமியில் விழுந்தவுடனே (காந்தாரி முதலிய) ஸ்திரீகளுடைய அழுகுரல் மிகுதியாகத் தோன்றியது. அந்தச்சப்தமானது நான்குபக்கங்களிலும் பூமியை முழுதும் நிரப்பியது. மகாகோரமான துயரக்கடலில் மூழ்கியவர்களான பாரதகுல ஸ்திரீகள் துக்கத்தாலும் சோகத்தாலும் பீடிக்கப்பட்டு மனம் மிகநடுங்கி அழுதார்கள். பரதரிற் சிறந்தவரே! காந்தாரியானவள் அரசனிடம் வந்து அறிவிழந்து பூமியில் விழுந்தாள். அந்தப்புரஸ்திரீகள் அனைவரும் விழுந்தார்கள். வேந்தரே! பிறகு, ஸஞ்சயன், மனவருத்தமுற்று மோகமடைந்து கண்ணீரை மிகுதியாகச் சொரிகின்ற அந்த ஸ்திரீகளை மனத்தில் தேறுதலடையும்படி செய்தான். காற்றினால் நாற்புறங்களிலும் அசைக்கப்படுகின்ற வாழைமரங்கள்போல அடிக்கடி நடுங்குகின்றவர்களான, அந்தப்பெண்டிர்களோ மனத்தேறுதலை அடைந்தார்கள். அப்பொழுது விதுரரும் அறிவே கண்ணாகவுள்ளவனும அரசனும் தலைவனும் குருகுலத்திற் பிறந்தவனுமான திருதராஷ்டிரனை முகத்திலும் அங்கத்திலும் தண்ணீரைத்தெளித்து மூர்ச்சை

---

**ஆயததமாகும்படி உத்தரவிட்டுத (தாஙகளும்) புறப்பட்டார்கள். அரசர்கள் கர்ணனை ஸேனாபதியாகச்செய்து ஊக்கத்தை அளிக்கத்தக்க மங்கள காரியங்களைச்செய்துகொண்டு பிராம்மண ஸ்ரேஷ்டர்களைத் தயிர்ப் பாத்திரங்களாலும் நெய்களாலும் அக்ஷதங்களாலும் பசுக்களாலும் குதிரைகளாலும் பொன்னாபரணங்களாலும் விலையுயர்ந்த வஸ்திரங்களாலும் பூஜித்துச் *சூதர்களாலும் மாகதர்களாலும் வந்திகளாலும் 'ஜய விஜயீபவ' என்ற ஆசீர்வாதங்களால துதிக்கப்பெற்று யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். வேந்தரே! அவ்வாறே பாண்டவர்களும் காலையில் செய்யவேண்டிய காரியங்களைச்செய்து யுத்தஞ்செய்ய நிச்சயித்துக்கொண்டு (தங்கள்) பாசறையினின்றும் விரைவாகப புறப்பட்டார்கள். பிறகு, பரஸ்பரம் ஜயத்தில் விருப்பமுற்றவர்களான கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் திடுக்கிடக் கூடியதும் மயிர் பொடிக்கச செயவதுமான யுத்தம் ஆரம்பித்தது. அரசரே! கர்ணன்**

*** ஆதிபாவம, 354-ம பக்கம் குறிப்பிற் காண்க.**

யைத் தெரிவித்தார். ராஜேந்திரரே! அந்தத் திருதராஷ்டிர ராஜன் மெதுவாகப் பிரஜ்ஞையை யடைந்து அந்த ஸ்திரீகளையும் கண்டு பைத்தியம் பிடித்தவன்போலப் பேசாமலிருந்தான். பிறகு, நெடு நேரம் சிந்தையுற்று அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு தன் புத்திரர்களை நிந்தித்தான். பாண்டவர்களை நன்குமதித்தலையும்செய்தான். ராஜாவான திருதராஷ்டிரன் தன்னுடையபுத்தியையும் ஸுபல புத்திரனான சகுனியின் புத்தியையும் நிந்தித்துக்கொண்டு நெடுநேரம் ஆலோசித்து அடிக்கடி நடுக்கமுற்று மீண்டும் தைரியத்துடன் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு கவல்கணகுமாரனும் ஸூதனுமான ஸஞ்சயனைப் பார்த்து மறுபடியும் வினவலானான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! உன்னால் சொல்லப்பட்ட அந்த வாக்கியத்தை நான் கேட்கவில்லை. ஸூத! எப்பொழுதும் ஜயத்தில் ஆசையுடையவனும் என்னுடைய புத்திரனுமான துரியோதனன் ஜயத்தில் ஆசையை யிழந்து யமனுடைய வாஸஸ்தானத்தை அடையாமலிருக்கிறனோ? ஸஞ்சய! உன்னால் சொல்லப்பட்ட வார்த்தையை மறுபடியும் எனக்கு உள்ளபடி சொல்வாயாக" என்றான். ஜனமேஜயரே! இவ்வாறு வினவியதைக் கேட்ட ஸஞ்சயன் திருதராஷ்டிர ராஜனைப் பார்த்துக் கூறலானான்.

---

ஸேனைபதியானபின், இந்தக் கௌரவ பாண்டவ சேனைகளிரண்டிற்கும் ஆச்சரியகரமான காட்சியுள்ள யுத்தமானது இரண்டுநாட்கள் நடந்தது. பிறகு, கர்ணன் யுத்தத்தில மிக்க பெரிதான சத்துருநாசத்தைச்செய்து கௌரவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அர்ஜுனனால் தள்ளப்பட்டான். பிறகு, ஸஞ்சயன் விரைவாக ஹஸ்தினபுரத்திற்குச்சென்று குருக்ஷேத்திரத்தில நடந்த எல்லாவற்றையும் திருதராஷ்டிரனுக்கு உரைத்தான்" என்றார். ஜனமேஜயர், "பிராம்மணோத்தமரே! பிராயமுதிர்ந்தவனும் அம்பிகாபுத்திரனுமான திருதராஷ்டிரராஜன் மகாரதர்களான கங்காபுத்திரரான பீஷ்மரும் துரோணரும் கொல்லப்பட்டார்களென்பதைக்கேட்டு அதிக துன்பத்தை அடைந்திருந்தான். துக்கமடைந்துள்ள அவன் துரியோதனனுக்கு நன்மையிலேயே விருப்பமுள்ள கர்ணன் கொல்லப்பட்டானென்பதைக் கேட்டு எவ்வாறு உயிர்தரித்திருந்தான்? குருவம்சத்திலுதித்ததிருதராஷ்டிரராஜன், எந்தக் கர்ணனிடத்தில தனபுத்திரர்களுக்கு ஜயம் உண்டாகுமென்று ஆசை வைத்திருந்தானோ அவன் கொல்லப்பட்டவுடன், எவ்வாறு உயிரை வைத்திருந்தான்? கர்ணன் கொல்லப்பட்டானென்பதைக் கேட்டும் அரசன் உயிரை விடாமலிருக்கிற காரணத்தினால கஷ்டமான நிலைமையிலிருந்தாலும் மனிதர்களால் மரிக்கமுடியாதென்றே எண்ணுகிறேன். பிராம்ம

"அரசரே! மகாரதனை கர்ணன் புத்திரர்களோடும் மகா வில்லாளிகளும் சரீரத்தை இழக்கத்துணிந்தவர்களும் ஸூதபுத்திரர்களுமான பிராதாக்களோடும் கொல்லப்பட்டான். புகழ்பெற்றவனை பாண்டவனால் துச்சாஸனனும் கொல்லப்பட்டான். யுத்தத்தில் பீமஸேனனால் கோபத்தால் (துச்சாஸனனுடைய) இரத்தமும் குடிக்கப்பட்டது" என்று கூறினன். "மகாராஜரே! அம்பிகா புத்திரனை திருதராஷ்டிரன் இவ்வார்த்தையைக் கேட்டு மரிக்கப்படுகின்றவனாகி ஸூதனைப்பார்த்து, "ஸஞ்சய! ஒரு முகூர்த்தகாலம் இரு. அப்பா! என் மனம் கலக்க மடைந்திருக்கின்றது. ஒன்றையும் உரைக்க வேண்டாம்" என்ருன். அரசனும் யாதொன்றும் சொல்லவில்லை. அவ்வாறே ஸஞ்சயனும் விதுரரும் ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, பூபதியான அந்தத் திருதராஷ்டிரனும் அப்பொழுது பேசாமலிருந்துவிட்டான்" என்று கூறினர்.

---

## இரண்டாவது அத்யாயம்.

**(திருதராஷ்டிரன் தன்சேனையில் கொல்லப்பட்டவீரர்களுடைய பெயர்களைக் கேட்கவிரும்பியதும், ஸஞ்சயன் சொல்லியதும்.)**

ஜனமேஜயர், "பிராம்மணோத்தமரே! கர்ணனிறந்ததையும் தன்புத்ரர்கள் ஓடினதையும் கேட்டுத் திருதராஷ்டிரராஜன் என்ன சொன்னன்? புத்திரர்களுடைய துயரத்தினலுண்டானதும் பெரியதும் கோரமுமான துயரத்தை அடைந்த திருதராஷ்டிரன் அச்சம

---

ணோத்தமரே! அவ்வாறு பிராயமுதிர்ந்தவரான பீஷ்மரும் பாஹ்லீகனும் துரோணரும் ஸோமதத்தனும் பூரிஸ்ரவஸும் மற்ற நண்பர்களும் புத்திரர்களும் பௌத்திரர்களும் வீழ்த்தப்பட்டார்களென்று கேட்டும் அரசன் உயிரை விடாமையால் உயிரை விடுவது முடியாததென்றே நான் எண்ணுகிறேன். மஹரிஷியே! இவையெல்லாவற்றையும் ஸவிஸ்தாரமாக எனக்குச் சொல்வீராக. பூர்வ புருஷர்களுடைய பெரிய சரித்திரத்தைக் கேட்டும் நான் திருப்தியை அடையவில்லை" என்று கூறினர்.

## அதிகபாடத்தின் இரண்டாவது அத்யாயம்.

**(திருதராஷ்டிரன் பீஷ்மத்துரோணர்களைபற்றித் துக்கித்துத் துரியோதனுதியருடைய வரலாறு கூறும்படி கேட்டது.)**

வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர். "மகாராஜரே! கர்ணன் கொல்லப்பட்டவுடனே, அப்பொழுது கவல்கண குமாரனை ஸஞ்சயன் மனத்

யத்தில் என்னசொன்னான்? அதனை உண்மையாக எனக்குக் கூற வேண்டும்" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"மகாராஜரே! அம்பிகாபுத்திரனை திருதராஷ்டிரன் இவ் வார்த்தையைக்கேட்டுத் துக்கத்தால் வருந்திய மனத்துடன் ஸூதனை ஸஞ்சயனை நோக்கி, "அப்பா! அற்பஆயுளையுடையவனான என்புத்திரனுடைய அநீதியினாலே கர்ணன் கொல்லப்பட்டானென்பதைக்கேட்டுத் துக்கமானது என்மர்மஸ்தானங்களை அறுக்கிறது. துக்கத்தினுடைய கரையைக்கடக்க எண்ணங்கொண்ட என்னுடைய ஸம்சயத்தைத் தீர்க்கக்கடவாய். கௌரவர்களுள்ளும்ஸ்ருஞ்சயர்களுள்ளும் எவர்கள் மரணமடைந்தார்கள்? எவர்கள் உயிரோடிருக்கிறார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "அரசரே! ஜயிக்கமுடியாதவரும் பிரதாபமுள்ளவருமான பீஷ்மர் பத்துத் தினங்களிலே * ஓர் அர்ப்புதமென்னும் எண்ணுள்ள பாண்டவர் படையிலுள்ள வீரர்களைக் கொன்று தாமும் கொல்லப்பட்டார். அவ்வாறே, மகாவில்லாளியும் அவமதிக்கமுடியாதவரும் ஸ்வர்ணத் தேராளியுமான துரோணர் யுத்தத்தில் பாஞ்சாலர்களுடைய தேர்க்கூட்டங்களை அழித்துப் பின்பு கொல்லப்பட்டார். பீஷ்மராலும் மகாபலசாலியான துரோணராலும் கொல்லப்பட்டதுபோக மிருந்துள்ள சேனையில் பாதியைக்கொன்று விகர்த்தனகுமாரனைகர்ணன் மாண்டான். மகாராஜரே! ராஜகுமாரனும் அதிகபலசாலியுமான விவிம்சதி ஆனர்த்தவீரர்களை நூறுநூறாகக்கொன்று யுத்தத்தில் மாண்டான். அவ்வாறே,உம்முடையபுத்திரனும் சூரனுமானவிகர்ணன்(தூணியில்) பாணங்கள் குறைந்துபோயும் க்ஷத்திரியவிரதத்தை நினைத்துக் கொண்டு எதிர்த்துநின்று பகைவர்களால் கொல்லப்பட்டான். அவன், மிகக்கொடியவையும் துரியோதனனால் செய்யப்பட்டவையுமான பலகிலேசங்களையும் பிரதிஜ்ஞையையும் நினைக்கின்ற அப்படிப்

---

தளர்ச்சியுற்று வேகத்தில் காற்றிற்கு ஒப்பான குதிரைகளால இரவிலேயே ஹஸ்தினபட்டணம் சென்றான். அவன் ஹஸ்தினபட்டணத்தை அடைந்து மிக்க மனவருத்தத்துடன், பந்துக்கள் பெரும்பான்மையாக அழிந்துபோன திருதராஷ்டிரனுடைய வாஸஸ்தானத்தை அடைந்தான். அவன், மோகத்தினால் ஒளியிழந்தவனும் அரசனுமான அந்தத் திருதராஷ்டிரனைக்கண்டு இரண்டு கைகளையுங் குவித்துக்கொண்டு முடியினாலே அவனுடைய இரண்டு கால்களிலும் வணங்கினான். அவன் ராஜாவான திருதராஷ்டிரனை நியாயப்படி பூஜித்து, 'ஆ! கஷ்டம்'! என்றுஞ் சொல்லிப் பிறகு வசனிக்கலானான்.

* பத்துக்கோடி.

பட்ட பீமஸேனனால் கொல்லப்பட்டான். ராஜபுத்திரர்களும் மகா ரதர்களும் அவந்திதேசாதிபர்களுமான விந்தாநுவிந்தர்கள் ஒரு வராலும் செய்யமுடியாத காரியத்தைச்செய்து யமனுடையவீட்டை அடைந்தார்கள். மன்னரே, ஸிந்துதேசம் முதலான பத்துத்தேசங் கள் எவனுடைய ஆஜ்ஞையிலிருக்கின்றனவோ, உம்முடைய ஆஜ் ஞையில் கட்டுப்பட்டவனும் மகா வீர்யமுடையவனுமான அந்த ஜயத்ரதனைக் கூர்மையான அம்புகளால் பதினோர் அக்ஷௌஹிணி களை ஜயித்து அர்ஜுனன் கொன்றான். அவ்வாறே, வேகமுள்ள வனும் யுத்தத்தில் அடங்காத மதங்கொண்டவனும் பிதாவின் கட் டளையில் நிலைபெற்றவனும் துரியோதனனுடைய புத்திரனுமான லக்ஷ்மணன் ஸுபத்ராபுத்திரனை அபிமன்யுவினால் வீழ்த்தப்பட் டான். அவ்வாறே, சூரனும் பாகுபலமுள்ளவனும் யுத்தத்தில் அடங் காத மதங்கொண்டவனுமான துச்சாஸனனுடைய புத்திரன் திரௌ பதீபுத்திரனோடு போர்புரிந்து,யமலோகத்தை அடைவிக்கப்பட்டான் ஸமுத்திரத்தின் அருகிலுள்ள பிரதேசங்களில் வாசஞ்செய்கின்ற கிரா தர்களுக்கு அதிபதியும் தர்மாத்மாவும் தேவராஜனுக்கு நன்குமதிக்கப் பட்ட அன்புள்ள நண்பனும் எப்பொழுதும் க்ஷத்தியதர்மத்தில் பற் றுள்ளவனும் ராஜாவுமான பகதத்தன் தனஞ்சயனால் பராக்கிரமித்து யமலோகத்தை அடைவிக்கப்பட்டான். வேந்தரே! அவ்வாறே,கௌர வர்களுக்குத் தாயாதனும் அஸ்திரங்களை எறிந்துவிட்டவனும் மக கீர்த்திபொருந்தியவனும் சூரனுமான பூரிஸ்ரவஸ் ஸாத்யகியினா யுத்தத்தில் கொல்லப்பட்டான். க்ஷத்திரியர்களுள் கார்யநிர்வாகியும் அம்பஷ்டதேசாதிபதியுமான சுருதாயுவும் யுத்தத்தில் பயமற்று ஸஞ் சரித்துக்கொண்டு ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்டான். மகாராஜ ரே! எப்பொழுதும் கோபங்கொண்டவனும் அஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவனும் யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவனும் உம்முடைய குமாரனுமான துச்சாஸனன் பீமஸேனனால் வீழ்த்தப்பட்டான்

---

**"அரசரே! யான் ஸஞ்சயன். நீர் ஸுகமாக இருக்கிறீரா? உமமுடைய தோஷங்களாலே ஆபத்தையடைந்து இப்பொழுது புத்திமயக்கம் அடையா மலிருக்கிறீரா? விதுரராலும் த்ரோணராலும் பீஷ்மராலும் கேசவராலும் சொல்லப்பட்டவையும் உம்மால் ஏற்றுக்கொள்ளப்படாமலிருந்தவையுமான நல்ல உபதேசங்களைநினைத்து மனவருத்தமடையாமலிருக்கிறீரா? பரசுராம நாரதர், கண்வர் முதலானவர்களாலே சபையின்கண் சொல்லப்பட்டதும் உம்மால் ஏற்றுக்கொள்ளப்படாததுமான நல்வார்த்தையை நினைத்து மன வருத்தமடையாமலிருக்கிறீரா? உம்முடைய நன்மையில் முயற்சியுடையவ**

அரசரே! அனேக ஆயிரம் அத்புதமான யானைப்படையுள்ள ஸுதக்ஷிணன் ஸவ்யஸாசியினால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். கோஸலதேசாதிபதியானவன் சௌர்யத்தினால் மதிக்கப்பெற்றவர்களான பகைவர்களைக்கொன்று பராக்கிரமத்தை வெளியிட்டு ஸுபத்திராபுத்திரனால் யமலோகத்தை அடைவிக்கப்பட்டான். உமது குமாரனான சித்திரஸேனன் மகாரதனான பீமஸேனனை எதிர்த்துப் பலவாறு போர்புரிந்தும் பீமஸேனனால் வீழ்த்தப்பட்டான். சூரனும் பகைவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிறவனும் ஸௌந்தர்யமுடையவனும் கத்தியையும் கேடகத்தையும் தாங்கியவனுமான மத்ரராஜனுடைய குமாரன் ஸுபத்ராபுத்திரனால் கொல்லப்பட்டான். யுத்தத்தில் கர்ணனை ஒத்தவனும் மிக்கதேஜஸுள்ளவனும் விரைவாக அஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவனும் திடமான விக்ரமமுள்ளவனுமான அந்த விருஷஸேனன், தனஞ்சயனாலே, அபிமன்யுவினுடைய வதத்தையும் தன்னுடைய பிரதிஜ்ஞையையும் நினைத்துக் கர்ணன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, பராக்கிரமத்தினால் யமனுடைய வாஸஸ்தானத்தை அடைவிக்கப்பட்டான். எப்பொழுதுமே பாண்டவர்களோடு வைரம்பூணடிருப்பவனான சுருதாயுவென்னும் அரசன் பார்த்தனால் வைரத்தைக்கேட்கச்செய்து வீழ்த்தப்பட்டான். பெரியவரே! அரசரே! பராக்ரமசாலியும் மைத்துனனும் அம்மான்சேயும் சல்யபுத்திரனுமான ருக்மரதனென்பவன் * ஸஹதேவனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். பராக்கிரமசாலிகளும் பகைவர்களைத் தாக்குகின்றவர்களும் மிகுந்த வீர்யமுடையவர்களுமான பாகீரதராஜனும் பிராயம்முதிர்ந்தவனும் கேகயதேசத்தரசனுமான பிருஹத்க்ஷத்திரனும் கொல்லப்பட்டார்கள். அரசரே! கற்றறிந்தவனும் மகாபலசாலியுமான பகதத்த குமாரனும் யுத்தத்தில் பருந்துபோல் ஸஞ்சரிக்

களும் ஸுஹ்ருத்துக்களுமான பீஷ்மர், துரோணர் முதலானவர்கள் யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டார்களென்பதை நினைத்து மனவருத்தம் அடையாமலிருக்கிறீரா?" என்றான். இவ்வாறு, அஞ்சலிசெய்துகொண்டு வினவுகின்ற ஸஞ்சயனைக் குறித்து ராஜாவான திருதராஷ்டிரன் அதிதீர்க்கமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு துயரத்தால் பீடிக்கப்பட்டு இதனைக் கூறலானான்.

"ஸஞ்சய! சூரரும் திவ்யாஸ்திரங்களையுடையவருமான கங்காபுத்திரரும் மகாவில்லாளியான துரோணரும்கொல்லப்பட்டவுடனே என்மனம் மிக்க

---

* அபிமன்யுவினால் கொல்லப்பட்டதாகத் துரோணபர்வம் 45-வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. துரோணபர்வம், 164-ம் பக்கம் பார்க்க.

இன்றவனை நகுலனாலே வீழ்த்தப்பட்டான். அவ்வாறே உமக்குப் பாட்டனும் மிக்கபலமும் பராக்கிரமமுடையவனுமான பாஹ்லீகன் பாஹ்லீகர்களுடன் பீமஸேனனால் கொல்லப்பட்டான். அரசரே! அவ்வாறே, மகாபலசாலியும் மத்ரநாட்டிறைவனும் ஜராஸந்தனுடைய குமாரனுமான ஜயத்ஸேனன், யுத்தத்தில் மகாபலசாலியான அபிமன்யுவினால் கொல்லப்பட்டான். மன்னரே! மகாரதர்களும் சூரர்களென்று கர்வங்கொண்டவர்களும் உம்முடைய புத்திரர்களுமான துர்முகனும் துஸ்ஸஹனும் பீமஸேனனால் கதையினால்கொல்லப்பட்டார்கள். துர்மர்ஷணனும் துர்விஷஹனும் மகாரதனான துர்ஜயனும் எளிதிற் செய்யமுடியாத செய்கையைச் செய்தும் யமனுடைய வாஸஸ்தானத்தை அடைந்தார்கள். பிராதாக்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான களிங்கன் விருஷகன் இருவரும் செயற்கரிய செய்கையைச்செய்து சூரியன்மகனை யமனது வீட்டை அடைந்தனர். சூரனும் அஸாத்யமான வீர்யமுடையவனும் உமக்கு மந்திரியுமான விருஷபர்வா பீமஸேனனால் பராக்கிரமத்தை வெளியிட்டு யமனுடைய வாஸஸ்தானத்தை அடைவிக்கப்பட்டான். அவ்வாறே, பதினாயிரம் யானையின்பலமுடையவனும் மகானுமான பௌரவனென்னும் அரசன் பாண்டுபுத்திரனை ஸவ்யஸாசியினால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். மகாராஜரே! அடிக்குந்திறமையுடையவர்களான இரண்டாயிரம் வஸாதிகளும் விக்கிரமமுள்ளவர்களான எல்லாச் சூரஸேனர்களும் யுத்தத்தில் வீழ்த்தப்பட்டார்கள். கவசமணிந்தவர்களும் அடிக்கின்றவர்களும் யுத்தத்தில் மிக்க ஸாமர்த்தியமுடையவர்களுமான அபீஷாகர்களும் ரதிக ஶ்ரேஷ்டர்களான சிபிகளும் காளிங்கர்களும் கொல்லப்பட்டார்கள். கோகுலத்தில் எப்பொழுதும் வளர்ந்தவர்களும் யுத்தக்தில் மிக்க கோபங்கொண்

---

வருத்தத்தை அடைந்துவிட்டது. வஸுவினிடம்தோன்றியவரும் தேஜஸ்வியுமான எந்தப்பீஷ்மர் நாள்தோறும் கவசம்அணிந்தவர்களான பதினாயிரம் ரதிகர்களைக்கொன்றாரோ அவர், பாண்டுபுத்திரனை அர்ஜுனனால் ரக்ஷிக்கப்பட்ட யாகஸேனனுடைய குமாரனை சிகண்டியினால் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு இப்பொழுது என்மனம் வருத்தமுற்றிருக்கிறது. எவருக்கு மகாயுத்தத்தில் உத்தமமான அஸ்திரத்தைப் பரசுராமர் அளித்தாரோ, பால்யத்தில் எவர் ஸாக்ஷாத் பரசுராமராலே தனுர்வேதத்தில் சிஷ்யராக ஏற்றுக்கொள்ளப்பட்டாரோ, எவருடைய அனுக்ரகத்தினாலே மகாரதர்களும் ராஜகுமாரர்களுமான பாண்டவர்களும் அவ்வாறே மற்ற அரசர்களும் மகாரதர்களாயிருக்கும் நிலைமையைப் பெற்றார்களோ, ஸத்திய

டவர்களும் மிக்க வீர்யமுடையவர்களுமான அந்தக்கோபாலர்கள் ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்டார்கள். அனேக ஆயிரக்கணக்கான ச்ரேணிகளும் ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களும் முழுமையும் பார்த்தனை எதிர்த்து யமனுடைய வீட்டை அடைந்தனர். மகாராஜரே! உமக்கு மைத்துனர்களும் அரசர்களுமான விருஷகனும் அசலனும் உமதுநிமித்தமாக அதிக பராக்ரமத்தை வெளியிட்டு ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்டார்கள், அவ்வாறே, பெயரினாலும் செய்கையினாலும் உக்ரகர்மாவென்றும் மகாவில்லாளியென்றும் பிரஸித்திபெற்றவனும் நீண்ட கைகளையுடையவனுமான ஸால்வராஜன் பீமஸேனனால் வீழ்த்தப்பட்டான். மகாராஜரே! யுத்தத்தில் சேர்ந்து மித்ரன்நிமித்தமாகப் பராக்ரமத்தை வெளியிட்டவர்களான ஓகவானும் பிருகந்தனும் வைவஸ்வதனுடைய வீட்டை அடைந்தார்கள். வேந்தரே! அவ்வாறே, ரதிகர்களுள் சிறந்தவனான க்ஷேமதூர்த்தி யுத்தத்தில் பீமஸேனனால் கதையினால் கொல்லப்பட்டான். அரசரே! அவ்வாறே, மகாவில்லாளியும் மகாபலசாலியுமான ஜலஸந்தன் யுத்தத்தில் மிகப் பெரிய துன்பத்தைச்செய்து ஸாத்யகியினால் கொல்லப்பட்டான். (கோவேறுகழுதைகள் பூட்டிய ரதத்தோடு கூடியவனும் ராக்ஷஸச்ரேஷ்டனுமான அலம்புஸன் கடோத்கசனால் பராக்ரமத்தை வெளியிட்டு யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டான். ஸூதபுத்திரனான ராதேயனும், மகாரதர்களும் ஸஹோதரர்களுமான கேகயர்களனைவரும் ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்டார்கள். ஐயா! மாலவர்களும் மத்ரகர்களும் உக்கிரமான்செய்கையுள்ள திராவிடர்களும் யௌதேயர்களும் லலித்தர்

ஸத்ருமமகாவில்லாளியுமான அந்தத் துரோணர் யுத்தத்தில திருஷ்டத்யும்னனால் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு என்மனம் மிக்கவருத்தமடைந்திருக்கிறது. எந்த இருவருக்கும் உலகத்தில * நான்குவிதமான அஸ்திர வித்தைகளில் சமனானமனிதன் இல்லையோ அந்தத் துரோணரும் பீஷ்மரும் கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டு என்மனம் வருத்தமடைகிறது. மூவுலகங்களிலும் எவருக்கு அஸ்திரங்களில் சமமானமனிதன் இல்லையோ அந்தத்துரோணர் கொல்லபட்டதைக்கேட்டு என்னைச் சேர்ந்தவர்கள் யாது செய்தனர்? மகாபலசாலியும் பாண்டுபுத்திரனுமான தனஞ்சயனால் ஸம்சப்தர்களுடைய படையானது பராக்கிரமத்தினால் யமனுடையவீட்டை அடைவிக்கப்பட்டும் புத்திமானான துரோணபுத்திரருடைய நாராயணாஸ்திரமும் வீணாக்கப்பட்டும் ஸைனியங்களும் ஓடியபொழுது, என்னைச்சேர்ந்தவர்கள் யாது

* ..ற பர்வம், 520-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

களும் க்ஷத்ரகர்களும் உசீனரர்களும் மாவேல்லகர்களும் துண்டிகேரர்களும் ஸாவித்ரிபுத்திரர்களும் கீழ்நாட்டுவீரர்களும் வடநாட்டு வீரர்களும் மேனாட்டுவீரர்களும் தென்னாட்டுவீரர்களும் அனேக ஆயிரக்கணக்கான காலாட்களின் கூட்டங்களும் லக்ஷக்கணக்கான குதிரைகளும் தேர்க்கூட்டங்களும் உத்தமமான யானைகளும் கொல்லப்பட்டனர். அரசரே! எவர்கள், த்வஜங்களையும் ஆயுதங்களையுமுடையவர்களும் சூரர்களும் கவசங்களையும் வஸ்திரங்களையும் பூஷணங்களையும் அணிந்தவர்களும் வெகுகாலமாக யுத்தத்தில் பழகினவர்களும்ஸமர்த்தர்களால்வளர்க்கப்பட்டவர்களுமாயிருந்தார்களோ அவர்கள், யுத்தத்தில் தளர்ச்சிஅடையாத செய்கையையுடைய பார்த்தனால் கொல்லப்பட்டார்கள். அவ்வாறே, அளவுகடந்த பலத்தையுடையவர்களும் பரஸ்பரம் வதத்தில் விருப்பமுள்ளவர்களுமான மற்றவர்களும் கொல்லப்பட்டார்கள். மன்னரே! நீர் என்னைக் கேட்கிறதனால் யான் சொல்லுகிறேன். யுத்தத்தில் இவ்வரசர்களும் பரிவாரங்களுடன்கூடின மற்ற அனேக அரசர்களும் ஆயிரக்கணக்காகக் கொல்லப்பட்டார்கள். கர்ணனும் அர்ஜுனனும் எதிர்த்துப் போர்புரியுங்கால், இவ்வாறாக வீரர்களுக்கு நாசம் உண்டாகியது. எவ்வாறு மகேந்திரனால் விருத்திரன் கொல்லப்பட்டானோ, எவ்வாறு இராமபிரானால் ராவணன் கொல்லப்பட்டானோ, எவ்வாறு கண்ணபிரானால் நரகாஸுரனும் முருவென்கிற அஸுரனும் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களோ, எவ்வாறு யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவனும் சூரனுமான கார்த்தவீர்யார்ஜுனன் பிருகு குலத்தில் பிறந்த பரசுராமரோடு மூவுலகங்களுக்கும் மயக்கத்தை உண்டு

---

செய்தனர்? துரோணர் கொல்லப்பட்டவுடனே ஓடுகின்றவர்களை, கப்பலுடைந்து கடலில்மிதக்கின்ற ஜனங்களைப்போல துக்கசமுத்திரத்தில் ஆழ்ந்தவர்களென்றே நான் நினைக்கிறேன். ஸஞ்சய! சேனைகள் ஓடுங்கால் துரியோதனன், கர்ணன், போஜனான கிருதவர்மா, மத்ரராஜனான சலயன், துரோண புத்திரரான அஸ்வத்தாமா, கிருபர், மிகுந்துள்ள என்புத்திரர்கள், மற்றவர்கள் ஆகிய இவர்களுக்கு முகத்தின்நிறம் எவ்விதமாயிருந்தது? கேவல்கண குமார! இவை எல்லாவற்றையும் பாண்டவர்களும் நம்மைச்சேர்ந்தவர்களும் காட்டிய வீரச்செய்கையையும் உள்ளபடி எனக்குச் சொல்வாய்" என்வ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ஐயா! உம்முடைய குற்றத்தினாலே கௌரவவீரர்களுக்கு நேர்ந்ததைக்கேட்டு நீர் மனவருத்தமடைதல் கூடாது. தெய்வச்செயலால் நேரும் காரியத்தில் கற்றறிந்தவன் மனவருத்தமடையான். ஏனெனில், புத்தி

பண்ணக்கூடிய கோரமான பெரிய யுத்தத்தைச் செய்து ஞாதிகளுடனும் உறவினர்களுடனும் கொல்லப்பட்டானே, எவ்வாறு ஸுப்ரம்மண்யரால் மஹிஷாஸுரனும் ருத்ரரால் அந்தகாஸுரனுங் கொல்லப்பட்டார்களோ, அவ்வாறே அர்ஜுனனால் திருதராஷ்டிரகுமாரர்களுக்கு வெற்றியில் ஆசைவைப்பதற்குக் காரணமாயிருந்தவனும் பகைக்கு முகமாயிருந்தவனும் அடிக்கிறவர்களுள் உத்தமனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனும் அரசனுமான கர்ணன் மந்திரிகளோடும் பந்துக்களோடுந் துவந்துவயுத்தத்தில் கொல்லப்பட்டான். ராஜரே! ஹிதத்தை விரும்புகின்றவர்களான பந்துக்களாலே முன்பு சொல்லப்பட்டதை நீர் அறிந்துகொள்ளவில்லை. பாண்டவர்களாலே அவ்வித கஷ்டம் தாண்டப்பட்டது. இது உம்மால் செய்யப்பட்டதன்று; முன்பே தெய்வ பலத்தால் ஏற்பட்டது. ஆதலால், மிகப் பெரிய கெடுதியைச்செய்கிற இந்த வியஸனம் நேர்ந்தது. ராஜரே! ராஜ்யத்தில் விருப்பமுள்ள (உம்முடைய) புத்திரர்களுடைய நன்மையில் விருப்பமுள்ளஉம்மாலே தீங்குகளே செய்யப்பட்டன. அவைகளுடைய பலன் உமக்கு வந்தது" என்று கூறினான்.

---

## மூன்றாவது அத்யாயம்.

### (ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்கு யுத்தத்தில் கொல்லப்பட்ட பகைவர்களுடைய பெயர்களைக் கூறியது.)

திருதராஷ்டிரன், "ஐயா! யுத்தத்தில் பாண்டவர்களாலே கொல்லப்பட்ட என்னைச் சேர்ந்தவர்களைச் சொன்னாய். ஸஞ்சய! என்னைச் சேர்ந்தவர்களாலே கொல்லப்பட்ட பாண்டவ ஸேனாவீரர்களை எனக்குச் சொல்" என்று வினவ,ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"யுத்தத்தில் ஸமர்த்தர்களும் பராக்ரமமுடையவர்களும் மிக்க தைர்யமுள்ளவர்களும் மகாபலசாலிகளுமான (பாண்டவ ஸேனாவீரர்கள்) கங்கா புத்திரரான பீஷ்மரால் பந்துக்களோடும் மந்திரிகளோ

---

தன் விரும்பிய பலன் கிடைத்தாலும் கிடைக்கலாம்; கிடைக்காமலும் போகலாம். ஆதலால், 'விவேகியானவன் தான் விரும்பியபொருள் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் வருத்தமடையான்"என்று கூறினான். திருதராஷ்டிரன், "ஸஞ்சய! எனக்கு அதிகமான ஒருவிதமனவருத்தமும் இல்லை. இது முன்னமே தெய்வத்தினால் ஏற்படுத்தப்பட்டுவிட்டதென்று நினைக்கிறேன். இஷ்டப்படி உரைக்கலாம்" என்று கூறினான்.

ரும் வீழ்த்தப்பட்டார்கள். (யுத்தத்தில்) பிரீதியுள்ளவர்களான * நாராயணர்களும் † ராமர்களும் வல்லவர்களும் நூறறுக்கணக்கான மற்றவர்களும் வீரரான பீஷ்மரால் யுத்தத்தில கொல்லப்பட்டார்கள். வீரியத்தாலும் பலத்தாலும் யுத்தத்தில கிரீடிக்குச் சமானனுன ஸத்யஜித் என்பவன் ஸத்யஸந்தரான துரோணரால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். சிறந்த வில்லாளிகளும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான எல்லாப் பாஞ்சாலர்களும் துரோணரோடு எதிர்த்துப் போர்புரிந்து வைவஸ்வதனுடைய வீட்டை அடைந்தார்கள். அவவாறே, மித்திரன்நிமித்தமாகப் பராக்ரமத்தை வெளியிட்டவர்களும் வயதுசென்றவர்களும் மன்னர்களுமான விராடனும் துருபதனும் புத்திரர்களோடுகூடவே துரோணரால யுத்தத்தில கொலலப்பட்டார்கள். எவன் பாலனுக இருக்கும்பொழுதே யுத்தத்தில் ஸவ்யஸாசியோடும் கேசவரோடும் பலராமரோடும் ஒப்பிடப்பட்டவனுகவும் ஜயிக்கமுடியாதவனுகவும் (பகைவர்களை) அவமதிக்கின்றவனுகவும் யுத்தத்தில் ஸமர்த்தனுகவுமிருந்தானே அந்த அபிமன்யு பகைவர்களுக்கு மிக்க நாசத்தைச்செய்து, பீபத்ஸுவை எதிர்க்கச் சக்தியற்றவர்களும் பிரதானர்களுமான (ஆறுமகாரதர்களால) சூழப்பட்டு வீழ்த்தப்பட்டான். மகாராஜரே! இரதத்தை இழந்தவனுகச் செய்யப்பட்டும் க்ஷத்திரிய தர்மத்தில் நிலைபெற்றவனும் வீரனுமான அபிமன்யுவைத் துச்சாஸனனுடையபுத்திரன் யுத்தத்தில கொன்முன். செலவமிக்கவனும் மித்திரன்நிமித்தமாகப் பராக்கிரமத்தை வெளியிடுகின்றவனும் படச்சரர்களைக் கொல்லுகிறவனுமான அம்பஷ்டனுடைய

## அதிகபாடத்தின் மூன்றுவது அத்யாயம.

**(துரியோதனன் துரோணருடைய மரணத்தைக் கேட்டு யுத்தத்தில் ஒழிவடைந்த போர்வீரர்களுக்குக் கர்ணனுடைய குணங்களைக்கூறி ஊக்கமுண்டாக்கியதும், ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்குக் கர்ணனுடைய பராக்ரமத்தையும் மரணத்தையும் கூறியதும்.)**

ஸஞ்சயன், "மகாவில்லாளியான துரோணர் கொலலப்பட்டவுடனே, மகாரதர்களான உம்முடைய புத்திரர்கள் வியஸனமுற்றவர்களும் பிரஜ்ஞையை இழந்தவர்களும் முகம்வாடினவர்களுமானுர்கள. அரசரே! சஸ்திரங்களைத்தரித்தவர்களனைவரும் தலைகுனிந்தவர்களும் சோகத்தால் பீடிக்கப்பட்டவர்களும் பார்க்கின்றவர்களுமாகி ஒருவரோடொருவர் பேசவில்லை. பாரதரே! துன்பமுற்றதோற்றமுள்ள அவர்களைக் கண்டு உம்முடைய படை

* கிருஷ்ணன்குமாரர்கள். † பலராமன்குமாரர்கள்.

குமாரன் பெரும்படையினால் சூழப்பட்டவனைத் துர்யோதனனுடைய புத்திரனும் சூரனுமான லக்ஷ்மணனை எதிர்த்து யுத்தத்தில் மிக்க அதிகமான துன்பத்தைச் செய்து யமனுடைய வீட்டை நாடினான். அழகிய பெரிய வில்லையுடையவனும் அஸ்திரத்தில் பயிற்சியுள்ளவனும் யுத்தத்தில் கெட்ட மதம் கொண்டவனுமான பிருஹந்தன் துச்சாஸனனால் பராக்ரமத்தைவெளியிட்டு யமனுடையவீட்டை அடைவிக்கப்பட்டான். அரசர்களும், யுத்தத்தில் அடங்காத மதங்கொண்டவர்களுமான மணிமான், தண்டதாரன் (இவ்விருவர்களும்) மித்திரன்நிமித்தமாகப் பராக்கிரமத்தை வெளியிட்டுத் துரோணரால் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். போஜதேசத்தரசனும் மகாரதனுமான அம்சுமான் பாரத்வாஜரால்விக்ரமத்தை வெளியிட்டுச் சேனைகளோடு கூட யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டான். பாரதரே! புத்திரனோடுகூடினவனும் கடறகரைநாட்டுக்குத் தலைவனுமான சித்ரஸேனன் ஸமுத்திரஸேனனாலே பலத்தால் யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டான். அநூபதேசவாஸியான நீலனும் வீர்யசாலியான வியாக்ரதத்தனும் அஸ்வத்தாமாவினாலும் விகர்ணனாலும் யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டார்கள். விசித்ரமாக யுத்தம்செய்கிற சித்திராயுதன் கடும்போர்புரிந்து விசித்ரமான கதியோடு வல்லமையை வெளியிட்டு யுத்தத்தில் விகர்ணனால் கொல்லப்பட்டான். யுத்தத்தில் விருகோதரனுக்குச் சமானனாக எண்ணப்பட்டவனும் பிராதாவுமான கேகயராஜ குமாரன் பிராதாவான கேகயனால் விக்கிரமத்தை வெளிப்படுத்தி யுத்தத்தில் கொல்லப்பட்டான். மகாராஜரே! கதாயுத்தம் செய்பவனும் மலைநாட்டுக்குத் தலைவனும் பிரதாபசாலியுமான * ஜனமேஜயன் உமது புத்திரனை துர்முகனால்

---

கள் அனைத்தும் பயத்தால் நடுக்கமுற்று † ஆகாயத்தையேநோக்கின. ராஜேந்திரரே! யுத்தரங்கத்தில் துரோணர் கொல்லப்பட்டதைக்கண்ட இவர்களின் கைக்ருனிகளினின்று நான்குபக்கத்திலும் ரக்தத்தால் நனைக்கப்பட்ட சஸ்திரங்கள் நழுவிக் கீழேவீழ்ந்தன. பாரதரே! பிடிக்கப்பட்டவைகளும் நழுவுகின்றவைகளுமான அந்த ஆயுதங்கள், ஆகாயத்திலிருந்து விழுகின்றவையும் அமங்களத்தைத் தெரிவிக்கின்றவையுமான நக்ஷத்திரங்கள் போலக் காணப்பட்டன.

---

* இவன் வேறு.

† 'மேலுலகம் செல்வதையே கருதினர்; பூமியில்இருக்கவிரும்பவில்லை' என்பது பழைய உரை.

கொல்லப்பட்டான். அரசரே! நரசிரேஷ்டர்களும் இரண்டு கிருகங்கள்போல ஜ்வலிக்கின்றவர்களுமான ரோசமானர்களிருவர்களும் துரோணரால் அம்புகளால் ஒரேஸமயத்தில் ஸ்வர்க்கத்தை அடையும்படி செய்யப்பட்டார்கள். பராக்ரமசாலிகளான அரசர்கள் எதிர்த்துப் போர்புரிந்து செய்யமுடியாத காரியத்தைச் செய்து யமனுடைய வீட்டை அடைந்தார்கள். ஸவ்யஸாசிக்கு அம்மான்களான புருஜித்தும் குந்திபோஜனும் போரில் ஜயிக்கப்பட்ட உலகங்களைத் துரோணருடைய அம்புகளால் அடையும்படி செய்யப்பட்டார்கள். காசிதேசத்துவீரர்கள் பலரால் சூழப்பட்டவனும் காசிராஜனுமான அபிபூவான்வன் யுத்தத்தில் வஸுதானனுடைய புத்திரனாலே தேகத்தை இழக்கும்படி செய்யப்பட்டான். அமிதௌஜஸனும் யுதாமன்யுவும் வீர்யமுடைவனான உத்தமௌஜஸனும் நூற்றுக்கணக்காகச் சூரர்களைக் கொன்று நம்மைச் சேர்ந்தவர்களால் வீழ்த்தப்பட்டார்கள். பாரதரே! மகாவில்லாளிகளும் பாஞ்சாலராஜ குமாரர்களுமான மித்திரவர்மாவும் க்ஷத்ரகர்மாவும் துரோணரால் யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டார்கள். பாரதரே! யுத்தம் செய்கின்றவர்களுக்குத் தலைவனும் சிகண்டியின் புத்திரனுமான க்ஷத்திரதேவன் யுத்தத்தில் உம்முடைய பேரனை லக்ஷ்மணனால் கொல்லப்பட்டான். மகாரதர்களும் மகாவீரர்களும் நன்றாக ஸஞ்சரிக்கின்றவர்களும் தகப்பன் பிள்ளைகளுமான ஸுசித்ரனும் சித்ரவர்மாவும் துரோணரால் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். மகாராஜரே! பர்வகாலத்

---

மஹாராஜரே! அவ்வாறு பலத்தையிழந்து அசைவற்று நிற்கின்ற ஸ்தம்முடையசேனையைக் கண்டு ராஜாவான துரியோதனன், 'ஸைனிகர்களே! உங்களுடைய பாகுபலத்தை ஆதாரமாகக்கொண்டே என்னால் யுத்தத்திற்காகப் பாண்டவர்கள் அழைக்கப்பட்டார்கள். இந்தயுத்தமும் தொடங்கப்பட்டுவிட்டது. இவ்வாறிருக்க, இந்தச் சேனையானது துரோணர் கொல்லப்பட்டவுடனே வியஸனமுற்றதுபோல் காணப்படுகிறது. போர்புரிகின்ற யுத்தவீரர்களும் யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் கொல்லப்படுகிறார்கள். யுத்தகளத்தில் போர்புரிகின்றவனுக்கு ஜயமோ அல்லது வதமோ நேரக்கூடும். இதில் என்ன ஆச்சரியம்? நாற்புறமும் நின்றுகொண்டு யுத்தம் செய்யுங்கள். மகா பலசாலியும் சிறந்த வில்லாளியும் திவ்யாஸ்திரங்களுடன் ஸஞ்சரிக்கின்றவனும் மிக்கதைர்யமுடையவனும் சூரியகுமாரனுமான கர்ணனை யுத்தத்தில் பாருங்கள். யுத்தத்தில் எவனிடத்திலுண்டான பயத்தினால் புத்திஹீனனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயன் சிங்கத்தினிடத்தினின்று அல்பமிருகம் திரும்புவதுபோல எப்பொழுதும் திரும்புகிறானோ பதினை

தில் கொந்தளிக்கின்ற கடல்போன்றவனை வார்த்தக்ஷேமி ஆயுதங்கள் அற்றவனாகி மரணமடைந்தான். மகாராஜரே! ஸ்ரேஷ்டனும் பகைவர்களை யுத்தத்தில் அடிக்கின்றவனுமான ஸேனாபிந்துவினுடைய புத்திரன் கௌரவசிரேஷ்டனான பாஹ்லிகனால் கொல்லப்பட்டான். மகாராஜரே! சேதிதேசக்து வீரர்களுள் உத்தமரதிகனை திருஷ்டகேது (ஒருவராலும்) செய்யமுடியாத காரியத்தைச் செய்து யமனுடைய வீட்டை அடைந்தான். பாண்டவன்நிமித்தமாகப் பராக்ரமத்தை வெளியிடுகின்ற வீரனை ஸத்யதிருதி யுத்தகளத்தில் பகைவர்களுக்குத் துன்பத்தைச் செய்து யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டான். சிசுபாலனுடைய புத்திரனும் அரசனுமான ஸுகேது பகைவர்களைக்கொன்று துரோணரால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். அவ்வாறே வீரனை ஸத்யதிருதியும் வீர்யவானை மதிராஸ்வனும் விக்ரமசாலியான ஸூரியதத்தனும் துரோணருடைய அம்புகளால் கொல்லப்பட்டார்கள். மத்ஸயராஜனுடைய இளைய ஸஹோதரனும் ஐஸ்வர்யமுள்ளவனுமான சதானீகனும் வீழ்த்தப்பட்டான். மகாராஜரே! போர்புரிகின்றவனும் பராக்ரமசாலியுமான ஸ்ரேணிமானும் (ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்தும் வைவஸ்வதனுடைய வீட்டை அடைந்தான். அரசரே! சத்ருவீரர்களைக் கொல்லுகின்றவனும் யுத்தத்தில் விக்கிரமத்தை வெளிப்படுத்துகின்றவனும் உத்தமமான அஸ்திரங்களை அறிந்தவனு

---

யிரம் யானைபலமுள்ளவனும் மகாபலசாலியுமான பீமஸேனன் எவனாலே மனித யுத்தத்திலேயே அவ்விதமான நிலைமையை யடைவிக்கப்பட்டானோ திவ்யாஸ்திரங்களை அறிந்தவனும் சூரனும் மாயாவியும் பயங்கரமாகக் கர்ஜிக்கின்றவனுமான கடோத்கசன் எவனாலே அழிவற்றதான சக்தியாயுதத்தினால் கொல்லப்பட்டானோ அப்படிப்பட்ட மகிமைபொருந்தியவனும் தடுக்கமுடியாத வீர்யமுடையவனும் ஸத்திய ஸந்தனும் புத்தியையுடையவனுமான அந்தக் கர்ணனுடைய குறைவற்றஇருகைகளின் பலத்தையும் இப்பொழுது யுத்தத்தில் பார்க்கப்போகிறீர்கள். விஷ்ணுவும் இந்திரனும்போன்ற துரோணபுத்திரர் ராதாபுத்திரனானகர்ணன் இவ்விருவருடையவல்லமையையும், அந்தப் பாண்டுபுத்திரர்கள் பார்க்கட்டும். நீங்களிருவரும், தனித்தனியாகவே ஸைன்யங்களுடன்கூடின பாண்டுபுத்திரர்களை யுத்தத்தில கொல்வதற்குத் திறமையுடையவர்கள்; ஒன்றுசேர்ந்தால் கேட்க வேண்டுமோ? வீர்யமுடையவர்களும் அஸ்திரத்தில் விசேஷமான பயிற்சியுடையவர்களுமான நீங்கள் இப்பொழுது பரஸ்பரம் பார்க்கப்போகிறீர்கள்" என்றுகூறினான். மாசற்றவரே! அப்பொழுது மகாவீர்யமுள்ள உம்முடையகுமாரனை துரியோதனன், இவ்வாறு

மான மாகதன் அவ்வாறே பீஷ்மரால் அடிக்கப்பட்டு இப்பொழுது படுத்திருக்கிறான். விராட புத்திரர்களும் மகாரதர்களுமான சங்கனும் உத்தரனும் மிகப்பெரிதான காரியத்தைச்செய்தும் யமனுடைய வீட்டை அடைந்தார்கள். யுத்தத்தில் அதிகமான ஹிம்ஸையைச் செய்கின்ற வஸுதானன் விக்ரமத்தை வெளியிட்டுத் துரோணரால் யமனுடைய வீட்டையடையும்படி செய்யப்பட்டான். பாண்டவர்களுக்குள் மகாரதர்களான இவர்களும் இன்னும் மற்ற அநேக வீரர்களும் பராக்ரமத்தை வெளியிட்டுத் துரோணரால் கொல்லப்பட்டார்கள். நீர் என்னைக் கேட்டதை உரைக்கலானேன்" என்று கூறினான்.

---

## நான்காவது அத்யாயம்.

(ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்கு மாண்டவர்கள்போக மிகுந்தவர்களுடைய பெயர்களைக் கூறுதல்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பிரதான புருஷர்களுடைய கூட்டமானது நாசம் செய்யப்பட்டபிறகு, கர்வத்தை யிழந்த என்னுடைய இந்தப்படையில் ஏதேனும்மிகுந்திருக்குமென்று நான்நினைக்கவில்லை. வீரர்களும் மகா வில்லாளிகளும் குருசிரேஷ்டர்களுமான அந்தப் பீஷ்மரும் துரோணரும் என்னிமித்தமாகக் கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டபிறகும் நான் ஜீவித்திருப்பதினால் யாது பயன்? எவனுடைய கைகளினுடைய பலமானது பதினாயிரம் யானைகளுடைய பலத்திற்குச் சமானமோ யுத்தத்தில் பிரகாசிக்கின்ற அந்த ராதேயன் கொல்லப்பட்டானென்பதை நான் பொறுக்கவில்லை. ஸஞ்சய! ஸைன்யத்தில் உத்தமவீரர்கள் கொல்லப்பட்டார்களென்பதைச் சொல்லியதுபோலக் கொல்லப்படாமல் இந்த ஸேனையில்

---

கூறி, பிறகு பிராதாக்களுடன் சேர்ந்து கர்ணனை ஸேனாபதியாகச் செய்தான். அரசரே! மகாரதனும் மிக்க யுத்தமதமுள்ளவனுமான கர்ணன் சேனைத்தலைமையைப்பெற்று உரக்க ஸிம்மநாதம் செய்து கடும்போர் புரிந்தான். ஐயா! கர்ணன் எல்லா ஸ்ருஞ்சயர்களுக்கும் பாஞ்சாலர்களுக்கும் கேகயர்களுக்கும் விதேஹர்களுக்கும் பெரிய துன்பத்தைச் செய்தான். அவனுடைய வில்லினின்று பாணக் கூட்டங்கள், முந்தி (விடப்பட்ட பாணங்களின்) புங்கங்களைத் தொடர்ந்து வண்டினங்கள்போல நூற்றுக்கணக்காகத்தோன்றின. அவன் பலசாலிகளான பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் பீடித்து ஆயிரக்கணக்கான யுத்த வீரர்களையுங் கொன்று அர்ஜுனனால் தள்ளப்பட்டான்" என்று கூறினான்.

உயிரோடிருப்பவர்களையும் எனக்குச் சொல். எவர்கள் உன்னால் இப்பொழுது சொல்லப்பட்டார்களோ அவர்கள் மாண்டபிறகு, எவர்கள் ஜீவித்திருக்கிறார்களோ அவர்களனைவரும் மாண்டதற்குச் சமானமென்பதே என்னுடைய எண்ணம்" என்றான்.

ஸஞ்சயன் சொல்லலானான். "வேந்தரே! எந்த வீரருக்குப் பிரம்மஞானகமான தரமானபல ஆச்சரியமானவையும் ஒளியுள்ளவையும் * நான்குவிதமானவையும் திவ்யமானவையும் (தனுர் வேதத்தில்) சொல்லப்பட்டவையுமான அஸ்திரங்கள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றனவோ உதாரரும் பயன்தரும் முயற்சியுள்ளவரும் சுறுசுறுப்புள்ள கைகளையுடையவரும் உறுதியான ஆயுதங்களையுடையவரும் திடமான முஷ்டியையுடையவரும் திடமான அம்புகளையுடையவரும் வீரியமுடையவரும் வேகமுடையவருமான அந்தத் துரோணபுத்திரர் உமது நிமித்தமாக யுத்தம்செய்யும் விருப்பத்துடன் ஸன்னத்தராயிருக்கிறார். ஆனர்த்த தேசத்தில் வசிக்கின்றவனும் ஹ்ருதிகனுடைய புத்திரனும் மகாரதனும் ஸாத்வதர்களுள் சிரேஷ்டனும் அஸ்திரவித்தையில் ஸாமர்த்தியமுள்ளவனும் போஜனுமான கிருதவர்மா உமது நிமித்தமாக யுத்தஞ்செய்வதற்கு விருப்பத்துடன் ஸன்னத்தனாக இருக்கிறான். யுத்தத்தில் அசைக்க முடியாதவனும், உம்மைச் சேர்ந்தவர்களுள் சிறந்த படைத்தலைவனும் பலசாலியும் தன்வார்த்தையை ஸத்யமாகச் செய்ய எண்ணங்கொண்டு தங்கை பிள்ளைகளான பாண்டவர்களை விட்டுவிட்டு, யுத்தத்தில் குந்திபுத்திரனுடைய தேஜோவதத்தை அஜாதசத்துருவின் முன்னிலையில் பிரதிஜ்ஞை செய்தவனும் எவ்விதத்திலும் ஜயிக்க முடியாதவனும், இந்திரனுக்குச் சமமான வீர்யமுடையவனுமான சல்யன் உமது நிமித்தமாக யுத்தஞ்செய்வதில் விருப்பமுற்றவனாக இருக்கிறான். அரசரே! மகா பராக்கிரமமுள்ளவரும் பலவிதமான விசித்திர அஸ்திர யுத்தம் செய்கின்றவருமான சரத்வானுடைய புத்திரரும் கௌதமரும், மிகப்பெரிதும் ஆச்சரியமானதும் பாரத்தை ஸகிக்கக்கூடியதுமான தநுஸைக் கையிலேந்தி யுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவராக ஸன்னத்தராயிருக்கின்றார். ராஜரே! கெட்ட சூதாட்டத்தைச் செய்பவனும் கலகத்தில் பிரியமுள்ளவனுமான காந்தார ராஜன் தன் புத்திரர்களுடன் காந்தார

---

*** திருடம்=உறுதியாக அடிப்பது; தூரம்=தூரத்திலுள்ளதை அடிப்பது; ஸூக்ஷ்மம்=நுட்பமானதை அடிப்பது; சப்தவேதி=சப்தத்தின் வழியேசென்று அடிப்பது. 'சித்ரம், சுப்ரம், திவ்யம், விகிதம்' என்றும் கொள்ளலாம். ஆதிபர்வம் 520-ம் பக்கம் குறிப்பிற் காண்க.**

முக்கியர்களோடும் யவனர்களோடும், உமது நிமித்தமாக யுத்தம்செய்யும் விருப்பத்துடன் ஸன்னத்தனாக இருக்கின்றான். குருசிரேஷ்டரே! மகாரதனான கேகயராஜபுத்திரன் நல்ல குதிரைகளோடும் கொடியோடும்கூடிய ரதத்தின்மீதேறி உமது நிமித்தமாக யுத்தம்செய்யும் விருப்பத்துடன் இருக்கின்றான். அரசரே! அவ்வாறே, கௌரவசிரேஷ்டனும் உம்முடைய குமாரனுமான புருமித்திரன் அக்னிபோலவும் சூரியன்போலவும் நிறமுள்ள ரதத்தின்மீதேறி மேகமில்லாத ஆகாயத்தில் சூரியன் பிரகாசிப்பதுபோலப் பிரகாசித்துக்கொண்டு ஸன்னத்தனாக இருக்கின்றான். துரியோதனனும் ஸ்வர்ணாலங்காரத்துடன்கூடின ரதத்தோடு யுத்தத்தில் போர்புரியப்போகின்றவனாக யானைக்கூட்டத்தின் நடுவில் நிற்கும் ஸிம்மம்போல விளங்குகிறான். புருஷஶ்ரேஷ்டனும் ஸ்வர்ணத்தினால் விசித்திரமான கவசம் பூண்டவனும் தாமரைமலர்போன்ற காந்தியுடையவனுமான அந்தத் துரியோதனன், மன்னர்களின் நடுவில் சிறிது புகையையுடைய நெருப்புப்போலவும் மேகங்களினிடையிலுள்ள சூரியன்போலவும் பிரகாசித்துக்கொண்டு விளங்குகிறான். அவ்வாறே, கத்தியையும் கேடகத்தையுங் கையில் கொண்டவர்களும், வீரர்களும், உம்முடைய புதல்வர்களுமான ஸுஷேணனும் ஸத்யஸேனனும் சித்ரஸேனனோடு மனக்களிப்புடன் போர்புரிய விருப்பங்கொண்டு யுத்தத்தில் நிற்கின்றார்கள். பரதகுலத்தில் பிறந்தவரே! நரசிரேஷ்டர்களான * ஹ்ரீநிஷேவன், உக்ராயுதன், ம்ருதவர்மா, ஜயன், சலன், ஸத்யவிரதன், துச்சலன் ஆகிய இவர்கள் சேனையுடன் நிற்கின்றார்கள். தன்னைச் சூரனென்று நினைப்பவனும், ஒவ்வொரு யுத்தத்திலும் சத்துருக்களைக் கொல்லுகின்றவனும் சிறந்த தேராளியும் குதிரையுள்ளவனும் யானைகளோடும் காலாட்களோடும் (பகைவர்களை எதிர்த்துச்) செல்லுகின்றவனுமான கைதவ்யராஜகுமாரன் உமது நிமித்தமாக யுத்தம் செய்யும் விருப்பத்துடன் நிற்கின்றான். புருஷஶ்ரேஷ்டர்களும், அடிக்கின்றவர்களும், மானிகளும், ஸத்யஸந்தர்களுமான சுருதாயுவும் திருதாயுதனும் சித்ராங்கதனும் வீரனான சித்ரஸேனனும் யுத்தம் செய்யும் விருப்பத்துடன் நிற்கின்றார்கள். ஸத்யஸந்தனும் மகாத்மாவுமான கர்ண புத்திரனும் யுத்தம் செய்ய விருப்பமுள்ளவனாக யுத்தத்தில் ஸன்னத்தனாக நிற்கிறான். அரசரே! உத்தமமான *அஸ்

* இதனை விசேஷணமாகக் கொள்ளலாம். 'லஜ்ஜையுள்ளவன்' என்பது பொருள்.

திரங்களை யுடையவர்களும் கைச்சுறுசுறுப்புள்ளவர்களும் பெரும் படையில் அதிகமான மனோதைரியத்தையும் வீர்யத்தையும் உடைய வர்களுமான மற்றக் கர்ணபுத்திரர்களிருவரும் உமது நிமித்தமாக யுத் தம் செய்யும் விருப்பத்துடன் நிற்கின்றார்கள். மகாராஜரே! குரு ராஜனான துரியோதனன், முக்கியர்களும் யுத்த வீரர்களுள் தலைவர்க ளும் அளவற்ற பிரபாவமுள்ளவர்களுமான இவர்களோடும் மற்றவர்க ளோடும் சேர்ந்து யானைக்கூட்டத்தினிடையில் மஹேந்திரன்போல ஜயத்தின்பொருட்டு ஸன்னத்தனாக இருக்கிறான்" என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், "(இரண்டு கட்சியிலும்) எந்த ஸைனிகர்கள் பிழைத்திருக்கின்றார்களோ அவர்கள் உள்ளபடி உரைக்கப்பட்டார் கள். இதுவரையில் அடைந்திருக்கிற நன்மைகளால இனிவரும் ஜயாபஜயங்களை நன்றாக அறிகிறேன்" என்று சொன்னான். அப்பொ ழுது அம்பிகா புத்ரனான திருதராஷ்டிரன் இவ்விதம் சொல்லிக் கொண்டே தன் சேனையைப் பெரும்பான்மையாகச் சிறந்த வீரர்கள் கொல்லப்பட்டதும் சிறிதே மிகுந்திருப்பதுமாகக் கேட்டுச் சோகத் தினாலே பொறி கலங்கி மூர்ச்சையடைந்தான். மூர்ச்சை யடைந்த திருதராஷ்டிரன், "ஸஞ்சய! ஒரு முகூர்த்த நேரம் பேசாமலிரு. ஐயா! மிகப் பெரிதான அப்பிரியத்தைக் கேட்டு என் மனம் வியாகுல முற்றிருக்கிறது. மனம் மயங்குகிறது. அவயவங்களும் சோர்வடை கின்றன. நடப்பதற்கும் சக்தியற்றவனாக இருக்கிறேன்" என்று கூறினான். அம்பிகா புத்திரனும் அரசனுமான அந்தத் திருதராஷ்டி ரன், இவ்விதமான வார்த்தையைச் சொல்லிவிட்டுப் பின்பு மன மயக்கமடைந்தான்" என்று கூறினார்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

### (திருதராஷ்டிரன் கர்ணனுடைய குணங்களை வர்ணித்துத் துன்புழற்றது.)

ஜநமேஜயர், "பிராம்மணோத்தமரே! யுத்தத்தில் கர்ணன் கொல்லப்பட்டதையும் தன் புத்ரர்கள் ஓடியதையுங்கேட்டு (வருந்திப் பிறகு) சிறிது மனம்ஆறுதலுற்ற அரசன் என்ன சொன்னான்? புத்ரர் களுடைய வியஸனத்தினால் உண்டாயிருக்கிறதும் மிகப் பெரிது மான துயரத்தை யடைந்திருக்கிற அரசன் அக்காலத்தில் சொல்லி யதை, கேட்கின்ற எனக்கு உரைக்கவேண்டும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

"மஹாராஜரே! அம்பிகாபுத்திரனும் ஜனங்களுக்கு ஈச்வரனுமான திருதராஷ்டிரன், நம்பத் தகாததும் ஆச்சரியகரமானதும் பிராணிகளுக்கு மோகத்தை யுண்டுபண்ணுகிறதும் மேரு நகர்ந்தது போன்றதும் பயங்கரமானதும் மகா புத்திமானான * சுக்கிரனுக்கு (நேர்ந்த) தகாததான புத்தி மயக்கம் போன்றதும் பயங்கரமான செய்கையுள்ள இந்திரனுக்குச் சத்துருக்களிடமிருந்து உண்டான தோல்வி போன்றதும் மகா காந்தியையுடைய ஸூரியன் ஆகாயத்தினின்று பூமியில் விழுவது போன்றதும், நீர் நிரம்பிய கடலினுடைய மனத்திறனும் நினைக்கத்தகாத வறட்சி போன்றதும் பூமி, ஆகாயம், திக்குக்கள், ஜலங்கள் (இவைகளுடைய) ஆச்சரியகரமான ஸர்வநாசம்போன்றதும் புண்ணியபாபமென்கிற இருவினைகளுடைய பயனின்மை போன்றதுமான கர்ணனுடைய விநாசத்தைக் கேட்டு, புத்தியினால் நன்றாக ஆலோசித்துக் கர்ணனுக்கு யுத்தத்தில் வதம் நேர்ந்திராது என்று எண்ணி, 'பிராணிகளுக்கு இவ்வாறு நேருவது ஸஹஜமாகலால் ஸம்பவித்திருக்கலாம்' என்று கருதிச் சோகாக்னியினால் எரிக்கப்படுகின்றவனும் ஹிருதயத்தில் அக்னியைச் சேர்த்து ஊதப்படுகின்றவன்போன்றவனும் மிக்க தளர்ச்சியடைந்த அங்கங்களோடு கூடியவனும் பெருமூச்செறிகின்றவனும் தைன்யமுறுகின்றவனும் 'ஹா ஹா' என்று சொல்லி மிகுந்த துயரத்தை யடைந்தவனுமாகிப் புலம்பலானான்: "ஸஞ்சய! காளையானது (வேறு)காளையோடுசண்டை செய்வதில் பின்வாங்காததுபோலச் சத்துருவான மஹேந்திரனோடும் போர்புரிவதில் பின்வாங்காதவனும் வஜ்ரம்போன்ற சரீரமுடையவனும் யௌவனமுள்ளவனும் கர்ணனுடைய நாணொலியினாலும் தலத்வனியினாலும் சரமாரியின் சப்தத்தாலும் ரதங்களும் குதிரைகளும் மனிதர்களும் யானைகளும் யுத்தத்தில் நிலைபெறாமற் செய்பவனும் மகாபாகுபலமுள்ளவனும் சத்துருக் கூட்டங்களை அழிப்பவனும் (சத்துரு ஸம்ஹார விரதத்தினின்று) தவறாதவனும் தன்னை அடுத்துத துரியோதனன் மகாரதர்களான பாண்டுபுத்திரர்களோடு வைரத்தைச் செய்ததற்குக் காரணமானவனும் தேர்ப்பாகனுடைய புத்திரனும் வீரமும் ஸிம்மத்தையும் யானையையும்போன்ற பராக்ரமத்தையுடையவனும் எருதினுடைய திமில்போன்ற தோளையுடையவனும் விருஷபத்தினுடைய கண், நடை, ஸ்வரம்போன்ற கண்

* 'பார்க்கவஸ்ய' என்பது மூலம்; 'பரசுராமருக்கு' என்றும் கொள்ளலாம்.

களையும் நடையையும் ஸ்வரத்தையுமுடையவனும் ரதிகர்களுள் சிரேஷ்டனும் புருஷர்களுள் உத்தமனும், ஸஹிக்கமுடியாத வல்லமையுடையவனுமான கர்ணன் பார்த்தனால் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டான்? தன் பாகுபலத்தால் கொழுப்புள்ளவனான எவன் எப்பொழுதும் அச்சுதனையும் தனஞ்ஜயனையும் ஒன்றுகூடின மற்ற விருஷ்ணிகளையும் லக்ஷியஞ் செய்யவில்லையோ, எவன் 'யான் ஒருவனாகவே இருந்துகொண்டு சார்ங்கத்தையும் காண்டீவத்தையும் வில்லாகவுடையவர்களும் பகைவர்களால் ஜயிக்கமுடியாதவர்களும் ஒன்றுசேர்ந்திருப்பவர்களுமான கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தில் ரதத்தினின்று தள்ளுவேன்' என்று எப்பொழுதுமே மந்தனும் பேராசையினால் புத்திமயக்கமுள்ளவனும் சிந்தையினால் தலைகுனிந்திருப்பவனும் ராஜ்யத்தில் ஆவலுள்ளவனும் மனக்கவலையுற்றவனுமான துர்யோதனனைப் பார்த்துச் சொல்லிக்கொண்டிருந்தானோ, திவ்யாஸ்திரங்களை அறிந்தவனும் மகாதேஜஸை உடையவனும் ஸ்வசக்தியையும் குண்டலங்களையும் அறுத்துக் கொடுத்தவனும் ஸூர்யனுடைய குமாரனும் ரதிகர்களுள் சிறப்புற்றவனும் புருஷசிரேஷ்டனுமான அந்த ராதேயன் கழுகு இறகுகள் பூண்டனவையும் ஜ்வலிக்கின்றவையுமான அம்புகளாலே எல்லாக் காம்போஜர்களையும் கேகயர்களையும் அவந்தி தேசத்து வீரர்களையும் காந்தாரர்களையும் மத்ரர்களையும் மாத்ஸ்யர்களையும் திரிகர்த்தர்களையும் தங்கணர்களையும் சகர்களையும் பாஞ்சாலர்களையும் விதேஹர்களையும் குளிந்தர்களையும் காசிதேசத்து வீரர்களையும் கோஸலர்களையும் ஸுஹ்மர்களையும் அங்கர்களையும் வங்கர்களையும் நிஷாதர்களையும் புண்ட்ரர்களையும் கீசகர்களையும் வத்ஸர்களையும் கலிங்கர்களையும் தரதர்களையும் அச்மகர்களையும் ரிஷிகர்களையும் சபரர்களையும் ஹாரர்களையும் ஹூணர்களையும் ப்ராஹ்மணர்களையும் ஸரளர்களையும் ம்லேச்சதேசத்துக் கலைவர்களையும் துர்க்கவாஸிகளையும் ஆடவிகர்களையும் அவ்வாறே எல்லாச் சத்ருக்களையும் யுத்தத்தில் ஜயித்துத் துர்யோதனனுடைய அபிவிருத்தியின் பொருட்டுக் கப்பங் கொடுக்கும்படி செய்வித்தானோ, உத்தமமான அஸ்திரங்களை அறிந்தவனும் ஸேனாரக்ஷகனுமான அந்தக் கர்ணன் யுத்தத்தில் வீர்யசாலிகளும் சூரர்களும் பகைவர்களுமான பாண்டவர்களால் எவ்வாறுகொல்லப்பட்டான்? தேவர்களில் மகேந்திரன் *சிறந்தவன். மனிதர்களில்

* 'வ்ருஷ:' என்பது மூலம்; 'இந்திரன் மழையைப் பொழிபவன். கர்ணன் தனத்தைப் பொழிபவன்' என்றும் கொள்ளலாம்.

காணன் சிறந்தவன். உலகங்களில் சிறந்தவனை மூன்றுமவனை நாட கேட்டதேயில்லை. குதிரைகளுள் உச்சைஸ்ரவம் சிறந்தது. அரச களுள் குபேரன் சிறந்தவன். தேவர்களுள் மகேந்திரன் சிறந்தவன் (சத்துருக்களை) அடிக்கும் வீரர்களுள் கர்ணன் சிறந்தவன். சூரர் ளும் ஸமர்த்தர்களும் வீர்யசாலிகளுமான அரசர்களால் ஜயிக்கப் படாதவனும் துர்யோதனனுடைய அபிவிருத்திக்காகப் பூமியனைத் தையும் ஜயித்தவனும் மகததேசாதிபதியான ஜராசந்தன் தன்னையு த்து ஸமாதான வசனத்தைச் சொல்லிக்கொண்டு சினேகிதர்களாகு யாதவர்களையும் கௌரவர்களையும் தவிரப் பூமியிலுள்ள எல்லா க்ஷத் திரியர்களையும் ஜயிக்கக் காரணமாயிருந்தவனுமான அப்படிப்பட்ட கர்ணன் த்வந்துவ யுத்தத்தில் ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்ட னென்பதைக்கேட்டு ஸமுத்திரத்தில் உடைந்தமரக்கலம்போல நான் துக்கஸமுத்திரத்தில் மூழ்கிவிட்டேன். ரதிக ஸ்ரேஷ்டனை அந்தக் கர்ணன், த்வந்துவ யுத்தத்தில் கொல்லப்பட்டதைக் கேட்டு ஸமுத்தி தில் தெப்பமில்லாதவன்போல நான் துக்க ஸமுத்திரத்தில் மூழ்கி விட்டேன். ஸஞ்சய! இவ்விதத் துக்கங்களாலும் யான் அழியாம லிருக்கிற காரணத்தினால் என்மனம் வஜ்ரத்தைக்காட்டிலும் மிக்க திடமானதென்றும் உடைக்க முடியாததென்றும் எண்ணுகிறேன் ஸூத! ஞாதிகளுக்கும் ஸம்பந்திகளுக்கும் மித்திரர்களுக்கும் நேர்ந்த இவ்விதமான அபஜயத்தைக் கேட்டு என்னைத்தவிர வேறு எந்த மனிதன் உலகத்தில் உயிரை இழவாமலிருப்பான்? ஸஞ்சய! விஷத் தையுண்டாவது தீயில்விழுந்தாவது மலைமீதிருந்து கீழேகுதித்தாவது * மகாப்ரஸ்தானம்செய்தாவது ஜலத்தில் விழுந்தாவது † ப்ராயோப வேசஞ்செய்தாவது உயிரைவிட விரும்புகிறேன். பொறுக்கமுடியாத துயரங்களைப் பொறுப்பதற்குச் சக்தியற்றவனாயிருக்கிறேன்" என்று கூறினான்.

---

## ஆறாவது அத்யாயம்.

(கர்ணனுடைய வதத்தைக்கேட்டுத் திருதராஷ்டிரன் கர்ண துர்யோதன னுடைய ஸ்துதிநிந்தைகளைக்கூறிக் கர்ணார்ஜுனர்களுடைய யுத்தத் தைச் சொல்லும்படி ஏவியது.)

ஸஞ்சயன், "அரசரே! ஐஸ்வர்யத்தினாலும் குலத்தினாலும் கீர்த்தியினாலும் தவத்தினாலும் வேதாத்யயனத்தினாலும் உம்மை இப்

* வடதிசை நோக்கித் திரும்பாமல் செல்வது. † ஆகாரமின்றிப் படுத்து உயிர் துறப்பது.

பொழுது நல்லோர்கள் நகுஷகுமாரனை யயாதியைப்போல என்னு கின்றார்கள். "நீர் வேதாத்யயனத்தில் மகரிஷிக்கு ஒப்பானவர். எண்ணிய காரியத்தைச் செய்துமுடித்தவர். மனத்தை நிலைநிறுத்திக்கொள்ளும்; துக்கத்தில் மனத்தைச் செலுத்தாதீர்" என்று கூறினான். திருதராஷ்டிரன், "ஸஞ்சய! யுத்தத்தில் ஸாலவிருக்ஷத்துக்கு ஒப்பான கர்ணன் கொல்லப்பட்டமையால், ஆண்மை பயனற்றது; அதனை நிந்திக்கவேண்டும். தெய்வமே சிறந்ததென்று நான் எண்ணுகிறேன். யுதிஷ்டிரனுடைய ஸேனையையும் பாஞ்சாலர்களுடைய தேர்க்கூட்டங்களையும் நாசஞ்செய்து சரமாரியினாலே எல்லாத் திக்குக்களையுந் தவிக்கச்செய்துவிட்டு வஜ்ரபாணியான இந்திரன் அஸுரர்களை மோகிக்கச்செய்வதுபோல யுத்தத்தில் பார்த்தர்களை மோகிக்கச் செய்த மகாதரனை அந்தக்கர்ணன் காற்றினால் முறிக்கப்பட்ட மரம் போல எவ்வாறுகொல்லப்பட்டுப் படுத்தான்? கடலுக்கு அக்கரையைக் காணமுடியாததுபோலத் துக்கத்தின் முடிவை யான் காணவில்லை. கர்ணனுடைய நாசத்தையும் பல்குனனுடைய ஜயத்தையுங் கேட்டு எனக்குச் கவலை மிக விருத்தியடைகிறது. மரிக்கவேண்டுமென்கிற விருப்பமுண்டாகிறது. ஸஞ்சய! கர்ணனுடைய வதத்தை நம்பத் தகாததென்று நான் எண்ணுகிறேன். 'புருஷப்புலியான கர்ணன் கொல்லப்பட்டான்' என்பதைக் கேட்டும் வெடிக்காமலிருப்பதால் என் மனம் வஜ்ரம்போல உறுதியானது. 'கர்ணன் மாண்டான்' என்பதைக் கேட்டும் மிகுந்த துன்பத்தை யடைந்து இவ்வுலகில் ஜீவித்திருக்கிறதினால் என் ஆயுள் முன்பே தேவதைகளாலே மிக நீண்டதாக ஏற்படுத்தப்பட்டதென்பது நிச்சயம். ஸஞ்சய! நண்பனையிழந்தவனான என்னுடைய இந்த உயிர்வாழ்க்கையானது நிந்திக்கத்தக்கது. ஸஞ்சய! இப்பொழுது நான் நிந்திக்கப்பட்ட இவ்விதநிலைமையை அடைந்துவிட்டேன். மந்தபுத்தியுடையவனான நான் எல்லோராலும் துக்கிக்கப்படத்தக்கவனாக எளிமையுற்றிருக்கப்போகிறேன். ஸஞ்சய! நானே முன்காலத்தில் எல்லா ஜனங்களாலும் மரியாதை செய்யப்பட்டிருந்து இப்பொழுது பகைவர்களால் அவமதிக்கப்பட்டு உயிருடனிருக்க எவ்வாறு சக்தியுள்ளவனாவேன். ஸஞ்சய! பீஷ்ம துரோணர்களுடைய வதத்தினாலும் மகாத்மாவான கர்ணனுடைய நாசத்தினாலும் மிக்க பெருந்துயரத்தை அடைந்துவிட்டேனென்று எண்ணுகிறேன். ஸஞ்சய! யுத்தத்தில் ஸூதபுத்திரனை கர்ணன் சொல்லப்பட்டபிறகு நமது சேனை மிகுந்திருப்பதை யான் காணகிறேனில்லை. மகானான அந்தக் கர்ணனே என் குமாரர்களுக்கு

ஓரு தரையாயிருந்தான். சூரனை அவன் அநேக அம்புகளைப்பிரயோகித்தும் யுத்தத்தில் கொல்லப்பட்டானல்லவோ? புருஷ சிரேஷ்டனை அவனை விட்டு நான் பிழைத்திருத்தலில் யாதுபயன்? வஜ்ராயுதத்தினுடைய வீழ்கலால பிளக்கப்பட்ட மலையின் சிகரம்போலக் கர்ணன் நிச்சயமாகப் பாணங்களால பீடிக்கப்பட்டுத் தேரினின்றும் கீழே வீழ்ந்தான். மதங்கொண்ட யானையினால தள்ளப்பட்ட மதங்கொண்ட யானைபோல அந்தக்கர்ணன் தள்ளப்பட்டும் ரக்தத்தால் நனைக்கப்பட்டும் நிச்சயமாக யுத்தபூமியை விளங்கும்படி செய்து கொண்டு படுத்திருக்கிறான். எவன் என் குமாரர்களுக்குப் பலமோ எவனிடத்தினின்று பாண்டவர்களுக்குப் பயமோ எல்லா விலலாளிகளுக்கும் பிரதிநிதியான அந்தக்கர்ணன் அர்ஜுனனால் கொலலப்பட்டான். வீரனும் சிறந்த வில்லாளியும் மித்திரர்களுக்கு அபயத்தைக் கொடுக்கின்றவனுமான அந்தக் கர்ணன் முற்காலத்தில் இந்திரனால் வீரனை பலாஸுரன் அடிக்கப்பட்டதுபோல அடிக்கப்பட்டுப் படுத்திருக்கிறான். ஸஞ்சய! மூடவனுடைய வழிநடையும் தரித்திரனுடைய விருப்பமும் துரியோதனனுடையபேராசையும் ஸமமானவைகள். ஒருவிதமாக நினைக்கப்பட்டகாரியம் வேறுவிதமாகிறது; ஆச்சரியம்! தெய்வம் பலமுள்ளது. காலமும் தாண்டக்கூடாதது. ஸூதி! ஓடுகின்றவனும் கிருபணனும் எளிமையுள்ளவனும் பராக்ரமத்தை இழந்தவனும் என் புத்திரனுமான துச்சாஸனன் கொல்லப்படாமலிருந்தானா? ஐயனே! யுத்தத்தில் துச்சாஸனன் அறமற்றவர்கள் செய்யத்தக்க காரியங்களைச் செய்யாமலிருந்தானா? சூரர்களும் சிறப்புற்றவர்களுமான மற்ற க்ஷத்திரியர்கள்போலக் கொல்லப்படவில்லையா? எப்பொழுதும் 'யுத்தம் வேண்டாம்' என்கிற யுதிஷ்டிரனுடைய வசனத்தை மூடன் பத்யமான ஔஷதத்தை ஏற்றுக்கொள்ளாததுபோலத் துர்யோதனன் ஏற்றுக்கொள்ளவில்லை. சரதல்பத்தில படுத்திருக்கின்ற மகாத்மாவான பீஷ்மராலே தண்ணீரை வேண்டப்பட்ட அர்ஜுனன் பூமியைப் பிளந்தான். அவனால் உண்டுபண்ணப்பட்ட நீர்த்தாரையைக் கண்டு மிக்க புஜபலமுள்ள பீஷ்மர், 'ஐயா! பாண்டவர்களோடு ஸமாதானம் செய்துகொள். நீ தணிந்துகொள்வதினால் பகைமை தணியும். உங்களுடைய யுத்தம் என்னையே முடிவாகக்கொண்டு நிற்கட்டும். பாண்டுபுத்திரர்களுடன் சேர்ந்து ஸகோதரபாவத்தோடு பூமியை அனுபவி' என்றார். அவருடைய வார்த்தையைக் கேளாமல் நிச்சயமாக என் புத்திரன் சோகத்தை அடைகிறான். தீர்க்கதர்சியான அவருடைய அந்தவார்த்தை இப்பொழுது பலித்துவிட்டது. ஸஞ்ஜய!

மந்திரிகளை இழந்தும் புத்திரர்களை இழந்தும், சிறகு முறிந்த பக்ஷி போலச் சூதாட்டத்தினாலே கஷ்டத்தை அடைந்துவிட்டேன். ஸஞ்ஜய! பறவையைப்பிடித்து இரண்டு சிறகுகளையும் முறித்து விளையாடுகின்ற குழந்தைகள் பிறகு அதை விட்டுவிடுகிறார்கள். சிறகு முறிந்தமையால் அந்தப் பக்ஷி பறந்துசெல்வது எவ்வாறு இயலாதோ அவ்வாறே நானும் சிறகு முறிந்த பக்ஷிபோலாகி க்ஷயத்தை அடைந்தவனும் எல்லாப்புருஷார்த்தங்களையும் இழந்தவனும் ஞாதிகளற்றவனும் பந்துக்களால் விடப்பட்டவனுமாயிருக்கிறேன். எளியவனும் பகைவர்களுடைய வசத்தை யடைந்தவனுமாயிருக்கின்ற யான் எந்தத் திசையை அடைவேன்?" என்று கூறினான். இவ்வாறு, திருதராஷ்டிரன் அதிக மனவருத்தத்தையடைந்து புலம்பி மறுபடியும் சோகத்தால் மனத்தளர்ச்சியுற்று ஸஞ்ஜயனைப்பார்த்துப் பின்வருமாறு கூறலானான்: "பிரபுவும் யுத்தத்தில் * ஒரு காரியத்தின்பொருட்டு எல்லாக் காம்போஜர்களையும் அம்பஷ்டர்களையும் கேகயர்களையும் காந்தாரர்களையும் விதேஹர்களையும் ஜயித்தவனும் துரியோதனனுடைய பெருக்கத்தின்பொருட்டுப் பூமியை ஜயித்தவனுமான அந்தக் கர்ணன், பாகுபலமுள்ளவர்களும் சூரர்களுமான பாண்டவர்களால் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டான். மகா வில்லாளியான அவன் கிரீடியினாலே யுத்தத்தில் கொல்லப்பட்ட பிறகு, எந்த வீரர்கள் நின்றார்கள்? ஸஞ்ஜய! அதனை எனக்கு நீ சொல்லவேண்டும். யுத்தத்தில் பாண்டவர்களால் கொல்லப்படாமல் ஒருவனாவது விடப்படவில்லையா? ஐயனே! எவ்வாறு வீரன் தள்ளப்பட்டானென்பது முன்பே உன்னால் சொல்லப்பட்டது. சிகண்டி சஸ்திரதாரிகளான எல்லாவீரர்களுள்ளும் உத்தமரும், தன்னோடு எதிர்த்துப் போர்புரிவதை அங்கீகரியாதவருமான பீஷ்மரைச் சிறந்த பாணங்களால் யுத்தத்தில் தள்ளினான். ஸஞ்ஜய! அவ்வாறே, 'அசுவத்தாமா கொல்லப்பட்டான்' என்கிற தர்மராஜனுடைய வார்த்தையைக்கேட்டு யுத்தத்தில் எல்லா ஆயுதங்களையும் கீழே வைத்தவரும் யோகநிஷ்டையிலிருந்தவரும் சிறந்த வில்லாளியும் அனேக அம்புகளால் நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்டவருமான துரோணர் துருபத புத்திரனை திருஷ்டத்யும்னனாலே வாளினையெடுத்துக் கொல்லப்பட்டார். பீஷ்மரும் துரோணரும் விசேஷித்துத் துன்பம் விளைவிக்கக்கூடிய ஸமயத்தில் கபடத்தினாலே கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டேன். யுத்த முறைப்படி யுத்தஞ் செய்கின்ற வஜ்ரபாணியான இந்திரனும் யுத்தத்தில் பீஷ்மர் துரோணர் இரு

* வனபர்வம் 254-255-ம் அத்தியாயங்களிற் காண்க.

வனையும் கொல்வதற்குத் திறமையுள்ளவனுகான். அது ஸத்திய மென்றே நான் உமக்குச் சொல்லுகிறேன். உத்தமமான அனேக அஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவனும் இந்திரனுக்கொப்பானவனும் வீரனுமான கர்ணனை யுத்தத்தில் மிருத்யு எவ்வாறு தொட்டான்? இந்திரன் எவனுடைய குண்டலங்களைப் பெற்றுக்கொண்டு மின்னலைப் போலப் பிரகாசிக்கின்றதும் தெய்வத்தன்மையுள்ளதும் ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதும் பகைவர்களைக் கொல்லுகின்றதுமான சக்தியாயுதத்தைக் கொடுத்தாரோ ஸ்வர்ணமயமான பூஷணத்துடன்கூடியதும் ஸர்ப்பத்தினுடைய முகம்போன்ற முகமுள்ளதும் தேவஸம்பந்தம் பெற்றதும், யுத்தங்களில் பகைவர்களை அழிக்கின்றதும், இறகுகள் பூண்டதும் கூருள்ளதுமான அம்பானது எவனுடைய தூணியில் படுத்துக்கொண்டிருந்ததோ, பீஷ்மர் துரோணர் முதலான மகாரதர்களான வீரர்களை எவன் அலக்ஷியம்செய்து ஜமதக்னி குமாரராகிய பரசுராமரிடத்தினின்று மகா கோரமான பிரம்மாஸ்திரத்தைக் கற்றுக்கொண்டாரோ, மகா பாகுபலமுள்ளவனை எவன் துரோணர் முதலானவர்கள் பாணங்களால் பீடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடுவதைக்கண்டு ஸுபத்திராபுத்திரனை அபிமன்யுவினுடைய வில்லைக் கூர்மையான அம்புகளால் அறுத்தானோ, எவன் பதினயிரம் யானைபலமுள்ளவனும் வஜ்ராயுதத்தின் வேகம்போன்ற வேகத்தை யுடையவனும் (ஸம்ஹார விரதத்தினின்று) தவருதவனுமான பீமஸேனனை விரைவாக ரதத்தை யிழந்தவனைச் செய்து பரிஹஸித்தானோ, எவன் வணங்கின கணுக்களுள்ள அம்புகளாலே ஸஹதேவனை ஜயித்து அவனை ரதத்தை யிழந்தவனைச் செய்து கருணையினாலும் தர்மசிந்தையினாலும் அவனைக் கொல்லாமல் விட்டானோ, எவன் ஆயிரக்கணக்கான மாயைகளை வெளியிடுகின்றவனும் ஜயத்தில் விருப்பமுற்றவனும் ராக்ஷஸ சிரேஷ்டனுமான கடோத்கசனை இந்திரனால் கொடுக்கப்பட்ட சக்தியினால் கொன்றானோ, எவனுடைய யுத்தத்தில் இத்தனைநாள் எவனுக்கு பயந்து வீரனை தனஞ்ஜயன் பயந்தவனாக த்வந்துவயுத்தம் செய்ய அணுகாமலிருந்தானோ, அவன் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டான்? எப்பொழுதும் 'வேறு பக்கத்தில் யுத்தத்திற்கு அழைக்கிற ஸம்சப்தகர்களைக் கொன்றுவிட்டுப் பிறகு யுத்தத்தில் விகர்த்தன குமாரனான கர்ணனை யான் கொல்வேன்' என்று சொல்லிக்கொண்டு பார்த்தன் யுத்தத்தில் எந்த ஸூத புத்திரனைவிட்டு விலகினானோ அப்படிப்பட்ட பகைவீரர்களைக் கொல்லுகின்ற வீரனை கர்ணன் பார்த்த

ளால் எவ்வாறு கொல்லப்பட்டான்? ரதமானது ஒடியாமலும், வில் சிதறாமலும் அஸ்திரங்கள் நாசமடையாமலும் இருந்தால், அந்தக் கர்ணன் எவ்வாறு பகைவர்களால் கொல்லப்படுவான்? யுத்தத்தில் பெரிதான வில்லைச் சுழற்றிக்கொண்டு கோரமான அம்புகளையும் திவ்யாஸ்திரங்களையும் பிரயோகிக்கின்றவனும் புருஷசிரேஷ்டனும் புலிபோல வேகமுள்ளவனுமான கர்ணனை யுத்தத்தில் ஜயிப்பதற்கு எவன் வல்லமையுள்ளவன்? 'கர்ணன் கொல்லப்பட்டான்' என்று என்னிடம் சொல்லுவதால் நிச்சயமாகவே அவனுடைய வில் ஒடிக்கப்பட்டிருக்கவேண்டும்; அல்லது, ரதமாவது பூமியில் அழுந்தியிருத்தல் வேண்டும்; அல்லது, அஸ்திரங்களாவது நாசமடைந்திருக்கவேண்டும். அந்தக் கர்ணனுடைய நாசத்தில் வேறு காரணத்தை யான் காணவில்லை. 'யான் எவ்வளவு காலம் பல்குனனைக் கொல்லவில்லையோ அவ்வளவு காலம்வரையில் யான் கால்களை அலம்புகிறதில்லை' என்கிற மகா கோரமான விரதமானது மகாத்மாவான அந்தக் கர்ணனுக்கு இருந்ததோ, புருஷசிரேஷ்டனும் தர்மராஜனுமான யுதிஷ்டிரன் யுத்தத்தில் எவனிடத்திலிருந்து பயந்து பதின்மூன்று வருஷ காலம் எப்பொழுதுமே தூக்கமற்றிருந்தானோ, மகாத்மாவும் வீர்யமுடையவனுமான எவனுடைய பலத்தை ஆதாரமாகக்கொண்டு என் புத்திரன் பாண்டவர்களுடைய மனைவியான திரௌபதியைப் பலாத்காரமாகச் சபையின்கண் இழுத்துவந்தானோ (அதிலும்) அந்தச் சபையின் மத்தியில் கௌரவர்களுடைய எதிரில் பாண்டவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பாஞ்சால ராஜகுமாரியான திரௌபதியைத் 'தாஸபாரியை' என்று சொன்னானோ, (மேலும்) சூதபுத்திரனான எவன் பாஞ்சாலியை நோக்கி 'கிருஷ்ணையே! உனக்குப் பர்த்தாக்களில்லை. எல்லோரும் எள்ளுப்பதருக்குச் சமானர்கள். உத்தமமான தேககாந்தியையுடையவளே! வேறு கணவனை அடைவாயாக' என்று இவ்வாறு முற்காலத்தில் குரூரமான வார்த்தைகளைச் சபையில், ரோஷத்தினால் (திரௌபதியைக்) கேட்கும்படி செய்வித்தானோ அப்படிப்பட்ட கர்ணன் பகைவர்களால் எவ்வாறு கொல்லப்பட்டான்? 'துரியோதன! யுத்தத்தைப் புகழ்கின்ற பீஷ்மராவது அல்லது யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட துரோணராவது பக்ஷபாதத்தால குந்தீபுத்திரர்களைக் கொல்லாமற்போவார்களானால் பார்த்தர்களனைவரையும் யான் கொல்வேன். உனக்கு மனக்கவலை வேண்டாம். அழகிய சந்தனத்தால் பூசப்பட்டதும் எதிர்த்துச் செல்லுகின்றதுமான என்னுடைய பாணத்திற்குக் காண்டீவமாவது அழி

வற்ற பெரிய தூணிகளாவது என்ன செய்யும்' (என்று எவன் வீர வாதம் செய்துகொண்டிருந்தானோ) நிச்சயமாக விருஷபத்தினுடைய திமில்போன்ற தோள்களையுடைய அந்தக்கர்ணன் அர்ஜுனனால் எவ்வாறு கொல்லப்பட்டான்? ஸஞ்சய! எவன் சாண்டீவத்தினின்று விடுபட்ட அம்புகளுடைய கொடிய ஸ்பர்சத்தை ஆலோசியாமல் 'த்ரௌபதீ! நீ பர்த்தாக்களை இழந்துவிட்டாய்' என்று சொல்லிக் கொண்டு பார்த்தர்களைப் பார்த்தானோ, எவனுக்குத் தன் பாகுபலத்தைப் பற்றிப் புத்திரர்களுடனும் ஜனார்த்தனனுடனுங்கூடின பார்த்தனிடத்தினின்று க்ஷணகாலங்கூடப் பயமுண்டாகவில்லையோ அந்தக் கர்ணனை யுத்தத்தில் விரைவாக எதிர்த்துவருகின்ற இந்திரனுடன் கூடின தேவர்களாலும் கொல்லமுடியாதென்று எண்ணுகிறேன். அவ்வாறிருக்க, பாண்டவர்களால் எவ்விதம் கொல்லமுடியும் என்பதில் யாது ஸந்தேகமிருக்கின்றது. நாணையிறனை உருவுகின்றவனும் இரண்டு கையுறைகளையுந் தரிக்கின்றவனும் அதிரத புத்திரனுமான கர்ணனுக்கெதிரில் ஒருவனும் நிற்கஇயலாது. பூமியானது சூரிய சந்திராக்னிகளுடைய ஒளிகளால் விடுபட்டதானாலும் ஆகும்; புருஷ ஸ்ரேஷ்டனும் யுத்தங்களில் புறங்கொடாதவனுமான கர்ணனுடைய வதம் நேராது. கெட்டபுத்தியுடையவனும் மந்தனுமான துரியோதனன், துணைவனான கர்ணனாலும் பிராதாவான துச்சாஸனனாலும் வாஸுதேவனை அவமதிப்பதை உசிதமென்று எண்ணினான். எருதின் திமில்போன்ற தோள்களையுடையவனான கர்ணன் கொல்லப்பட்டதையும் துச்சாஸனன் கொல்லப்பட்டதையும் பார்த்து நிச்சயமாக அந்த என்புத்திரன் மனவருத்தமடைந்திருப்பானென்று எண்ணுகிறேன். த்வந்த்வயுத்தத்தில் ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்ட சூரியகுமாரனான கர்ணனையும் வெற்றி பெற்றிருக்கின்றவர்களான பாண்டவர்களையுங் கண்டு துரியோதனன் யாது மொழிந்தனன்? மகாரதர்களால் யுத்தரங்கத்தில் கொல்லப்பட்ட துர்மர்ஷணனையும் விருஷஸேனனையும் மகாரதர்களால் துகைக்கப்பட்டு வதம்செய்யப் படுகின்ற சேனையையும் புறங்காட்டி ஓடுவதில் நோக்கமுள்ளவர்களான மன்னர்களையும் ஓடுகின்ற ரதிகர்களையுங் கண்டு என்புத்திரன் துன்பமடைந்திருப்பானென்று எண்ணுகிறேன். சிக்ஷிக்கத்தகாதவனும் அகங்காரமுள்ளவனும் கெட்டபுத்தியுள்ளவனும் இந்திரியங்களை அடக்காதவனுமான துர்யோதனன் ஊக்கமிழந்திருக்கின்ற சேனையைக்கண்டு என்னசொன்னான்? தானாகவே பெரும்பகையை உண்டுபண்ணிக்கொண்டு யுத்தத்தில் பெரும்பான்மையாக அழிந்து

போயிருக்கின்ற சேனைகளையுடைய மித்திரவர்க்கங்களாலே பலவாறு தடுக்கப்பட்டும் கேளாத துரியோதனன் அப்பொழுது யாது கூறினான்? யுத்தத்தில் பீமஸேனனால் பிராதாவான துச்சாஸனன் கொல்லப்பட்டு அவனது இரத்தமானது குடிக்கப்பட்டதைப் பார்த்த துரியோதனன் என்னசொன்னான்? காந்தாரராஜனான சகுனியுடன் சேர்ந்து துரியோதனன், 'யுத்தத்தில் கர்ணன் அர்ஜுனனைக் கொல்வான்' என்று சபையின்கண் கூறினானல்லனோ? அந்தஜயா கர்ணன் கொல்லப்பட்டபிறகு துர்யோதனன் யாதுகூறினான்? ஐயா! ஸுபல னுடைய குமாரனான சகுனி முற்காலத்தில் சூதாடிப் பாண்டவர்களை வஞ்சித்து ஸந்தோஷமடைந்தானல்லனோ? அந்தச்சகுனி, கர்ணன் மாண்டபிறகு யாது மொழிந்தான்? பெரியவில்லைக் கையில் தாங்கியவனும் ஸாத்வதர்களுள் மகாரதனும் ஹ்ருதிகனுடைய குமாரனுமான கிருதவர்மா கர்ணன் கொல்லப்பட்டதைக் கண்டு யாது கூறினான்? ஸஞ்ஜய! தனுர்வேதத்தைக் கற்கவிரும்புகின்ற ப்ராம்மணக்ஷத்ரிய வையசியர்கள் எவருடைய சிக்ஷையை விரும்புகிறார்களோ, புத்திமானும் யௌவனமுள்ளவரும் நல்ல வடிவத்தையுடையவரும் பார்ப்பதற்கு இனியதோற்றமுள்ளவரும் மிக்க கீர்த்திபொருந்தியவருமான அந்த அஸ்வத்தாமா கர்ணன் கொல்லப்பட்ட பிறகு யாது மொழிந்தார்? ஐயா! தனுர்வேதத்தில் ஆசாரியரும் ரதிகசிரேஷ்டரும் கௌதமகுலத்தவரும் சாத்வானுடைய குமாருமான அந்தக் கிருபாசாரியர் கர்ணன் மாண்டபிறகு யாது மொழிந்தனர்? மத்ரதேசத்துக்கு அரசனும் சிறந்த வில்லாளியும் யுத்தத்தில் ஸமர்த்தனும் ஸாரத்யம் செய்வதில் ரதிகர்களுள் சிறந்தவனும் பலசாலியும் * ஸேனாவீரனும் தேசாதிபதியுமான சல்யன் கர்ணன் கொல்லப்பட்டதைக் கண்டு என்னசொன்னான்? யானைபோல ஜயிக்கமுடியாதவர்களான எல்லா யுத்த வீரர்களும் கர்ணன் கொல்லப்பட்டதைக் கண்டு யாது சொன்னார்கள்? ஸஞ்ஜய! பூமண்டலத்திலுள்ள எந்த அரசர்கள் யுத்தஞ் செய்வதற்காக வந்துசேர்ந்தார்களோ அவர்கள் வைகர்த்தனன் கொல்லப்பட்டதைக் கண்டு யாது உரைத்தனர்? ஸஞ்ஜய! வீரரும் ரதிகர்களுள் சிறந்தவரும் புருஷஸ்ரேஷ்டருமான துரோணர் கொல்லப்பட்ட பிறகு, பிரிக்கப்பட்டிருக்கிற ஸைனியங்களுக்கு எவர்கள் தலைவர்களானார்கள்? ஸஞ்ஜய! ரதிகர்களுள் ஸ்ரேஷ்டனும் மத்ரதேசத்தரசனுமான சல்யன் கர்ணனுக்கு ஸாரத்தியம் செய்யும் விஷயத்தில் எவ்வாறு ஏற்படுத்தப்பட்டான்? அதனை எனக்குச் சொல்வாயாக

* 'சிறந்தவீரனும்' என்றும் கொள்ளலாம்.

யுத்தஞ்செய்கின்ற வீரனை ஸூதபுத்திரனுடைய வலப்பக்கத்தி லுள்ள படையை எவர்கள் காப்பாற்றினார்கள்? கர்ணனுடைய இட பக்கத்திலும் பின்புறத்திலுமுள்ள படையை எவர்கள் பாதுகாத்தார் கள்? எந்தச்சூரர்கள் கர்ணனைவிட்டு விலகாமல் இருந்தார்கள்? எந்த அறபர்கள் அவனைவிட்டு ஓடினார்கள்? நீங்கள் ஒன்று சேர்ந் திருக்கும்பொழுது மகாரதனானகர்ணன் எவ்வாறு கொலைப்பட் டான்? மகாரதர்களும் வீரர்களுமான பாண்டவர்கள் தாங்க ளாகவே மேகங்கள் மழையைப் பொழிவதுபோலச் சாமாரிகளைப் பொழிந்துகொண்டு எவ்வாறு பகைவர்களை எதிர்த்தார்கள்? ஸஞ்ஜய! ஸர்ப்பமுகமுள்ளதும் தேவஸம்பந்தம் பொருந்தும் மகிமைதங்கிய பாணங்களுள் சிறந்ததுமான அந்தக் கர்ணனுடைய நாகாஸ்திரமா னது அப்பொழுது எவ்வாறு பயனற்றதாயிற்று? அதனை எனக் குச் சொல்வாயாக. ஸஞ்ஜய! உத்தமனான கர்ணன் கொலைப் பட்டபிறகு, மேன்மையையிழந்த என்னுடைய சேனையானது மிச்சமிருக்குமென்று நான் எண்ணவில்லை. வீரர்களும் சிறந்த வில் லாளிகளும் என்னிமித்தம் உயிரைவிடத் துணிந்தவர்களுமான அந் தப் பீஷ்மரும் துரோணரும் கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டு யான் ஜீவித்திருப்பதினாலே யாது பயன்? எவனுடைய இருகைகளு டைய பலமும் பதினாயிரம் யானைகளுடைய பலத்திற்குச் சம மானதோ அப்படிப்பட்ட கர்ணன் பாண்டவர்களால் கொல்லப் பட்டானென்பதை நினைத்து நினைத்து நான் ஸஹிக்கவில்லை. ஸஞ்ஜய! துரோணர் கொல்லப்பட்டவுடனே, புருஷசிரேஷ்டர்க ளான கௌரவர்களுக்குப் பகைவர்களோடு யுத்தத்தில் ஏது நடந் ததோ அதனை எனக்குச் சொல்லவேண்டும். எவ்வாறு கர்ணன் குந்திபுத்திரர்களுடன் யுத்தத்திற்காக எதிர்த்தான்? எவ்வாறு பகைவர்களைக் கொன்று தானும் உயிரை இழந்தான்? அந்த விஷ யத்தை எனக்குக் கூறக்கடவாய்" என்று சொன்னான்.

---

## ஏழாவது அத்யாயம்.

**(அஸ்வத்தாமாவினுடைய சொற்படி துர்யோதனன் கர்ணனை ஸேனா பதி ஸ்தானத்தில் அபிஷேகம் செய்ததும், கர்ணன் யுத்தத்தின் பொருட்டுச் சேனையை ஏவியதும்.)**

**ஸஞ்ஜயன்**, "பாரதரே! மகாராஜரே! அந்தத் தினத்தில் சிறந்த வில்லாளியான துரோணர் கொல்லப்படவும், மகாரதரான துரோணபுத்திரருடைய சங்கல்பம் பயனற்றதாகச் செய்யப்படவும்,

கௌரவர்களுடைய ஸேனாசமுத்திரமும் ஓடவும், பார்த்தன் தன்னுடைய சேனையை அணிவகுத்து ஸகோதரர்களால் சூழப்பெற்று நின்றான். பரதரிற் சிறந்தவரே! உமது புத்திரனான துரியோதனன் அர்ஜுனன் அவ்வாறு யுத்தத்திற்கு ஸன்னத்தனாக நிற்பதை அறிந்தும், ஓடுகின்ற தன் படையையுங்கண்டும் பௌருஷத்தினாலே தன் சேனைகளைத் தடுத்தான். பாரதரே! அப்பொழுது துரியோதனன், தன் புஜபலத்தை ஆதாரமாகக்கொண்டு தன்னுடைய சேனையை நிலைநிறுத்தி ஜயத்தை அடைந்தவர்களும் முயற்சியுடையவர்களும் ஸந்தோஷமுடையவர்களும் பகைவர்களுமான பாண்டவர்களுடன் நெடுங்காலம் போர்புரிந்து ஸந்தியாகாலம் வந்தவுடனே யுத்தத்தை நிறுத்தினான். சிறந்தபலமுள்ளதும் கோரரூபமுள்ளதும் அதிகமான பசிதாகங்களுள்ளதும் துரோணருடைய வதத்தினால் அதிக சிரமத்தையடைந்ததுமான அந்தக்கௌரவசேனையை (யுத்தத்தினின்று விலக்கிப்) பாசறையை அடையச் செய்தான். யுத்தத்தில் கோரமான கார்யத்தைச்செய்து தீனஸ்வரூபத்தையடைந்த அந்தச் சேனை இருப்பிடத்தை அடைந்து அன்றிரவுமுழுவதும் இளைப்பாறி ஸந்தோஷமடைந்ததாகியது. கௌரவர்கள் ஒன்றுகூடிச் சேனைகளை (யுத்தத்தைவிட்டு ஒழியும்படிசெய்து) தமது பாசறையை அடைந்து ஒருவரோடொருவர் மந்திராலோசனை செய்தார்கள். அவர்கள் ஸுகமான சயனங்களில் தேவர்கள் வீற்றிருப்பதுபோல உத்தமமான விரிப்புக்களுள்ள சிறந்த கட்டில்களிலும் உத்தமமான ஆஸனங்களிலும் வீற்றிருந்தார்கள். பிறகு, துர்யோதனராஜன் அந்த மகாவில்லாளிகளை அழைத்து மிக்க இன்பமான நல்வார்த்தையினாலே அச்சமயத்திற்கேற்பச் சொல்லலானான். 'புத்திமான்களுள் சிறந்தவர்களே! இவ்வாறு இக்காரியம் நடந்துபோனபிறகு எது முக்கியமாக இனிச்செய்யத்தக்கதோ அதனை நீங்களனைவரும் விளம்பமின்றிச் சொல்லுங்கள்' என்றுசொன்னான். ராஜாவான துரியோதனனால் இவ்வாறு சொல்லப்பட்டவுடனே, அப்பொழுது ஸிம்மாஸனத்தை அடைந்திருக்கின்ற புருஷஶ்ரேஷ்டர்கள் யுத்தம்செய்வதில் நோக்கமுள்ளவர்களாகப் பற்பலவிதமான சேஷ்டைகளைச் செய்தார்கள். மேதாவியும் வாக்யங்களை அறிந்தவரும் ஆசாரியபுத்திரருமான அஶ்வத்தாமா யுத்தத்தில் பிராணன்களை ஹோமம்செய்ய எண்ணங்கொண்டவர்களான அந்த அரசர்களுடைய இங்கிதங்களைக் கண்டு பாலஸூர்யனுக்கு ஸமமான காந்தியுள்ள துரியோதனராஜனுடைய முகத்தை நன்றாக ஏறிட்டுப்பார்த்துப் பின்வரும்வாக்கியத்தை உரை

க்கலானர். 'ஸ்வாமிபக்தி, தேசகால முதலானவைகளுடைய ஆனுகூல்யம், அவ்வாறே பலம், நீதி ஆகிய (இவைகள்)' அர்த்தஸாதகங்களான உபாயங்களென்று பண்டிதர்களால் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளோ தெய்வபலத்தைச் சார்ந்திருக்கின்றன. நம்முடைய (கக்ஷியில்) உலகத்தில் ஒப்பற்ற வீரர்களும் தேவர்களுக்கொப்பானவர்களும் மகாரதர்களும் நீதியுள்ளவர்களும் முயற்சியுள்ளவர்களும் ஸமர்த்தர்களும் பிரீதியுள்ளவர்களுமாயிருந்தவர்களனைவரும் கொல்லப்பட்டார்கள். வெற்றியைப்பற்றி நாம் ஒருபோதும் வெறுப்படையத் தகாது. எல்லாக் காரியங்களும் நன்ருகப் பிரயோகிக்கப்பட்டால் தெய்வமும் அனுகூலமாக்கப்படுகிறது. பாரத! அப்படிப்பட்ட நாம் மனிதர்களுள் உத்தமனும் யுத்தவீரர்களுக்குரிய எல்லாக்குணங்களுமுள்ளவனுமான கர்ணனையே ஸேனாதிபதியினுடைய ஸ்தானத்தில் அபிஷேகஞ்செய்விப்போம். அவனைச் சேனாதிபதியாக்கிக்கொண்டு பகைவர்களைக் கொல்லுவோம். இந்தக் கர்ணனே அதிக பலசாலி; சூரன்; அஸ்த்ரத்தில் தேர்ச்சியுள்ளவன்; யுத்தத்தில் கொடிய மகங்கொண்டவன்; யமனைப்போலத் தாங்கமுடியாதவன்; யுத்தத்தில் சத்துருக்களை ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவன்' என்ருர். மகாராஜரே! ஆசார்யபுத்திரரிடத்தினின்று இந்த வார்த்தையைக்கேட்டு உமது குமாரனை துரியோதனன் அப்பொழுது மனத்தில் மிக்க பிரீதியையடைந்தான். அப்பொழுது, அவன் பீஷ்மரும் துரோணரும் கொல்லப்பட்டபிறகு, கர்ணன் பாண்டவர்களை ஜயிக்கப்போகிருனென்று கர்ணனிடத்தில் அதிக ஆசைவைத்தான். பாரதரே! பிறகு, அவன் அந்த ஆசையை மனத்தில் வைத்துக்கொண்டு சமாதானமடைந்து இனிமையோடும் மரியாதையோடும் கூடியதும் யதார்த்தமானதும் தனக்கு நன்மையானதும் மங்களகரமானதும் பிரியமானதுமான அஸ்வத்தாமாவினுடைய அந்த வார்த்தையைக்கேட்டு மனமகிழ்ச்சியடைந்தான். மகாராஜரே! துரியோதனன் பிரியமானதும் மரியாதையோடுகூடியதும் உண்மையானதும் தனக்கு நன்மை பயக்கக்கூடியதுமான அஸ்வத்தாமாவினுடைய வார்த்தையைக்கேட்டுத் தன்மனத்தை நிலைநிறுத்திக்கொண்டும் புஜபலத்தை ஆதாரமாகக்கொண்டும் ராதேயனை நோக்கி, 'கர்ண! உன்னுடைய வீர்யத்தையும் என்னிடத்திலுள்ள உத்தமமான நேசத்தையும் அறிவேன். மிக்க தோள்வலியமைந்தவனே! அவ்வாறிருந்தும், உன்னை நோக்கி ஹிதமான வார்த்தையைச் சொல்லப்போகிறேன். வீரனே! கேட்டுவிட்டு உன்மனத்திற்கு

எது ருசிக்கிறதோ அதனை இஷ்டப்படி செய். நீயோ மிகவுங் கற்றறிந்தவன். எனக்கு எப்பொழுதும் உத்தமமான கதி. என்னுடைய ஸேனாபதிகளும் அதிரதர்களுமாயிருந்த பீஷ்மரும் துரோணரும் மாண்டனர். அவ்விருவரைக்காட்டிலும் அதிக பலமுள்ளவனான நீ ஸேனாபதியாகவேண்டும். சிறந்த வில்லாளிகளான அவ்விருவரும் முதியவர்கள்; தனஞ்ஜயனிடத்தில் பற்றுதலுள்ளவர்கள். ராதேய! உன் வார்த்தையினால் வீரர்களான அவ்விருவர்களும் என்னால் நன்குமதிக்கப்பட்டார்கள். பீஷ்மர் பாட்டனாராயிருந்தமைபற்றி அவரால் பாண்டவர்கள் மகாயுத்தத்தில் பத்துநாள் முழுமையும் ரக்ஷிக்கப்பட்டார்கள். ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டபோது, பிதாமகரானபீஷ்மர் மகாயுத்தத்தில் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு பல்குனனால் கொல்லப்பட்டார். ஆண்மையிற் சிறந்தவனே! மகாவில்லாளியான அந்தப் பீஷ்மர் கொல்லப்பட்டு அவ்விதமான * சரதல்பத்திற் படுத்திருக்கையில் உன்னுடைய சொற்படி துரோணர் தலைவரானார். அந்தத் துரோணராலும் பார்த்தர்கள் சிஷ்யர்களாயிருக்கின்றகாரணத்தால் ரக்ஷிக்கப்பட்டார்களென்பது என்னுடைய எண்ணம். பிராயமுதிர்ந்தவரான அந்தத் துரோணரும் திருஷ்டத்யும்னனால் சீக்கிரமாகக் கொல்லப்பட்டார். ஒப்பற்றவலிமையுள்ளவனே! பிரதானர்களான அவ்விருவரும் கொல்லப்பட்ட பிறகு, நான் என்ன ஆலோசித்தபோதிலும் யுத்தத்தில் உனக்குச் சமமாக வேறொரு போர்வீரனைக் காணவில்லை. நீ ஒருவனே நமக்கு வெற்றியைக் கொடுப்பதில் திறமையுள்ளவன். ஸந்தேகமில்லை. முந்தியும் இடையிலும் பிந்தியும் உன்னால் நன்மையே செய்யப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட நீ பாரத்தைத் தாங்கும் காளைபோல யுத்தத்தில் பாரத்தைத் தாங்குவதற்குத் தகுந்தவனாயிருக்கிறாய். நீ உன்னை நீயாகவே ஸேனாபதி ஸ்தானத்தில் பட்டாபிஷேகஞ் செய்வித்துக்கொள். அழிவற்றவரும் பிரபுவுமான ஸுப்ரமண்யர் தேவதைகளுக்கு ஸேனாபதியாயிருப்பதுபோல, இந்தக்கௌரவசேனைக்கு நீ பதியாயிருந்து வகிக்கவேண்டும். மகேந்திரன் அஸுரர்களைக் கொல்லுவதுபோலப் பகைவர்களுடைய கூட்டங்களையெல்லாம் நாசஞ்செய். யுத்தத்தில்முயற்சியுடன் நிற்கின்ற உன்னைக்கண்டு மகாரதர்களான பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் திருமாலைக் கண்ட அஸுரர்போல ஓடப் போகிறார்கள். ஆண்மையிற் சிறந்தவனே! ஆதலால், இந்தப் பெருஞ்சேனையை நடத்து. நீ முயற்சியுடையவனாக நிலைபெற்றிருக்கையில், மந்த

* பாணத்தாலாகிய படுக்கை.

புத்தியுள்ள பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்ஜயர்களும் மந்திரிகளுடன் ஓடப்போகிறார்கள். உதிக்கின்ற சூரியன், தன் தேஜஸினாலே நன்றாகத் தபிக்கச் செய்துகொண்டு மிக்க இருளை நீக்குவது போலப் பகைவர்களை நீ தபிக்கச் செய்' என்று கூறினான்.

அரசனான துரியோதனன் அரசர்களுடைய மத்தியில் இவ்வாறு சொல்ல, மிக்க புஜ பலமுள்ளவனும் மனத்தில் அன்புள்ளவனும் மிக்க வலிமையுள்ளவனும் ராதாபுத்திரனுமான கர்ணன் துர்யோதனனை ஸந்தோஷமடையும்படி செய்துகொண்டு பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். 'காந்தாரியின் புத்திரனாகிய துர்யோதனா! மைந்தர்களோடும் ஜனார்த்தனனோடும் கூடின எல்லாப் பாண்டவர்களையும் உன் முன்னிலையில் யான் ஜயிப்பேன். உனக்கு யான் ஸேனாபதியாக ஆகப்போகிறேன். இவ் விஷயத்தில் ஐயமில்லை. மகாராஜனே! 'உறுதியுடனே இரு. பாண்டவர்களை ஜயிக்கப்பட்டவர்களாகவே எண்ணு' என்கிற இந்த விஷயம் உன்னுடைய ஸன்னிதானத்தில் முன்னமே என்னால் சொல்லப்பட்டிருக்கிறது' என்றான். மகாராஜரே! பிறகு, இவ்வாறு சொல்லியதைக்கேட்ட துரியோதனராஜன், தேவர்கள் ஸ்கந்தரை ஸேனாபதியாகச் செய்ததுபோலக் கர்ணனை ஸேனாபதி ஸ்தானத்தில் வைத்து வெகுமானிப்பதற்காகத் தேவர்களோடு சேர்ந்து இந்திரன் எழுந்திருப்பதுபோல் அரசர்களுடன் எழுந்திருந்தான். அரசரே! பிறகு, ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான துர்யோதனன் முதலான மன்னர்கள் சாஸ்திரத்தில் சொல்லிய முறைப்படி கர்ணனுக்கு அபிஷேகம் செய்வித்தார்கள். வெண்பட்டினால் மூடப்பட்டதும் அத்திப் பலகையினால் செய்யப்பட்டதுமான பீடத்தில் இனிது வீற்றிருக்கிற கர்ணனை, சாஸ்திரத்தில் சொல்லிய முறைப்படி அபிஷேகத்திற்கு வேண்டியவைகளால் நன்றாக நிரப்பப்பட்ட ஸ்வர்ணமயமான தீர்த்த கடங்களாலும் மந்திரங்களால் அபிமந்திரணம் செய்யப்பட்ட மண்மயமான தீர்த்த கடங்களாலும் ஜலத்தால் நிரப்பப்பட்ட யானைகளுடைய தந்தங்களால் செய்யப்பட்ட பாத்திரங்களாலும் (தீர்த்தத்தால் நிறைக்கப்பட்ட) கட்க மிருகங்களினுடைய கொம்புகளாலும் மகா விருஷபங்களுடைய கொம்புகளாலும் அவ்வாறே இரத்தினங்களோடும் முத்துக்களோடும் கூடியவைகளும் பரிசுத்தமான கந்தத்துடன் கூடியவைகளுமான மற்ற ஔஷதங்களாலும் சாஸ்திரத்தில் காணப்பட்டிருக்கிற முறைப்படி அபிஷேகஞ் செய்தார்கள். சிறந்த பீடத்தில்வைத்து அபிஷேகம் செய்விக்கப்பட்ட அந்த மகாத்மாவான கர்ணனைப் பிராம்

மணர்களும், க்ஷத்திரியர்களும், வைஸ்யர்களும், * ஏப்புக் கொள்ளப் பட்ட சூத்திரர்களும் ஸ்தோத்திரம் செய்தார்கள். ராஜேந்திரரே! அபிஷேகம் செய்விக்கப்பட்டவுடன், பகைவர்களைக் கொல்லுகின்றவனை ராதேயன் ஸுவர்ணங்களாலும் பசுக்களாலும் தனத்தினாலும் உத்தம பிராம்மணர்களை (திருப்தி செய்வித்து) அவர்களால் தனக்கு (ஸ்வஸ்தியயனங்களைச்) சொல்லும்படி செய்வித்தான். ராதா புத்திரனை அவன் உதயகாலத்தில் சூரியன் பிம்மவாதிகளால ஸ்தோத்திரம் பண்ணப்படுவதுபோல் † ஸூதர்களாலும் ‡ மாகதர்களாலும் § வந்திகளாலும் ஸ்தோத்திரம் செய்யப்பெற்று மிகவும் பிரகாசித்தான். பிறகு, புண்ணியாஹ மந்திர கோஷங்களும் வாத்ய கோஷமும் சூரர்களுடைய ஜயசப்தமும் நிரம்பின. அவ்விடத்தில் ஒன்றுசேர்ந்திருக்கிற அரசர்களனைவரும் ராதேயனைப் பார்த்து 'ஜயிப்பாயாக' என்று கூறினார்கள். வந்திகளும் பிராம்மணர்களும் புருஷ சிரேஷ்டனான அவனைப்பார்த்து 'கோவிந்தனோடும் துணை வீரர்களோடுங்கூடின அந்தப் பார்த்தர்களை மகாயுத்தத்தில் ஜயிப்பாயாக. ராதேய! உதிக்கின்ற சூர்யன் உக்கிரமான கிரணங்களாலே இருளை எப்பொழுதும் நாசம்செய்வதுபோல நமக்கு ஜயமுண்டாகும் பொருட்டுப் பாஞ்சாலர்களுடன்கூடின பார்த்தர்களைக் கொல்வாயாக. ஜ்வலிக்கின்ற ஸூர்யகிரணங்களைக் கோட்டான்கள் பார்க்கமுடியாததுபோல உன்னால் விடப்பட்ட பாணங்களைக் கேசவனுடன்கூடின பாண்டவர்கள் பார்க்கவும் சக்தர்களல்லர். யுத்தத்தில் வஜ்ராயுதத்தைக் கையில்கொண்ட மகேந்திரனுடைய முன்னிலையில் அஸுரர்கள் நிற்பதற்குச் சக்தியுள்ளவர்களாகாததுபோல உனக்கு முன்னிலையில் பாஞ்சாலர்களுடன்கூடின பார்த்தர்கள் நிற்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார்கள்' என்று கூறினார்கள். உபசரிக்கப்பட்டவனும்ஸ்தோத்திரம் பண்ணப்படுகின்றவனும் நண்பர்களுடைய ஸமூகங்களாலே சூழப்பட்டவனுமான அந்தக் கர்ணன் ரோஷத்தினால் சிரித்துக்கொண்டு, துரியோதனனைப்பார்த்துப் பிரியமான வாக்கியத்தை உரைக்கலானான். 'ஓ! துரியோதன! இப்பொழுது சேனையுடனும் பாண்டவ வீரர்களுள் சிறந்தவர்களுடனும் பந்துக்களுடனும் கூடிய பல்குனனை உனது பிரியத்திற்காக நாசம்செய்யப்போகிறேன். மலைகளை

* 'ஸம்மதா:' என்பது மூலம். 'நன்கு மதிக்கப்பட்ட' என்றும் கொள்ளலாம். † பௌராணிகர்கள். ‡ வம்சாவளியை வர்ணிக்கிறவர்கள்.

§ ஸ்தோத்திரம் செய்பவர்கள். ஆதிபர்வம் 354-ம் பக்கம் குறிப்பிலும் கர்ணபர்வம் 14-ம் பக்கத்திலும் காண்க.

யும் கடல்களையும் தீவுகளையுமுடையதும் பாண்டவர்களையிழந்தது மான பூமியை நீ ஆளுவாயாக. பிள்ளைகளிடத்திலும் பேரன்களிடத்திலும் பேரன்களின் பிள்ளைகளிடத்திலும், (அரசச் செல்வத்தை) நிலைநாட்டப்போகிறாய். பகைவர்களை அழிப்பவனே ! உனக்குப் பிரியத்தைச்செய்கிறவிஷயத்தில் எனக்கு ஸஹிக்கக்கூடாதது ஒன்றுமில்லை. ஆத்மஜ்ஞானமுள்ளவனுக்கு ஸித்தியுண்டாவதுபோல ஸத்யத்திலும் தர்மத்திலும் பற்றுதலுள்ள எனக்குக் கார்யஸித்தி உண்டாகும்' என்றான். அபிஷேகம் செய்விக்கப்பட்ட அந்த ராதேயன் அளவுகடந்த ஒளியுள்ளவனை வேறொரு ஸூர்யன்போல ரூபத்தினாலும் ஒளியினாலும் மிகவிளங்கினான். உம்முடைய குமாரன் காலத்தினால் தூண்டப்பட்டு ஸேனாபதி ஸ்தானத்தில் ராதேயனை அபிஷேகம் செய்வித்ததனால் அப்பொழுது தன்னைக் கிருதார்த்தனாக எண்ணிக்கொண்டான். பகைவர்களை அழிப்பவனான கர்ணனும், அரசனிடத்தினின்று படைத்தலைமையைப்பெற்று, சூரியன் உதயமானவுடன், யுத்த ஸன்னாகத்துக்குக் கட்டளையிட்டான். பாரதரே ! கர்ணன் அந்த இடத்தில் உம்முடைய புத்திரர்களால் சூழப்பெற்றுத் தாரகாஸுர யுத்தத்தில் தேவர்களால் சூழப்பட்ட சுப்பிரம்மண்யர் விளங்கியதுபோல விளங்கினான்" என்று கூறினான்.

---

## எட்டாவது அத்யாயம்.

### (கர்ணனும் அர்ஜுனனும் வ்யூகங்கள் வகுத்து யுத்தத்திற்காகப் புறப்பட்டது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்ஜய ! அப்பொழுது சூரியகுமாரனை கர்ணன் ஸேனாபதி ஸ்தானத்தைப் பெற்று, ராஜாவான துரியோதனன் பிராதாவைப்போல நேசத்துடன்கூடிய வசனத்தை உரைக்கக் கேட்டான். என் புத்திரனுக்கு எப்பொழுதும் இனியவனும் பிரியத்தைச் செய்வதில் விருப்பமுள்ளவனும் பேரறிவாளனுமான கர்ணன் என்ன செய்தான் ? அதனை எனக்குச் சொல்லு" என்று வினவ, ஸஞ்ஜயன் சொல்லலானான்.

"பாரதரிற் சிறந்தவரே ! உம்முடைய புத்திரர்கள் கர்ணனுடைய அபிப்பிராயத்தையறிந்து ஆனந்த வாத்திய கோஷத்தை முன்னிட்டு யுத்தத்திற்கு ஆயத்தமாகும்படி கட்டளையிட்டார்கள். பெரிதான பின்னிரவில் உம்முடைய படையில், 'யுத்த ஸன்னாகம், யுத்த ஸன்னாகம்' என்கிற பேரொலி விரைவாகத் தோன்றியது. அரசரே !

பிறகு, ஸாமர்த்தியமுள்ள சிறந்த யானைகளுடைய முழக்கமும் மூக் கணைகளோடுகூடிய தேர்களினொலியும் ஸன்னத்தவைகளோடுகூடிய மனி தர்களின் ஆரவாரமும் குதிரைகளின் கனைப்பும் பரஸ்பரம் சண் டைக்காக விரைந்து அழைக்கின்ற யுத்தவீரர்களின் சிரித்தலும் ஆகிய இவற்றாலுண்டாகிய நெருங்கிய சப்தமானது மிகப் பெருகி ஆகாயத்தை அளாவியதாகத் தோன்றியது. பிறகு, வெண்ணிற முள்ள கொடித்துணியுள்ளதும், கொக்கின் நிறம்போன்ற நிறமுடைய குதிரைகளையுடையதும், ஸுவர்ணமயமான பின்புறமுள்ள வில் லோடுகூடியதும், யானைச்சங்கிலியாகிற கொடியோடு கூடியதும், நூறு அம்புக்கூடுகளால் நிறைக்கப்பட்டதும், கதாயுதங்களையும் ரத குப்திகளையுமுடையதும், சதக்னிகளையும் கிங்கிணிகளையும் சக்திக ளையும் சூலங்களையும் தோமரங்களையும் தரித்ததும், விற்களோடுகூடி யதும், நிர்மலமான சூரியன்போன்ற காந்தியுள்ளதும், (நாற்றை) எதிர்த்த பதாகையுடன்கூடினதுமான ரதத்தோடு கர்ணன் காணப் பட்டான். அரசரே! ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட பெரிய வில்லை அசையும்படி செய்துகொண்டு, ஸுவர்ண ஸமூகங்களாலே அலங்கரிக்கப்பட்ட சங்கத்தை ஊதினான். புருஷஶ்ரேஷ்டரே! பெரி தானவில்லைக் கையில்கொண்டவனும் ரதத்தில் வீற்றிருக்கின்றவ னும் ரதிகர்களுள் உத்தமனும், இருளை நாசம்செய்துகொண்டு உதிக்கின்ற சூரியன்போல நெருங்கமுடியாதவனுமான கர்ணனைக் கண்டு, அங்குள்ள சில கௌரவர்கள், பீஷ்மரும், துரோணரும் மற்றவர்களுமாகிய வீரர்களின் (நாசத்தினாலுண்டான) வருத்தத்தை நினைக்கவில்லை. ஐயா! பிறகு, கர்ணன் யுத்தவீரர்களைச் சங்கத்தின் ஒலியினாலே விரைவுபடுத்திக்கொண்டு கௌரவர்களுடைய பெரும் படையை யுத்தத்திற்கு இழுத்தான். பகைவர்களை வாட்டுகின்றவ னும் பெரிய வில்லைக் கையில்கொண்டவனுமான கர்ணன் மகரவ்யூ கம் வகுத்துக்கொண்டு, வெற்றி பெறவேண்டுமென்கிற விருப்பத் தாலே பாண்டவர்களை அவ்வாறு எதிர்த்துச் சென்றான். வேந்தரே! மகரத்தினுடைய வாயில் கர்ணன் நின்றான். சூரனான சகுனியும் மகாரதனான உலூகனும் அந்தவ்யூகமகரத்தினுடைய இரண்டு கண்க ளிலும் நின்றார்கள். துரோணபுத்திரரோ (அந்த மகரத்தின்) தலையில் நின்றார். ஸகோதரர்களனைவரும் கழுத்தில் நின்றார்கள். ராஜாவான துர்யோதனன் பெருத்த சேனையினால் சூழப்பட்டு மத்தியில்நின்றான். ராஜேந்திரரே! நாராயணனுடைய சேனைகளாகிய யுத்தத்தில் கெட்ட மதமுள்ள கோபாலர்களோடு கிருதவர்மா இடக்காலில் நின்றான்.

வேந்தரே! சிறந்தவில்லாளிகளான திருகர்த்தவீரர்களாலும் தென்னாட்டு வீரர்களாலும் சூழப்பட்டு உண்மையான பராக்ரமமுள்ள கிருபர் வலக்காலில் நின்றார். மத்ரதேசத்தினின்று வந்திருக்கிற பெரிய சேனையுடன் சல்யன் இடக்காலிறகுப் பின்புறத்தில் நின்றான். மகாராஜரே! ஸத்தியபிரதிஜ்ஞையுள்ள ஸுஷேணன் ஆயிரம் ரதிகர்களாலும் முந்நூறுயானைகளாலும் சூழப்பட்டு வலக்காலின் பின்புறத்தில் நின்றான். மகாவீர்யமுள்ளவர்களும் ஸகோதரர்களும் அரசர்களுமான சித்திரனும், சித்திரஸேனனும் அப்பொழுது பெரும் படையினால் சூழப்பட்டு வாலில் நின்றார்கள். ராஜேந்திரரே! புருஷசிரேஷ்டர்களுள் உத்தமனான கர்ணன் அவ்வித ஸன்னாகத்தோடு யுத்தத்திற்குப் புறப்படுகையில், தர்மராஜர் தனஞ்சயனை (மலர்ந்த கண்ணால்) பார்த்து, 'பார்த்த! வீரனே! மகாரதர்களான வீரர்களாலே காக்கப்பட்டதும் கர்ணனால் அணிவகுக்கப்பட்டதுமான கௌரவ சேனையானது இந்த யுத்தாங்கநத்தில் எவ்விதமிருக்கிறதென்பதைப் பார். மிக்க புஜபலமுள்ளவனே! உத்தம வீரர்கள் கொல்லப்பட்டும் மிச்சமுள்ளவர்கள் வலிமை குன்றியுமிருக்கிற இந்தக் கௌரவசேனையை நான் துரும்புக்குச் சமமாக நினைக்கிறேன். ஸூதபுத்திரனான கர்ணன் ஒருவனே இந்தச் சேனையில மகாவில்லாளியாக விளங்குகிறான். மகாபாகுபலமுள்ள பல்குன! மகாரதனும் தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் சிறந்த உரகர்களும் சேர்ந்த சராசர வடிவமான மூவுலகங்களாலும் ஜயிக்கத் தகாதவனுமான அவனை இப்பொழுது கொன்று நீ வெற்றிபெறுவாயாக. (அப்படி செய்தால்), பன்னிரண்டுவருஷமாக என்மனத்தில் தைத்திருக்கிற முள்ளானது எடுக்கப்பட்டதாகும். மிக்க புஜபலமுள்ளவனே! இவ்வாறு அறிந்து விருப்பப்படி அணிவகு' என்று கூறினார். வெண்ணிறமுள்ள குதிரைகளையுடைய அர்ஜுனன் பிராதாவினுடைய இந்த வார்த்தையைக் கேட்டு அந்தச்சேனையை அர்த்த சந்திர வ்யூகத்தால் எதிர் அணிவகுத்தான். அந்த வ்யூகத்தினிடப்புறத்தில் பீமஸேனன் நின்றான். வலப்புறத்தில் சிறந்த வில்லாளியான திருஷ்டத்யும்னன் நின்றான். ராஜாவான தர்மபுத்திரரும் பாண்டவனான தனஞ்ஜயனும் நடுவில் நின்றார்கள். நகுலனும் ஸஹதேவனும் தர்மராஜருக்குப்பின்புறத்தில் நின்றார்கள். பாஞ்சாலராஜகுமாரர்களான யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் சக்ரரக்ஷகர்களாயிருந்து கிரீடியினால் காக்கப்பட்டு யுத்தத்தில் அவனை விட்டு விலகாமலிருந்தார்கள். பாரதரே! வீரர்களான மற்ற அரசர்கள் கவசம்பூண்டு உத்ஸாகத்துடனும்

முயற்சியுடனும் வ்யூகத்தில் இடம் தவருமல் நின்ருர்கள். பாண்டவர்களும் மகா வில்லாளிகளாகிய உம்மைச் சேர்ந்தவர்களும், இவ்விதம் இந்தப் பெரிய அணியை வகுத்து யுத்தத்தில் மனத்தைச் செலுத்தினர்கள். யுத்தத்தில் ஸரிதயுக்தியாலே அணி வகுக்கப்பட்ட உம்முடைய சேனையைக்கண்டு பந்துக்களுடன் கூடின துரியோதனன் பாண்டவர்களைக் கொல்லப்பட்டவர்களாகவே எண்ணினன். அவ்வாறே, ராஜாவான யுதிஷ்டிரரும் அணிவகுக்கப்பட்ட பாண்டவ சேனையைக் கண்டு கர்ணனுடன் கூடின கௌரவர்களைக் கொல்லப்பட்டவர்களாகவே எண்ணினர். அரசரே! பிறகு, இரண்டு சேனைகளிலும் பெருத்த சப்தத்தையுடைய சங்கங்கள் ஊதப்பட்டன. பேரிகைகளும் பணவங்களும் ஆனகங்களும் கோமுகங்களும் டிண்டிம வாத்யங்களும் ஜர்ஜரங்களும் எல்லாப் பக்கங்களிலும் அடிக்கப்பட்டன. ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான சூரர்களுடைய ஸிம்மநாதமும் வெளிப்பட்டது. வேந்தரே! குதிரைகளுடைய கனைத்தலாலுண்டான சப்தங்களும், யானைகளுடைய கர்ஜனைகளும், ரதசக்ரங்களின் ஓசையாலுண்டுபண்ணப்பட்ட கொடிய முழக்கங்களும் தோன்றின. பாரதரே! அந்த மகாவ்யூகத்தின் முகத்தில் கவசமணிந்து பெரிய வில்லைக் கையில் பிடித்து நிற்கின்ற கர்ணனைக்கண்டு ஒருவனாவது அந்தச் சேனையில் துரோணருடைய நாசத்தினால் உண்டான துயரத்தைப் பாராட்டவில்லை. வேந்தரே! மனங்களித்த மனிதர்களால் (நிறைந்த) இருதிறத்துச் சேனைகளும் பராக்கிரமத்தினால் ஒன்றையொன்று வதம் செய்வதற்காக யுத்தம்செய்வதில் நோக்கமுற்றிருந்தன. ராஜேந்திரரே! பரஸ்பரம் வெற்றியடைவதில் அதிக பரபரப்புடன் நிற்கின்ற இரண்டு சேனைகளையுங்கண்டு கர்ணனும் அர்ஜுனனும் சேனையின் மத்தியில ஸஞ்சாரம் செய்தார்கள். அந்த இருதிறத்துச் சேனைகளும் நர்த்தனம் செய்கின்றவைபோல ஒன்றையொன்று எதிர்த்தன. அந்த இரண்டு பக்ஷப்ரதிபக்ஷிகளினிடங்களினின்றும் யுத்தம் செய்ய விருப்பமுள்ளவர்கள் வெளிப்பட்டார்கள். மகாராஜரே! பிறகு, அன்யோன்யம் எதிர்த்து அடிக்கின்ற மனிதர்களுக்கும் யானைகளுக்கும் குதிரைகளுக்கும் தேர்களுக்கும் யுத்தம் நடக்க ஆரம்பித்தது.

## ஒன்பதாவது அத்யாயம்.

### ஸங்குல யுத்தமும், பீமனால் க்ஷேமதூர்த்தியின் வதமும்.)

உள்ளத்தில் களிப்பு மிக்க குதிரைகளும் மனிதர்களும் யானைகளும் நிரம்பியவைகளும் தேவாஸுரஸேனைகளுக்கு ஒப்பானவைகளுமான பெரிய அவ்விரு சேனைகளும் ஒன்றையொன்று நெருங்கி மோதிக்கொண்டன. பிறகு, பற்பல ரதிகர்களும் குதிரைவீரர்களும் யானைவீரர்களும் உக்கிரமான பராக்கிரமமுள்ள காலாட்களும் தேகத்தையும் பாவங்களையும் நாசம்செய்யும் தன்மையுள்ள யுத்தங்களை அதிகமாகச் செய்தனர். புருஷஸ்ரேஷ்டர்கள், காந்தியினாலும் தேஜஸினாலும் வாஸனையினாலும் (முறையே) பூர்ண சந்திரனுக்கும் சூரியனுக்கும் தாமரைப் புஷ்பத்திற்கும் ஸமானமான புருஷ ஸ்ரேஷ்டர்களுடைய (தலைகளால்) பூமியை மூடினார்கள். யுத்தஞ் செய்கின்ற வீரர்களுடைய தலைகள் அர்த்த சந்திர பாணங்களாலும் பல்லங்களாலும் க்ஷுரப்ரங்களாலும் கத்திகளாலும் பட்டஸங்களாலும் கோடாலிகளாலும் அறுக்கப்பட்டன. புஷ்டியுள்ளவைகளும் நீண்டவைகளுமான வீரர்களுடைய கைகள், ஆயுதங்களையும் தோள்வளைகளையுமுடையவர்களும் புஷ்டியுள்ளவைகளும் நீண்டவைகளுமான கைகளையுடையவர்களுமான வீரர்களாலே (அறுக்கப்பட்டு) பூமியில் தள்ளப்பட்டு விளங்கின. துடிக்கின்றவைகளும் விரல்களோடும் உள்ளங்கையோடுங்கூடியவைகளுமான கைகளாலே அந்தயுத்தபூமி, கருடனால் சின்னபின்னம் செய்யப்பட்டவைகளும் கொடியவைகளும் ஐந்துதலைகளுடன் கூடியவைகளுமான ஸர்ப்பங்களால் சூழப்பட்டதுபோல் விளங்கியது. பகைவர்களால் கொல்லப்பட்ட வீரர்கள், புண்ணியமானது அனுபவித்து முடிந்தவுடன் ஸ்வர்க்கவாஸிகள் விமானங்களினின்று விழுவதுபோல யானைகளினின்றும் தேர்களினின்றும் குதிரைகளினின்றும் கீழே விழுந்தார்கள். யுத்தத்தில் அதிக வீரியமுடைய சூரர்களாலே மற்ற வீரர்கள் பெரிய கதாயுதங்களாலும் பரிகங்களாலும் உலக்கைகளாலும் அடிக்கப்பட்டு நூற்றுக்கணக்காக விழுந்தார்கள். மிக்க நெருக்கமான அந்த யுத்தத்தில் ரதங்கள் ரதங்களால் நாசம்செய்யப்பட்டன. மதங்கொண்ட யானைகள் மதங்கொண்ட யானைகளால் நாசம் செய்யப்பட்டன. குதிரைவீரர்கள் குதிரைவீரர்களால் நாசம் செய்யப்பட்டார்கள். ரதங்களாலே மனிதர்களும், யானைகளாலே ரதங்களும், காலாட்களால் குதிரைமீதுள்ளவர்களும், குதிரைக்காரர்களாலே காலாட்களும்,

யுத்தத்தில் கொல்லப்பட்டுப் படுத்தார்கள். யானைகளாலே ரதங்களும் குதிரைகளும் காலாட்களும், காலாட்களாலே ரதங்களும் குதிரைகளும் யானைகளும், குதிரைகளாலே ரதங்களும் காலாட்களும் யானைகளும், ரதங்களாலே மனிதர்களும் யானைகளும் நாசஞ்செய்யப்பட்டன. தேர்களுக்கும் குதிரைகளுக்கும் யானைகளுக்கும் மனிதர்களுக்கும் மனிதர்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் கைகால்களாலும் சஸ்திரங்களாலும் ரதங்களாலும் மிக்க துன்பம் செய்யப்பட்டது. அவ்வாறு, அந்தப் படையானது சூரர்களாலே வதம்பண்ணப்பட்டு நாசம் அடையும்போது, பீமஸேனனை முதன்மையாகக்கொண்ட பாண்டவர்கள் நம்மை எதிர்த்து வந்தனர். திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் த்ரௌபதீபுத்திரர்களும் பிரபத்ரகர்களும் ஸாத்யகியும் சேகிதானனும் திராவிடதேசத்திலுண்டான ஸைனிகர்களோடு எதிர்த்தார்கள். அகன்றமார்பையுடையவர்களும் நீண்ட கைகளையுடையவர்களும் உயர்ந்தவர்களும் அகன்ற கண்களையுடையவர்களுமான பாண்டியர்களும் சோழர்களும் கேரளர்களும் பெரிய வியூகத்தால் சூழப்பட்டார்கள். பூஷணங்களை அணிந்தவர்களும் சிவந்த பற்களையுடையவர்களும் மதங்கொண்ட யானைபோல வல்லமைபொருந்தியவர்களும் பலவிதமான சாயவஸ்திரங்களைத் தரித்தவர்களும் வாசனைப்பொடிகளால் பூசப்பட்டவர்களும் கத்திகளைக் கட்டிக்கொண்டவர்களும் பாசத்தைக் கையில்கொண்டவர்களும் யானைகளை எதிர்க்கின்றவர்களுமான வீரர்களனைவரும் *சமானமான மிருத்யுவையுடையவர்களாயிருந்துகொண்டு ஒருவரைவிட்டு ஒருவர் விலகினார்களில்லை. பூஷணத்தை அணிந்தவர்களும், விற்களைக் கையில் பிடித்தவர்களும், நீண்ட மயிர்களையுடையவர்களும், பிரியமான வார்த்தையைச் சொல்லுகின்றவர்களும், கோரமான ரூபத்தையும் பராக்கிரமத்தையுமுடையவர்களுமான காலாட்கள் பாணங்களால் அடிக்கப்பட்டார்கள். பிறகு, சேதிதேசத்தவர்களும், பாஞ்சாலர்களும், கேகயர்களும், காரூசர்களும், கோஸலர்களும், காஞ்சிதேசத்து வீரர்களும், மாகதர்களுமான மஹாசூரர்கள் ஓடினார்கள். அவர்களுடைய ரதங்களும், குதிரைகளும், யானைகளும், உத்தமர்களும் பயங்கரர்களுமான காலாட்களும், பலவிதமான பாணங்களின் ஒலிக

* 'வெற்றியையே கருதினவர்களாகையால மரணத்தையும் உயிர்வாழ்வையும் ஸமமாக நினைத்தவர்கள்,' என்றாவது 'மாண்டால் எல்லாரும் மாளுவோமென்று ஒரே தீர்மானமுள்ளவர்கள்' என்றாவது கருத்து.

ளால் களிப்படைந்து நர்த்தனம் செய்தார்கள்; சிரிக்கவும் சிரித்தார்கள். விருகோதரன் யானையின் கழுத்தின்மீதேறி உத்தமர்களான * மகாமாத்திரர்களால் சூழப்பட்டுப் பெரிதான அந்தச் சேனையின் நடுவில் உம்மைச்சேர்ந்தவர்களை மதித்துவந்தான். மிக்க உக்கிரமானதும் முறைப்படி பழக்கப்பட்டதுமான அந்த உத்தமமான யானையானது, உதிக்கின்ற சூரியனுடன்கூடின உதயபர்வதத்தின் நுனியிலுள்ள ஒருவீடுபோல விளங்கியது. இரும்புமயமானதும் உத்தமமான இரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்டதுமான அந்தப் பீமஸேனனுடைய சிறந்த கவசமானது காந்தியினாலே நக்ஷத்திரங்களால் வியாபிக்கப்பட்ட சரத்காலத்திலுள்ள ஆகாயத்தைப்போல விளங்கியது. தோமராயுதத்தைப் பிரயோகிப்பதில் விரைவுள்ள கையையுடையவனும் அழகிய கிரீடத்தையுடையவனும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவனும் சரத்காலத்தில் பகல் நடுவிலுள்ள சூரியனுடைய காந்திபோன்ற காந்தியையுடையவனுமான அந்தப் பீமன் தேஜஸினால் சத்துருக்களை அதிகமாகக் கொளுத்தினான். அந்த யானையை யானைமீதுள்ள க்ஷேமதூர்த்தி தூரத்திலகண்டு அட்டஹாஸம் செய்து ஸேனாமுகத்தில் யுத்தத்திற்கு அழைத்துக்கொண்டே மதித்தோடினான். பயங்கரமான தோற்றமுள்ளவர்களும் பலவான்களுமான அவ்விருவருக்கும் தம்பிஷ்டப்படி ஓடிவருகின்ற இரண்டு பெரிய பர்வதங்களுக்குச் சண்டை நேரிடுவதுபோலச் சண்டை நேரிட்டது. ஒன்றோடொன்று நெருங்கின யானைகளையுடையவர்களும் வீரர்களுமான அவ்விருவரும் சூரியகிரணங்கள்போலப் பிரகாசிக்கின்ற தோமரங்களாலே ஒருவரையொருவர் பலமாகப் பிளந்து ஸிம்மநாதஞ்செய்தார்கள். அவ்விருவரும் விலகி யானையிலிருந்து மண்டலாகாரமாக ஸஞ்சரித்தார்கள். இருவரும் விற்களைக் கையில்கொண்டு பரஸ்பரம் அடித்தார்கள். அவ்விருவரும் ஸிம்மநாதங்களாலும் தோளைத்தட்டும் ஒலிகளாலும் பாணசப்தங்களாலும் நாற்புறங்களிலும் ஜனங்களைச் சந்தோஷிக்கும்படி செய்துகொண்டு ஸிம்மநாதம் செய்தார்கள். மஹாபலசாலிகளும் ஸமர்த்தர்களுமான அவ்விருவரும் உயரத்தூக்கிய கைகளையுடையவைகளும் காற்றினால் அலைக்கப்பட்ட கொடித்துணிகளையுடையவைகளுமான இரண்டு யானைகளிலிருந்து போர்புரிந்தார்கள். மாரிக்காலத்தில் இரண்டு மேகங்கள் நீரைப்பொழிவதுபோல அவ்விருவரும் சக்திகளையும் தோமரங்களையும்பொழிந்தும் ஒருவர்வில்லை மற்றொருவர் துணித்தும்

* யானைவீரர்கள்.

னால் பிளக்கப்பட்ட மலையினின்று கீழேவிழுவதுபோல உயிர் துறந்து கையிலேபிடித்தகத்தியுடன் யானையின் அருகிலேவிழுந்தான். பரதகுலசிறந்தவரே! அருச்சுனருக்குச் சீர்த்தியை உண்டுபண்ணுகின்ற அரசனான அந்தக்ஷேமதூர்த்தி சொல்லப்பட்டதைக்கண்டு நம்முடையசேனை மனவருத்தமுற்று நான்குபக்கங்களிலும் ஓடியது.

---

## பத்தாவது அத்யாயம்.

### (த்வந்துவ யுத்தமும், ஸாத்யகியினால் விந்தாநுவிந்தர்கள கொல்லப்பட்டதும்.)

சிறந்த வில்லாளியும் சூரனுமான கர்ணன் யுத்தத்தில் பாண்டவர்களுடைய சேனையை வணங்கின கணுக்களுள்ள அம்புகளாலே அடித்தான். அரசரே! அவ்வாறே மகாரதர்களான அந்தப்பாண்டவர்களும் கோபங்கொண்டு நம்முடைய புத்திரனது சேனையைக் கர்ணனுக்கெதிரில் அடித்தார்கள். கர்ணனும் யுத்தத்தில் சூரியனுடைய கிரணங்கள்போல விளங்குகின்றவைகளும் கருமாரனால் நன்றாகச் சாணைபிடிக்கப்பட்டவைகளுமான நாராசங்களாலே பாண்டவசேனையைக் கொன்றான். பாரதரே! அந்த யுத்தத்தில கர்ணனாலே நாராசங்களால அடிக்கப்பட்ட யானைகள் வீரிட்டுச் சோர்ந்துவாடின; பத்துத்திக்குகளிலும் சுற்றின. ஸூதபுத்திரனாலே அந்தப்பாண்டவசேனை கொல்லப்படும்போது, நகுலன் மகாயுத்தத்தில் சூதபுத்திரனை நோக்கி விரைவாக எதிர்த்துவந்தான். அவ்வாறே பீமஸேனன் செய்தற்கரிய காரியத்தைச்செய்கின்ற துரோணபுத்திரரை எதிர்த்தான். ஸாத்யகி கேகயராஜகுமாரர்களான விந்தாநுவிந்தர்களை எதிர்த்தான். எதிர்த்துவருகின்ற சுருதகர்மாவை அரசனான சித்ரஸேனன் எதிர்த்தான். அவ்வாறே பிரதிவிந்தியன் விசித்திரமான கொடியையும் வில்லையுமுடைய சித்ரனை எதிர்த்தான். துரியோதனனோ தர்மநந்தனரான யுதிஷ்டிரராஜரை எதிர்த்தான். ஸம்சப்தர்களுடைய கூட்டங்கள் உத்ஸாகத்தோடு தனஞ்சயனை எதிர்த்தன. உத்தமர்களானவீரர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகிற அந்த யுத்தத்தில் திருஷ்டத்யும்னன் கிருபரையும், சிகண்டி தவருதவனை கிருதவர்மாவையும், சுருதகீர்த்தி சல்யனையும், மாத்ரீபுத்திரனும் பிரதாபசாலியுமான ஸஹதேவன் உமது புத்திரனான துச்சாஸனனையும் எதிர்த்தனர். பாரதரே! விந்தாநுவிந்தர்களிருவரும் யுத்தத்தில் பிரகாசிக்கின்ற சரமாரியினால் ஸாத்யகியை எதிர்த்தனர். ஸாத்யகியும் கேகயதேசத்து வேந்தர்களான விந்தாநுவிந்தர்களைச் சரமாரியினால் மூழ்

ஞன். பெரிய காட்டில் இரண்டு யானைகள் எதிர்க்கின்ற ஒரு யானையை இரண்டு கொம்புகளால் அடிப்பதுபோல வீரர்களும் பிராதாக்களுமான அவ்விருவரும் அந்த ஸாத்யகியை ஹிருதயத்தில் மிகவும் அடித்தார்கள். அரசரே! யுத்தத்தில் அம்புகளாலே கவசமுடைக்கப்பட்டவர்களும் பிராதாக்களுமான அவ்விருவரும் பழுதற்றசெய்கையையுடைய ஸாத்யகியை அம்புகளாலே அடித்தார்கள். பாரதரே! ஸாத்யகி அட்டகாசஞ்செய்துகொண்டு அந்த விந்தாநுவிந்தர்களை எல்லாத்திசைகளிலும் சரமாரியினால் மறைத்துத் தடுத்தான். பிறகு, ஸாத்யகியினுடைய சரமாரிகளாலே தடுக்கப்பட்ட அவ்விருவரும் ஸாத்யகியினுடைய ரதத்தை விரைவாக அம்புகளால் மூடினார்கள். பிறகு, மிக்க புகழுள்ளவனும் சூரகுலத்தில் பிறந்தவனுமான ஸாத்யகி ஆச்சரியகரமான அவ்விருவருடைய வில்களையும் அறுத்துக் கூர்மையான அம்புகளால் அவர்களையும் தடுத்தான். பிறகு, அவ்விருவரும் விசித்திரமான வேறு இரண்டு வில்களையும் பெரிதான பாணங்களையும் எடுத்து ஸாத்யகியை மூடிக்கொண்டு விரைவாகவும் அழகாகவும் ஸஞ்சரித்தார்கள். அவ்விருவராலும் விடப்பட்டவைகளும் கழுகிறகுகளும் மயிலிறகுகளும் பூண்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான பெரிய பாணங்கள் எல்லாத்திக்குகளையும் பிரகாசிக்கச்செய்துகொண்டு (ஸாத்யகியின்மீது) விழுந்தன. மகாயுத்தத்தில் அவ்விருவருடைய பாணங்களாலும் இருள் உண்டாயிற்று. அந்த மகாரதர்கள் பரஸ்பரம் வில்லைத் துணித்தார்கள். மகாராஜரே! பிறகு, யுத்தத்தில் கொட்டமதங்கொண்டவனான ஸாத்யகி கோபங்கொண்டு வேறுவில்லை எடுத்து யுத்தத்தில் நாணேற்றி மிக்க கூர்மையுள்ள க்ஷுரமென்னும் பாணத்தினாலே அநுவிந்தனுடைய தலையை அறுத்தான். அரசரே! குண்டலங்களாலே அலங்கரிக்கப்பட்ட அந்த அநுவிந்தனுடைய பெரிய தலை கீழேவிழுந்தது. மகாயுத்தத்தில் கொல்லப்பட்ட சம்பரனுடைய தலைபோல அது கேகயர்களெல்லோரையும் துக்கமடையும்படி செய்துகொண்டு விரைவாகப் பூமியை அடைந்தது. சூரனான அநுவிந்தன் கொல்லப்பட்டதைக்கண்டு அவனுக்குப் பிராதாவும் மகாரதனுமான விந்தன் வேறுவில்லை நாணேற்றிச் சேனையை எதிர்த்தான். அந்தவிந்தன் பொன்னாலாகிய பிடிகளையுடையவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான அறுபது பாணங்களாலே ஸாத்யகியை அடித்து உரக்க ஸிம்மநாதஞ்செய்தான்; 'நில், நில்' என்றும் சொன்ஞன். பிறகு, கேகயர்களுள் மகாரதனான விந்தன் விரைவாக அநேக ஆயிரம் அம்புகளாலே ஸாத்யகியை இரண்டுகைகளிலும் மார்பிலும்

அடித்தான். எல்லா அங்கங்களும் அம்புகளாலே காயப்படுத்தப்பட்டவனும், மேன்மையான பராக்ரமமுடையவனுமான ஸாத்யகி யுத்தரங்கத்தில் பூத்துள்ள பலாசமரம்போல விளங்கினான். மகாத்மாவான கேகயவீரனாலே யுத்தத்தில் அடிக்கப்பட்ட ஸாத்யகி அட்டஹாஸம் செய்துகொண்டு இருபத்தைந்து பாணங்களாலே கேகயவீரனை அடித்தான். தேராளிகளுள் சிறந்தவர்களான அவ்விருவரும் யுத்தத்தில் அன்யோன்யம் அழகியவில்களையறுத்து ஸாரதிகளையும் குதிரைகளையும் விரைவாகக்கொன்று தேரையிழந்து கத்திச்சண்டையின்பொருட்டு யுத்தத்தில் ஒன்றுகூடினார்கள். (வாட்போரில்) நல்ல கைப்பழக்கமுள்ளவர்களான அவ்விருவரும் சிறந்தவாள்களையும் நூறுசந்திரப்பிரதிமைகளால் அலங்கரிக்கப்பட்ட கேடகங்களையும் பிடித்துத் தேவாஸுரயுத்தத்தில் மகாபலசாலிகளான ஜம்பனும் இந்திரனும்போல மகாயுத்தத்தில் விளங்கினார்கள். பிறகு, பெரும்போரில் வட்டமாகஸஞ்சரிக்கின்ற அவ்விருவரும் ஒருவரையொருவர் எல்லாப்பக்கங்களிலும் விரைவாகத் தாக்கினார்கள். ஒருவரையொருவர் கொல்லும் விஷயத்தில் இருவரும் அதிகமான முயற்சியைச் செய்தார்கள். பிறகு, ஸாத்வதன் கேகயவீரனுடைய கேடகத்தை இரண்டாக வெட்டி எறிந்தான். அவ்வாறே, ராஜாவானவிந்தனும் ஸாத்யகியினுடையகேடகத்தை வெட்டி எறிந்தான். விந்தனே அனேகநக்ஷத்திரக்கூட்டங்களால் நிறைக்கப்பட்ட ஸாத்யகியினுடைய கேடகத்தை அறுத்து மண்டலாகாரமான கதிகளையும் போர்முறைகளையும் செய்துகொண்டு ஸஞ்சரித்தான். சிறந்தகத்தியைத்தாங்கி மகாயுத்தத்தில் ஸஞ்சரிக்கின்ற அந்தவிந்தனைச் சைனேயன் விரைந்து குறுக்காக நீட்டப்பட்ட கையிலுள்ள சக்தியினால் வெட்டினான். அரசரே! சிறந்தவில்லாளியான கேகயராஜன் மகாயுத்தத்தில் ஸாத்யகியினால் கவசத்துடன் இரண்டாகத் துண்டாக்கப்பட்டு, வஜ்ரத்தினால் அடிக்கப்பட்டமலைபோல விழுந்தான். சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவனும் ரதிகர்களுள் உத்தமனும் சூரனுமான சைனேயன் யுத்தத்தில் அந்தவிந்தனைக் கொன்று யுதாமன்யுவினுடைய தேரில் விரைவாக ஏறினான். பிறகு, ஸாத்யகி மறுபடியும் முறைப்படி ஸித்தஞ்செய்யப்பட்ட வேறு ரதத்தின்மீதேறிக் கேகயர்களுடைய பெரிதானசேனையை அம்புகளால் அடித்தான். யுத்தத்தில் ஸாத்யகியினால் கொல்லப்பட்ட கேகயர்களுடைய அந்தப் பெருஞ்சேனை சத்துருவான ஸாத்யகியைவிட்டுப் பத்துத்திக்குகளிலும் ஓடிற்று.

---

## பதினோராவது அத்யாயம்.

(பிரதிவிந்தியனாலும் சுருதகர்மாவினாலும் முறையே சித்ரனும் சித்ரஸேனனும் கொல்லப்பட்டது.)

அரசரே! பிறகு, சுருதகர்மா யுத்தத்தில் கோபங்கொண்டு ராஜாவான சித்ரஸேனனை ஐம்பது பாணங்களால் அடித்தான். வேந்தரே! சித்ரஸேனனோ அந்தச்சுருதகர்மாவை வணங்கின கணுக்களுள்ள முப்பது பாணங்களால் அடித்து ஸாரதியையும் ஐந்து பாணங்களால் அடித்தான். பிறகு, சுருதகர்மா கோபங்கொண்டு படைமுனையில் சித்ரஸேனனை மிக்ககூர்மையுள்ள நாராசத்தினாலே மர்மஸ்தானத்தில் அடித்தான். மகாராஜரே! வீரனான சித்ரஸேனன் மகாபலசாலியான சுருதகர்மாவினால் அம்பினால் மிக அடிக்கப்பட்டு மூர்ச்சையை அடைந்தான்; புத்தியையும் இழந்தான். இந்தச்சமயத்தில் மிக்ககீர்த்தியுடையவனான சுருதகீர்த்தி ராஜாவான இந்தச்சுருதகர்மாவைத் தொண்ணூறுபாணங்களால் மூடினான். பிறகு, மகாரதனான சித்ரஸேனன் பிரஜ்ஞையடைந்து ஒரு பல்லத்தினாலே சுருதகர்மாவின் வில்லைத் துண்டாடி அவனையும் ஏழுபாணங்களால் அடித்தான். அந்தச் சுருதகர்மா (சத்துருவின்) வேகத்தை நாசம் செய்யக்கூடியதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுமான வேறுவில்லை எடுத்துச் சித்ரஸேனனைச் சரமாரிகளாலே விசித்திரமான ரூபத்தைத் தரித்தவனாகச்செய்தான். அம்புகளால் சித்திரமானரூபமுள்ளவனாகச் செய்யப்பட்டவனும் விசித்திரமானமாலைகளை அணிந்தவனும் அரசனும் யௌவனமுள்ளவனுமான அந்தச்சித்ரஸேனன் பெரிய யுத்தரங்கத்தில் முட்களால் நிறைந்த முள்ளம்பன்றிபோல விளங்கினான். பிறகு, சூரனான சித்ரஸேனன் சுருதகர்மாவை நாராசத்தினாலே நடுமார்பில் வேகமாகப் பிளந்து வேகமாக 'நில, நில' என்றும் சொன்னான். சுருதகர்மாவும் அந்த யுத்தத்தில் நாராசத்தால் அடிக்கப்பட்டு, ஒரு மலையானது தாதுக்களோடு கலந்த அருவியைப் பெருக்குவதுபோல இரத்தத்தைப் பெருக்கினான். பிறகு, இரத்தத்தால் நனைக்கப்பட்ட அங்கங்களுள்ளவனும், இரத்தத்தால் உண்டுபண்ணப்பட்ட காந்தியுள்ளவனும், வீரனுமான அந்தச்சுருதகர்மா யுத்தத்தில் பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷம்போல விளங்கினான். வேந்தரே! பிறகு, சத்துருவினாலே நன்றாக எதிர்க்கப்பட்ட சுருதகர்மா கோபங்கொண்டு, பகைவர்களைத்தடுக்குந்திறமையுள்ள சித்ரஸேனனுடைய வில்லை இரண்டாகத் துண்டாக்கினான். பிறகு, வில் அறுக்கப்பட்ட

வனான சித்திரஸேனனை மூன்றூறுநாராசங்களாலே மூடி யுத்தத்தில் சிறந்த பாணங்களாலே அடித்தான். பிறகு, தீட்டப்பட்டதும் கூர்மையுள்ளதுமான வேறொருபல்லத்தினாலே மகாபலசாலியான அந்தச்சித்ரஸேனனுடைய தலைப்பாகையையணிந்த தலையை அறுத்தான். சித்திரஸேனனுடைய காந்தியுள்ள அந்த்த்தலையானது ஆகாயத்தினின்று தறசெயலாக நழுவி விழுகின்ற சந்திரன்போல பூமியில விழுந்தது. ஐயா! அபிஸாராதிபதியான சித்திரஸேனராஜன் கொல்லப்பட்டதைக்கண்டு அவனுடைய ஸேனாவீரர்கள் விரைவாக ஓடினார்கள். பிறகு, கோபங்கொண்டவனும் பெரியவில்லாளியுமான சுருதகர்மா முடிவுக்காலத்தில கோபங்கொண்ட யமன் எல்லாபிராணிகளையும் நாசஞ்செய்வதுபோல ஓடுகின்ற அச்சைனயத்தை அம்புகளால அடித்து நாசஞ்செய்தான். யுத்தத்தில உமகௌத்திரனும் விலலாளியுமான சுருதகாமாவினாலே வதம்பண்ணபடுகின்ற அந்த வீரர்கள் காட்டுத்தீயினால் தகிக்கப்பட்ட யானைகள்போல விரைவாகத் திக்குக்களில ஓடினார்கள். சத்துருக்களை ஜயிப்பதில ஊக்கத்தையிழந்து ஓடுகின்ற அவர்களைக்கண்டு சுருதகர்ம கூர்மையான அம்புகளால துரத்திக்கொண்டு பிரகாசித்தான். பிறகு பிரதிவிந்தியன் ஐந்துபாணங்களாலே சித்திரனைப் பிளந்து மூன்று பாணங்களால் அவனது ஸாரதியை அடித்து ஒரு பாணத்தால அவன் த்வஜத்தையும் அடித்தான். சித்திரனும் அந்தப்பிரதிவிந்தியனைப் பொற்கட்டுக்களையுடையவைகளும் பளபளப்பான நுனிகளுள்ளவைகளும் கழுகிறகுகளால வேகமுள்ளவைகளாகச் செய்யப்பட்டவைகளுமான ஒன்பது பலலங்களாலே இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். பாரதரே! பிரதிவிந்தியன் பாணங்களாலே அந்தச்சித்திரனுடைய விலலையறுத்துக் கூர்மையுள்ள ஐந்துபாணங்களாலே அவனையும் அடித்தான். மகாராஜரே! பிறகு, சித்திரன் ஸ்வர்ணகண்டைகளுடன் கூடியதும் நெருங்க முடியாததும் உயிர்களைத்தேடுகிறதுபோலிருப்பதுமான ஒரு சக்தியைப் பிரதிவிந்தியன்மீது பிரயோகித்தான். வேகமாகவருகின்றதும் ஆகாயத்திலுள்ள எரிநக்ஷத்திரம் போன்றதுமான அந்தச்சக்தியைப் பிரதிவிந்தியன் யுத்தத்தில் சிரித்துக்கொண்டே இரண்டாக வெட்டினான். பிரதிவிந்தியனுடைய கூர்மையுள்ள அம்புகளாலே இரண்டாக அறுக்கப்பட்ட அந்தச்சக்தியாயுதம் யுகாந்தகாலத்தில எலலாப்பிராணிகளையும் பயமடையச்செய்கின்ற இடிபோல விழுந்தது. சித்திரன் அந்தச்சக்தியானது வீணாகச்செய்யப்பட்டதைக்கண்டு பொன்

ளின் தொகுதியால் அலங்கரிக்கப்பட்ட பெரிய கதையை எடுத்துப் பிரதிவிந்தியன்மீது பிரயோகித்தான். மகாயுத்தத்தில் அந்தக்கதாயுதம் பிரதிவிந்தியனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் ரதத்தையும் பொடிசெய்து விரைவாகப் பூமியை நாடியது. பாரதரே! பிரதிவிந்தியன் இதேஸமயத்தில் ரதத்தினின்று துள்ளிக்குதித்து ஸ்வர்ணமயமான தண்டத்தையுடையதும் அலங்கரிக்கப்பட்டதுமான சக்தியைச் சித்திரன்மீது பிரயோகித்தான். ராஜரே! மிக்க மனோதைரியமுள்ள ராஜாவான சித்திரன் வருகின்ற சுதாயுதத்தைக் கையினாலே பிடித்து அதனையே பிரதிவிந்தியன்மீது திருப்பியெறிந்தான். மிக்க ஒளிபொருந்திய அக்கதாயுதம் யுத்தத்தில் சூரனை பிரதிவிந்தியனை அடைந்து வலக்கையைப்பிளந்து பூமியில் விழுந்தது. விழுகின்ற அந்தக்கதாயுதமானது அந்த இடத்தை இடிபோலப் பிரகாசிக்கச்செய்தது. அரசரே! பிறகு, பிரிதிவிந்தியன் மிகுந்த கோபங்கொண்டு சித்திரனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் பொன்னாலே அலங்கரிக்கப்பட்ட ஒரு தோமரத்தைப் பிரயோகித்தான். அத்தோமரம் அவனது தேகத்தில் அணிந்திருக்கின்ற கவசத்தையும் அவன் மார்பையும் பிளந்து பெரிய ஸர்ப்பம் புற்றில் புகுவதுபோலப் பூமியில் விரைவாகப் புகுந்தது. அரசனான அந்தச் சித்திரன் அப்பொழுது தோமரத்தினாலே அடிக்கப்பட்டு, பருத்தவும், நீண்டும் பரிகாயுதத்துக்கு ஒப்பாயுள்ள இரண்டு கைகளையும் விரித்துக்கொண்டு கீழே விழுந்தான். சித்திரன் கொல்லப்பட்டதைக்கண்டு யுத்தத்தில் பிரகாசிக்கின்றவர்களான உம்மைச்சேர்ந்தவீரர்கள் பிரதிவிந்தியனை நோக்கி நான்குபக்கங்களினின்றும் விரைவாக எதிர்த்தோடிவந்தார்கள். பலபலவிதமான பாணங்களையும் கிங்கிணிகளுடன் கூடிய சதக்னிகளையும் அவர்கள் பிரயோகித்துக்கொண்டு சூரியனை மேகக்கூட்டங்கள் மூடுவதுபோல அந்தப்பிரதிவிந்தியனை மூடினார்கள். தோள்வலிமை மிகுந்த பிரதிவிந்தியன் யுத்தத்தில் பாணஸமூகத்தினாலே அவர்களை நாசம் செய்து வஜ்ரபாணியான இந்திரன் அஸுரஸேனையைத் துரத்துவதுபோல உம்முடைய சேனையைத் துரத்தினான். வேந்தரே! யுத்தத்தில் பாண்டவர்களாலே வதம்செய்யப்படுகின்ற உம்மைச்சேர்ந்தவர்கள் காற்றினாலே அலைக்கப்பட்ட மேகங்கள்போல விரைவாகச் சிதறினார்கள். நான்கு பக்கங்களிலும் அடிக்கப்படுகின்ற அந்தச்சைனியம் ஓடவே, துரோணபுத்திரர் ஒருவரே மஹாபலசாலியான பீமஸேனனை விரைவாக எதிர்த்தார். முற்காலத்தில் தேவாஸுர

யுத்தத்தில் விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் சண்டை நேர்ந்தது போல யுத்தத்தின்பொருட்டுக் கோரமான சேர்க்கையானது அவ்விருவருக்கும் விரைவாக உண்டாகியது.

---

## பனிரண்டாவது அத்யாயம்.

### (பீமஸேனனுக்கும் அஸ்வத்தாமாவுக்கும் யுத்தம்.)

அரசரே! பிறகு, துரோணபுத்திரர், மிக்க விரைவுடன் அஸ்த்ரலாகத்தை வெளியிட்டுக்கொண்டு பாணங்களினாலே பீமஸேனனை அடித்தார். பிறகு, சத்துரியின் மர்மஸ்தானங்களை அறிந்த அஸ்வத்தாமா உறஸ்தலாகவத்தையும் எல்லாமர்மஸ்தானங்களையும் பார்த்துக் கூர்மையுள்ள தொண்ணூறு பாணங்களாலே மறுபடியும் அந்தப் பீமனையடித்தார். அரசரே! துரோணபுத்திரரால் கூர்மையுள்ள அம்புகளால் இறைக்கப்பட்ட பீமஸேனன் யுத்தரங்கத்தில் கிரணங்களுடன் கூடின சூரியன்போல விளங்கினான். பிறகு, பாண்டுபுத்திரனை பீமஸேனன் நன்ருகப் பிரயோகிக்கப்பட்ட ஆயிரம் அம்புகளால் துரோணபுத்திரரைமூடி ஸிம்மநாதஞ்செய்தான். அரசரே! பிறகு, துரோணபுத்திரர் மந்தஹாஸத்துடன் பாணங்களால் பாணங்களைத் தடுத்து யுத்தத்தில் பாண்டவனை ஒரு நாராசத்தினால் நெற்றியில் அடித்தார். வேந்தரே! பிறகு, பாண்டவன், வனத்தில் கொழுத்திருக்கிற கட்கமிருகமானது கொம்பைத் தாங்குவதுபோல நெற்றியில் தைத்தபாணத்தைத் தாங்கினான். பிறகு, பராக்கிரமசாலியான அவன் ஆச்சரியங்கொண்டு யுத்தத்தில் முயற்சியுள்ள துரோணபுத்திரரை மூன்றுநாராசங்களால் நெற்றியில் அடித்தான். பிறகு, அந்தப் பிராமணரான துரோணபுத்திரர் நெற்றியில் தைத்திருக்கின்ற பாணங்களாலே வர்ஷாகாலத்தில் நனைக்கப்பட்ட மூன்று கொடுமுடிகளுள்ள பர்வதராஜன்போல விளங்கினார். பிறகு, துரோணபுத்திரர் பாண்டவனை அனேகஅம்புகளால் அடித்தார். காற்று மலையை அசைக்க முடியாததுபோலத் துரோணபுத்திரர் பீமஸேனனை அசைப்பதற்குச் சக்தியற்றவரானார். அவ்வாறே, மிக்க ஊக்கமுள்ளவனான பாண்டவன் ஜலப்பிரவாகம் மலையை அசைக்கமுடியாததுபோல யுத்தத்தில் அஸ்வத்தாமாவைக் கூர்மையான அனேக அம்புகளாலும் அசைக்கமுடியவில்லை. கோரமான அம்புகளாலே ஒருவரை ஒருவர் மூடுகின்றவர்களும் மகாரதர்களும் வலிமை மிக்கவர்களும் வீரர்களுமான அவ்விருவரும் சிறந்ததேர்களிலிருந்து விளங்கினார்கள். உத்தம

மானபாணங்களாலே ஒருவரை யொருவர் தவிக்கும்படி செய்கின்ற அவ்விருவரும் தம்கிரணங்களாலே உலகங்களுக்கு நாசத்தையுண்டு பண்ணுகின்றவர்களும் மிகஜ்வலிக்கின்றவர்களுமான இரண்டுசூரியர் கள்போல விளங்கினார்கள். பிறகு, மகாயுத்தத்தில் எதிர்த்து யுத்தஞ் செய்வதில் முயற்சியைச்செய்கின்றவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களு மான அவ்விருவரும், செய்ததற்குப் பிரதிசெய்வதில் முயற்சியுள்ள வர்களாகவும் பயமற்றவர்களாகவும், அம்புகளாகிற கோரப்பற்களை யுடையவைகளும் ஜயிக்கமுடியாதவைகளும் விற்களாகிற வாயை யுடையவைகளும் பயங்கரமானவைகளுமான இரண்டு புலிகள் போலப் போர்க்களத்தில் ஸஞ்சரித்தார்கள். ஆகாயத்தில் மேக மண்டலங்களால் மறைக்கப்பட்ட சந்திரசூரியர்களைப்போலப் பாண ஜாலங்களால் அவ்விருவரும் நாற்புறங்களிலும் மறைக்கப்பட் டுக் காணக்கூடாதவர்களானார்கள். பகைவர்களை அடக்குகின்றவர்க ளான அவ்விருவரும் மேகக்கூட்டத்தினால் விடுபட்ட அங்கார கனும் புதனும்போலப் பிரகாசித்தார்கள். பிறகு, துரோணபுத்திரர், மிக்கபயங்கரமான அவ்வித யுத்தம் நடக்கையில், மேகம் மழைத்தாரை களைப் பர்வதத்தின்மீது இறைப்பதுபோல உக்கிரமான அனேக அம்புகளை இறைத்துக்கொண்டு அந்தயுத்தகளத்தில் விருகோதரனை அப்பிரதக்ஷிணமாகச் சுற்றிவந்தார். பீமன் சத்துருவினுடைய வெற் றிக்குறிப்பான அச்செய்கையைப் பொறுக்கவில்லை. வேந்தரே! பிறகு, பாண்டவனும் அபஸவ்யமாகச்சுற்றிப் பிரதிசெய்தான். புருஷ ஸ்ரேஷ்டர்களான அவ்விருவருக்கும் பற்பலவிதமான மண்டலகதி களாலும் போக்குவரவினாலும் பிரமாதமான யுத்தம் நடந்தது. அவ் விருவரும் மண்டலஸ்தானத்திலேயே பலவிதமான மார்க்கங்களில் ஸஞ்சரித்துக் காதுவரையில் இழுத்துவிடப்பட்ட அம்புகளால் ஒரு வரையொருவர் அடித்தார்கள். ஒருவரையொருவர் கொல்வதிலும் மிகுந்தமுயற்சியைச் செய்தார்கள். அன்யோன்யம் யுத்தத்தில் தேரை இழக்கும்படி செய்வதிலும் முயற்சிசெய்தார்கள். பிறகு, மகாரதரான அசுவத்தாமா மகாஸ்திரங்களைவெளியிட்டார். பிறகு, பாண்டவன் யுத் தத்தில் அந்தஅஸ்திரங்களை அஸ்திரங்களாலேயே திருப்பியடித்தான். மகாராஜரே! பிறகு, பிராணிகளை நாசம்செய்யும் காலத்தில் அங்கார கன்முதலான கிரகங்களுக்கு எவ்வாறு கோரமானயுத்தம்நேருமோ அவ்வாறே கோரமான அஸ்திரயுத்தம் நடந்தது.பாரதரே! அவ்விரு வராலும் விடப்பட்ட அந்தப்பாணங்கள் எல்லாத்திக்குக்களையும்பிரகா சிப்பித்துக்கொண்டு நான்குபக்கங்களிலும் உம்முடைய சேனையில்

வந்து பாய்ந்தன. ஆகாயமானது பாணஸமூகங்களால் சூழப்பட்டு பயங்கரமாகியது. வேந்தரே! பிரஜைகளுக்கு முழுதும் நாசமுண்டாகிற காலத்தில்போல யுத்தபூமியானது விழுகின்ற எரிநக்ஷத்திரங்களால் எல்லாப்பக்கங்களிலும் சூழப்பட்டது. அந்தயுத்தத்தில் பொறிகளுடனும் பிரகாசிக்கின்ற ஜ்வாலைகளுடனுங்கூடியதும் அந இரண்டு ஸேனையையுங் கொளுத்துவதுமான நெருப்பானது பாணங்கள் ஒன்றோடொன்று மோதுவதினால் உண்டாயிற்று. மகாராஜரே! பிரபுவே! யுத்தகளத்தில் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற ஸித்தர்கள், 'இந்த யுத்தம் எல்லாயுத்தங்களைக்காட்டிலும் மேலானது. எல்லாயுத்தங்களும் இந்தயுத்தத்தினுடைய பதினாறில் ஒரு பாகத்திற்கும் நிகராகாது; இவ்வித யுத்தம் எங்கும் ஒரு பொழுதும் உண்டாகப்போகிறதில்லை; ஆச்சர்யம்! பிராம்மணனும் க்ஷத்திரியனுமாகிய இவ்விருவரும் ஞானமுள்ளவர்கள்.; ஆச்சரியமான செளரியமுள்ளவர்கள்; இருவரும் உக்கிரமான பராக்கிரமமுள்ளவர்கள்; ஆச்சரியம்! பீமனோ பயங்கரமான பலமுள்ளவன்; இந்த அசுவத்தாமாவோ அஸ்திரங்களில் நல்ல பாண்டித்தியமுள்ளவர்; வீரத்தினுடைய ஸாராம்சமானது ஆச்சரியகரமானது. இவ்விருவரும் அஸ்த்ரங்களைப் பிரயோகிக்கும் அழகானது ஆச்சரியகரமானது; இவ்விருவரும் யுத்தத்தில் காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானவர்கள். யுத்தத்தில் கோரரூபிகளும் ஆண்மையில் சிறந்தவர்களுமான இவ்விருவரும் இரண்டுருத்திரர்கள் தோன்றியிருப்பதுபோலவும் இரண்டு சூரியர்கள் தோன்றியிருப்பதுபோலவும் இரண்டு யமன்கள் தோன்றியிருப்பதுபோலவும் இருக்கிறார்கள்' என்று சொன்னார்கள். இவ்விதமான ஸித்தர்களுடைய வார்த்தைகள் அடிக்கடி கேட்கப்பட்டன. ஒன்றுகூடியிருக்கிற தேவர்களுடைய ஸிம்மநாதமும்தோன்றியது. ஆச்சரியகரமும் யுத்தத்தில் நினைக்கவும் அரிதுமான அவ்விருவருடைய செய்கையையும் கண்டு ஸித்த சாரணர்களுடைய கூட்டங்களுக்கு ஆச்சரியம்உண்டாயிற்று. அப்பொழுது, தேவர்களும் ஸித்தர்களும் பரமரிஷிகளும் புகழ்ந்தார்கள். 'மிக்க புஜபலமுள்ளவரே! துரோணபுத்திரரே! நல்லது. பீமா! நல்லது' என்றுப் சொன்னார்கள்.

அரசரே! பரஸ்பரம் அபராதிகளாயிருக்கிற அந்தச் சூரர்களிருவரும் யுத்தத்தில் சினத்தினால் கண்களை நெறித்து விழித்து ஒருவரையொருவர் பார்த்தார்கள். கோபத்தினால் சிவந்த கண்களையுடையவர்களும் கோபத்தினால் மிகத்துடிக்கின்ற உதடுகளுள்ளவ

களும் கோபத்தினால் பற்களையும் உதடுகளையும் நன்றாகக் கடித்துக் கொண்டவர்களும் மகாரதர்களுமான அவ்விருவரும் அம்புகளாகிற ஜலத்தையும் சஸ்திரங்களாகிற மின்னலொளியையுமுடைய (இரண்டு மேகங்கள் போல) யுத்தத்தில் ஒருவரையொருவர் அம்புமழையினால் மூடினார்கள். மகாயுத்தத்தில் அன்யோன்யம் ஒருவர் மற்றொருவருடைய கொடியையும் ஸாரதியையும் அடித்து ஒருவர் மற்றொருவருடைய குதிரைகளையும் கொன்று ஒருவர்மற்றொருவரைப் பிளந்தார்கள். மகாராஜரே! பிறகு, இருவரும் மகாயுத்தத்தில் கோபங்கொண்டு இரண்டு பாணங்களை எடுத்து ஒருவரையொருவர் கொல்லவிரும்பி விரைவாகப் பிரயோகித்தார்கள். மகாராஜரே! வஜ்ரத்தினுடையவேகம்போன்ற வேகமுடையவைகளும் (ஒருவராலும்) நெருங்க முடியாதவைகளுமான அவ்விரண்டு பாணங்களும் ஸேனாமுகத்தில் பிரகாசித்துக்கொண்டு நன்றாகத்தாக்கி அடித்தன. அப்பொழுது, பரஸ்பரமுள்ள வேகத்தாலும் அம்புகளாலும் அதிகமாகத் துன்பஞ்செய்யப்பட்ட மகாவீரியசாலிகளான அவ்விருவரும் தமது தேர்த்தட்டில் விழுந்தார்கள். அரசரே! பிறகு, ஸாரதியோ துரோணபுத்திரர் பிரஜ்ஞையிழந்திருப்பதை அறிந்து எல்லாச் சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தரங்கத்தை விட்டு விலக்கிக் கொண்டுபோனான். வேந்தரே! அவ்வாறே, விசோகன், யுத்தத்தில் பகைவரை வாட்டுகிறவனும் அடிக்கடி மூர்ச்சையடைகின்றவனுமான பீமனைத் தேருடன் வேறிடத்துக்குக் கொண்டுபோனான்.

---

## பதின்மூன்றாவது அத்யாயம்.

### (சல்யனால் சுருதகீர்த்தி தோல்வியடைந்தது.)

மகாராஜரே! பிறகு, கூர்மையான பாணங்களை இறைத்து கொண்டு வருகின்ற சுருதகீர்த்தியைச் சல்யன் மனக்களிப்புடன் தடுத்தான். மகாரதனான சுருதகீர்த்தி மத்ரராஜனையடைந்து பொன்னால் அலங்கரிக்கப்பட்ட இருபது பல்லங்களால் அடித்தான். பாரதரே! சுருதகீர்த்தி அந்தச் சல்யனை நேராகச் செல்லுகின்ற மூன்றம்புகளாலே விரைவாகத் திருப்பியடித்து அவனுடைய ஸாரதியையும் ஒருபல்லத்தினால் நன்கு அடித்தான். அந்தச் சுருதகீர்த்தி சரமாரியினால் யுத்தத்தில் சல்யனை மூடி அவனுடைய தேரைக் குறித்துக் கூர்மையான அம்புகளைப் பிரயோகித்தான். மகாராஜரே பிறகு, சல்யன் யுத்தத்தில் சுருதகீர்த்தியினுடைய கைகளால் விட

பட்ட பாணங்களை வணங்கினகணுக்களுள்ள பாணங்களால் துண் டாடினன். பிறகு, சுருதகீர்த்தி சல்யனை உருக்குமயமான ஒன்பது பாணங்களால்அடித்து அவனுடைய ஸாரதியையும் மூன்றுபாணங் களாலடித்துச் சல்யனை மறுபடியும் ஐந்துபாணங்களாலடித்தான். சல்யன் அந்தச்சுருதகீர்த்தியினுடையவில்லையும் கையுறையையும் அறுத்துச் சிறந்தஏழுபாணங்களாலே யுத்தத்தில் அவனையும் விரை வாக அடித்தான். பிறகு, மகாரதனானசுருதகீர்த்தி வேறுதனுசை எடுத்து மத்ரராஜனை அறுபத்துநான்குபாணங்களாலே கைகளிலும் மார்பிலும் அடித்தான். வேந்தரே! பிறகு, அந்தச்சுருதகீர்த்தியி னாலே பாணங்களால் யுத்தத்தில் அடிக்கப்பட்ட சல்யன் கூர்மை யுள்ள தொண்ணூறு பாணங்களாலே அந்தச் சுருதகீர்த்தியைத் திருப்பியடித்தான். மகாராஜன் மறுபடியும் சுருதகீர்த்தியினுடைய வில்லைத் துண்டாக்கினன். அறுக்கப்பட்டவில்லுள்ளவனான அந் தச் சுருதகீர்த்தி விரைவுடன் யுத்தத்தில் ஒருகதையைப் பிரயோகித் தான். பாரதரே! பொன்னாலும் வெள்ளியாலும் பட்டங்கள் கட்டப் பட்டுச் சிறந்தவஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒருஸ்திரீபோல் விளங்குகின்றதும விரைவாக வருகின்றதும் பிரகாசிக்கின்றவஜ்ரத்தி னுடைய காந்திபோன்றகாந்தியுள்ளதுமான அந்தக்கதையை மத்ரரா ஜன் அனேக ஆயிரக்கணக்கான அம்புகளாலே தடுத்தான். வேந்த ரே! பிறகு, மிகுந்தமுயற்சியையுடைய வீரனான சல்யன் கதையைத் தடுத்துப் பூமியில்தள்ளிச் சுருதகீர்த்தியையும் ஐந்துபாணங்களால் அடித்தான். திரும்பவும், சுருதகீர்த்தி யுத்தத்தில் சல்யன்மீது ஸர்ப்பத்திற்குஒப்பான ஒரு சக்தியைப் பிரயோகித்தான். சல்யன் அந் தச் சக்தியை இரண்டாகத் துண்டாக்கினன். அது பூமியிற்சிதறி யது. ஆண்மையிற்சிறந்தவரே! குழந்தையினுடைய கையினின்று தின்பண்டங்களைப் பருந்து கவருவதுபோலச் சல்யன் க்ஷுரப்ரத்தி னால் அந்தச் சுருதகீர்த்தியினுடைய ஸாரதியின் உடலிலிருந்து தலை யை அறுத்தான். பாரதரே! அந்தச் சுருதகீர்த்தியினுடைய ஸாரதி தேர்த்தட்டினின்று விழுந்தான். பிறகு, மகாபலசாலியான சுருத கீர்த்தியினுடைய குதிரைகள் யுத்தத்தில் (எல்லாப்பக்கங்களிலும்) ஓடின. மகாராஜரே! எல்லாயுத்தவீரர்களும் பார்த்துக்கொண்டிருக் கும்பொழுதே சுருதகீர்த்தி,ஓடுகின்ற அந்தக்குதிரைகளாலே யுத்தரங் கத்தினின்று வேறிடத்திற்குக் கொண்டுபோகப்பட்டான். பிறகு, மத்ரதேசாதிபதியான சல்யன் ஸந்தோஷத்துடன் தாமரைஓடையில் யானைபுகுவதுபோலப் பாண்டவசேனையில் புகுந்தான். ஸிம்மமானது

மிருகக் கூட்டங்களை அலைப்பதுபோலச் சல்யன் அந்தமகாயுத்தத்தில் மகாபலசாலிகளான பாண்டவர்களுடைய சேனையை அலைத்தான். அவன் பாண்டவ வீரர்களையும் பாஞ்சாலவீரர்களையும் நாசஞ்செய்து பகைவர்படைகளில் நிலைபெற்றவனாக இருந்துகொண்டு புகையில்லாமல் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போல யுத்தரங்கத்தில் விளங்கினான். ஜ்வலிக்கின்ற அக்னி உலர்ந்த காட்டைக் கொளுத்துவதுபோலச் சல்யன் பெரிய சேனையாகிற காட்டைக் கொளுத்தித் திரிபுரத்தை எரித்துச் சங்கரர் விளங்கியதுபோல யுத்தரங்கத்தில் நிலைபெற்று விளங்கினான்.

---

## பதினைன்காவது அத்யாயம்.

### (ஸஹதேவனால் துச்சாஸனன் தோல்வியடைந்தது.)

மகாராஜரே! அவ்வாறாகக் கோபங் கொண்டவனும் உமது படையை அழிக்கின்றவனும் பிராதாவுமான ஸஹதேவனைப் பிராதாவான துச்சாஸனன் எதிர்த்தான். மகாராஜரே! அவ்விடத்தில் எதிர்த்திருக்கிற அவ்விருவரையுங் கண்டு மகாரதர்கள் ஸிம்ஹநாதங்களைச் செய்தார்கள்; ஆடையையும் வீசினார்கள். பாரதரே! பிறகு, ரோஷமுள்ளவனும் வில்லாளியுமான உம்முடைய புத்திரன் பலசாலியான பாண்டுபுத்திரனை மூன்று பாணங்களாலே மார்பில் அடித்தான். வேந்தரே! பிறகு, ஸஹதேவன் உமது புத்திரனை ஒரு நாராசபாணத்தால் அடித்து எழுபது பாணங்களால் அவனையும் மூன்றுபாணங்களால் ஸாரதியையும் அடித்தான். பிறகு, துச்சாஸனன் மகாயுத்தத்தில் வில்லைத் துணித்து எழுபத்துமூன்றுபாணங்களாலே ஸஹதேவனைக் கைகளிலும் மார்பிலும் அடித்தான். ஸஹதேவனோ மிகுந்த கோபங்கொண்டு மகாயுத்தத்தில் வாளையெடுத்து விரைவாகச் சுழற்றி உமது குமாரனுடைய தேரின்மீது எறிந்தான். பெரிதான வாள் துச்சாஸனனுடைய வில்லைப் பாணத்தோடும் நாணயிற்றோடும் துண்டாக்கி ஆகாயத்தினின்று நழுவின ஒருஸர்ப்பம்போலப் பூமியில் விழுந்தது. பிறகு, பிரதாபசாலியான ஸஹதேவன் வேறுவில்லை எடுத்து நாசத்தை உண்டுபண்ணுகிற ஓரம்பைத் துச்சாஸனன்மீது பிரயோகித்தான். துச்சாஸனன் (தன்னைநோக்கி) வருகின்றதும், யமதண்டத்திற்கு ஒப்பானகாந்தியுள்ளதுமான அந்தப் பாணத்தைக் கூர்மையான நுனியுள்ள ஒரு கத்தியினாலே இரண்டாகத் துண்டாக்கினான். பிறகு, வீரியமுடையவனான அவன் யுத்தத்தில் கூர்மையுள்ள

அக்கத்தியைச் சுழற்றி எறிந்துவிட்டு விரைவுடன் வேறுவில்லையும் எடுத்து ஓர் அம்பையும் எடுத்தான். ஸஹதேவன் யுத்தத்தில் வேகமாகவருகின்ற அந்தக்கத்தியைப் புன்னகையுடன் கூர்மையான அம்புகளாலே (அறுத்துத்) தள்ளினான். பாரதரே! பிறகு, உம்முடைய குமாரனான துச்சாஸனன் மகாயுத்தத்தில் ஸஹதேவனுடையதேரின் மீது அறுபத்துநான்கு பாணங்களை விரைவாக எய்தான். ராஜரே! யுத்தத்தில் வேகத்தோடு வருகின்ற அனேகமான அந்தப்பாணங்களுள் ஒவ்வொன்றையும் ஸஹதேவன் ஐந்தைந்து பாணங்களால் அறுத்தான். பிரதாபசாலியான அவன் சிறந்த பாணங்களைத் தடுத்துப் பிறகு யுத்தத்தில் துச்சாஸனன்மீது அனேக பாணங்களைப் பிரயோகித்தான். உம்முடைய புத்திரனும் அந்தப் பாணங்களை ஒவ்வொன்றையும் மும்மூன்று பாணங்களால் துணித்துப் பூமியை எதிரொலியிடும்படி செய்துகொண்டு பெருத்த ஸிம்மநாதம் செய்தான். மன்னவரே! பிறகு, துச்சாஸனன் யுத்தத்தில் பாண்டுபுத்திரனை இரண்டு பாணங்களாலும் அவனுடைய ஸாரதியை ஒன்பது பாணங்களாலும் நிரப்பினான். மகாராஜரே! பிறகு, பிரதாபசாலியான ஸஹதேவன் கோபம் மிக்கு மிருத்யுவிற்கும் காலனுக்கும் அந்தகனுக்கும் ஒப்பான கோரமான அம்பைத் தொடுத்தான். அந்த ஸஹதேவன் வில்லைத் திடமாக இழுத்து உமதுபுத்திரன்மீது அதனைப்பிரயோகித்தான். அரசரே! அந்தப்பாணமானது பெரிதான அவனுடையகவசத்தை உடைத்து வேகத்துடன் அவனையும் பிளந்து ஸர்ப்பம் புற்றில நுழைவதுபோலப் பூமியில் பிரவேசித்தது. அரசரே! பிறகு, மகாரதனை உம்முடையகுமாரன் மதிமயக்கமடைந்தான். மூர்ச்சையடைந்தவனும் கூர்மையான பாணங்களால் அடிக்கப்படுகின்றவனுமான அவனைப்பார்த்து ஸாரதியானவன் மிகப்பயந்து ரதத்தை விரைவுடன் வேறுஇடம் செலுத்தினான். பாண்டுபுத்திரன் யுத்ததில் அக்கௌரவனைத் தோல்வியடையச்செய்து துரியோதனனுடைய சேனையைப் பார்த்து நான்குபுறங்களிலும் அடித்தான். பாரதரே! ஒரு மனிதன் ரோஷத்தினாலே எறும்புக்கூட்டைத்தேய்ப்பதுபோல அந்தக் கௌரவசேனையை ஸஹதேவன் தேய்த்தான்.

## பதினேந்தாவது அத்யாயம்.

### (கர்ணனுக்கும் நகுலனுக்கும் யுத்தமும், கர்ணன் நகுலனை வென்று பரிஹாஸஞ் செய்ததும்.)

வேந்தனே! யுத்தத்தில் வேகத்தோடு ஸேனையை ஓடும்படி செய்கின்ற நகுலனைச் சூரியபுத்திரனான கர்ணன் க்ரோதத்தினால் தடுத்தான். பிறகு, நகுலனே கர்ணனைப் பார்த்து அதிகமாகப் பரிஹாஸம் செய்துகொண்டு, 'அடா! பாவீ! யுத்தத்தில் எண்ணறுமைப் பகண்ணிறகு நீ புலப்படாமையால், நான் தேவர்களாலே குளிர்ந்த கண்ணால் வெகுகாலத்திற்குப் பிறகு (இப்பொழுதுதான்) பார்க்கப்பட்டேன். அனர்த்தங்களுக்கும் வைரத்திற்கும் கலகத்திற்கும் நீயல்லவோ மூலம். உனது குற்றத்தினாலே குருகுலத்தவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்து நாசம் அடைந்துவிட்டார்கள். உன்னை இப்பொழுது யுத்தத்தில் கொன்று மனக்கவலை நீங்கிக் காரியத்தைச் செய்துமுடித்தவன் ஆகப்போகிறேன்' என்று கூறினான். இவ்வாறு சொல்லியதைக் கேட்ட ஸூதபுத்திரன் நகுலனைப் பார்த்து 'ஓ! வீரனே! ராஜகுமாரனும் சிறந்த வில்லாளியுமான உனக்குத் தக்கபடி என்மீது பாணங்களைப் பிரயோகம்செய். உன் வல்லமையைப் பார்ப்போம். சூர! யுத்தத்தில் காரியத்தைச் செய்துவிட்டுப் பிறகு தற்புகழ்ச்சி செய்துகொள். அப்பனே! சூரர்கள் யுத்தத்தில் வாயினால் சொல்லாமல் சக்தியினால் போர்புரிவார்கள். என்னோடு வல்லமையுடன் யுத்தம் செய். உனது கொழுப்பையே நாசம்செய்யப்போகிறேன்' என்று மறுமொழி கூறினான். ஸூதபுத்திரன் இவ்விதம் சொல்லிவிட்டுப் பாண்டுபுத்திரனை விரைவாக அடித்தான். கர்ணன் நகுலனை யுத்தத்தில் எழுபத்துமூன்று பாணங்களால் அடித்தான். பாரதரே! பிறகு, நகுலனே கர்ணனாலடிக்கப்பட்டு ஸர்ப்பம்போன்ற எண்பது பாணங்களாலே அவனை அடித்தான். சிறந்த வில்லாளியான கர்ணன் தங்கக்கட்டுக்களையுடையவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான முப்பது பாணங்களாலே நகுலனுடைய வில்லையறுத்து அவனையும் அடித்தான். அந்தப் பாணங்கள் அவனுடைய கவசத்தை உடைத்துப் பற்களில் விஷத்தையுடைய ஸர்ப்பங்கள் பூமியைப் பிளந்து ஜலத்தைப் பருகுவதுபோல யுத்தத்தில் அவனுடைய இரத்தத்தைக் குடித்தன. பிறகு, நகுலன் ஸ்வர்ணமயமான பின்புறத்தையுடையதும் நாண் முடியாததுமான வேறு வில்லை எடுத்து எழுபது பாணங்களால் கர்ணனையும் மூன்று பாணங்

களால் அவனுடைய ஸாரதியையும் அடித்தான். மகாராஜரே! பிறகு, பகைவீரர்களைக் கொல்லுகிறவனான நகுலன் கோபங்கொண்டு மிக்க கூர்மையுள்ள க்ஷுரப்ரத்தினாலே கர்ணனுடைய வில்லை வெட்டினான். பிறகு, வீரனான நகுலன் வில் அறுக்கப்பட்டவனும் ஸர்வலோகமகாரதனுமான அந்தக் கர்ணனைப் (பார்த்து) அட்டஹாஸம் செய்து கொண்டு முந்நூறு பாணங்களால் அடித்தான். ஐயா! பாண்டு புத்திரனாலே பீடிக்கப்பட்ட கர்ணனைக் கண்டு ரிஷிகளும் தேவர்களும் அதிகமான ஆச்சரியத்தை அடைந்தார்கள். பிறகு, விகர்த்தனகுமாரனான கர்ணன் அப்பொழுது வேறு வில்லை எடுத்து நகுலனை ஐந்து பாணங்களால் மார்பின் மேற்பக்கத்தில் அடித்தான். மார்பில் தைத்திருக்கின்ற அந்தப் பாணங்களால் மாத்ரீபுத்திரன் உலகத்தில் தன்கிரணங்களாலே ஒளியைப் பரவச்செய்கின்ற ஸூர்யன்போலப் பிரகாசித்தான். ஐயா! பிறகு, நகுலனே ஏழு பாணங்களால் கர்ணனை அடித்து அவனுடைய தனுஸின் நுனியை மறுபடியும் அறுத்தான். பிறகு, அந்தக் கர்ணன் யுத்தத்தில் அதிகவேகத்துடன் வேறு வில்லை எடுத்துப் பாணங்களால் நகுலனுக்கு நான்கு பக்கங்களிலும் திசைகளை மூடினான். மகாரதனான நகுலன் கர்ணனுடைய வில்லினின்று விடப்பட்ட அம்புகளாலே விரைவாக மூடப்பட்டுக் கர்ணனுடைய பாணங்களைத் தன் பாணங்களாலேயே விரைவாக வெட்டினான். பிறகு, ஆகாயத்தில் விரிக்கப்பட்ட அம்புமயமான வலையானது எல்லாப் பக்கங்களிலும் பறக்கின்ற மின்மினிப் பூச்சிகளுடைய கூட்டம்போலக் காணப்பட்டது. அரசரே! கர்ணனால் விடுக்கப்பட்ட அனேக அம்புகளாலே மூடப்பட்ட ஆகாயம் அப்பொழுது விட்டில்களுடைய கூட்டங்களாலே மூடப்பட்டதுபோல ஆகியது. ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவைகளும் அடிக்கடி வரிசையாக வருகின்றவைகளுமான அந்த அம்புகள் வரிசையாக வருகின்ற க்ரௌஞ்ச பக்ஷிகள்போல விளங்கின. ஆகாயம் பாண ஸமூகங்களால் மூடப்பட்டு ஸூர்யனும் மறைக்கப்படவே, ஆகாயத்தில் ஸஞ்சரிக்கக்கூடிய ஒரு பிராணியும் ஸஞ்சரிக்கவில்லை. பாணஸமூகங்களாலே நாற்புறங்களிலும் வழி தடுக்கப்பட்டிருக்கையில், மகாபலசாலிகளான அவ்விருவரும், யுகாந்தகாலத்தில் உதித்திருக்கின்ற இரண்டு சூரியர்கள்போல விளங்கினார்கள். ராஜேந்திரரே! கர்ணனுடைய வில்லினின்று விடப்பட்ட அம்புகளாலே கொல்லப்படுகின்ற ஸோமகர்கள் வேதனையினாலே பீடிக்கப்பட்டும் மிக்க துன்பத்துக்குள்ளாக்கப்பட்டும் பதுங்கினார்கள். வேந்தரே! அவ்வாறே, நகுலனுடைய

பாணங்களாலே அடிக்கப்படுகின்ற உம்முடைய சேனையானது காற்றினாலே தள்ளப்பட்ட மேகங்கள்போலத் திசைகளில் சிதறியது. அவ்விருவராலும் திவ்யமான சிறந்த பாணங்களாலே கொல்லப்படுகின்ற அவ்விரண்டு சேனைகளும் அப்பொழுது பாணம் விழுமிடத்தைத் தாண்டிப் பார்த்துக்கொண்டு நின்றன. கர்ணபாண்டவர்களுடைய அம்புகளாலே அந்த யுத்தபூமியில் ஜனங்கள் தூரவிலக்கப்பட்டிருக்கையில், மகா பலசாலிகளான அவ்விருவரும் யுத்தமுனையில் திவ்யமான சஸ்திரங்களை வெளியிடுகின்றவர்களும் ஒருவரை ஒருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களும் விரைவாக ஓடுகின்றவர்களுமாகச் சரமாரிகளால் அன்யோன்யம் அடித்துக்கொண்டார்கள். நகுலனாலே விடப்பட்டவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளுமான அம்புகள் சூதபுத்திரனை மூடிக்கொண்டு ஆகாயத்தில் எவ்வாறு நின்றனவோ அவ்வாறே சூதபுத்திரனாலே மகாயுத்தத்தில் பிரயோகிக்கப்பட்ட அம்புகள் பாண்டுபுத்திரனை மூடிக்கொண்டு ஆகாயத்தில் நின்றன. அரசரே! மேகங்களால் மூடப்படுகின்ற சூரிய சந்திரர்களைப் போலச் சரமயமான வீட்டில் பிரவேசித்தவர்களான அவ்விருவரும் எவர்களாலும் காணப்படவில்லை. பிறகு, யுத்தத்தில் கர்ணன் கோபங்கொண்டு சரீரத்தை அதிக கோரமாகச்செய்து எல்லாப் பக்கங்களிலும் சரமாரிகளாலே பாண்டவனை மூடினான். மகாராஜரே! சூதபுத்திரனாலே நன்றாக மூடப்பட்ட அந்தப் பாண்டவன் மேகங்களால் மூடப்பட்ட சூரியன்போலத் துன்பத்தையடையவில்லை. ஐயா! பிறகு, அதிரதகுமாரனான கர்ணன் சிரித்துக்கொண்டு நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் யுத்தத்தில் பாண ஸமூகங்களைத் தொடுத்தான். மகாபலசாலியான அவனுடைய பாணங்களாலே எல்லாம் ஓரே நிழலுள்ளதாக இருந்தன. விழுகின்ற உத்தமமான பாணங்களால் மேகத்தின் நிழல் உண்டானதுபோலாயிற்று. மகாராஜரே! பிறகு, கர்ணன் மகாத்மாவான நகுலனுடைய வில்லைத் துண்டாடிச் சிரித்துக்கொண்டு அவனது ஸாரதியைத் தேர்த்தட்டினின்று கீழே தள்ளினான். பாரதரே! பிறகு, கூர்மையுள்ள நான்கு பாணங்களாலே அவனுடைய நான்கு குதிரைகளையும் விரைவாக யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். ஐயா! பிறகு, யுத்தத்தில் அவனுடைய திவ்யமான தேரையும் கொடித்துணியையும் சக்கரரக்ஷகர்களையும் கதாயுதத்தையும் கத்தியையும் நூறு சந்திரப் பிரதிமைகளுள்ள அவனுடைய கேடகத்தையும் எல்லா உபகரணங்களையும் அம்புகளையும் பொன்னலை செய்யப்பட்ட அந்த வில்லையும் அம்புகளால் எள்ளள

ளாக்கினான். ராஜரே! குதிரைகள் கொல்லப்பட்டவனும் ஸாரதியை இழந்தவனும் கவசமிழந்தவனுமான (நகுலன்) ரதத்தினின்று விரைவாகக் கீழே இறங்கிப் பரிகாயுதத்தைக் கையில் எடுத்துநின்றான். வேந்தரே! ஸூதகுமாரன் அந்த நகுலனால் எடுக்கப்பட்ட மிகவும் கோரமான பரிகாயுதத்தை மிக்க கூர்மையுள்ளவைகளும் பெரிய கார்யங்களை நிறைவேற்றுதற்கு ஸாதனமுமான அம்புகளாலே அடித்தான். கர்ணன், ஆயுதமிழந்தவனான அந்த நகுலனைக் குறிவைத்து வணங்கின கணுக்களுள்ள அனேகஅம்புகளாலே அடித்தான். ஆனால், அவனைத் துன்பமடையும்படி செய்யவில்லை. அரசரே! யுத்தத்தில் அஸ்திரப்பிரசியுள்ளவனும் பலசாலியுமான கர்ணனால் அடிக்கப்படுகின்ற அந்த நகுலன் பொறிகலங்கி வேகமாக ஓடினான். பாரதரே! ராதேயன் அந்த நகுலனைப் பின் தொடர்ந்தோடி அடிக்கடி சிரித்துக்கொண்டு நாணேறிய வில்லை அந்த நகுலனுடைய கழுத்தில் மாட்டினான். வேந்தரே! பிறகு, கழுத்தில் மாட்டப்பட்ட பெரிய வில்லுடன் நகுலன் ஆகாயத்தில் வட்டமான ரேகையின் நடுவிலிருக்கின்ற சந்திரன் விளங்குவதுபோல விளங்கினான். மகாராஜரே! கறுத்தமேகம் இந்திரவில்லினால் விளங்குவதுபோலப் பாண்டுபுத்திரன் யுத்தத்தில் விளங்கினான். பிறகு, கர்ணன் நகுலனைப்பார்த்து, 'வீணாகப் பேசினாய். அடிக்கடி என்னால் பீடிக்கப்படுகின்ற நீ ஸந்தோஷத்துடன் மறுபடியும் இப்பொழுது பேசு. பாண்டவ! அப்பனே! உனக்குத் தகுந்தவர்களோடு யுத்தம் செய். பலவான்களான கௌரவர்களோடு நீ போர்புரியாதே! பாண்டவ! நீ வெட்கமடையவேண்டாம். மாத்திரிபுத்திர! வீட்டுக்கேனும்செல்; அல்லது எங்கே கிருஷ்ணனும் பலகுணனும் இருக்கின்றனரோ அங்கேனும் செல்' என்று சொன்னான். மகாராஜரே! கர்ணன் இவ்வாறு சொல்லி நகுலனை அப்பொழுது விட்டுவிட்டான். வேந்தரே! சூரனும் தர்மங்களை அறிந்தவனுமான கர்ணன் குந்தியினது வார்த்தையை நினைத்து, கொல்லும்படியான நிலைமையை அடைந்த நகுலனை அப்பொழுது கொல்லாமல் விட்டுவிட்டான். வேந்தரே! வில்லாளியான சூதபுத்திரனாலே விடப்பட்ட பாண்டவன் வெட்கி யுதிஷ்டிரனுடைய ரதத்தை நாடிச்சென்றான். கர்ணனால் வாட்டப்பட்ட நகுலன் துக்கத்தினால் மிகத் தவித்துக் குடத்தில் அடைக்கப்பட்ட பாம்புபோலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு யுதிஷ்டிரருடைய ரதத்தின்மேலேறினான்.

பிறகு, கர்ணனும் நகுலனைவென்று உயர்ந்தகொடியுள்ளதும் சந்திரன்போன்ற வர்ணமுள்ள குதிரைகளையுடையதுமான ரதத்தோடு

பாஞ்சாலர்களை விரைந்து எதிர்த்தான். மன்னவரே! பாஞ்சாலர்களு
டைய தேர்க்கூட்டங்களை நோக்கிச் செல்லுகின்ற ஸேனாபதியான
கர்ணனைக்கண்டு அவ்விடத்தில் பாண்டவர்களுள் கூக்குரல் உண்டா
யிற்று. மஹாராஜரே! அவ்விடத்தில் ஸூதபுத்திரன் (பகைவரைக்) துன்
பஞ்செய்தான். ஸூரியன் ஆகாயத்தின் நடுவிடத்தை அடைந்திருக்கை
யில், பிரபுவான கர்ணன் அந்தவிடத்தில் சக்கரம்போலச் சுழன்றான்.
ஐயா! ரதங்களுடைத்தவையும் கொடிகளும் கொடித்தண்டிகளும்
அறுக்கப்பட்டவைகளும் குதிரைகள் கொல்லப்பட்டவைகளும் ஸாரதியை
இழந்தவைகளும் அச்சுமுறிந்தவைகளுமான சில ரதங்க
ளாலே இழுத்துக்கொண்டு போகப்பட்ட பாஞ்சாலர்களுடைய தேர்க்
கூட்டங்களைக் கண்டோம். பிறகு, யானைகள், பெரிய காட்டில் காட்
டுத்தீயினாலே நான்குபுறங்களிலும் சூழப்பட்ட அங்கங்களுடையவை
போலப் பரபரப்புடனே ஆங்காங்கு ஸஞ்சரித்தன. மஹாபலசாலி
யான கர்ணனாலே அடிக்கப்பட்ட சில யானைகள் கும்பஸ்தலங்கள்
பிளக்கப்பட்டவையும் இரத்தத்தைப் பெருக்குபவையும் துதிக்
கைகள் அறுக்கப்பட்டவையும் கவசங்களுடைக்கப்பட்டவையும்
வால்கள் அறுக்கப்பட்டவையுமாகிக் (காற்றினால்) சிதற அடிக்கப்
பட்ட மேகங்கள்போலக் கீழே விழுந்தன. மற்ற யானைகள் நாரா
சங்களாலும் அம்புகளாலும் தோமரங்களாலும் பயப்படுத்தப்பட்டு
விட்டில்கள் நெருப்பை எதிர்த்துச் செல்வதுபோல அந்தக் கர்ணனை
யே எதிர்த்துச் சென்றன. சில பெரியயானைகள் வீரிட்டுக் கொண்
டும் அருவிப்பெருக்குகளுடன் கூடிய மலைகள் போலச் சரீரங்களி
லிருந்து இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டும் காணப்பட்டன. கவசங்
களையும் வாலிறட்டும் வார்களையும் இழந்தவைகளும் வெள்ளியா
லும் வெண்கலத்தாலும் பொன்னாலுமாகிய ஆபரணங்களையும் இழந்
தவைகளும் மற்ற ஆபரணங்களையும் கடிவாளங்களையும் இழந்
தவைகளும் சாமரங்களும் விரிப்புக்களும் அம்புப்பெட்டிகளும் நழு
வினவைகளும் சூரர்களும் யுத்தத்தில் விளங்குகின்றவர்களுமான
குதிரைவீரர்கள் கொல்லப்பட்டவைகளும் சுழலுகின்றவைகளு
மான உத்தமமான குதிரைகளையும் அந்த யுத்தத்தில் கண்டோம். பார
தரே! ஈட்டிகளையும் கத்திகளையும் ரிஷ்டிகளையும் விட்டவர்
களும் கவசத்தையும் தலைப்பாகையையும் அணிந்தவர்களும் கொல்
லப்பட்டவர்களும் கொல்லப்படுகின்றவர்களும் நடுக்கமுற்றவர்களும்
பற்பல அங்கங்களையும் அவயவங்களையும் இழந்தவர்களுமான குதி
ரைவீரர்களையும் ஆங்காங்கு கண்டோம். ரதிகர்கள் கொல்லப்

பட்டபோது, பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் வேகமுள்ள குதிரைகளோடுகூடியவைகளும் விரைவாகச் சுழலும்படி செய்யப்படுகின்றவைகளுமான தேர்களையுங் கண்டோம். பாரதரே! அச்சுக்கட்டைகளும் ஏர்க்கால்களும் முறிக்கப்பட்டவைகளும் சக்கரங்களுடைக்கப்பட்டவைகளுமான சில தேர்களையும், கொடிகதுணிகளையும் கொடிமரங்களையும் இழந்தவைகளும் அழகிய ஏர்க்கால்கள் வெட்டியெறியப்பட்ட வைகளுமான சில தேர்களையும் கண்டோம். மஹாராஜரே! அந்தயுத்தகளத்தில ரதங்களையிழந்து ஆங்காங்கு ஓடுகின்றவர்களும் கர்ணனுடைய கூரியஅம்புகளாலே கொல்லப்படுகின்றவர்களுமான ரதிகர்களையும் சஸ்திரங்களை இழந்தவர்களும் அவ்வாறே சஸ்திரங்களையுடை யவர்களும் கொலலப்பட்டவர்களுமான அனேகவீரர்களையும், நக்ஷத்திரங்கள்போன்ற ஆபரணஸமூகங்களால் நன்றாகமூடப்பட்டவைகளும் சிறந்தகணுககால அதிகமாகப் பிரகாசிக்கின்றவைகளும் பறபல வர்ணங்களுள்ள விசித்திரமான கொடித்துணிகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும் நான்குபக்கங்களிலும் ஓடுகின்றவைகளுமான யானைகளையும் கண்டோம். கர்ணனுடைய வில்லினின்று விடுபட்ட அம்புகளாலே அறுக்கப்பட்ட தலைகளையும் கைகளையும் தொடைகளையும் அவ்வாறே மற்றஅவயங்களையும் எங்கும் கண்டோம். கர்ணனுடையஅம்புகளால் அடிக்கப்பட்டவர்களும் கூர்மையுள்ளபாணங்களால் போர்புரிகின்றவர்களுமான யுத்தவீரர்களுக்குப் பயங்கரமும் பெரிதுமான யுத்தம் நடந்தது. யுத்தத்தில், ஸூதபுத்ரனால்கொல்லப்பட்ட அந்தஸ்ருஞ்சயர்கள் விட்டில்கள் நெருப்பை எதிர்ப்பதுபோல அவனையே எதிர்த்தார்கள். ஆங்காங்கு சேனைகளைக்கொளுத்துகின்றவனும் மகாரதனும் பிரளயகாலநெருப்புப்போல் விருத்தியடைந்திருப்பவனுமான அந்தக்கர்ணனைவிட்டு க்ஷத்ரியர்கள் விலகினார்கள். தேஜஸ்வியும் வீரனுமான கர்ணன் இறந்தவர்கள்போக மிகுதியுள்ளவர்களும் மகாரதர்களும் கவசமும்த்வஜமும்நொறுங்கி அபஜயமடைந்து ஓடுகின்றவர்களுமான பாஞ்சாலவீரர்களைப் பின்னால் பாணங்களையிறைத்துக்கொண்டு தொடர்ந்தோடினான். மிக்கபலசாலியான கர்ணன் நடுப்பகலையடைந்த சூரியன் பிராணிகளைத் தபிக்கச் செய்வதுபோல அந்தப்பாஞ்சாலர்களைப் பாணங்களால் தபிக்கச்செய்தான்.

## பதினாறுவது அத்யாயம்.

### (யுயுத்ஸுவுக்கும் உலூகனுக்கும் யுத்தமும், சகுனிக்கும் ஸுதஸோமனுக்கும் யுத்தமும்.)

அரசரே! உம்முடைய குமாரனுடைய பெரியசேனையை ஓடும்படிசெய்கின்ற யுயுத்ஸுவை உலூகன் வேகத்துடன் எதிர்த்துச் சென்று, 'நில்நில்'என்று கூறினான். பிறகு, யுயுத்ஸுவும் வஜ்ரத்தினால் (இந்திரன் மலையைஅடிப்பதுபோலக்) கூரியநுனியுடன்கூடின அம்பினால் மிக்கவலிமையடைந்த உலூகனை அடித்தான். உலூகனோ, கோபமுண்டு உமதுபுத்திரனுடையவில்லை யுத்தத்தில் ஒருக்ஷுரப்ரத்தினாலே அறுத்துக் கர்ணியென்கிற பாணத்தினால் அடித்தான். சிவந்தகண்களையுடைய யுயுத்ஸு அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டு மிக்கவேகமுள்ளதும் மிகப்பெரிதுமான வேறொரு வில்லை எடுத்தான். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, அவன் சகுனிகுமாரனை உலூகனை அறுபதுபாணங்களால் அடித்து (அவனுடைய) ஸாரதியையும் மூன்றுபாணங்களால் அடித்து மறுபடியும் அந்தஉலூகனை அடித்தான். உலூகனோ, ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட இருபதுபாணங்களாலே அவனை அடித்து, பிறகு, கோபங்கொண்டு யுத்தத்தில் யுயுத்ஸுவினுடைய பொன்மயமான கொடியையும் துண்டாக்கினான். அரசரே! அறுக்கப்பட்ட தண்டத்துடன் கூடியதும் மிக்கபெரிதும் ஸ்வர்ணமயமானதும் சிறந்ததுமான அந்த த்வஜமானது யுயுத்ஸுவின் முன்னிலையில சிதறிவிழுந்தது. த்வஜம் நாசம்செய்யப்பட்டதைக்கண்டு யுயுத்ஸு கோபமுண்டு உலூகனை ஐந்துபாணங்களால் நடுமார்பில் அடித்தான். பரதஸ்ரேஷ்டரே! உலூகன் எண்ணெயிட்டுத் தீட்டப்பட்ட பல்லத்தினாலே யுத்தத்தில் அவனது ஸாரதியினுடைய தலையை அறுத்தான். அந்த யுயுத்ஸுவின் ஸாரதியினுடையஅறுக்கப்பட்ட தலையானது அப்பொழுது ஆச்சரிய கரமான நக்ஷத்திரம்போலப் பூமியில் விழுந்தது. பிறகு, நான்கு குதிரைகளையும் கொன்றான். அவனையும் ஐந்துபாணங்களால் அடித்தான். பலசாலியான உலூகனால் அடிக்கப்பட்ட அந்த யுயுத்ஸு வேறுரதத்தைக்குறித்து விரைவாகச்சென்றான். வேந்தரே! உலூகன் யுத்தரங்கத்தில் அந்த யுயுத்ஸுவைத் தோல்வியடையச்செய்து பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் கூர்மையுள்ள அம்புகளால நன்றாக அடித்துக்கொண்டு விரைவாகச்சென்றான். மஹாராஜரே! உம்முடையபுத்திரனை சுருதகர்மா நிதானமுடையவனாக அரை

நிமிஷத்திற்குள் சதானீகனைக் குதிரைகளையும் ஸாரதியையும் ரதத்தையும் இழக்கச்செய்தான். ஐயா! குதிரைகள் கொல்லப்பட்ட தேரிலிருக்கின்ற மஹாரதனான சதானீகன் அதிக கோபத்துடன் உம்முடைய புத்திரன்மீது ஒரு கதாயுதத்தை எறிந்தான். பாரதரே! அந்தக் கதாயுதம் (அவனுடைய) தேரையும் ஸாரதியையும் குதிரைகளையும் சாம்பலாகச்செய்துவிட்டுப் பூமியைப்பிளப்பதுபோல வேகமாகக்கீழே விழுந்தது. கௌரவர்களுக்குப் புகழை விருத்திசெய்கின்றவர்களும் வீரர்களுமான அவ்விருவர்களும், தேர்களை இழந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு யுத்தத்தைவிட்டு விலகிச்சென்றார்கள். உமது குமாரனான சுருதகர்மாவோ, பரபரப்புடன் விவிம்சனுடைய ரதத்தில்ஏறினான். சதானீகனும் பரபரப்புடன் பிரதிவிந்தியனுடைய ரதத்தின்மீது ஏறினான். மிக்ககோபங்கொண்ட சகுனி, கூர்மையுள்ளஅம்புகளால் ஸுதஸோமனை அடித்தும் ஜலப்பிரவாகமானது மலையை அசைவுறச்செய்யாததுபோல அவனை அசைவுறச்செய்யவில்லை. பாரதரே! ஸுதஸோமனோ அந்தச்சகுனியைத் தன்தந்தைக்குப் பரமசத்துருவாக உணர்ந்து அனேகஆயிரம்பாணங்களால் மூடினான். யுத்தத்தில், அஸ்திரப்ரயோகங்களில் தேர்ந்தவனும் விசித்ரமாக யுத்தஞ்செய்யும் தன்மையுள்ளவனும் வெற்றியோடு விளங்குபவனுமான சகுனி, அவ்வம்புகளை வேறு அம்புகளாலே விரைவாகத் துண்டாக்கினான். (ஸுதஸோமனுடைய) அந்த அம்புகளைக் கூர்மையான அம்புகளாலே யுத்தத்தில் தடுத்து அதிககோபங்கொண்டு மூன்று பாணங்களால் அவனையும் அடித்தான். மிக்ககோபங்கொண்டவனை சகுனி ஜலப்பிரவாகமானது மலையை அசைக்காததுபோல (ஸுதஸோமனை) அசைவுறச்செய்யவில்லை. மகாராஜரே! பிறகு, உம்முடைய மைத்துனனான சகுனி அம்புகளாலே அந்த ஸுதஸோமனுடைய குதிரைகளையும் கொடிமரத்தையும் ஸாரதியையும் எள்ளளவெள்ளளவாகப் பொடியாக்கினான். பிறகு, ஜனங்கள் மிகக்கூச்சலிட்டார்கள். ஐயா! குதிரைகள் கொல்லப்பட்டவனும் ரதத்தை இழந்தவனும் கொடிமரம் அறுக்கப்பட்டவனும் வில்லாளியுமான ஸுதஸோமன் உத்தமமான வில்லை எடுத்துக்கொண்டு ரதத்தினின்று கீழேகுதித்துப் பூமியில் நின்றான். அவன் தங்கமயமான பிடிகளுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளைச் சகுனியின்மீது பிரயோகித்தான். பிறகு, அவ்வம்புக் கூட்டங்கள் விட்டிற்பூச்சிகளுடைய கூட்டங்கள்போல உமது மைத்துனனுடைய அவ்விதமான பெரியரதத்தை மூடிவிட்டன. ஸுபலபுத்திரனான சகுனி தன்

ருக மூடப்பட்டாலும் சிறிதேனும் மனவருத்தமடையவில்லை. மஹாகீர்த்திசாலியான சகுனி அந்தஸுதஸோமனுடைய அம்புகளைப் பாணஸமூகங்களால் நாசஞ்செய்தான். அந்தயுத்தகளத்தில் ரதத்தின்மீதிருக்கின்ற சகுனியைக் காலாளாயிருக்கின்ற ஸுதஸோமன் எதிர்த்துப் போர்புரிந்தது (கேட்டவர்களுக்கு) நம்பத்தகாததும் ஆச்சரியகரமுமாயிருந்தது. அந்த ஸுதஸோமனுடையசெய்கையை அங்குள்ளயுத்தவீரர்களும் ஆகாயத்திலுள்ளஸித்தர்களும் பார்த்து மனக்களிப்புற்றார்கள். அரசரே! சகுனி கூர்மையுள்ளவைகளும் மிக்க வேகமுள்ளவைகளும் வணங்கின கணுக்களுள்ளவைகளுமான பல்லங்களாலே அந்த ஸுதஸோமனுடையவில்லையும் எல்லா அம்புத்தூணிகளையும் நாசஞ்செய்தான். இரதத்தையிழந்தவனும் அறுக்கப்பட்ட வில்லையுடையவனுமான அந்த ஸுதஸோமன் வைடூரியம் கருநெய்தல் இவைகளுடைய நிறம்போன்ற நிறமுள்ளதும் யானைத்தந்தத்தாலாகிய பிடியுள்ளதுமான ஒரு கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு ஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, சுழற்றப்படுகின்றதும் நிர்மலமான ஆகாயம்போன்ற காந்தியுள்ளதுமான புத்திசாலியான ஸுதஸோமனுடைய கத்தியைச் சகுனி காலதண்டத்துக்குச் சமமாக நினைத்தான். மஹாராஜரே! நல்ல தேர்ச்சியடைந்திருக்கின்ற அந்த ஸுதஸோமன் கத்தியுடன் விரைவாகப் பதினான்குவிதமான மண்டலகதிகளைப் பலவிதமாக வெளியிட்டுக்கொண்டுஸஞ்சரித்தான். அவன் யுத்தத்தில * ப்ராந்தம், உத்ப்ராந்தம், ஆவித்தம், ஆப்லுதம், விப்லுதம், ஸ்ருதம், ஸம்பாதம்,ஸமுதீர்ணம் என்னும் கத்திசுழற்றும் வகைகளைக் காண்பித்தான். திறமையமைந்த சகுனியோ, பிறகு,அந்த ஸுதஸோமன்மீது அம்புகளை எய்தான். அவ்வம்புகளை வரும்பொழுதே ஸுதஸோமன் உத்தமமானகத்தியினால் விரைவாகத் துண்டாடினான். மஹாராஜரே! பிறகு, பகைவர்களைக்கொல்லுகின்றவனான சகுனி கோபங்கொண்டு ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளை ஸுதஸோமன்மீது பிரயோகித்தான். கருடனுக்கொப்பான வன்மையுள்ள ஸுதஸோமன் பயிற்சியினாலும் பலத்தினாலும் யுத்தத்தில சுறுசுறுப்பைக்காண்பித்துக்கொண்டு அந்தப்பாணங்களைக் கத்தியினால் துண்டாடினான். அரசரே! அப்பொழுது மண்டலகதியோடு ஸஞ்சரிக்கின்ற அந்த ஸுதஸோமனுடைய மிக்க ஒளி பொருந்திய கத்தியைச் சகுனி மிக்ககூர்மையுள்ள க்ஷுரப்ரத்தினால் வெட்டினான். பாரதரே! அறுக்கப்பட்ட அந்தப் பெரியகத்தியானது பூமியில் விரை

* பீஷ்மபர்வம் 207-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

ழுந்தது. நல்லபிடியையுடைய அந்தக்கத்தியினுடைய பாதியானது அவனுடையகையிலிருந்தது. மஹாரதனான ஸுதஸோமன் தன்கத்தியானது துண்டாடப்பட்டதையறிந்து ஆறடிபாய்ந்து, பிறகு, மிகுந்திருக்கின்ற அரைக்கத்தியைச் சகுனியைநோக்கிச் சுழற்றி எறிந்தான். அந்தக் கத்தியானது தீரனான அந்தச் சகுனியினுடைய ஸ்வர்ணத்தினாலும் வஜ்ரத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட வில்லை நாண் கயிற்றோடு யுத்தத்தில் அறுத்துவிட்டு விரைவாகப் பூமியில் விழுந்தது. பிறகு, ஸுதஸோமன் சுருதகீர்த்தியினுடைய பெரிய ரதத்தையடைந்தான். சகுனியும் கோரமானதும் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாததுமான வேறொருவில்லை எடுத்து அநேகசத்துருக்களுடைய கூட்டங்களை நாசஞ்செய்துகொண்டு பாண்டவஸேனையை எதிர்த்துச் சென்றான். வேந்தரே! பயமற்றவனாக அந்தயுத்தத்தில ஸஞ்சரிக்கின்றசகுனியைக்கண்டு பாண்டவவீரர்கள் பெருங்கூச்சலிட்டார்கள். கொழுப்புள்ளவைகளும், ஆயுதமுள்ளவைகளும், பெரியவைகளுமான அந்தப்பாண்டவசேனைகள் மஹாபலசாலியான ஸௌபலனாலே துரத்தப்படுகின்றவைகளாகக் காணப்பட்டன. அரசரே! தேவராஜன் அஸுரஸேனையை எவ்வாறு நாசம் செய்தானோ அவ்வாறே பாண்டவசேனையைச் சகுனி நாசஞ்செய்தான்.

---

## பதினேழாவது அத்யாயம்.

### (கிருபரால் திருஷ்டத்யும்னனும், கிருதவர்மாவால் சிகண்டியும் தோல்வியடைந்தது.)

அரசரே! காட்டில் ஒரு சரபமானது ஒருஸிம்மத்தைக் கண்டு எவ்வாறு சண்டையில் தடுக்குமோ அவ்வாறே யுத்தரங்கத்தில் கிருபர் திருஷ்டத்யும்னனைத் தடுத்தார். பாரதரே! பலசாலியான அந்தக் கிருபாசார்யராலே தடுக்கப்பட்ட திருஷ்டத்யும்னன் அந்தயுத்தத்தில் ஓரடியினின்று மற்றோரடி நகருவதற்குஞ் சக்தியற்றவனானான். அவனுடைய ரதத்தை நோக்கிவருகின்ற கிருபருடைய ரதத்தைப் பார்த்து எல்லாப்பிராணிகளும் பயந்தன; அழிவுவந்துவிட்டதென்றும் எண்ணின. அப்பொழுது பாண்டவர்களுடைய தேர்வீரர்களும் குதிரைவீரர்களும், 'மனிதர்களுள் உத்தமரும் சரத்வானுடைய புத்திரரும் மிக்கதேஜஸையுடையவரும் திவ்யாஸ்திரங்களை அறிந்தவரும் மேலான புத்தியையுடையவருமான கிருபாசாரியர் துரோணருடையவதத்தினால நிச்சயமாகக் கோபங்கொண்டிருக்கிறார். திருஷ்

டத்யும்னனுக்குக் கிருபரிடத்தினின்று இப்பொழுது க்ஷேமம் உண்டாகுமா? இந்தச்சேனைமுழுதும் பெரிதான பயத்தினின்றும் விடு படுமா? இந்தப்பிராம்மணர் ஒன்றுசேர்ந்திருக்கின்ற நம்மனைவரை யும் கொல்லாமலிருப்பாரா? யுத்தத்தில் கிருபாசார்யர் ரூபத்தால் யமனுக்கொப்பாகக் காணப்படுகிறதனால், துரோணருடைய ஸ்தானத்தை அடையப்போகிறார். ஆசாரியரான இந்தக் கிருபரோ ஸாமர்த்ய லாகவமுள்ளவர்; யுத்தத்தில் எப்பொழுதும் வெற்றி பெறுபவர்; அஸ்திரங்களை யுடையவர்; வீர்யமுள்ளவர்; கோபத்தோடுங்கூடி யிருக்கிறார். பார்ஷதனும் மஹாயுத்தத்தில் இப்பொழுது புறங்காட் டினவனாகக் காணப்படுகிறான்' என்று பேசிக்கொண்டார்கள். மஹா ராஜரே! அவ்விருவர்களுக்கும் அந்த யுத்தம் நேர்ந்திருக்குங்கால் சத்துருக்களோடு கூடின உம்மைச் சேர்ந்த வீரர்களுடைய இவ்வித மான பலவாறான பேச்சுக்கள் கேட்கப்பட்டன. ராஜரே! பிறகு சாரத்வதரான கிருபர் கோபத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு பார்ஷதனை எல்லா மர்மஸ்தானங்களிலும் அடித்து அசைவற்றிருக் கும்படி செய்தார். யுத்தத்தில் மகாபலசாலியான கௌதமராலே துன் பஞ் செய்யப்பட்ட அந்தப் பார்ஷதன் அதிக மயக்கத்தினால் மூடப் பட்ட வனாகிச் செய்யவேண்டியதை அறியவில்லை. பிறகு, பார்ஷதனை நோக்கி, ஸாரதியானவன், 'பார்ஷதரே! க்ஷேமமா? உமக்கு யுத்தத் தில் இவ்விதமான துன்பமுண்டானதை நான் ஒரு பொழுதும் பார்த்ததில்லை. பிராம்மணோத்தமரான கிருபராலே நான்கு பக்கத்தி லும் மர்மஸ்தானங்களை லக்ஷியம் வைத்து விடப்பட்டவைகளும் மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றவைகளுமான பாணங்கள் தெய்வச் செயலால் விழவில்லை. ஸமுத்திரம் நதியின் வேகத்தைத் திருப்புவது போல விரைவாக ரதத்தை நான் திருப்புகிறேன். உம்முடைய வல்ல மையை அழித்த வீரரான அந்தப் பிராமணர், உம்மால் கொல்லப் படத் தகாதவரென்று எண்ணுகிறேன்' என்றான். அரசரே! பிறகு திருஷ்டத்யும்னன் (ஸாரதியைநோக்கி), 'அப்பா! என் மனமானது மோகமடைகிறது. தேகத்தில் வேர்வையுண்டாகிறது. ஸாரதியே என்னுடைய சரீரத்தில் நடுக்கமும் மயிர்க்கூச்சமும் உண்டாகின் றன. இந்தப் பிராமணனை விட்டு யுத்தகளத்தில் அர்ஜுனன் இருக் கிற இடத்திற்கு மெதுவாகச் செல். ஸாரதியே! யுத்தகளத்தில் அர்ஜுனனையாவது பீமஸேனனையாவது அடைந்தால் எனக்கு இப் பொழுது க்ஷேமமுண்டாகலாமென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம்' என்று மெதுவான வார்த்தையைச் சொன்னான். மஹா

ராஜரே! பிறகு, ஸாரதியானவன் குதிரைகளை விரைவாக நடத்திக்கொண்டு மஹா வில்லாளியான பீமன் எந்த இடத்தில் உம்முடைய ஸைனிகர்களோடு போர்புரிந்துகொண்டிருந்தானோ அவ்விடம்சென்றான். ஐயா! ஓடுகின்ற திருஷ்டத்யும்னனுடைய சேனைக்கண்டு அப்பொழுது கிருபர் நூறறுக்கணக்காகப் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டே பின் தொடர்ந்தார். பகைவர்களை அடக்குகிற அவர் அடிக்கடி சங்கத்தை ஊதி, மஹேந்திரன் நமுசியென்னும் அஸுரனைப் பயமுறுத்தியதுபோலப் பார்ஷதனைப் பயமுறுத்தினார்.

யுத்தத்தில் நாடமுடியாதவனும் பீஷ்மருக்கு மிருத்யுவுமான சிகண்டியை ஹார்திக்யனுடைய குமாரனான கிருதவர்மா அடிக்கடி புன்னகையோடு தடுத்தான். சிகண்டியோ ஹார்திக்யனுடைய மஹாரதனான கிருதவர்மாவைக் கூர்மையுள்ள ஐந்து பல்லங்களாலே தோள் பக்கத்தில் அடித்தான். அரசரே! மஹாரதனான கிருதவர்மாவோ மிகுந்த கோபமூண்டவனாய்ச் சிகண்டியை அறுபது பாணங்களால் பிளந்து நகைத்துக்கொண்டு ஒரு பாணத்தால் அவனது வில்லையும் வெட்டினான். பிறகு, பலசாலியான துருபதகுமாரன் வேறு வில்லை எடுத்து மிக்க கோபங்கொண்டு கிருதவர்மாவைப் பார்த்து, 'நில் நில்' என்று சொன்னான். ராஜேந்திரரே! பிறகு, பொன்னாலாகிய பிடிகளையுடையவைகளும் நன்றாகத் தீட்டப்பட்டவைகளுமான தொண்ணூறு பாணங்களைக் கிருதவர்மாவின்மீது பிரயோகித்தான். அவைகள் கிருதவர்மாவினுடைய கவசத்தினின்று கீழே விழுந்தன. அவை பயனற்றவையாகப் பூமியில் விழுகின்றதைக் கண்டு (சிகண்டி) மிக்க கூர்மையுள்ள க்ஷுரப்ரத்தினாலே அவனுடைய வில்லை நன்றாக வெட்டினான். பிறகு, கோபங்கொண்ட சிகண்டி வில் அறுக்கப்பட்டுக் கொம்பொடிந்த காளைபோலிருக்கின்ற கிருதவர்மாவை எண்பது பாணங்களாலே இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். மிக்க கோபங்கொண்ட கிருதவர்மாவோ மிகக் காயப்படுத்தப்பட்டுக் குடத்தின் வாயிலிருந்து ஜலம் வருவதுபோல அவயவங்களாலே இரத்தத்தைக் கக்கினான். அரசரே! இரத்தத்தினால் நாலு பக்கத்திலும் நனைக்கப்பட்ட கிருதவர்மா மழையினால் நனைக்கப்பட்ட தாதுக்களையுடைய மலைபோல விளங்கினான். பிறகு, பிரபுவான கிருதவர்மா பாணங்களையும் நாணையுமுடைய வேறு வில்லை எடுத்துச் சிகண்டியைப் பாண ஸமூகங்களாலே தோட்பக்கத்தில் அடித்தான். சிகண்டியோ தோளில் பாய்ந்திருக்கின்ற பாணங்களால் பெருங்கிளைகளோடும் சிறு கிளைகளோடும் கூடி மிகப் பெரிதாயிருக்கின்ற மரம்போல விளங்கினான்.

ஒருவரோடொருவர் அடித்துக்கொண்டு, உதிரத்தினால் எல்லாப் பக்கங்களிலும் நனைக்கப்பட்ட மகான்களான அவ்வீரர்களிருவர்களும் இரத்தமடுவில் நீந்துகின்றவர்கள்போல விளங்கினார்கள். இரத்தத்தினால் நனைக்கப்பட்ட அவ்விருவர்களும் வஸந்தகாலத்தில் பூத்திருக்கின்ற இரண்டு பலாசவிருக்ஷங்கள்போல விளங்கினார்கள். இரத்தத்தினால் எல்லா அங்கங்களிலும் நனைக்கப்பட்டவர்களும் ரக்தமயமான சந்தனத்தினால் பூசப்பட்டவர்களும் பரமரோஷமுள்ளவர்களுமான அவ்விருவர்களும் கோபங்கொண்ட இரண்டு ஸர்ப்பங்கள்போல விளங்கினார்கள். பாணங்களால் வருத்தப்பட்ட அங்கங்களை யுடையவர்களும், ஒருவர் மற்றொருவரால் பாணங்களால் காயப்படுத்தப்பட்டவர்களுமான அவ்விருவர்களும், ஒன்றோடொன்று கொம்புகளால் முட்டிக்கொள்ளுகின்ற இரண்டு காளைகள்போல் விளங்கினார்கள். ஒருவரையொருவர் கொல்லுவதில் முயற்சியைச் செய்கின்ற மஹாரதர்களான அவ்விருவர்களும் அந்த ரணகளத்தில் ஆயிரக்கணக்கான மண்டலகதிகளில் இரண்டு தேர்களோடும் ஸஞ்சரித்தார்கள். மஹாராஜரே! கிருதவர்மா, தங்கமயமான கட்டுக்களுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையும் கூர்மையுள்ளவையுமான எழுபது பாணங்களாலே பார்ஷதனை யுத்தத்தில் அடித்தான். பிறகு, அடிப்பவர்களுள் உத்தமனான கிருதவர்மா யுத்தத்தில் சிகண்டியை நோக்கி உயிரை வாங்கக்கூடியதும் கோரமுமான ஓர் அம்பை விரைவுடன் பிரயோகித்தான். சிகண்டி அதனாலடிக்கப்பட்டு உடனே மூர்ச்சையை அடைந்தான். மூர்ச்சையை அடைந்தவனான அவன் விரைவாகக் கொடிமரத்தில் சாய்ந்தான். கிருதவர்மாவினுடைய அம்பினாலே மிகவாட்டப்பட்டவனும், அடிக்கடி பெருமூச்சு விடுபவனும், ரதிகர்களுள் உத்தமனுமான சிகண்டியை ஸாரதியானவன் யுத்தரங்கத்தினின்று விரைவாக வேறு இடத்திற்கு நடத்திச் சென்றான். பிரபுவே! பிறகு, சூரனான துருபதகுமாரன் கிருதவர்மாவினால் தோல்வியடையவே, பாண்டவசேனையானது துன்பமடைந்து எல்லாப் பக்கத்திலும் ஓடியது.

---

## பதினெட்டாவது அத்யாயம்.

### (அர்ஜுனனால் ஸம்சப்தகர்கள் தோல்வியடைந்தது.)

மஹாராஜரே! அர்ஜுனனும், காற்றானது பஞ்சுக்குவியலைப் பறக்கச்செய்வதுபோல உம்முடைய சேனையை எல்லாப் பக்கங்களிலும் பறக்கச் செய்தான். அந்த அர்ஜுனனைத் திரிகர்த்தர்களும்

சிபிகளும் கௌரவர்களும் வஸாதிகளும் ஸால்வர்களும் கீர்த்திசாலி களான கோபாலர்களும் எதிர்த்தார்கள். பாரதரே! ஸத்யதேவன், ஸத்யகீர்த்தி, மித்ரதேவன், சுருதஞ்சயன், ஸௌச்ருதி, சந்திரதேவன், மித்ரவர்மா, யுத்தத்தில் பிராதாக்களால் சூழப்பட்ட திரிகர்த்தராஜன் ஆகிய இவர்களும், சிறந்த வில்லாளிகளும் பற்பல சஸ்த்ரங்களில் ஸமர்த்தர்களுமான உம்முடைய புத்திரர்களுடன் சேர்ந்து யுத்தத்தில் அர்ஜுனன்மீது பாணஸமூகங்களை இறைத்தார்கள். ஜலப்பிரவாகங்கள் ஸமுத்திரத்தை எதிர்ப்பதுபோல அவர்கள் விரைவாக அவனை எதிர்த்தார்கள். லக்ஷக்கணக்கான அந்த வீரர்களெல்லாரும் யுத்தத்தில் அர்ஜுனனைநாடிக் கருடனைக்கண்ட ஸர்ப்பங்களைப்போல நாசமடைந்தார்கள். மஹாராஜரே! அவர்கள் போரில் அர்ஜுனனால் அடிக்கப்பட்டும், பீடிக்கப்படும் விட்டில்கள் அக்னியை விடாதது போலப் போர்க்களத்தில் அர்ஜுனனை விடவில்லை. யுத்தத்தில், பாண்டுபுத்திரனை ஸத்யதேவன் மூன்று பாணங்களாலும், மித்ரதேவன் அறுபத்துமூன்று பாணங்களாலும், சந்திரதேவன் ஏழு பாணங்களாலும், மித்ரவர்மா எழுபத்துமூன்று பாணங்களாலும், ஸௌச்ருதி ஏழு பாணங்களாலும், ச்ருதஞ்சயன் இருபதுபாணங் களாலும், ஸுசர்மா ஒன்பது பாணங்களாலும் அடித்தார்கள். யுத்தத்தில், அநேகர்களாலே அடிக்கப்பட்ட அந்த அர்ஜுனன், அவர்களைத் திருப்பி அடித்தான். அவன் ஸௌச்ருதியை ஏழு பாணங்களாலும், * ஸத்யதேவனை மூன்று பாணங்களாலும், ச்ருதஞ்சயனை இருபது பாணங்களாலும், சந்திரதேவனை எட்டுப் பாணங்களாலும், மித்ரதேவனை நூறு பாணங்களாலும், ஸத்யதேவனை மூன்று பாணங்களாலும், மித்ரவர்மாவை ஒன்பது பாணங்களாலும், ஸுசர்மாவை எட்டுப் பாணங்களாலும் அடித்தான்; அந்த யுத்தத்தில் சாணையில் தீட்டப்பட்ட பாணங்களாலே ராஜாவான ச்ருதஞ்சயனைக் கொன்று ஸௌச்ருதியினுடைய தலைப்பாகையை யணிந்த தலையைச் சரீரத்தினின்று அறுத்தான்; விரைவுள்ளவனாகி அம்புகளால் சந்திரதேவனையும் யமலோகத்தை அடைவித்தான்; மகாராஜரே! அவ்வாறே முயற்சி செய்கின்ற மற்ற மஹாரதர்கள் ஒவ்வொருவரையும் ஐந்து ஐந்து பாணங்களால் தடுத்தான். ஸத்யதேவனோ மிக்க கோபங் கொண்டு யுத்தத்தில் கிருஷ்ணனைக் குறித்துப் பெரிய தோமரத்தைப் பிரயோகித்து ஸிம்மநாதஞ் செய்தான். இரும்புமயமானதும் பொற்காம்புள்ளதுமான அந்தத் தோமரமானது மஹாத்மாவான

மாதவருடைய இடக்கையைப் பிளந்துகொண்டு அப்பொழுது பூமியில் பிரவேசித்தது. அரசரே! மஹாயுத்தத்தில் தோமரத்தினால் அடிக்கப்பட்ட மாதவருடைய கொறடாவும் கடிவாளங்களும் கையினின்று விழுந்தன. 'குந்திபுத்திரனை தனஞ்சயன் வாஸுதேவருடைய அங்கங்கள் மிகப் பிளக்கப்பட்டிருப்பதைக் கண்டு மிக்க கடுங்கோபத்தை அடைந்தான். அவரைப் பார்த்து, 'மிக்க புஜபலமுள்ளவரே! பிரபுவே! ஸத்யதேவனைநோக்கிக் குதிரைகளை நடத்தும். கூர்மையான அம்புகளால் அவனை யமலோகத்தை அடையும்படி செய்யப்போகிறேன்' என்று கூறினான். ஸ்ரீ வாஸுதேவரும் வேறு கொறடாவை எடுத்துக் கடிவாளங்களையும் விரைவாகக் கையிற்பிடித்து அக்குதிரைகளை ஸத்யதேவனுடைய ரதத்தைக்குறித்து ஓட்டினார். பிருதாபுத்ரனும் மஹாரதனுமான தனஞ்சயன் வாஸுதேவர் மிக அடிக்கப்பட்டதைக் கண்டு ஸத்தியதேவனைக் கூர்மையுள்ள அம்புகளால் தடுத்துப் பிறகு மிக்க கூர்மையுள்ள பல்லங்களாலே ராஜாவான அந்த ஸத்தியதேவனுடைய குண்டலங்களையணிந்த பெரிய தலையைச் சேனையின் நடுவில் உடலிலிருந்து அறுத்தான். ஐயா! ஸத்யதேவனுடைய முடியை அறுத்துக் கூர்மையுள்ள பாணங்களால் மித்ரவர்மாவையும் கூர்மையான வத்ஸதந்தத்தினாலே அவனுடைய ஸாரதியையும் கொன்றான். பலசாலியான அர்ஜுனன் பிறகு அதிக கோபங்கொண்டு அனேக அம்புகளாலே நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களை மறுபடியும் கீழே தள்ளினான். வேந்தரே! பிறகு, மஹாரதனை அர்ஜுனன், வெள்ளிமயமான கட்டுக்களுள்ள க்ஷுரப்ரத்தினாலே வலிமை மிக்க மித்ரதேவனுடையதலையை அறுத்தான். மிகுந்த கோபங்கொண்டு ஸுசர்மாவைத் தோளில் அடித்தான். பிறகு, ஸம்சப்தகர்களனைவர்களும் கோபங்கொண்டு பத்துத் திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டு தனஞ்சயனைச் சூழ்ந்துநின்று சஸ்திர ஸமூகங்களாலே அடித்தார்கள். மிகத் துன்பம் செய்யப்பட்டவனும் இந்திரனுக்கு ஒப்பான பராக்கிரமமமைந்தவனும் அளவிட முடியாத மனோதைர்யமுள்ளவனும் மஹாரதனுமான அர்ஜுனன் ஐந்திராஸ்திரத்தை வெளிப்படுத்தினான். அரசரே! பிறகு, பாண்டுபுத்திரனும் அளவற்ற தேஜஸுள்ளவனுமான பார்த்தனுடைய வில்லினின்று ஆயிரக்கணக்கான அம்புகள் வெளியில் புறப்பட்டன. பாரதரே! பிறகு, யுத்தபூமியில் அறுக்கப்படுகின்ற கொடிமரங்கள், விற்கள், கொடித்துணிகளுடன் கூடின தேர்கள், அம்புப்பெட்டிகள், நுகத்தடி

கள், அச்சுக்கட்டைகள், சக்கரங்கள், பூட்டாம்வார்கள், கடிவாளங்கள், கூபரங்கள், ரதகுப்திகள், அம்புகள், கீழே விழுகின்ற குதிரைகள், ரிஷ்டிகள், ஈட்டிகள், கதாயுதங்கள், பரிகங்கள், சக்திகள், தோமரங்கள், சதக்னிகள், சக்ராயுதங்களுடன் கூடின கைகள், தொடைகள், கண்டஸூத்ரங்கள், தோள்வளைகள், கேயூரங்கள், ஹாரங்கள், ஸுவர்ணாபரணங்கள், கவசங்கள், குடைகள், விசிறிகள், கிரீடங்களுடன் பூதலத்தில் விழுந்திருக்கின்ற தலைகள் இவைகளுடைய குவியல்கள் காணப்பட்டன. குண்டலங்களோடு கூடியவைகளும் நல்ல கண்களையுடையவையும் பூர்ணசந்திரனுக்கு ஒப்பானவையுமான தலைகள், ஆகாயத்தில் நக்ஷத்திரக்கூட்டங்கள்போலப் பூமியில் காணப்பட்டன. நல்ல மாலைகளை அணிந்தவைகளும், நல்ல வஸ்திரங்களை உடுத்தவைகளும், சந்தனத்தினால் நனைக்கப்பட்டவைகளுமான, கொல்லப்பட்ட வீரர்களுடைய சரீரங்கள் பூமியில் காணப்பட்டன. மஹாராஜரே! அர்ஜுனனால், பெரிய யுத்தத்தில் ஆங்காங்கு கொல்லப்பட்ட ராஜபுத்திரர்களாலும், மஹா பலசாலிகளான க்ஷத்ரியர்களாலும், அப்பொழுது கோரமான அந்த யுத்த பூமியானது ருத்ருடைய உத்யானத்துக்கு ஸமமாக விளங்கியது. சிதறி விழுந்திருக்கின்ற மலைகள்போல யுத்தத்தில் விழுந்திருக்கின்ற யானைகளாலும் குதிரைகளாலும் யுத்தபூமியானது பிரவேசிக்கமுடியாத தோற்றமுள்ளதாயிற்று. பகைவர்களை நாசஞ்செய்கின்றவனும் பல்லங்களாலே பெரிய யானைகளையும் குதிரைகளையும் அடித்துத் தள்ளுகின்றவனும் மஹாபலசாலியுமான அந்தப் பாண்டவனுக்குத் தேர்செல்ல வழிஇல்லை. ஐயா! அந்த யுத்தத்தில் இரத்தச்சேற்றில் ஸஞ்சரிக்கின்ற அந்த அர்ஜுனனுடைய தேருருளைகள் புதைந்து தன்னுடைய பரிவாரங்கள்போலக் கிலேசமடைந்தன. மனதுக்கும் காற்றுக்கும் ஒப்பான வேகமுள்ள குதிரைகள் அதிகமாக அமிழ்ந்துபோகின்ற சக்கரங்களை அதிகப் பிரயாசத்துடன் இழுத்தன. பாரதரே! வில்லாளியான பாண்டுபுத்திரனாலே கொல்லப்படுகின்ற அச்சேனையெல்லாம் பெரும்பாலும் அங்கு நில்லாமல் ஓடிற்று. குந்தீபுத்திரனான, ஜிஷ்ணுவானவன் யுத்தத்தில் அந்த அனேகம் ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களை வென்று அப்பொழுது புகை இழந்த நெருப்புப்போல ஜ்வலித்துக்கொண்டு விளங்கினான்.

## பத்தொன்பதாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தவர்ணனை.)

மஹாராஜரே! அநேக பாணங்களைப் பிரயோகிக்கின்றவரான யுதிஷ்டிரரை, ராஜாவான துர்யோதனன் பயமற்றவனாகத் தானே எதிர்த்தான். விரைவாக வருகின்ற மஹாரதனான உம்முடைய குமாரனைத் தர்மராஜரும் விரைவாக அடித்து, 'நில் நில்' என்று சொன்னார். அந்தத் துர்யோதனனோ மிக்க கோபங்கொண்டு கூர்மையுள்ள ஒன்பது பாணங்களாலே அவரைத் திருப்பியடித்து, அவருடைய ஸாரதியையும், ஒரு பல்லத்தினால் நன்றாக அடித்தான். வேந்தரே! பிறகு, யுதிஷ்டிரர் தங்கக்கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான பதின்மூன்று பாணங்களைத் துர்யோதனன்மீது பிரயோகித்தார். மஹாரதரான அவர் அந்தத் துர்யோதனனுடைய நான்கு குதிரைகளையும் நான்கு பாணங்களால் கொன்று, ஐந்தாவது பாணத்தினாலே ஸாரதியினுடைய தலையைச் சரீரத்தினின்று தள்ளி, ஆறாவது பாணத்தினாலே அரசனுடைய கொடியையும் ஏழாவது பாணத்தினாலே வில்லையும் எட்டாவது பாணத்தினாலே கத்தியையும் பூமியில் தள்ளினார். அவர் ஐந்து பாணங்களாலே அரசனையும் நன்றாக அடித்தார். மிகுந்த வருத்தத்தை அடைந்தவனான உம்முடைய குமாரன், குதிரைகள் கொல்லப்பட்ட அந்த ரதத்தினின்று குதித்துப் பூமியில் நின்றான். அவன் கஷ்ட நிலைமையை அடைந்திருப்பதைக் கண்ட கர்ணன் அச்வத்தாமா கிருபர் முதலானவர்கள், அரசனைப் பாதுகாக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டு வேகத்துடன் எதிர்த்துவந்தார்கள். அரசரே! பிறகு, பாண்டுபுத்திரர்களனைவரும் யுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டு யுத்தத்தில் பின்தொடர்ந்தார்கள். பிறகு, யுத்தம் நடந்தது. மஹாயுத்தத்தில் ஆயிரக்கணக்கான தூரியவாத்தியங்கள் முழங்கின. யுத்தத்தில் எவ்விடத்தில் பாஞ்சாலர்கள் கௌரவர்களோடு சேர்ந்து எதிர்த்துச் சண்டை செய்தார்களோ அவ்விடத்தில ஸிம்மநாதங்களும் கல கல என்னும் பேரொலியும் தோன்றின. காலாட்கள் காலாட்களோடும் யானைகள் உத்தமமான யானைகளோடும் ரதிகர்கள் ரதிகர்களோடும் குதிரை வீரர்கள் குதிரைவீரர்களோடும் எதிர்த்தார்கள். மஹாராஜரே! யுத்தத்தில் ஒன்றோடொன்று எதிர்த்தவை பார்க்கத்தக்கவையும் பற்பல விதமானவையும் நினைக்க முடியாதவையும் சஸ்திரங்களோடு கூடியவையும் சிறந்தவையுமாயிருந்தன. அந்தச் சூரர்களனைவர்

களும் மிக்க விரைவுடன் ஒருவரையொருவர் யுத்தத்தில் கொல்லு வதில் விருப்பமுற்று ஆச்சரியகரமாகவும் சுறுசுறுப்பாகவும் நன்கு போர்புரிந்தனர். அந்த வீரர்கள், யுத்த வீரர்களுக்குரிய விரதத்தை அனுஷ்டித்து யுத்தத்தில் ஒருவரையொருவர் கொன்றார்கள். அவர்கள் எவ்விதத்திலும் புறத்தில் நின்று போர்புரியவில்லை. அந்த யுத்தமானது ஒரு முகூர்த்தகாலம் பார்ப்பதற்கு இனிமையாயிருந்தது. ராஜரே! பிறகு, பைத்தியங்கொண்டதுபோல் வரம்புகடந்திருந்தது. ரதிகன் யானையை எதிர்த்துக் கூர்மையுள்ள அம்புகளாலே பிளந்து வணங்கினநுனுக்களுடன் கூடின அம்புகளாலே அதை யமனிடம் அனுப்பினான். யானைகள் அனேக குதிரைகளை நாடி யுத்தாங்கத்தில் நான்கு பக்கத்திலும் எறிந்து ஆங்காங்கு அப்போதைக்கப்போது மிக்க உக்கிரமாய்ப் பிளந்தன. ஆங்காங்கு வந்து சேருகின்ற அனேக குதிரைவீரர்கள் உத்தமமான குதிரைகளைச் சூழ்ந்துகொண்டு தலத்வனிகளையும் ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். பிறகு, குதிரைவீரர்கள் விரைவாக ஓடுகின்ற பெரிய யானைகளை விலாப்புறங்களிலும் பின்புறத்திலும் அடித்தார்கள். வேந்தரே! மதம் பெருகுகின்றயானைகள் அனேக குதிரைகளை ஓடும்படி செய்தன. சில யானைகள் கொம்புகளால் கொன்றன. சில யானைகள் அதிகமாக மர்த்தித்தன. வலிமைமிக்கவைகளான வேறு சிலயானைகள் அப்பொழுது குதிரைவீரர்களோடு கூடின குதிரைகளைக் கோபத்தினலை கொம்புகளால் பிடித்தன. மற்றவைகள் அப்பொழுது முட்டி வேகத்தால் தூர எறிந்தன. நாற்புறங்களிலும் சந்துகளிலிருக்கின்ற யானைகள் காலாட்படைகளாலே அடிக்கப்பட்டுக் கோரமான தீனஸ்வரத்தை வெளியிட்டுப் பத்துத் திசைகளிலும் ஓடின. மகாயுத்தத்தில் ஆபரணத்தை இழந்து விரைந்து ஓடுகின்ற காலாட்களுடைய ஆபரணத்தை யுத்தபூமியில் (கஜவீரர்கள்) அறிந்து எடுக்க விருப்பமுறறார்கள். மகா கஜங்களின்மீது ஏறியிருக்கின்ற வீரர்கள் ஜயதததுக்குக்காரணததைச் சிந்தித்துக்கொண்டு யானைகளை மண்டியிடச்செய்து (அவைகளால்) விசித்ரமான ஆபரணங்களை எடுதது்த் தரும்படி செய்வித்தார்கள்; காலாட்படைகளையும் பிளந்தார்கள். அச்செய்கையில பற்றுதலுள்ளவர்களான அந்த யானை வீரர்களை அதிக வேகமுள்ளவர்களும் வலிமை மிகுந்தவர்களுமான காலாட்கள் சூழ்ந்துகொண்டு துன்பஞ் செய்தார்கள். நன்றாகப் பழக்கப்பட்ட யானைகளாலே துதிக்கைகளால தூக்கி ஆகாயத்தில எறியப்பட்ட சிலர்கள் பெரும்போரில கீழேவிழுந்து கொம்பு நுனிக

ளாலே குத்தப்பட்டார்கள். இன்னும் சிலர்கள், அந்த யுத்தத்தில் கஜங்களாலே சேனையின் நடுவிடத்தை அடைந்து விரைவாகப் பிடித்துக் கொம்புகளாலேயே நாசம் செய்யப்பட்டார்கள். மஹாராஜரே! மற்றவர்கள் அடிக்கடி விலக்கித் தள்ளப்பட்டுப் பொடி பண்ணப்பட்ட சரீரத்தையுடையவர்களானார்கள். மற்றவர்கள் யுத்தத்தில் விசிறிகள்போலச் சுழலும்படி செய்து அடிக்கப்பட்டார்கள். ராஜரே! யானைகளுக்கு முந்திச் செல்லுகின்றவர்களான மற்றவர்களுடைய சரீரங்களும் ஆங்காங்கு யுத்தபூமியில் மிக அடிக்கப்பட்டன. சில யானைகள், பிராஸங்களாலும் தோமரங்களாலும் சக்திகளாலும் மஸ்தகத்தின் கீழ்ப்பக்கங்களிலும் மஸ்தகங்களிலும் தந்தக்கட்டுக்களிலும் அதிகமாக அடிக்கப்பட்டன. சில யானைகள் பக்கத்திலிருக்கின்றவர்களும் மிக்கபயங்கரர்களுமான ரதிகர்களாலும் குதிரைவீரர்களாலும் எதிர்த்துப் பிளக்கப்பட்டு அந்த யுத்தத்தில் பூமியில் விழுந்தன. அரசரே! அந்த மஹாயுத்தத்தில் குதிரைகளின் மீதுள்ள குதிரைவீரர்கள் தோமரத்தினாலே கேடகத்தையுடைய காலாட்களையும் அவ்வாறே கவசங்களை யணிந்த வேறு சிலர்களையும் ஆங்காங்கு வேகத்தினால் பூமியில் நொறுக்கினார்கள். ஐயா! கோரமும் பயங்கரமுமாயிருக்கிற அந்த யுத்தத்தில் யானைகள் ரதங்களை அருகில் நெருங்கிப் பிடித்து விரைவாக எறிந்தன. நாராசங்களாலே அடிக்கப்பட்ட அதிக பலமுள்ள யானைகள் வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட மலைச்சிகரம்போலப் பூமியில் விழுந்தன. யுத்தத்தில் யுத்தவீரர்கள் யுத்தவீரர்களை நாடி முஷ்டிகளால் குத்தினார்கள். ஒருவரையொருவர் மயிர்களைப் பிடித்து இழுத்து விலக்கித் தள்ளினார்கள்; பிளக்கவும் பிளந்தார்கள். சிலர்கள் கைகளை உயரத்தூக்கிப் பூமியில் தள்ளிக் காலால் மார்பில் மிதித்துக்கொண்டு துடிக்கத் துடிக்கத் தலையை அறுத்தார்கள். வேந்தரே! மற்றொருவன் கீழேவிழுகின்ற ஒருவனுடைய தலையை வாளினால் அறுத்தான். மஹாராஜரே! அப்பொழுது மற்றொருவன் உயிரிழந்தவனைக் காலால் உதைத்தான். அவ்வாறே, மற்றொருவன் உயிரோடிருக்கின்றவனுடைய சரீரத்தில் சஸ்திரத்தை அழுந்தும்படி செய்தான். பாரதரே! அந்த யுத்தத்தில் யுத்த வீரர்களுக்குப் பெரிதான முஷ்டியுத்தம் நேர்ந்தது. அவ்வாறே, உக்கிரமான மயிர்பிடிச் சண்டையும் பயங்கரமான பாகுயுத்தமும் நடந்தன. ஒருவன், அறியப்படாமலே இருந்துகொண்டு, வேறொருவனோடு சண்டைசெய்துகொண்டிருக்கின்ற மற்றொருவனுடைய உயிரைப் பலவாறாக அநேக சஸ்திரங்களாலே அபகரித்

தான். போர்வீரர்கள் எதிர்த்துநின்று ஸங்குல யுத்தமானது நடக்க வே, உடனே நூறுறுககணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் தலையிலலா முண்டங்கள் எழுந்து துள்ளின. இரத்தத்தாலே நனைக்கப்படுகின்ற சஸ்திரங்களும் கவசங்களும் நலல சாயத்தினால் நிறமேறறப்பட்ட வஸ்திரங்கள்போல் விளஙகின. இவ்வாறு பயங்கரமானதும், சஸ்தி ரங்களால நெருங்கியதும், கரைபுரண்ட கங்கைக்கு ஒப்பானது மான அந்தப் பெரும்போரானது சப்தத்தால உலகத்தை நிரப்பியது. ராஜரே! பாணங்களால பீடிக்கப்பட்டு, தன்னைச்சேர்ந்தவர்களாவது பிறர்களாவது அறியப்பட்டார்களில்லை. ஜயத்தில் விருப்பமுள்ளவர்க ளான வேந்தர்கள் அவசியம் யுத்தம் செய்யகதக்கதென்று யுததம் செய்தார்கள். மஹாராஜரே! தம்மைச்சேர்ந்தவர்களைத் தம்மைச்சேர்ந் தவர்களே கொன்றுகொண்டார்கள்; மதிராததுவந்த பிறர்களையும் கொன்றார்கள். சேனைகளின் இருதிறததிலும் வீரர்களாலே ஸங குலமான யுததம் நடந்தது. மஹாராஜரே! யுததபூமியானது அங்கு உடைக்கப்பட்ட தேர்களாலும் வீழததப்பட்ட யானைகளாலும் சாய்ந்துகிடக்கின்ற குதிரைகளாலும் தள்ளப்பட்ட மனிதர்களாலும் க்ஷணததிறகுள் நாட முடியாத ரூபத்துடன் கூடியதாகியது. பூபால ரே! ஒருக்ஷணத்தினுள், இரததப்பெருக்குள்ளதாகியது. கர்ணன் பாஞ்சாலர்களைக்கொன்றான். தனஞ்சயன் திரிகர்த்தர்களைக்கொன் றான். ராஜரே! பீமஸேனன் கௌரவர்களையும் நான்குபக்கங்களிலு முள்ள யானைப்படையையும் கொன்றான். சூரியன் பிறபகலை அடைந்துநிறகவே, கௌரவபாண்டவஸேனைகளுக்கு அதிகமான கீர்த்தியைவிரும்புகின்றவர்களானவீரர்களுக்கு இவவிதமான நாசம் நேர்ந்தது" என்றுகூறினான்.

## இருபதாவது அத்யாயம்.

### (யுதிஷ்டிரரால் துரியோதனன் தோல்வ்யடைந்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! மிக்க கொடுமையுள்ளவையும், மிகவும் ஸகிககமுடியாதவையுமான அனேகதுக்கங்களையும் புத்திரர்க ளுடைய நாசததையும் உன்னிடத்தினின்று நான் கேட்டேன். ஸூத! நீ சொலவதிலிருந்தும் யுத்தம் நடந்திருககிற விததததிலிருந்தும் கௌரவர்கள் இலலையென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம். மகாரதனான துர்யோதனனும் அந்த யுத்தததில ரததததை இழந்தவ னாகச் செய்யப்பட்டான். தர்மபுத்திரன் என்னசெய்தான்? ராஜா

வான துர்யோதனனுவது அந்தத் கர்மபுத்திரனுக்கு என்னசெய் தான்? ஸஞ்சய! பிற்பகலில் மயிர்சிலிர்க்கலை உண்டுபண்ணுகிற தான யுத்தம் எவ்வாறு நடந்தது? அதனை எனக்கு உள்ளபடிசொல். (நீ சொல்வதில்) திறமையுள்ளவன்" என்று கூற, ஸஞ்சயன் சொல்லத் தொடங்கினன்.

"அரசரே! பாரதரே! ஒன்றோடொன்று சேர்க்கைபெற்றிருக் கின்ற இரண்டு சேனைகளும் துண்டு துண்டாகக் கொல்லப்படுமளவில் உம்முடைய குமாரனை துர்யோதனன் வேறு ரதத்தின்மீதேறி அதிக கோபத்தோடு விஷத்துடன்கூடிய ஸர்ப்பம்போலச் சீறிக் கொண்டு தர்மராஜரான யுதிஷ்டிரரைக் கண்டு தன்ஸாரதியை நோக்கி, 'ஸாரதியே! எவ்விடத்தில் ராஜாவான பாண்டவன் கவசம் பூண்டு தூக்கிப்பிடிக்கப்பட்ட வெண்கொற்றக்குடையோடு விளங்கு கிறனே அவ்விடத்தை என்னை விரைவாக அடையும்படி செய். விரைவுடன் செல்; செல்' என்று சொன்னன். அரசனல் தூண்டப் பட்ட அந்தஸாரதி ராஜாவினுடைய உத்தமமான ரதத்தை யுத்தகளத் தில் யுதிஷ்டிரருக்கு எதிராக நடத்தினன். பிறகு, மதம்பெருக்குள்ள யானைபோலக் கோபங்கொண்ட யுதிஷ்டிரர் தம் ஸாரதியைநோக்கி, 'ஸூத! எந்தஇடத்தில் துர்யோதனனிருக்கிறனே அவ்விடம் செல்' என்று தூண்டினர். வீரர்களும் ரதிகர்களுள் சிறந்தவர்களும் பிரா தாக்களுமான அவ்விருவரும் எதிர்த்தார்கள். மஹாவீரர்களும் மிக்க கோபங்கொண்டவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களும் பெரியவில்லைக் கையில்பிடித்தவர்களுமான அவ்விருவரும் ஒருவரோ டொருவர் யுத்தத்திற்காக எதிர்த்து யுத்தத்தில் ஒருவர்மீதொருவர் (பாணவர்ஷங்களைப்)பொழிந்தார்கள். ஐயா! பிறகு, துர்யோதனராஜன், யுத்தத்தில் சாணைக்கல்லில்தீட்டப்பட்ட ஒரு பல்லத்தினலே தர்மசீல ரான யுதிஷ்டிரருடைய வில்லைத் துணித்தான். தர்மநந்தனரான யுதிஷ்டிரர் மிக்க கோபங்கொண்டு அந்த அவமானத்தை ஸகிக்க வில்லை. யுதிஷ்டிரர் படைமுகத்தில் கோபத்தினல் கண்கள் மிகச் சிவந்து, துணிக்கப்பட்ட வில்லை எறிந்துவிட்டு வேறுவில்லை எடுத் துத் துர்யோதனனுடைய கொடிமரத்தையும் வில்லையும் வெட்டி னர். பரதஸ்ரேஷ்டரே! உம்முடைய புத்திரனவன் பிறகு வேறு வில்லை எடுத்துப் பொன்னபரணங்களை யணிந்தவைகளும் தங்கமய மான கட்டுக்களுள்ளவைகளும் பளபளப்புள்ள நுனிகளுள்ளவை களும் விஷத்துடன் கூடின ஸர்ப்பங்கள் போன்றவைகளுமான அம்புகளை யுதிஷ்டிரர்மீது தொடுத்தான். மிகுந்த கோபமுடையவர்

களான அவ்விருவர்களும் ஸிம்மங்கள்போல மிகுந்த பரபரப்புடன் பரஸ்பரம் வெற்றிபெறவேண்டுமென்று எண்ணி ஒருவர்மீதொருவர் அம்பு மழைகளைப் பொழிந்தார்கள். மஹாரதர்களான அவ்விருவர்களும் காளைகள்போலக் கர்ஜித்துக்கொண்டு யுத்தத்தில் ஒருவரையொருவர் அடித்தார்கள். அவ்விருவர்களும் ஸமயத்தைத் தேடுகின்றவர்களாகி ஸஞ்சரித்தார்கள். மஹாராஜரே! பின்பு, காதுவரையிலும் நன்றாக இழுக்கப்பட்டு விடப்பட்ட அம்புகளாலே உண்டுபண்ணப்பட்ட காயங்களையுடையவர்களான அவ்விருவர்களும் பூத்திருக்கின்ற பலாச விருக்ஷங்கள்போல் விளங்கினார்கள். வேந்தரே! பிறகு, மஹாயுத்தத்தில் அடிக்கடி ஸிம்மநாதங்களை வெளியிட்டார்கள். அவ்வாறே கையைக்கொட்டுதலால் உண்டாகிற சப்தத்தையும் வில்லினுடைய நாணொலிகளையும் சங்கவாத்யங்களுடைய சப்தங்களையும் வெளியிட்டார்கள். மஹாராஜரே! வேந்தர்களான அவ்விருவர்களும் ஒருவரையொருவர் மிகவும் துன்பஞ்செய்தார்கள். பிறகு, அரசரான யுதிஷ்டிரர் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தினுடைய வேகம்போன்ற வேகத்தையுடையவைகளும் நெருங்கமுடியாதவைகளுமான மூன்று பாணங்களாலே உம்முடைய புத்திரனை மார்பிலே அடித்தார். அரசனான உம்முடைய குமாரனும் அந்த யுதிஷ்டிரரைக் கூர்மையுள்ளவைகளும் தங்கக்கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கலலில் தீட்டப்பட்டவைகளுமான ஐந்து பாணங்களாலே விரைவாகத் திருப்பியடித்தான். பாரதரே! பிறகு, ராஜாவான அவன் எல்லாவற்றையும் அழிக்கும் தன்மைபொருந்தியதும் கூர்மையுள்ளதும் பெரிதான எரிநக்ஷத்திரத்திற்கு ஒப்பானதுமாகிய ஒரு சக்தியை அப்பொழுது பிரயோகித்தான். விரைவாக வருகின்ற அந்தச் சக்தியைத் தர்மராஜர் கூர்மையுள்ள மூன்று பாணங்களால் துண்டாடி விரைவாக ஐந்து பாணங்களால் அந்தத் துர்யோதனனையும் அடித்தார். பிறகு, ஸ்வர்ணமயமான காம்புள்ளதான அந்தச் சக்தி பெரிய சப்தத்துடன் விழுந்தது. விழுகின்ற அந்தச் சக்தியானது பெரிய எரிநக்ஷத்திரம்போல நெருப்புக்கொப்பாக விளங்கியது. அரசரே! உம்முடைய புத்திரன், சக்தியாயுதம் நாசஞ் செய்யபபட்டதைக்கண்டு, கூர்மையான ஒன்பது பல்லங்களாலே யுதிஷ்டிரரை அடித்தான். பகைவர்களை வாட்டுபவரான யுதிஷ்டிரர் பலசாலியும் பகைவனுமான துர்யோதனனால் நன்றாக அடிக்கப்பட்டு அவனைக்குறித்து ஒரு பாணத்தை எடுத்தார். மஹாராஜரே! பிறகு, மஹா பலசாலியும் பராக்கிரமசாலியுமான அவர் கோபங்கொண்டு வில்லினுடைய நடுவில் அந்த அம்பைப் பூட்டிப் பிரயோகித்

தார். அந்தப் பாணமோ மஹாரதனும் உம்முடைய புத்திரனும் அர சனுமான துர்யோதனனை அடைந்து, மதிமயங்கச்செய்து பூமியைப் பிளந்தது. பிறகு, துர்யோதனன் கோபமூண்டு கதாயுதத்தைத் தூக்கி வேகத்துடன் கலகத்துக்கு முடிவைச் செய்யவேண்டுமென்ற எண் ணங்கொண்டவனாகத் தர்மராஜருடைய ஸமீபத்தில் ஓடிவந்தான். தர்மராஜர் கதாயுதத்தைத் தூக்கினவனும் தண்டத்தைக் கையில் கொண்ட அந்தகனைப் போன்றவனும் உமது குமாரனுமான துர்யோ தனனைக் கண்டு ஜ்வலிக்கின்றதும் மிக்க வேகமுள்ளதும் ப்ரகாசிக் கின்ற பெரிய எரிநக்ஷத்திரம்போன்றதும் யமதண்டத்துக் கொப் பானதும் கோரமானதும் வேறான காலராத்திரி போன்றதுமான பெரிய சக்தியாயுதத்தைப் பிரயோகித்தார். ரதத்திலிருந்த அந்தத் துர்யோதனன், அந்தக்கதையினால் கவசத்தைப் பிளந்து நடுமார்பில் அடிக்கப்பட்டு மனத்தில் மிக்க துன்பமுற்று விழுந்து மூர்ச்சை யடைந்தான். பிறகு, அந்தத் தர்மராஜரைநோக்கி ஆகாசவாணி யானது, 'ராஜனே! இவன் உன்னால் கொல்லத்தக்கவனல்லன். பீம ஸேனனுடைய பிரதிஜ்ஞையைப் பரிபாலனம் செய்' என்று சொல் லிற்று. இவ்வாறு சொல்லப்பட்டதைக்கேட்ட தர்மராஜர் திரும்பி விட்டார். பிறகு,கிருதவர்மா விரைவாக வந்து துக்கக்கடலில் மூழ்கி யிருக்கின்ற உம்முடைய குமாரனை அரசனைப் பாதுகாத்தான். பீம னும் தங்கப்பட்டைகளால் அலங்கரிக்கப்பட்ட கதையை எடுத்துக் கொண்டு யுத்தத்தில் கிருதவர்மாவைநோக்கி வேகமாக எதிர்த்து ஓடிவந்தான். மஹாராஜரே! பிற்பகலில் யுத்தத்தில் வெற்றியை விரும்புகின்றவர்களான உம்மைச் சேர்ந்த வீரர்களுக்குப் பகைவர்க ளோடு இவ்வாறு யுத்தம் நடந்தது.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

### (ஸங்குலயுத்தமும், பதினாறவதுநாள் யுத்தமுடிவும்.)

ஸஞ்ஜயன்: வேந்தரே! பிறகு, யுத்தத்தில் அடங்காமதங்கொண்டவர்க ளான உம்முடைய வீரர்கள், கர்ணனை முன்னிட்டுக்கொண்டு மீண் டும் யுத்தத்திற்காகத் திரும்பிவந்து தேவாஸுரயுத்தத்துக்கு ஒப்பான யுத்தத்தைச் செய்தார்கள். யானைகளும் மனிதர்களும் தேர்களும் குதிரைகளும் சங்கங்களுமாகிய இவைகளுடைய ஒலிகளாலே அதிக உத்ஸாஹத்தை அடைந்தவைகளும் அதிக கோபத்தோடுகூடியவை களும் எதிர்த்து நிற்கின்றவைகளுமான அந்த யானைகள், தேராளி

கள், காலாட்கள், குதிரைக்காரர்கள் இவர்களுடைய கூட்டங்களனைத்தும் பற்பலவிதமான சஸ்திரங்களுடைய வீழ்ச்சிகளால் நாசம்செய்யப்பட்டன. மஹாயுத்தத்தில, யானைகளும் ரதங்களும் குதிரைகளும் கூர்மையுள்ள கோடாலிகளாலும் கத்திகளாலும் பட்டஸங்களாலும் பற்பலவிதமான பாணங்களாலும் சிறந்த வீரர்களால், நாசஞ்செய்யப்பட்டன. வாகனங்களால் வீரர்களும் கொல்லப்பட்டார்கள். பூமியானது, தாமரைப்புஷ்பத்துக்கும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் ஒப்பானவைகளும், வெண்ணிறமுள்ள பறகளையுடையவைகளும், அழகிய வாயையும் கண்ணையும் மூக்கையுமுடையவைகளும், அழகிய கிரீடங்களோடும் குண்டலங்களோடும் கூடியவைகளுமான மனிதர்களுடையதலைகளாலே பரப்பப்பட்டதாக விளங்கியது. அனேகம் பரிகங்களாலும் உலக்கைகளாலும் சக்திகளாலும் தோமரங்களாலும் நகரங்களாலும் புசுண்டிகளாலும் கதாயுதங்களாலும், யானைகளும் மனிதர்களும் குதிரைகளும் ஆயிரக்கணக்காகக் கொல்லப்பட்டன. அப்பொழுது, இரததநதிப்பிரவாகங்கள் தோன்றின. நன்றாக நாசம்செய்யப்பட்ட ரதங்கள், மனிதர்கள், குதிரைகள், யானைகள் இவைகளையுடையதும் பயங்கரமான காட்சியையுடையதும் அதிக காயமுள்ளதும் சத்ருக்களால் நாசம் செய்யப்பட்டதுமான அந்தச்சேனையானது, பிரஜைகள் அழியும் காலமான பிரளய காலத்தில் யமனுடைய ராஜ்யம் விளங்குவதுபோல் விளங்கியது. அரசரே! பிறகு, உம்முடைய சேனாவீரர்களும் தேவகுமாரர்களுக்கொப்பான உம்முடைய புத்திரர்களும் கணக்கிலடங்காத படைகளை முன்னிட்டவர்களான குருசிரேஷ்டர்களும் யுத்தத்தில் சினியினுடைய குமாரனை எதிர்த்தார்கள். அதிக இரத்தத்தால பயங்கரமானதும், புருஷஸ்ரேஷ்டர்களாலும் குதிரைகளாலும் தேர்களாலும் யானைகளாலும்நெருங்கியதும், உப்புநீர்நிறைந்த கடலின் ஒலிபோன்ற பேரொலியுடன் கூடியதுமான அந்தச் சேனையானது, தேவாஸுர ஸைன்யங்களுக்குச் சமமான ஒளியுள்ளதாக விளங்கியது. பிறகு, தேவராஜனுக்குச் சமமான பராக்ரமமுள்ளவனும் ஸூர்யகுமாரனுமான கர்ணன் யுத்தத்தில் தேவராஜனுடைய இளைய ஸகோதரனை உபேந்திரனுக்குச் சமமான ஸாத்யகியை ஸூர்யனுடைய கிரணங்கள் போலப் பிரகாசிக்கின்ற அம்புகளால் அடித்தான். சினிகளுள் சிறந்தவனை ஸாத்யகியும், யுத்தத்தில் விரைவுடன் ரதத்தோடும் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் கூடின புருஷஸ்ரேஷ்டனை அந்தக் கர்

ணனே ஸர்ப்பங்களுடைய விஷத்துக்குச் சமமான ஒளியையுடைய பறபலவிதமான அம்புகளாலே அப்பொழுது நன்றாக மூடினான். சினிகுலவீரனான ஸாத்யகியினுடைய பாணங்களால மிக்க துன்ப மடைந்தவனும் ரதிகர்களுள் சிறந்தவனுமான *' ஸுஷே ணனே அதிரதர்களான உம்முடைய நண்பர்கள் யானைகளோடும் ரதங் களோடும் குதிரைகளோடும் காலாட்களோடும் விரைவாக எதிர்த் தார்கள். அதிவேகமுடையவர்களும் துருபதபுத்திரனை முதன்மை யாகக்கொண்டவர்களுமான பகைவர்களாலே எதிர்த்துத துரத்தப் பட்டதும் கடலுக்கொப்பானதுமான கௌரவசேனையானது அப் பொழுது எல்லாப்பக்கத்திலும் ஓடத தலைப்பட்டது. அச்சமயத்தில மனிதர்களுக்கும் ரதங்களுக்கும் குதிரைகளுக்கும் யானைகளுக்கும் பெரிதான நாசம் நேர்ந்தது. பிறகு, ஆண்மையிற சிறந்தவர்களான அர்ஜுனனும் கேசவரும் பகலில செய்யவேண்டிய வைதிக கர்மா னுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, முறைப்படி பிரபுவான ருத் ரனைப் பூஜித்து, பகைவர்களைக் கொல்வதில் நிச்சயத்துடன் உம்மு டைய சேனையைநோக்கி விரைவாக வந்தார்கள். அப்பொழுது, பகைவர்கள் மேகத்தினுடைய இடிமுழக்கம்போன்ற முழக்கமுடைய தும், காற்றினால அலைக்கப்பட்ட துணியுடன் சேர்ந்த கொடிமரத்தை யுடையதும், வெண்ணிறமான குதிரைகள் பூட்டியதும், சமீபத் தில் வருகின்றதுமான அர்ஜுனனுடைய ரதத்தைத் தைரியமுள்ள மனத்துடன் கண்டார்கள். பிறகு, அர்ஜுனன், ரதத்தில் நர்த் தனம் செய்கிறவன்போல இருந்துகொண்டு, காண்டீவத்தை நாணொலி இடும்படிசெய்து ஆகாயத்தையும் திக்குகளையும் திக் குக்கோணங்களையும் பாணங்களால் நெருங்கியவையாகச் செய் தான். அவன் அப்பொழுது விமானங்கள் போன்றவைகளும், ஆயு தங்களையும் த்வஜங்களையுமுடையவைகளும், ஸாரதிகளையுடையவை களுமான ரதங்களைக் காற்று மேகங்களை நாசம்செய்வதுபோலப் பா ணங்களால் நாசஞ்செய்தான். அவன் யானைகளையும் யானைவீரர் களையும் கொடித்துணிகளையும் ஆயுதங்களையும் கொடிமரங்களையும் குதிரைவீரர்களையும் குதிரைகளையும் காலாட்களையும் அம்புகளால் யமலோகத்தையடையும்படி செய்தான். யமன்போலக் கோபங் கொண்டவனும் தடுக்கமுடியாதவனும் மஹாரதனுமான, அந்த அர் ஜுனனைத் துர்யோதனன் ஒருவனே நேராகச்செல்லுகின்ற பாணங்

களால் அடித்துக்கொண்டு எதிர்த்தான். அர்ஜுனன், துர்யோதன னுடையவில்லையும் ஸாரதியையும் குதிரைகளையும் கொடிமரத்தை யும் ஏழுபாணங்களால் நாசஞ்செய்து, ஒரு பாணத்தினாலே குடை யையும் வெட்டினான். உயிரைவாங்கக்கூடிய சிறந்ததான ஒன்பதா வது பாணத்தையும் வில்லில்பூட்டித் துர்யோதனன்மீது பிரயோ கித்தான். அந்தஅம்பை அஸ்வத்தாமா ஏழாகத்துண்டாடினார். பிறகு, பாண்டவன் அம்புகளால் துரோணபுத்திரருடையவில்லை வெட்டி ரதத்தில்பூட்டப்பட்ட குதிரைகளையும் கொன்று கிருபரு டைய மிகக்ரூரமான அந்தவில்லையுந் துண்டாக்கினான். கிருதவர் மாவினுடைய வில்லையும் கொடிமரத்தையும்வெட்டி, குதிரைகளை யும் அப்பொழுது கொன்று, துர்சாஸனனுடைய வில்லையும் வெட்டி, ராதாபுத்திரனை கர்ணனை எதிர்த்தான். பிறகு,கர்ணன்,ஸாத்யகியை விட்டுவிட்டு அர்ஜுனனை மூன்றுபாணங்களால் விரைவுடன் அடி த்து, இருபதுபாணங்களாலே கிருஷ்ணனையும் பார்த்தனையும் மறு படியும் மறுபடியும் அடித்தான். யுத்தத்தில், அனேக அம்புகளை யெய்து பகைவர்களை நாசம்செய்கின்ற கர்ணனுக்குக் கோபங்கொண் டிருக்கிற இந்திரனுக்கு வாட்டமுண்டாகாததுபோல வாட்டமுண் டாகவில்லை. பிறகு, ஸாத்யகி எதிர்ப்பட்டுக் கர்ணனைக் கூர்மையுள்ள வைகளும் கொடுமையுள்ளவைகளுமான தொண்ணூறொன்பது பாணங்களால அடித்து மறுபடியும் நூறுபாணங்களாலும் அடித் தான். பிறகு, பார்த்தர்களைச்சேர்ந்த எல்லாச் சிறந்தவீரர்களும் கர் ணனைப் பீடித்தார்கள். யுதாமன்யு, சிகண்டி, திரௌபதீபுத்திரர்கள், பிரபத்ரகர்கள்,உத்தமௌஜஸ, யுயுத்ஸு,நகுலஸஹதேவர்கள்,திருஷ் டத்யும்னன், சேதிதேசத்துவீரர்கள், காரூசர்கள், மச்சதேசத்து வீரர்கள், கேகயர்கள் ஆகிய இவர்களுடைய சேனையும் பலசாலியான சேகிதானனும் நல்லவிரதத்தையுடைய தர்மராஜருமாகிய இவர் களனைவர்களும், தேர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் உக் கிரமான பராக்கிரமமுள்ள காலாட்களாலும், கர்ணனை யுத்தத்தில் சூழ்ந்துகொண்டு அவனைக் கொல்லவதில் நிச்சயங்கொண்டவர்களும் கடுஞ்சொற்களைப் பேசுகின்றவர்களுமாகிப் பற்பலவிதமான சஸ் திரங்களை இறைததார்கள். கர்ணனனவன் அந்தச்சஸ்திரவர்ஷத் தைக் கூர்மையான அம்புகளால் பலவாறாகத் துண்டாடி அஸ்திர வீர்யத்தினால் காற்று மரத்தையொடித்துஅடித்துக்கொண்டுபோவது போலத் தூரத்தில் விலக்கித்தள்ளினான். அவன் அதிககோபங்

கொண்டு தேராளிகளையும் யானைக்காரர்களுடன்கூடின யானைகளையும் குதிரைக்காரர்களுடன்கூடின குதிரைகளையும் காலாட் கூட்டங்களையும் வருத்துபவனைக் காணப்பட்டான். அவனுடைய அஸ்திரதேஜஸினாலே கொல்லப்படுகின்ற அந்தப் பாண்டவர்களுடைய சேனையானது, பெரும்பான்மையாகச் சஸ்திரங்களையும் வாகனங்களையும் தேகங்களையும் பிராணனையும் இழந்ததும் யுத்தத்தினின்று திரும்பினதுமாகியது. பிறகு, அர்ஜுனன் நகைத்துக்கொண்டு கர்ணனுடைய அஸ்திரத்தை அஸ்திரத்தினால் தடுத்து அம்புமழைகளாலே திசையையும் ஆகாயத்தையும் பூமியையும் மூடினான். சில பாணங்கள் உலக்கைகள்போலவும் பரிகாயுதங்கள்போலவும் மற்றப்பாணங்கள் சதக்நிகள்போலவும் சிலபாணங்கள் உக்கிரமான வஜ்ராயுதங்கள்போலவும் விழுந்தன. அவைகளால் கொல்லப்படுகின்றதும், காலாட்களையும் குதிரைகளையும் ரதங்களையும் யானைகளையுமுடையதுமான அச்சேனையானது கண்களைமூடிக்கொண்டு மிகச்சுழன்றது; அலறவும் அலறியது. அப்பொழுது, காலாட்படைகளும் குதிரைகளும் யானைகளும் நிச்சயமாக மரணத்தை விளைவிக்கத்தக்க யுத்தத்தை நாடின. (அவைகள்,) பாணங்களால் அடிக்கப்படுகின்றவைகளும் துன்பமுற்றவைகளும் பயந்தவைகளுமாக அப்பொழுது ஓடின. அப்பொழுது, ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான உம்மைச்சேர்ந்த வீரர்கள், யுத்தத்தில் அதிகப்பற்றுதலுடனிருக்குங்காலத்தில், ஸூர்யன் அஸ்தகிரியையடைந்து மறைந்தான். மஹாராஜரே ! அதிகமாகத் தோன்றியிருக்கின்ற இருளினாலும் புழுதியினாலும் நல்ல வஸ்துவையோ அல்லது கெட்ட வஸ்துவையோ ஒன்றையும் கண்டோமில்லை. பாரதரே ! சிறந்த வில்லாளிகளான அவர்கள் ராத்திரி யுத்தத்தில் பயந்தவர்களாக எல்லா யுத்தவீரர்களோடும் சேர்ந்து அந்த யுத்தத்தினின்று விலகிச்சென்றனர். அரசரே ! அப்பொழுது, ஸூர்யாஸ்தமய காலத்தில் கௌரவர்கள் ஓடவே, பார்த்தர்கள் வெற்றியடைந்து மனக்களிப்புள்ளவர்களாகத் தங்கள் பாசறையைக்குறித்துச் சென்றார்கள். அந்த வீரர்களாலே யுத்தமானது நிறுத்தப்பட்டவுடனே, சேனையில் ஒன்று கூடியிருக்கின்ற எல்லா அரசர்களும், வாத்யகோஷங்களோடும் கர்ஜனங்களோடுகூடின பலவிதமான ஸிம்மநாதங்களோடும் பிறர்களைப் பரிஹஸிக்கின்றவர்களும் அச்சுதனையும் அர்ஜுனனையும் புகழ்கின்றவர்களுமாகிப் பாண்டவர்கள்விஷயத்தில்ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். பிறகு, யுத்தம் நிறுத்தப்படவே, அந்த யுத்த களத்தில்,

பாண்டவர்கள், ஸந்தோஷமுடையவர்களானார்கள். அரசர்கள் இரவில் பாசறையை யடைந்து வஸித்தார்கள். பிறகு, கோரரூபமுடையதும் ருத்திரனுடைய உத்தியானவனம்போன்றதுமான யுத்தகளத்தை ரக்ஷஸ்ஸுகளும் பிசாசங்களும் துஷ்ட விலங்குகளும் கூட்டங் கூட்டமாக வந்து நாடின" என்று கூறினான்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

### (கர்ணன் துர்யோதனனை நோக்கித் தனக்குச் சல்லியன் ஸாரதியாக இருக்கவேண்டுமென்று கேட்டது.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! அர்ஜுனன் தன்னிஷ்டப்படி நம்மைச்சேர்ந்தவர்களனைவர்களையும் நிச்சயமாகக் கொன்றுவிட்டான். * ஆததாயியான இந்த அர்ஜுனனுடைய யுத்தத்தில் அந்தகனும் விடுபடமாட்டான். பார்த்தன் ஒருவனாகவே ஸுபத்திரையை அபகரித்துவந்தான், ஒருவனாகவே அக்னியை (காண்டவவனத்தில்) திருப்தி செய்தான்; ஒருவனாகவே இந்தப்பூமியை ஜயித்து அரசர்களையும் கப்பங்கட்டுகிறவர்களாகச் செய்தான். திவ்யமான வில்லையேந்தியவனை அர்ஜுனன் ஒருவனாகவே நிவாதகவசர்களைக்கொன்றான்; ஒருவனாகவே வேடவடிவத்துடன் நிற்கின்ற பரமசிவனோடு போர்புரிந்தான்; ஒருவனாகவே (கந்தர்வயுத்தத்தில்) பரதவம்சத்தில் பிறந்தவர்களான துர்யோதனாதிகளை ரக்ஷித்தான்; ஒருவனாகவே ஈஸ்வரனை ஸந்தோஷிப்பித்தான். அந்த அர்ஜுனன் ஒருவனாலேயே உக்கிரமான பராக்கிரமமுள்ளவர்களான என்னைச்சேர்ந்த அனைவர்களும் ஜயிக்கப்பட்டார்கள். அவர்கள் நிந்திக்கத்தக்கவர்களல்லர். அவர்கள் புகழத்தக்கவர்களே. அவர்கள் செய்ததைச் சொல்லு. ஸூத! அதற்குப்பிறகு, அப்பொழுது துர்யோதனன் யாது செய்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அடிக்கப்பட்டவர்களும் வெட்டப்பட்ட அவயவங்களையுடையவர்களும் வாகனங்களினின்று கீழேதள்ளப்பட்டவர்களும் கவசங்களையும் ஆயுதங்களையும் வாகனங்களையும் இழந்தவர்களும் தீனஸ்வரம் அடைந்தவர்களும் மனவருத்தமுற்றவர்களும் பகைவர்களாலேதோல்வியடைவிக்கப்பட்டவர்களும் மானிகளுமான உன்னவர்கள், பல்லுடைந்து விஷத்தையிழந்து காலால் மிதிக்கப்பட்ட ஸர்ப்பங்கள்போல

---

* விராடபர்வம் 175-வது பக்கம் குறிப்பிற் காண்க.

வீரியமற்றவர்களாகச் சேனை தங்கியிருக்குமிடத்தை யடைந்து மறுபடியும் மந்திராலோசனைசெய்தார்கள். பிறகு, கர்ணன் கோபமூண்டு ஸர்ப்பம்போல் மூச்சுவிட்டுக்கொண்டு கையினாலே கையைப் பிசைந்து உம்முடைய குமாரனைப்பார்த்துக்கொண்டு அந்தக் கௌரவர்களுக்குச் சொல்லலானான். 'ராஜனே! அர்ஜுனன் முயற்சியுள்ளவன்; உறுதியுடையவன்; ஸமர்த்தன்; எப்பொழுதும் சாமர்த்தியமுடையவன். கிருஷ்ணனும் ஸமயத்துக்குத் தக்கபடி அந்த அர்ஜுனனுக்குப் போதித்துக்கொண்டிருக்கின்றான். நாம் அவனால் இப்பொழுது அஸ்திரப்பிரயோகத்தினால் விரைவில் வஞ்சிக்கப்பட்டோம். நான் அவனுடைய விருப்பமனைத்தையும் நாளை தினம் நாசம்செய்யப்போகிறேன்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்ட அந்தத் துர்யோதனன், 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு, உத்தமமான அரசர்களுக்கு அனுமதிகொடுத்தான். அனுமதிகொடுக்கப்பெற்றவர்களான அரசர்களனைவர்களும் தம்வாஸஸ்தானங்களை அடைந்தார்கள். அவர்கள் அந்தராத்திரி இனிது வாஸம்செய்து மனக்களிப்புடன் யுத்தத்திற்காக வெளியேறிப் புறப்பட்டார்கள். அவர்கள், கௌரவர்களுள் சிறந்தவனான தர்மராஜனால் ப்ருஹஸ்பதிசுக்கிராசார்யர் இவர்களுடைய கொள்கைப்படி ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற தாம் ஜயிக்கமுடியாததுமான வியூகத்தைப் பார்த்தார்கள். பிறகு, சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனான துர்யோதனன் அப்பொழுது அதிகவீர்யமுடையவனும் காளையினுடையதிமிலுபோன்ற தோள்களுள்ளவனும் பகைவர்களை நாசம்செய்பவனுமான கர்ணனை நினைத்தான். அரசனான துர்யோதனனுடைய மனமானது, யுத்தத்தில் இந்திரனுக்கு ஒப்பானவனும் பலத்தில் தேவதைகளுடைய கூட்டங்களுக்கு ஸமானனும் வீர்யத்தில் கார்த்தவீர்யனுக்கு ஒப்பானவனுமான கர்ணனை நாடியது. எல்லாச்சைனியங்களுடைய மனமும், பிராணஸங்கடகாலங்களில் பந்துவைநாடுவதுபோல சிறந்த வில்லாளியும் ஸூதபுத்திரனுமான கர்ணனையே நாடியது" என்று கூறினான்.

திருதராஷ்டிரன், "ஸூத! அதற்குப்பிறகு, உங்களுடைய மனம் விகர்த்தனகுமாரனை கர்ணனை நாடியிருக்கும்பொழுது, மந்தனான துர்யோதனன் யாதுசெய்தான்? யுத்தம்நிறுத்தப்பட்டு மறுபடியும் சேனைகளால யுத்தமானது தொடங்கப்பட்டபொழுது, குளிரினால் துன்பத்தை அடைந்தவர்கள் சூரியனைப்பார்ப்பதுபோல ராதேயனைப் பார்த்தீர்களா? ஸஞ்சய! அந்தயுத்தத்தில் பாண்டவ

னால் அதிகமாகப்பீடிக்கப்பட்ட துர்யோதனனையும் மஹாயுத்தத்தில் பராக்கிரமமுள்ளவர்களான பாண்டுபுத்திரர்களையுங் கண்டு விகர்த்தனகுமாரனான கர்ணன் அவ்விடத்தில் எவ்வாறு போர்புரிந்தான்? பாண்டுபுத்திரர்களனைவர்களும் அந்தயுத்தகளத்தில் ஸூதபுத்திரனான கர்ணனோடு எவ்வாறு போர்புரிந்தார்கள்? மிக்கபுஜபலமுள்ள கர்ணனொருவனே ஸ்ருஞ்சயர்களோடுகூடின பார்த்தர்களைக் கொல்வான். கர்ணனுடையபுஜபலமானது யுத்தத்தில் இந்திரனுக்கும் திருமாலுக்கும் ஸமமானது. மஹாத்மாவான அந்தக்கர்ணனுடைய சஸ்திரங்கள் கோரமானவை. அவனது வல்லமையும் கோரமானது. அவனை ஆதாரமாகக்கொண்டு அரசனான துர்யோதனன் யுத்தத்தில் மதங்கொண்டிருக்கிறான். பிறகு, பாண்டவனாலே அதிகமாகத் துன்பமடையும்படி செய்யப்பட்ட துர்யோதனனையும் பராக்கிரமசாலிகளானபாண்டுபுத்திரர்களையுங்கண்டு, மஹாரதனானகர்ணன் உத்ஸாஹமடைகிறான். அறிவற்றவனான துர்யோதனன் யுத்தத்தில் கர்ணனை ஆதாரமாகக்கொண்டு புத்திரர்களோடும் கேசவனோடும்கூடின பார்த்தர்களை ஜயிப்பதற்கு மறுபடியும் உத்ஸாஹமடைகிறான். ஐயனே! ஸுபலனுடையகுமாரனான சகுனியை நீதிமானென்றெண்ணுகிறவனும், அவ்வாறே கர்ணனையும் யுத்தத்தில் ஒப்பற்றவனும் தேவர்களாலுங்கூட ஸகிக்கமுடியாதவனும் பார்த்தனைக்காட்டிலும் மேற்பட்டவனுமென்று எண்ணுகிறவனுமான அந்தத்துர்யோதனனுடைய உள்ளத்தில் கர்ணன் ஒருவனே யுத்தத்தில் ஸோமகர்களுடன்கூடின பார்த்தர்களை ஜயித்துவிடுவானென்கிற இவ்விதமானஎண்ணம் எப்பொழுதும் நிலைபெற்றிருக்கின்றது. மந்தனான துர்யோதனன் எப்பொழுதுமே இவ்விஷயத்தை என் முன்னிலையிலும் புகழ்ந்துகொண்டிருக்கிறான். பராக்கிரமசாலியான கர்ணன், யுத்தத்தில் பாண்டுபுத்திரர்களை மீறமுடியாமையால், நிச்சயமாகத் தெய்வம் பிரதானமானது. அந்தோ! இது பெருங்கஷ்டம்; ஆச்சரியம். சூதாட்டத்தினுடையமுடிவானது இப்பொழுது கோரமாகவிருக்கின்றது. ஸஞ்சய! தீவிரமும் கோரமுமான முளைபோன்றவைகளும் துர்யோதனனால் உண்டுபண்ணப்பட்டவைகளுமான பலவாறான துக்கங்களை நான் ஸகித்தேன். அப்பா! ஸுபலபுத்திரனான சகுனி நீதிமானென்று அப்பொழுது எண்ணப்படுகிறான். கர்ணனும்நீதிமானென்றே எண்ணப்படுகிறான் கோபமுள்ளவனும் அரசனுமானதுர்யோதனனும் அவனை எப்பொழுதும் அனுஸரிக்கின்றான். ஸஞ்சய! இவ்வாறாக மஹாயுத்தங்கள் நடந்துவரு

கையில் நாள்தோறும் என்புத்திரர்களைக் கொல்லப்பட்டவர்களாகவும் தோல்வி அடைவிக்கப்பட்டவர்களாகவும் கேட்டேன். யுத்தத்தில் பாண்டவர்களுள் ஒருவனாவது கொல்லப்படவில்லையாம். பாண்டவர்கள் (கௌரவசேனையின்மத்தியத்தில்) ஸ்திரீகளுடைய மத்தியில்போலப் பிரவேசிக்கின்றார்கள். (மனிதபலத்தைக்காட்டிலும்) தெய்வபலமே மேலானது" என்று கூறினான்.

ஸஞ்சயன் சொல்லலானான். "ராஜரே! இவற்றிற்குக் காரணம் முன்புநடந்த பெரிய தர்மங்களென்று நினைத்துக்கொள்ளும். ஒருவன் சென்றதான எந்தக்காரியத்தைப்பற்றிப் பிறகு ஆலோசிக்கிறானோ அந்தக் கார்யமும் அவனுக்கு ஒருகாலும் கைகூடுவதில்லை; அவனும் மனக் கவலையினாலே அழிந்துபோகிறான். விவேகமுடையவரான உம்மால் யுக்தாயுக்த விசாரணையானது முந்தியே செய்யப்படாதகாரணத்தினால் அவ்விதமான இந்தக்கார்யமானது உம்மைவிட்டு வெகுதூரம் விலகி விட்டது. அரசரே! பாண்டவர்களோடு யுத்தம்செய்யவேண்டாமென்று பலவாறாகச் சொல்லப்பட்டீர். பாண்டவர்களிடத்திலுள்ள பகைமையினாலே அந்தவார்த்தையை நீர் ஏற்றுக்கொள்ளவில்லை. உம்மால் பாண்டுபுத்ரர்கள்விஷயத்தில் கோரமானபாவங்கள் செய்யப்பட்டன. உம்நிமித்தமாக அரசர்களுக்கும் வீரர்களுக்கும் கோரமான க்ஷயம் நேர்ந்திருக்கின்றது. பரதசிரேஷ்டரே! சென்றுபோன அந்த விஷயத்தைப்பற்றி நீர் இப்பொழுது வியஸனமடையவேண்டாம். கோரமான எல்லாக்கஷ்டத்தையும் நடந்தபடி சொல்லுகிறேன்; கேளும். கோரமான ஓராபத்தானது உரைக்கப்படப்போகிறது. இரவு விடிந்தவுடனே, மஹாபாகுபலமுள்ளவனான கர்ணன் துர்யோதன ராஜனைநோக்கிச் சென்றான்; அவனை அணுகிப் பின்வருமாறு கூறலானான்.

"ராஜனே! புகழ்ச்சிபெற்ற பாண்டவனோடு இப்பொழுது நான் யுத்தத்திற்காக எதிர்க்கப்போகிறேன். அந்த வீரனை நான் கொல்லப் போகிறேன்; அல்லது அவனாவது என்னைக்கொல்வான். பரதகுலத்தில் பிறந்த ராஜனே! எனக்கும் அர்ஜுனனுக்கும் காரியங்கள் பலவாறாக இருந்ததினால் எங்கள் இருவர்களுக்கும் ஸந்திப்பு உண்டாகவேயில்லை. ராஜனே! என்புத்திக்குத்தக்கபடியான என்னுடைய இந்தவாக்கியத்தை நீகேள். பாரத! யுத்தத்தில் நான் பார்த்தனைக்கொல்லாமல்திரும்பப்போகிறதில்லை. இந்தச்சேனையில உத்தமர்களானவீரர்கள் கொல்லப்படவும், நானும் யுத்தத்தில் ஸந்நத்தனாகிறகவும், இந்திரனால் கொ

க்கப்பட்டசக்தியை இழந்தவனை என்னைப் பார்த்தன் யுத்தத்திற்காக எதிர்க்கப்போகிருன். ஜனேஸ்வர ! ஆதலால்,என்னுடையதும் அர்ஜுனனுடையதுமான சிறந்த ஆயுதங்களுடைய வெற்றியைத் தரும் வீர்யத்தை நீ தெரிந்துகொள். பெரிதானகாரியத்தை நாசஞ்செய்வதிலும் லாகவத்திலும் தூரத்திலிருந்து லட்சியத்தில் தாக்கும்படி செய்வதிலும் ஸாமர்த்தியத்திலும் அஸ்திரங்களைப்பிரயோகிப்பதிலும் ஸவ்யஸாசியானவன் எனக்குநிகராகான். பாரத ! தேகவன்மையிலும் மனோபலத்திலும் அஸ்திரசிக்ஷையிலும் பராக்கிரமத்திலும் லக்ஷியத்தில்பாணங்கள்போய்த்தாக்குவதை நிச்சயிக்கும்விஷயத்திலும் ஸவ்யஸாசி எனக்கு நிகராகான். எல்லாஆயுதங்களுக்கும்மேலானதும், விஜயம் என்று பிரஸித்திபெற்றதுமான அவ்விதமான வில்லானது இந்திரனுக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொண்ட விஸ்வகர்மாவினலே செய்யப்பட்டது. ராஜனே! இந்திரன் எந்தவில்லினலே அஸுரர்களுடையகூட்டங்களை ஜயித்தானே, எந்த வில்லினுடையசப்தத்தினலே அஸுரர்களுக்குப் பத்துத்திசைகளிலும் மயக்கமுண்டுபண்ணப்பட்டதோ அந்த ஸர்வோத்தமமான வில்லை இந்திரன் பரசுராமருக்குக் கொடுத்தான். விற்களுள்சிறந்த அந்தவில்லைப் பரசுராமர் எனக்குக்கொடுத்தார். அந்தவில்லினலே ஜயசீலர்களுள் உத்தமனும் மஹாபாகுபலமுள்ளவனுமான அர்ஜுனனை (எதிர்த்துப்) போர்புரியப்போகிறேன். இந்திரன் எவ்வாறு யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருக்கின்ற எல்லா அஸுரர்களையும் கொன்றானே அவ்வாறே யுத்தத்தில் எல்லாப்பாண்டவர்களையும் நான் ஜயிக்கப்போகிறேன். பூமியை இருபத்தொருமுறை ஜயித்ததும் பரசுராமராலே கொடுக்கப்பட்டதும் கோரமுமான அந்தவில்லானது காண்டீவத்தைக்காட்டிலும் மேலானது. பிருகுகுலத்தில்பிறந்த பரசுராமர் அந்த வில்லினுடைய திவ்யமானசெய்கைகளைச் சொல்லியிருக்கிறார். அந்தத்தனுஸைப் பரசுராமர் எனக்குக்கொடுத்தார். அதனல் பாண்டவனோடு போர்புரியப்போகிறேன். துர்யோதன ! ஜயசீலர்களுள் உத்தமனும் வீரனுமான அர்ஜுனனை யுத்தத்தில் பந்துக்களோடு கொன்று யான் உன்னை இப்பொழுது ஆனந்தப்படுத்தப்போகிறேன். ராஜனே ! மலைகளோடும் காடுகளோடும் தீவுகளோடும்கூடியதும், வீரர்கள் கொல்லப்பட்டதும், ஸமுத்திரங்களினல் சூழப்பட்டதுமான பூமியானது இப்பொழுது உனது புத்திர பௌத்திரர்களிடம் நிலைபெற்றதாகப்போகிறது. நன்றாகத் தர்மத்தில் பற்றுதலுள்ளவனும் மனத்

தை அடக்கினவனுமான ஒருவனுக்கு ஸித்தியுண்டாவதுபோல் (நமக்குக்) கார்யஸித்தி நிச்சயம். இப்பொழுது விசேஷித்து உன்னுடைய பிரியத்தின்பொருட்டு எனக்குச் செய்யத்தகாத காரியம் இல்லை. மரமானது எவ்வாறு நெருப்பை ஸஹிப்பதற்குச் சக்தியற்றதோ அவ்வாறே என்னுடைய பராக்கிரமத்தைத் தாங்குவதற்கு அந்த அர்ஜுனன் சக்தியுள்ளவனல்லன். எதனாலே நான் பல்குனனைவிடக் குறைந்திருக்கிறேனென்னும் விஷயம் நான் அவசியம் சொல்லத்தக்கதாயிருக்கிறது. அந்த அர்ஜுனவில்லினுடைய நாண்கயிறானது தெய்வத்தன்மையுள்ளது; அவ்வாறே இரண்டு பெரிய அம்புத்தூணிகளும் குறையாதவைகள். அந்த அர்ஜுனனுக்கு ஸாரதி கோவிந்தன். எனக்கு அவ்விதமான ஸாரதி இல்லை. அந்த அர்ஜுனனுக்குத் திவ்யமானதும் யுத்தத்தில் ஜயிக்கமுடியாததுமான காண்டீவம் என்கிற சிறந்த வில்லிருக்கிறது. எனக்கும் திவ்யமானதும் மஹிமைபொருந்தினதும் விஜயத்தைக் கொடுக்கக்கூடியதுமான உத்தமமான வில்லிருக்கிறது. ராஜனே! அப்படிப்பட்ட வில்லினால் பார்த்தனைக்காட்டிலும் யான் மேலானவன். எந்தவிதத்தினால் வீரனான பாண்டவன் மேலானவனென்பதை என்னிடத்தினின்று தெரிந்துகொள். (அர்ஜுனனுக்கு) ஸர்வலோகங்களாலும் நமஸ்கரிக்கப்படுகின்றதாசார்ஹன் (குதிரைக்) கடிவாளங்களைப் பிடிக்கிறான். ஸ்வர்ணாலங்காரத்துடன்கூடினதும் சிறந்ததுமான ரதமானது அக்னியினால் கொடுக்கப்பட்டிருக்கின்றது. வீரனே! குதிரைகளும் எவ்விதத்தாலும் கொல்லப்படத்தகாதவைகள்; மனத்தினுடைய வேகம்போன்ற வேகமுடையவைகள். அற்புதமானதும் காந்தியுள்ளதுமான வானரக்கொடியும் பயங்கரமாயிருக்கின்றது. உலகத்தைப்படைத்தவனான கிருஷ்ணன் அந்த ரதத்தைப் பாதுகாக்கின்றான். இம்மூன்றுவிஷயங்களாலும் குறைந்தவனான நான் பாண்டுபுத்திரனோடு போர்புரிவதற்கு விரும்புகிறேன். இந்தச் சல்லியனோ கிருஷ்ணனுக்கொப்பானவன்; யுத்தத்தில் ஸமர்த்தன். இவன் எனக்கு ஸாரத்யம் செய்வனேயாகில் உனக்கு ஜயம் நிச்சயமாக உண்டாகும். பகைவர்களால் எளிதில் ஜயிக்கமுடியாதவனான சல்யன் அப்படிப்பட்ட எனக்கு ஸாரதியாக வேண்டும். எனக்கு நாராசங்களையும், கழுகிறகுகள்பூண்ட பாணங்களையும், வண்டிகள் சுமந்துகொண்டுவரட்டும். ராஜேந்திர! பரதஸ்ரேஷ்டனே! உத்தமமான குதிரைகள் பூட்டிய சிறந்த ரதங்களும் பின்புறத்தில் எப்பொழுதும் என்னைத்தொடர்ந்துகொண்டே வரட்

டும். இவ்விதமான குணங்களாலே நான் பார்த்தனைக் காட்டிலும் மேலானவனுவேன். சல்யனும் கிருஷ்ணனைக்காட்டிலும் மேலான வன். அர்ஜுனனைக்காட்டிலும் நானும் மேலானவன். பகைவீரர் களைக் கொல்லுகிறவனுன தாசார்ஹன் எவ்வாறு அச்வஹ்ருதயத்தை அறிகிருனே அவ்வாறே மஹாரதனுன சல்யனும் அச்வஹ்ருதயத் தை நன்ருக அறிந்திருக்கிருன். பாகுபலத்தில் மத்திரராஜனுக்கு நிக ரானவன் ஒருவனுமில்லை. அவ்வாறே அஸ்திரத்தில் எனக்கு நிக ரானவன் ஒருவில்லாளியுமில்லை. அவ்வாறே அச்வஸ்வபாவத்தை அறியும்விஷயத்தில் சல்யனுக்கு ஈடானவன் ஒருவனுமில்லை. எனது ரதமானது கிருஷ்ணனுடைய ரதத்தைக்காட்டிலும் மேன்மைபெற்ற தாகிவிடும். இவ்வாறு செய்யப்பட்டால் நான் அர்ஜுனனைக் காட்டி லும் குணங்களால் சிறப்புற்றவனுவேன். கௌரவரிற்சிறந்தவனே! நான் யுத்தத்தில் பல்குனனை ஜயிப்பேன். இந்திரனுடன்கூடின தேவர் களும் எதிர்ப்பதற்கு வல்லமையுள்ளவர்களாகார்கள். மஹாராஜனே! சத்துருக்களைத தவிக்கச்செய்பவனே! இது உன்னுல் நிறைவேற் றப்படவேண்டுமென்று விரும்புகிறேன். இவ்விதமான என்னு டைய விருப்பமானது நிறைவேற்றப்படவேண்டும். உங்களுக்கு இச்சமயமானது தாண்டிப்போகவேண்டாம். இவ்வாறு செய்யப் படுமானுல் உன்னுல் எனக்கு எல்லாம் செய்யப்பட்டதாகும். பாரத! பிறகு, யுத்தத்தில் என்னசெய்வேனென்பதைப் பார்ப்பாய். ஸர்வ விதத்திலும் யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருக்கின்ற பாண்டவர்களை ஜயிக்கப்போகிறேன். யுத்தத்தில் தேவாஸுரர்களுங்கூட என்னை எதிர்ப்பதற்குச் சக்தியற்றவர்கள். ராஜனே! மனுஷ்யஜாதியில்பிறந்த பாண்டுபுத்திரர்கள் எவ்வாறு எதிர்ப்பார்கள்?" என்றுகூறினுன்.

யுத்தத்தில் பிரகாசிக்கின்றவனுன கர்ணன் இவ்வாறுசொல்ல, உம்முடையகுமாரன் மிக்கமனக்களிப்புள்ளவனுகிப் பிறகு ராதே யனைக் கொண்டாடி உரைக்கலானுன். 'கர்ண! நீ நினைக் கிறபடி இதனை இவ்விதமாகவே செய்வேன். யுத்தத்தில் அம்புப் பெட்டிகளுடன்கூடியவைகளும் குதிரைகளுடன்கூடியவைகளு மான ரதங்கள் நன்ருகப் பின்தொடரப்போகின்றன. உனக்காக வண்டிகள் நாராசங்களையும் கழுகிறகுகள்பூண்ட அம்புகளையும் சுமந்துகொண்டு செல்லும். கர்ண! உன்னை நாங்களும் எல்லா அரசர் களும் பின்தொடரப்போகிறோம்' என்று கூறினுன். மஹாராஜரே! பிரதாபசாலியும் ராஜாவுமான உம்முடைய குமாரன் இவ்வாறு

சொல்லிவிட்டு மத்திரராஜனை அடைந்து பின்வருமாறு வார்த்தை சொல்லலானான்.

---

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

**(துர்யோதனனுடைய வேண்டுதலால் சல்யன் கர்ணனுடைய ரதத்திலிருந்து ஸாரத்தியம் செய்ய அதிகப்பிரயாஸத்தோடு ஏற்றுக்கொண்டது.)**

மஹாராஜரே! இவ்வாறு உரைக்கக்கேட்ட பிரதாபசாலியான உம்முடையபுத்திரன் யுத்தத்தில் தேவஸைன்யங்களுக்கும் பயத்தையுண்டுபண்ணுகிறவனான மத்திரராஜனைப்பற்றி ராதேயன் சொல்லியவற்றையெல்லாம் விரைவாக அப்படியே செய்தான். யுத்தத்தில் மஹாரதனான மத்திரராஜனை நமஸ்காரஞ்செய்து வணக்கத்துடன் அவனருகில் நெருங்கி அன்புடனே பின்வரும் வாக்யத்தை உரைக்கலானான். 'உண்மையை விரதமாகக்கொண்டவரே! மஹாபாக்கியமுள்ளவரே! சத்துருக்களுக்குத் தாபத்தை விருத்திபண்ணுகிறவரே! மத்ரதேசத்துக்குத்தலைவரே! யுத்தத்தில் சூரரே! பகைவர்படைகளுக்குப்பயத்தைஉண்டுபண்ணுகிறவரே! பேசுந்திறமையுடையவர்களுள் உத்தமரே! எனக்குப்பிரியத்தைச் செய்வதின்பொருட்டும் நன்மையைச்செய்வதின்பொருட்டும் அவ்வாறே பார்த்தனுடைய வதத்தின்பொருட்டும் ராஜச்ரேஷ்டர்களுடைய மத்தியில் கர்ணன் சொன்னவார்த்தையை நீர்கேட்டிருக்கிறீர். உம்மை நான் ப்ரார்த்திக்கிறேன். ஒப்பற்ற வீர்யமுடையவரே! சத்துருபக்ஷங்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகிறவரே! ஆதலால், நான் இப்பொழுது உம்மை முடியினால் வணங்கி வேண்டுகிறேன். நல்ல விரதமுள்ளவரே! ஆதலால், பார்த்தனுடைய நாசத்தின்பொருட்டும் என்னுடைய நன்மையின்பொருட்டும், ருத்திரனை ப்ரம்மா காத்ததுபோல நீர் கர்ணனை எல்லா ஆபத்தினின்றும் காப்பாற்றும். ரதிகச்ரேஷ்டரே! அன்பினாலே ஸாரத்யம் செய்யவேண்டும். நீர் ஸாரதியாக இருப்பீரேயாகில் ராதாபுத்திரனான கர்ணன் என் பகைவர்களை ஜயிப்பான். மஹாபாக்யமுள்ளவரே! உம்மைத்தவிர வாஸுதேவனைப்போலக் கர்ணனுடைய குதிரைக்கடிவாளங்களைப்பிடிப்பவன் யுத்தத்தில் வேறொருவனுமில்லை. எவ்வாறு ப்ரம்மதேவர் மஹேச்வரரைக் காப்பாற்றினாரோ அவ்வாறே எல்லாவிதத்தாலும் கர்ணனைக்காப்பாற்றும். மத்ரேச்வரரே! விருஷ்ணி குலத்

'தில் பிறந்தவனை ஸ்ரீகிருஷ்ணன் எவ்வாறு பாண்டவனை எல்லா விதமான ஆபத்துக்களினின்றும் பாதுகாக்கிருனே அவ்வாறே இப்பொழுது நீர் ராதேயனைக் காப்பாற்றும். நம்முடையபலமானது பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், நீர், வீர்யமுடையவனும் போஜனுமான கிருதவர்மா, ஸுபலனுடைய புத்திரனைசகுனி, துரோணபுத்திரரான அஸ்வத்தாமா, நான் என ஒன்பதுவிதமாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இவற்றில், மஹாத்மாவான பீஷ்மருடைய பாகமும், துரோணருடையபாகமும் இல்லை. அவ்விருவர்களாலும் அவர்களுக்குரிய பாகங்களை மீறி என்சத்துருக்கள் கொல்லப்பட்டார்கள். தோஷமற்றவரே! பிராயம்முதிர்ந்தவர்களும் பெரியவில்லைக்கையிலேந்தியவர்களுமான அவ்விருவர்களும் யுத்தத்தில் கபடத்தால் கொல்லப்பட்டார்கள். அவர்கள் செய்யமுடியாத கார்யத்தைச் செய்து இம்மண்ணுலகினின்று விண்ணுலகமேகினர்கள். அவ்வாறு மற்றப்புருஷசிரேஷ்டர்கள் யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டார்கள். நம்மைச்சேர்ந்தவர்களனேகர்கள் சக்தியுள்ளவரையில் பூர்ணமான வல்லமையைக் காட்டிப் பிராணனை இழந்து பகைவர்களால் ஸ்வர்க்கத்தை அடையும்படி செய்விக்கப்பட்டார்கள். ராஜரே! அல்பர்களான பார்த்தர்களாலே அவ்விதமான என்னுடைய இந்தச்சேனை முந்தியே பெரும்பான்மையாக நாசம்பண்ணப்பட்டுவிட்டது. இப்பொழுதும் பார்த்தர்களாலே நாசம்பண்ணப்படுமென்பதில் என்ன ஸந்தேகம்? ராஜரே! குந்தீபுத்திரர்களோ பலசாலிகள்; அதிக தைர்யமுடையவர்கள்; உண்மையான பராக்கிரமமுள்ளவர்கள். மிகுந்திருக்கின்ற என்னுடைய சேனை கொல்லப்படாமலிருக்கும்படியான உபாயத்தை நீர் செய்யும். பிரபுவே! இந்தச்சேனையானது யுத்தத்தில் பாண்டவர்களால் வீரர்கள் அழிக்கப்பட்டதாகியது. புருஷஸ்ரேஷ்டரே! மஹாபாகுபலமுள்ள கர்ணன் ஒருவனும் ஸர்வலோகமகாரதரான நீரும் நமக்குப்பிரியத்தையும் நன்மையையும் செய்யும் விஷயத்தில் பற்றுதலுள்ளவர்களாயிருக்கின்றீர்கள். சல்ய மஹாராஜரே! கர்ணன் இப்பொழுது யுத்தரங்கத்தில் அர்ஜுனனோடு போர்புரிய விரும்புகிறான். மத்திரராஜரே! அந்தக்கர்ணனிடத்தில் ஜயவிஷயமான பேராவல் இருக்கின்றது. அந்தக் கர்ணனுக்குக் (குதிரைகளைக்) கடிவாளம் பிடித்து நன்குநடத்துபவன் புவியில் வேறொருவனுமில்லை. யுத்தத்தில் பார்த்தனுக்குக் கிருஷ்ணன் எவ்வாறு கடிவாளத்தைப்பிடித்துக் குதிரையை நடத்துகின்ற உத்தமஸாரதியாயிருக்கிருனே அவ்வாறே நீரும்

கர்ணனுடைய ரதத்தில் கடிவாளங்களைப் பிடித்துக் குதிரைகளை நடத்துகிறவீராகவேண்டும். ராஜரே! பார்த்தன் யுத்தத்தில் அந்தக் கிருஷ்ணனோடு கூடி அவனால் பாதுகாக்கப்பட்டு எந்தக்கார்யங்களைச் செய்கிறானோ, அவை (உம்மால்) பிரத்யக்ஷமாகக் காணப்படுகின்றன. முந்தி நம்முடைய யுத்தத்தில் அர்ஜுனன் பகைவர்களை இவ்விதமாகக் கொன்றுவிட்டான். கிருஷ்ணனோடு சேர்ந்திருக்கின்ற இந்த அர்ஜுனனுக்கு இப்பொழுது பராக்கிரமம் மிகுந்திருக்கின்றது. மத்ரநாதரே! கிருஷ்ணனோடு சேர்ந்து பார்த்தன் பெரிதான தார்த்தராஷ்டிரஸேனையை ஒவ்வொரு தினத்திலும் ஓட்டுகிறவனாகவே யுத்தத்தில் காணப்படுகிறான். மஹாகாந்தியுள்ளவரே! கர்ணனுடைய பாகமும் உம்முடைய பாகமும் மிகுந்திருக்கின்றன. அந்தப் பாகத்தைக் கர்ணனோடுகூடி நீர் ஒரேஸமயத்தில் இப்பொழுது நாசம் செய்வீராக. அருணனோடு சேர்ந்து ஸூர்யன் எவ்வாறு இருளைப் போக்குகிறானோ அவ்வாறே மஹாயுத்தத்தில் கர்ணனோடு சேர்ந்து பார்த்தனை ஸம்ஹாரம் பண்ணும். பாலசூரியனுடைய ஒளிபோன்ற ஒளியுடையவர்களான கர்ணசலயர் இருவர்களையும் உதித்திருக்கின்ற இரண்டு சூரியர்கள்போலக்கண்டு மஹாரதர்கள் யுத்தத்தில ஓடட்டும். சூரியனையும் அருணனையும் கண்டு இருள் எவ்வாறு நாசம் அடைகிறதோ அவ்வாறு பாஞ்சாலர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடுங் கூடின குந்திபுத்திரர்கள் நாசமடையட்டும். கர்ணன் ரதிகர்களுள்சிறந்தவன்; நீர் ஸாரத்யம் செய்பவர்களுள் சிறந்தவர். உங்கள் இருவர்களுக்கும் சேர்க்கையானது உண்டானதில்லை; (பிறகு) உண்டாகப்போவதுமில்லை. விருஷ்ணிகுலத்தில தோன்றிய கிருஷ்ணன் எல்லா நிலைமைகளிலும் பாண்டவனை எவ்வாறு பாதுகாக்கிறானோ அவ்வாறு நீர் விகர்த்தனகுமாரனான கர்ணனை யுத்தத்தில பாதுகாக்கக்கடவீர். யுத்தரங்கத்தில் போர்புரிகின்ற அந்தக்கர்ணனுக்கு நீர் ஸாரத்யம் செய்யவேண்டும். யுத்தத்தில் கிருஷ்ணன் அர்ஜுனனை எவ்வாறு எல்லாச்சத்துருக்களிடத்தினின்றும் பாதுகாக்கிறானோ அவ்வாறே நீரும் மஹாயுத்தத்தில ராதேயனைப் பாதுகாக்கவேண்டும். ராஜரே! இந்தக்கர்ணன் ஸாரதியான உம்மால் யுத்தத்தில் இந்திரனுடன் கூடின தேவர்களாலும் அவமதிக்கமுடியாதவனாவான். பாண்டவர்களால் எவ்விதம் ஜயிக்கப்படுவான்? என்வார்த்தையில் நீர் ஸந்தேகப் படவேண்டாம்' என்று கூறினான். மஹாபாகுபலமுள்ளவனும், குலத்தினாலும் ஐஸ்வரியத்தினாலும் சாஸ்திரஞானத்தினாலும் பலத்

தினுலும் இறுமாப்புள்ளவனுமான சல்யன், துர்யோதனனுடைய வார்த்தையைக்கேட்டுக் கோபமூண்டு இரண்டு கடைவாய்களேயும் (நாக்கினுல்) நக்கிக்கொண்டு அவனைநோக்கிப் புருவத்தை முக்கோணமாகும்படிசெய்துகொண்டும், இரண்டு கைகளேயும் அடிக்கடி உதறிக்கொண்டும், கோபத்தினுல் சிவந்திருக்கின்ற இரண்டுபெரிய கண்களேயும் புரட்டிவிழித்துக்கொண்டும் பின்வரும்வார்த்தையைக் கூறலானுன். 'ராஜேந்திர! இப்படிப்பட்டசெய்கையில் என்னை ஏவுதல் தகாது. இழிந்தகுலத்தில் பிறந்திருக்கின்றவனுக்கு உயர்குலத்தோன் அடிமைசெய்யத்தகுந்தவனல்லன். தன்னைவந்தடுத்தவனும் மிக்க கௌரவமுள்ளவனுமான மித்திரனை அதிகபாவியான ஒருவனுடைய வசத்தில் எவன் இருக்கும்படிசெய்கிறுனே அவனுடையஅக்காரியம் கீழோரை மேம்படுத்தலும் மேலோரைக் கீழ்ப்படுத்தலுமாகிற விபரீதச்செய்கையினுலுண்டான பாவமாகும். நான்முகனுலே பிராமணர்கள் முகத்தினின்று உண்டுபண்ணப்பட்டார்கள்; க்ஷத்திரியஜாதியானது கையினின்று (உண்டுபண்ணப்பட்டது.) பிறகு, வைஸ்யர்கள் இரண்டு தொடைகளினின்றும், சூத்திரர்கள் இரண்டு கால்களினின்றும் உண்டுபண்ணப்பட்டார்களென்று சுருதிகூறுகிறது. பாரத! அந்த நான்குவர்ணங்களிடத்தினின்றும் ஒன்றோடொன்று சேர்வதினுல் அனுலோம, பிரதிலோம, ஸாங்கர்யத்தினுலுண்டான ஜாதிவிசேஷங்களுடைய உட்பிரிவுகள் உண்டாகின்றன. க்ஷத்திரியர்கள் ரக்ஷகர்களும் தேடுகின்றவர்களும் கொடுக்கின்றவர்களுமாக எண்ணப்பட்டிருக்கின்ருர்கள். பிராம்மணர்கள் யாகம்செய்வித்தலாலும், அத்யயனம்செய்வித்தலாலும், தோஷமற்றபிரதிக்கிரஹங்களாலும்,லோகானுக்கிரஹத்தின்பொருட்டுப் பூமியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்ருர்கள். வைசியர்களுக்கு, கிருஷி, பசுக்காத்தல், தருமத்தை அனுஸரித்துத் தனத்தை அளித்தல் (இவைகள் செய்கைகளென்று) ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சூத்திரர்கள் பிரம்மக்ஷத்திரியவைசியர்களுக்கு வேலைசெய்பவர்களாக ஏற்படுத்தப்பட்டிருக்கிருர்கள். ஸூதஜாதியில்பிறந்தவர்கள், பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் வேலைசெய்பவர்களாக ஏற்படுத்தப்பட்டிருக்கிருர்கள். க்ஷத்திரியன் எவ்விதத்தினுலும் ஸூதர்களுடைய ஏவலைக் கேட்கமாட்டான். நான் முடியில அபிஷேகம் செய்விக்கப்பெற்றவன்; ராஜரிஷிகளுடைய குலத்தில் பிறந்தவன்; மஹாரதனென்று பிரஸித்திபெற்றவன்; வந்திகளால் ஸேவிக்கப்படத்தக்கவன்; ஸ்தோத்திரம் செய்

படத்தக்கவன். பகைவர்களுடைய படைகளை நாசம் செய்கிற
னை நான் இவ்வாறாக இருந்துகொண்டு யுத்தத்தில் ஸூதபுத்தி
னுக்கு ஸாரத்யம் செய்வதில் பிரியப்படவில்லை. காந்தாரீபுத்திர
அச்சமில்லாமல் ஸாரத்யம் செய்யும்படி சொல்லுகிறபடியால்
என்னை அவமதிக்கிறாய்; நிச்சயமாகவே அதிக ஸந்தேகம் கொண்
டிருக்கிறாய்; நம்மைக்காட்டிலும் கர்ணனை மேலானவனாக நினைத்
துக்கொண்டு அவனைப்புகழ்கிறாய். நான் யுத்தத்தில் ராதேயனை
எனக்குச் சமானனாக எண்ணவில்லை. ராஜனே! எனக்கு அதிக
மான வேலையைக்கட்டளையிடலாம். (ஸேனையின் ஓர்பிரிவை) யுத்
தத்தில் நாசம் செய்வதாகிய அதனைச்செய்து விட்டு, எவ்வித
மாக வந்தேனோ அவ்விதமாகவே திரும்பிச் செல்லுவேன். இல்லை
யேல், யான் ஒருவனாகவே உன்னுடைய சத்துருக்களோடு போர்புரி
வேன். யுத்தத்தில் பகைவர்களைக்கொளுத்துகிற என்னுடையவீர்யத்
தை இப்பொழுது நீ பார். குருகுலத்திலுதித்தவனே! என்னைப்
போன்ற ஒருமனிதன் உள்ளத்தில் மனோரதங்களைவைத்துக்கொண்டு
பிரவிர்த்திக்கமாட்டான். என்னைப்பற்றி நீ அதிகஸந்தேகப்படாதே
மேலும், என்விஷயத்தில் அவமானம் எவ்விதத்தாலும் செய்யத்தக்க
தன்று. பயங்கரமாயிருப்பவைகளும் வஜ்ராயுதத்தினுடைய உருவம்
போன்றஉருவமுள்ளவைகளும் திடமாயிருப்பவைகளுமான என்னு
டையகைகளைப் பார். ஆச்சரியகரமான என்னுடையவில்லையும் ஸர்ப்
பங்களுக்கொப்பான அம்புகளையும் காற்றைப்போன்ற வேகமுள்ள
நல்ல குதிரைகளையுடையதும் ஆச்சரியகரமுமான என்னுடைய
ரதத்தையும் பார். காந்தாரீபுத்திர! தங்கக்கட்டுக்களால் அலங்கரிக்
கப்பட்ட கதாயுதத்தையும் பார். யான் கோபித்துக்கொண்டேனே
யாகில், பூமியையும் பிளப்பேன்; பர்வதங்களையும் சிதற அடிப்பேன்;
கடல்களையும் வறறச்செய்வேன்; சூரியனையும் கீழேதள்ளுவேன்.
ராஜனே! இவ்விதமிருப்பவனும் பகைவர்களையழிப்பதில திறமை
யுள்ளவனுமான என்னை அதிரதனுக்குப்புத்திரனாயிருக்கிற ஸூத
னுக்கு ஸாரத்யம் செய்யும்விஷயத்தில ஏன் ஏவுகிறாய்? ராதேயன்
என்னுடைய பதினாறுவது அம்சத்திறகும் ஈடாகான். ராஜனே!
கர்ணனோடும் அர்ஜுனனோடும் ஜனார்த்தனனோடுங்கூடி மூன்று
உலகத்தார்களும் போரில் ஸன்னத்தர்களாக வந்தாலும் நான் அவர்
களையும் எவ்விதத்திலும் மதிக்கமாட்டேன். நான் இழிகுலத்தில்
பிறந்த ஒருமனிதனல்லேன். நான் உன்னால் அறியப்பட்டவனல்ல

வா? இவ்விதமான அவமானமானது எவ்விதத்தினாலும் எனக்குச் செய்யத்தக்கதன்று. காந்தாரீபுத்திர! இப்பொழுதே நான் உன்னிடம் அனுமதி பெற்றுக்கொள்ளுகிறேன். நாட்டைக்குறித்துச் செல்லு வேன். நான் ஸூதபுத்திரனுக்கு ஸாரத்யம்செய்யும் விஷயத்தை ஒருகாலும் ஏற்றுக்கொள்ளமாட்டேன். நான் இந்தஅவமானத்தை அடைந்து எவ்விதத்திலும் போர்புரியேன். காந்தாரீபுத்திர! நான் இப்பொழுதே உன்னிடத்தினின்று விடைபெற்றுக்கொள்ளுகிறேன்; என் வீட்டுக்குப் போகிறேன்' என்றான்.

மஹாராஜரே! யுத்தத்தில தேர்ச்சியுள்ளவனானசல்யன் இவ்வாறு சொல்லிவிட்டுக் கோபங்கொண்டு அரசர்களின்மத்தியிலிருந்து விரைவாக எழுந்திருந்து சென்றான். அந்தச்சல்யனை உம்முடைய குமாரன் நட்பினாலும் பஹுமானத்தினாலும் தடுத்து, ஸாமோபாயத்தினால் ஸர்வார்த்தஸாதகமும் மதுரமுமான வாக்யத்தைச் சொல்லலானான். 'சல்யமகாராஜரே! நீர்சொல்லியஇது இவ்வாறுதான்; ஸந்தேகமில்லை. ஜனேஸ்வரரே! என்னுடையகருத்தோ ஒன்றிருக்கின்றது. அதனை நீர் தெரிந்துகொள்ளும். மத்ரேஸ்வரரே! உம்மைக்காட்டிலும் கர்ணனும் மேலானவனல்லன்; மற்ற அரசர்களும் மேலானவர்களல்லர். கிருஷ்ணனும் யுத்தத்தில் எதிர்ப்பதற்கு வல்லமையுள்ளவனல்லன். புருஷஸ்ரேஷ்டர்களான உம்முடைய முன்னோர்கள் ஸத்யத்தையே சொல்லுகிறவர்கள். அதனால், நீர் * ஆர்த்தாயனி என்று சொல்லப்படுகிறீரென்பது என்னுடைய எண்ணம். பகைவர்களுடையகர்வத்தை அழிப்பவரே! நீர் யுத்தத்தில் பகைவர்களுக்கு மனத்தில் நாட்டப்பட்டமுளைபோலிருத்தலால உமக்குச் சல்யன்என்கிறபெயர் இப்புவியில்சொல்லப்படுகிறது. அளவற்ற தக்ஷிணைகளைக்கொடுப்பவரே! முன்பு உம்மால் இது கூறப்பட்டிருக்கிறது. தர்மங்களை அறிந்தவரே! எதெது உம்மால்சொல்லப்பட்டிருக்கிறதோ அதைஅதை எனக்காகநீர்செய்யும். உம்மைக்காட்டிலும் ராதேயனும் வீர்யமுடையவனல்லன். நானும் வீர்யமுடையவனல்லேன். இந்தயுத்தத்தில் (கர்ணனுடையரதத்தில பூட்டியிருக்கின்ற) உத்தமமான குதிரைகளுக்கு ஸாரதியாகும்படி நான்உம்மைவேண்டுகிறேன். குணங்களாலே தனஞ்சயனைக்காட்டிலும் கர்ணனை மேலானவனாக எண்ணுகிறேன். உம்மை வாஸுதேவனைக்காட்டிலும் மேலானவ

---

* ருதம=ஸத்யம்; ருதாயனர்=ஸத்யத்தை ஆதாரமாகக்கொண்டவர்; ஆர்த்தாயனி=அந்த மரபில்தோன்றியவன்.

ரென்று இவ்வுலகம் எண்ணுகிறது. புருஷஶ்ரேஷ்டரே! கர்ணன் அஸ்திரங்களாலே பார்த்தனைக்காட்டிலும் மேலானவன். நீங்கள் அஶ்வஹ்ருதயத்தை அறிவதிலும் அவ்வாறே பலத்திலும் கிருஷ்ணனைக்காட்டிலும் மேலானவர். மத்ரராஜகுமாரே! அதிகமான மனோதைர்யத்தையுடைய வாஸுதேவன் அஶ்வஹ்ருதயத்தை அறிகிறதைப்போல இருமடங்கு நீர் அறிகிறீர்' என்றான். சல்யன், 'காந்தாரீபுத்திர! கௌரவனே! சேனையின் நடுவில் நீ என்னைத் தேவகீபுத்திரனைக் காட்டிலும் மேலானவனென்று சொல்லுகிற காரணத்தினால் நான் உன்னிடத்தில் பிரீதியுள்ளவனாகிறேன். வீரனே! நீ எண்ணுகிறபடியே பாண்டவஶ்ரேஷ்டனான அர்ஜுனனோடு போர் புரிகின்ற கர்ணனுக்கு இதோ நான் ஸாரத்யம் செய்கிறேன். வீர! விகர்த்தனகுமாரனான கர்ணனைப்பற்றி எனக்கு ஓர்விதமான பிரதிஜ்ஞை இருக்கின்றது. அவனுக்கு எதிரில் என்னிஷ்டப்படி வார்த்தைகளை வெளியிடுவேன்' என்றான். பாரதரே! உம்முடைய புத்திரன், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லி அந்த மத்திரராஜனுடைய அபிப்பிராயத்தைக் கர்ணனிடம் கூறினான்.

---

## இருபத்துநான்காவது அத்யாயம்.

(துர்யோதனன் சல்யனுக்குத் திரிபுராஸுரர்கதையைச் சொல்லத் தொடங்கியதும், திரிபுராஸுரரால் ஹிம்ஸிக்கப்பட்ட தேவர்களுக்கு ருத்ரர் பிரஸன்னரானதும்.)

துர்யோதனன், 'மத்திரராஜரே! உங்களுக்கு நான் பின்னும் உரைக்கப்போகிறதைக் கேட்கவேண்டும். பிரபுவே! முன்பு தேவாஸுர யுத்தத்தில் நடந்ததும் மிக்க தவமுடையவரான மார்க்கண்டேயரால் என் பிதாவினிடத்தில் சொல்லப்பட்டதுமான வரலாறு அனைத்தையும் சொல்லுகின்றேன். என்னிடத்தினின்று நீர் மனத்தினால் தெரிந்துகொள்ளும். இவ்விஷயத்தில் நீர் ஆலோசனை செய்யவேண்டாம். அரசர்களெல்லாரும் மிக்க மதிமயக்கம் உண்டாய்விட்டது என்று நிச்சயம்செய்துகொண்டு தர்மார்த்தங்களுடைய நிச்சயங்களைச் செய்ய முயற்சிசெய்கின்றார்கள். தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பெரிய மேன்மையுண்டாயிருந்தது. அப்பொழுது கர்வமுடையவர்களான ஸிம்ஹிகாபுத்திரர்கள் தேவர்களை நாசம்செய்தார்கள். பலத்தினால் கர்வம்கொண்ட அந்தத் தானவர்கள் தேவர்களாலே தோல்வி அடைந்தவர்களாகச் செய்யப்பட்டார்கள்;

ராஜரே ! அச்சமயத்தில் முதலில் (தேவர்களுடைய துன்பத்துக்குக் காரணமான) தாரகாஸுரனுடைய யுத்தமானது நேர்ந்தது. அந்த யுத்தத்தில் தேவர்களால் அஸுரர்கள் ஜயிக்கப்பட்டார்களென்று நாம் கேட்டிருக்கின்றோம். தைதயர்கள் ஜயிக்கப்பட்டபொழுது தாரகாஸுரனுடைய மூன்றுபுத்திரர்களும், கர்வததை இழந்தவர்களும் உத்ஸாகத்தை இழந்தவர்களுமாகி அப்பொழுது பாதாளததில பிரவேசித்தார்கள். பகைவர்களை நாசம்செய்கிறவர்களான தாராக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலி என்ற தாரகாஸுரனுடைய குமாரர்கள் உக்கிரமான தவத்தை மேறகொண்டு சிரேஷ்டமானநியமததில நிலைபெறறுத தவத்தினால் தங்களுடைய சரீரங்களை வாட்டினார்கள். பிதாமஹரும், வரன்களைக் கொடுக்கிற ஸ்வபாவமுடையவருமான ஸ்ரீபிரம்மதேவர் இந்திரிய நிக்கிரகததாலும் தவததினாலும் விரதானுஷ்டானததாலும் ஸமாதியினாலும் பிரீதிஅடைந்து அவர்களுக்கு வரததைக்கொடுக்க ஆரம்பித்தார். ஸர்வலோகபிதாமஹரான நான்முகரிடததினின்று அவர்களனைவரும் ஒன்றுசேர்ந்து எப்பொழுதும் ஸர்வப்பிராணிகளிடங்களினின்றும் (தங்களுக்கு) மரணமிலலாமையை வேண்டினார்கள். ஸர்வலோகங்களுக்கும் குருவும் பிரபுவுமான ஸ்ரீபிரம்மதேவர் அப்பொழுது அவர்களைப்பார்தது, 'அஸுரர்களே! எலலாப் பிராணிகளாலும் கொல்லததகாமலிருக்குந்தன்மை உண்டாகாது. இவ்விடத்தினின்று திரும்புங்கள். உஙகள்மனததுக்கு ருசிததிருக்கிற வேறு வரத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று கூறினார். ராஜரே! பிறகு, அவர்கள் ஒன்றுசேர்ந்து அடிக்கடி பலவாறாக ஆலோசிதது ஸர்வலோகேஶ்வரரான சதுர்முகரை வணங்கி இவ்விதமான வாக்கியத்தை உரைத்தார்கள். 'இஷ்டப்படி செல்லக்கூடியதும் மங்களகரமானதும் விரும்பப்படுகின்ற ஸமஸ்தவஸ்துக்களும் நிரம்பியதும் தேவர்களாலும் தானவர்களாலும் நாசம்செய்யத்தகாததுமான நகரத்தை வாஸஸ்தானமாக ஏறபடுததிக்கொள்வதறகு விரும்புகிறோம். தேவரே ! பிரபிதாமஹரே ! யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் ஸர்ப்பக் கூட்டங்களாலும் நானாவித ஜாதியில்தோன்றின பிராணிகளாலும் பிசாசங்களாலும் சஸ்திரங்களாலும் ப்ரம்மவாதிகளுடைய சாபங்களாலும் நாசம்செய்யப்படாத மூன்றுபட்டணங்களை எங்களுக்கு நீர் கொடுக்கக்கடவீர். தேவரீருடைய அனுக்ரகததை முன்னிட்டு நாங்கள் இவ்வுலகத்தில் மூன்றுபட்டணங்களையே வாஸஸ்தானமாகக் கொண்டு இந்தப் பூமியில் ஸஞ்சரிக்கப்போகின்றோம். ஆயிரக்கணக்

தானவருஷங்கள் சென்றபிறகு, ஒருவரோடொருவர் சேரப்போகின்றோம். தோஷமற்றவரே! இந்தமூன்றுபட்டணங்களும் ஐக்யமடையப்போகின்றன. ஒன்றுசேர்ந்த இந்தமூன்றுபட்டணங்களையும் அப்பொழுது பெருமைபொருந்திய தேவஸ்ரேஷ்டனெவன் ஒரே பாணத்தினால் நாசம்செய்வனோ அவனே எங்களுக்கு ம்ருத்யுவாகுக' என்று வேண்டினார்கள். அந்தத்தானவர்களுடைய அந்தவார்த்தையைக்கேட்டுப் பிதாமஹரான ஸ்ரீபிரம்மதேவர், 'இவ்வாறு ஆகுக' என்று மறுமொழி சொல்லிவிட்டு ஸத்யலோகத்திற்கு ஏகினர். ப்ரம்மதேவரிடத்திலின்று வரத்தைப்பெற்றுப் பிரீதியடைந்தவர்களும் மஹாரதர்களுமான அந்தத்தாரகனுடையபுத்திரர்கள் ஒருவரோடொருவர் ஆலோசித்து மூன்றுபட்டணங்களைப் படைப்பதற்காக எல்லாச் சிற்பவேலைகளிலும் மிக்கதேர்ச்சியுள்ளவனும் மூப்பில்லாதவனும் தைத்யர்களாலும் தானவர்களாலும் பூஜிக்கப்படுகின்றவனுமான மயனை வரித்தார்கள். பிறகு, புத்திசாலியான மயன் தன்னுடைய தவத்தினாலே ஸ்வர்ணமயமும் வெள்ளிமயமும் அவ்வாறே * இரும்புமயமுமான மூன்றுபட்டணங்களை உண்டுபண்ணினான். பகைவர்களை வாட்டுகிறவரே! அவைகளுள், பொன்மயமான பட்டணமானது தேவலோகத்தில் நிலைபெற்றிருந்தது. வெள்ளிமயமான பட்டணம் ஆகாயத்தில நிலைபெற்றிருந்தது. அவைகளுள் இரும்புமயமான பட்டணமோ அப்பொழுது பூமியில நிலைபெற்றிருந்தது. ஒவ்வொரு பட்டணமும் நூறுயோசனை விஸ்தாரமுடையது; அவ்வளவு நீளமுடையது; உறுதியானது; கொத்தளங்களோடுகூடியது; பெரிய பிராகாரங்களையும் கோட்டைவாயில்களையுமுடையது; சிறந்தவீடுகளால நெருங்கியது; விசாலமான பெரிய ராஜவீதிகளோடுகூடியது; பற்பலவிதமான உப்பரிகைகளாலும் வாசல்களாலும் விளங்கியது. ராஜஸ்ரேஷ்டரே! அந்த மூன்று பட்டணங்களிலும் திவ்யமான மாலைகளையும் ஆடைகளையும் அணிந்த அஸுரர்கள் தனித்தனி அரசர்களாயிருந்தார்கள். திவ்யமான பொன்னகரமானது மஹாத்மாவான தாரகாக்ஷனுடையதாக இருந்தது. வெள்ளிமயமான பட்டணமானது கமலாக்ஷனுடையதாயிருந்தது. இரும்புமயமான பட்டணமானது வித்யுன்மாலியினுடையது. அந்த மூன்று தைத்யஅரசர்களும் மூன்று உலகங்களையும் வல்லமையினால் கவர்ந்துகொண்டார்கள். 'ப்ரம்மா என்பவன் யார்?'

* 'கார்ஷ்ணயஸம்' என்பது மூலம்.

என்றும் சொன்னார்கள். ஒப்பற்ற வீரியமுள்ளவர்களும் உத்தமர்களுமான அப்படிப்பட்ட தானவர்கள், லக்ஷமும் பத்துலக்ஷமும் கோடிகளுமாக அங்கு அங்கிருந்துவந்து கூடினார்கள். முன்பு தேவர்களாலே அபகாரம் செய்யப்பட்டவர்களும் மிக்க கொழுப்புள்ளவர்களுமான மாம்ஸபக்ஷகர்கள் பெரிதான ஐஶ்வரியத்தைவிரும்பித திரிபுரமென்கிற துர்க்கத்தை அடைந்தார்கள். இந்த எல்லா அஸுரர்களுக்கும் மயன் எல்லாவிதமான உபாயங்களையும் சொல்லுகிறவனாயிருந்தான். அவனை ஆதாரமாகக்கொண்டு அந்த அஸுரர்களெல்லோரும் ஓரிடத்திலின்றும் பயமில்லாதவர்களாக இருந்தார்கள். திரிபுரத்தை வாஸஸ்தானமாகக்கொண்ட எந்த அசுரன் எந்த விருப்பத்தை மனத்தினால் நினைத்தானோ அந்தவிருப்பததை அவனுக்கு மயன் மாயையினாலே அப்பொழுது நிறைவேற்றினான். மஹாபலசாலியான ஹரியென்று பிரஸித்திபெற்ற தாரகாக்ஷகுமாரன் ஒருவனிருந்தான். பிதாமஹரான பிரம்மதேவர் எதனால் ஸந்தோஷமடைவரோ அந்த உததமமான தவததை அவன் செய்தான். ஸந்தோஷமடைந்திருக்கின்ற ப்ரம்மதேவரைப்பார்த்து, ஹரியானவன், 'சஸ்திரங்களால் கொல்லப்பட்டு எந்தக் குளத்தில விழுபவர்கள் மறுபடியும் அதிக பலசாலிகளாகத் தோன்றுவார்களோ அந்தக் குளமானது எங்களுடைய பட்டணத்தில் உண்டாகவேண்டும்' என்று வேண்டினான். பிரபுவே! தாரகாக்ஷனுடைய குமாரனும் வீரனுமான அந்த ஹரியானவன் வரததைப்பெற்று அவ்விடததில மரிததவர்களைப் பிழைக்கச்செய்யும் 'ம்ருதஸஞ்சீவினி' என்கிற அவ்விதமான குளத்தை உண்டுபண்ணினான். ராஜரே! எந்த அஸுரன் எந்த ரூபத்தோடும் எந்த வேஷத்தோடும் அடிக்கப்பட்டுத் தடாகத்தில் தள்ளப்படுகிறானோ அவன் ஸம்பூர்ணமான பலத்துடனும் வீர்யததுடனும் சௌர்யத்துடனும் அவ்வித ரூபத்துடனும் வேஷத்துடனுமே உண்டாகிறான். மஹாத்மாவான அந்த ஹரியினாலே உண்டுபண்ணப்பட்டதும் இவ்விதமான வீர்யத்துடன்கூடியதுமான அந்தத தடாகத்தைஅடைந்து திரிபுரவாஸிகளான அஸுரர்கள் உலகங்களெல்லாவற்றுக்கும் துன்பஞ்செய்தார்கள். மிக்க தவத்தினால ஸித்திபெற்றவர்களும் தேவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிறவர்களுமான (அஸுரர்கள்) ஓர் அஸுரன் கொல்லப்பட்டவுடனே, பத்து அஸுரர்களை உண்டுபண்ணினார்கள்.' அரசரே! அவர்களுக்கு யுத்தத்தில் எவ்விததத்தினாலும் க்ஷயமுண்டாகிறதில்லை. பிறகு, (ப்ரம்மதேவருடைய) வரதானத்தி

ளுலே இறுமாப்பை அடைந்தவர்களான அவ்வஸுரர்கள் லோபத்தி ஞலும் மோஹத்திஞலும் பற்றப்பட்டவர்களும் புத்தியை இழந்தவர் களும் பயமற்றவர்களும் ஸமமானபோராவலுள்ளவர்களுமாகி எல்லோ ரும் ஒருங்குசேர்ந்து ஆங்காங்கு அந்த அந்தஸமயங்களில பரிவாரங் களுடன்கூடின் தேவர்களை ஒடும்படிசெய்து தங்களிஷ்டப்படி ஸஞ் சரித்தார்கள். கெட்டநடையுள்ளவர்களான தானவர்கள் எல்லாத் தேவோத்யானங்களையும் தேவதைகளுடைய வாஸஸ்தானங்களையும் பரிசுத்தமான ரிஷிகளுடைய ஆஸ்ரமங்களையும் அவ்வாறே ரமணீய மானநாடுகளையும் வரம்புகடந்து நாசம்செய்தார்கள். பிதிருக்களுடன் கூடினதேவர்களும் ரிஷிகளும் தங்கள் தங்கள் ஸ்தானங்களை இழந்த வர்களாகச் செய்யப்பட்டார்கள். தேவவிரோதிகளான அந்த மூன்று அஸுரர்களாலே மூவுலகங்களும் ஆக்கிரமிக்கப்பட்டன. பிறகு, உலகங்கள் பீடிக்கப்படும்போது வஜ்ராயுதத்தைக்கையிலேந்திய இந்தி ரன், தேவர்களால் சூழப்பட்டுத் திரிபுரங்களையும் எல்லாப்பக்கத்திலும் சூழ்ந்து எதிர்த்துப்போர்புரிந்தான். ராஜரே! பகைவர்களை அடக்குப வரே! தேவராஜனான இந்திரன், அந்தப் பிரம்மதேவருடைய வரத்தி ஞல கொடுக்கப்பட்டவைகளும் பிளக்கமுடியாதவைகளுமான முப் புரங்களையும் பிளப்பதற்குச் சக்தியற்றவனானபொழுது, பயந்து அந்தப் பட்டணங்களை விட்டுவிட்டு அந்ததேவர்களோடு கூடவே அஸுரர்களால செய்யப்பட்ட அபகாரத்தைச் சொல்லுவதற்காக அப்பொழுது ப்ரம்மதேவரை அடைந்தான். அவர்கள் எல்லா உண் மையையும் உரைத்து முடிகளால நன்றாக வணங்கி, 'பகவானே! அந்த அஸுரர்களைக் கொல்லும் உபாயத்தைச் சொல்லவேண்டும்' என்று விஜ்ஞாபனம் செய்தார்கள். அந்தவார்த்தையைக் கேட்டு மஹிமையுள்ள ஸ்ரீ ப்ரம்மதேவர் தேவர்களைப்பார்த்து, 'தேவர்களே! நீங்களனைவரும் என்னுடைய வாக்கிய கௌரவத்தைக் கேளுங்கள், அஸுரர்கள் எப்பொழுதுமே கெட்ட ஸ்வபாவமுடையவர்கள்; தேவர்களே என்னுடையவர்கள். * அவர்களனைவர்களும் உங்களை ஹிம்ஸிக்கின்றார்கள். நானோ எல்லாப் பிராணிகளுக்கும் ஸமன், இதுவிஷயத்தில ஸம்சயமில்லை. துஷ்டர்கள் கொல்லப்படத் தக்க வர்களென்பதனால் இவ்விஷயத்தை உங்களுக்கு நான் சொல்லு கிறேன். அந்தத் துர்க்கங்கள் ஒரேபாணத்திஞலே பிளக்கத்தக்கவை கள். வேறுவிதத்தாலில்லை. அந்தப்பட்டணங்களை முக்கண்ணரே

* பொருந்தாமையால் சில சொற்கள் விடப்பட்டன.

பாணத்தால் நன்றாகப் பிளப்பதற்குத் திறமையுள்ளவர். நீங்களனை வர்களும், ஜகதீஸ்வரரும் ஜயசீலரும் உத்தமமான கார்யங்களைச்செய் கின்றவருமான ஸ்தாணுவை யுத்தஞ்செய்யும்படி சீக்கிரம் வேண்டுங் கள். அந்த ஈஸ்வரர் அஸுரர்களை ஸம்ஹரிப்பார்' என்று கூறினர். அவ்விதமான வாக்யத்தினாலே தூண்டப்பட்ட அந்தத் தேவர்கள் முடிவணங்கி நின்றார்கள். மங்களகரமான மனத்தையுடையவர்களும் மஹாத்மாக்களுமான தேவஸ்ரேஷ்டர்கள் தேவவருஷத்தில் ஆயிரம் வருஷம் தவம்புரிந்து விருஷபத்வஜரிடம் சென்றனர். தேவர்கள் ப்ரம்மாவை முன்னிட்டுக்கொண்டு சரண்யரான ருத்திரரைச் சரண மடைந்து சாஸ்வதமான வேதமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு பெருந்தவம் புரிந்தார்கள். எல்லோரும் மன்மதனை எரித்தவரும் தேவர்களுக்குத் தேவரும் ஸ்ரேஷ்டரும் ஸ்திரமாயிருப்பவரும் வரங் களைக் கொடுக்கின்றவரும் மூன்றுகண்களையுடையவரும் மங்கள ரூபியுமான ஈஸ்வரரை ஸர்வவிதத்தினாலும் சரணமடைந்தார்கள். அந்தத் தேவர்கள் (எல்லாப்பிரஜைகளையும்) ஸம்ஹரிப்பவரும் துதிக் கத்தக்கவரும் பிறப்பில்லாதவரும் சந்திரனால் அடையாளமிடப் பட்ட தலைமயிரையுடையவரும் பயம் நேர்ந்த காலங்களில் அபயம் கொடுப்பவரும் நல்ல விரதமுள்ளவரும் ஸர்வவஸ்துக்களையும் தம் சரீரமாகக்கொண்டவரும் பெருமையுள்ளவரும் உலகத்தை யெல்லாம் ஸ்வரூபத்தால் வியாபித்திருக்கின்றவருமான ருத்திர ரை உக்கிரங்களும் ராக்ஷஸர்களை நாசஞ்செய்பவைகளுமான மந் திரங்களால் ஸ்தோத்திரஞ்செய்தார்கள். எந்தப்பகவான் பற்பல விதமான தபோவிசேஷங்களால் தம்முடைய மஹிமையை அறிந்தி ருக்கிறாரோ, எந்தப்பகவான் புத்தியினால் நிச்சயிக்கத்தக்க ஆத்மதத்வ த்தைத் தாமாகவே அறிந்திருக்கிறாரோ, எந்தப்பகவானுக்கு எப்பொ ழுதுமே மனமானது தம்வசத்தில் நிலைபெற்றிருக்கின்றதோ அத்த கையமகிமைபொருந்தியவரும் தேஜோராசியும் உமாபதியும் (பாவங் களைப்)போக்குகின்றவரும் ஐஸ்வரியமுள்ளவரும் உலகத்தில் மற்றொ ருவரும்நிகரில்லாதவரும் அதிகமாகத் தபிக்கச்செய்பவரும் பாப மற்றவருமான ஈஸ்வரரை அந்தத்தேவர்கள் மிகுந்த முயற்சியினால் ஸாக்ஷாத்கரித்தார்கள். ஒருவராயிருக்கின்ற அந்தப்பகவான் அப்ப டிப்பட்ட தம்ரூபத்தினிடத்தில் பலவிதரூபங்களை உண்டுபண்ணினர். அதிகமான ஆச்சர்யத்தையுடையவர்களான தேவர்களனைவர்களும் மஹாத்மாவினிடத்தில் ஆத்மாவினுடைய பிரதிபிம்பங்களாயிருக்கிற

பாஸுபாரூபங்களைக் கண்டார்கள். ஸர்வபூதஸ்வரூபியும் பிறப்பற்ற வரும் உலகத்திற்குத் தாதருமான அந்தருத்திரனைக்கண்டு தேவர்களும் பிரம்மரிஷிகளும் தலை பூமியிலபடும்படி நமஸ்காரித்தனர். சங்கரர், வணங்குகின்ற அந்தத்தேவர்களைப்பார்த்து, 'மங்களமுண்டாகுக' என்று ஆசீர்வதித்து, அவர்களைப் புகழ்ந்து (பூமியினின்று) எழுந்திருக்கும்படிசெய்து, பகவானை அவர் புன்னகையுடன், 'சொல்லுங்கள்; சொல்லுங்கள்' என்று வினவினார். பிறகு, முக்கண்ணனாலே அனுமதிகொடுக்கப்பட்ட அந்தத்தேவர்கள் நன்னிலையிலிருக்கின்ற மனத்துடன் ஈஸ்வரரைப்பார்த்து, 'பிரபுவே! தேவரீருக்கு வந்தனம்; வந்தனம்; வந்தனம். தேவதைகளுக்கெல்லாம் அதிதேவதையானவரும் பிராணவல்லபையான அம்பிகைக்கு இருப்பிடமாயிருக்கின்றவரும் அதிககோபமுள்ளவரும் தக்ஷப்பிரஜாபதியினுடைய யாகத்தை அழித்தவரும் ஸ்ருஷ்டிகர்த்தர்களாலே ஸ்தோத்திரம் செய்யப்பட்டவருமான உமக்கு வந்தனம். ஸ்தோத்திரம் செய்யப்பட்டவரும் ஸ்தோத்திரம் செய்யத்தக்கவரும் ஸ்தோத்திரம் செய்யப்படுகின்றவரும் மங்களங்களுக்கு உத்பத்திஸ்தானமாயிருப்பவரும் மிகச்சிவந்தவரும் (பிராணிகளை) ரோதனம் செய்யும்படி செய்கின்றவரும் கறுத்த கழுத்தையுடையவரும் சூலத்தைத் தரித்தவரும் ஸபலமானவரும் * ம்ருகசரீரத்தைத்தரித்தவரும் சிறந்த ஆயுதங்களால் போர்புரிகின்றவரும் ஆராதனத்துக்குத் தகுந்தவரும் சுத்தரும் க்ஷயத்துக்குக் காரணமாயிருப்பவரும் ஹிம்ஸிக்கின்றவரும் ஒருவராலும் தடுக்கமுடியாதவரும் சுக்கிரஸ்வரூபியும் பிரம்மஸ்வரூபியும் பிரம்மசாரியும் ஜகதீசரும் மனத்தினாலே அளவிடமுடியாதவரும் (துஷ்டர்களை) ஸம்ஹரிக்கின்றவரும் தோலை ஆடையாக உடுத்தவரும் தவத்தில் பற்றுதலுள்ளவரும் மஞ்சள் நிறமுள்ளவரும் விரதங்களை அனுஷ்டிப்பவரும் தோலை உடுத்தவரும் ஸுப்ரம்மண்யருக்குப்பிதாவும் முக்கண்ணரும் உத்தமமான ஆயுதங்களைத் தரித்தவரும் சரணமடைந்தவர்களுடைய துன்பத்தை நீக்குகின்றவரும் பிரம்மத்வேஷிகளுடைய கூட்டங்களை நாசம்செய்கின்றவரும் வனஸ்பதிகளுக்குப் பதியாயிருப்பவரும் வனங்களுக்குப் பதியுமான தேவரீருக்கு வந்தனம். பசுக்களுக்கெல்லாம் பதியும் எப்பொழுதும்

*** ம்ருகம்=மான். 'ம்ருகாக்ஷாய' என்பது மூலம். அக்ஷம் என்பதற்குச் சரீரம்என்றும் கண்என்றும் பொருளுண்டு. மானினுடைய கண்போன்ற அழகிய கண்களையுடையவரென்றும் கொள்ளலாம்.**

யஜ்ஞங்களுக்குப் பதியுமான தேவரீருக்கு வந்தனம். ஸைன்யங்களை யுடையவரும் மூன்று கண்களையுடையவரும் அளவுகடந்த வல்லமை பொருந்தியவருமான தேவரீருக்கு வந்தனம். மனவாக்குக்காயங்க ளால் உம்மைச் சரணமடைந்திருக்கின்ற எங்களைத் தேவரீர் பாது காக்கவேண்டும்' என்று வேண்டினார்கள். பிறகு, பகவான், பிரஸன் னராகி, 'நலவரவா' என்கிறவார்த்தையினால் அவர்களைச்சந்தோஷிக்கச் செய்து, '(தேவர்களே!) உங்களுடைய பயம்விலகட்டும். உஙகளுக்கு யான் என்னசெய்யவேண்டும்? சொல்லுங்கள்' என்று நியமித்தார். ஈசுவரருடைய வார்த்தையைக்கேட்டுத் தேவர்கள் ஸந்தோஷமடைந் தார்கள்.

---

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

**(தேவர்கள், ருத்திரருடையவசனத்தினால் அவருக்குத் தத்தம் பலத்திற் சரிபாதி கொடுத்து அவருடன் திரிபுரஸம்ஹாரத்தின்பொருட்டுப் படையெடுத்துச்சென்றது.)**

மஹாத்மாவான ருத்திரராலே பிதிருக்கள், தேவர்கள், ரிஷிகள் இவர்களுடையகூட்டங்களுக்கு அபயங் கொடுக்கப்பட்டவுடனே, உலகத்திற்குப்பிதாமஹரான பிரம்மதேவர், சங்கரரைப் பூஜித்துக் கூறலானார். 'இந்த அஸுரதுர்க்கங்கள் மூவுலகங்களையும் ஆக்கிரமிக் கின்றனவல்லவா? பிரஜைகளுக்கு யார்நாதன்? கோரரூபிகளான அந்த த்ரிபுராஸுரர்களனைவர்களையும் காலதாமதமின்றி ஸம்ஹாரம் செய் யும். தேவநாதரே! சிறந்த இந்தப்ரம்மபதவியை அடைந்திருக்கின்ற என்னாலே வரங்களைக்கொடுக்கக்கூடியகாலம்நோக்கப்படியால் தானவர்க ளின்பொருட்டுப் பெரியவரம்கொடுக்கப்பட்டுவிட்டது. யுகத்ததில் அவர்களைக் கொல்லுகிறவர் வேறொருவருமில்லையென்று நாங்கள் கேள் விப்படுகிறோம். ஸர்வப்பிராணிகளுக்கும் ஈசுவரரே! உலகமரியாதை யைக்கடந்தவர்களான அந்த அஸுரர்களை உம்மைத்தவிர வேறொரு வன் ஸம்ஹரிப்பதற்குத் தகுந்தவனல்லன். தேவரீர்ஒருவரே இவர் களைக்கொல்வதில்தகுந்தசத்துரு. தேவரே! சரணமடைந்துவேண்டு கின்ற தேவர்களுக்குத் தேவரீர்அருள்புரிவீராக. வேண்டினவர்களு க்கு வேண்டினவற்றைக் கொடுப்பவரே! யுத்தத்தில அஸுரர்களைக் கொல்லும். (பகைவர்களின்) கர்வத்தை அழிப்பவரே! தேவரீருடைய அனுக்ரகத்தினால் உலகமுழுமையும் ஸுகமாக விருத்தியடைந்தது. தேவரீர் தேவர்களுக்குச் சரண்யர். உம்மை நாங்கள் சரணமடைந் தோம்' என்று கூறினார்.

ரம்வரர், 'உங்களுடைய சத்துருக்களனைவர்களும் கொல்லத் தக்கவர்களென்பது என்னுடைய எண்ணம். பலசாலிகளான தேவ சத்துருக்களை நான் ஒருவனாயிருந்து ஸம்ஹரிப்பதற்கு மனம் எழு வில்லை. நீங்களனைவர்களும் ஒருங்குசேர்ந்தும், என்னுடைய தேஜஸுடன் கூடியும் மஹாபலசாலிகளான அந்த அஸுரர்களனைவர்களையும் கூட்டமாக யுத்தத்தில் வெல்லுங்கள்' என்று நியமித்தார். தேவர்கள், 'எங்களுடையதேஜஸும் பலமும் எவ்வளவோ அவ்வளவைக்காட்டி லும் இரண்டுமடங்கான தேஜஸும் பலமும் அஸுரர்களுக்கிருக்கின் றன' என்று நாங்கள் எண்ணுகின்றோம். அவர்களுடைய தேஜஸும் பலமும் காணப்பட்டவையல்லவா?' என்றுதெரிவித்தார்கள். ஈசுவரர், 'எவர்கள் உங்களுக்கு அபராதிகளோ அந்தப்பாபிகள் ஸர்வவிதத்தினா லும் (என்னால்) கொல்லத்தக்கவர்கள். நீங்களெல்லோரும் என்னு டையதேஜஸ் பலம் இவைகளுடைய ஒருபாதியினாலே பகைவர்களை நாசஞ்செய்யுங்கள்' என்று நியமித்தார். தேவர்கள், 'ஸுரேசுவரரே! தேவரீருடைய தேஜஸின் பாதிபாகத்தைத் தரிப்பதற்கு நாங்கள் சக்தியற்றவர்களாயிருக்கின்றோம். தேவரீரே எங்களெல்லாருடைய பலத்தின் அர்த்தாம்சத்தினாலும் பகைவர்களை நாசஞ்செய்யும். தேவரே! எவ்விதத்தினாலும் நாங்கள் ரக்ஷிக்கப்படத்தக்கவர்கள். மஹாதேவரே! நீரே எங்களைக் காப்பாற்றும். நீரே பகைவர்களைக் கொல்லும்' என்று பிரார்த்தித்தார்கள். ஈசுவரர், 'என்னுடைய தேஜ ஸைத் தரிப்பதற்கு நீங்கள் சக்தியற்றவர்களாயிருப்பீர்களேயாகில், நானே உங்களுடைய தேஜஸிற்பாதியோடு கூடியவனாய் இந்தச் சத்துருக்களைக் கொல்லுவேன். தேவர்களே! நீங்களனைவர்களும் ஒன்றுசேர்ந்து என் பலத்திற் பாதியை யுத்தத்தில் தாங்குவதற் குச் சக்தியற்றவர்களாயிருப்பீர்களானால் நான் உங்களுக்குச் சொல் லுகிறேன். அஸுரர்களும் தேவர்களுமான எல்லோரும் எனக் குச் சமம். தேவர்களே! நான் எல்லாப்பிராணிகளுக்கும் மங்க ளத்தை உண்டுபண்ணுகிறவனாயிருக்கிறேன். அதனாலேதான், எனக் குச் சிவத்தன்மை. ஆனால், அந்தத் தேவசத்துருக்கள் அதர்மத் துடன் இருக்கின்றார்கள். அதனாலும் உங்களுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினாலும் என்னால் அவர்கள் கொல்லத்தக்கவர்கள். என்னைச் சரணமடைந்தவர்களும் தருமத் தினால் ஜயம்பெற விருப்பமுள்ளவர்களுமான உங்களுக்கு யான் உதவிபுரியப்போகின்றேன். உங்களுடைய பகைவர்களைக் கொல்லப்

போகிறேன். எல்லாதேவர்களும் தனித்தனியாகப் பலத்தில பப் பாதி எனக்குக்கொடுங்கள். துன்பத்தை அடைவிக்கப்பட்டவர்க ளான எலலாப்பிராணிகளும் எனக்குப் பசுவாயிருக்குந்தன்மையை ஏற்படுத்திக்கொள்ளட்டும். தேவர்களே ! பசுக்களுக்குப் பதியாயிருக் குந்தன்மையானது இப்பொழுது எனக்கு உண்டாகுக. இவவாறு தேவசததுருக்களான பசுக்களைக் கொன்றும் நான் பாபததையடைய மாட்டேன். திவயமான ரதத்தையும் (பகைவர்படையைததாண்டிச்) செலலக்கூடிய தேர்க்குதிரைகளையும் விலலையும் அம்பையும் ஸாரதி யையும் ஏறபடுததுஙகள். அந்த ஸாதனஙகளால உஙகளுடைய சத துருக்களை நான் ஜயிப்பேன்' என்று கூறினர். தேவர்களுக்குத் தேவரும் பூமிக்கு நாதருமான ஈஶவரருடைய இவவிதமான வார்த தையைக்கேட்டுத தேவர்களெலலோரும் பசுததன்மையைப்பறறி ஸந்தேகஙகொண்டவர்களாக வியஸனமடைந்தார்கள். அவர்களு டைய மனோபாவததைதத தேவரான ருததிரர் அறிந்து அவர்களைக் குறிதது இவவிதமான வசனததை உரைக்கலானார். தேவஶ்ரேஷ்டர் களே! உஙகளுக்கு இந்தப் பசுததன்மைவிஷயததில பயம்வேண்டாம். பசுததன்மைக்கு விமோசனததைக்கேளுஙகள். அதனைச் செய்ய வேண்டும். உஙகளுள் எவன், பசுபதியான என்விஷயமான விர ததததை அனுஷ்டிக்கிறானோ அவன் பசுததன்மையினின்று விடுபடு வான். உஙகளுடைய கோஷ்டியில நான் ஸததியமாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். இன்னும் மற்ற எவர்கள் இந்த விரததததை அனுஷ்டிப் பார்களோ அவர்களும் விடுபடுவார்கள். எவன் கடைசிக்காலம் வரையிலாவது பன்னிரண்டு வருஷமாவது மூன்று ருதுக்களடங கின அரைவருஷமாவது ஒருமாதமாவது பன்னிரண்டுநாளாவது (அனுஷ்டிப்பனோ) அவன் பசுத்தன்மையினின்று விடுபடுவான். ஆதலால, சிறந்ததும் ரஹஸயமானதும் திவ்யமுமான இந்த விர தத்தை நீஙகளனுஷ்டிப்பீர்களாக' என்று கூறினர். தேவதேவர் களால் நமஸ்கரிக்கப்பட்டவரும் பிரபுவும் தலைவருமான அந்தச் சங கரரைப்பார்ததுத தேவர்கள், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லி விட்டு எஙகளுடைய தேஜஸைச்சேர்ந்த இந்த அர்ததாம்சததையும் தேவரீர் பெறறுக்கொள்ளவேண்டுமென்று' விண்ணப்பம் செய்தார் கள். ராஜஶ்ரேஷ்டரே ! சூலபாணியான சங்கரர், 'அவ்வாறே ஆகட் டும்' என்று மறுமொழிகூறினர். பிறகு, தேவர்களனைவர்களும் மஹாதமாவான பசுபதியின்பொருட்டுத தேஜஸினுடைய பாதியைக்

கொடுத்தார்கள். எல்லாத் தேவர்களுடைய தேஜஸினுடைய பாதியையும் பெற்றுக்கொண்டு தேஜஸினாலே அதிகரித்தவராகி மீண்டும் அதிக பலசாலியானார். அதுமுதல் அவர் தேவர்களுள் தேவதேவரானார்; அப்பொழுது, பசுஸ்வரூபிகளான எல்லாப்பிராணிகளுக்கும் பதியுமானார்; பசுக்களாயிருக்கின்ற எல்லாப் பிராணிகளுக்கும் பதியாயிருத்தலால் பசுபதியென்றும் மங்களத்தை உண்டுபண்ணும் தன்மையால் பவரென்றும் சொல்லப்படுகிறார். மஹா காந்தியுடையவரான தேவதேவர் எல்லாத்தேவர்களுடைய தேஜஸிலும் பாதியைப் பெற்றுக்கொண்டு, அந்தத் தேஜஸினால் நன்றாக ஜ்வலிக்கின்றவர்போ விருந்துகொண்டு அவர்களனைவர்களையும் பிரகாசிக்கச்செய்தார். பிறகு, தேவர்களனைவர்களும் புராரியான ருத்திரருக்கு அபிஷேகம் செய்வித்தார்கள். (அதனால்) ருத்திரர் மஹாதேவரும் தேவதேவரும் மஹேஶ்வரருமானார்.

---

## இருபத்தாறுவது அத்யாயம்.

**(விஶ்வகர்மா தேவர்களுடைய ஆஜ்ஞையினால் பூமிமுதலானவற்றை ஸாதனமாகக்கொண்டு யுத்தத்துக்குத் தேர் அமைத்தது.)**

எல்லாத் தேவர்களும், மஹாத்மாவான சங்கரரின்பொருட்டுத் தமது தேஜஸில் பாதியைக் கொடுத்தும், பசுத்தன்மையை ஏற்றுக் கொண்டும், குறைவில்லாதவனான விஶ்வகர்மாவை அழைத்துத் தேர் அமைக்கும்படி சொன்னார்கள். விஶ்வகர்மாவும் ஆலோசித்துத் திவ்யமான ஒரு ரதத்தை உண்டுபண்ணினான்; ஒன்றுசேர்ந்ததும், விசாலமானதும், பட்டணங்களுடைய வரிசைகளுடன்கூடினதும், மலைகளோடும் காடுகளோடும் தீவுகளோடும் கூடியதும், எல்லாப் பிராணிகளையும் தரிக்கின்றதுமான பூதேவியை ரதமாகச் செய்தான்; நக்ஷத்ரமண்டலத்தை மூக்கணையாகவும் மஹாமேருகிரியைக் குடையாகவும்செய்தான்; அநேகவிருக்ஷங்களால் சூழப்பட்டதும் ரத்னங்களுக்கு இருப்பிடமானதும் சிறந்ததுமான இமயமலையையும் பற்பல மரங்களாலும் கொடிகளாலும் வியாபிக்கப்பட்ட விந்தியமலையையும் திடமான * அவஸ்கரம் ப்ரதிஷ்டானம் முதலான தேருறுப்புக்களாக அப்பொழுது ஏற்படுத்தினான். மிக்க மஹிமையுள்ளவனான த்வஷ்டாவானவன் நானாவிதமான பக்ஷிகளையுடைய அஸ்தகிரியை

---

* தேருறுப்புக்கள் பலவற்றிற்குப் பொருள் நிச்சயிக்கக் கூடாமையினால், அவைகள் மூலத்திலுள்ளபடியே பதிப்பிக்கப்பெற்றன.

அதிஷ்டானமாகச்செய்தான் ; உதயபர்வதத்தைக் கூபரமாக ஏற்படுத்தினான். மீன்களுக்கும் முதலைகளுக்கும் சுறுமீன்களுக்கும் இருப்பிடமானதும் தானவர்களுக்குஇருப்பிடமானதும் பட்டணங்களாலும் ரத்தினாகரங்கங்களாலும் விளங்குகின்றதுமான ஸமுத்திரத்தை இருசாகச்செய்தான். நக்ஷத்ரங்களுடைய கூட்டங்களாலஅலங்கரிக்கப்பட்ட சந்திரனைச் சக்கரமாகச்செய்தான். கிரணஸமூகங்களுடன்கூடின சூரியனை மற்றொரு சக்கரமாகச்செய்தான். குறைவற்றவனான விஸ்வகர்மா கங்கையையும் ஸரஸ்வதீநதியையும் இரண்டு அம்புத்தூணிகளாகச் செய்தான். அவ்விதமே நீர்ப்பெருக்குள்ள நதிகள் தேருக்கு அலங்காரங்களாயின. மூன்று அக்னிகளையும் மந்திரத்தின்படி அந்தரகத்தின் (1) திரிவேணுகமாகச்செய்தான். நக்ஷத்திரங்களை ரதத்திற்கு அநுகர்ஷங்களாகவும் பிரகாசிக்கின்ற (2) வரூதங்களாகவும் ஏற்படுத்தினான். ஓஷதிகளையும் கொடிகளையும் ஒளிபொருந்திய மணிகளுடைய ஸமூகமாக ஏற்படுத்தினான். விபுவான விஸ்வகர்மா மாஸங்களாலும் பக்ஷங்களாலும் ருதுக்களாலும் அஹோராத்திரங்களாலும் (3) கலைகளாலும் காஷ்டைகளாலும் அவ்வாறே அயனங்களாலும் ரதத்தை அலங்கரித்தான். அந்தரிக்ஷத்தை நுகமாகவும் பிரளயகாலமேகங்களை நுகத்தினுடையகணுக்களாகவும் (4) த்ருதி மேதை ஸ்திதி ஸன்னதி இவைகளை முளையாகவும் ருக்வேத ஸாமவேதங்களை ரதத்தினுடைய பாரத்தைப் பொறுக்கும் இரண்டு குதிரைகளாகவும் ஏற்படுத்தினான். யஜுர்வேதமும் அதர்வணவேதமுமாகிய இவ்விரண்டையும் பிந்தின இரண்டு குதிரைகளாக ஏற்படுத்தினான். வேதத்திலுள்ள பதஸமூகத்தையும் (5) ஸினீவாலி, (6) அனுமதி, (7) குஹூ, நல்ல ஒளிபொருந்தின (8) ராகை

(1) துரோணபர்வம் 601-ம் பக்கம்க்குறிப்பிற்காண்க.

(2) பீஷ்மபர்வம், 412-ம்பக்கம் குறிப்பிலும், துரோணபர்வம் 10-ம் பக்கம் குறிப்பிலும் காண்க.

(3) விராடபர்வம் 218-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

(4) ஆதிபர்வம் 240-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

(5) சந்திரகலைதோற்றுகிற அமாவாஸ்யைக்குப் பெயர்.

(6) ஒருகலையினால் குறைவுபட்ட சந்திரனுடன் கூடின பௌர்ணமாஸிக்குப் பெயர்.

(7) சந்திரகலை சிறிதும் இல்லாமலிருக்கும் அமாவாஸ்யை.

(8) குறைவற்ற சந்திரமண்டலத்துடன் கூடின பௌர்ணமாஸி.

இவைகளையும் குதிரைகளுக்கு அலங்காரமாகச்செய்தான். * கூஷ்மாண்டங்களையும் ஸர்ப்பங்களையும் குதிரைகளுக்குப் பூட்டாம் வார்களாக ஏற்படுத்தினான். தாலப்ருஷ்டம், நஹுஷம், கார்க்கோடகம், தனஞ்சயம் இவைகளும் இன்னும் மற்றஸர்ப்பங்களும் குதிரைகளைக்கட்டுவதற்குரியவைகளாயின. ராஜரே! † வேதாங்கங்கள் ஆறும் கடிவாளங்களாக ஏற்படுத்தப்பட்டன. ஓங்காரமானது விஸ்வகர்மாவினால் அந்தத் தேரினுக்குக் கொறடாவாக ஏற்படுத்தப்பட்டது. தனித்தனியாகப் பிரிக்கப்பட்ட எல்லா யஜ்ஞங்களும் துண்டுதுண்டாகத் தேருறுப்புக்களாயின. மனமானது வீற்றிருக்குமிடமாகியது. ஸரஸ்வதீதேவி பரிரத்யையாகுள். நாநாவித அக்ஷரங்களுடன் கூடின சஸ்திரமந்திரங்கள் காற்றினால் அலேக்கப்பட்ட கொடித்துணிகளாயின. மின்னலானது இந்திரவில்லுடன் கூடின அந்த ரதத்தை ஒளியினால் விளக்கியது. கிரஹங்களுடைய கூட்டங்களாலே சூழப்பட்ட ஆகாசமானது யுத்தம் செய்வதற்காகப் பிளக்கமுடியாததும் ஒளிபொருந்தியதும் விசித்ரமாயுள்ளதும் காலசக்கரங்களால் எந்தப்பக்கத்திலும் பிளக்கப்பட்டதுமான கவசமாக ஏற்படுத்தப்பட்டது. மஹாராஜரே! ஆண்மையிற்சிறந்தவரே! இந்தமாதிரி விஸ்வகர்மாவினால் அமைக்கப்பட்டதும் பகைவர்களுக்குப்பயத்தைப் பெருக்குவதும் ரதங்களுள் சிறந்ததுமான அந்த ரதத்தில் சங்கரர் தம்முடைய திவ்யாயுதங்களை வைத்தார்; ஆகாயத்தைக் கொடிமரமாகச்செய்து அதில் விருஷபத்தை ஸ்தாபனம் செய்தார். ஓங்கியெழுந்து விளங்குகின்ற பிரம்மதண்டமும் காலதண்டமும் ருத்திர தண்டமும் ஜ்வரங்களும் ரதத்தினுடைய நான்குதிக்கிலும் அலங்காரங்களாயின. ஆறு ருதுக்களுடன் கூடின ஸம்வத்ஸரத்தை விசித்திரமான வில்லாகச்செய்து தம்முடைய சாயையைக் குறைவற்றதும் அழிவற்றதுமான நாண்கயிறாக ஏற்படுத்தினார். மஹிமையுள்ளவரான ருத்திரர் காலஸ்வரூபியன்றோ? அந்தவில்லும் ஸம்வத்ஸரரூபமன்றோ? ஆதலால், ரௌத்திரமான காலராத்திரியானது வில்லுக்குத் திடமான நாண்கயிறாக ஏற்படுத்தப்பட்டது. பிறகு, விரதத்தை மேற்கொண்டு நன்கு நிறைவேற்றிய ரிஷிகள், ரதத்தில் பூட்டத்தக்கவையும் களிப்புமிக்கவையுமான அந்தக்குதிரைகளை ஒவ்வொன்றாகக் கொண்டுவந்து பூட்டினார்கள். ராஜரே! மந்திரங்களில் கரை

* ஒருவகைப் பிசாசுகள்.

† ஆதிபர்வம், 56-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

கண்டவர்களான மஹரிஷிகளாலே வலப்பக்கத்துமுனையில் ருக்வேதமானது பூட்டப்பட்டது. இடப்பக்கத்தில் ஸாமவேதம் பூட்டப்பட்டது. தேவபிராம்மணர்களாலே யஜுர்வேதமானது பின்புறமாக வலப்பக்கத்தில் கட்டப்பட்டது ; ராஜரே ! அவ்விதமாகவே அதர்வணவேதமானது பின்புறத்தில் இடப்பக்கத்தில் கட்டப்பட்டது. இவ்வாறாக அந்தக் குதிரைகள் யஜுஸுங்களை அறிந்தவர்களான மஹரிஷிகளாலே ரதத்தில் சேர்க்கப்பட்டன. அவ்வாறு சேர்க்கப்பட்ட அந்த நான்குவேதங்களும் யாகத்தினுடைய மத்தியத்தை அடைந்திருந்தால் எவ்விதமோ அவ்விதமாக விளங்கின. உதாரமானமனத்தையுடையவிஸ்வகர்மா திவ்யரதத்தைஏற்படுத்திப் பிறகு பாணத்தையும் அமைக்க ஆரம்பித்தான். அழிவற்றவரும் யஜ்ஞத்தை வாகனமாகக்கொண்டவருமான ஸ்ரீஹரியைத்தியானித்துப் பாணமாக அமைத்தான். ராஜரே! ராஜஸ்ரேஷ்டரே ! பரிசுத்தமான கந்தத்துடன்கூடின வாயுவை அந்தப் பாணத்துக்குச் சிறகாகவும் புங்கமாகவும் ஏற்படுத்தினான். உலகமனைத்தும் விஷ்ணுஸ்வரூபமென்றும் அக்நீஷோமஸ்வரூபமென்றும் சொல்லப்படுகிறதினாலே அக்நீஷோமர்களை அப்பொழுது பாணமுகத்தில் ஏற்படுத்தினான். ஷாட்குண்ய பரிபூர்ணரும், அளவற்றதேஜஸ்ஸையுடையவருமான ஈசுவரருக்கு மஹாவிஷ்ணுவானவர் ஆத்மாவாதலால், அந்த ருத்திரர் விஷ்ணுமயமானபாணத்தைத் தனுஸிலுள்ளநாண்கயிற்றில் சேர்ப்பதை *ஸஹித்தார். பிருகு, அங்கிரஸ் இவர்களுடைய கோபத்தினின்று தோன்றினவரும் அக்நிபோன்ற குரோதத்தையுடையவரும் ஸஹிக்க முடியாதவரும் (கண்டத்திலும் சடையிலும் முறையே) கறுப்பாகவும் சிவப்பாகவுமிருக்கின்றவரும் புகைநிறமுடையவரும் தோலை ஆடையாக உடுத்தவரும் பயங்கரரும் லக்ஷம் சூரியர்களுக்கொப்பானவரும் தேஜஸுகளுடைய ஜ்வாலைகளால் சூழப்பட்டவரும் மங்களஸ்வரூபியும் கெட்ட நடையுள்ளவர்களை நழுவும்படி செய்பவரும் ஜயசீலரும் பிரம்மத்வேஷிகளை நாசம் செய்பவரும் உத்தமரும் பிரபுவுமான ருத்திரர் தாங்க முடியாததானகடுங்கோபத்தை அந்தப்பாணத்தில் விட்டார். ராஜரே! அந்தவில்லினுடைய அங்கங்களை அடுத்து நிலைபெற்றிருக்கின்ற ஜங்கமாஜங்கமஸ்வரூபமான இவ்வுலகமனைத்தும் ஆச்சரியகரமானகாட்சியுள்ளதாக விளங்கியது. அவ்விதமான திவ்ய ரதத்தைப்பார்த்து அந்த ருத்திரர் கவசமணிந்தவராகவும் கையில் விற்பிடித்தவராகவும்

* வ்யாக்யான பாடம் இங்கு சிறிது வேறுபடுகிறது.

சந்திரன், விஷ்ணு, அக்நி, வாயு இவர்களிடத்தினின்று உண்டான திவ்வியமான அம்பைக் கையிலெடுத்தார். மஹாதேவர் அப்பொழுது முயற்சியுடன் அந்தப் பாணத்தைக் கையிலெடுத்துத் தைத்யர்களையும் தானவர்களையும் நடுங்கச்செய்துகொண்டு, ஆகாயத்தையும் பூமியையும் நடுங்கச்செய்கின்றவர்போல அந்தத் தேரின்மீதேறினார். மஹரிஷிகளாலே ஸ்தோத்திரம் செய்யப்படுகின்றவரும் வந்திகளாலே நமஸ்கரிக்கப்படுகின்றவரும் நடனத்தில் ஸாமர்த்தியமுள்ள அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் செய்யப்படும்நர்த்தனத்தைக் கண்டு களிப்பவரும் வரங்களைக்கொடுப்பவரும் கத்தியையுடையவரும் பாணங்களையுடையவரும் வில்லையுடையவரும் ஜ்வலிக்கின்றவருமான அந்த ஈஸ்வரர் புன்னகை செய்துகொண்டு, 'எவன் ஸாரதியாயிருக்கக்கூடும்?' என்று வினவினார்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

(தேவர்களுடைய வேண்டுதலால் பிரம்மா ருத்திரருக்கு ஸாரத்யம் செய்ததும், ருத்திரரால் திரிபுரங்கள் எரிக்கப்பட்டதும், துர்யோதனன் மறுபடியும் சல்யனைக் கர்ணனுக்கு ஸாரத்யஞ் செய்ய வேண்டினதும்.)

(தேவகணங்களனைத்தும்) ஈஸ்வரரைநோக்கி, 'தேவேசரே! தேவரீர் எவனை ஏவப்போகிறீரோ அவன் உமக்கு ஸாரதியாவான்; ஸம்சயமில்லை' என்று சொன்னார்கள். மஹாதேவர் அந்தத் தேவர்களைப்பார்த்து, 'நீங்களே நன்றாக ஆலோசித்து என்னைக்காட்டிலும் எவன் மிகவும் சிறப்புறறவனோ அவனை ஸாரதியாகஏற்படுத்துங்கள். காலதாமதம் செய்யவேண்டாம்' என்று சொன்னார், எல்லாத்தேவர்களும் இந்தவார்த்தையைக்கேட்டுப் பிதாமஹரை அடைந்து நமஸ்காரம்செய்து மஹரிஷிகளாலே அந்தப் பிரம்மதேவருக்கு அருள்வரச் செய்து ஒரே மனத்தையுடையவர்களாக விஜ்ஞாபனம் செய்தார்கள். 'தேவரே! தேவசத்துருக்களான அஸுரர்களைக் கொல்லும்விஷயத்தில் தேவரீரால் எந்த உபாயம் சொல்லப்பட்டதோ அது அவ்வாறே எம்மால் செய்யப்பட்டது. விருஷபத்வஜரும் பிரஸன்னராக இருக்கிறார். விசித்திரமானஆயுதங்களாலே நாலுபக்கத்திலும் நிறைக்கப்பட்டிருக்கிற ரதமும் அமைக்கப்பட்டது. அந்த உத்தமமான ரதத்தில் ஸாரதியாயிருக்கத்தக்கவனை நாங்களறியோம். தேவசிரேஷ்டரே! ஆதலால், ஒரு ஸாரதியை ஏற்படுத்தவேண்டும். விபுவே!

தேவரே! எங்களுடைய அவ்விதமான வாக்கை ஸபலமாகச்செய்வதற்கு நீரே தகுந்தவர். பகவானே! எங்களிடத்தில் முற்காலத்தில் இவ்விதமாக வார்த்தையைச் சொல்லியிருக்கிறீர். எப்பொழுதுமே அவமதிக்கமுடியாததும் பகைவர்களை ஒடும்படி செய்கின்றதும் உத்தமமுமான ரதமானது சேர்க்கப்பட்டுவிட்டது. இந்த ரதத்தில் தானவர்களைப் பயமுறுத்துகின்றவரும் முயற்சியுள்ளவரும் பிநாகத்தை வில்லாக உடையவருமான இவர் யுத்தஞ் செய்கிறவராக ஏற்பட்டுவிட்டார். அவ்வாறே, வேதங்களும் உத்தமமான ரதத்தில் குதிரைகளாக ஏற்படுத்தப்பட்டன. * நக்ஷத்திரங்களுடைய ஸமூஹங்களால் அநுஸரிக்கப்பட்டிருக்கின்றதும் வரூதங்களையுடையதுமான மஹாத்மாவான அந்தப் பரமசிவனுடைய ரதமானது மலைகளுடன் கூடின பூமிஸ்வரூபமாயிருக்கின்றது. இவைகளெல்லாவற்றிலும் விசேஷமுடையவனை ஒரு ஸாரதி அந்தரதத்திற்கு வேண்டும். பிதாமஹரே! தேவர்கள் அந்த ரதத்திலும் ரதத்திலுள்ள யுத்த வீரனிலும் கவசங்களிலும் சஸ்திரங்களிலும் வில்லிலும் பிரவேசித்திருக்கின்றார்கள். உம்மைத்தவிர அந்த ரதத்திற்கு வேறு ஸாரதியை நாங்கள் காணவில்லை. பிரபுவே! நீர் எல்லாக்குணங்களும் அமைந்தவரன்றோ? எல்லாத் தேவதைகளையுங்காட்டிலும் சிறப்புற்றவர். தேவரே! லோகேசரே! அதிவேகமாகச் செல்லுகின்றவையும் உபநிஷத்துக்களுடன் கூடினவையுமான இந்த வேதங்களாகிற குதிரைகளை அடக்குவதற்குத் தேவரீரே சக்தியுடையவர். எங்களுக்கு நீரே ஸாரதியாக இருக்கவேண்டும். யுத்தம்செய்வதற்குப் பலத்தினாலும் வீரியத்தினாலும் ஸத்வத்தினாலும் வினயத்தினாலும் ருத்திரரைக்காட்டிலும் மேற்பட்டிருக்கின்ற ஒரு ஸாரதி ஏற்படவேண்டும். ருத்திரரைக்காட்டிலும் மேற்பட்டவர் வேறொருவருமில்லை. அப்படிப்பட்ட தேவரீர் எங்களைக் கரையேற்றிவிடும். அழிவற்றவரே! நீர் ஸாரத்யம் செய்யும். உம்மைவிட மேலான வேறு ஒருவன் இவ்வுலகில் உண்டாகப்போகிறதுமில்லை. தேவேசரே! பேசுபவருள் சிறந்தவரே! நீர் எல்லாவிஷயங்களாலும் மேலானவர். நீர் அந்த ரதத்தின்மீதேறி உத்தமமான குதிரைகளைக் கடிவாளம்பிடித்து நடத்தும். தேவரே! தேவசத்துருக்கள் உம்முடைய அருளால் கொல்லப்படத்தக்கவர்கள். மிக்க தோள்வலியமைந்தவரே! நீர் அஸுரர்களிடத்தினின்றுண்டான பெரியபயத்திலிருந்து எங்

* வேறு பாடம்.

களைக் காப்பாற்றும். பற்றற்றவரே! நீரல்லவோ எங்களுக்குக் கதி மஹாவிரதிமுள்ளவரே! நீர் எங்களை ரக்ஷிக்கின்றவர். பிரபுவே உம்முடைய அனுக்கிரஹத்தினாலே தேவர்களெல்லாரும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறார்கள்' என்றனர்.

இவ்வாறு அந்தத் தேவர்கள் திரிலோகநாதரான பிதாமஹரை முடியால்வணங்கி (ருத்திரருக்கு) ஸாரத்யம்செய்வதின்பொருட்டு வேண்டினார்களென்று நமக்குக் கேள்வி. பிரம்மா, 'தேவர்களே இது இவ்விதம் உண்மையே. ருத்திரரைக் காட்டிலும் மேலானவன் வேறொருவனுமில்லை. மஹாத்மாவான சங்கரருக்கு ஸாரத்யத்தைச் செய்வேன். எவ்விதத்தினாலும் ரதிகனுக்கு மிகவும் சிறந்த ஒரு ஸாரதி ஏற்படுத்தப்பட வேண்டும். ஆதலால், இந்த உண்மையை உள்ளபடி அறிந்து ஒன்றுசேர்ந்தவர்களான உங்களை (உத்தேசித்து) இதோ நான் தேவரான ருத்திரருக்குக் குதிரைகளைப் பிடித்துநடத்துகிறேன்' என்றார். ஆறுகுணங்களால் நிறைந்தவரும் பிரபிதாமஹருமான ஸ்ரீ பிரம்மதேவர் இவ்வாறு சொல்லிவிட்டு ஜடாபாரத்தைக் கட்டிக்கொண்டு கிருஷ்ணாஜினத்தைத் திடமாக உடுத்துக் கமண்டலுவைக் கீழேவைத்துவிட்டுக் கொறடாவைக் கையில்பிடித்து அப்பொழுது (அந்த ருத்திரருடைய) ரதத்தின்மேல் ஏறினார். தேவர்களாலே ஸாரதியாக ஏற்படுத்தப்பட்ட அந்தப் பிரம்மதேவர் ஸித்தம் செய்யப்பட்டதும் உலகத்திலுள்ள பொருள்களால் நிரப்பப்பட்டதும் மஹாத்மாவான ருத்திரருடையதுமான ரதத்தில் ஏறும்பொழுது, வேதங்களாலே ஏற்படுத்தப்பட்ட குதிரைகள் தலைவணங்கிப் பூமியில் விழுந்தன. லோகநாதர்களான இருவர்களாலும் வீற்றிருக்கப்பட்ட உத்தமமான ரதத்தை வேதங்களான குதிரைகள் சுமக்கச் சக்தியற்றவைகளாக முழங்கால்களால் மண்டியிட்டுப் பூமியில் விழுந்தன. மஹிமைபொருந்தியவரும் வியாபகரும் தேவர்களுக்கெல்லாம் பிரபுவும் அழிவற்றவருமான ஸ்ரீ பிரம்மதேவர் குதிரைகளைக் கடிவாளங்களாலே மேலே நிமிரும்படி செய்து 'வேதமயமான இக்குதிரைகளுக்கு வீர்யமும் சௌர்யமும் உண்டாகுக' என்று ஸங்கல்பித்து ரதத்தை நடத்தினார். வரங்களைக் கொடுக்கின்ற பிரம்மதேவர் ரதத்திலேறினவுடனே அப்பொழுது பசுபதியானவர் தேவர்களுக்கெல்லாம் நாதரான அந்தப் பிரம்மதேவரைப் பார்த்து, 'நல்லது; நல்லது' என்று சொல்லிப் புன்னகையுடன் வசனிக்கலானார்.

'சத்துருக்களைச் சிக்ஷிப்பவரே! தேவரே! புறப்படும். எவ்விடத்தில் தைத்யர்களிருக்கின்றார்களோ அவ்விடத்திற்குக் குதிரைகளை நடத்தும். யுத்தத்தில் பகைவர்களைக் கொல்லுகின்ற என்னுடைய இருகைகளுடையபலத்தையும் இப்பொழுது பாரும்' என்றார். பிறகு, பிரம்மதேவர் பலசாலிகளான தானவர்களுடைய ஆகாயத்தில் நிலை பெற்றிருக்கின்ற பட்டணங்களைக்குறித்து மனோவேகத்துடனும் வாயுவேகத்துடனும்கூடின குதிரைகளை நடத்தினார். பிறகு, ரதத்தில் பூட்டப்பட்ட அந்த வேதமயமான குதிரைகள் உடனே கிளம்பி, ருத்ரரை அந்தக்ஷணத்திலேயே தைத்யர்களுடைய பட்டணத்தை அடையும்படிசெய்தன. அதர்வஅங்கிரஸர்களும் மஹாத்மாவான இந்த ருதத்திரருடைய சக்ரரக்ஷகர்களாயிருந்தார்கள். பிறகு, ருத்திரர் வில்லில் நாணேறிட்டு அவ்விதமான பாணத்தைப்பூட்டிப் பாசுபதாஸ்திரத்தோடு சேர்த்துத் திரிபுரததை அழிக்கவேண்டுமென்றுஎண்ணினார். ராஜரே! பிறகு, அந்தருத்திரர் வில்லில் பாணததைப்பூட்டிய அந்தச்சமயததில் மூன்றுபட்டணங்களும் விரைவாக ஒன்றாயிருக்கும்தன்மையை அடைந்தன. அந்தத்திரிபுரமானது ஒன்றாயிருக்கும்நிலைமையை அடைந்தவுடனே, மஹாதமாக்களானதேவர்களுக்குஅதிகமானமனக்களிப்பு உண்டாகியது. பிறகு, எல்லாததேவகணங்களும் ஸித்தர்களும் பரமரிஷிகளும் மஹேஶ்வரரை ஸ்தோததிரம்செய்து, 'ஜயத்தை அடைவீராக' என்கிற வார்த்தையை வெளியிட்டார்கள். பிறகு, அஸுரர்களை நாசம் செய்யப்போகிறவரும், வர்ணிக்கமுடியாததும் சிறந்ததுமான சரீரமுள்ளவரும், ஸஹிக்கமுடியாததேஜஸுள்ளவருமான மஹாதேவருக்கு எதிரில் திரிபுரமானது தோன்றியது. பிறகு, லோகநாதரும் ஷாட்குண்யபரிபூர்ணருமான பினாகியானவர், நேரில் (ஆகாயத்தில்) நிற்கின்ற மூன்றுபட்டணங்களையுங்கண்டு திவ்யமான அந்த வில்லிலுள்ள நாண்கயிற்றை இழுத்து மூவுலகங்களிலும் ஸாரமான அந்தப் பாணத்தைத் திரிபுரத்தைக் குறித்துப் பிரயோகித்தார். பரமேஶ்வரரும் தேவதேவருமான மஹேஶ்வரர் அஸுரர்களுடைய கூட்டத்துடன்கூடின அந்ததிரிபுரத்தை ஒரே பாணத்தினால் நாசஞ்செய்தார். பாணத்தினுடைய தேஜஸினாலுண்டான தீயினால் எரிக்கப்பட்டு ஆயிரம் துண்டாகச் சிதறிய அந்தப்பட்டணமானது அதிகமாகத தீனஸ்வரததை வெளியிட்டுக்கொண்டு மிச்சமில்லாமல் அழிந்துவிட்டது. மத்திரராஜரே! அஸுரகணங்களுடன்கூடின அந்த த்ரிபுரமானது மேற்கு ஸமுத்திரத்தில்

விழுந்துவிட்டது. கோபங்கொண்டவரும் மூவுலகங்களுக்கும் நன்மையைவிரும்புகின்றவருமான மஹேஸ்வரராலே இவ்வாறு திரிபுரங்கள் எரிக்கப்பட்டன. அஸுரர்களும் மிகுதியில்லாமல் செய்யப்பட்டார்கள். தம்முடைய 'குரோதத்தினின்று உண்டானது'ம், 'கொளுத்து' என்று சொல்லப்பட்டதும் தடுக்கப்பட்டதுமான அந்த நெருப்பானது மறுபடியும் மூவுலகங்களையும் வேற்றுமையின்றிக் கொளுத்துவதற்கு ஆரம்பித்தது. பிரளயகாலநெருப்புப்போலக் கொளுத்துவதற்கு மறுபடியும்மறுபடியும் எழுகின்ற அந்தநெருப்பை முக்கண்ணனர், 'நீ உலகங்களைச் சாம்பலாகச் செய்யாதே' என்று கட்டளையிட்டார். பிறகு, தேவலோகவாஸிகளான தேவர்களும் அவ்வாறே ரிஷிகளும் தம் நிலைமையை அடைந்தார்கள். அவர்கள், சிறந்த வாக்குகளாலே த்ரிபுரசத்ருவான ஸ்தாணுவை ஸ்தோத்திரம்செய்தார்கள். பிரஸன்னரானபகவானாலே அனுமதி கொடுக்கப்பட்டவர்களும் மனோரதம் நிறைவேறியவர்களுமான பிரம்மாவை முதன்மையாகக்கொண்ட அந்தத்தேவர்களனைவர்களும் வந்தபடியே திரும்பிச்சென்றார்கள். இவ்விதமாகப்பிதாமஹரான பிரம்மதேவர் ருத்திரருக்கு ஸாரத்யத்தைச் செய்தார். நீரும் மஹாபலசாலியான இந்த ராதேயனுடைய குதிரைகளை நடத்தும். நீர் பலத்தினாலும் ரூபத்தினாலும் உபாயத்தினாலும் அஸ்திர சம்பத்தினாலும் கிருஷ்ணனையும் கர்ணனையும் பல்குனனையும காட்டிலும் குணங்களால் மேன்மைபெற்றவர். ராஜரே ! நன்ருக (மனத்தில்) ஊன்றியிருக்கின்றதும் விரும்பப்பட்டிருக்கின்றதுமான ஹிதத்தை எனக்குச் செய்யும். தோஷமற்றவரே ! இந்தக் கர்ணன் யுத்தத்தில கொஞ்சம் குறைய ருத்திரருக்கு ஸமமானவன். நீரும் பிரம்மதேவருக்கு ஒப்பானவர். ஆகலால, நீங்களிருவர்களும் என்னுடைய சத்துருக்களையும் ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்களையும் ஜயிப்பதற்கு வல்லமையுடையவர்கள். இந்தக்கர்ணன் கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் வெண்ணிறமுள்ள குதிரைகளையுடையவனுமான குந்தீபுத்திரனை அடித்து உயிரை இழக்கும்படி செய்யக்கூடிய உபாயமானது உம்மால செய்யப்படவேண்டும். ராஜரே ! என்னுடைய ராஜ்யமும் ஸுகமும் உயிரும் ஜயமும் உம்மைச் சார்ந்திருக்கின்றன. அடையவேண்டுமென்று விரும்பப்பட்டிருக்கின்ற இந்த ஹிதத்தை எனக்குச் செய்யும். பகைவர்களைத் தபிக்கச்செய்பவரே ! ராஜரே! எனக்குப் பிரியததைச் செய்வதின்பொருட்டு இந்தக் கர்ணனுடைய குதிரைகளை அடக்கி நடத்தும்.

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

(துர்யோதனன் சல்யனுக்குப் பரசுராமருடைய சரித்திரத்தை உரைத்துக் கர்ணனுக்கு ஸாரத்யம் செய்வது தோஷமில்லை என்று காரணங்காட்டிக் கூறியது.)

சல்யமகாராஜரே! மறுபடியும், என்னிடத்தினின்று வேறு இந்த இதிஹாஸத்தையும் தெரிந்துகொள்ளும். தர்மங்களை அறிந்தவரான ஒரு பிராம்மணர் என் பிதாவினிடம் இதனைச் சொல்லினர். ஆச்சரியகரமான இந்த வார்த்தையைக்கேட்டு, காரணங்களையும் கார்யங்களையும் அர்த்ததத்துவங்களையும் அறிந்தவராகிய நீர் நன்ருக நிச்சயித்துச்செய்யும். இவ்விஷயத்தில் ஆலோசனைவேண்டாம். பார்க்கவர்களுடைய வம்சத்தில் மிக்க தவமுடையவரான ஜமதக்நி பிறந்தார். அவருக்குத் தேஜஸோடும் குணங்களோடுங்கூடின ராமரென்ற பிரஸித்தரான புத்திரரிருக்கிருர். அந்த ராமர் நிர்மலமான மனத்தையுடையவரும் நியமத்துடன் கூடியவரும் ஐம்பொறிகளையும் நன்கு அடக்கியவருமாகி அஸ்திரங்களை அடைவதற்காகக் கடுந்தவம்புரிந்து உருத்திரரைப் பிரஸன்னராகும்படி செய்தார். * தேவர்களுக்கெல்லாம் தேவரும் எல்லோருக்கும் மங்களத்தை உண்டுபண்ணுகிறவருமான சங்கரர் பக்தியினுலும் காந்தியினுலும் அந்தப் பரசுராமரிடத்தில் ஸந்தோஷமடைந்து அந்த ராமருடைய மனத்திலுள்ள விஷயத்தைத் தெரிந்துகொண்டு தமது ரூபத்தைப் பிரத்யக்ஷமாகக்காண்பித்தார். அவர், 'ராம! ஸந்தோஷமடைகிறேன். உனக்கு மங்களம். உன்னுடைய விருப்பமும் அறியப்பட்டுவிட்டது. ஆத்மாவைப் பரிசுத்தமாகச் செய்துகொள். இவையெல்லாவற்றையும் அடைவாய். எப்பொழுது, நீ பரிசுத்தமாவாயோ அப்பொழுது உனக்கு நான் அஸ்திரங்களைக் கொடுப்பேன். பார்க்கவ! தகுதியற்றவனையும் திறமையற்றவனையும் அஸ்திரங்கள் கொளுத்துகின்றன' என்ருர். தேவதேவரான சூலபாணி இவ்வாருகச் சொல்ல, பரசுராமர் மஹாத்மாவான பிரபுவை முடியினுல்வணங்கி மறுமொழி கூறலானுர். 'தேவேசரே! எப்பொழுது என்னை நீர் அஸ்திரங்களைத் தரிக்கும் விஷயத்தில் யோக்யனென்று அறிகிறீரோ அப்பொழுது சுச்ரூஷை செய்கின்ற எனக்குத் தேவரீர் அஸ்திரங்களைக் கொடுக்கவேண்டும்' என்ருர். பிறகு, அந்தப்பரசுராமர் தவத்தினுலும் விரதத்தினுலும் நியமத்தினுலும் ஹோமங்கள், மந்திரங்கள் இவைகளை

---

* ஒரு சொல் விடப்பட்டது.

முதன்மையாகக்கொண்ட பூஜைகளாலும் காணிக்கைகளாலும் பலிகளாலும் அப்பொழுது அநேகவருஷஸமூகங்களாக ஈஸ்வரரை ஆராதித்தார். மஹாத்மாவான பார்க்கவர்விஷயத்தில் பிரஸன்னரான மஹாதேவர் அடிக்கடி அவருடைய குணங்களைப் பார்வதியினுடைய ஸமீபத்தில், 'இந்த ராமன் எப்பொழுதும் என்னிடத்தில் பக்தியுள்ளவன். எப்பொழுதும் திடமான விரதத்தையுடையவன்' என்று சொல்லிவந்தார். பகைவர்களை அழிப்பவரே! இவ்வாறாகப் பிரபுவானவர் ஸந்தோஷத்துடன் இவருடைய குணங்களை மிகுதியாகத் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் முன்னிலையில் சொல்லினர். இச்சமயத்திலேயே தைத்யர்கள் அதிக பலசாலிகளானார்கள். அப்பொழுது, அவர்கள் கர்வத்தால் உண்டான மோகத்தினால் தேவர்களைத் துன்பஞ்செய்தார்கள். பிறகு, தேவர்கள் ஒன்றுசேர்ந்து அவர்களைக் கொல்வதற்கு நிச்சயம்செய்து சத்ருக்களைக் கொல்லுவதில் முயற்சியைச்செய்தார்கள்; ஆனால், தைத்யர்களை ஜயிப்பதற்குச் சக்தியற்றவர்களாயிருந்தார்கள். பிறகு, தேவர்கள் உமாபதியான மஹேஸ்வரரையடைந்து, அப்பொழுது பக்தியோடு, 'சத்ருக்கூட்டங்களை ஸம்ஹாரம் செய்யும்' என்று பிரஸன்னராகும்படி செய்தார்கள். பிறகு, தேவரான சங்கரர் தேவதைகளுக்குச் சத்துருநாசத்தைப் பிரதிஜ்ஞைசெய்து பார்க்கவராமரை அழைத்து, 'பார்க்கவ! உலகங்களுக்கு நன்மையைச்செய்வதின்பொருட்டும் எனக்குப் பிரியத்தைச்செய்வதின்பொருட்டும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற எல்லாத தேவசத்துருக்களையும் ஸம்ஹாரம் செய்' என்று சொன்னார். பாசுராமர், 'தேவேசரே! யுத்தத்தில் அஸ்திரங்களில் பழக்கமில்லாத எனக்கு அஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான தானவர்களனைவர்களையும் கொல்லுவதற்கு வல்லமை ஏது?' என்றுகூறினார். ஈஸ்வரர், 'என் அனுமதியினால் நீ செல். சத்துருக்களை ஸம்ஹரிப்பாய். எல்லாச் சத்துருக்களையும் ஜயித்து அதிகமான குணங்களை அடையப்போகிறாய்' என்று சொல்லினர். இந்த வார்த்தையைக்கேட்டுப் பாசுராமர் எல்லாவற்றையும் அங்கீகரித்து ஆசீர்வதிக்கப்பெற்றுத் தானவர்களை நோக்கிச் சென்றார். பிறகு, பார்க்கவராமர் அதிகமான இறுமாப்பையும் தேகவன்மையையுமுடையவர்களான தேவசத்துருக்களை வஜ்ரமும் இடியும்போலப் படுகின்ற அடிகளாலே ஜயித்தார். ராஜசிரேஷ்டரே! தானவர்களாலே காயம்பண்ணப்பட்ட சரீரத்துடன்கூடின அந்தப்பரசுராமர் ருத்திரரால் தொடப்

பட்டவுடனே காயங்கள் நீங்கினவரானார். அவ்விதமான அவருடைய செய்கையினாலே ஷாட்குண்ய பரிபூர்ணரான மஹாதேவர் பிரீதியுள்ளவருமானார்; மஹாத்மாவான பார்க்கவருக்குப் பறபலவிதமான வரன்களையும் கொடுததார். பிரீதியுள்ளவரும் தேவர்களுக்கெல்லாம் தேவரும் சூலபாணியுமான ஈஶ்வரர், 'பிருகுநந்தன! உன்னுடைய சரீரத்தில் சஸ்திரங்கள் விழுந்ததினாலுண்டான துன்பத்துடன் உன்னிடத்திலுள்ள மனிதச்செய்கையையும் போக்கிவிட்டேன். இஷ்டப்படி என்னிடத்திலிருந்து திவ்யாஸ்திரங்களைப் பெற்றுக்கொள்' என்று நியமித்தார். பிறகு, மிக்க தவமுள்ள பாசுராமர் எல்லா அஸ்திரங்களையும், மனத்தினால் விரும்பிய பலவிதமான வரன்களையும் பெறறுச் சிவபிரானை முடியினால் வணங்கித் தேவர்களுக்கெல்லாம் ஈசரான அவரிடத்தினின்று அனுமதிபெறறுச் சென்றார். இவ்விதமான இந்த முற்காலத்திய சரித்திரத்தை அந்த ரிஷியானவர் அவ்வாறு உரைத்தார். புருஷஶ்ரேஷ்டரான பார்க்கவரும், மிக்க பிரீதியுள்ள மனத்தோடு மஹாத்மாவான கர்ணனுக்குத் தனுர்வேதம் அனைத்தையும் கொடுத்தார். ராஜரே! இந்தக்கர்ணனிடத்தில் கொஞ்சமேனும் பாபம் இல்லை. இவன் ஸூதனாலே எப்பொழுதும் வளர்க்கப்பட்டான். இவன் ஸூதனல்லன். இவன் அரசனே. பிருகு குலத்தில்பிறந்த-பாசுராமரும் பரிசுத்தமான ஜாதியை அறிந்தே திவ்யாஸ்திரங்களைக் கொடுத்தார். கர்ணனை நான் எவ்விதத்தினாலும் ஸூதகுலத்தில் பிறந்தவனாக நினைக்கவில்லை. க்ஷத்திரியனுடைய குலத்திலபிறந்த தேவகுமாரனென்றே எண்ணுகிறேன். குலம் தெரியாமல்போவதின்பொருட்டு விடப்பட்டவனாயிருக்கலாமென்பது என்னுடைய எண்ணம். குண்டலங்களையுடையவனும் கவசமுள்ளவனும் நீண்ட கைகளையுடையவனும் பகைவர்களை அழிப்பவனும் சூரியனுக்கொப்பாக விளங்குகின்றவனுமான இந்தக்கர்ணன் ஸர்வவிதத்தினாலும் ஸூதகுலத்தில் பிறந்தவனேயல்லன். ஒரு ஹிம்மத்தைப் பெண்மானானது எவ்விதமாக உண்டுபண்ணும்? பருத்ததும் சிறந்த யானையினுடைய துதிக்கையைப் போன்றுமிருக்கின்ற இவனுடைய கைகளைப் பாரும். யுத்தத்தில் எல்லாச்சஸ்திரங்களையும் பொறுக்கின்றதும் அகன்றிருக்கின்றதுமான மார்பையும் பாரும். (கவசகுண்டலங்களை) அறுத்துக்கொடுத்தவனும் புருஷஶ்ரேஷ்டனுமான கர்ணன் ஸாமான்ய புருஷனேயல்லன். ராஜேந்திரரே! ராமருக்குச்சிஷ்யனும் பிரதாபசாலியுமான இந்தக்கர்ணன் மஹாபுருஷனே.

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

(துர்யோதனனால் வேண்டப்பட்ட சல்யன் ஒருவித உடன்பாட்டுடன் கர்ணனுக்குத் தேர்செலுத்தச் சம்மதித்தது.)

மகிமைபொருந்தியவரும் தேவரும் எல்லாவுலகங்களுக்கும் பிதாமஹருமான பிரம்மதேவர் அச்சமயத்தில் (ருத்திரருக்கு) ஸாரத்யம் செய்தார். ருத்திரர் ரதிகராயிருந்தார். வீரரே! ரதிகனைக்காட்டிலும் மேலாயிருப்பவன் ரதஸாரதியாக ஏற்படுத்தப்படத்தக்கவன். புருஷஸ்ரேஷ்டரே! ஆதலால், நீர் யுத்தத்தில் குதிரைகளை அடக்கி நடத்தும். அந்த த்ரிபுர ஸம்ஹாரத்தில் பிதாமஹர் தேவர்களுடைய கூட்டங்களாலே முயற்சியுடன் எவ்வாறு வரிக்கப்பட்டாரோ அவ்வாறே கர்ணனைக்காட்டிலும் மேலானவராயிருக்கின்ற நீர், எங்களால் பிரயத்னத்தினால் வரிக்கப்பட்டிருக்கிறீர். மஹாராஜரே! எவ்வாறு ஈசுவரரைக்காட்டிலும் மேலாயிருக்கின்ற பிரம்மதேவர் தேவர்களால் வரிக்கப்பட்டாரோ அவ்வாறே நீரும் வரிக்கப்பட்டிருக்கிறீர். மிக்க தேஜஸை உடையவரே! ருத்திரருடைய குதிரைகளைப் பிதாமஹர் நடத்தியதுபோல ராதாபுத்திரனான கர்ணனுடைய குதிரைகளை யுத்தத்தில் அடக்கி விரைவாக நடத்தும்' என்று கூறினான்.

சல்யன், 'ஆண்மையிற்சிறந்தவனே! (உன்னால்) சொல்லப்பட்டதும் திவ்யமானதும் மனிதர்களுடைய செய்கைக்கு மேற்பட்டதுமான தேவஸ்ரேஷ்டர்களுடைய இந்தச் சரித்திரமானது பலவாறாக என்னாலும் முந்திக் கேட்கப்பட்டிருக்கின்றது. பாரத! பிரபிதாமஹரான பிரம்மதேவர் ருத்திரருக்கு ஸாரத்யம் செய்ததும் ஒரே பாணத்தினால் அஸுரர்கள் கொல்லப்பட்டதும் பகவானான பிதாமஹர் அப்பொழுது ஸாரதியாயிருந்ததுமாகிய எல்லாம் கிருஷ்ணன் அறிவன். கீழ்ச்சொல்லிய இவை அனைத்தும் முற்காலத்தில் நடந்தவை இனிவருவதையும் முன்சென்றதையும் வாஸுதேவன் உள்ளபடி அறிகிறான். பாரத! பிரம்மதேவர் இவ்விஷயத்தைத் தெரிந்திருந்தும் ருத்திரருக்கு ஸாரதியாயிருத்தலை அடைந்ததுபோல வாஸுதேவன் பார்த்தனுக்கு ஸாரதியாயிருக்கும் தன்மையை அடைந்தான். ஸூதபுத்திரன் குந்தீபுத்திரனான அர்ஜுனனை எவ்விதத்திலாவது கொல்லுவனேயாகில், பார்த்தன் கொல்லப்பட்டதைப் பார்த்துக் கேசவன் தானே போர்புரிவான். சங்கம், சக்கரம் கதை இவைகளைக் கையில்கொண்டு ஸ்ரீகிருஷ்ணன் உன்னுடைய

ஸைன்யத்தைக் கொளுத்துவான். சோபங்கொண்டவனும் மஹாத்மாவுமான அந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு உன்னுடையதான இந்தப் பகைப்படைகளில் ஓர் அரசனாவது எதிரில் நிற்கப்போவதில்லை' என்று கூறினான்.

அவ்வாறு பேசுகின்ற அந்த மத்திரராஜனைப்பார்த்துச் சத்துருக்களை அடக்குகிறவனும் மிக்க புஜபலமுள்ளவனும் மனத்தளர்ச்சியில்லாதவனுமான உம்முடைய குமாரன் மறுமொழிகூறலானான். 'மிக்க தோள்வலியமைந்தவரே! சஸ்திரங்களைப் பிடித்தவர்களான எல்லாச்சூரர்களுள்ளும் சிறந்தவனும், எல்லாச் சாஸ்திரார்த்தங்களிலும் கரைகடந்தவனும், (உடன் பிறந்தகவசத்தையும் குண்டலங்களையும்) அறுத்துக் கொடுத்தவனுமானகர்ணனை யுத்தத்தில் நீர் அவமதிக்கக்கூடாது. பயங்கரமும் பெரிதுமான அவனுடைய நாணொலியையும் தலத்வனியையும் கேட்டுப் பாண்டவஸைன்யங்கள் பத்துத்திக்குக்களிலும் ஓடுகின்றதும், ராத்திரியில் அநேக மாயைகளை உண்டுபண்ணுகின்றவனும் மாயைகளை முன்னிட்டுக்கொண்டுவந்தவனுமான கடோத்கசன் கொல்லப்பட்டதும், உமக்கு நேரில் தெரியும். அர்ஜுனன் அதிகபயத்தினால் சூழப்பட்டு, இந்த நாள்களெல்லாம் எதிர்ப்படையில் எவ்விதத்தினாலும் வெளிப்பட்டுநிற்கவில்லை. பலசாலியான பீமஸேனனும் வில்லின் நுனியினால் எதிர்த்து அடித்துத் தூரத்தப்பட்டான். அரசரே! வயிறறை நிரப்பிக்கொள்பவனை மூடனென்றும் குறிப்பினால் சொல்லப்பட்டான். ஐயா! அவ்வாறே சூரர்களான மாத்ரீபுத்திரர்களை மஹாயுத்தத்தில் வென்றும் ஏதோ காரணத்தினால யுத்தத்தில் கொல்லாமல்விட்டவனும், விருஷ்ணிகளுள் சிரேஷ்டனும் ஸாத்வதர்களுள் உத்தமனுமான ஸாத்யகியை யுத்தத்தில் ஜயித்துப் பலாத்காரத்தினால் அவனை ரதத்தை இழக்கும்படிசெய்த சூரனும், யுத்தத்தில் புன்னகையுடன் திருஷ்டத்யும்னனை முதன்மையாகக் கொண்ட ஸ்ருஞ்சயர்களையும் மற்றவர்களையும் அடிக்கடி யுத்தத்தில் ஜயித்தவனும், யுத்தத்தில் கோபங்கொண்டால் வஜ்ரபாணியான இந்திரனையும் வெல்லக்கூடியவனுமான அப்படிப்பட்ட மஹாரதனைப் பாண்டவர்கள் யுத்தத்தில் எவ்வாறு ஜயிக்கப்போகிறார்கள்? நீரோ ஸகல அஸ்திரங்களையும் அறிந்தவர்; வீரர்; எல்லாவித்தைகளிலும் அஸ்திரங்களிலும் கரையை அடைந்தவர்; பூமியில் புஜபலத்தில் உமக்குச் சமமானவன் ஒருவனுமில்லை. நீர் பகைவர்களுக்கு முளை

போலிருக்கிறீர்; பராக்கிரமத்தில் ஸௌரிக்குமுடியாதவர். ராஜரே பகைவர்களை அழிக்கும்வல்லமையுடையவரே! இக்காரணத்தினா லேயே நீர், 'சல்யர்' என்று சொல்லப்படுகிறீர். உம்முடைய பாகு பலத்துக்கு எதிர்ப்பட்டு (திரும்பிப்போவதற்கு) ஸாத்வதர்களெ வர்களும் சக்தியுள்ளவர்களல்லர். ராஜரே! உம்முடைய பாகுபலத் தைக்காட்டிலும் கிருஷ்ணனுடைய பலம் மேலானதா? பல்குனன் கொல்லப்பட்டபிறகு, எவ்வாறு கிருஷ்ணனால் சேனை தரிக்கத்தக்க தோ அவ்வாறே கர்ணன் மாண்டுபோகுமானால் உம்மால் பெரும் படையானது தரிக்கத்தக்கது. ஐயா! யுத்தத்தில் வாஸுதேவன் யாதுகாரணம்பற்றி நமதுசேனையைத் தடுக்கப்போகிறான்? நீர் யாது காரணம்பற்றிச் சேனையை வதம்செய்யாமலிருப்பீர்? யுத்தத்தில் உம்மால் வீரர்களான ஸகோதரர்களுக்கும் எல்லா அரசர்களுக்கும் பட்டுணிபரமாமலிருக்கதலை அடையவிரும்புகிறேன்' என்று கூறினான்.

சல்யன், 'காந்தாரீபுத்திர! சத்துருக்களுடைய கர்வத்தைப் போக்குபவனே! படைகளுக்கெதிரில் நீ என்னைத் தேவகீபுத்திர னைக்காட்டிலும் மேலானவனென்று சொல்லுகிற காரணத்தினா உன்விஷயத்தில் நான் பிரீதியுள்ளவனாகிறேன். வீர! நீ எண்ணு கிறபடியே, பாண்டவர்களுள் சிறந்தவனான அர்ஜுனனோடு போர் புரிகின்றவனும் புகழ்ச்சியுடையவனுமான ராதேயனுக்கு இதோ நான் ஸாரதியம்செய்கிறேன். வீரனே! வைகர்த்தனனைப்பற்றி நான் ஒரு சபதம் செய்திருக்கிறேன். அவனிடத்தில் இஷ்டப்படி நான் வார்த்தைகளை வெளியிடுவேன்' என்று கூறினான். வேந்தரே உம்முடைய குமாரன் கர்ணனோடுசேர்ந்து, 'அவ்வாறே ஆகட்டும் என்று எல்லா அரசர்களுடைய முன்னிலையிலும் மத்திரராஜனை பார்த்துச் சொன்னான். அப்பொழுது சல்யன் ஸாரதியாயிருப்பதை ஏற்றுக்கொண்டபடியால் மனத்தேறுதலை அடைந்த துர்யோதனன் களிப்புற்று அந்தக் கர்ணனைக் கட்டிக்கொண்டான். ஸ்தோத்திரம் செய்யப்பட்ட உம்முடைய குமாரன் மறுபடியும் கர்ணனைப்பார்த்து 'கர்ண! மஹேந்திரன் அஸுரர்களை ஸம்ஹாரம்செய்ததுபோல யுத்தத்தில் எல்லாப் பார்த்தர்களையும் நீ ஸம்ஹாரம்செய்' என்று கூறினான். சல்யன் குதிரைகளை அடக்கி நடத்தும்வேலையை ஏற்றுக் கொண்டவுடனே, கர்ணன் மனத்தில் மகிழ்ச்சியடைந்து மறுபடி யும் துர்யோதனனைப்பார்த்து, 'ராஜனே! இந்த மத்திரராஜன் மனத் தில் அதிக ஸந்தோஷமில்லாதவனாகப் பேசுகிறான். மதுரமான

வாக்கினாலே மறுபடியும் இவனுக்குச் சொல்லு' என்று சொன்னான். பிறகு, மஹாபுத்திசாலியும் எல்லா அஸ்திரங்களிலும் தேர்ச்சியுடையவனும் பலசாலியும் ராஜாவுமான துர்யோதனன், பூபதியும் மத்ரராஜனுமான சல்யனை நோக்கி மேகம்போலக் கம்பீரமான வாக்கினால (யுத்தபூமியை) நிரப்புகிறவன்போல, 'சல்ய மஹாராஜரே! கர்ணன் அர்ஜுனனோடு போர்புரியவேண்டுமென்று இப்பொழுது நினைக்கிறான். புருஷசிரேஷ்டரே! நீர் யுத்தத்தில அந்தக் கர்ணனுடைய குதிரைகளை நடத்தும். கர்ணன் மற்றவர்களனைவர்களையும் கொன்று பல்குனனையும் கொல்வதற்கு விருப்பமுற்றிருக்கிறான். அரசரே! அவனுடைய குதிரைக் கடிவாளங்களைப்பிடிக்கும் விஷயத்தில் (கருணைபுரியவேண்டுமென்று) நான் அடிக்கடி உம்மை வேண்டுகிறேன். எவ்வாறு கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஸாரதியும் சிறந்தமந்திரியுமாயிருக்கிறானோ அவ்வாறே நீரும் (ஸாரதியும் மந்திரியுமாயிருந்து) ராதேயனை இடுக்கண்களிலிருந்தும் காப்பாற்றும்' என்று கூறினான். பிறகு, மத்திரதேசாதிபதியான சல்யன், அப்பொழுது பிரீதியை அடைந்து பகைவர்களைக் கொல்லுகிறவனும் உம்முடைய குமாரனுமான துர்யோதனனைக் கட்டிக்கொண்டு (பின் வருமாறு) உரைக்கலானான். 'ராஜனே! காந்தாரீபுத்திர! இனிமையான காட்சியையுடையவனே! இவ்வாறு நீ எண்ணுவாயானால உனக்குப் பிரியமான அனைத்தையும் நான் செய்யக்கடமைப்பட்டிருக்கிறேன். பரதஸ்ரேஷ்ட! பகைவர்களைவாட்டுபவனே! எந்தக் காரியத்தில் நான் தகுந்தவனோ அந்தக்காரியத்தில் நான் எவ்விதத்தாலும் முயற்சிசெய்து காரியத்தை நிர்வஹிப்பேன். ஹிதத்தைச் செய்வதில் விருப்பமுள்ளவனான நான் கர்ணனைக்குறித்துப் பிரியமோ அப்பிரியமோ எதைச்சொல்வேனோ அந்தவசனமனைத்தையும் நீயும் கர்ணனும் எவ்விதத்தாலும் பொறுத்துக்கொள்ளுங்கள்' என்று சொன்னான். கர்ணன், 'மத்திரநாத! ஈசுவரருக்கு, பிரம்மா எப்படியோ, பார்த்தனுக்குக் கேசவன் எப்படியோ அப்படியே எப்பொழுதுமே நமக்கு நன்மை செய்வதில பற்றுதலுள்ளவனாயிரு' என்று வேண்டினான். சல்யன், 'தன் இகழ்ச்சி, தற்புகழ்ச்சி, பரநிந்தை, பிறரைப் புகழ்தல என இந்நான்குவிதச்செய்கைகளும் ஆரியர்களால் அநுஷ்டிக்கப்பட்டவைகளல்ல. கற்றறிந்தவனே! நீ அறிவதின் பொருட்டு நான் சொல்லப்போகிறதான தற்புகழ்ச்சியோடுகூடின எனதுடையவார்த்தையை நீ உண்மையாக அறிந்துகொள். பிரபுவே!

தவறுதலில்லாமையாலும், குதிரையை ஓட்டுகிற ஸாமர்த்திய னாலும், வரும் காலத்தில் ஸம்பவிக்கக்கூடிய தோஷங்களை முந்தி ஊகிப்பதினாலும், அவ்விதமான தோஷங்களுக்குப் பரிகாரத்தை அறிவதினாலும், நேர்ந்திருக்கின்ற தோஷங்களை விலக்குவதில் ந ந்த ஸாமர்த்தியத்தைப்பெற்றிருத்தலாலும் இந்திரனுக்கு ஸாரத் செய்வதில் மாதலிபோல நான் ஸாரத்யம்செய்யத்தக்கவன். தே மற்றவனே! ஸூதபுத்திர! ஆதலால், யுத்தகளத்தில் பார்த்தனே போர்புரிகின்ற உன்னுடைய குதிரைகளை நான் நடத்துவேன். கவலையற்றிருப்பாயாக' என்று கூறினான்.

---

## மூப்பதாவது அத்யாயம்.

### (சல்யன் ஸாரதியாக வீற்றிருந்த தேரின்மீதேறிக் கர்ணன் யுத்தத்திற்குப் புறப்பட்டது.)

துர்யோதனன், 'கர்ண! கிருஷ்ணனைக்காட்டிலும் மேலான ணை இந்த மத்திரராஜன் தேவேந்திரனுக்கு மாதலிபோல உன ஸாரத்யம்செய்வான். இந்திரனுடைய குதிரைகளோடுகூடின ர தை மாதலி எவ்வாறு நடத்துகிறானோ அவ்வாறே சல்யன் பொழுது உன்னுடைய ரதத்திலுள்ள குதிரைகளைப் பிடித்து த்துவான். யுத்தவீரனான நீ ரதிகனாகவும் மத்திரராஜன் ஸாரதி வும் இருக்கையில் சிறந்த ரதமானது யுத்தத்தில் நிச்சயமாகப் பா தர்களை அவமதிக்கவேபோகின்றது' என்றான். வேந்தரே! பிற துர்யோதனன் மறுபடியும் பலசாலியான மத்திரராஜனைப்பார்த் 'மத்திரராஜரே! காலையில் நேர்ந்திருக்கின்ற யுத்தத்தில் கர்ண டைய உத்தமமான குதிரைகளை ரணரங்கத்தில் அடக்கிநடத்து உம்மாலே எல்லாப்பக்கத்திலும் காக்கப்பட்டால ராதேயன் தன யனை ஜயிப்பான்' என்று கூறினான். பாரதரே! இவ்வாறு சொ யதைக்கேட்ட சல்யன், 'நான் ரதத்தின்மீதேறி அவ்வாறே ஸா யம் செய்கிறேன்' என்று சொன்னான். சல்யன் ஏற்றுக்கொண் வுடனே, கர்ணன் மனமகிழ்ச்சியுடன் ஸாரதியை நோக்கி, 'ஸூ நீ எனக்காக ரதத்தை ஸித்தஞ்செய்' என்று அடிக்கடி விை டன் சொன்னான். பிறகு, ஸாரதியானவன், 'மங்களம்; ஜயிப்பீரா என்று சொல்லி ஜயத்தைத்தருவதும் கந்தர்வநகரத்துக்கொப்பா னம் முறைப்படி அமைக்கப்பட்டதும் உத்தமமுமான ரதமான

யுத்தத்திற்காக ஸன்னத்தமாயிருப்பதாகத் தெரிவித்தான். ரதிகர்களுள் சிரேஷ்டனான கர்ணன், முன்னமே பிரம்மவித்தான புரோஹிதரால் அபிமந்திரணம் செய்யப்பட்ட அந்த ரதத்தை முறைப்படி அர்ச்சித்துப் பிரதக்ஷிணம்செய்து பிரயத்தனத்துடன் பாஸ்கரனைத் துதித்துப் பக்கத்திலுள்ள மத்திரராஜனை நோக்கி, 'நீ ரதத்தில் ஏறு' என்று கூறினான். பிறகு, ஜயிக்கமுடியாததும் பெரிதுமான கர்ணனுடைய உத்தமமான ரதத்தில் மஹாதேஜஸ்வியான சல்யன் ஸிம்மமானது மலையின்மீது ஏறுவதுபோல ஏறினான். பிறகு, கர்ணன் சல்யனாலே ஏறப்பட்டதான உத்தமமான தன் ரதத்தைப் பார்த்து, மின்னலுடன்கூடின மேகத்தின்மீது ஸூர்யன் ஏறுவதுபோல ஏறினான். ஒரே தேரின்மீதேறினவர்களும், ஸூர்யனுக்கும் அக்னிக்கும் சமமான காந்தியுள்ளவர்களுமான அவ்விருவர்களும் ஆகாயத்தில் மேகத்தின்மீது ஸூர்யனும் அக்னியும் சேர்ந்திருந்தாற்போல விளங்கினார்கள். ஸ்தோத்திரம் செய்யப்படுகின்றவர்களும் மிக்க ஒளி பொருந்தியவர்களுமான அவ்விருவீரர்களும் அப்பொழுது யாகத்தில் ரித்விக்குக்களாலும் ஸதஸ்யர்களாலும் ஸ்தோத்திரம்செய்யப்படுகின்ற இந்திரனையும் அக்னியையும்போல இருந்தார்கள். சல்யனாலே பிடித்துநடத்தப்பட்ட குதிரைகளோடுகூடின ரதத்தில் வீற்றிருக்கின்றகர்ணன் கோரமானவில்லை ஒலிக்கும்படி செய்துகொண்டு * பரிவேஷத்துடன்கூடின பாஸ்கரன்போல விளங்கினான். உத்தமமான ரதத்தின்மீது ஏறியிருக்கின்றவனும் கிரணங்களைப்போன்ற அம்புகளையுடையவனும் புருஷஸ்ரேஷ்டனுமான கர்ணன் மந்தரபர்வதத்தின்மீது இருக்கின்ற ஸூர்யன்போல மிக விளங்கினான். ரதத்திலிருப்பவனும் மிக்க தோள்வலியமைந்தவனும் யுத்தத்தில் அளவுகடந்த தேஜஸுள்ளவனுமான அந்த ராதேயனை நோக்கித் துர்யோதனன் பின்வருமாறு வசனிக்கலானான். 'அதிரதபுத்திர! வீரனே! எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துரோணராலும் பீஷ்மராலும் செய்யப்படாததும் யுத்தத்தில் செய்ய அரிதுமான கார்யத்தை நீ செய். மஹாரதர்களான பீஷ்ம துரோணர்கள் அர்ஜுனனையும் பீமஸேனனையும் நிச்சயமாகக் கொல்லுவார்களென்று என்மனத்தில் எண்ணமிருந்தது. வீர! ராதாபுத்திர! அவ்விருவர்களாலும் செய்யப்படாத வீரச்செய்கையை வஜ்ராயுதத்தைக்

* பீஷ்மபர்வம் 6-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

கையில்கொண்ட வேறொரு இந்திரன்போல மஹாயுத்தத்தில் நீ செய். ராதேய! தர்மராஜனையாவது பிடி; தனஞ்சயனையாவதுகொல்; பீமஸேனனையும் இரட்டைப்பிள்ளைகளான மாத்ரீபுத்திரர்களையும் வதம்செய். ஆண்மையிற்சிறந்தவனே! உனக்கு ஜயமுண்டாகுக. உனக்கு மங்களம். நீ யுத்தத்திற்குச்செல். பாண்டுபுத்திரனுடைய படைகளனைத்தையும் சாம்பலாகச்செய்' என்று கூறினான். பிறகு, அடிக்கப்படுகின்ற ஆயிரக்கணக்கான தூரியவாத்தியங்களும் பதினாயிரக்கணக்கான பேரீவாத்தியங்களும் ஆகாயத்தில் மேகங்களுடைய முழக்கம்போல் இனிது முழங்கின. ரதிகசிரேஷ்டனான ராதேயன் ரதத்திலிருந்துகொண்டே அந்தச்சொல்லை ஏற்றுக்கொண்டு யுத்தத்தில் ஸமர்த்தனான சல்யனைநோக்கி, 'மிக்க பலமுள்ளவனே! குதிரைகளை நடத்து. நான் தனஞ்சயனையும் பீமஸேனனையும் இரட்டைப் பிள்ளைகளான நகுல ஸகதேவர்களையும் ராஜாவான யுதிஷ்டிரனையும் கொல்லுவேன். சல்ய! தனஞ்சயன் கழுகிறகுகள்பூண்ட பாணங்களை நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் பிரயோகிக்கின்ற என்னுடைய புஜபலத்தை இப்பொழுது பார்க்கட்டும். சல்ய! பாண்டவர்கள் அழிவதின்பொருட்டும் துர்யோதனனுடைய ஜயத்தின்பொருட்டும் மிக்ககூர்மையுள்ள பாணங்களை இப்பொழுது நான் பிரயோகிக்கப்போகிறேன்' என்று கூறினான்.

அரசரே! இவ்விதமான அந்தக் கர்ணனுடைய வார்த்தையைக் கேட்டுச் சல்யன் கர்ணனைப்பார்த்து, '(கர்ண!) நேரில்வந்த மகேந்திரனுக்கும் பயத்தையுண்டுபண்ணுகிறவர்களும் மஹாவீரியமுள்ளவர்களும் எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவர்களும் பெரிய வில்லைக் கையில்பிடித்தவர்களும் மஹாபலசாலிகளும் புறங்கொடாதவர்களும் மஹாபாக்கியசாலிகளும் ஜயிக்கமுடியாதவர்களும் உண்மையான விக்கிரமமுள்ளவர்களுமான அந்தப் பாண்டவர்களனைவர்களையும் எவ்வாறு நீ அவமதிக்கலாம்? ராதேய! இடிமுழக்கம்போன்ற பார்த்தனது வில்லினுடைய நாணொலியைக் கேட்கும்பொழுது இவ்வாறு பேசமாட்டாய். பீமனாலே யுத்தத்தில் அடிக்கப்பட்டதும் தந்தம் முறிந்ததுமான யானைப்படையை நீ எப்பொழுது பார்ப்பாயோ அப்பொழுது இவ்வாறு பேசமாட்டாய். கூர்மையான பாணங்களால் ஆகாயத்தில், மேகங்களின்நிழலைப்போன்ற (நிழலைச்)செய்கின்ற தர்மபுத்திரனையும் நகுல ஸகதேவர்களையும் அவ்வாறே யுத்தரங்கத்தில் பாணங்களைப் பிரயோகிக்கின்றவர்களும் பகைவர்களைத் துன்புறுத்

நபவர்களும் கைச் சுறுசுறுப்புள்ளவர்களும் அணுகமுடியாதவர்களு மான மற்ற அரசர்களையும் எப்பொழுது நீ பார்ப்பாயோ அப்பொழுது இவ்வாறாக நீ பேசமாட்டாய்' என்றான். வேந்தரே! மத்திராராஜனால் சொல்லப்பட்ட அந்தவார்த்தையை அலக்ஷியம்செய்துவிட்டுக் கர்ணன் அவனைநோக்கி, 'இப்பொழுது நீ பார்க்கப்போகிறாய்' என்று மறுமொழி கூறினான்.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

**(கர்ணன் போருக்குப் புறப்படுகையில் துர்நிமித்தங்கள்தோன்றியதும், அவன் தன்னைப்புகழ்ந்து அர்ஜுனனுடைய வதத்தைப் பிரதிஜ்ஞை செய்ததும், சல்யன் அதனைப்பொறாமல் அர்ஜுனனைப் புகழ்ந்து கர்ணனை நிந்தித்ததும்.)**

மஹா வீர்யமுள்ளவனும் யுத்தம் செய்ய எண்ணங்கொண்டு ஸன்னத்தனாயிருக்கின்றவனுமான கர்ணனைப் பார்த்துக் கௌரவர்களனைவர்களும் அதிக ஸந்தோஷமுள்ளவர்களாக எல்லாப்பக்கத்திலும் கூச்சலிட்டார்கள். பிறகு, துந்துபி வாத்தியங்களுடைய சப்தங்களோடும் பேரிகளுடைய சப்தங்களோடும் பற்பலவிதமான *கோணங்களுடைய சப்தங்களோடும் குதிரைமுதலானவைகளுடைய கர்ஜனங்களோடும், உம்மைச் சேர்ந்தவர்களனைவர்களும் மரணம் நிச்சயமாயிருப்பதாக நினைத்துப் புறப்பட்டார்கள். பிறகு, கர்ணன் புறப்படவே, ரதிகர்களும் உத்ஸாகத்துடனிருக்கும்பொழுது பூமியனைத்தும் நடுங்கியது; மிகவும் விகாரமான ஒலியுடன் சப்திக்கவும் சப்தித்தது. ஸூரியனிடத்தினின்று ஏழுமஹாக்கிரகங்கள் வெளிவருகின்றவைகளாகக் காணப்பட்டன. திக்குகளுடைய எரிதல்களால் பயங்கரமான எரிநக்ஷத்திரங்களுடைய வீழ்ச்சிகளும் உண்டாயின. அவ்வாறே இடிகளும் வீழ்ந்தன. பயங்கரமான காற்றுக்களும்வீசின. மிருகபக்ஷிகளுடைய கூட்டங்கள் பெரிதான பயத்தைத்தெரிவித்துக்கொண்டு பலவாறாக உம்முடைய சேனையை அப்பொழுது இடமாகச் சுற்றிவந்தன. புறப்பட்டவனான கர்ணனுடைய குதிரைகள் பூமியில் வீழ்ந்தன. ஆகாயத்தினின்று பயங்கரமான எலும்புமழை பொழிந்தது. அரசரே! சஸ்திரங்களும் ஜ்வலித்தன. கொடிகளும் நடுங்கின. வாகனங்களும் கண்ணீரைச் சொரிந்தன. ஐயா! இப்

* ஒருவகை வாத்தியம்.

படிப்பட்ட நிர்நிமித்தங்களும் மிக்கபயங்கரமான மற்றஅநேக உத்பாதங்களும் கௌரவர்களுடைய விநாசத்தின்பொருட்டுத்தோன்றின. எல்லா அரசர்களும் தெய்வத்தினாலே புத்தி மயக்கங்கொண்டவர்களாகி அவைகளைக்கவனியாமலே புறப்பட்டிருக்கின்ற ஸூதபுத்திரனைப்பார்த்து, 'ஜயத்தை அடைவாயாக' என்று கூறினார்கள். அவ்விடத்திலுள்ள கௌரவர்கள் யுத்தத்தில் விளங்குகின்றவனும் சல்யனோடுகூடியவனுமான கர்ணனைப்பார்த்து, 'பாண்டவர்கள்ஜயிக்கப்பட்டார்கள்' என்றெண்ணினார்கள். பிறகு, பகைவீரர்களைக்கொல்லுகின்றவனும் ரதத்தில் வீற்றிருப்பவனும் மிக ஜ்வலிக்கின்றவனும் சூரியனுக்கும் அக்னிக்கும் ஸமமான ஒளிபொருந்தியவனும் பகைவர்களை மிகுதியாகத் துன்பம் செய்கிறவனும் ரதிகர்களுள் உத்தமனுமான அந்தக் கர்ணன், பீஷ்மரும் துரோணரும் விழுந்ததை ஆலோசித்தும் பார்த்தனுடைய ஒப்பற்றதானசெய்கையைக்கண்டும் மானத்தினாலும் கர்வத்தினாலும் அதிகமாக எரிக்கப்படுகின்றவனாகவும், கோபத்தினால்ஜ்வலிக்கின்றவனாகவும், பெருமூச்சுவிடுகின்றவனாகவும் சல்யனை அழைத்து (பின்வரும்) வாக்கியத்தை உரைக்கலானான்.

'ரதத்தின்மீதேறி விற்பிடித்திருக்கின்றவனான யான், கோபங்கொண்டு வஜ்ராயுதத்தைக் கையில்கொண்ட இந்திரனிடத்தினின்றுங்கூடப் பயப்படமாட்டேன். படுத்திருக்கின்ற பீஷ்மர் முதலானவர்களைப் பார்த்துங்கூட என்னை அவ்விதமான மனஉறுதியானது விட்டுவிலகவில்லை. மஹேந்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் ஒப்பானவர்களும், புகழத்தக்கவர்களும், ரதங்களையும் குதிரைகளையும் சிறந்த யானைகளையும் நாசம்பண்ணுகிறவர்களுமான பீஷ்மரும் துரோணரும் வதம்செய்யத்தகாதவர்களாயிருந்தும் சத்துருக்களால் கொல்லப்பட்டார்கள். அப்படியிருந்தும் யுத்தத்தில் இப்பொழுது எனக்குப் பயமில்லை. யுத்தத்தில் சூதர்களோடும் யானைகளோடும் ரதங்களோடுங்கூடச் சத்துருக்களால் கொல்லப்பட்டிருக்கின்ற அதிபலசாலிகளான அரசர்களை நன்றாகப் பார்த்து, மஹாஸ்திரங்களை அறிந்தவரும் பிராமணஸ்ரேஷ்டரும் ஆசாரியருமான துரோணர் எல்லாச் சத்துருக்களையும் யுத்தத்தில் ஏன் கொல்லாமலிருந்தார்? கௌரவர்களே! மஹாயுத்தத்தில் அவ்விதமான நான் துரோணரை நினைத்துக்கொண்டு உண்மையாகச் சொல்லுகிறேன்; தெரிந்துகொள்ளுங்கள். மிருத்யுவைப்போல்உக்கிரரூபியும் எதிர்த்துவருகின்றவனுமான அர்ஜுனனை யுத்தத்தில் என்னைத்தவிர உங்களில் வேறொருவனும் ஸஹிக்கமாட்டான். துரோணரிடத்தில் அஸ்திரசிக்ஷை

யும் மனத்தெளிவும் பலமும் தைரியமும் மஹாஸ்திரங்களும் வணக்கமும் (குடிகொண்டிருந்தன). அப்படிப்பட்ட மஹாத்மாவான துரோணரே மிருத்யுவசத்தை அடைந்துவிட்டாராதலால் மற்ற அனைவர்களையும் இப்பொழுது நெருங்கின மிருத்யுவை உடையவர்களென்றே எண்ணுகிறேன். இவ்வுலகத்தில் கர்மங்களுடைய ஸம்பந்தமானது எப்பொழுதும் இருப்பதால் நன்றாக ஆலோசிக்குமிடத்து ஒன்றுமே சாஸ்வதமல்லவென்று சொல்லுகிறேன். ஆசார்யரான துரோணர் இப்பொழுது கொல்லப்பட்டமையால், எந்த மனிதன் தான் (அடுத்தநாள்) ஸூர்யோதயத்தில் தானிருப்பதாக ஸம்சயமின்றி நினைப்பான்? ஆசாரியரே யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டமையால் அஸ்திரங்களும் பலமும் பராக்கிரமமும் கர்மானுஷ்டானங்களும் நல்ல நீதியும் உத்தமமான ஆயுதங்களும் மனுஷ்யனுடைய ஸுகத்தின்பொருட்டு இருப்பதாகத் திறமையற்றவையே; நிச்சயம். நெருப்புக்கும் சூரியனுக்கும் ஸமமான தேஜஸுடன்கூடியதும் பராக்கிரமத்தினால் விஷ்ணுவுக்கும் புரந்தரனுக்கும் ஒப்பானதும் நீதியில் பிருகஸ்பதிக்கும் சுக்கிரனுக்கும் ஒப்பானதும் ஸஹிக்க முடியாததுமான இந்த அஸ்திரசக்தி எப்பொழுதுமே அவரை உபாஸிக்கவில்லை. கௌரவசேனையானது அழுகின்ற ஸ்திரீகளுடனும் சிறுவர்களுடனும் பெருங்கூச்சலுள்ளதும், கார்த்தராஷ்டிரனுடைய பௌருஷமும் அவமதிக்கப்பட்டதுமாகவே, இப்பொழுது நான் செய்யவேண்டிய காரியத்தை அறியவில்லை. சல்ய! ஆகவால், பகைவர்களுடைய படையை நோக்கிச்செல். எந்த ஸேனையில் ஸத்யஸந்தனும் அரசனுமான பாண்டுநந்தனனும் பீமஸேனனும் அர்ஜுனனும் அந்த வாஸுதேவனும் ஸாத்யகியும் ஸ்ருஞ்சயர்களும் நகுலசகதேவர்களும் இருக்கிறார்களோ அதில் அவர்களை என்னைத்தவிர வேறு எவன் எதிர்க்கிறான்? மத்திரராஜனே! ஆதலால், நீ யுத்தத்தில் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் நோக்கி விரைவாகச் செல். யுத்தத்தில் அவர்களோடு எதிர்த்து அவர்களையாவது கொல்லுவேன்; அல்லது துரோணரை முன்னிட்டுக்கொண்டு யமலோகமாவது செல்வேன். சல்ய! நான் பீஷ்மாதிகளான அந்தச் சூரர்களுடைய மத்தியில் செல்லாமலிருக்கப்போகிறதே இல்லை என்று இப்பொழுது நீ அறிவாயாக. இந்த மித்திரத் துரோகமானது என்னால் ஸஹிக்கத்தக்கதன்று. பிராணனை இழந்து துரோணரைப் பின் தொடரப் போகிறேன். ஆயுளினுடைய முடிவுக்காலம் நேர்ந்துவிட்டால், யமனுக்கு ஒப்பானவனை

இருந்தாலும் கற்றறிந்தவனோ அல்லது மூடனோ ஒருவனையும் மிருத்யுவானது விடுவதில்லை. கற்றறிந்தவனே! ஆதலால், பார்த்தனோடு போர்புரியப்போகிறேன். தெய்வத்தை மீறிநடக்கமுடியாது. விசித்திரவீர்யனுடைய குமாரனான திருதராஷ்டிரனுடைய புதல்வனான துர்யோதனராஜன் எப்பொழுதும் என்விஷயத்தில் மங்களகரமான செய்கையை உடையவனாயிருந்தான். அவனுடைய காரியஸித்தியின் பொருட்டு நான் பிரியமான போகங்களையும் விடமுடியாததான உயிரையும் இழக்கிறேன். புலித்தோல மூட்டமுள்ளதும் சத்தமிடாத அச்சுள்ளதும் ஸ்வர்ணமயமானதும் மூன்று *கோசங்களோடு கூடினதும் வெள்ளியினால செய்யப்பட்ட த்ரிவேணுவுள்ளதும் ஜாதிக் குதிரைகளுடன் கூடினதுமான இந்தச்சிறந்தரதத்தைப் பரசுராமர் எனக்குக் கொடுத்தார். சலய! அவர், நன்றாகப் பார்த்து விசித்திரமான விறகளையும், கொடிமரங்களையும், கதாயுதங்களையும், கொடிய அம்புகளையும், ஜ்வலிக்கின்ற கத்தியையும், உத்தமமான ஆயுதத்தையும், வெண்ணிறமும் நல்ல நாதமுமுள்ள உக்கிரமான சங்கத்தையும் எனக்குக் கொடுத்தார். கொடித்துணியுடன்கூடியதும் இடிவிழும் சப்தத்துக்கொப்பான சப்தமுள்ளதும் வெண்ணிறமான குதிரைகள்கட்டியதும் மங்களகரமான அம்புப்பெட்டியால் விளங்குகின்றதுமான இந்த உத்தமமான ரதத்தின்மீதேறிப் பலத்தினாலே யான் அர்ஜுனனை யுத்தத்தில் திடமாகஅடித்துக் கொல்லப்போகிறேன். அந்தப் பாண்டுபுத்திரனை யுத்தத்தில் எல்லாவற்றையும் அபஹரிக்கிறவனான மிருத்யுவே எப்பொழுதும் கவனத்துடன்பாதுகாக்ினும் யுத்தத்தில் நான் எதிர்த்து அந்தயமனையும் கொல்வேன்; இல்லையாயின் துரோணரை முன்னிட்டுக்கொண்டு யமனையாவது அடைவேன். அதிகமாகப் பேசுவதால் யாதுபயன்? யமனும் வருணனும் குபேரனும் இந்திரனும், பரிவாரங்களோடு ஒன்றுசேர்ந்து ஒரேஸமயத்தில் பலகுனனை இந்த மஹாயுத்தத்தில காப்பாற்றினாலும் அவர்களோடுங்கூடவே அந்த அர்ஜுனனை ஜயிப்பேன்' என்று கூறினான்.

இவ்வாறாக யுத்தத்தில் அதிகத்வரையுள்ளவனும் தற்புகழ்ச்சி செய்கின்றவனுமானகர்ணனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு வீரியமுடையவனான அந்த மத்திரராஜன் அவமதித்துப் பரிகாஸம் செய்தான்; மறுத்து மறுமொழியும் கூறலானான். 'கர்ண! தற்புகழ்ச்சியை நிறுத்து; நிறுத்து. நீ அதிகபலமுள்ளவனாயிருந்தாலும் அதிக வார்த்தையைச் சொல்லிவிட்டாய். இந்தயுத்தத்தில் புருஷச்ரேஷ்டனான

* தேரின் உட்புறம்.

தனஞ்சயன் எங்கே? புருஷோத்தமனை நீ எங்கே? ஆச்சரியம்! உபேந்திரனால் ரக்ஷிக்கப்பட்டதும் தேவராஜனால் ரக்ஷிக்கப்பட்ட தேவலோகம்போன்றதுமான யாதவர்களுடைய வாஸஸ்தானமான த்வாரகையைப் பலாத்காரமாக மிகக் கலங்கும்படிசெய்து புருஷஸ்ரேஷ்டனை கிருஷ்ணனுக்கு இளையஸகோதரியான ஸுபத்திராதேவியை அர்ஜுனனன்றி வேறுஎந்தமனிதன் கவர்வான்? மிருகத்தை வேட்டையாடுவதில நேர்ந்த கலகத்தில தேவராஜனுடைய வீரியத்துக்குச் சமமான வீர்யமுள்ள அர்ஜுனனைததவிர வேறு எந்தமனிதன் மூவுலகங்களையும் படைத்தவரும் ஈஸ்வரர்களுக்கெல்லாம் ஈசுவரருமான ருத்திரனை யுத்தத்திற்காக அழைப்பான்? விஜயன் அக்கினியினிடத்தினுள்ளகௌரவத்தினாலே அஸுரர்களையும் தேவர்களையும் மகாநாகங்களையும் மனிதர்களையும் கருடர்களையும் பிசாசங்களையும் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் அம்புகளால்ஜயித்தான்; அவனுடன் விரும்பப்பட்ட ஹவிஸ்ஸையும் (அக்கிக்குக்) கொடுத்தான். அதிரதபுத்திர! அர்ஜுனன், பகைவரால் கவரப்பட்ட துர்யோதனன்முதலான கௌரவர்களை, புருஷஸ்ரேஷ்டர்களுடன்கூடின அந்தப் பலசத்துருக்களைக் கொன்று விடுவித்ததை நினைக்கிறாயா? நீ தொடக்கத்தில (யுத்தத்தை விட்டு) ஓடவே, கலகப்பிரியர்களான திருதராஷ்டிருருடைய குமாரர்கள கந்தர்வர்களுடைய கூட்டங்களோத தோல்வியடையச்செய்து பாண்டவர்களால விடுவிக்கப்பட்டதாக நினைக்கிறாயா? மாடுபிடிசண்டையில ஒன்றுசேர்ந்த படைகளோடும் வாகனங்களோடும்கூடியவர்களும் ஆசாரியரான துரோணருடனும் ஆசாரியபுத்திரரான அஸ்வத்தாமாவுடனும் பீஷ்மருடனும்கூடியவர்களுமான நீங்களனைவர்களும் புருஷசிரேஷ்டனை அர்ஜுனனாலே ஜயிக்கப்பட்டீர்கள். அப்பொழுது உன்னாலே அப்படிப்பட்ட அர்ஜுனன் ஏன் ஜயிக்கப்படவில்லை? ஸூதபுத்திர! உன்னுடைய அழிவின்பொருட்டு இப்பொழுது ஸர்வோத்தமமான வேறு ஒரு யுத்தம் இதோ மீண்டும் வந்துவிட்டது. யுத்தரங்கத்தை அடைந்திருக்கிற நீ சத்துருபயத்தால ஓடாமலிருப்பாயாகில் இப்பொழுது மாண்டாய்' என்று கூறினான். உதாரமான மனமுள்ள சல்யன் அதிகுரூரமாயுள்ள சத்துருஸ்தோத்திரத்தை இவ்வாறு கூறுமளவில், பகைவரைவாட்டுபவனும் கௌரவசேனாதிபதியுமான கர்ணன் மிக்ககோபமுற்று மத்திரராஜனைப்பார்த்து உரைக்கலானான்.

'சல்ய! இருக்கட்டும்; இருக்கட்டும். ஏன் பிதற்றுகிறாய்? எனக்கும் அந்த அர்ஜுனனுக்கும் யுத்தம் நேர்ந்துவிட்டது. அவன்

என்னை இந்தயுத்தத்தில் ஜயிப்பானேயாகில் அப்பொழுதல்லவோ உன்னுடைய இந்தப் பிதற்றலெல்லாம் யதார்த்தமாகும்?' என்றான். சல்யன், 'இவ்வாறு ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு வேறுமறுமொழியொன்றும் சொல்லவில்லை. யுத்தம்செய்யவேண்டுமென்ற விருப்பத்துடன் கர்ணன், 'சல்ய! போ' என்று கூறினான். சல்யனை ஸாரதியாகக்கொண்ட அந்த ரதிகனான கர்ணன், இருளைநாசம்செய்கின்ற சூரியன்போல யுத்தத்தில் பகைவர்களை நாசஞ்செய்துகொண்டு பகைவர்களைக் கொல்லுகின்ற சத்துருக்களைநோக்கி விரைவாகச் சென்றான். பிறகு, காந்தியுடன்கூடியவனான கர்ணன் புலித்தோலால் மூடப்பட்டதும் வெண்மையான குதிரைகளுடன்கூடியதுமான ரதத்தோடு சென்றான். அவனும் பாண்டவர்களுடைய சேனையைப்பார்த்து விரைவுடன் தனஞ்சயனைப்பற்றி வினவினான்.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

### (கர்ணன், தனக்கு அர்ஜுனனைக் காட்டுபவனுக்கு அவன் விரும்பும் பரிசளிப்பதாக உறுதிகூறியது.)

அப்பொழுது, கர்ணன் உம்முடையசேனையை மிகுந்த முயற்சியுடனே ஸந்தோஷமடையும்படி செய்துகொண்டு யுத்தபூமியிலுள்ள ஒவ்வொருவனையும் பார்த்துப் பாண்டவனைப்பற்றி வினவினான். இப்பொழுது எனக்கு மஹாரதனான அர்ஜுனனைக் காண்பிப்பவனுக்கு அவன் மனத்தினால் விரும்புகிற பொருளைக் கொடுப்பேன். எவன் எனக்கு அர்ஜுனனைக் காண்பிக்கிறானோ அவன் அதில் திருப்தியடையானாயின் அவனுக்கு நான் மறுபடியும் ரத்தினங்கள் நிறைந்த வண்டியைக் கொடுப்பேன். அர்ஜுனனை எனக்குக் காட்டுகின்றமனிதன் அதில்திருப்தியடையானாயின் அவனுக்கு எப்பொழுதும் *வெண்கலப்பானை நிறையப் பால்கறக்கக்கூடிய நூறு பசுக்களை நான் கொடுக்கிறேன். அர்ஜுனனைக் காண்பிக்கின்றவனுக்குச் சிறந்த நூறு கிராமங்களைக் கொடுப்பேன். எனக்கு அர்ஜுனனைக் காண்பிப்பவனுக்குக் கரிய கூந்தலையுடைய வேலைக்காரிகளுடன் வெண்மைநிறமுள்ளதும் பெண்கோவேறுகழுதைகள் கட்டியதுமான தேரை நான் கொடுப்பேன். அர்ஜுனனைக் காட்டுகின்ற மனிதன்

---

* 'காம்ஸ்யதோஹநம்' என்பது மூலம்; 'கறக்க வெண்கலபாத்திரங்களுடன்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

அதில் திருப்தியடையானாகில் அவனுக்கு மறுபடியும் * ஸ்வர்ணமய மான கஜராஜனை நான் கொடுப்பேன். அவ்வாறே பின்னும் அவனுக்கு நல்ல யௌவனப் பருவத்திலுள்ளவர்களும் கழுத்தில் பொன்னணி களை யணிந்தவர்களும் பாட்டுக்களையும் வாத்யங்களையும் நன்கு கற் றறிந்தவர்களும் அலங்கரிக்கப்பட்டவர்களுமான அநேகம் ஸ்திரீகளை யும் நான் கொடுப்பேன். அர்ஜுனனைக் காட்டுகிறமனிதன் அதில திருப்தியடையானாகில் அவனுக்கு நூறுயானைகளையும் நூறுகிராமங் களையும் நூறு ரதங்களையும் சிறந்த ஸ்வர்ணத்தையும் புஷ்டியுள்ளவை யும் குணங்கள் நிரம்பியவையும் சாந்தமானவையும் பாரத்தைத் தாங்குவதில் திறமையுள்ளவையும் நன்றாகப் பழக்கப்பட்டவையு மான உத்தம ஜாதிக் குதிரைகள் பதினாயிரத்தையும் நான் கொடுப் பேன். தனஞ்ஜயனைக் காண்பிப்பவனுக்குத் தங்கமயமான கொம்புக் குமிழ்களுள்ளவையும் கன்றுக்குட்டிகளையுடையவையும் புதிதாக ஈன்றவைகளுமான நானூறு பசுக்களைக்கொடுப்பேன். அர் ஜுனனைக் காண்பிக்கின்றமனிதன் அதிலும் திருப்தியடையானாகில் மேலான ஐந்நூறு வெள்ளைக் குதிரைகளைக் கொடுப்பேன்; பொன் னலங்காரங்களாலே பூட்டப்பட்டவைகளும் நன்றாகச் சாணைபிடிக்கப் பட்ட ரத்தினங்களிழைத்த பூஷணங்களையுடையவைகளும் நன்றா கப் பழக்கப்பட்டவைகளுமான சிறந்த பதினெட்டுக்குதிரைகளையும் நான் அவனுக்குக் கொடுப்பேன். தனஞ்சயனை எனக்குக் காண்பிப் பவனுக்கு நிர்மலமானதும் ஸ்வர்ணமயமானதும் நன்றாக அலங்கரிக் கப்பட்டதும் உத்தமமான காம்போஜதேசத்தில் பிறந்த குதிரைக ளோடு சேர்ந்திருக்கின்றதுமான ரதத்தையும் நான் கொடுப்பேன். அர்ஜுனனைக் காண்பிக்கின்ற மனிதன் அதனையும் மதியானாகில் அவனுக்குப் பறவை பொன்னணிகளாலே மறைக்கப்பட்டவைகளும் பொன்மாலையை அணிந்தவைகளும் மேற்கு ஸமுத்திரக்கரையில் தோன்றினவைகளும் யானைபழக்குபவர்களாலே பழக்கப்பட்டவை களுமான சிறந்த வேறு அறுநூறு யானைகளை நான் கொடுப்பேன். அர்ஜுனனைக் காண்பிக்கின்றமனிதன் இதையும் அல்பமென்று அவமதிப்பானேயாகில், சிறந்த வேறு பதினாறு வைசிய கிராமங்களை யும் நான் அவனுக்குக் கொடுப்பேன். மிக்க செழிப்புள்ளவைகளும் செல்வங்களையுடையவைகளும் அருகில் காடுகளும் ஜலமுமுள்ளவை

* யானைபோன்ற வடிவமுள்ள ஆறுகாளைகள் கட்டிய பொன்னாலாகிய வேறொரு தேரையும்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு. 'யானைகளையே காளைகள்போலக் கட்டிய எனினுமாம்' என்பது பழைய உரை.

களும் எங்கிருந்தும் பயமில்லாதவைகளும் மிகுந்த ஸம்பத்துடைய வைகளுமான் அரசர்களோ அனுபவிக்கத்தக்க பதினான்கு கிராமங்களை யும் (கொடுப்பேன்). எவன் தனஞ்சயனை எனக்குக் காண்பிப்பனோ அவனுக்குக் கழுத்தில் பொற்கலன்களையணிந்தவர்களும் மகததேசத் தில்தோன்றியவர்களும் புதிய யௌவனமுள்ளவர்களுமான நூறு தாஸிகளையும் நான் கொடுப்பேன். அர்ஜுனனைக் காண்பிக்கின்ற மனிதன் இதனையும் அல்பமென்று அலக்ஷியம் செய்வானேயாகில் அவனுக்கு அவன் தானே எதைவிரும்புவனோ அந்த வேறு வரத் தையும் நான் கொடுப்பேன். பிள்ளைகளையும் பெண்டாட்டியையும் தவிர, என்னிடம் வேறு எந்தப்பொருள்இருக்கிறதோ அதையும் பின்னும் எங்களெந்தவஸ்துவை மனத்தினால் விரும்புகிறானோ அந்த அந்த வஸ்துவையும் நான் அவனுக்குக் கொடுப்பேன். எவன் கேச வனையும் அர்ஜுனனையும் எனக்குக் காண்பிப்பனோ அந்தமனித னுக்கு ஒன்றுசேர்ந்திருக்கிற கிருஷ்ணார்ஜுனர்களை நான் கொன்று அவ்விருவருடைய பொருள்களனைத்தையும் கொடுப்பேன்' என்று சொன்னான்.

கர்ணன் இவ்வாறான வார்த்தைகளை யுத்தகளத்தில் பலவாறு சொல்லிக்கொண்டு, கடலிலிருந்து தோன்றியதும் இனிய ஒலியுள்ள தும் சிறந்ததுமான சங்கத்தை ஊதினான். மஹாராஜரே! தகுந்த வைகளான ஸூதபுத்திரனுடைய அவ்விதமான வசனங்களைக் கேட் டுத் துர்யோதனன் ஸஹோதரர்களோடுகூட ஸந்தோஷத்தை அடைந்தான். அரசரே! புருஷச்ரேஷ்டரே! அப்பொழுது உம் முடைய சேனையில் நான்கு பக்கங்களிலும் துந்துபிகளுடைய கோஷ மும் மிருதங்கங்களுடைய கோஷமும் வாத்திய முழக்கங்களுடன் கூடின ஸிம்மநாதமும் யானைகளுடைய சப்தமும் தோன்றின. அவ் வாறே மிகுந்த மனக்களிப்புடன் கூடின யுத்தவீரர்களுடைய சப்த மும் தோன்றிற்று. அவ்வாறு மிகுந்த ஸந்தோஷத்துடன்கூடின ஸைன்யத்தில் அப்பொழுது ஸஞ்சரிக்கின்றவனும் தற்புகழ்ச்சிசெய் துகொள்பவனும் பகைவர்களைப் பீடிக்கின்றவனும் மஹாரதனுமான ராதேயனை நோக்கி மத்திரராஜன் உரக்கச்சிரித்து இவ்வாறான வசனத்தை மறுமொழியாக உரைக்கலானான்.

## முப்பத்துமூன்றுவது அத்யாயம்.

(கர்ணனுடைய செருக்குமொழிகளைப் பொறாத சல்யன் கர்ணனை இகழ்ந்தது.)

சல்யன், 'ஸூதபுத்திர ! நீ நினையாதே. பொன்னையும் சிறந்த யானைகளையும் வீணாகக்கொடுக்கிறாய். இப்பொழுது நீ தனஞ்சய னைப் பார்க்கப்போகிறாய். ஸூதபுத்திர ! (அர்ஜுனனைத் தெரிவிக் கிற) மனிதனுக்கு நீ ஸ்வர்ணத்தையாவது உத்தமமான யானையை யாவது தானமாகக் கொடாதே. தனஞ்சயனை நீ பார்ப்பாய். பலத்தி னால் மதங்கொண்டவனான நீ குபேரன்போலப் பொருளைச் செலவிடு கிறாய். ராதேய ! யத்னமின்றியே இப்பொழுது நீ தனஞ்சயனைப் பார்ப்பாய். நீ மூடனைப்போல அதிகமான பொருளைச் செலவிடப் போகிறாய். தகாதவர்களுக்கு அளிப்பதினால்வரும் தோஷங்களை நீ அஜ்ஞானத்தினால் தெரிந்துகொள்ளவில்லை. ஸூத ! எந்தத்தனத் தை நீ மிகுதியாகக் கொடுப்பதாக வெளியிடுகிறாயோ அந்தத்தனத் தைக்கொண்டு உன்னால் பலவித யாகங்களாலே தேவர்களைப் பூஜிப்ப தற்கு முடியும். நீ அந்தத்தனங்களாலே யாகம்செய்வாயாக. நீ, அறி யாமையினால், கிருஷ்ணார்ஜுனர்களைக் கொல்லுதற்கு விரும்புவது வீணே. யுத்தத்தில், ஒரு நரியினாலே இரண்டு ஸிம்மங்கள் கொல்லப் பட்டனவென்று நாம் கேட்டதேயில்லை. வேண்டக்கூடாததை நீ வேண்டுகிறாய். அக்னியில் விரைவாகவிழுகின்ற உன்னைத் தடுக்கக் கூடிய ஸ்னேகிதர்கள் உனக்கு இல்லை. நீ காரியாகாரியங்களை அறிய வில்லை. ஸந்தேகமில்லாமல் காலத்தினால் பரிபாகமடைந்தவனாக இருக்கிறாய். பிழைத்திருக்க எண்ணங்கொண்ட எவன்தான் அர்த்த மில்லாதவையும் •காதால் கேட்கத்தகாதவையுமான பலவார்த்தை களைச் சொல்லுவான் ? கழுத்தில் கல்லைக்கட்டிக்கொண்டு இருகைக ளாலும் கடலைத் தாண்டுவதுபோலவும் மலையுச்சியினின்று கீழே விழுவதுபோலவும் உன்விருப்பம் இருக்கின்றது. நீ நன்மையடை வதற்கு விருப்பமுள்ளவனானால், அணிவகுக்கப்பட்ட எல்லாச்சேனை களுடனும்கூடின எல்லாப்போர்வீரர்களோடும் சேர்ந்தவனாகவும், நன்றாகக்காக்கப்பட்டவனாகவும் தனஞ்சயனோடு போர்புரிவாயாக. திருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனனுடைய நன்மையின்பொ ருட்டு உனக்கு நான் சொல்லுகிறேன், தீங்குசெய்வதற்காக அன்று. உனக்குப் பிழைத்திருப்பதில் விருப்பமிருக்குமானால் என்னால் சொல்லப்பட்ட இந்தவிஷயத்தில் சிரத்தைபாராட்டுவாயாக' என்று

கூறினான். கர்ணன், 'சல்ய! என் தோள்வலிமையை ஆதாரமாகக் கொண்டு யுத்தத்தில் அர்ஜுனனை எதிர்பார்க்கிறேன். நீயோ மித்திர னென்று பெயர்கொண்ட சத்துரு. நீ என்னைப் பயப்படுத்துவதற்கு விரும்புகிறாய். என்னை இந்த அபிப்பிராயத்தினின்று ஒருவனும் இப்பொழுது திருப்பமுடியாது. வஜ்ரபாணியான இந்திரனாலும் எவ் விதத்திலும் முடியாது. அவ்வாறிருக்க, மனிதனால் எவ்விதம் முடி யும்?' என்றான். இவ்வாறான கர்ணனுடைய வாக்கியத்தின்முடிவில் மத்திரராஜனான சல்யன் மீண்டும் கர்ணனை அதிகமாகக் கோபமூட்ட வேண்டுமென்ற எண்ணங்கொண்டு மறுமொழி கூறலானான்.

'கர்ண! பல்குனனுடைய பாகுவேகத்தினாலே நாண்கயிற்றி னின்று விடுபட்டவைகளும், வேகமுடையவைகளும், நெருப்புக் கொப்பானவைகளும், மூன்றின்பின் ஒன்றாகத் தொடர்ச்சியுள்ளவை களும், கழுகு இறகுகளையுடையவைகளும், கூர்மையுள்ள நுனி யுடன்கூடியவைகளுமான அம்புகள் உன்னை அடையும்பொழுது உன்னை இந்தப் புத்தியானது விட்டுவிடும். ஸவ்யஸாசியான பார்த் தன் சிறந்த வில்லை எடுத்துப் படையைத் தபிக்கச்செய்து துன்பத் தைவிளைவிக்கின்ற அம்புகளால் எப்பொழுது உன்னை அடிப்பனோ அப்பொழுது நீ பாண்டவனைப்பற்றின கேள்வியை விட்டுவிடுவாய். ஸூதபுத்திர! தாயின்மடியில் படுத்திருக்கிற ஒரு சிறுகுழந்தை சந் திரனைப் பிடித்துத்தருவதற்கு எவ்வாறு விரும்புமோ அவ்வாறே ரதாரூடனாகப் பிரகாசிக்கின்ற பார்த்தனை மோகத்தினால் ஜயிக்க வேண்டுமென்று விரும்புகிறாய். * நீ இப்போது அர்ஜுனனோடு யுத் தம்செய்யவிரும்புவது நன்கு தீட்டப்பட்டதும் கூர்மையானமுனை யுள்ளதுமான சக்தியைப் பூமியில்நாட்டி (அதன்முனையில் கையி னால்) அடிப்பதுபோலவும் கூர்மையான பாணங்களால் (தன்மேல்) குத்திக்கொள்வதுபோலவும் இருக்கிறது. கர்ண! நீ மிக்க கூர்மை யுள்ள ஆயுதத்தினுடைய நுனிக்கொப்பான செய்கையுள்ள அர்ஜுன னோடு இப்பொழுது போர்புரியவிரும்புகிறபடியால மிக்க கூர்மை யுள்ள நுனியுடன் கூடின த்ரிசூலத்தைக் கட்டிக்கொண்டு எல்லா அங்கங்களையும் உரைத்துக்கொள்ளுகிறாய். இளமைப்பருவத்தி லுள்ளதும் விவேகமற்றதுமான ஒரு அல்பமானது வேகத்தோடு கூடியதாகக் கோபமூண்டதும் பிடரிமயிருள்ளதும் பெரிதுமான ஸிம்மத்தை நெருங்கி எவ்வாறு சண்டைசெய்வதற்கு அழைக்கு

* இரட்டித்துவருதலால் ஒருசுலோகம் விடப்பட்டது.

மோ அவ்வாறே நீ இப்பொழுது பார்த்தனை அழைக்கிறாய். ஸூத புத்திரா! வனத்தில் மாம்ஸத்தினால் திருப்தியடைந்த ஒரு நரி மஹா வீரியமுள்ள ஸிம்மத்தை எவ்வாறு அழைக்குமோ அவ்வாறு ராஜபுத்திரனே நீ சண்டைக்கு அழைக்கிறாயே; பார்த்தனை எதிர்த்து நாசத்தை அடையப்போகிறாய். கர்ண! ஏர்க்கால்போன்ற தந்தங்களையுடையதும் மதம்பெருகுகின்ற கன்னங்களுடனும் முகத்துடனும்கூடியதுமான பெரியயானையை ஒரு முயல் அழைப்பதுபோலப் பார்த்தனான தனஞ்சயனை நீ யுத்தத்திற்கு அழைக்கிறாய். (நீ) பார்த்தனை யுத்தம் செய்வதின்பொருட்டு விரும்புகிற காரணத்தினால், மிக்க விஷமுள்ளதும் கோபத்தினால் நிறைந்ததும் புற்றிலிருப்பதுமான ஒரு கருநாகத்தை அவிவேகத்தினால் தடியினாலடிக்கிறாய். கர்ண! மூடனான நீ பிடரிமயிருள்ளதும் கோபம்கொண்டதுமான ஒரு ஸிம்மத்தை ஒருநரி எதிர்ப்பதுபோல நரஸிம்மனான பாண்டவனை எதிர்த்துக் கர்ஜிக்கிறாய். கர்ண! அழகிய சிறகையுடையதும் பக்ஷிகளுள் சிறந்ததும் அதிவேகமுள்ளதுமான கருடனை ஒரு பெண்பக்ஷி போருக்கு அழைப்பதுபோலப் பிருதாபுத்திரனான தனஞ்சயனை யுத்தத்திற்கு அழைக்கிறாய். நீ எல்லா ஜலங்களுக்கும் நிதியும், பயங்கரமான உருவத்துடன் கூடியதும், திமி திமிங்கிலங்களாலடர்ந்ததும், சந்திரோதய காலத்தில் விருத்தியடைகின்றதுமான ஸமுத்திரத்தை ஓடமின்றித் தாண்ட விரும்புகிறாய். கர்ண! துந்துபிவாத்தியம்போன்ற முழக்கமுள்ளதும், கூர்மையான கொம்புகளையுடையதும், நன்றாக முட்டும் திறமையுள்ளதுமான ஒரு விருஷபத்தை ஒரு கன்றுக்குட்டி சண்டைக்கு அழைப்பதுபோல நீ பிருதாபுத்திரனான தனஞ்சயனை யுத்தத்திற்காக அழைக்கிறாய். காலத்தில் பாணங்களாகிற ஜலத்தைப் பொழியும் நரனென்கிற அர்ஜுனனாகிற பெரிய மேகத்தை, தவளையானது உரக்கக் கர்ஜிக்கின்ற பெரிய மேகத்தை எதிர்த்துக் கர்ஜிப்பதுபோல, எதிர்த்துக் கர்ஜிக்கிறாய். கர்ண! வீட்டைக் காத்திருக்கின்ற நாயானது காட்டிலிருக்கும் புலியைக்கண்டால் எவ்வாறு குரைக்குமோ அவ்வாறே தனஞ்சயனாகிற நரவ்யாக்கிரனைப் (பார்த்து) நீ குரைக்கிறாய். கர்ண! காட்டில் வஸிக்கின்ற ஒரு நரி முயல்களால் சூழப்பட்டதாக எதுவரையில் ஸிம்மத்தைப் பார்க்கவில்லையோ (அதுவரையில்) தன்னை ஸிம்மமாக நினைத்துக்கொள்ளும். ராதேய! அவ்விதமாக, பகைவர்களைக் கொல்பவனும் மனிதருள் சிங்கம்போன்றவனுமான அர்ஜுனனை யுத்தத்தில் பாராமலிருந்துகொண்டு நீயும் உன்னை ஸிம்மமாக எண்ணிக்கொள்ளுகிறாய். ஒரு ரதத்தில் வீற்றிருக்கின்ற

வர்களும் ஸூர்யசந்திரர்கள்போன்றவர்களுமான கிருஷ்ணார்ஜுனர்களை எதுவரையில் நீ பாராமலிருக்கிறாயோ (அதுவரையில்) நீ உன்னைப் புலி என்று எண்ணிக்கொள்ளுகிறாய். கர்ண! மஹாயுத்தத்தில் நீ காண்டீவத்தினுடைய ஒலியைக் கேளாமலிருக்கிற அவ்வளவு வரையில்தான் உன்னால் நினைத்தபடி சொல்லிக்கொள்ளமுடியும். ரதம், சங்கம், வில் இவைகளுடைய சப்தங்களால் பத்துத்திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்கின்றவனும் கர்ஜிக்கின்றபுலிபோன்றவனுமான தனஞ்சயனைக்கண்டு நீ நரியாகப்போகிறாய். மூடனே! எப்பொழுதுமே நீ நரி. எப்பொழுதுமே தனஞ்சயன் ஸிம்மம். வீரர்களைப் பகைப்பதினாலே நீ நரிபோலக் காணப்படுகிறாய். பலாபலத்தில் பூனையும் எலியும் எவ்விதமோ, புலியும் நாயும் எவ்விதமோ, ஸிம்மமும் நரியும் எவ்விதமோ, யானையும் முயலும் எவ்விதமோ, ஸத்தியமும் பொய்யும் எவ்விதமோ, அம்ருதமும் விஷமும் எவ்விதமோ அவ்விதமே பார்த்தனும் நீயும் உங்களிடத்திலுள்ளசெய்கைகளாலே பிரஸித்திபெற்றவர்களாயிருக்கிறீர்கள்' என்று கூறினான்.

---

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

### (கர்ணன் மர்மங்களை வெளியிட்டுச் சல்யனை நிந்தித்தது.)

**அ**ளவுகடந்த வல்லமையுள்ள சல்யனாலே நிந்திக்கப்பட்ட ராதேயன் மிக்ககோபங்கொண்டு சல்யன் கடுஞ்சொல் சொல்லுதலால், '* சல்யன்' என்றே நிச்சயித்து, அவனைப்பார்த்து வசனிக்கலானான். 'சல்ய! குணசாலிகளுடைய குணங்களைக் குணமுள்ளவனே அறிவான். குணமில்லாதவன் அறியமாட்டான். நீயோ எப்பொழுதும் குணங்களை விட்டவன். குணாகுணங்களை நீ எப்படி அறிவாய்? சல்ய! அர்ஜுனனுடைய மஹாஸ்திரங்களையும் கோபத்தையும் வல்லமையையும் வில்லையும் பாணங்களையும் நானறிவேன். அவைகளை அவ்வாறு நீ அறியமாட்டாய். சல்ய! அரசர்களுள் உத்தமனான கிருஷ்ணனுடைய மகிமையை நான் எப்படி அறிகிறேனோ அப்படி நீ அறியமாட்டாய். சல்ய! இவ்வாறாக, நான் என்னுடைய வீரியத்தையும் பாண்டவனிடத்திலுள்ள வீர்யத்தையும் அறிந்தே சண்டைசெய்வதற்காக அவவிருவரையும் அழைக்கிறேனேதவிர விட்டில்பூச்சி நெருப்பை(எதிர்ப்பது)போலன்று. சல்ய! நல்ல கட்டுக்களுள்ளதும் இரத்தத்தைப்

---

* அம்பு, ஆயுதநுனி, முள்.

பாணம்செய்வதும் கூர்மையுறுவதும் அம்புகதூணியில் படுத்திருக்கின்றதும் சிறகுகளுள்ளதும் நன்றாகத் தீட்டப்பட்டதும் நன்றாக அலங்கரிக்கப்பட்டதுமான இந்தப் பாணமிருக்கிறது. அனேக வருஷமாகச் சந்தனப் பொடியினால் பூஜிக்கப்பட்டதும் ஸர்ப்பமயமானதும் விஷமுள்ளதும் உக்கிரமானதும் மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவைகளுடைய கூட்டங்களைக் கொல்லுவதும் கோரஸ்வரூபமுள்ளதும் மஹாபயங்கரமானதும் கவசங்களையும் எலும்புகளையும் பிளக்கின்றதுமான இந்த அம்பானது உறங்கிக்கொண்டிருக்கின்றது. நான் கோபங்கொள்ளுவேனுனால் எந்தப்பாணத்தினால் மேருமஹாகிரியையும் பிளப்பேனே அந்தப்பாணத்தைப் பல்குனனையும் தேவகியின் புத்திரனை கிருஷ்ணனையும் தவிர வேறுமனிதன்மேல் நான் ஒருகாலும் பிரயோகிக்கமாட்டேன். என்னுடைய ஸத்தியத்தையும் கேள். சல்ய! அவ்விதமான பாணத்தினால் மிக்க பராக்ரமுள்ளவர்களான வாஸுதேவனையும் தனஞ்சயனையும் (எதிர்த்துப்) போர்புரியப்போகிறேன். அச்செய்கையே எனக்குத் தகுந்தது. எல்லா விருஷ்ணிவீரர்களுடைய ஐசுவரியமும் கிருஷ்ணனிடத்தில் நிலைபெற்றிருக்கின்றது. எல்லாப் பாண்டுபுத்திரர்களுடைய வெற்றியும் பார்த்தனைப் பொறுத்திருக்கின்றது. இவ்விருவர்களையும் எதிர்த்து எவன் திரும்புவதற்குத் தகுந்தவனாவான்? புருஷஸ்ரேஷ்டர்களான அவ்விருவர்களும் ஒன்றுசேர்ந்து தேரின்மீதேறி என்னொருவனை லக்ஷியம்வைத்துப் போர்புரிவதற்காக வந்திருக்கின்றார்கள். சல்ய! என்னுடைய நற்பிறப்பைப் பார். அத்தைத் அம்மான்களிடத்தினின்று தோன்றினவர்களும் நூலிலகோக்கப்பட்ட இரண்டு மணிகள்போலவும் ஸஹோதரர்கள்போலவும் ஒற்றுமையுள்ளவர்களுமான அவ்விருவரையும் என்னால் கொல்லப்பட்டவர்களாகப் பார்ப்பாய். சல்ய! அர்ஜுனனிடத்தில் காண்டீவம் இருக்கின்றது. கிருஷ்ணனிடத்தில் சக்ரமிருக்கின்றது. அவர்கள் ஹநுமானையும் கருடனையும் கொடியாகக்கொண்டவர்கள். இங்ஙனமிருப்பது பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணும். எனக்கு ஸந்தோஷத்தையுண்டு பண்ணுகின்றது. நீயோ கெட்டஸ்வபாவமுள்ளவன்; அறிவீனன்; மஹாயுத்தங்களில் பாண்டித்தியமற்றவன்; பயத்தினால் பிளக்கப்பட்டுப் பயத்தினாலே பொருத்தமில்லாத பல வார்த்தைகளைச் சொல்லுகிறாய். இழிவான தேசத்தில் தோன்றியவனே! நீ ஏதோ ஒருகாரணத்தினால் அவ்விருவரையும் புகழ்கிறாய். அவ்விருவரையும் யுத்தத்தில் கொன்று பந்துக்களுடன் உன்னையும் இப்பொ

ழுது கொல்லப்போகிறேன். பாபதேசத்தில் பிறந்தவனே! கெட்ட புத்தியுடையவனே! அறபனே! க்ஷத்திரியர்களுள் அதமனே! நீ சினேகிதரூபியான சத்துரு. ஏன் என்னைக் கிருஷ்ணார்ஜுனர்களிடமிருந்து பயப்படுத்துகிறாய்? அவர்களே என்னை இப்பொழுது கொல்வார்களோ; அவர்களைத்தான் நான் கொல்லுவேனோ; என்னுடைய பலத்தை நன்கு அறிந்தவனான நான் கிருஷ்ணார்ஜுனர்களிடத்திலிருந்து பயப்படமாட்டேன். நிந்திக்கப்பட்ட தேசத்தில் பிறந்தவனே! நான் ஒருவனாக ஆயிரம் வாஸுதேவரையும் நூற்றுக்கணக்கான பலகுனரையும் கொல்வேன். பேசாமலிரு. சல்ய! ஸ்திரீகளும் பாலகர்களும் விருத்தர்களுமான விளையாட்டில் கூடிய ஜனங்கள் வேதாத்தியயனம் செய்வதுபோலப் பெரும்பான்மையாகப் பாடுகின்றவைகளும் முன்பு அரசனுடைய ஸந்நிதியில் பிராம்மணர்களால் உள்ளபடி உரைக்கப்பட்டவைகளும் துராத்மாக்களான மத்திரகர்களைப் பற்றியவைகளுமான காதைகளை என்னிடத்தினின்று கேள். மூடா! நீ ஓர்மேமனத்துடன் கேட்டாவது எனக்கு மறுமொழி சொல. இழிந்ததான மத்திர தேசத்தில் பிறந்தவன் மித்திரத்துரோகி. எப்பொழுதுமே நம்மை எவன் பகைக்கிறானோ அவன் மத்ரகன். அல்பமான வாக்கியத்தைச் சொல்லுகிறவனும் நராதமனுமான மத்ரகனிடத்தில் நேசமென்பதில்லை. மத்திரகன் எப்பொழுதுமே கெட்ட மனமுடையவன்; எப்பொழுதுமே பொய் சொல்பவன்; கபடஸ்வபாவமுள்ளவன்; இன்னும் வேறு விதமான தௌஷ்டியமும் மத்திரதேசத்து ஜனங்களிடத்தில் உண்டென்று நாம் கேட்டிருக்கிறோம். தகப்பன், மகன், தாய், மாமி, மாமன், அம்மான், ஸஹோதரி, மகள், ஸஹோதரன், பேரன், மற்ற உறவினர்கள், தோழர்கள், தோழிகள், அதிதிகள், அடிமைக்காரர்கள், அடிமைக்காரிகள் யாவரும் கூடுகிறார்கள். அறியப்பட்டவர்களும் அறியப்படாதவர்களுமான பெண்டிர்கள், தங்கள் இஷ்டப்படி புருஷர்களோடு சேர்கின்றார்கள். ஒழுக்கங்கெட்டவர்களும் எப்பொழுதுமே மாக்கலந்த சாராயத்தைக் குடிக்கின்றவர்களும் வீடுகளிலிருந்து கோமாம்ஸத்துடன்கூடின சாராயத்தை உண்டுவிட்டு அழுகின்றவர்களும் சிரிக்கின்றவர்களும் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமின்றிப் பாடுகின்றவர்களும் நினைத்தபடி பொருளில்லாத வசனங்களைச் சொல்லிக்கொண்டு காமத்தினாலே பரஸ்பரம் பிரவிர்த்திக்கின்றவர்களும் கர்வமுள்ளவர்களும் பிரஸித்தமும் அமங்களகரமுமான செய்கைகளுள்ளவர்களுமான மத்திரகர்களிடத்தில்

'தர்மமானது எவ்வாறு இருக்கும்? மத்திரதேசத்திலே பிறந்தவனோடு பகைமையாவது சிநேகமையாவது செய்யக்கூடாது. அந்தணனை மத்திரதேசத்தில் சிநேகத்தன்மை இல்லை. மத்திரதேசத்தான் எப்பொழுதும் பாவமுள்ளவன். மத்திரர்களிடமும் காந்தாரர்களிடமும் தூய்மை நாசமடைந்துவிட்டது. அரசனை யாகம் செய்வித்தவனுக்குச் சொன்ன யஜமானனாலே செய்யப்படும் யாகத்திலே ஹவிஸ் எவ்வாறு நாசத்தை அடையுமோ, சூத்திரனுக்குஸம்ஸ்காரத்தைச்செய்கின்ற பிராமணன் எவ்வாறு அவமானத்தை அடைவானோ, பிரம்மத்வேஷிகள் இவ்வுலகத்திலே எப்பொழுதும் எவ்வாறு அவமதிப்பை அடைகின்றார்களோ, அவ்வாறு மனிதன் மத்திரதேசத்து மனிதர்களோடு சேர்ந்து பதிதனாகிறானே அவ்வாறே உன் ஸ்நேகம் நாசமடையவேண்டும். தேவனோ! உனக்கு விஷேமரணம். அது எப்பொழுதும் உன் குட்டிகளுக்குங்கூட வேண்டாம். 'உத்தமமான மந்திரத்தினாலே என்னாலே ஸர்வசாந்தியும் செய்யப்பட்டிருக்கின்றது' என்று இவ்வாறு தேவமறையால் சொல்லப்பட்டவனுக்கும் விஷவேகத்தினால் அடிக்கப்பட்டவனுக்குத் தேறினவர்கள் பரிகாரம் செய்கின்றார்கள். அதுவும் ஸத்தியமாகக் காணப்படுகிறது. இவ்வாறான நடையை அறிந்தவனான நீ பேசாமலிரு. அல்லது, இவ்விஷயத்தில் மறுமொழியாவது கூறு. ஸ்திரீகள் சாராயத்தினாலே மதிமயக்கங்கொண்டு துணிகளை அவிழ்த்தெறிந்துவிட்டுக் கூத்தாடுகிறார்கள். அந்த ஸ்திரீகள் இஷ்டப்பட்ட புருஷர்களுடன் சேர்க்கைபெற்றவர்களாகக் காமஸுகத்தை அனுபவிப்பதில் பற்றுதலுள்ளவர்களாயிருக்கின்றார்கள். அவர்களுடைய புத்திரனான மத்திரகன் எவ்வாறு தர்மத்தைச் சொல்லுவதற்குத் தகுந்தவனாவான்? எந்த ஸ்திரீகள் ஒட்டகங்களைப்போலவும் கழுதைகளைப்போலவும் நின்றுகொண்டே மூத்திரத்தை விடுகின்றார்களோ, தர்மத்தினின்று தவறினவர்களும் அந்த அந்தக் காரியங்களில் லஜ்ஜையற்றவர்களுமான அந்த ஸ்திரீகளுடைய புத்திரனான நீ இப்பொழுது தர்மத்தைச் சொல்லுவதற்கு விரும்புகிறாய். கஞ்சியை வேண்டப்பட்டவளான மத்திரதேசத்து ஸ்திரீயானவள் பின்தட்டுக்களைச் சொறிந்துகொள்ளுகிறாள். கஞ்சி கொடுப்பதற்குப் பிரியமற்ற மத்திரதேசத்து ஸ்திரீ, 'எனக்குப் பிரியமான கஞ்சியை என்னிடத்தினின்று ஒருவனும் கேட்கவேண்டாம். பிள்ளையைக் கொடுப்பேன்; புருஷனைக் கொடுப்பேன்; கஞ்சியையோவெனின் நான் கொடேன்' என்று குரூரமான இவ்விதவசனத்தைச் சொல்லுகிறாள். மத்திரதேசத்துப் பெண்கள் பெரும்பான்மையாக ருதுவாகாதவர்களும் பருத்த உருவமுள்ளவர்களும் வெட்கமற்றவர்

களும் கம்பளியினால் மூடப்பட்டவர்களும் பெருந்தீனியுள்ளவர்களுடைய சௌசாசாரத்தை விட்டவர்களுமாயிருக்கிறார்களென்று கேட்டிருக்கிறோம். ஜலமலங்களை விட்டுவிட்டுப் பிருஷ்டங்களைப் பூமியில் தேய்த்துவிட்டுச் சௌசமற்றவர்களாக இருக்கின்றார்கள். ஜலங்களாலும் மண்களாலும் சுத்தியாகாத அந்தஸ்திரீகள் நித்தியம் உச்சிஷ்டர்களாகவே ஆகின்றார்கள். மயிர்நுனிதொடங்கி நகநுனிவரையில் நிந்திக்கத்தக்கவர்களும் குத்ஸிதமான செய்கையுள்ளவர்களுமான மத்திரஸ்திரீகளைப்பற்றிய இதுமுதலான அநேக விஷயங்கள் என்னாலும் மற்றவர்களாலும் சொல்லத்தக்கனவாகும். பாபதேசத்தில் தோன்றினவர்களும் மிலேச்சர்களும் தர்மங்களை அறிவதில் திறமையற்றவர்களுமான மத்திரர்களும் ஸிந்துதேசத்து ஜனங்களும் ஸௌவீரர்களும் எவ்விதமாக இவ்வுலகில் தர்மத்தை அறிவார்கள்? போரிலடிக்கப்பட்டுச் சாய்வதென்பது க்ஷத்திரியனுக்கு ஸாதுக்களால் நன்றாகப் புகழப்பட்ட பிரதானமான தர்மமென்று நாம் கேட்டிருக்கிறோம். மரணத்தினால் வீரஸ்வர்க்கத்தை விரும்புகின்ற எனக்கு யுத்தத்தில் நான் ஆயுதங்களைப் பிரயோகிக்கவேண்டுமென்பதுதான் முக்கியமான விருப்பம். புத்திசாலியும் திருதராஷ்டிர குமாரனுமான துரியோதனனுக்கு அப்படிப்பட்ட நான் பிரியஸகாவாயிருக்கிறேன். என்னுடைய உயிரும் என்னுடைய பொருளனைத்தும் அவனுக்காகவே. பாபதேசத்தில் தோன்றியவனே! நம்விஷயத்தில் நீ எல்லாவகையாலும் சத்துருவைப்போலப் பிரவிர்த்திப்பதனால் நீ பாண்டவர்களால் வசப்படுத்தப்பட்டவனென்பது வெளிப்படை. நாஸ்திகர்களால் தர்மஜ்ஞனை வெல்லமுடியாததுபோல என்னைப் போன்ற நூறுபேராலுங்கூட என்னைப் போரில் வெல்ல எவ்விதத்தினாலும் முடியாது. வேட்டையினால் துன்பமுறுத்தப்பட்ட மான்போல நீ வெகுப்படி புலம்பு; வாட்டியடை; க்ஷத்திரிய தர்மத்தில் நிலைபெற்றவனான நான் பயமுறுத்தப்பட முடியாதவன். ஆசாரியரான பரசுராமரால் யுத்தங்களில் திரும்பாதவர்களும் சரீரத்தைவிடுகின்றவர்களுமான புருஷசிரேஷ்டர்களுக்கு எந்தக்கதி உண்டென்று அன்புடன் சொல்லப்பட்டதோ அந்தக்கதியை நான் நினைக்கிறேன். என்னை உத்தமமான புருஷர்களின் ஒழுக்கத்தில் நிலைபெற்றவனென்றும் சேர்ந்தவர்களைக் காப்பதற்கும் பகைவர்களைக் கொல்லுவதற்கும் முயல்கின்றவனென்றும் நல்ல ஒழுக்கத்தில் நிலைபெற்றவனென்றும் நீ அறிவாயாக. மத்ரநாத! என்னை இந்த அபிப்பிராயத்தினின்று தடுக்கும் பிராணியை நான் மூவுலகிலும் காணவில்லை. இவ்விதம்

என்னுடைய எண்ணம். இவ்வாறாகத் தெரிந்துகொண்டு நீ பேசாம லிரு. பயத்தினால் ஏன் பலவார்த்தைகளைப் பேசுகிறாய்? மத்திரர்களுள் இழிவானவனே! உன்னைக்கொன்று புலாலுண்பவருக்குக் கொடேன். சல்ய! திருதராஷ்டிரன் துரியோதனன் இருவருக்கும் நண்பனென்கிற எண்ணம், ஸாரதியைக் கொன்றானென்னும் அபவாதம், பொறுமை இம்மூன்றாலும் நீ ஜீவித்திருக்கிறாய். மத்திரநாத! மறுபடியும் இவ்வாறான வாக்கியத்தை நீ உரைப்பாயாகில் உன் தலையை வஜ்ரத்துக்கு ஒப்பான கதாயுதத்தினாலே கீழே விழும்படி செய்வேன். இழிவான தேசத்தில் பிறந்தவனே! 'கிருஷ்ணனும் அர்ஜுனனுமாவது கர்ணனைக் கொன்றார்கள்; அல்லது கர்ணனாவது அவர்களைக் கொன்றான்' என்கிற இந்த விஷயத்தை இப்பொழுது கேட்பவர்கள் நேரில் பார்க்கவும் போகின்றனர்' என்றான். அரசரே! ராதேயன் இவ்வாறு சொல்லிவிட்டு மறுபடியும் மத்திரராஜனைப் பார்த்துப் பரபரப்பில்லாதவனாகி, 'போ, போ' என்று சொன்னான்.

---

## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

### (சல்யன் அன்னத்தையும் காக்கையையும் பற்றிய கதையைச் சொல்லியது.)

பெரியோய்! சல்யன், போரில் மகிழ்கின்றவனும் அதிரதபுத்திரனுமான கர்ணனுடைய வார்த்தைகளைக்கேட்டு ஒரு திருஷ்டாந்தத்தை எடுத்துக் காட்டிக்கொண்டு மீண்டும் கர்ணனைநோக்கிக் கூறலானான். 'தர்மத்தை முதன்மையாகக்கொண்ட நான் விதிப்படி யாகஞ் செய்கிறவர்களும் யுத்தங்களில் திரும்பாதவர்களும் முடிசூட்டப்பட்டவர்களுமான மன்னர்களுடைய வம்சத்தில் பிறந்தவன். கர்ண! சாராயத்தால் மதங்கொண்டவன் எவ்வாறிருப்பானோ அவ்வாறு நீ காணப்படுகிறாய். ஆதலால், புத்திக்குறைவுள்ளவனை உனக்கு இப்பொழுது சிநேகத்தினால்சிகித்சை செய்யப்போகிறேன். கர்ண! என்னால் உரைக்கப்படும் உபமானமாகிய இந்தக் காக்கைக்கதையை நீ தெரிந்துகொள். நீசனே! குலத்தில் இழிந்தவனே! கேட்ட பிறகு உன் இஷ்டப்படிசெய். கர்ண! மிகுபுஜபலமுள்ளவனே! நிரபராதியான என்னை நீ கொலைவிரும்புகிறதற்கேற்ற பாவமானது என்னிடத்தில் சிறிதுமில்லையென்று நான் எண்ணுகிறேன். ரதத்திலிருக்கின்றவனும் விசேஷமாக அரசனுக்கு நன்மையை விரும்புகின்றவனுமான நான்

ஷிதாஷிதங்களை அறிந்து அவசியம் உனக்கு உரைக்கவேண்டும் இந்த ரதத்துக்குத் தலைவனுன என்றால், (எதிரியின் பலத்தோடு) ஸமமாகவும் ஏற்றத்தாழ்வாகவுமிருக்கின்ற ரதிகனுடைய பலாபலமும் எப்பொழுதும் தேராளி குதிரைகளுடைய சிரமமும் துயரமும் ஆயுதத்தினுடைய அறிவும் மிருக பக்ஷிகளுடைய சப்தமும் பாணங்களுடைய ஸாராஸாரமும் பரிஹாரமும் அஸ்திரப்பிரயோகமும் யுத்தமும் அவ்வாறே நிமித்தங்களும் ஆகிய அனைத்தும் அறியத்தக்கன. கர்ண! ஆதலால், உனக்கு நிதர்சனமாக ஒரு விஷயத்தை நான் உரைக்கப்போகிறேன். கடற்கரையில் அதிகமான தனதான்யங்களையுடையவனும் யாகம்செய்பவனும் (சிறந்த) கொடையாளியும் பொறுமையுள்ளவனுமான ஒரு வைசியன் தனக்குரிய தர்மங்களில் நிலைபெற்றுச் சுத்தனுயிருந்தான். அநேக புத்திரர்களையுடையவனும் குழந்தைகளிடத்தில் அன்புடையவனும் எல்லாப் பிராணிகளிடத்திலும் தயையுடையவனுமான அந்த வைசியன் தர்மத்தைப்பிரதானமாகக்கொண்ட அரசனுடைய நாட்டில் பயமற்றவனாக வாஸஞ்செய்துவந்தான். கீர்த்தியுடையவர்களும் சிறுவர்களுமான அவனுடைய அனேக புத்திரர்களுடைய எச்சிலை ஒரு காக்கையான்து (தினந்தோறும்) புஜித்துவந்தது. வைசியபுத்திரர்களான சிறுவர்கள் அந்தக் காகத்துக்கு மாம்ஸத்தையும் சோற்றையும் தயிரையும் பாலையும் பாயசத்தையும் தேனையும் நெய்யையும் எப்பொழுதும் கொடுத்துவந்தார்கள். வைசியனுடைய புத்திரர்களான சிறுவர்களால் எச்சிலால் வளர்க்கப்பட்ட அக்காகமானது இறுமாப்பை அடைந்து (தன்னை) ஒத்தபறவைகளையும் (தன்னிலும்) மேலான பறவைகளையும் அவமதித்தது. பிறகு, அதிகமாகப்பறந்து செல்லும் தன்மையுள்ளவைகளும் செல்வதில் கருடனை ஒத்தவைகளுமான அன்னப்பறவைகள் மனமகிழ்ச்சியோடு கடற்கரையோரத்தில் சென்றுகொண்டிருந்தன. அப்பொழுது வைசியகுமாரர்கள் ஹம்ஸங்களைப் பார்த்துப் பிறகு காகத்தை நோக்கி, 'பறவையே! நீயே (மற்றப்) பறவைகளைக்காட்டிலும் மேன்மைபெற்றிருக்கிறாய். ஆகாயத்தை நாடி வெகுதூரம் பறந்துசெல்லுகின்ற இந்தப் பக்ஷிகளைப் பார். இங்கே வா. நீயும் சக்தியுள்ளவனன்றோ? ஏன் நீ பறக்கவில்லை?' என்று சொன்னார்கள். அற்பபுத்தியையுடையவர்களான அவர்களனைவர்களாலும் ஏமாற்றப்படுகின்ற பக்ஷியானது மூர்க்கத்தனத்தினாலும் இறுமாப்பினாலும் அவர்களுடைய வார்த்தையை உண்மையென்றே நினைத்தது. எச்சிலைத் தின்பதனால் கர்வமுள்ளதும் கெட்டபுத்தி

யுடையதுமான அந்தக் காகமானது, 'இந்தப்பக்ஷிகளுள் எது மேன்மையுடையது?' என்று அப்பக்ஷிகளை அநுஸரித்துச்சென்று அறிய எண்ணங்கொண்டதாக ஒன்றுசேர்ந்து வெகுதூரத்தில் பறக்கின்ற அந்த அனேக அன்னப்பறவைகளுள் எதைச்சிறந்ததென்று நினைத்ததோ அந்தப் பறவையை நோக்கி, 'பறந்துசெல்வோம்' என்று அழைத்தது. அவ்விடத்தில் வந்திருந்த அன்னப்பறவைகள் அந்த வார்த்தையைக்கேட்டு உரக்கச் சிரித்தன. பக்ஷிகளுள் சிறந்தவைகளான அந்த அன்னப்பறவைகள் பலவாறாகப் பேசுகின்ற காகத்தினுடைய மூர்க்கத்தன்மையினால் அந்தக் காகத்தை நோக்கி இவ்வார்த்தையைக் கூறின. 'நாங்கள், மானஸ தடாகத்தை வாஸஸ்தானமாகக் கொண்ட ஹம்ஸங்கள்; பூமியில் ஸஞ்சரிக்கிறோம். வெகுதூரம்பறக்கும் தன்மையினால் நாங்கள் எப்பொழுதும் பக்ஷிகளுள் பூஜிக்கப்பட்டிருக்கிறோம். கெட்டபுத்தியுள்ளவனே! நீ காகமாயிருந்தும் பலசாலியும் தூரதேசத்தில் பறக்கும்சக்தியுள்ளதுமான அன்னப்பறவையைப் பறத்தல் விஷயத்தில் எவ்வாறு அழைக்கிறாய்? காகமே எங்களோடுகூட நீ எப்படிப் பறப்பாய்? அதைச் சொல்' என்று மொழிந்தன. பிறகு, மூடத்தன்மையுள்ள காகமானது ஹம்ஸங்களுடைய வார்த்தையை அடிக்கடி நிந்தித்து ஜாதிக்குரிய அறபத்தனத்தினால் தற்புகழ்ச்சி செய்துகொண்டு (அன்னங்களைப் பார்த்து) மறுமொழி கூறியது. 'நூற்றொரு விதமான பக்ஷிகதிகளோடு நான் ஸஞ்சரிப்பேன்; ஸம்சயமில்லை. விசித்திரமாயும் அவ்வாறே பற்பலவிதமாயுமிருக்கின்ற ஒவ்வொன்றுக்கும் நூறு நூறுயோஜனைதூரம் பறப்பேன். நான், நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இப்பொழுது உட்டீனம், அவடீனம், ப்ரடீனம், டீனம், நிடீனம், ஸம்டீனம், திர்யக்டீனம் என்கிற கதிகளையும் விடீனம், பரிடீனம் பராடீனம், ஸுடீனம், அபிடீனம், மஹாடீனம், நிர்டீனம், அதிடீனம், அவடீனம், ப்ரடீனம், ஸம்டீனம், டீனடீனம், ஸம்டீனோட்டீனடீனம், மறுபடியும் டீனவிடீனம், ஸம்பாதம், ஸமுதீபம் (என்கிற கதிகளையும்) இவற்றைத் தவிர மற்றும் வேறுள்ள கதிகளையும் கதாகதத்தையும் ப்ரதிகதத்தையும் அனேகங்களான நிகுடீனங்களையும் செய்வேன். அப்பொழுது என்பலத்தைப்பார்ப்பீர்கள். அவைகளுள் ஒருகதியினாலே யான் ஆகாயத்தில் பறப்பேன். அன்னங்களே! எவ்விதமான கதியோடு நான் பறக்கவேண்டும்? நியாயமாகக் குறிப்பிடுங்கள். பக்ஷிகளே! அப்படிப்பட்ட நீங்கள் எவ்விதப்பற்றுமில்லாத ஆகாயத்தில் கீழ்ச்சொன்ன கதிகளோடு பறப்பதற்குத் திடமான நிச்சயங்

கொண்டு என்னுடன் பறந்துவாருங்கள்' என்றுசொல்லியது. ராதா புத்திர! காகம் இவ்வாறுசொல்லியவுடன், ஒருபக்ஷியானது உரக்கச் சிரித்துக் காகத்தைப்பார்த்துக் கூறிய வார்த்தையை என்னிடத்தினின்று நீ தெரிந்துகொள்: அன்னம், 'காகமே! நீ நிச்சயமாய் நூற்றொரு கதிகளோடு பறக்கிறவன். எல்லாப் பறவைகளும் எந்த ஒரேகதியை அறிகின்றனவோ அந்த ஒருகதியுடன் நான் பறப்பேன். மற்றொன்றையும் நான் அறியேன்' என்றது. காகம், 'அன்னமே! எந்தக் கதியுடன் பறந்துசெல்வதற்கு நினைக்கிறாயோ அந்தக்கதியை அனுஸரித்து நீயும் விரைவாகப் பறந்துசெல்' என்றது. பிறகு, 'காகமே! ஹம்ஸமானது ஒரேஒருகதியினால நூறுகதியுள்ளஉன்னை எவ்வாறு ஜயிக்கும்? நீ ஒருகதியினாலேயே இந்தஅன்னத்தை ஜயித்துவிடுவாய்' என்று அங்கு ஒன்றுசேர்ந்திருக்கின்ற அன்னங்களெல்லாம் காக்கையைப் பரிஹாஸஞ்செய்தன. ஹம்ஸமும் உயரப்பறக்க ஆரம்பித்தது. பலசாலியும், சுறுசுறுப்பும் மிக்கதிறமையுமமைந்ததுமான காகமும் பறக்க ஆரம்பித்தது. பிறகு, அந்த அன்னமும் காகமும் மகராங்களுக்கிருப்பிடமான ஸமுத்திரத்துக்கு மேலே மேலே ஒன்றை ஒன்று மிஞ்சும் எண்ணத்துடன் வேகமாகப்பறந்தன. வேகமுள்ளவைகளான ஹம்ஸம் காகம் இரண்டும் ஸ்பர்தையுடன் கூடியவைகளாக (முறையே) ஒருகதியுடனும் நூறுவிதமான கதிகளுடனும் ஆகாயத்தை அடைந்து விரைவாகப் பறந்தன. ஸூதபுத்திர! ஹம்ஸமோ மெதுவான ஒரு கதியினாலே பறப்பதற்கு ஆரம்பித்தது. அந்தக்காகமோ அந்த ஹம்ஸத்துக்குமுந்தி வேகமாகப் பறக்கத்தொடங்கியது. காகமும் ஒரு முகூர்த்தகாலம் வரையில் ஹம்ஸத்துக்குக் குறையவில்லை. அது சாபலயத்தினால சீக்கிரமாகப் பறக்கும் சக்தியைக் காண்பித்துக்கொண்டு வேகத்தாலே ஹம்ஸத்தைத் தாண்டிச்சென்று மீண்டும் அடிக்கடி திரும்பிவந்தது. காகம் இடமாகச் சென்றுகொண்டு அந்த அன்னபபறவையை மூக்கினால கொத்தியது; அடிக்கடி சத்தமிட்டுக்கொண்டு அந்த அன்னத்தை அழைத்தது. காகம் கதிகளாலே (பாரக்கும் பறவைகளை) ஆச்சர்யமடையும்படி செய்ய நினைத்துத் தன்னுடைய செய்கையைக் காண்பித்தது. பிறகு, 'விசித்திரமான (காகத்தினுடைய) அந்தக் கதிகளையும் மற்றவைகளையுங்கண்டு மிக்கமனக்களிப்படைந்த காக்கைகள் மிக்க இரைச்சலோடு கத்தின. அன்னங்களும் தங்களைச் சேர்ந்த அன்னப்பறவைக்கு ஜயத்தை விரும்பினவைகளாகப் பறவல் [illegible] பரிஹஸித்தன; ப்ரியு

மான் வாக்குக்களையும் எடுத்துக்கூறின. அந்த அன்னங்கள் மேலே பறந்துபறந்து, 'ஒரு முகூர்த்தகாலம், ஒரு முகூர்த்தகாலம்' என்றும் கூறின; மரங்களுடைய நுனிகளினின்று இறங்கின; நகரங்களினின்று மேலாகவும் பறந்தன. காகமானது, அந்த அன்னத்தை அவமதித்து இந்த வார்த்தையைக் கூறியது. 'மேலே பறந்துவருகிற இந்த ஹம்ஸமே தோல்வியடைகிறது' என்றது. பிறகு, பக்ஷிகளுள் சிறந்ததும் பொறுமையற்றதுமான ஹம்ஸமோ அந்த வார்த்தையைக் கேட்டுச் சிறகுகளை உதறிக்கொண்டு ஆகாயத்தில் பிரவேசித்து மேற்குத் திக்கை நோக்கி வேகத்துடன் பறந்தது; அநேக ஜந்துக்களால் வியாபிக்கப்பட்டதும் அலைகளால் பயங்கரமான காட்சியுள்ளதும் மகரங்களுக்கு இருப்பிடமுமான ஸமுத்திரத்திற்கு மேலே மேலாக வேகத்தோடு பறந்துசென்றது. ராதேய! பிறகு, காகமானது அதிசீக்கிரத்தில் வேகத்தினால் குறைவடைந்தது. பிறகு, மிகக்களைப்படைந்து அதிகசிரமத்துடன் அன்னத்தைப் பின்தொடர்ந்தது.

கர்ண! பிரஜ்ஞைகளை இழக்க அந்தக் காகத்தைத் தீவ்ரமாகப் பயமும் வந்து அடைந்தது. ஸ்ரமத்தினால் பீடிக்கப்பட்ட காகமானது இளைப்பாறுவதின்பொருட்டு மரங்களையும் தீவுகளையும் பார்த்துக்கொண்டே, 'இளைப்படைந்திருக்கிற நான் எந்த இடத்தில் இறங்குவேன்? கடலோ அநேகஜந்துஸமூகங்களுக்கிருப்பிடமானது; பெரிது; அநேகம் பிராணிகளால் அதிகமாகப் பிரகாசிக்கின்றது. ஆகாயத்தைக்காட்டிலும் விசேஷித்திருக்கிறது' என்று சிந்தித்துக்கொண்டே அந்த ஜலஸமுத்திரத்தில் விழுந்துவிட்டது. இழிகுலத்தில் பிறந்தவனே! கர்ண! பண்டிதர்களும், ஆழத்தினால் ஸமுத்திரத்திற்குண்டாயிருக்கிற விசேஷத்தையும் ஸமுத்திரஜலத்தில் வியாபித்திருக்கிற திக்குக்களுடைய பரிமாணத்தையும் முடிவில்லாமையால் அறிகிறார்களில்லை. கர்ண! காகம் எப்படி அறியும்? பிறகு, அன்னமும் காகத்தைத் தாண்டி நெடுந்தூரம் சென்று முகூர்த்தகாலம் பறந்து அந்தக்காகத்தை நன்றாக உற்றுப்பார்த்தது. அன்னப்பறவை, மெல்லமெல்லக் குறைவுபட்டதும் இளைப்படைந்ததும் பிரஜ்ஞையற்றதுமான அந்தக்காகத்தைப்பார்த்துத் திரும்பிவந்து சிரித்துக்கொண்டு அப்பொழுது வேகம் குறைந்து மெதுவான கதியுடன்கூடின அந்தக் காகத்தைக் கண்டு உரக்கச்சிரித்து ஸத்புருஷர்களுடைய விரதத்தை நினைத்துக்கொண்டு நீரில் மூழ்குகின்ற காகத்தைக் கரையேற்றிவிட எண்ணி யதார்த்தமான சில வார்த்தைகளைக் கூறியது. 'காகமே! நீ அடிக்கடி பறப்பலகதிகளையும்

சொல்லிக்கொண்டு ஸ்தோமத்தைச் சொல்லாமலே பறந்தாய். அதனால், (என்னைக்குறித்து) நிந்தைச்சொற்களைப் பேசினாய். இப்பொழுது நீ இரண்டு சிறகுகளாலும் மூக்கினாலும் அடிக்கடி ஜலத்தைத் தொட்டுக்கொண்டு பறப்பதான இது எவ்விதமான கதி? காகமே! நன்றாகச் சொல். இப்பொழுது இருக்கும் உன்னுடைய கதியானது எவ்விதமானது? காகமே! நீ சீக்கிரமாக வா; வா. இதோ நான் உன்னைப் பாதுகாக்கிறேன்' என்றது. நன்றாக இளைப்படைந்ததும் துன்பமுற்றதுமான அந்தக்காகமானது இரண்டு சிறகுகளாலும் மூக்கினாலும் அப்பொழுது ஜலத்தைத் தொட்டுக்கொண்டு சீக்கிரமாக (ஸமுத்திரத்தில்) விழுந்துவிட்டது. ஸமுத்திர ஜலத்தில் வீழ்ந்து பிரஜ்ஞையற்று உயிரையிழக்கும் நிலைமையிலிருக்கின்ற அந்தக்காகத்தைக்கண்டு ஹம்ஸமானது இந்தவாக்கியத்தை உரைக்கலாயிற்று. 'காகமே! 'நூற்றொருகதிகளுடன் நான் பறப்பேன்' என்று தற்புகழ்ச்சி செய்துகொண்டு பேசினையன்றோ? என்னைக்காட்டிலும் மேற்பட்டவனாக நூற்றொரு கதிகளோடு செல்லுகின்ற நீ ஏன் இவ்வாறு களைப்படைந்து பெருங்கடலில் விழுந்துவிட்டாய்?' என்றது. பிறகு, காகமானது மனவருத்தமுற்று அப்பொழுது மேலேசெல்லுகின்ற அந்த அன்னப்பறவையைப்பார்த்துக் கிருபைவரும்படி செய்துகொண்டு, 'அன்னமே! எச்சில் உணவினாலே நான் போஷிக்கப்பட்டவன்; கொழுப்பினாலே அதிககர்வங்கொண்டவன்; குத்ஸிதமான புத்தியினாலும் சிறுபிள்ளைகளுக்குள்ள லாகவத்தாலும் என்னைக் கருடன்போல எண்ணிக்கொண்டுவிட்டேன். நான் உன்னைச்சரணமடைந்தேன். ஜலக்கரை ஓரத்தை நான் அடையவேண்டும். இப்பொழுது, களைத்திருக்கிற என்னை ஆபத்தினின்று தூக்கிவிடு. நான் மறுபடியும் பிழைத்து, என்னுடைய இருப்பிடத்தை அடைவேனானால் மீண்டும் அல்பனாயிருந்தாலும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற பக்ஷியை இவ்வாறு அலக்ஷியம் செய்யமாட்டேன்' என்று இவ்விதமான வார்த்தையை மறுமொழியாகக் கூறியது. இவ்வாறு மனம் உருகும்படி தீனமாகப் புலம்புகின்றதும், பிரஜ்ஞையிழந்ததும், 'கா, கா, கா' என்றுகத்துகின்றதும் மஹாஸமுத்திரத்திலமுழ்குகின்றதுமான அந்தக்காகத்தைக் கண்டு கருணை மிகுந்த அந்த அன்னமானது துராத்மாவான அதனிடத்தில் கருணையைப் பாராட்டியது. பிறகு, தைன்யமுற்றதும் ஜலத்தில் நனைந்ததும் பிரஜ்ஞையற்றதும் நடுக்கமுற்றதுமான அந்தப் பக்ஷியை அப்பொழுது இருகால்களாலும் தூக்கித் தன்முதுகில் ஏற்றிவைத்துக்கொண்டது. கர்ண! அந்த அன்னப்பறவை மெய்ம்

மறைந்திருக்கின்ற காகத்தை முதுகில் மறைவைத்துக்கொண்டு அந்த
இடத்தினின்று ஸ்பர்த்தையுடன் பறந்தனவோ அந்த இடத்துக்கு
அப்பொழுது கர்வமில்லாமல் மீண்டும் கொண்டுவந்து சேர்த்தது.
விட்டுவிட்டு, 'மறுபடியும் நீ இவ்வாறு செய்யலாகாது' என்றுசொல்
லிற்று. அன்னமானது களைத்திருக்கின்ற அந்தக்காக்கையை மறுபடி
யும் திட்டில் கொண்டுவந்துவிட்டுச் சமாதானம் செய்து மனம்
போல் விரைவாகச்சென்று இஷ்டமான இடத்தை அடைந்தது.
கர்ண! இவ்வாறு எச்சிலைத்தின்று கொழுத்திருக்கின்ற அந்தக்காகம்
ஹம்ஸத்தினாலே தோல்வியடைவிக்கப்பட்டதாகி அதிகமான பலத்
தினும் வீர்யத்தினும் உண்டான கர்வத்தைவிட்டுப் பொறுமை
யையடைந்தது. வைசியன்வீட்டில் முற்காலத்தில் எச்சிலைத்தின்று
வந்த காக்கைபோல நீ தார்த்தராஷ்டிரர்களின் உச்சிஷ்டங்களால்
போஷிக்கப்பட்டவன். ஸம்சயமில்லை. கர்ண! ஸமானர்களாகவும்
மேற்பட்டவர்களாகவுமிருக்கின்றவர்களையும் நீ அவமதிக்கிறாய்.
துரோணர், அஸ்வத்தாமா, கிருபர், பீஷ்மர் இவர்களாலும் மற்றக்
கௌரவர்களாலும் ரக்ஷிக்கப்பட்ட நீ அப்பொழுது விராடநகரத்தில்
ஏகாகியான அர்ஜுனனை ஏன் கொல்லவில்லை? யுத்தத்தில் சிங்
கத்தினால் நரிகள் வெல்லப்படுவதுபோலக் கிரீடியினால் தனித்தனி
யாகவும் ஒன்றுசேர்ந்தவர்களாகவும் நீங்கள் வெல்லப்பட்டபொழுது
உன்னுடைய வீர்யம் எங்கேசென்றிருந்தது? யுத்தத்தில் ஸவ்யஸாசி
யினால் உன்தம்பி கொல்லப்பட்டதைப்பார்த்துக் கௌரவர்கள்பார்த்
துக்கொண்டிருக்கும்பொழுதே முதலில் நீ ஓடினாய். கர்ண! அவ்
வாறே த்வைதவனத்தில் கந்தர்வர்களாலே நன்றாக எதிர்த்துத்தாக்கப்
பட்ட கௌரவர்களையும் அவர்கள் மனைவிகளையும் விட்டுவிட்டு நீயே
முந்தி ஓடினாய். கர்ண! பார்த்தன் யுத்தத்தில் சித்ரசேனன் முத
லான கந்தர்வர்களைக் கொன்றும் வென்றும் துர்யோதனனையும் அவன்
தம்பியர்களையும் விடுவித்தான். கர்ண! புராதனமான பார்த்தனுடைய
தும் கேசவனுடையதுமான பிரபாவமானது மீண்டும் பரசுராமரால்
கௌரவர்களிருக்கும் ஸபையில் சொல்லப்பட்டது. கிருஷ்ணனும்
அர்ஜுனனும் கொல்லத்தகாதவர்களென்று அரசர்களுடைய மத்
தியில் துரோணரும் பீஷ்மரும் சொல்லிய வசனத்தை எப்பொழு
தும் நீ கேட்டிருக்கிறாய். எல்லாப்பிராணிகளையுங்காட்டிலும் பிராம
ணன் சிறந்தவனாயிருப்பதுபோல உன்னைக்காட்டிலும் தனஞ்சயன்
எந்தெந்த விஷயத்திலும் மேற்பட்டவனென்றும் விஷயத்தில்
எவ்வளவை நான் உரைப்பேன்? பிரதானமான தேரில் வீற்றிருக்

கின்ற வஸுதேவபுத்திரனை கிருஷ்ணனையும் குந்திபுத்திரனை தனஞ்சயனையும் இப்பொழுதே பார்க்கப்போகிறாய். காக்கையானது எவ்வாறு நல்ல புத்தியையடைந்து அன்னத்தை ஆச்ரயித்ததோ அவ்வாறே நீயும் விருஷ்ணிகுலத்தில் பிறந்த கிருஷ்ணனையும் பாண்டுபுத்திரனை தனஞ்சயனையும் ஆச்ரயிப்பாயாக. கர்ண ! எப்பொழுது நீ யுத்தரங்கத்தில் ஒருரதத்தின்மீதுள்ள பராக்கிரமசாலிகளான வாஸுதேவனையும் தனஞ்சயனையும் பார்ப்பாயோ அப்பொழுது இம்மாதிரி பேசமாட்டாய். எப்பொழுது பார்த்தன் அனேக பாணங்களால் உன் கொழுப்பை அழிப்பனோ அப்பொழுது உனக்கும் அர்ஜுனனுக்குமுள்ள தாரதம்மியத்தை நீகண்டறிந்துகொள்வாய். புருஷச்ரேஷ்டர்களான அந்த இருவர்களும் தேவாஸுரமனுஷ்யர்களில் பிரஸித்திபெற்றிருக்கிறார்களோ அவர்களை மின்மினிப்பூச்சியானது ஸூர்யசந்திரர்களை அவமதிப்பதுபோல மூர்க்கத்தனத்தால் நீ அவமதிக்காதே. ஸூர்யசந்திரர்கள் எப்படியோ அப்படியே அர்ஜுனனும்கேசவனும் வெளிப்படையாக நான்குபக்கத்திலும் பிரஸித்திபெற்றவர்கள். நீயோ மனிதர்களுள்மின்மினிப்பூச்சி போன்றவன். ஸூதபுத்திர ! மனிதர்களுள் நாய்போலிருக்கின்ற நீ இவ்வண்ணம் அறிந்து புருஷர்களுள் சிங்கங்களான அச்சுதனையும் அர்ஜுனனையும் அவமதிக்காதே. பேசாமலிரு. என் புகழ்ந்து கொள்ளுகிறாய் ?'' என்று கூறினான்.

---

## முப்பத்தாறுவது அத்யாயம்.

(கர்ணன் சல்யனைநோக்கித் தனக்குப் பரசுராமரிடத்தினின்றும் ஒரு பிராம்மணனிடத்தினின்றும் சாபம்நேர்ந்ததை எடுத்துக் கூறியது.)

மஹாத்மாவும் அதிரதபுத்திரனுமான கர்ணன் சல்யனுடைய அப்பிரியமான வார்த்தையைக்கேட்டு வாக்கத்தை யிழந்து சல்யனை நோக்கி, ' கிருஷ்ணார்ஜுனர்கள் எப்படிப்பட்டவர்களென்பது எனக்குத் தெரியும். சல்ய ! அர்ஜுனனுடைய தேரை ஓட்டுகின்ற கிருஷ்ணனுடைய பலத்தையும் பாண்டுகுமாரனை அர்ஜுனனுடைய பலத்தையும் மஹாஸ்திரங்களையும் நான் இப்பொழுது உள்ளபடி அறிகிறேன். அந்த விஷயம் உனக்கு நேரில் தெரியாது. சஸ்திரங்களைத் தரித்தவர்களுள் சிறந்தவர்களான அந்தக்கிருஷ்ணார்ஜுனர்களை நான் பயமில்லாமல் எதிர்த்து யுத்தம்செய்வேன். பரசுராம

ரிடத்தினின்றும் பிராம்மணோத்தமரிடத்தினின்றும் நேர்ந்த சாபங்கள் இப்பொழுது என்னை அதிகமாகத் தபிக்கச்செய்கின்றன. சல்ய! முற்காலத்தில் ஸமுத்திரத்திலுள்ள உத்தமமான மஹேந்திர பர்வதத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த பாசுராமரைக் கபடமாகப் பிராம்மணவேஷத்தோடு அடுத்து, 'அஸ்திரங்களை யாசிக்கின்ற என்னை இப்பொழுது சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளும்' என்று சொன்னேன். பிராம்மணனல்லாதவனான நான், பிரம்மாஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்கிற பேரவாவால் பொய்யாகப் பிராம்மணனென்று சொல்லிக்கொண்டு அந்த இடத்தில் வாஸஞ்செய்தேன். ஜமதக்னிகுமாரரான பரசுராமரால் அந்த மஹாஸ்திரமானது மந்திரங்களோடு எனக்கு உபதேசிக்கப்பட்டது. எப்பொழுது அந்த அஸ்திரம் என்னால் அறியப்பட்டதோ அப்பொழுது பிராம்மணரான மஹரிஷியானவர் என்னைப்பார்த்து, 'யுத்தத்தில் செல்லுகின்ற உனக்கு ஆபத்து நேருமானால் அப்பொழுது இந்த அஸ்திரம் பிரயோகிக்கத்தக்கது. போ' என்று சொன்னார். சல்ய! பல்குனனுக்கே நன்மையை விரும்புகின்ற தேவராஜன் விகாரரூபமுள்ள ஒரு புழுவினுடைய சரீரத்தில் பிரவேசித்து என்னுடைய தொடையை அடைந்து குடைந்தபடியால் அதிலும் எனக்கு இடையூற்றைச் செய்தான். அந்தத் தொடையில் தலையைவைத்து ஆசார்யர் தூங்கிக்கொண்டிருக்கையில், புழுவானது என் தொடையை அடைந்து குடைந்தது. தொடை பிளக்கப்பட்டபடியால், என் சரீரத்தினின்று, ரக்தவெள்ளமானது தாரையாகப் பெருகியது. நான் ஆசார்யரிடத்திலுள்ள பயத்தினால் அசைவற்றிருந்தேன். பிறகு, விழித்துக்கொண்ட அந்தப்பிராம்மணர் (ரக்தம்பெருகுவதைக்) கண்டார். அவர், தைரியத்துடன் கூடின என்னை உற்றுப்பார்த்து, 'நீ பிராம்மணனல்லை. வேறு யார்? உண்மையைச்சொல்' என்று வினவினர். சல்ய! அவரிடத்தில் அப்பொழுது நான் ஸூதனென்றே உண்மையை உரைத்தேன். பிறகு, மிக்கதவமுள்ளவரான அந்தப்பரசுராமர் என்னைப் பார்த்து மனத்தில் ரோஷமிக்கவராகி, 'ஸூத! உன்னால் அடையப்பட்ட இந்தப் பிரம்மாஸ்திரம் உன் பிரதிஜ்ஞையைக் காப்பாற்றுகிற தருணத்தில் தோன்றாமல் போகுக. உனக்கு மரணகாலத்தைத் தவிர மற்றக்காலத்திலோ உன்னிடத்திலிருக்கும். பிராம்மணனல்லாதவனிடத்தில் வேதமந்திரம் நிலைபெற்றிராது' என்று சபித்தார். நேர்ந்திருக்கின்ற கைகலந்த இந்த யுத்தத்தில் இப்பொழுது எனக்கு அந்த அஸ்திரமானது உதவிசெய்வதற்கு மிகவும் போதுமானது.

சல்ய! உக்கிரமான வில்லையுடையவனும் மிக்க பெருமையுள்ளவனும் பலசாலியும் பயங்கரனும் ஸஹிக்கத்தகாத வீர்யமுடையவனும் யுத்தத்தில் ஸத்தியமான பிரதிஜ்ஞையுடையவனும் பாண்டுபுத்திரனுமான தனஞ்சயனை மிருத்யுவினுடைய முகத்தை அடையும்படி நான் செய்வேன். பரசுராமரால் கொடுக்கப்பட்டிருக்கிற அஸ்திரத்தைத்தவிர, யுத்தத்தில் பகைவர்களை நாசம்செய்யக்கூடிய வேறோர் அஸ்திரமும் இப்போது என்னிடமிருக்கிறது. பிரதாபசாலியும் பலசாலியும் அஸ்திரத்தில் பயிற்சியுள்ளவனும் உக்கிரமான வில்லையுடையவனும் அளவற்ற தேஜஸையுடையவனும் க்ரூரனும் சூரனும் பயங்கரனும் பகைவர்களை எதிர்த்துத் தாங்குபவனுமான தனஞ்சயனை யுத்தத்தில் நான் கொல்லப்போகிறேன். அனேக பிராணிகளை முழுகச்செய்வதும் வேகமுள்ளதும் மனத்தினால் எண்ணமுடியாததும் ஜலங்களுக்குப்பதியும் பேரொலியிடுவதுமான கடலைக் கரை தடுப்பதுபோல நான் எண்ணமுடியாத வீர்யமுடையவனை அர்ஜுனனைத் தடுக்கப்போகிறேன். மனத்தினால் எண்ணமுடியாதவைகளும் மர்மஸ்தானங்களை அறுப்பவைகளும் வீரர்களைக் கொல்லுகின்றவைகளும் நல்ல சிறகுகளையுடையவைகளுமான பாணஸமூகங்களைப் பிரயோகிக்கின்றவனும் மனுஷ்யலோகத்தில் நாண்கயிற்றை இழுப்பவர்களுள் உத்தமனுமான குந்தீபுத்திரனை யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். இவ்விதமான பலத்தையுடைய நான் அதிக பலமுள்ளவனும் மஹாஸ்திரங்களையுடையவனும் கடலுக்கொப்பானவனும் எவ்விதத்தாலும் ஒருவராலும் நாடமுடியாதவனும் உக்கிரஸ்வரூபியும் பாணஸமூகங்களையுடையவனும் பகையரசர்களையழிப்பவனுமான பார்த்தனைக் கடலைக் கரை தடுப்பதுபோலப் பாணங்களால் தடுக்கப்போகிறேன். ஸமர்த்தனும் அஸ்திரப்பயிற்சியுள்ளவனும் உறுதியான கையையுடைய வீரர்களோடு போர்புரிபவனும் திவ்யாஸ்திரங்களை அறிந்தவனும் வெண்மையான குதிரைகளையுடையவனும் (பகைவர்களை) நாசஞ்செய்பவனுமான எவன் யுத்தத்தில் தேவாஸுரர்களை ஜயிப்பனோ அவனுடன் எனக்கு இப்பொழுது நேரப்போகிற மிக்ககோரமான யுத்தத்தைப் பார். பயமில்லாதவனும், அகங்காரமுடையவனும் யுத்தத்தில் விருப்பமுள்ளவனுமான பாண்டவன் மனிதர்களால் அடைதற்கரிய மஹாஸ்திரங்களாலே என்னை அடிக்கப்போகிறான். அவனுடைய அஸ்திரத்தை அஸ்திரங்களால் அவமதித்து உத்தமமான பாணங்களால் அவனை யுத்தத்தில் தள்ளப்போகிறேன். ஜ்வலிக்கின்றவனும் எவ்

லாத்திக்குக்களையும் மிகத்தபிக்கச்செய்கின்றவனும் உக்கிரஸ்வரூபியும் இருட்டை விலக்குகின்றவனுமான சூரியனை மேகம் மறைப்பதுபோல, சூரியனுக்கு ஒப்பான தனஞ்சயனைப் பாணங்களாலே அதிகமாக மூடப்போகிறேன். புகையைக் கொடியாக கொண்டதும் ஜ்வலிக்கின்றதும் தேஜஸையுடையதும் வைஸ்வாநரம் என்று சொல்லப்படுகிறதுமான அக்னிபோன்றவனும் நரவீரர்களை எரிப்பவனுமான அர்ஜுனனை நான் மேகம்போன்றவனாகி யுத்தத்தில் பாணவர்ஷங்களால் தணிக்கப்போகிறேன். பார்வையினாலேயே கொல்லுகின்றதும் மிக்ககோரமானதும் அதிகக்கூர்மையுள்ள விஷப்பல்லுள்ளதும் அக்னியினுடைய ப்ரபாவம்போன்ற ப்ரபாவத்தையுடையதும் கோபத்தினால் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போல் எரிக்கின்றதுமான குந்ீபுத்திரனாகிற ஸர்ப்பத்தைப் பல்லங்களால் தணிக்கப்போகிறேன். சென்றுகொண்டிருக்கின்றதும் சிறந்த பலமுள்ளதும் அதிகமான வீர்யமுள்ளதும் மிகுதியாக முறித்துத் தள்ளுகின்றதும் மிகக்கொடியதுமான காற்றை இமயமலை தாங்குவதுபோலக் கடுஞ்சினமுள்ளவனும் பகைவர்களைப் பொறுதவனுமான தனஞ்சயனை யுத்தத்தில் நான் அசையாமலிருந்துகொண்டு எதிர்த்துத் தாங்கப்போகிறேன். ரதமார்க்கங்களில் ஸாமர்த்தியமுள்ளவனும் சக்தியுள்ளவனும் எப்பொழுதும் பாரத்தைப் பொறுப்பவனும் யுத்தங்களில் சிறந்த வீரனும் உலகத்தில் எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவனுமான தனஞ்சயனை யுத்தத்தில் நான் கொல்லப்போகிறேன். இப்பொழுது யுத்தத்தில் அவனுக்குச் சமமாக விற்பிடிக்கின்ற வேறொரு மனிதனிருப்பதாக நான் எண்ணவில்லை. இந்தப்பூமிமுழுமையும் எதிர்த்தாலும் தாங்தக்கூடியவனான அவனோடு இப்பொழுது நான் யுத்தத்துக்காக எதிர்க்கப்போகிறேன். காண்டவப்பிரஸ்தத்தில் தேவதைகளுடன்கூடின எல்லாப்பிராணிகளையும் ஜயித்து ஸவ்யஸாசியோடு என்னைத்தவிர உயிரைக் காப்பாற்றுகின்ற வேறு எந்தமனிதன் அஸ்திரங்களால் யுத்தஞ்செய்ய விரும்புவான்? அர்ஜுனன் கர்வமுள்ளவன்; அஸ்திரங்களில் தேர்ச்சியுள்ளவன்; நல்ல கைப்பழக்கமுள்ளவர்களோடு போர்புரிபவன்; தேவஸம்பந்தம்பெற்ற அஸ்திரங்களை அறிந்தவன்; வெண்ணிறமுள்ள குதிரைகளையுடையவன்; பகைவர்களை முற்றும் அழிப்பவன். அதிரதனான அந்த அர்ஜுனனுடைய தலையைக் கூர்மையுள்ள பாணங்களாலே (அவனுடைய) சரீரத்தினின்று இப்பொழுது நான் கவரப்போகிறேன். சல்ய! யுத்தத்தில் மிருத்யுவையோ, அல்

லது ஜயத்தையோ முன்னிட்டுக்கொண்டு இந்தத்தனஞ்சயனை எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். இந்திரனுக்கொப்பான பாண்டவனை ஒரு ரதத்தோடு எதிர்த்துப் போர்புரியக்கூடிய அப்படிப்பட்ட மனிதன் (என்னைத்தவிர) வேறொருவனுமில்லை. என்னைக்கேட்டால், யுத்தத்தில் அந்தப் பாண்டவனுடைய ஆண்மையைக்குறித்து அரசர்களுடைய ஸபையில் சொல்வேன். மூர்க்கனும், மூடபுத்தியுள்ளவனுமான நீ அட்டஹாஸஞ் செய்துகொண்டு பல்குனனுடைய பௌருஷத்தை எனக்கு ஏன்சொல்லுகிறாய்? மிக்க அப்பிரியத்தைச்செய்பவனும் குரூரனும் அல்பனும் பொறுமையுடையவர்களை அவமதிப்பவனும் பொறாமையுள்ளவனுமான உன்னைப்போன்ற அனேக மனிதர்களை நான் கொல்வேன். பொறுமையுடையவர்களுக்கு இதுகாலம். நான் பொறுக்கிறேன். பாவச்செய்கையையுடையவனே! நீ மூடன்போல என்னை அவமதித்துக்கொண்டு பாண்டவனுக்குப் பிரியமான வார்த்தைகளைச் சொன்னாய். ருஜுவான புத்தியுடையவனான என்னிடத்தில் நீ என்னகாரணத்தினால் கொடிய மனமுள்ளவனும் மித்திரத்துரோகியுமாகிவிட்டாய்? * ஏழு வார்த்தை சொல்வதினாலே ஸ்னேகம் ஏற்படுகிறதன்றோ? துர்யோதனன் யுத்தத்துக்கு வந்துவிட்டமையால் இந்தக்காலமானது க்ரூரஸ்வரூபமுள்ளதாக நெருங்கி வருகிறது. அவனுடைய கார்யஸித்தியை விரும்பி எந்தச் சமயத்தில் நிச்சயமாக ஜயமுண்டாகுமோ அந்த ஸமயத்தைத் தேடுகிறேன். அப்படியிருந்தாலும் நான் பாண்டவனையும் வாஸுதேவனையும் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரியப் போகிறேன்; (இது) என்னைப்போன்றவனுடைய கார்யம். அல்பனாயிருப்பவன் கிருஷ்ணார்ஜுனர்களிருவரையும் எதிர்ப்பதற்கு ஒருநாளும் ஆயத்தனாகமாட்டான். நேசத்தாலும் ஸந்தோஷப்படுத்துவதாலும் பிரீதியினாலும் ரக்ஷணத்தினாலும் கௌரவிப்பதினாலும் உடன் மகிழ்தலாலும் மித்ரம் என்கிற சொல் ஏற்படுகிறது. இவையெல்லாம் எனக்குத் துரியோதனன்விஷயத்தில் இருக்கின்றன. என்னிடத்திலுள்ள அவையெல்லாவற்றையும் அரசன் அறிகிறான். அழிப்பதனாலும் கட்டளையிடுவதனாலும் இளைக்கச்செய்வதினாலும் ஹிம்ஸையினாலும் பெருமூச்சு விடச்செய்வதினாலும் வாடச்செய்வதாலும் பாரமத்தை உண்டுபண்ணுவதினாலும் சோகத்தை உண்டுபண்ணுவதாலும் மிகுதியாக நாசத்தை உண்டுபண்ணுவதாலும் சத்துரு என்கிற சொல் ஏற்படுகிறது. பெரும்

* 'ஸாப்தபதம்' என்பது மூலம். 'ஏழுஅடி நடப்பதனால்' எனினுமாம்.

பான்மையாக அவையனைத்தும் உன்னிடத்திலும் என்னிடத்திலு முள்ளன. ஆதலால், நான் துரியோதனனுக்காகவும் உன்னு டைய பிரீதிக்காகவும் புகழுக்காகவும் மனத்தின் திருப்திக்காக வும் ஈஸ்வரனுக்காகவும் முயற்சியுடன் பாண்டவனோடும் வாஸு தேவனோடும் போர்புரியப்போகிறேன். என்னுடையசெய்கையை இப்பொழுது பார். சல்ய! நான் இப்பொழுது பாண்டவனை எதிர்த்து எவ்விதத்தாலாவது உயிரோடு விடப்படுவேனேயாகில் அந்தயுத்தத் தினின்று விடுபட்டவனை நான் நிச்சயமாக எப்பொழுதும் யம னுக்கு அவமதிக்கத்தகாத ரூபமுள்ளவனுவேன். கோபமுள்ள ஸவ்ய ஸாசி எப்பொழுது பிரம்மாஸ்திரத்தை மனத்தினால் நன்றாக ஜபித் துக்கொண்டு பிரயோகிப்பனோ அப்பொழுதும் என்னுடைய தேர்ச் சக்கரமானது பூமியில் அழுந்தாமலிருக்குமானால் அவன் இன்று என் னால் விடப்படமாட்டான். யுத்தத்தில் செல்லுகின்ற பிரம்மஸம்பந் தம்பெற்றவையும் தேவஸம்பந்தம்பெற்றவையும் மனுஷ்யஸம்பந் தம்பெற்றவையுமான அஸ்திரங்களை அடித்து மதப்பெருக்குக் கொண்ட ஒருயானை வேறொரு சிறந்தயானையை எதிர்ப்பதுபோல க்ரமான வீர்யமுள்ள அர்ஜுனனை நான் எதிர்க்கப்போகிறேன். சல்ய! காலதண்டத்தைக் கையில்கொண்ட யமனிடத்தினின்றாவது பாசத்தையுடைய வருணனிடத்தினின்றாவது கதாயுதத்தையுடைய குபேரனிடத்தினின்றாவது வஜ்ராயுதத்தையுடைய தேவராஜனிடத் தினின்றாவது இன்னும் வேறுதேவதையினிடத்தினின்றாவது ஆயுதத்தைக் கையிற்கொண்டு கொல்லவருகின்ற சத்ருவிடத்தினின் றாவது நிச்சயமாக நான் பயப்படமாட்டேனென்று நீ தெரிந்து கொள். ஆதலால், எனக்குப் பார்த்தனிடத்தினின்றாவது ஜனார்த் தனனிடத்தினின்றாவது பயம் இல்லை. எனக்கு அவ்விருவர் களோடும் யுத்தரங்கத்தில் கடும்போர் நடக்கப்போகின்றது. 'யுத்தரங் கத்தில் போர்புரிகின்றவனும் ஒரு வீரனிடத்தினின்று பயத்தை அடைந்திருக்கின்றவனுமான உன்னுடைய தேர்ச்சக்கரமானது குழியில் அழுந்துக' என்று என்னை நோக்கி ஒருபிராம்மணன் சொல்லியிருக்கிறான். அப்படிப்பட்ட பிராம்மணனுடைய வாக்யத் தினின்று நான் அதிகமாகப் பயமடைகிறேன். இந்தப் பிராம்மணர் கள் ஸுகதுக்கங்களுக்கு அதிகாரிகளல்லரோ? ராஜனே! நான் ஒரு ஸமயத்தில், சாபாநுக்ரக சக்தியுள்ள ஒரு பிராம்மணனுடைய ஹோமதேனுவின் கன்றின்மீது தெரியாத்தன்மையால் கோரஸ்வரூப முள்ளதும் பயங்கரமுமான அம்பைப் பிரயோகஞ்செய்துவிட்டேன்.

பிறகு, அஜாக்கிரதையுடனிருந்த ஹோமதேனுவின் கன்றானது பாணத்தாலடிக்கப்பட்டுவிட்டது. சல்ய! அதனால், ஜனங்களில்லாத காட்டில் ஸஞ்சரிக்கின்ற அந்தப் பிராம்மணன், (என்னை நோக்கி) 'ராஜனே! ராதேய! இவ்விடத்தில் உன்னால் ஹோமதேனுவின் கன்று கொல்லப்பட்டமையால், நீயும் பெரிதான வாக்சல்யத்தை அடைவாயாக. மரணம் நேரக்கூடிய ஆபத்காலத்தை நீ அடைந்திருக்கும்போது, சத்துருவோடு போர்புரிகின்ற உன்னுடைய ரதத்தின் சக்கரமானது குழியில் விழப்போகிறது. ஸூத! எவனோடு யுத்தத்தில் நீ போட்டிபோடுகிறாயோ, எவனைவெல்ல எப்பொழுதும் முயற்சிசெய்துகொண்டிருக்கிறாயோ அவனிடத்திலிருந்தே நிச்சயமாக யுத்தத்தில் மரணமடையப்போகிறாய்' என்று சொன்னான். அப்பொழுது நான் தீவ்ரமான விரதத்தையுடைய அந்தப்பிராம்மணனைப்பார்த்து அவனுக்கு ஆயிரம்பசுமாடுகளையும் பொருளையும் ஸ்வர்ணங்களால் நன்றாக மூடப்பட்ட அறுநூறு காளைகளையும் ஸ்வர்ணாபரணங்களைக் கண்டத்திலணிந்த நூறு தாஸிகளையும் பெண்கோவேறுகழுதைபூட்டப்பட்ட நூறு ரதங்களையும் ஸ்வர்ணாபரணங்களைக் கழுத்திலணிந்தவர்களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களுமான ஆயிரம்கன்னிகைகளையும் ஏர்க்கால்போன்ற தந்தங்களுள்ள அனேக யானைகளையும் அனேக தாஸிகளையும் அனேகதாஸர்களையும் கொடுக்கிறேனென்று சொல்லிக் கருணைபுரியும்படி வேண்டினேன். அந்தப் பிராம்மணோத்தமன் அவைகளாலும் என்விஷயத்தில் அனுக்கிரகம் செய்யவில்லை. வெண்ணிறமுள்ள கன்றுகளையுடைய ஆயிரத்துநானூறு காராம்பசுக்களைக் கொடுத்தும் அந்தப் பிராம்மணோத்தமனிடத்தினின்று அனுக்கிரகத்தை நான் பெறவில்லை. 'என்னுடையவைகளான மற்ற எந்தப்பொருளையும் உமக்கு அதீனமாகச் செய்கிறேன்' என்று வேண்டியும் என்னைப் பிராம்மணன் மறுத்துவிட்டான். சல்ய! குரோதத்தினால் ஜ்வலிக்கின்ற கண்களுடன் கூடிய அந்தப்பிராம்மணன் கண்ணினால் எரிக்கின்றவன்போல் (என்னைப்பார்த்து,) 'ஸூத! என்னால் எது சொல்லப்பட்டதோ அது அவ்வாறே ஆகும். அது வேறாகாது. பொய்யான வசனமானது ஸந்ததியை அழிக்கும். அதனால், பாவத்தையும் அடைவேன். ஆகலால், தர்மத்தைப் பாதுகாப்பதின்பொருட்டுப் பொய்யைச் சொல்வதற்கு நான் விரும்பவில்லை. நீ பிராம்மணனுக்குரிய கதியைக் கெடுக்காதே. உன்னால் பிராயச்சித்தம் செய்யப்பட்டுவிட்டது. ஸூதபுத்ர! ரோஷத்தையுடைய என்னால் எது சொல்லப்பட்டதோ அந்த

என் வாக்கியத்தை உலகத்தில் ஒருவனும் பொய்யாகச் செய்யமுடியாது. (பயனை) நீ அடைவாயாக. போ! தாமதம் செய்யாதே' என்றான். இவ்விதம் கோபங்கொண்டவனான அந்தப் பிராம்மணோத்தமன் என்னைப்பார்த்து அடிக்கடி சொன்னான். இந்தப் பிராம்மணர்கள் ஸுகதுக்கங்களைக் கொடுப்பதில் தலைவர்களன்றோ? சல்ய! நான் அர்ஜுனனிடத்தினின்றும் மதுஸூதனனிடத்தினின்றும் பயப்படவில்லை. ஸத்யத்தின்மீது ஆணையிட்டு யான் உனக்குச் சொல்லுகிறேன். அந்தப் பிராம்மணசாபத்தினின்று நான் பயப்படுகிறேன். சல்ய! ஒன்றுசேர்ந்தவர்களான அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களோடு இதோ யுத்தம் வந்துவிட்டது. இந்த யுத்தத்தில் என் உயிரானது ஸம்சயத்தையும் அடைந்துவிட்டது. தேவராஜனான இந்திரனும் அவ்விருவர்களையும் யுத்தம் செய்வதற்காக அணுகினால் அதிக ஸம்சயத்தை அடைவான். நீ எப்படி எண்ணுகிறாய்? அவமதிக்கப்பட்டமையால் என்னால் இவ்விதமான விருத்தாந்தம் உனக்கு உரைக்கப்பட்டது. நேசத்தால் சொல்லப்படவில்லை. நீ நிந்தைசெய்கிறவனென்பதை நான் அறிவேன். உன்னிடத்திலுள்ள தோஷத்தைக் கேள்' என்று கூறினான்.

---

## முப்பத்தேழாவது அத்யாயம்.

### (கர்ணன் சல்யனைப் பரிகாசத்துடன் நிந்தித்தது

மஹாராஜரே! பிறகு, பகைவர்களை அடக்குகிறவனான ராதேயன் மத்ரராஜனைத்தடுத்து மறுபடியும் மறுமொழி கூறலானான். 'சல்ய! என்னை வெருட்டுவதற்காகப் பிதற்றின வார்த்தையினால் போரில் நீ என்னைப் பயமுறுத்த இயலாது. இந்திரனுடனிட்ட தேவதைகளெல்லாரும் என்னுடன் போர்புரிந்தாலும் எனக்குப் பயமுண்டாகாது. கேசவனுடன்கூடின பார்த்தனிடம் எங்ஙனம் பயப்படுவேன்? சல்ய! மஹாயுத்தத்தில் சுத்தமான செய்கையுள்ள நான் உன்னால் பயப்படுத்தமுடியாதவன். நீ மற்றவனை யுத்தத்தில் பயப்படுத்துவதற்குச் சக்தியுள்ளவன் என்று தெரிந்துகொள். நீசனுக்குள்ள பலம் இவ்வளவுதான். ஆகையினால்தான், நீ என்னைப்பற்றிக் கடுமையாகப் பேசுகிறாய். என்னுடைய குணங்களைப் பேசுவதற்கு நீ சக்தியற்றவனன்றோ? கெட்ட புத்தியுடையவனே! அதினாலேதான், அதிகமாகப் பிதற்றுகிறாய். மத்ரக! கர்ணன் பயப்படுதற்காக இவ்வுலகத்தில் பிறந்தவனல்லன். நான் பராக்கிரமத்துக்காகவும்

அவ்வாறே என்னுடைய கீர்த்திக்காகவும் பிறந்தவன். சல்ய! ஸக்யம், ஸௌஹார்த்தம், மித்ரபாவம் இம்மூன்று காரணங்களாலும் இப்பொழுது நீ ஜீவித்திருக்கிறாய். சல்ய! திருதராஷ்டிரகுமாரனான துர்யோதனராஜனுக்கு மிக்கவும் பெரிதான ஒரு காரியம் நேர்ந்திருக்கிறது. அதுவும், என்னிடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. அதினால் என் (முன்னிலையில்) க்ஷணநேரம் ஜீவித்திருக்கிறாய். நீ செய்யும் அப்ரியமான காரியத்தை நான் பொறுத்துக்கொள்வதாக முந்தியே பிரதிஜ்ஞைசெய்திருக்கிறேன். என்னுடைய பிரதிஜ்ஞையைக் காப்பாற்ற வேண்டும். ஆதலால், இப்பொழுது நீ ஜீவித்திருக்கிறாய். ஆயிரம் சல்யனில்லாவிட்டாலும் நான் பகைவர்களை ஜயிப்பேன். மித்ரத்துரோகமானது மிக்க பாவமானசெயல் என்கிற காரணத்தினால் இப்பொழுது நீ ஜீவித்திருக்கிறாய்' என்று சொன்னான். சல்யன், 'கர்ண! நீ எங்கள் சத்துருக்களைப்பற்றி வருத்தத்துடன் பிதற்றுகிறாயோ அந்தச் சத்துருக்கள் ஆயிரம் கர்ணனாலும் யுத்தத்தில் ஜயிக்க ஸாத்யப்படமாட்டார்கள்' என்று சொன்னான். அவ்வாறாகக் குரூரமாகப் பேசுகின்றவனும் வெறுப்பான தோற்றமுள்ளவனுமான மத்ரநாதனை அப்பொழுது கர்ணன் மறுபடியும் இரண்டுமடங்கு கடுமையாகப் பேசலானான்.

'மத்ரதேசத்திலுள்ள ஜனங்களுக்குத் தலைவனே! திருதராஷ்டிரருடைய ஸந்நிதானத்தில் சொல்லப்பட்டு நான் கேட்ட இந்த விஷயத்தை நீ ஒரேமனத்துடன் கேள். திருதராஷ்டிரருடைய அரண்மனையில் பிராம்மணர்கள் பற்பலதேசங்களையும் ஆச்சர்யகரமான ஒழுக்கமுள்ள பண்டைக்காலத்து அரசர்களையும்பற்றிச் சொன்னார்கள். அந்தப்பிராம்மணர்களுள் பிராயம் முதிர்ந்த ஒரு பிராம்மணோத்தமர் பாஹ்லீகர்களையும் மத்ரர்களையும் இகழ்ந்துகொண்டு முன் நடந்த கதை ஸம்பந்தமான வாக்கியத்தை உரைத்தார். இமயமலையினால் விலக்கப்பட்டதும் கங்கையினாலும் ஸரஸ்வதியினாலும் யமுனையினாலும் குருக்ஷேத்திரத்தினாலும் விடப்பட்டதும் ஸிந்து நதியை ஆறாவதாகக்கொண்ட ஐந்து நதிகளின் நடுவிலிருப்பதும் தர்மத்தை விட்டுவிலகினதும் அசுத்தமுமான அந்தப் பாஹ்லீகதேசத்தில் இருப்பவர்களையும் மனிதன் விலக்கவேண்டும். ராஜனே! பசுமாடுகளைக் கொல்லுகிற இடமானதால் கோவர்த்தனம் என்கிற பெயருள்ள ஆலமரமும் ஸுபாண்டமென்கிற பட்டணமும் கலிபுருஷன் பிரவேசிப்பதற்குரிய வாயில்களென்பதை நான் இளமைதொடங்கியே அறிந்திருக்கிறேன். நான் பாஹ்லீகதேசத்தில் மிகவும் ரகஸ்யமான ஒரு

கார்யத்தால் வாஸஞ்செய்தேன். அங்கு வாஸஞ்செய்ததினால் அவர்களுடைய ஒழுக்கமானது என்னால் அறியப்பட்டது. (அந்தப்பாஹ்லீகதேசத்தில்) சாகலமென்கிற நகரம் இருக்கின்றது; ஆபகை என்கிற நதி இருக்கின்றது; ஜர்த்திகர்களென்கிறபாஹ்லீகர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய நடை மிகஇழிவானது. சீலமற்றவர்களான அவர்கள் வெல்லம்சேர்ந்த சாராயத்தைப் பானஞ்செய்துவிட்டு வெங்காயங்களுடன் கோமாம்ஸத்தையும் பக்ஷிக்கின்றார்கள். அந்தப்பாஹ்லீகர்கள் பணியாரங்களையும் மாவையும் தின்கிறார்கள்; கள்ளையும் குடிக்கிறார்கள். மாதர்கள் குடியினால் மயக்கங்கொண்டு வஸ்திரமில்லாமல் புஷ்ப சந்தனங்களையும் அணிந்து நகரத்தைச் சேர்ந்த கடைத்தெருக்களிலும் தாஸித்தெருக்களிலும் வெளிப்படையாகப்பாடுகின்றார்கள்; ஆடுகின்றார்கள். குடியினால் மதங்கொண்ட அந்தப்பெண்கள் கழுதை ஒட்டகம் இவற்றின் குரல்போன்ற அபஸ்வரமுள்ள கானங்களோடுகூடியவர்களாகவும் புணர்ச்சியில் தம்புருஷர் அயலபுருஷர் என்கிறவிவேகமில்லாதவர்களாகவும் எல்லா விதத்திலும் தம் இஷ்டப்படி செய்கின்றார்கள். மதத்தினாலே வரம்புகடந்தவர்களான அம்மாதர்கள் ஒருவரோடொருவர் காமக்குறிப்பான வார்த்தைகளை உரக்கச்சொல்லுகின்றார்கள். வ்ராத்யர்களான அந்த ஸ்திரீகள் கட்டுப்படாதவர்களாக, *'ஓ! அடிபட்டவளே! ஓ! அடிபட்டவளே!' என்றும், 'எஜமானனாலடிபட்டவளே! கணவனாலடிபட்டவளே!' என்றும், உரக்கக்கூச்சலிட்டுக்கொண்டு, உத்ஸவ தினங்களில் கூத்தாடுகின்றார்கள். கர்வமுள்ளவர்களும் துஷ்டைகளுமான அந்தப் பாஹ்லீகதேசத்து ஸ்திரீகளின் நடுவிலிருந்தவனும் குருதேசத்தில் (வந்து) வஸித்தவனுமாகிய ஒருவன் அதிக ஸந்தோஷமில்லாத மனத்துடன், 'பருத்த தேகமுடையவளும் வெண்ணிறமுடையவளும் மெல்லிய கம்பளத்தையுடுத்தவளுமான அந்தப்பாஹ்லீகஸ்திரீயானவள் குருதேசவாஸியானஎன்னையே நிச்சயமாக நினைத்துக்கொண்டு படுத்திருப்பாள். நான் எப்பொழுது சதத்ருவையும் ரம்யமான அந்த இராவதியையும் கடந்து ஸ்வதேசத்தை அடைந்து பருத்தகணுக்கால்களுள்ள மங்களகரிகளான ஸ்திரீகளைப் பார்ப்பேன்? அந்தப் பாஹ்லீகதேசத்து ஸதிரீகள் மனோசிலைபோல் பிரகாசிக்கின்ற கடைக்கண்களுள்ளவர்கள்; வெண்ணிறமுடையவர்கள்; இனிமையில்லாதகுரலுடன் விளங்காமல் பேசுபவர்கள்; கம்பளியையும் தோலையும் ஆடையாகக் கொண்டவர்கள்;

* இங்கு வியாக்யானத்தில் வேறு பொருள் கூறப்பட்டிருக்கிறது.

ரோதனம் செய்பவர்கள்; பிரியமான தோற்றமுள்ளவர்கள்' என்று பாடினான். பர்ஹ்லீகர்கள் மதங்கொண்டவர்களாக, 'மிருதங்கங்கள் ஆனகங்கள் சங்கங்கள் மத்தளங்கள் ஆகிய இவைகளுடைய சப்தங்களோடும், கழுதைகளோடும் ஒட்டகங்களோடும் கோவேறுகழுதைகளோடுங்கூட, வன்னிமரங்களும் பீலுமரங்களும் மூங்கில்களும் அடர்ந்த காடுகளில் நல்லவழிகளில் ஸுகமாகச் செல்வோம். மோருடன்கூடின பணியாரங்களையும் மாவுருண்டைகளையும் சாப்பிடுவோம். மார்க்கங்களில் அதிக பலமுள்ளவர்களாயிருந்துகொண்டு வருகின்ற அனேகம் வழிப்போக்கர்களை அடிப்போம்; துணிகளைப் பிடுங்கிக்கொள்வோம்' என்று பேசுகிறார்கள். இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையவர்களும் வ்ராத்யர்களும் கெட்ட எண்ணங்கொண்டவர்களுமான பாஹ்லீகரிடத்தில் விவேகமுள்ள எந்த மனிதன் ஒரு முகூர்த்தகாலம் வாஸஞ்செய்வான்? எவர்களுடைய புண்யம் பாவம் இரண்டிலும் ஆறில் ஒரு பாகத்தை நீ பெற்றுக்கொள்ளுகிறாயோ அந்தப்பாஹ்லீகர்கள் இவ்விதமான ஸ்வபாவமுடையவர்களென்றும் வீணான செய்கையுடையவர்களென்றும் பிராம்மணர் கூறினர். ஸாதுவான பிராம்மணர் இவ்வாறு சொல்லிவிட்டுத் துஷ்டர்களான பாஹ்லீகர்விஷயத்தில் மறுபடியும் உத்தரம் சொன்னார்; அதைச் சொல்லுகிறேன்; நீ தெரிந்துகொள். அந்தப் பாஹ்லீக தேசத்தில் செல்வப் பெருக்குள்ள சாகல நகரத்தில் ஒரு ராக்ஷஸி இரவில் துந்துபி வாத்யத்தை அடித்துக்கொண்டு கிருஷ்ணசதுர்த்தசியில் எப்பொழுதும் பாடுகிறாளாம். சாகல நகரத்தில் உங்களுடைய அவ்வித காதைகளை மறுபடியும் எவ்வாறு சொல்வேன்? வெல்லங் கலந்த கள்ளையும் சாராயத்தையும் குடித்துக் கோமாம்ஸத்தினால் திருப்தியடைந்தவர்களும் வெண்ணிறமுள்ள பருத்த ஸ்திரீகளோடு நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களும் வாய்நிரம்ப உள்ளிப்பூண்டை அடக்கிக்கொண்டவர்களும் அனேக விதமான துர்மாம்ஸங்களைத் தின்னுகின்றவர்களும் சாராயத்தால மதங்கொண்டவர்களும் பீலுவிருக்ஷங்களடர்ந்த காட்டில பாலர்களோடும் விருத்தர்களோடும் கூடியவர்களும், 'பன்றி மாம்ஸத்தையும் கோழி மாம்சத்தையும் கோமாம்சத்தையும் கழுதை மாம்சத்தையும் ஒட்டக மாம்சத்தையும் அவல்களையும் தின்னாதவர்களின் பிறப்பானது பயனற்றது' என்று இவ்வாறுபாடுகிறவர்களும் கூச்சலிடுகிறவர்களுமாயிருப்பவர்களுக்குத் தருமம் எப்படி உண்டாகும்? * எந்தத் தேசத்

* இது வியாகயானபாடத்திலில்லை.

தில் உக்கிரர்களான மனிதர்களாலே லோகநாதனும் தேவதேவனும் ஜனார்த்தனனுமான ஸ்ரீ கிருஷ்ணன் மறக்கப்பட்டானே அந்தத் தேசத்தவர்களுக்குத் தர்மம் எவ்வாறு உண்டாகும்? சல்ய! மற்றொரு பிராம்மணன் கௌரவஸபையில் நம்மைப்பார்த்துச்சொல்லியதையும் மறுபடியும் மனக்களிப்புடன் உனக்குச் சொல்லுகிறேன். நீ தெரிந்துகொள். பீலு விருக்ஷங்களடர்ந்த காடுகளும் சதத்ரு, விபாசை, ஐராவதி, சந்திரபாகை, விதஸ்தை என்கிற இந்த ஐந்து நதிகளும் ஆறாவதான ஸிந்துமகாநதியும் ஓடுவதும் ஆரட்டர்களென்கிற பாஹ்லீகர்களிருப்பதுமான இடத்தில் மேலோர் வாஸஞ்செய்யமாட்டார். வ்ராதயர்களாகவும் தாஸமீயர்களாகவும் விதேகர்களாகவும் யாகஞ் செய்யாதவர்களாகவும் தர்மத்தை யிழந்தவர்களாகவுமிருக்கின்ற அந்தப் பாஹ்லீகர்களுடைய (ஹவிஸை) தேவர்களும் பிதிர்க்களும் அவ்வாறே பிராம்மணர்களும் ஏற்றுக்கொள்ளவில்லையென்று நாம் கேட்டிருக்கிறோம். கற்றறிந்த பிராம்மணர் ஸாதுக்களுடைய ஸபையில் சொல்லியதையுங்கேள். நயையற்றவர்களான பாஹ்லீகர்கள் மாவினாலும் சாராயத்தாலும் பூசப்பட்டவைகளும் நாயினால் நக்கப்பட்டவைகளுமான மரக்குடங்களிலும் மண்பாண்டங்களிலும் சாப்பிடுகிறார்கள். பாஹ்லீகர்கள் ஆட்டுப்பாலையும் ஒட்டகப் பாலையும் கழுதைப்பாலையும் குடிக்கின்றார்கள்; அந்தப் பால்களால் பக்குவம் செய்யப்பட்ட வஸ்துக்களையும் தின்கிறார்கள். சல்ய! போஜன பாத்திரங்களைக் கலந்துகொள்ளுகின்றவர்களும் அபசதர்களும் எல்லா அன்னங்களையும் புஜிப்பவர்களும் எல்லாப்பாலையும் குடிப்பவர்களுமான ஆரட்டர்களென்கிற பாஹ்லீகர்கள் கற்றறிந்தவனால் விலக்கத்தக்கவர்களென்று அறிந்துகொள். மேலும், மற்றொரு பிராம்மணன் கௌரவஸபையில் என்னை நோக்கிச் சொல்லியதையும் பின்னும் உனக்குச் சொல்லுகிறேன். * யுகந்தரத்தில் பாலைக்குடித்து அச்சுத ஸ்தலத்தில் போய் வஸித்திருந்து அவ்வாறே பூதிலயத்தில் ஸ்நானம் செய்து ஒருவன் எவ்வாறு ஸ்வர்க்கத்தை அடைவான்? இந்த ஐந்து நதிகள் மலையினின்று வெளிப்பட்டு ஓடு

* 'யுகந்தர மென்னும் நகரத்திலிருப்பவர்கள் ஒட்டக முதலியவற்றின் பாலையும் குடிக்கிறார்கள். அச்சுதஸ்தலமென்னும் நகரத்தில் வஸிப்பவர்கள் சேரத்தகாதவர்களையும் சேர்கிறார்கள். பூதிலயத்தில் சண்டாளர்களுக்கும் பிராம்மணர்களுக்கும் பொதுவாக ஒரேகுளமிருக்கிறது. ஆதலால், இவ்விடங்களில் முறையே பால்குடிப்பவனும் வஸிப்பவனும் ஸ்நானம் செய்பவனும் ஸ்வர்க்கத்தை அடையார்' என்பது பழைய உரையின் கருத்து.

கின்றதும் ஆரட்டர்களென்கிற பாஹ்லீகர்களிருக்கின்றதுமான தேசத்தில் ஆர்யன் இரண்டு தினங்கள் வாஸஞ் செய்யக் கூடாது. விபாசை என்கிற நதியில் பாஹ்லீகை ஹீகமென்னும் பெண்ணும்ஆணுமான இரண்டுபிசாசுகள் இருக்கின்றன. பாஹ்லீகர்கள் அந்தப் பிசாசங்களுடைய குழந்தைகள். இது பிரம்ம ஸ்ருஷ்டியைச் சேர்ந்ததன்று. ஹீனஜாதியில பிறந்தவர்களான அந்தப் பாஹ்லீகர்கள் பற்பல தர்மங்களை எவ்வாறு அறிவார்கள்? தீர்த்தந்தோறும் ஸஞ்சரிக்கின்றவளும் பெரிய உரல்களை மேகலையாக அணிந்தவளுமான ஒரு ராக்ஷஸி, 'காரஸ்காரத்தையும் மாஹிஷகத்தையும் கரம்பத்தையும் கடகாலிகத்தையும் கர்க்காரத்தையும் வீரகத்தையும் உன்மத்தகதேசத்தையும் வீரர்கள் (நேர்ந்தால்) ஓரிரவு வாஸம் செய்து விலக்க வேண்டும்' என்று சொன்னாள். ஆரட்டம் என்கிற அந்தத் தேசமும் பாஹ்லீகமென்கிற அந்த வனமும் வஸாதி ஸிந்துஸௌவீர தேசங்களும் பெரும்பான்மையாக அதிகமாக நிந்திக்கப்பட்டவை.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

### (சல்யனுக்கும் கர்ணனுக்கும் கலகமும் துர்யோதனன் அவ்விருவரையும் ஸமாதானம் செய்ததும்.)

கர்ணன், 'சல்ய! இந்த விருத்தாந்தத்தை நன்கு தெரிந்து கொள். கஷ்டம்! உனக்கு மறுபடியும் சொல்லுகிறேன். என்னால் நன்கு உரைக்கப்படுகின்ற இந்த விஷயத்தை நீ ஒரே மனத்துடன் கேள். முற்காலத்தில் ஒரு பிராம்மணன் நம்முடைய வீட்டுக்கு விருந்தினனாக வந்தான். அவன் அந்த வீட்டிலுள்ள ஆசாரத்தைப் பார்த்துப் பிரீதியடைந்து (என்னைப்பார்த்து,)'நான் ஏகாகியாக இமய மலையினுடைய சிகரத்தில் நெடுங்காலம் வாஸஞ்செய்தேன். பற்பல தர்மங்கள் பரவியுள்ள அனேகதேசங்களையும் பார்த்தேன். இந்தஜனங்கள் ஒரு தர்மத்தோடும் மாறுபடவில்லை. வேதத்தின் கரைகடந்தவர்களாலே சொல்லப்பட்டதர்மத்தை எல்லாப்பிரஜைகளும் ஆசரிக்கின்றார்கள். மஹாராஜனே! பற்பலதர்மங்கள்பரவியுள்ளதேசங்களில் ஸஞ்சரித்துக்கொண்டுவரும் நான் பாஹ்லீகநாடுகளில் (ஒருவிஷயம்) கேட்டேன். அந்தப்பாஹ்லீகதேசத்தில் பிராம்மணனாயிருந்து மறுபடியும் க்ஷத்திரியனாகிறான். வைஸ்யனாகவும் சூத்திரனாகவும் இருக்கின்ற பாஹ்லீகன் பிறகு நாவிதனாகிறான். நாவிதனாயிருந்து மறுபடியும்

பிராம்மணனாகிறான். பிராம்மணனாயிருந்து அந்தத்தேசத்திலேயே மறுபடியும் தாஸனாகிறான். சிஷ்டர்களானபிராம்மணர்களும் ஒருகுலத்தில் காமசாரிகளாயிருக்கின்றார்கள். காந்தாரர்களும் மத்ரகர்களும் பாஹ்லீகர்களும் தேஜஸில்லாதவர்கள். சல்ய! பூமிமுழுவதும் ஸஞ்சரித்துவரும் நான் அந்தப்பாஹ்லீகதேசத்தில் இப்படிப்பட்ட ஆசாரக்கலப்பையும் மாறுபாட்டத்தையும் கேட்டேன். வேறொருவன் பாஹ்லீகர்களுடைய இழிவான செய்கையைப்பற்றி உரைத்த வாக்கியத்தையும் உனக்கு மறுபடியும் சொல்லுகிறேன். இதைத்தெரிந்துகொள். அந்தப்பாஹ்லீகதேசத்தில் திருடர்கள், அனுபவிக்கப்படாதவளான ஒருகன்னிகையை ஆரட்டதேசத்தினின்று கொண்டுவந்து அதர்மத்தினால் அனுபவித்தார்கள். பிறகு அந்தக்கன்னிகை அவர்களைப்பார்த்து, 'இளமைப்பருவத்திலிருப்பவளும் பந்துக்களுள்ளவளுமான என்னை அதர்மத்தால் போகித்தீர்களாதலால் உங்களுடையவம்சங்களில் குமாரிகள் வியபிசாரிகளாவார்கள். நராதமர்களே! கோரமான இந்தச் சாபத்தினின்று நீங்கள் விடுபடமாட்டீர்கள்' என்றுசபித்தாள். ஆதலால், அந்தப்பாஹ்லீகநாட்டுத் திருடர்களுடையபாகத்தைப் பெற்றுக்கொள்ளுகின்ற நீ எவ்வாறு தர்மங்களைப் பேசுவாய்? பாஹ்லீகத்தைத்தவிர மற்றத்தேசங்களில் வஸிக்கின்ற அஸத்துக்களும் பெரும்பான்மையாகத் தர்மத்தை அறிகிறார்கள். கௌரவர்களும் பாஞ்சாலர்களும் ஸால்வர்களும் மாத்ஸ்யர்களும் நைமிசர்களும் கோஸலர்களும் காசர்களும் பௌண்டிரர்களும் களிங்கர்களும் அவ்வாறே மகதர்களும் மஹாபாக்கியசாலிகளான சைத்யர்களும் சாஸ்வதமான தர்மத்தை அறிகிறார்கள். மத்ரர்களையும் கபடிகளான பாஹ்லீகர்களையும் தவிர மாத்ஸ்யர்களும் கௌரவர்களும் பாஞ்சாலர்களும் ஸால்வர்களும் நைமிசம்வரையிலுள்ள சிறந்தஸாதுக்களான சைத்யர்களும் புராதனதர்மத்தைப் பின்பற்றி ஜீவிக்கின்றார்கள். சல்யராஜனே! இவ்வாறான ஸங்கதியை அறிந்த நீ எப்பொழுதும் தர்மகதைகளில் மௌனமாயிருப்பாயாக. நீ அந்தத்துஷ்டஜனங்களை ரக்ஷிக்கிறவன்; அரசன். அவர்களுடைய புண்யபாவங்களில் ஆறில் ஒருபாகத்தை நீ பெற்றுக்கொள்பவன்; அல்லது, காவாமலிருப்பாயாகில் நீ அவர்களுடைய பாவத்தைப் பெற்றுக்கொள்பவன். பிரஜைகளை ரக்ஷிக்கின்ற அரசன் அவர்களுடைய புண்யத்தைப்பெறுவான். நீ பிரஜைகளுடையபாவங்களை அடைபவனாயிருக்கிறாய். முற்காலத்தில் எல்லாத்தேசங்களிலும் அழிவற்ற தர்மமானது பூஜிக்கப்படும்பொழுது பாஹ்லீகதேசத்து ஜனங்களிடத்திலுள்ள தர்மத்தைக்கண்டு பிரம்ம

தேவர், 'நிந்திக்கத்தக்கது' என்று கூறினர். வ்ராத்யர்களும் செம்படவனைச் சேர்ந்தவர்களும் கிருதயுகத்திலும் கெட்டகார்யத்தைச் செய்கின்றவர்களுமான அவர்களுடைய பிரம்மதேவரால் நிந்திக்கப்பட்ட தர்மங்களை ஒரு விதூதப்புருஷன் உரைத்தான். பிரம்மதேவர் இவ்வாறு பாஹ்லீகர்களுடைய தர்மத்தை அவமதித்தார். நான்கு ஜாதிக்காரர்களும் தம்தர்மங்களில் நிலைபெற்றிருக்குங்காலத்தில் அந்தப் பிரம்மதேவரும் இவர்களைப் புகழவில்லை. சல்ய! இதனைத் தெரிந்து கொள். மறுபடியும் உனக்குச் சொல்லுகிறேன். கலமாஷபாதனென்கிற ராக்ஷஸன் தடாகத்தில் ஸ்நானம் செய்கையில், 'க்ஷத்திரியனுக்குப் பிச்சையெடுப்பது பாபம்; பிராம்மணனுக்குப் படிப்பின்மை பாபம்; பூமிக்குப் பாஹ்லீகர்கள் பாபம்; ஸ்திரீகளுக்குக் குதூசலமானது பாபம்' என்று சொன்னான். ராஜனே! ஓர் அரசன் ஜலத்திலமிழ்ந்து கொண்டிருக்கின்ற ராக்ஷஸனை மேலே எடுத்துவிட்டுக் கேட்டான். அவனால் உரைக்கப்பட்டதைக் கேள். 'மனுஷ்யர்களுள் மிலேச்சர்கள் பாபிகள்; மிலேச்சர்களிலும் முஷ்டிகர்கள் பாபிகள்; முஷ்டிகர்களிலும் *ஷண்டர்கள் பாபிகள்; ஷண்டர்களிலும் ராஜபுரோஹிதர்கள் பாபிகள். ராஜபுரோகிதனைச்சிஷ்யனைக்கொண்டவர்களுக்கும் மத்ரகர்களுக்கும் எந்தப் பாபமுண்டோ அந்தப்பாபமானது, என்னை விடாமலிருந்தால், உனக்கு ஸம்பவிக்கும்'. இவ்வாறு ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டவர்கள் விஷயத்திலும் விஷத்தின் வீர்யத்தினால் அடிக்கப்பட்டவர்கள் விஷயத்திலும் நன்றாக ஸித்தியடைந்திருக்கின்ற ஸாதுக்களுடைய வசனத்தினாலமேன்மைபெற்றமருந்தானது ஏற்றறிந்தவர்களாலே கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றது. பாஞ்சாலர்கள் பிரம்மதேஜஸையுடையவர்கள். கௌரவர்கள் தர்மத்தைவிட்டு விலகாதவர்கள். மத்ஸ்ய தேசத்து ஜனங்கள் ஸத்யத்தில் நிலைபெற்றவர்கள். சூரஸேனர்கள் யாகஞ்செய்விக்கத் தக்கவர்கள். கீழ்நாட்டிலுள்ளவர்கள் தாஸர்கள். தென்னாட்டிலுள்ளவர்கள் † வ்ருஷளர்கள். பாஹ்லீகர்கள் திருடர்கள். ஸுராஷ்டிரர்கள் ஸாங்கர்யமுள்ளவர்கள். எவர்களுக்கு நன்றி மறத்தல், பிறர் பொருளை அபஹரித்தல், சாராயங்குடித்தல், குரு பத்னியைப் புணர்தல், கடுஞ்சொல், பசுவைக் கொல்லுதல், திருடுதல் அல்லது பிறர்மனையாளைப்புணர்தல், பிறர்களுடைய வஸ்திரங்களை உடுத்து அனுபவித்தல் ஆகிய இவைகள் தர்மமோ அவர்களுக்கு அதர்மமே இல்லை. ஆரட்டதேசத்தில் தோன்றியிருப்பவர்களையும் பஞ்சநதம் என்கிற பாஹ்லீகதேசத்து ஜனங்களையும் நிந்திக்கவேண்டும். பாஞ்

* அலிகள். † சாந்திபர்வம் 304-ம் பக்கம் பார்க்க.

சாலர்களும் கௌரவர்களும் நைமிசர்களும் மாத்ஸ்யர்களும் தர்மத்தையே அனுஸரித்துப் பிழைக்கின்றார்கள். (ஞானத்தினால்) முதிர்ந்தவர்களான வடநாட்டார்களும் சைத்யர்களும் மாகதர்களும் சிஷ்டர்களுடைய தர்மத்தை அனுஸரித்துப் பிழைக்கின்றார்கள். அக்னியை முதன்மையாகக்கொண்ட தேவர்கள் கீழ்த்திசையை யுடைந்தார்கள். தெற்குதிக்கானது பிதிர்க்களாலும் நல்லதர்மங்களுடன் கூடின யமனாலும் ரக்ஷிக்கப்பட்டது. அனேக அஸுரர்களை ரக்ஷிக்கின்ற வருணன் மேல்திசையைப் பாதுகாக்கிறான். பகவானை குபேரனும் ஈசானரும் பிரம்மதேவரும் பிராமணர்களோடு வடதிசையைக் காக்கின்றார்கள். இமயமலையானது ராக்ஷஸர்களையும் பிசாசங்களையும் பாதுகாக்கின்றது. கந்தமாதன பர்வதமானது குஹ்யகர்களைக் காக்கின்றது. தேவர்களுள் உத்தமரான ஸ்ரீ விஷ்ணுவானவர் எல்லாப்பிராணிகளையும் பாதுகாக்கிறார். நிச்சயம். மகதர்கள் இங்கிததத்தினால் அறிகிறவர்கள்; கோஸலர்கள் பார்வையினால் அறிகிறவர்கள்; கௌரவர்களும் பாஞ்சாலர்களும் பாதி சொல்லுவதனால் தெரிந்துகொள்ளுகிறவர்கள்; *தென்னாட்டார்கள் முழுதும் சொல்லுவதனால்தெரிந்துகொள்ளுகிறவர்கள். மலைநாட்டில் வஸிப்பவர்கள் † மலைகளைப்போல விஷமஸ்வபாவமுடையவர்கள். அரசனே! யவனர்கள் எல்லாம் அறிந்தவர்கள். முக்கியமாகச் சூரர்களும் அப்படியே. மிலேச்சர்கள் (சாஸ்திரவழியில் செல்லாமல்) தாங்கள் செய்துகொண்ட கட்டுப்பாட்டிலேயே நிற்பவர்கள். மற்றவர்கள் ஹிதத்தைச் சொல்லாமல் தெரிந்துகொள்ளுவதில்லை. பாஹ்லீகர்களோ குருத்துரோகிகள். மத்ரகர்கள் ஒருவித வகுப்பிலும் சேராதவர்கள்' என்று கூறினான். சல்ய! இப்படிப்பட்ட நீ மறுமொழி சொல்லத் தகுந்தவனல்லை. பாபிகளுள் சிறந்தவனே! இவ்வாறு தெரிந்துகொண்டு நீ பேசாமலிரு. கோபித்து மறுக்காதே. தொடக்கத்தில் உன்னைப் புத்திரர்களோடும் சேனைகளோடும் சேர்த்துக் கொன்றபிறகு வாஸுதேவனையும் அர்ஜுனனையும் கொல்லப்போகிறேன்' என்று சொன்னான்.

சல்யன், 'கர்ண! எந்ததேசத்தில வஸிக்கின்ற ஜனங்களுக்கு நீ தலைவனாயிருக்கிறாயோ அந்த அங்கதேசத்தில் வியாதியினால் வருந்துகின்ற மனிதர்களைக் காவாமல் விட்டுவிடுவதும் தன்மனைவியையும் புத்திரனையும் விற்பதும் வழக்கமாயிருக்கின்றன. பீஷ்மர் அப்பொழுது ரதிகர்களையும் அதிரதர்களையும் எண்ணுங்காலத்தில் உன்னைப்

* 'ஸால்வர்கள்' என்பது வியாக்யான பாடம்.

† 'பசிகளை' என்பது வியாக்யானபாடம்.

பற்றிச்சொல்லியவையும் உன்னிடத்திலுள்ளவையுமான தோஷங்களைத் தெரிந்துகொண்டு அற்பத்தனத்தை விட்டுவிடு; கோபங்கொள்ளாதே. எல்லாவிடத்திலும் பிராம்மணர்கள் இருக்கின்றார்கள். எல்லா இடத்திலும் க்ஷத்திரியர்களும் இருக்கின்றார்கள். கர்ண! அவ்வாறே வைஸ்யர்களும் சூத்திரர்களும் இருக்கின்றார்கள். நல்ல விரதமுள்ள பதிவிரதைகளான ஸ்திரீகளும் இருக்கின்றார்கள். தேசந்தோறும் மதங்கொண்டவர்களான புருஷர்கள் புருஷர்களோடு பரிஹஸிக்கும்படியாக அன்யோன்யம் சிற்றின்பத்தில் பற்றுதலுள்ளவர்களாகி மகிழ்கின்றனர். எல்லோரும் எப்பொழுதும் பிறருடைய தோஷங்களை எடுத்துக் கூறுவதில் ஸமர்த்தர்களே. தம் குற்றத்தை அறிகிறவர்களில்லை. அறிந்திருந்தாலும் மோகத்தை யடைகிறார்கள். தத்தம் தர்மத்தில் நிலைபெற்ற அரசர்கள் எல்லா இடத்திலும் இருக்கின்றார்கள். எல்லா இடத்திலும் தர்மத்தை அனுஷ்டிக்கின்ற ஸத்புருஷர்கள் இருக்கின்றார்கள்; கெட்ட மனிதர்களை நிக்ரஹிக்கின்றார்கள். கர்ண! தேசந்தோறும் எல்லாரும் பாபத்தைச் செய்ய மாட்டார்கள். மனிதர்கள் தத்தம் ஸ்வபாவத்திற்கேற்றபடி அந்த அந்தத்தேசங்களை அறிகிறார்கள்' என்று கூறினான். பிறகு, துர்யோதன ராஜன் ஸ்நேகத்தால் ராதாபுத்திரனை கர்ணனையும் ஸௌஜன்யத்தினால் சல்யனையும் தடுத்தான். பெரியவரே! ராஜேந்திரரே! பிறகு, திருதராஷ்டிர புத்திரனான துர்யோதனனாலே தடுக்கப்பட்ட கர்ணன் உரக்கச் சிரித்துக்கொண்டு அச்சமயத்தில், 'சல்ய! போ' என்று ஏவினான்.

---

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

### (சல்யனுக்கும் கர்ணனுக்கும் ஸம்வாதமும் இரண்டு ஸேனைகளும் யுத்தத்துக்கு எதிர்த்ததும்.)

பிறகு, கர்ணன், பகைவர்களுடைய படையைப் பிளக்கும் திறமையுள்ளதும் நிகரற்றதாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறதும் திருஷ்டத்யும்னனால் நான்குபக்கத்திலும் பாதுகாக்கப்பட்டிருக்கிறதுமான பார்த்தர்களுடைய படையைக் கண்டு, ரதத்தினுடைய சப்தத்தாலும் ஸிம்மநாதத்தின் ஒலியினாலும் நான்குவித வாத்தியங்களுடைய ஓசைகளாலும் பூமியை நடுங்கச்செய்கிறவன்போலச் சென்றான். பிறகு, செல்லுகின்ற ராதாபுத்திரனை மத்ரராஜனானவன் அவமதித்துப் புன்னகைசெய்து கௌரவர்களுடைய முன்னிலையில் இந்தவாக்

யத்தைக் கூறலானான். 'பெரியதும் நிறைந்ததும் எண்ணமுடியாததும் குதிரைகளாலும் மனிதர்களாலும் நிரம்பியதுமான உன்னுடையஇந் தச்சேனையை ஜ்வலிக்கின்ற நெருப்பானது உலர்ந்த காட்டை எரிப் பதுபோலத் தனஞ்சயன் யுத்தத்தில் எரித்துக்கொண்டு வரப்போகி றான்.நீ இப்பொழுது ரதத்திலிருப்பவர்களும் சிறந்தவர்களும் ஸிம்மத் தினுடைய தோள்போன்றதோளையுடையவர்களும் செந்தாமரைமலர் போன்ற கண்களையுடையவர்களுமான சிறந்த இரண்டு வீரர்களையும் பிரயத்னமில்லாமல் பார்க்கப்போகிறாய். அப்படியே சகுனங்கள் எனக்கு இந்த விஷயத்தைத் தெரிவிக்கின்றன. கர்ண! எவனைப் பற்றி அடிக்கடி நீ கேட்கிறாயோ வெண்மையான குதிரைகளையுடை யவனும் கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் யுத்தத்தில் பகை வர்களைக் கொல்லுகின்றவனுமான அந்தவீரனை இப்போது நீ பார்க்கப் போகிறாய். கர்ண! புருஷஶ்ரேஷ்டர்களும் சிவந்த கண்களையு டையவர்களும் சத்ருக்களைத் தப்பிக்கச் செய்கின்றவர்களும் அளவுகடந்த விக்கிரமமுள்ளவர்களுமான அந்த வாஸுதேவனை யும் அர்ஜுனனையும் இப்பொழுது பார்க்கப் போகிறாய். ராதேய! எவனுக்குக் கோவிந்தன் ஸாரதியோ, எவனுக்குக் காண்டீவம் வில் லோ அவனை நீ கொல்வாயாகில், நீ எங்களுக்கு அரசனாவாய். இதோ, பெருங்காற்றானது உன்னுடைய சேனைக்கு நாற்புறத்திலும் பலமாக வீசுகிறது. இதோ, ஊளையிடுபவைகளான பிராணிகள் கத்து கின்றன. மிருகங்கள் பயங்கரமான சப்தத்தை உண்டுபண்ணுகின் றன. கர்ண! மஹாகோரமாயிருப்பதும் மயிர்க்கூச்சத்தை உண்டு பண்ணுகின்றதுமான பயத்தைப் பார். மேகம்போன்ற தலையில்லா முண்டமானது சூரியனைத் தடுத்துக்கொண்டு நிற்கின்றது. எல்லாத் திக்குக்களிலும் மிருகங்களுடைய நூறுக்கணக்கான கூட்டங்கள் ஜ்வலிக்கின்ற வாலுடன் சூரியனுக்கெதிராக நின்றுகொண்டு கத்து கின்றன; பார். கர்ண! ஆயிரக்கணக்காக ஒன்றுசேர்ந்திருக்கின்ற காக் கைகளையும் கழுகுகளையும் பார். அமங்களகரங்களான இந்தப் பக்ஷி கள் சப்தத்துடன் சூரியனை எதிராகப் பார்க்கின்றன. கர்ண! வெண் மையான குதிரைகள் கட்டின உன்னுடைய மஹாரதத்திலுள்ள இந்தக் கொடித்துணிகள் மிகவிளங்குகின்றன. த்வஜங்களும் மிகநடுங் குகின்றன. பருத்த உடலுள்ளவைகளும் அதிகவேகமுள்ளவைகளும் மஹாவீர்யமுள்ளவைகளும் ஆகாயத்தில் கருடன்களைப்போல் பறக் கின்றவைகளும் விரைவாகச் செல்லுகின்றவைகளுமான குதிரை களைப் பார். கர்ண! இந்த நிமித்தங்களால் அரசர்கள் நூறுநூறாக

வும் ஆயிரமாயிரமாகவும் அடிக்கப்பட்டு நிச்சயம் பூமியை மறைத்துக் கொண்டு தூங்கப்போகிறார்கள். ராதேய! சங்கங்கள், ஆனகங்கள் அடிக்கப்படுகின்ற மிருதங்கங்கள் இவற்றின் மயிர்பொடிக்கலை உண்டு பண்ணுகின்ற நெருங்கிய சப்தம் கேட்கிறது. கர்ண! மனிதர்கள் குதிரைகள், ரதங்கள், ரதத்திலுள்ள குதிரைகள் இவைகளுடைய பற்பலவிதமான சப்தங்களைக்கேள். மஹாத்மாக்களுடைய நாணொலிகளையும் தலத்வனிகளையும் பாணசப்தங்களையும் கேள். கர்ண! பொன் வெள்ளிகளால் இழைக்கப்பட்ட வஸ்திரங்களைக்கொண்டு சிற்பிகளால் அமைக்கப்பட்டவைகளும் பொன்னாலாகிய சந்திரப்பிரதிமைகளாலும் நக்ஷத்திரப்பிரதிமைகளாலும் ஒளிபொருந்தியவைகளும் கிங்கிணிகளோடு கூடியவைகளும் பற்பலவர்ணமுள்ளவைகளுமான இந்த அர்ஜுனனுடைய கொடித்துணிகள் காற்றினால் நன்றாக அசைக்கப்பட்டு மேகத்தில் கொடிமின்னல்கள்போல் யுத்தத்தில் பிரகாசிக்கின்றன; பார். மிக்க பலசாலிகளான பாஞ்சாலர்களுடைய ரதத்தில் நாட்டப்பட்டிருக்கின்ற துணிகளுடன்கூடின கொடிகள் காற்றினால் நன்றாக அசைக்கப்பட்டவைகளாகி, 'கணகண' என்று சப்திக்கின்றன கர்ண! இதோ மேலேயெழுந்த புழுதியானது ஆகாயத்தை மூடிக்கொண்டிருக்கிறது. யானைகளாலும் குதிரைகளாலும் காலால்மிதிக்கப்பட்ட பூமியானது நடுங்குகிறது. அவ்வாறே மேகத்தின் முழக்கத்துக்கொப்பான ரதசக்ரங்களின் கட்டுக்களாலுண்டாகும் சப்தமானது கேட்கிறது. ஜயிக்கப்படாதவனும் குந்திபுத்திரனும் வீரனும் அடிக்க எண்ணங்கொண்டு வருகின்றவனும் சிறந்த வானரத்தைக் கொடியாகக் கொண்டவனுமான பீபத்ஸுவைப் பார். யுத்தத்தில் உன்னுடைய யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் காலாட்களுடைய கூட்டங்களையும் கொல்லுகின்ற அந்த அர்ஜுனனுடைய த்வஜத்தினுடைய நுனி காணப்படுகிறது. நாணொலியும் கேட்கிறது. இந்தப் பலசாலியான அர்ஜுனன் மறுபடியும் அந்த ஸம்சப்தகர்களுக்கெதிராகவே சென்று யுத்தத்தில் பகைவர்களுக்குத் துன்பத்தைச் செய்கிறான்' என்றான். இவ்வாறு சொல்லுகின்ற மத்ரராஜனைப் பார்த்துக் கோபமுற்றவனான கர்ணன், 'சல்ய! கோபங்கொண்ட ஸம்சப்தகர்களாலே நான்குபக்கத்திலும் நன்றாக எதிர்க்கப்பட்டிருக்கின்ற இந்தப் பார்த்தன் மேகங்களால் மூடப்பட்ட சூரியன்போலக் காணப்படவில்லை; பார். பழக்கப்பட்டவனான இந்த அர்ஜுனன் சோகஸாகரத்தில் மூழ்கிவிட்டான்' என்று கூறினான். சல்யன், 'வருணனை ஜலத்தால் எவன் அடிப்பான்? எவன்

விறகினால் அக்னியை வருத்துவான்? எவன் வாயுவைக் கட்டிப் பிடிப்பான்? எவன் பெருங்கடலைக் குடிப்பான்? யுத்தத்தில் பார்த்தனுடைய தோல்வியை இத்தன்மையதாக நான் எண்ணுகிறேன். அர்ஜுனன் யுத்தத்தில் தேவாஸுரர்களாலும் ஜயிக்க ஸாத்தியப்படாதவன். அப்படியின்றி இவ்வாறான வாக்குக்களாலேயே உனக்கு ஸந்தோஷமுண்டாகுமாகில் நீ இப்படிச்சொல்வதினாலேயே மனவமைதியுள்ளவனாயிரு. பார்த்தன் யுத்தத்தினால் ஜயிக்க முடியாதவன். வேறுவிஷயத்தில் அதை வை. அர்ஜுனன் கோபித்துக்கொள்வானேயாகில் இரண்டு கைகளாலும் பூமியைத் தூக்குவான்; இந்தப் பிரஜைகளை எரித்துவிடுவான்; ஸ்வர்க்கத்தினின்று தேவர்களைத் தள்ளிவிடுவான். அவனை யுத்தத்தில் (ஒருவனும்) ஜயிக்கமாட்டான். வீர்யமுடையவனும் எளிதில் (யுத்தத்தைச்) செய்பவனும் (பகைவர்களை) அடிக்கிறவனும் நீண்டகைகளையுடையவனும் மஹாமேருவைப்போல் அசைவற்றிருப்பவனும் குந்திபுத்திரனுமான பீமனைப் பார். புருஷஸ்ரேஷ்டனும் சிறந்த வீர்யமுள்ளவனுமான இந்தப்பீமன் எப்பொழுதும் வைரத்தை நினைத்துக்கொண்டு கோபமுள்ளவனாகி யுத்தத்தில் ஜயத்தை யடைவதில் விருப்பமுற்று நிற்கிறான். தர்மத்தை அனுஷ்டிப்பவர்களுள்சிறந்தவனும் தர்மராஜனென்று பிரஸித்திபெற்றவனும் சத்துருபட்டணங்களை ஜயிப்பவனுமான இந்த யுதிஷ்டிரன் யுத்தத்தில் பகைவர்களால் ஸுலபமாக எதிர்த்துப் போர்புரியத்தகாதவனாகி நிற்கிறான். புருஷஸ்ரேஷ்டர்களும் மஹாரதர்களும் அஸ்விநீதேவர்களுடைய குமாரர்களுமான இந்த நகுலஸஹதேவர்கள் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவர்களாக நிற்கின்றார்கள். மஹாவீர்யமுள்ளவர்களும் யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் ஒப்பானவர்களும் த்ரௌபதிபுத்திரர்களுமான ஐவர்கள் யுத்தம் செய்பவர்களாக இதோ ஐந்து மலைகள்போல் நிற்கின்றார்கள். த்ருஷ்டத்யும்னனை முதன்மையாகச் சொன்னவர்களும் வீரர்களும் உத்தமமான பராக்கிரமமுடையவர்களும் ஸஞ்ஜயில் விடுபட்டவர்களுமான த்ருபதனுடைய குமாரர்கள் இதோ நிற்கின்றார்கள். எந்த இடத்தில் வீரர்களான கிருஷ்ணார்ஜுனர்கள் இருக்கின்றார்களோ, எந்த இடத்தில் ராஜாவான யுதிஷ்டிரன் இருக்கிறானோ அந்தஇடத்தில் தர்மமும் ஸத்யமும் இருக்கின்றன. எங்கே தர்மமோ அங்கே ஜயம்' என்றான். புருஷஸ்ரேஷ்டர்களான அவ்விருவர்களும் இவ்வாறு ஸம்வாதம் செய்துகொண்டிருக்கும்பொழுதே அந்த இரண்டுசேனைகளும் கங்கையும் யமுனையும் எதிர்த்ததுபோல நன்றாக எதிர்த்தன.

## நாற்பதாவது அத்யாயம்.

(துர்யோதனன் சேனையை உத்ஸாஹப்படுத்தியதும், பீமன் துர்யோதனனை வென்று பிறகு யானைப்படையைக் கொன்றதும்.)

பரதஸ்ரேஷ்டரே! பிறகு, துர்யோதனன் கர்ணனையும் மத்ரராஜனையும் அவ்வாறே மற்ற மஹாரதர்களையும் அடைந்து பின்வருமாறு கூறலானான். 'தற்செயலாக நேர்ந்திருக்கின்ற இந்தயுத்தமானது கவலையற்று அனுஷ்டிக்கத்தக்க தர்மம்; உத்தமமான நேசன். கர்ண! ஸுகமுடையவர்களான க்ஷத்திரியர்கள் இப்படிப்பட்ட யுத்தத்தை அடைகிறார்கள். ராதேய! யுத்தத்தில், சூரர்களான க்ஷத்திரியர்களோடு போரென்னும் சூதாடுகின்ற சூரர்களுக்கு எப்படிப்பட்ட யுத்தம் இஷ்டமாயிருக்குமோ அந்தயுத்தம் இதோ நேர்ந்துவிட்டது. யுத்தத்தில் பாண்டவர்களைக்கொன்று ஸ்திரமான பூமியை ஆளுங்கள். அல்லது, யுத்தத்தில் சத்துருக்களால் கொல்லப்பட்டு வீரலோகங்களை அடையுங்கள்' என்றான். துர்யோதனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு க்ஷத்திரியஸ்ரேஷ்டர்கள் உரக்க ஸிம்மநாதங்களைச் செய்தார்கள்; பற்பல வாத்யங்களையும் முழக்கினார்கள். பரதஸ்ரேஷ்டரே! மிக்க மனக்களிப்புற்ற உம்மைச் சேர்ந்ததான அந்தப் படையில், துரோணகுமாரரான அஸ்வத்தாமா உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களை ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு, 'எல்லாச்சைனிகர்களும் நீங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நேரில் சஸ்திரத்தைக் கீழே வைத்திருப்பவரான என்பிதா த்ருஷ்டத்யும்னனால் வீழ்த்தப்பட்டார். பாரத! அப்படிப்பட்ட நான் அந்த ரோஷத்தால் என்பிதாவுக்காகத் திருஷ்டத்யும்னனைக் கொல்லாமல் கவசத்தைக் கழற்றமாட்டேன். உங்களிடத்தில் மெய்யான பிரதிஜ்ஞையைச் செய்து பெரிதானபயனை அடையவும்மாட்டேன். அர்ஜுனனையும் பீமஸேனனையும் மற்றும் என்னை எதிர்த்துப் போர்புரிபவனையும் நன்றாக நாசஞ்செய்வேனென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம்' என்றுகூறினார். இவ்வாறு சொல்லப்பட்டபிறகு, பாரதசேனைமுழுவதும் ஸந்தோஷமுள்ளதாகக் குந்திபுத்திரர்களை எதிர்த்தது. அவ்வண்ணமே அதனையும் பாண்டவர்கள் எதிர்த்தார்கள். பாரதரே! ஆசைப்படத்தக்க மஹாயுத்தத்தில் ரதயூதபதிகளுக்கு அவ்விதமாகப் பெரிய போர் நடந்தது. கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்ஜயர்களுக்கும் முன்னிலையில் காலனால் யுகத்தின்முடிவில் உண்டுபண்ணப்படும் க்ஷயத்துக்கொப்பான ஜனக்ஷயமானது தோன்றிவிட்டது. பிறகு, யுத்தரங்கத்

தில் யுத்தம் நடக்கஆரம்பிக்கவே, தேவதைகளுள்ளிட்ட எல்லாப் பிராணிகளும் யுத்தத்தில் வீரர்களுடைய கூட்டங்களைப் பார்க்கின்ற அப்ஸரஸ் ஸ்திரீகளோடு சேர்ந்திருந்தன. யுத்தங்களில் கார்யத்தைச் செய்கின்றவர்களும் மிக்க ஊக்கமுடையவர்களுமான புருஷஸ்ரேஷ்டர்களை அதிக ஸந்தோஷமுள்ளவர்களான அப்ஸரஸுகள் திவ்ய கந்தங்களாலும் உத்தமமான புஷ்பங்களாலும் மற்றப் பற்பல ரத்னங்களாலும் ஆனந்தமடையச்செய்தார்கள். வாயுவானது அந்தக்கந்தங்களைத்தாங்கிக்கொண்டுவந்து அந்தச்சிறந்தயுத்தவீரர்களைஉபசரித்தது. காற்றினால் நன்றாக வீசப்படுகின்ற யுத்தவீரர்கள் யுத்தத்தினுடைய மத்தியில் ஒருவரையொருவர் அமிழ்த்தார்கள். ஸேனையின் மத்தியிலிருக்கிற துர்யோதனன் அவ்வாறு கைகலந்த அந்தச்சண்டை ஆரம்பிக்கப்படவே கோபத்தை அடக்குவதற்குச் சக்தியற்றவனாகிப் பீமஸேனனோக்கி நூறுக்ஷுத்ரகங்களென்கிற பாணங்களைப் பிரயோகித்தான். அவ்வாறு எதிர்த்திருக்கின்ற பீமஸேனனைத் துச்சாஸனனும் வீரனான சித்ரஸேனனும் அவ்வாறே சூதாடியான சகுனியும் நான்குபக்கத்திலும் யானைப்படைகளோடு விரைவாக எதிர்த்துவந்தார்கள். மஹாபாஹுபலமுள்ளவனான பீமஸேனன் வருகின்ற அந்த யானைப் படையைக் கண்டு துர்யோதனன்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். பிறகு, பலசாலியும்பாண்டுபுத்திரனுமான பீமன் வஜ்ராயுதத்துக்கொப்பான பாணங்களாலே துர்யோதனனைப் புறங்காட்டியோடும்படிசெய்து யானைகளை எதிர்த்தான். பிறகு, பாண்டவன் நெருப்புப்போன்றவைகளும் நேராகச்செல்லுகின்றவைகளும் விட்டிற்பூச்சிகள் போன்றவைகளும் பயங்கரமுமான அம்புகளால் அந்த யானைகளைப் பீடித்தான். பிறகு, மஹாபலசாலியான பீமஸேனன் கூர்மையுள்ள பாணங்களால் யானைக்கூட்டங்களைப் பெருங்காற்றானது மேகங்களைச் சிதறச் செய்வதுபோலச் சிதறியோடும்படி அடித்தான். வேந்தரே! மதங்கொண்டவைகளும் மதங்கொண்ட வீரர்களால் ஏறப்பெற்றவைகளும் இருப்புலக்கையையும் மாவெட்டியையும் கையிலகொண்டு மேலே ஏறியிருக்கின்ற மாவுத்தர்களால் ஸ்வர்ணமயமான விரிப்புக்களாலும் ரத்தினங்களிழைத்த விரிப்புக்களாலும் நன்றாக மூடப்பட்டவைகளும் பொன்னும் வெள்ளியும்போலப் பிரகாசிக்கின்றவைகளும் கத்திகளுடைய ஸமூகங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான அந்த யானைகள் பீமஸேனனால் விடப்பட்ட அம்புகளால் நாசஞ்செய்யப்பட்டன. சிலயானைகள் நெஞ்சம் பிளக்

கப்பட்டு அவ்விடத்திலேயே பூமியில்விழுந்தன. மஹாராஜரே! தா
வர்க்கங்களால் விசித்திரமாயிருக்கிற மலைகளால் பூமி விளங்குவது
போல் மிக்கவேகமுள்ளவைகளும் பொறகலன்களால் அலங்கரிக்க
பட்டவைகளும் விழுகின்றவைகளுமான யானைகளால் (யுத்த பூ
யானது) விளங்கியது. மன்னவரே! யானையினுடைய முதுகினின்
தள்ளப்பட்டவர்களும் பிரகாசிக்கின்ற ஆபரணங்களுடன்சடிய
களும் புண்யம்குறைந்த தேவர்கள்போன்றவர்களுமான வீரர்கள
லே யுத்தபூமியானது பிரகாசித்தது. விலலை இழுப்பவனான பீமசே
னனுடைய பெரிய பரிகாயுதம்போன்றவைகளும் சந்தனத்தினாலு
அகிற்சாந்தினாலும் பூசப்பட்டவைகளுமான புஜங்களைக் கண்டே
இடப்புறமாகவும் வலப்புறமாகவும் பாணங்களைப்பிரயோகிக்கின்
அந்தப் பீமஸேனனுடைய நாணொலியையும் தலதவனியையு
கேட்டு யானைகள் பீமஸேனனிடத்தினின்று உண்டானபயத்தினா
பீடிக்கப்பட்டவைகளாக நான்குபக்கத்திலும் ஓடின. அரசரே
நிகரில்லாதவனும் புத்திசாலியுமான அந்தப்பீமனுடைய செய்செ
கையைக் கண்டோம். மஹாராஜரே! அது ஆச்சர்யமாயிருந்தது.

---

## நாற்பத்தோராவது அத்யாயம்.

### (இரண்டு ஸேனைகளும் அணிவகுத்தது.)

பிறகு, கர்ணன், ஒப்பற்றதும் பெரிதும் பகைவர்களுடை
படையைப் பிளக்கின்றதும் திருஷ்டத்யும்னனால் நாற்புறத்திலு
பாதுகாக்கப்பட்டதுமான பார்த்தர்களுடைய அந்தப் படைவகு
டைப் பார்த்து ரதத்தின் கோஷத்தாலும் ஸிம்ம நாதத்தினாலுண்ட
கும் ஓசையாலும் பற்பல வாத்யங்களுடைய கோஷங்களாலும் பூ
யை நடுங்கச்செய்கிறவன்போல் எதிர்த்துச்சென்றான். பரதஸ்ரே
டரே! யுத்தத்தில் ஸாமர்த்தியமுள்ளவனும் பகைவர்களைத் தபிக்க
செய்பவனும் அதிக தேஜஸையுடையவனுமான கர்ணன், சின
தினால் துடித்துக்கொண்டு முறைப்படி எதிரணிவகுத்து இந்திர
அஸுர சேனையை அழித்ததுபோலப் பாண்டவசேனையை நாச
செய்தான்; யுதிஷ்டிரரையும் அடித்தான். அவரை இடப்பக்க
திலிருப்பவராகவும் செய்தான். கர்ணனுடைய தேரினொலியினாலு
நாண் கயிறு உரைவதினாலும் கடிவாளங்களை நன்றாகப்பிடிக்கும் தி
மையினாலும் ஸ்ருஞ்சயர்கள் பிரநடுக்கமுற்றார்கள். ராஜரே! உம்மை
சேர்ந்த அந்த எல்லாச்சேனைகளும் போர்புரியும் விருப்பத்துடன்

னனைக் கண்டு மிக்க மனக்களிப்பை அடைந்தன. ராஜரே! பிறகு, 'இப்பொழுது கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இதோ பெரிதான யுத்தம் நடக்கப்போகிறது. இப்பொழுது துர்யோதனராஜன் சத்துருக்கள் கொல்லப்பட்டவனாகப்போகிறான். யுத்தத்தில இப்பொழுது கர்ணனைக்கண்டு பலகுனன் ஓடப்போகிறான். இப்பொழுது நாம் யுத்தத்தில் கர்ணனையே பற்றி நின்று, பயங்கரமான அவனுடைய பாணமயமான யுத்தத்தை யுத்தரங்கத்தில பார்ப்போம். வெகுகாலமாக விரும்பப்பட்ட இந்த யுத்தமானது இன்று இப்பொழுது உண்டாகப்போகிறது. கோரமானதும் தேவாஸுரர்களுடைய யுத்தத்துறகொப்பானதுமான யுத்தத்தை இப்பொழுது பார்க்கப்போகிறோம். இன்று பயங்கரமான மஹாயுத்தமான து இப்பொழுது உண்டாகப்போகிறது. இன்று யுத்தத்தில இப்பொழுது ஜயம் உண்டாகப்போகிறது. பிரதி தினமும் ஒருவனுக்கே ஜயமுண்டாகுமா? ராதேயன் அர்ஜுனனை மஹாயுத்தத்தில் கொல்லப்போகிறானன்றோ! இல்லையேல உலகத்தில் எந்தமனிதனைத்தான் ஆசைபற்றுகிறதில்லை' என்கிற உம்மைச் சேர்ந்த யுத்தவீரர்களுடைய வாக்குக்கள் கேட்கப்பட்டன. குருநந்தனரே! கௌரவர்கள் இவ்வாறு பற்பல சொற்களைச் சொல்லிக்கொண்டு ஆயிரமாயிரமாகப் படகங்களையும் தூரியங்களையும் அடித்தார்கள். பற்பல விதமான பேரிநாதங்களையும் உரத்த ஸிம்மநாதங்களையும் முரஜங்களுடைய மஹாநாதங்களையும் ஆனகங்களுடைய பேரொலிகளையும் உண்டுபண்ணினார்கள். ஐயா! யுத்தரங்கத்தை அடைந்திருக்கின்ற மனிதர்கள் கூத்தாடுகின்றவர்களாகவும் பலவாறு வெருட்டுகின்றவர்களாகவும் ஒருவரையொருவர் யுத்தத்தில் எதிர்த்தார்கள். அந்த யானைகளுடைய பாதரக்ஷகர்களான காலாட்கள் நாற்புறங்களிலும் பட்டஸங்களையும் சுத்திகளையும் தரித்தவர்களும் சௌர்யமுள்ளவர்களும் பிரஸங்களையும் அம்புகளையும் முஸலங்களையும் தரித்தவர்களும் பிண்டிபாலங்களையும் சூலங்களையும் சிறந்த சக்கரங்களையுமுடையவர்களுமாயிருந்தார்கள். கோரமான அவர்களுடைய யுத்தமானது தேவாஸுரர்களுடைய யுத்தத்திற்கு ஸமமாயிருந்தது" என்று கூறினேன்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! த்ருஷ்டத்யும்னனைத் தலைவனாகக் கொண்டவர்களும் யுத்தத்தில் பீமஸேனனை நாற்புறங்களிலும் பாதுகாக்கப்பட்டவர்களும் சிறந்த வில்லாளிகளும் தேவர்களாலும் ஜயிக்க முடியாதவர்களுமான எல்லாப்பாண்டவர்களையும் நோக்கி, ராதேயன் எவ்வாறு எதிரணி வகுத்தான்? ஸஞ்சய! முறைப்படி நன்றாக அணி

வகுத்துக்கொண்டு நல்ல கவசம்பூண்டவர்களான எந்த வீரர்கள் என்னுடைய சேனைக்குப் பக்ஷங்களாகவும் பக்ஷங்களின் நுனிகளாக வும் நின்றார்கள்? பாண்டுபுத்திரர்களும் என்னைச்சேர்ந்தவர்களை நோக்கி எவ்வாறு எதிர்ணிவகுத்தார்கள்? மிக்க பயங்கரமான இந் தப் பெரியயுத்தம் எவ்வாறு தொடங்கியது? கர்ணன் யுதிஷ்டிரனை எதிர்த்துச்சென்றபொழுது பீபத்ஸுவானவன் எவ்விடத்திலிருந் தான்? அவனுடைய ஸமீபத்தில் யுதிஷ்டிரனை ஜயிப்பதற்கு எவன் வல்லமையுடையவன்? முற்காலத்தில் எவன் ஒருவனாயிருந்து கொண்டு காண்டவவனத்தில் எல்லாப் பிராணிகளையும் ஜயித்தானோ அந்த அர்ஜுனனை ராதேயனைத்தவிர உயிருடனிருக்க விரும்பு கிற வேறு எவன் எதிர்த்துப் போர்புரிவான்?" என்று சொல்லி, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான். "அணிவகுத்ததையும், அர்ஜு னன் எல்லா அரசர்களையும் நான்குபக்கத்திலும் சூழ்ந்து கொண்டு ஸஞ்சரித்ததையும், யுத்தம் நடந்தவிதத்தையும் கேளும். அரசரே! சரத்வானுடைய குமாரரான கிருபரும் பலசாலிகளான மாகதர்களும் ஸாத்வதனான கிருதவர்மாவும் வலப்பக்கத்தை ஆசிர யித்தார்கள். அவர்களுடைய பக்ஷத்தின்கோடியில் சகுனியும் மஹா ரதனான உலூகனும் பளபளப்பான ஈட்டிகளுடன்கூடின குதிரை வீரர்களோடு அப்பொழுது பாதுகாத்தார்கள். திரும்பாதவர் களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான இருபத்து நாலாயிரம் ஸம்சப்தகர்கள் விட்டிற்பூச்சிகளுடைய கூட்டங்கள்போன்றவர் களும் பிசாசங்கள்போலப் பார்க்கப் பயங்கரமானவர்களும் கலங்காத வர்களுமான காந்தாரர்களோடும் ஜயிக்கமுடியாதவர்களான மலை நாட்டுவீரர்களோடும் (வ்யூகத்தினுடைய) இடப்பக்கத்தைப்பாதுகாத் தார்கள். கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் கொல்ல எண்ணங்கொ ண்டவர்களான யவனர்களுடன்கூடின காம்போஜர்களும் சகர்களும் உம்முடைய புத்திரர்களோடு சேர்ந்து அவர்களுக்குப் பக்ஷங் களின் கோடியிலிருப்பவர்களானார்கள். ரதங்களுடனும் குதிரை களுடனும் யானைகளுடனும் காலாட்களுடனும்கூடின அந்த வீரர் கள் ஸூதபுத்திரனுடைய கட்டளையினால் அர்ஜுனனையும் மஹாபல சாலியான கேசவரையும் அழைத்துக்கொண்டு நின்றார்கள். பிறகு விசித்திரமான கவசத்தையும் தோள்வளைகளையும் அணிந்தவனும் புஷ்பமாலையைத் தரித்தவனுமான கர்ணன் ஸேனாமுகத்தைப் பாது காத்துக்கொண்டு சேனையின் முன்னணியில் நின்றான். சஸ்திர தாரிகளுள் உத்தமனும் வீரனுமான கர்ணன் ரக்ஷகர்களும் மிக்கபுத்

பராக்கிரமமுள்ளவர்களுமான புத்திரர்களோடு சேனையை நடத்திக்கொண்டு படையின் முன்னிலையில் விளங்கினான். மிக்க தோள்வலிமையுள்ளவனும் சூரியனுக்கும் அக்னிக்கும் சமமான காந்தியையுடையவனுமான அசோகனும், மஞ்சள்நிறமுள்ள கண்களையுடையவனும் இனிய தோற்றமுள்ளவனும் சேனைகளால் சூழப்பட்டவனுமான துச்சாஸனனும், பெரியயானையின் கழுத்தின்மீதேறிக்கொண்டு வ்யூகத்தினுடைய பின்புறத்தில் நின்றார்கள். மிக்கவைன்மையுள்ளவனை அந்தத் துர்யோதனராஜன் ஆச்சர்யகரமான குதிரைகளையுடையவர்களும் விசித்திரமான ஸன்னைகமுள்ளவர்களுமான ஸகோதரர்களால் சுற்றுப்புறத்திலும் பாதுகாக்கப்பட்டவனாக அந்தவ்யூகமத்தியில் தானே நின்றான். மஹாராஜரே! மஹாவீர்யமுள்ளவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான மத்ரர்களாலும் கேகயர்களாலும் காக்கப்படுகின்ற துர்யோதனன் தேவர்களால் காக்கப்படுகின்ற இந்திரன்போல் விளங்கினான். அஸ்வத்தாமாவும் கௌரவர்களுள் மஹாரதர்களான வீரர்களும் தேரேறி யுத்தத்திற்காகச் சென்றார்கள். எப்பொழுதும் மதமுள்ளவைகளும் சூரர்களான மிலேச்சர்களோடு கூடியவைகளுமான யானைகள் மழைபொழிந்துகொண்டிருக்கின்ற மேகங்கள்போல் அந்தத் தேர்ப்படையைப் பின்தொடர்ந்துசென்றன. த்வஜங்களுடனும் *வைஜயந்திகளுடனும் ஜ்வலிக்கின்ற ரக்கமமான ஆயுதங்களுடனும் ஏறியிருக்கிற மாவுத்தர்களுடனும் இருக்கின்ற அந்தயானைகள் மரங்களுடன்கூடின மலைகள்போல் விளங்கின. பட்டஸங்களையும் சத்திகளையும் தரித்தவர்களும் திரும்பாதவர்களுமான சூரர்கள் ஆயிரக்கணக்காகச் செல்லுகின்ற யானைகளுக்குப்பாதரக்ஷகர்களானார்கள். நன்றாக அலங்கரிக்கப்பட்ட குதிரைவீரர்களாலும் ரதங்களாலும் யானைகளாலும் அந்த உத்தமவ்யூகமானது தேவாஸுரர்களுடைய ஸேனைவியூகத்துக்கு ஒப்பாகவிளங்கியது. கற்றறிந்தவனான ஸேனாபதியினால் நன்றாக ஏற்படுத்தப்பட்ட பார்ஹஸ்பத்யமென்கின்ற மஹாவ்யூகமானது பகைவர்களுக்குப் பயத்தைவிளைவித்துக்கொண்டு நர்த்தனஞ்செய்கின்றதுபோலிருந்தது. அந்த மஹாவ்யூகத்தினுடைய இருபக்கங்களினின்றும் பக்கங்களின் கோடிகளினின்றும் யுத்தஞ்செய்ய விருப்பங்கொண்ட சிறந்த யானைகளும் குதிரைகளும் ரதிகர்களும் வருஷாகாலத்தில் மேகங்கள்போல வெளிப்பட்டனர். பிறகு, கர்ணன் ஸேனாமுகத்திலிருக்கின்றதைப்பார்த்து யுதிஷ்டிரராஜர் பகைவர்களைக் கொல்பவனும் நிகரற்றவீரனுமான

* கொடிகள்.

தனஞ்சயனைநோக்கி, 'அர்ஜுன! யுத்தத்தில் கர்ணனால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற மனோவ்யசனத்தைப் பார். பகைவர்களுடைய படையானது த்வஜங்களோடும் பதாகங்களின் கோடிகளோடும் கூடியதாகப் பிரகாசிக்கின்றது. பகைவர்களெதிர்த்துப் பக்கத்தில் வந்திருக்கின்ற பெரிதான அப்படிப்பட்ட இந்தச்சேனையானது நம்மை அவமதிக்காதபடியான முறைமையை நீசெய்யவேண்டும்' என்றுசொன்னார். அதனால் இவ்வாறு சொல்லப்பட்ட அர்ஜுனன், அநேகவிதங்களைச்செய்துகொண்டு அவரைப்பார்த்து, 'நீர் எதை எப்படிச்சொல்லுகிறீரோ அது அப்படியேஆகும்; அது வேறுவிதமாகாது. நல்லவிரதமுள்ளவரே! அதற்குத் தக்கதைச் செய்யப்போகிறேன். பிறகு, பிரதானமானதிச் சேனையுடையவிநாசத்தையும் நான்செய்வேன்' என்றுசொன்னான். யுதிஷ்டிரர், ('அர்ஜுன!) அவ்விதமானால் நீ ராதேயனைக் கொல். பீமஸேனன் துர்யோதனனைக் கொல்லுக. நகுலன் வ்ருஷஸேனனையும், ஸகதேவன் சகுனியையும், சதானீகன் துச்சாஸனனையும், ஸாத்யகி க்ருதவர்மாவையும், த்ருஷ்டத்யும்னன் துரோணபுத்திரரையும் கொல்லுக. கிருபருடன் நானே போர்புரியப்போகிறேன். திரௌபதீபுத்திரர்கள் சிகண்டியுடன்சேர்ந்து, மீதியிருக்கின்ற தார்த்தராஷ்டிரர்களையும் எதிர்க்கட்டும். என்னைச்சேர்ந்தவர்களான அந்தஅந்தவீரர்கள் நம்முடைய அந்த அந்தப்பகைவர்களை ஸம்ஹாரஞ்செய்யட்டும்' என்று கூறினார்.

தர்மராஜரால் இவ்வாறு சொல்லப்பட்ட தனஞ்சயன், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டுத் தன் சேனைகளைக் கட்டளையிட்டுத் தானும் ஸேனையுடைய அக்ரத்தை அடைந்தான். மஹாராஜரே! தனஞ்சயன் (ஸேனையின்) அக்ரபாகத்தை அடைந்தான். மிக்க பராக்ரமமுள்ள பீமஸேனன் பின்பாகத்தை அடைந்தான். ஸாத்யகியும் த்ரௌபதீபுத்திரர்களும் ஸ்ருஞ்ஜயர்களும் பாண்டுநந்தனரும், தம்முடைய சேனையினால் சூழப்பட்டு வ்யூஹத்தினுடைய முகத்தில் நின்றார்கள். பாண்டவன் தன்னுடைய ஸேனையிலுள்ள அந்தப்படைப் படையை எதிரில் பிரமிக்கத்தக்கதாகும்படிசெய்து த்ருஷ்டத்யும்னனையும் சிகண்டியையும் முன்னிட்டு அணிவகுத்தான். குதிரைவீரர்களாலும் யானைகளாலும் காலாட்களாலும் ரதங்களாலும் நெருங்கியதும் த்ருஷ்டத்யும்னனைத் தலைவனாகக்கொண்டதும் கோரமானதுமான பெரும்படையானது பிரகாசித்தது'' என்றுகூறினான்.

---

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! அவ்வாறு அணிவகுக்கப்பட்ட சேனைகள் போருக்காகக் கூடியபொழுது ஸம்சப்தகர்கள் எவ்வாறு பார்த்தனை எதிர்த்தார்கள்? பாண்டவர்களும் கர்ணனை எவ்வாறு எதிர்த்தார்கள்? இந்தயுத்தத்தை விஸ்தாரமாகச்சொல். நீ ஸமர்த்தனாயிருக்கிறாய். யுத்தத்தில் வீரர்களுடைய விக்கிரமத்தைக் கேட்டும் நான் திருப்தி அடையவில்லை" என்றுசொல்ல, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"பிறகு, கர்ணன் பகைவர்களுக்கு எதிராக நிற்கின்ற அந்தப் பெரிய சேனையைக்கண்டு உம்முடைய புத்திரனுக்கு நன்மையைச் செய்வதற்காக எதிரணிவகுத்தான். குதிரைவீரர்களாலும் யானைகளாலும் நிரம்பியதும் காலாட்களாலும் தேர்களாலும் நெருங்கியதும் த்ருஷ்டத்யும்னனை முகமாகக்கொண்டதும் கோரமாயிருப்பதுமான அந்தப்பெரும்படையானது விளங்கியது. புறாவின் நிறம்போன்ற நிறமுள்ள குதிரைகளையுடையவனும் சந்திரனுக்கும் சூரியனுக்கும் ஒப்பானஒளிபொருந்தியவனுமான அந்தப்பார்ஷதன் வில்லைக் கையில்கொண்டு சரீரத்துடன் வந்தகாலன்போல் விளங்கினான். உதவிவீரர்களோடுகூடியவர்களும் விளங்குகிறசரீரத்தையுடையவர்களுமான த்ரௌபதீ குமாரர்கள் போர்செய்யக்கருதிச் சந்திரனை நக்ஷத்திரங்களுடைய கூட்டங்கள் சூழ்வதுபோலப் பார்ஷதனை நாற்புறமும் சூழ்ந்துகொண்டார்கள். ஸேனைகள் அணிவகுக்கப்பட்ட பிறகு ஸம்சப்தகர்களை அர்ஜுனன் யுத்தரங்கத்தில் பார்த்துக் கோபங்கொண்டவனைக் காண்டீவமென்கிறவில்லை நாணேற்றிடும்படி செய்துகொண்டு விரைவாக எதிர்க்கச்சென்றான். பிறகு, வெற்றியில் உறுதியான எண்ணமுள்ள ஸம்சப்தகர்கள் மரணம்வரையில் யுத்தஞ்செய்வதாக நிச்சயித்துப் பார்த்தனைக்கொல்ல எண்ணி எதிர்த்தார்கள். குதிரைக்கூட்டங்கள்மிகுந்ததும் காலாட்களாலும் யானைகளாலும் தேர்களாலும் நெருங்கியதும் பராக்கிரமத்திலே மீறினதும் கோபமுள்ளதும் தனஞ்சயனை எதிர்த்துச் செல்லுகின்றதும் முயற்சியுள்ளதும் வேகத்தில் கடல்வெள்ளத்துக்கொப்பானதுமான அந்தப் பெரும்படையானது பார்த்தனைகிற கரையை அடைந்து உறுதியுடன் நின்றதாகக் காணப்பட்டது. அந்தப் படையானது பாணஸமூகங்களுடைய வர்ஷங்களால் அடிக்கின்ற அர்ஜுனனை

விரைவாக வருத்தியது. மன்னரே! அந்த அர்ஜுனனுக்கே நிவாத கவசர்களோடு (முற்காலத்தில்) யுத்தம் நேர்ந்ததுபோலவே ஸம்சப்தகர்களோடு நெருங்கிய யுத்தம் நேர்ந்தது. பார்த்தன் பகைவர்களுடைய ரதங்களையும் குதிரைகளையும் கொடிகளையும் யானைகளையும் காலாட்களையும் யானையின்மீதிருப்பவர்களையும் அம்புகளையும் விற்களையும் கத்திகளையும் சக்கரங்களையும் பரசுக்களையும் ஆயுதங்களோடு மேலே தூக்கப்பட்ட கைகளையும் பற்பலவித ஆயுதங்களையும் தலைகளையும் ஆயிரமாயிரமாக வெட்டினான். பாதாளலோகத்துக்கொப்பான அந்தச் சேனையாகிற பெருஞ்சுழியில் அந்த ரதம் மூழ்கினமையைக் கண்டு ஸம்சப்தகர்கள் ஸந்தோஷத்தோடு ஸிம்மநாதஞ் செய்தார்கள். அந்த அர்ஜுனன் கோபங்கொண்டு, ருத்திரர் பசுக்களைக் கொல்வதுபோலப் பகைவர்களை முன்னிலையில் கொன்று மறுபடியும் வலப்புறத்திலும் இடப்புறத்திலும் பின்புறத்திலும் கொன்றான். ஐயா! பிறகு, பாஞ்சாலர்களுக்கும் சைத்தியர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும், உம்மைச் சேர்ந்தவர்களோடு அதிபயங்கரமான யுத்தம் நேர்ந்தது. யுத்தத்தில் கெட்டிபதங்கொண்டவர்களும் ஊக்கமுள்ள சேனையுடன்கூடியவர்களும் மிக்க ரோஷமுள்ளவர்களும் தோற்படையை அடிக்கின்றவர்களுமான கிருபரும் கிருதவர்மாவும் ஸுபலபுத்திரனான சகுனியும் கோஸலர்களோடும் காசிதேசத்து வீரர்களோடும் மத்ஸ்யர்களோடும் காரூசர்களோடும் கேகயர்களோடும் சூரர்களுள் சிறந்தவர்களான சூரஸேனர்களோடும் போர்புரிந்தார்கள். நாசத்தையுண்டுபண்ணுகின்றதும் தேகசம்பந்தமான பாபத்தை அழிக்கின்றதும் வீரர்களான க்ஷத்திரியர்களுக்கும் வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் *விதிக்கப்பட்டதும் ஸ்வர்க்கத்தைக் கொடுக்கின்றதும் கீர்த்தியை உண்டுபண்ணுகின்றதுமான அந்தத் தர்மயுத்தமானது அவர்களுக்கு உண்டாயிற்று. பரதஸ்ரேஷ்டரே! பிறகு, குருவீரனான துர்யோதனன், ஸஹோதரர்களோடு கூடிச் சிறந்த குருவீரர்களாலும் மஹாரதர்களான மத்ரதேசத்து வீரர்களாலும் ரக்ஷிக்கப்பட்டு பாண்டவர்களோடும் பாஞ்சாலர்களோடும் சைத்யர்களோடும் ஸாத்யகியோடும் யுத்தகளத்தில் போர்புரிகின்ற கர்ணனை நான்குபக்கங்களிலும் பாதுகாத்தான். கர்ணனும் கூர்மையுள்ள பாணங்களால் பெரும்படையை அடித்துச் சிறந்த ரதிகர்களையும் நொறுக்கி யுதிஷ்டிரரையும் அடித்தான். அவன் பகைவர்களை ஆயிரக்கணக்கான வாகனங்களையும் ஆயு

* இதனால், போர் அந்தணருக்குச் சிறந்ததன்றென்பது விளங்கும்.

தங்களையும் தேகங்களையும் உயிர்களையும் இழந்தவர்களாகச் செய்து ஸ்வர்க்கத்தோடும் கீர்த்தியோடும்சேர்ப்பித்துத் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணினான். மஹாரதனான ஸூதபுத்திரன் அந்தப்பெரும்படையில் பிரவேசித்து ரக்தவெள்ளத்தினாலே அலைமோதுகின்றதும் ரக்தமாகிற ஜலமுள்ளதும் துண்டிக்கப்பட்ட அங்கங்களாகிற மத்ஸ்யங்களையுடையதும் யானைகளாகிற முதலைகளிருப்பதால் தாண்டமுடியாததும் மாம்ஸங்களாலும் மஜ்ஜைகளாலும் சேறுள்ளதும் சக்ரங்களாகிற ஆமைகளும் பெரிய தெப்பங்களுமுள்ளதுமான நதியைப் பெருகியோடச்செய்தான். அரசனே! ஆங்காங்கு வஜ்ராயுதங்களால் அடிக்கத்தள்ளப்பட்ட மேகங்கள்போலக் கீழே விழும்படி செய்யப்பட்ட பெரிய யானைகளால் ரக்தநதியானது விளங்கியது. மஹாராஜனே! அம்புகளாகிற அலைகளோடும் பெருஞ்சுழல்களோடுங்கூடியதும் குடைகளாகிற அன்னப்பறவைகளால் நன்றாகச்சூழப்பட்டதும் கவசங்களும் தலைப்பாகைகளுமாகிற தெப்பங்களோடுகூடியதும் எலும்புகளாகிற கற்களால் நெருங்கியதும் கரையில்லாததும் நுரையுள்ளதும் சங்கங்கள் துந்துபிகள் இவற்றின் கோஷமுள்ளதும் பயங்கரமானதும் நான்குபக்கத்திலும் புழுதியினாலே மூடப்பட்டதும் அதிவேகமாகச் செல்லுகின்றதும் மனிதர்களால் நான்குபக்கத்திலும் சூழப்பட்டதும் யமனுடைய பக்கத்தைக் குறித்துச் செல்லுகின்றதும் ஸமமாகவும் விஷமமாகவும் பெருகிவருகின்றதும் மஹாபயங்கரமாயிருக்கின்றதுமான அந்த நதியை (வீரர்கள்) உண்டுபண்ணினார்கள். வேந்தரே! மனிதர்களால் நாற்புறமும் எறியப்பட்ட பருத்தமரங்கள்போல மனக்கவலையுற்றமனிதர்கள் அந்த நதியிலுள்ள ஆழ்ந்த இரத்தச்சேற்றில் வாட்டமுற்றார்கள். பிறகு, அங்கங்கு அந்த மஹாநதியில் ஸஞ்சரிக்கின்றவர்களான அந்த யுத்தவீரர்கள் யானைகளும் மஹாரதங்களுமாகிற ஓடங்களால் நான்குபக்கங்களிலும் ஸஞ்சாரம் செய்தார்கள். ராஜேந்திர! ஜனாதிப! நதிவேகத்தால் பூமியானது ஸமம்செய்யப்படுவதுபோலப் போர்க்களமானது ரக்தநதியால் எங்கும் ஸமம் செய்யப்பட்டது. பாரதரே! மனிதர்களுக்கும் குதிரைகளுக்கும் யானைகளுக்கும் க்ஷயத்தை உண்டுபண்ணுகிற கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் நடந்த இவ்வாறான யுத்தமானது தேவாஸுரர்களுடைய யுத்தத்திற்கொப்பாகியது" என்று கூறினான்.

## நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

### (ஸங்குலயுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! ஒன்றுசேர்ந்திருக்கின்ற பார்த்தனுடைய சேனையில் நுழைந்து ஜனங்களுக்கு நாசத்தை உண்டு பண்ணுகின்ற கர்ணன் அரசனுக்கு நான்குபக்கத்திலும்சஞ்சரித்துக் கொண்டு என்ன செய்தானென்பதை எனக்குச் சொல்வாயாக. யுத்தத்தில் பார்த்தர்களுள் எந்த வீரர்கள் கர்ணனைத் தடுத்தார்கள்? அதிரதபுத்திரனான கர்ணன் எவர்களை நாசஞ்செய்து யுதிஷ்டிரனை அடித்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"சத்துருக்களை அடிக்கின்றவனான கர்ணன், ஸன்னத்தர்களாக நிற்கின்ற தருஷ்டத்யும்னனை முதன்மையாகக்கொண்ட பார்த்தர்களைப்பார்த்துப் பாஞ்சாலர்களையும் நோக்கி விரைவுடன் எதிர்த்துச் சென்றான். எதிர்த்து விரைவாக வருகின்ற அந்த மஹாத்மாவான கர்ணனை வெற்றியோடு விளங்குகின்றவர்களான பாஞ்சாலர்கள் வெயிற்காலத்தில் அன்னப்பறவைகள் தடாகத்தைநோக்கிச் செல்வதுபோல எதிர்த்துச் சென்றார்கள். பிறகு, இருதிறத்துச் சேனைகளிலும் மனத்துக்கினிய ஆயிரக்கணக்கான சங்கங்களுடைய ஒலியும் பயங்கரமான பேரிமுழக்கமும் பற்பலவித பாணங்களுடைய சப்தமும் யானைகள் குதிரைகள் தேர்கள் இவற்றின் சப்தமும் வீரர்களுடைய ஸிம்ஹநாதமும் அப்பொழுது பயங்கரமாகத் தோன்றின. பிராணிகள் அந்தச் சப்தத்தைக் கேட்டு, மலைகளுடனும் மரங்களுடனும் ஸமுத்திரங்களுடனும்கூடின பூமியும் காற்றுடனும் மேகங்களுடனும்கூடின ஆகாயமும் சூரியனோடும் சந்திரனோடும் நவக்கிரஹங்களோடும் நக்ஷத்திரங்களோடும்கூடின மேலுலகமும் வெளிப்படையாக நிலைதப்பிச் சுழன்றனவென்று எண்ணின; அவைகளும் துன்பமடைந்தன. அல்ப பலமுள்ள பிராணிகள் பெரும்பான்மையாக மாண்டன. பிறகு, கர்ணன் மிகுந்த கோபங்கொண்டவனாகி அஸ்திரத்தை விரைவாகப் பிரயோகித்துக்கொண்டு இந்திரன் அஸுர ஸேனையைக்கொன்றதுபோலப் பாண்டவஸேனையைக் கொன்றான். அந்தக்கர்ணன் பாண்டவசேனையில் புகுந்து பாணங்களைப்பிரயோகித்துப் பிரபத்ரர்களுள் சிறந்தவர்களான எழுபத்தேழு வீரர்களைக் கொன்றான். பிறகு, கர்ணன் நல்ல கட்டுக்களுள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமான இருபத்தைந்து அம்புகளாலே இருபத்தைந்து பாஞ்சாலவீரர்களைக் கொன்றான். வீரனான கர்ணன் ஸ்வர்ண

மயமான கட்டுக்களுள்ளவைகளும் பகைவர்களுடைய சரீரங்களைப் பிளக்கின்றவைகளுமான நாராசங்களால் சேதிவீரர்களை நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கொன்றான். மஹாராஜரே! அவ்வாறு யுத்தத்தில் மனிதவியற்கைக்குமேற்பட்ட காரியத்தைச் செய்கின்ற கர்ணனைப் பாஞ்சாலர்களுடைய தேர்க்கூட்டங்கள் நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டன. பாரதரே! பிறகு, சூரியனுடைய புதல்வனும் தர்மிஷ்டனுமான கர்ணன் தாங்கமுடியாதவைகளான ஐந்துபாணங்களை வில்லில்பூட்டிப் பானுதேவன், சித்ரஸேனன், ஸேனாபிந்து, தபனன், சூரஸேனன் என்னும் ஐந்து பாஞ்சாலர்களை யுத்தத்தில் கொன்றான். மஹாயுத்தத்தில் பாணங்களால் சூரர்களான பாஞ்சாலர்கள் வதஞ்செய்யப்படும் காலத்தில் பாஞ்சாலர்களுடைய பெரிதான ஹாஹாகாரம் தோன்றியது. அவர்கள் நன்றாகப் போர்புரிந்துகொண்டும் ஹாஹாகாரஞ்செய்துகொண்டுமிருக்கும்பொழுது கர்ணன் மீண்டும் அவர்களை விரைவாகப் பாணங்களாலடித்தான். பெரியவரே! ஜயிக்கமுடியாதவர்களும் சக்ரரக்ஷகர்களுமான ஸுஷேணன், ஸத்தியஸேனனென்கிற கர்ணனுடைய இரண்டு புத்திரர்களும் பிராணனில் ஆசையைவிட்டுப் போர்புரிந்தார்கள். கர்ணனுடைய பின்புறத்தை ரக்ஷிப்பவனும் மஹாரதனும் (கர்ணனுடைய) மூத்த குமாரனுமான வ்ருஷஸேனன் பின்புறத்தைப் பாதுகாத்துக்கொண்டு கர்ணனைத் தொடர்ந்து சென்றான். த்ருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் த்ரௌபதிபுத்திரர்களும் விருகோதரனும் ஜனமேஜயனும் சிகண்டியும் சிறந்தவீரர்களான ப்ரபத்ரகர்களும் சைத்தியர்களும் கேகயர்களும் பாஞ்சாலர்களும் நகுலஸஹதேவர்களும் கவசம்பூண்டவர்களான மாத்ஸ்யர்களும் அடிக்கின்றவனை ராதேயனைக் கொல்லவிரும்பி நன்றாக எதிர்த்தார்கள். பகைவர்களை நன்றாக அடிக்கின்ற இந்தக் கர்ணன்மீது அவர்கள் கார்காலத்தில் மேகங்கள் மலையின்மீது மழையைப் பொழிவதுபோலப் பற்பலவிதமான சஸ்திரங்களையும் அம்புமழைகளையும் பொழிந்தார்கள். அரசரே! பிதாவான கர்ணனை மீட்க எண்ணியவர்களும் மிக அடிக்கின்றவர்களுமான கர்ணபுத்திரர்களும் மற்ற உம்மைச்சேர்ந்த வீரர்களும் சத்துரு வீரர்களை எதிர்த்தார்கள். ஸுஷேணன் ஒரு பல்லத்தால் பீமஸேனனுடைய வில்லை யறுத்து ஏழு நாராசங்களால் அவனை மார்பிலடித்து ஸிம்ஹநாதஞ்செய்தான். பிறகு, பயங்கரமான பராக்கிரமமுள்ள வ்ருகோதரன் மிகத்திடமான வேறுவில்லையெடுத்து நாணேற்றி ஸுஷேணனுடைய வில்லை வெட்டினான். பீமன்

கோபமூண்டு நர்த்தனம் செய்கின்றவன்போலப் பத்துப்பாணங்களால் அந்த ஸுஷேணனை அடித்துக் கூர்மையுள்ள எழுபத்துமூன்று பாணங்களால் கர்ணனையும் விரைவாக அடித்தான். குதிரைகளுடனும் ஸாரதியுடனும் ஆயுதங்களுடனும் த்வஜத்துடனும் கூடின கர்ணபுத்திரனை ஸத்ய ஸேனனையும் பத்துப்பாணங்களாலடித்துப் பார்த்துக்கொண்டிருக்கிற ஸுஹ்ருத்துக்களின் நடுவில் கீழே தள்ளினான். க்ஷுரப்ரத்தினால் தள்ளப்பட்டதும் சந்திரனுக்கொப்பானமுகமுள்ளதுமான அந்த ஸத்யஸேனனுடைய தலையானது, காம்பினின்று கீழே விழுந்திருக்கின்ற தாமரைப்புஷ்பம் போல் மங்களகரமான காட்சியுள்ளதாகவே இருந்தது. பீமன் கர்ணபுத்திரனைக்கொன்று மறுபடியும் உம்மைச் சேர்ந்தவர்களைப் பீடித்தான். கிருபர் கிருதவர்மா இவர்களுடைய வில்களையும் அறுத்து அவர்களையும் அடித்தான். துச்சாஸனனை மூன்று பாணங்களாலும் சகுனியை உருக்குமயமான ஆறுபாணங்களாலும் அடித்து உலூகன் பதத்திரி இருவர்களையும் ரதத்தை யிழந்தவர்களாகச் செய்தான்; 'ஸுஷேண! மாண்டாய்' என்று சொல்லிக்கொண்டு அம்பை எடுத்தான். கர்ணன் இவனுடைய அந்தப்பாணத்தை அறுத்து மூன்றுபாணங்களால் இவனையும் அடித்தான். பீமன், பிறகு, நல்ல கணுக்களுள்ளதும் நன்றாகத்தீட்டப்பட்டதுமான வேறுபாணத்தைக் கையிலெடுத்து ஸுஷேணன்மீது பிரயோகித்தான். கர்ணன் பீமனுடைய அந்தப்பாணத்தையும் துண்டாக்கினான். மறுபடியும் கோபமுள்ள கர்ணன் புத்திரனைப்பாதுகாக்கக்கருதிப்பகைவனைக்கொலவும் விருப்பத்தினால் எழுபத்துமூன்றுபாணங்களால் பீமஸேனனை அடித்தான். ஸுஷேணனோ பெரியகாரியத்தைச் செய்யத்தக்கதும் உத்தமமுமான ஒரு வில்லை எடுத்து நகுலனை ஐந்துபாணங்களால் இரு கைகளிலும் மார்பிலும் அடித்தான். நகுலனோ, பெரியகாரியங்களைச்செய்யத்தக்கவையும் உறுதியாயிருப்பவையுமான இருபதுபாணங்களாலே ஸுஷேணனை அடித்துக் கர்ணனுக்குப் பயத்தை உண்டுபண்ணிக்கொண்டு உரக்க ஸிம்மநாதஞ்செய்தான். மஹாராஜரே! மஹாரதனை ஸுஷேணன் அந்த நகுலனைப் பத்து அம்புகளால்அடித்து ஒருக்ஷுரப்ரத்தினாலே வில்லையும் விரைவாகவெட்டினான். பிறகு, கோபம் மூண்டவனை நகுலன் வேறுவில்லைக்கையிலெடுத்து ஒன்பதுபாணங்களால் யுத்தத்தில் ஸுஷேணனை எதிர்த்துத் தடுத்தான். அரசரே! சத்துருவீரர்களைத் துன்பஞ்செய்கின்றவனை அந்தநகுலனோ, பாணங்களால் திக்குக்களைமூடி ஸுஷேணனுடைய ஸாரதியைக் கொன்

ருன்; பிறகு, ஸுஷேணனையும் மூன்று பாணங்களால் அடித்தான். இந்த ஸுஷேணனுடைய பரிக்கிடமான வில்லை மூன்றுபல்லங்களாலே மூன்றாகத் துண்டாக்கினான். பிறகு, ஸுஷேணன் கோபம் மூண்டவனாகி வேறு வில்லைக் கையிலெடுத்து நகுலனை அறுபது பாணங்களாலும் ஸஹதேவனை ஏழுபாணங்களாலும் அடித்தான். ஒருவரை ஒருவர் வதம் செய்யக்கருதி அம்புகளால் விரைவாக அடித்துக்கொள்ளுகிறவர்களான வீரர்களுடைய மிக்க கோரமான அந்தயுத்தமானது தேவாஸுரர்களுடைய யுத்தத்திற்கு ஒப்பானதாயிற்று. ஸாத்யகி விருஷஸேனனை உருக்கினாலாகிய ஏழுபாணங்களால் அடித்து மறுபடியும் எழுபதுபாணங்களால் அடித்தான்; கூர்மையுள்ள மூன்று பாணங்களால் அவன்ஸாரதியையும் அடித்தான். மஹாராஜரே! விருஷஸேனனே, மஹாரதனானஸாத்யகியைக் கணுக்கள் உட்படிந்துள்ள அம்பினால் நெற்றியில் அடித்தான். மஹாராஜரே! விருஷஸேனன் பிரயோகித்தபாணத்தால் பீடிக்கப்பட்ட ஸாத்யகியானவன் கோபங்கொண்டான்; கோபங்கொண்டு, பயங்கரமானவேகத்தையும் வெளிப்படுத்தினான். வீரனான ஸாத்யகி சீக்கிரமாகச் சிறந்த பதினைந்துபாணங்களைக் கையிலெடுத்து விருஷஸேனனுடைய ஸாரதியை மூன்றுபாணங்களால்கொன்று அவனுடையவில்லை ஒருபல்லத்தினால் துண்டாக்கிக் குதிரைகளை ஏழுபாணங்களால்கொன்றுகொடியை ஒருபாணத்தால் நாசஞ்செய்து மூன்றுபாணங்களால் அவனை மார்பில் அடித்தான். பிறகு, அந்தவிருஷஸேனன் தனது தேரில் மூர்ச்சையடைந்து ஒருமுகூர்த்தகாலத்தினுள் மறுபடியும் எழுந்திருந்தான். யுத்தத்தில் யுயுதானனால் ஸாரதியையும் குதிரைகளையும் ரதத்தையும் கொடியையும் இழந்தவனாகச்செய்யப்பட்ட அந்தவிருஷஸேனன் யுயுதானனைக் கொல்லவிரும்பிக் கத்தியையும் கேடகத்தையும் கையில்கொண்டு அவனை எதிர்த்துச்சென்றான். விரைவாகவருகின்ற விருஷஸேனனுடைய கத்தியையும் கேடகத்தையும் ஸாத்யகியானவன் வாராஹகர்ணங்களென்கிற பத்துப்பாணங்களால் அடித்தான். துச்சாஸனனே, ரதத்தையிழந்தவனும் ஆயுதங்களையிழந்தவனுமாகச் செய்யப்பட்ட அந்தவிருஷஸேனனைக்கண்டு விரைவாக அவனைத் தனதுதேரின்மீதேற்றிவைத்துக்கொண்டு வேறொரு ரதத்தையடையும்படிசெய்தான். பிறகு, மஹாரதனான விருஷஸேனன் வேறு ரதத்தின்மீதேறிக்கொண்டு எழுபத்துமூன்றுபாணங்களால் திரௌபதீபுத்திரர்களையும் ஐந்துபாணங்களால் யுயுதானனையும் அறுபத்துநான்குபாணங்களால் பீமஸேனனையும் ஐந்துபாணங்களால் ஸஹ

தேவனையும் முப்பதுபாணங்களால் நகுலனையும் ஏழுபாணங்களால் சதாநீகனையும் பத்துபாணங்களால் சிகண்டியையும் நூறுபாணங்களால் தர்மராஜரையும் அடித்தான். ராஜேந்திரரே! ஜனேந்திரரே! சிறந்த வில்லாளியான கர்ணபுத்திரன் இவர்களையும் ஜயத்தில்விருப்பமுள்ளவர்களான மற்றச்சிறந்தவீரர்களையும் அடித்தான். பிறகு, யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவனான விருஷஸேனன் கர்ணனுடையபின்புறத்தைப் பாதுகாத்தான். ஸாத்யகி ஒன்பது புதிய பாணங்களாலே யுயுதானனை ஸாரதியையும் குதிரைகளையும் தேரையும் இழந்தவனாகச்செய்து மூன்றுபாணங்களால் அவன் நெற்றியில் அடித்தான். அந்தஸாத்யகி சாஸ்திரத்தில் சொல்லியபடி அமைக்கப்பட்ட வேறுரதத்தில் மறுபடியும் ஏறிக்கொண்டு பாண்டவர்களோடுகூடி யுத்தஞ்செய்து கர்ணனுடையபடையைச் சிதறஅடித்தான். பிறகு, கர்ணனை, திருஷ்டத்யும்னன் பத்துப்பாணங்களாலும் த்ரௌபதீபுத்திரர்கள் எழுபத்துமூன்று பாணங்களாலும் யுயுதானன் ஏழுபாணங்களாலும் அடித்தார்கள். கர்ணனை, பீமஸேனன் அறுபத்துநாலுபாணங்களாலும் ஸஹதேவன் ஏழுபாணங்களாலும் நகுலன் முப்பதுபாணங்களாலும் சதாநீகன் ஏழுபாணங்களாலும் சிகண்டி பத்துபாணங்களாலும் வீரரான தர்மராஜர் நூறுபாணங்களாலும் அடித்தார்கள். ராஜேந்திரரே! ஜயத்தில்விருப்பமுள்ளவர்களான இவர்களும் மற்றச்சிறந்தவீரர்களும் மஹாயுத்தத்தில் மஹாவில்லாளியான ஸூதபுத்திரனை அடித்தார்கள். சத்ருக்களைச்சிக்ஷிக்கிறவனும் வீரனுமான அந்தஸூதபுத்திரன் ரதத்தோடுஸஞ்சரித்துக்கொண்டு அவர்களை நல்லகூர்மையானபத்துப் பத்துப்பாணங்களால் திருப்பியடித்தான். பிறகு, ஸூதநந்தனனை கர்ணன் எல்லாப்போர்வீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே சிறந்தாதிகர்களும் கோபமுள்ளவர்களும் முயற்சியுள்ளவர்களும் மஹாரதர்களுமான ஸாத்யகி, பீமஸேனன், த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, த்ரௌபதீபுத்திரர்கள் ஆகியஇவர்களை அரைநிமிஷத்திலுள் ரதங்களையிழந்தவர்களாகச் செய்தான். பாணங்கள் வீணாகாமலிருப்பதால் பிராணிகளுடையகூட்டங்கள் ஆச்சர்யமடைந்தன. மஹா பாக்கியமுள்ளவரே! அந்தயுத்தத்தில் மஹாரதமாவானகர்ணனுடைய அஸ்திர வீர்யத்தையும் லாகவத்தையும் கண்டோம். அது ஆச்சர்யம்போலிருந்தது. அந்தக்கர்ணன் பரபரப்புடன் பாணங்களையெடுப்பதையும் தொடுப்பதையும் விடுப்பதையும் ஜனங்கள் காணவேஇல்லை. ராஜேந்திரரே! மேற்குத்திக்கில் அவனைக்கண்டு லாகவத்தினால் கிழக்குத் திக்கிலும் கண்டோம். எங்கு கர்ணன் இருந்தானே நாங்கள் கண்டறி

கன்போன்ற சூரியகுமாரனான கர்ணனைப் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும், வியாதியை மந்திரங்களும் ஔஷதங்களும் தடுப்பதுபோலத் தடுத்தார்கள். அந்தக் கர்ணன் அவர்களை நன்றாக அடித்து மந்திரங்களாலும் ஔஷதிகளாலும் செய்யப்பட்ட பரிகாரத்தைமீறி அடங்காமல் மேலிடுகின்றவியாதிபோல மறுபடியுமே யுதிஷ்டிரரை எதிர்த்தான் அவன் அரசரைக் காப்பதில் பேராவலுடையவர்களான பாண்டவர்களாலும் பாஞ்சாலர்களாலும் கேகயர்களாலும் தடுக்கப்பட்டு ம்ருத்யு பிரம்மவித்துக்களை மீறிச்செல்லச் சக்தியற்றவனாவதுபோல் அவர்களை மீறிச்செல்வதற்குச் சக்தியற்றவனானான். பிறகு, யுதிஷ்டிரர் பிரதானர்களான அந்த புரவீரர்களால் தடுக்கப்பட்டு ஸமீபத்திலிருக்கின்ற வீரனான கர்ணனைக்கண்டு பாணங்களால் அடித்தார் ஈட்டியினால் குத்தப்பட்ட யானைபோல பார்த்தருடைய அம்புகளால் அடிக்கப்பட்ட கர்ணன் ஒன்றுசேர்ந்திருக்கின்ற வீரர்களை நன்றாக அடித்து யுதிஷ்டிரரைப் பிடிக்கிறான். பிறகு, யுதிஷ்டிரர் கோபத்தினால் கண்கள் நன்றாகச் சிவந்து சத்ருவீரர்களைக் கொல்லுகின்றவனும் ஜயிப்பவர்களுள் சிறந்தவருமான கர்ணனை அடைந்து, 'கர்ண கர்ண! வீண் நோக்கமுள்ளவனே! ஸூதபுத்திர! என்வார்த்தையைக் கேள். யுத்தத்தில் பலசாலியான பல்குனனோடு எப்பொழுதும் போட்டிபோடுகிறாய். துர்யோதனனுடைய அபிப்பிராயத்தில் நிலைபெற்றவனாக எங்களை நித்தியம் ஹிம்ஸிக்கிறாயாதலால், உனக்குள்ள பலம், வீர்யம், பாண்டவர்களிடத்திலுள்ள பகைமைஆகிய எல்லாவற்றையும் இப்பொழுது மிக்க ஆண்மையைக் கைக்கொண்டு காட்டு. மஹாயுத்தத்தில் உனக்கு யுத்தத்திலிருக்கின்ற ச்ரத்தையை நான் இப்பொழுது போக்குவேன்' என்று சொன்னார். மஹாராஜரே! பாண்டுபுத்திரர் அப்பொழுது கர்ணனைப்பார்த்து இவ்வாறுசொல்லி விட்டு ஸ்வர்ணமயமான புங்கங்களுள்ளவைகளும் உருக்கினதுசெய்தவையுமான பத்துப்பாணங்களால் அவனை அடித்தார். பாரதரே! பகைவர்களை அடக்குபவனும் சிறந்த வில்லாளியுமான ஸூதபுத்திரன் அட்டஹாஸஞ்செய்கின்றவன்போலப் பத்துவத்ஸதந்தங்களால் அவரைத் திருப்பியடித்தான். ஸூதபுத்திரனால் நன்றாக அடிக்கப்பட்ட அந்தப் பாண்டவரோ அலக்ஷ்யஞ்செய்து ஹவிஸ்ஸினால் அக்னி ஜ்வலிப்பதுபோலக் கோபத்தினால் ஜ்வலித்தார். ஜ்வாலைக்கூட்டங்களால் சூழப்பட்ட யுதிஷ்டிரராஜருடைய தேகமானது யுகாந்தகாலத்தில் எரிக்க எண்ணங்கொண்ட ப்ரளயகாலநெருப்பினுடைய வேறொரு உருவம்போலக் காணப்பட்டது. பிறகு, யுதிஷ்டிரர் [illegible]

தும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுமான வில்லில் நாணேற்றி யெழுப்பிக் கூர்மையுள்ளதும் மலைகளையும் பிளக்குந்திறமையுள்ளது மான ஓர் அம்பை (அந்தவில்லில்) பூட்டி எய்தார். பிறகு, ராஜரான யுதிஷ்டிரர் ஸூதபுத்திரனைக் கொல்லும் விருப்பத்தினால் விரை வுடன் யமதண்டத்துக்கொப்பான ஓர் அம்பை நன்றாக இழுத்துப் பிரயோகித்தார். வேகமுடைய யுதிஷ்டிரரால் விடப்பட்டதும் இடி வஜ்ராயுதம் இவற்றின் சப்தத்துக்கொப்பான சப்தமுள்ளதுமான அந்தப்பாணமானது மஹாரதனான கர்ணனுடைய இடவிலாப்புறத் தில் விரைவாக நுழைந்தது. அந்த அடியினால் பீடிக்கப்பட்ட மிக்க புஜபலமுள்ள அந்தக் கர்ணன் தேகத்தளர்ச்சியடைந்து வில்லை நழுவவிட்டு நடுக்கமுற்று மூர்ச்சை அடைந்தான். கர்ணன் உயி ரை இழந்தவன்போலப் பிரஜ்ஞையை இழந்தவனாகிச் சல்ய னுக்கு எதிராக விழுந்தான். யுதிஷ்டிரராஜரும் பார்த்தனுக்கு நன்மையைச் செய்யும் எண்ணத்தினாலே கர்ணனை மறுபடியும் அடிக்கவில்லை. பிறகு, நிறம்மாறியிருக்கின்ற முகத்தையுடையவனும் தண்டமுற்றவனும் அவ்வித நிலைமையை அடைந்திருக்கின்றவனு மான கர்ணனைக்கண்டு பெரிதான தார்த்தராஷ்டிரனுடைய படை முழுவதும் ஹாஹாகாரங் கொண்டது. மஹாராஜரே! ராஜரிஷி யுடைய பராக்கிரமத்தைக்கண்டு பாண்டவர்களுள் ஸிம்மநாதங் களும் கொக்கரித்தல்களும் அவ்வாறே 'கலகல' வென்னும் சப்தங் களும் தோன்றின. கொடிய பராக்கிரமமுள்ள ராதேயன் சற்று நேரத்துக்குள் பிரஜ்ஞையையடைந்து அரசனை அழிப்பதன்பொ ருட்டு மனதைச் செலுத்தினான். அளவிடமுடியாத பராக்கிரம முள்ள அந்தக்கர்ணன் ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதும் வெற்றி யைக் கொடுக்கக்கூடியதும் பெரிதுமான வில்லில் நாணேற்றி எழுப் பிக் கூர்மையுள்ள பாணங்களைப் பாண்டவர்மீது இறைத்தான். பிறகு, மஹாரதமாவான யுதிஷ்டிரருடைய சக்ரரக்ஷகர்களான சந்திர தேவன் தண்டதாரன் என்கிற இரண்டு பாஞ்சால வீரர்களையும் யுத் தத்தில் இரண்டு க்ஷுரங்களால் கொன்றான். பாரதரே! யுத்தத்தில் சிறந்த வீரர்களான அவ்விருவரும் சந்திரனுடைய ஸமீபத்தில் புனர் வஸு நக்ஷத்திரங்கள்போலத் தர்மராஜருடைய ரதத்திற்கு ஸமீபத் தில் பிரகாசித்தார்கள். யுதிஷ்டிரர் மறுபடியும் கர்ணனை முப்பது பாணங்களால் அடித்தார். ஸுஷேணனையும் ஸத்யஸேனனையும் மும்மூன்று பாணங்களால் அடித்தார். யுதிஷ்டிரர் சல்யனைத் தொண் ணூறு பாணங்களாலும் ஸூதபுத்திரனை எழுபத்துமூன்று பாணங்

களாலும் அவனுக்கு ரக்ஷகர்களான அவ்வீரர்களை மும்மூன்று பாணங்களாலும் அடித்தார். அரசரே! பிறகு, அதிரதபுத்திரனான கர்ணன் உரக்கச்சிரித்துக் கூர்மையுள்ள அறுபது பாணங்களால் யுதிஷ்டிரரை அடித்து யுத்தத்தில் அப்பொழுது ஸிம்மநாதஞ் செய்தான். பிறகு, பாண்டவர்களைச்சேர்ந்த சிறந்த வீரர்கள் கோபங்கொண்டு யுதிஷ்டிரரைப் பாதுகாக்கக்கருதிக் கர்ணனை அம்புகளால் அடித்தார்கள். ஸாத்யகி, சேகிதானன், யுயுத்ஸு, பாண்டியன், த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, த்ரௌபதீபுத்திரர்கள், பிரபத்ரகர்கள், நகுலஸஹதேவர்கள், பீமஸேனன், சிசுபாலனுடைய குமாரன், காரூசர்கள், மிகுந்திருக்கின்ற மாத்ஸ்யர்கள், கேகயர்கள், காசிதேசத்து வீரர்கள், கோஸலர்கள் ஆகிய இந்த வீரர்கள் விரைவுடன் வஸுஷேணனை அடித்தார்கள். பாஞ்சாலனான ஜனமேஜயனும் கர்ணனைப் பாணங்களாலும் வராஹகர்ணங்களாலும் நாராசங்களாலும் நாளீகங்களாலும் கூர்மையுள்ள அம்புகளாலும் வத்ஸதந்தங்களாலும் விபாடங்களாலும் க்ஷுரப்ரங்களாலும் சடாமுகங்களாலும் அடித்தான். ஜனமேஜயன் உக்கிரர்களும் நானாவிதமான ஆயுதங்களையுடையவர்களுமான ரதிகர்களோடும் யானை வீரர்களோடும் குதிரை வீரர்களோடும் நான்கு பக்கத்திலும் கர்ணனைச் சூழ்ந்துகொண்டு கொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடன் எதிர்த்துவந்தான். பாண்டவர்களுடைய சிறந்த வீரர்களால் நன்கு எதிர்க்கப்பட்டவனும், கூர்மையுள்ளவைகளும் கோரமானவைகளும் அவரவர் பெயர்களால் அடையாளமிடப்பட்டவைகளுமான அம்புகளாலே மூடப்படுகின்றவனுமான அந்தக் கர்ணன் அவ்வீரர்களால் சூழப்படுகின்ற மஹேந்திரன்போல யுத்தத்தில் சற்றேனும் அசையவில்லை. பரதஶ்ரேஷ்டரே! பிறகு, அளவிட முடியாத பலமுள்ள சூரியகுமாரனான கர்ணன் மஹாவில்லாளிகளான பாஞ்சாலர் இருபத்தொருவரையும் சிறந்தவர்களான சேதிவீரர் பதின்மரையும் அப்பொழுது கொன்றான். பெரியவரே! நன்கு பிரயோகிக்கப்பட்ட ஆயிரக் கணக்கான அந்தக் கர்ணனுடைய பாணங்கள் விட்டில் பூச்சிகளுடைய கூட்டங்கள்போல எல்லாத் திக்குக்களிலும் காணப்பட்டன. கர்ணனுடைய பெயரினால் அடையாளமிடப்பட்டனவும் பொன்மயமான சிறகுகளுள்ளவைகளும் நன்றாகத் தீட்டப்பட்டவைகளுமான பாணங்கள், மனிதர்கள் குதிரைகள் ஆகியவற்றின் சரீரங்களைப் பிளந்துகொண்டு நாற்புறத்திலும் பூமியில் விழுந்தன. யுத்தகளத்தில் அப்பொழுது கர்ணன் ஒருவனாலே சிறந்த சைத்ய வீரர்களும் எல்லா ஸ்ருஞ்சயர்களும்

நூறு நூறாகக் கொல்லப்பட்டார்கள். கர்ணனுடைய பாணங்களால் ஆகாயம் நன்றாக மறைக்கப்படவே, மிகுந்த இருள் தோன்றியது. பிறகு, பகைவர்களுடைய தும் தன்னுடையதுமான ஒன்றுமே அறியப்படவில்லை. க்ஷத்திரியர்களுக்குப் பயங்கரமாக ஏற்பட்டிருக்கின்ற அந்த இருட்டில் மிக்க கைவலிமையுள்ள கர்ணன் அநேக க்ஷத்திரியர்களை எரித்துக்கொண்டு ஸஞ்சரிக்கான். பிறகு, பாணங்களாகிற மஹாஜ்வாலைகளுடன் கூடியதும் வீர்யமாகிய சூடு கையுள்ளதுமான கர்ணனாகிற நெருப்பானது பாண்டவர்களாகிற காட்டை எரித்துக்கொண்டு யுத்தத்தில் அழகாக நாற்புறத்திலும் ஸஞ்சரித்தது. மஹாராஜரே! பிறகு, அந்தப் பாண்டவர்களைச் சேர்ந்த மஹாரதர்களும் எல்லா ஸைந்யர்களும் நூறு நூறாகவும் ஆயிர மாயிரமாகவும் அஸ்திரங்களைப் பிரயோகித்துக் கொண்டு மஹாவில்லாளியான கர்ணனை நான்கு பக்கத்திலும் சூழ்ந்து கொண்டார்கள். மஹாவில்லாளியான அந்தக் கர்ணன் மஹா பல சாலிகளான வீரர்களுடைய மஹாஸ்திரங்களைத் தடுத்து அட்டஹாஸஞ்செய்து அரசரான யுதிஷ்டிரருடைய வில்லை வெட்டினான். பிறகு, கர்ணன் ஒரு நிமிஷத்தில் தீக்ஷ்ணமான கணுக்களுள்ள தொண்ணூறு பாணங்களை ஸந்தானஞ்செய்து கூர்மையுள்ள அவ்வம்புகளால் யுத்தத்தில் யுதிஷ்டிர ராஜருடைய கவசத்தை உடைத்தான். பொன்னால் வேலைசெய்யப்பட்டதும் இரத்தினங்களால் சித்திரிக்கப்பட்டதும் விழுகின்றதுமான அந்தக் கவசமானது காற்றினாலடிக்கப்பட்டுச் சூரியனோடு சேர்ந்திருக்கிற மின்னலுள்ள மேகம்போல் விளங்கியது. யுதிஷ்டிர ராஜருடைய அங்கத்தினின்று நழுவினதும் விசித்திரமான இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தக் கவசமானது இரவில் மேகமில்லாத ஆகாயம்போல் விளங்கியது. புருஷ ஸ்ரேஷ்டரே! பாணங்களால் கவசம் பிளக்கப்பட்டவரும் ரக்தத்தினால் நனைக்கப்பட்டவருமான யுதிஷ்டிரர் உதிக்கின்ற சூரியன்போலப் பிரகாசித்தார். பாணங்களால் எல்லா அங்கங்களும் நிறைக்கப்பட்டவரும் கவசம் உடைக்கப்பட்டவருமான அந்த யுதிஷ்டிரர் யுத்தத்தில் க்ஷத்திரிய தர்மத்தைக் கைக்கொண்டு ஸிம்ஹநாதஞ் செய்தார். பாண்டவர் யுத்தத்தில் பரபரப்புள்ளவராக நெடுநேரம் கர்ஜித்து ஜ்வலிக்கின்ற வஜ்ராயுதம் போலிருக்கின்ற சக்தியை வேகத்துடன் பிரயோகித்தார். ஆகாயத்தில் ஜ்வலிக்கின்றது போலுள்ள அந்தச் சக்தியை விரைவாகச் செல்லுகின்ற ஏழு பல்லங்களாலே ராதேயன் துண்டாக்கினான். அந்தச் சக்தியானது

யுத்தத்தில் சிதறிவிட்டது. சுறுசுறுப்புடன் காரியத்தைச் செய்பவரான யுதிஷ்டிரர் நான்கு தோமரங்களாலே கர்ணனை மார்பிலும் இரண்டு கைகளிலும் நெற்றியிலும் அடித்து ஸந்தோஷத்தாலே ஸிம்மநாதஞ்செய்தார். வெளியில் பெருகுகின்ற இரத்தத்துடன்கூடின கர்ணன் கோபமுள்ள ஸர்ப்பம்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒன்பது பாணங்களாலே யுதிஷ்டிரருடைய ஸாரதியான * பார்ஷ்டியை அடித்தான்; அரசரான யுதிஷ்டிரருடைய த்வஜத்தையும் வெட்டினான்; அந்த யுதிஷ்டிரரையும் மூன்று பாணங்களால் அடித்தான்; அவருடைய இரண்டு அம்புறாத்தூணிகளையும் உடைத்தான்; ரதத்தையும் எள்ளளவாக வெட்டினான். பாரதரே! இந்த ஸமயத்தில் பாண்டவர்களைச் சேர்ந்த சூரர்களான மஹாரதர்கள் ராதேயன்மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். மஹாராஜரே! ஸாத்யகியும் சிகண்டியும் பகைவர்களை நாசஞ்செய்பவனான கர்ணன்மீது இருபத்தைந்து பாணங்களையும் ஒன்பது பாணங்களையும் வர்ஷித்தார்கள். அரசரே! பிறகு, கர்ணன் கோபங்கொண்டு ஐந்து பாணங்களாலும் வேறு மூன்று சிலீமுகங்களாலும் யுத்தத்தில் ஸாத்யகியை அடித்தான். அவன் அந்தச் சைனேயனுடைய வலக்கையை மூன்று பாணங்களாலும் இடக்கையைப் பதினாறு பாணங்களாலும் அவனுடைய ஸாரதியை ஏழு பாணங்களாலும் அடித்தான்; பிறகு, கூர்மையுள்ள நான்கு அம்புகளாலே அவனுடைய நான்கு குதிரைகளையும் சீக்கிரம் யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். பிறகு, மஹாரதனான கர்ணன் வேறொரு பல்லத்தினாலே வில்லையறுத்துத் தலைப்பாகையுடன்கூடின ஸாரதியினுடைய தலையைச் சரீரத்தினின்று கவர்ந்தான். குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்ட ரதத்தில் வீற்றிருக்கின்ற அந்தச் சைனேயன் கர்ணன்மீது வைடூர்யரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு சக்தியாயுதத்தைப் பிரயோகித்தான். பாரதரே! வில்லாளிகளுள் சிறந்தவனான கர்ணன் வருகின்ற அந்தச் சக்தியை உடனே இரண்டாகத் துண்டாக்கி அவர்களனைவரையும் எதிர்த்தான். அளவிடற்கரிய பலமுள்ள கர்ணன் பிறகு மஹாரதர்களான அந்தப் பாண்டவவீரர்களைக் கூர்மையுள்ள பாணங்களால் பயிற்சியினாலும் பலத்தினாலும் அடித்தான். ராதாபுத்திரனான கர்ணன் ஸிம்மமானது அல்ப மிருகங்களைப் பிடிப்பதுபோலப் பாணங்களால் அவர்களைப் பிடித்துப் படிந்த கணுக்களுள்ள அம்புகளால் தர்ம

* 'பார்ஷ்ணி, என்பது வியாக்கியான பாடம்.

ராஜரைத் துன்பமுறும்படிசெய்து கூர்மையான அம்புகளைப் பிரயோகித்துக்கொண்டு அவருக்கெதிரில் வந்தான். பிறகு,குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்ட தர்மபுத்திரர் மனம்நொந்து கர்ணனுக்கெதிரில் நிற்பதற்குச் சக்தியற்றவராகி விலகிச்சென்றார். அரசரே! கர்ணன் பாண்டுபுத்திரரான அந்தயுதிஷ்டிரரை எதிர்த்துச்சென்று நிந்திக்கின்றவன்போல உரக்கச்சிரித்துக்கொண்டு பாண்டவரைப் பார்த்து, 'நற்குலத்தில்பிறந்து க்ஷத்திரிய தர்மத்தில் நிலைபெற்றவன் எவ்வாறு யுத்தத்தில் பகைவர்களை விட்டு விலகுவான்? மஹாயுத்தத்தில் உயிரைச்காப்பாற்றிக்கொள். நீ க்ஷத்திரிய தர்மங்களில் ஸாமர்த்தியமற்றவனென்பது என்னுடைய எண்ணம்.பிராமணனுக்குப் பலத்தைக்கொடுக்கக்கூடிய வேதாத்தியயனத்திலும் யஜ்ஞகர்மததிலும் நீ பற்றுள்ளவன். குந்திபுத்திர! நீ யுத்தஞ்செய்யாதே. வீரர்களை அணுகாதே. இவ்வாறு அப்பிரியத்தைப் பேசாதே. நீ யுத்தத்தை நாடாதே. ஐய! மற்றவர்களைச்சொல்லலாம். என்னைப்போன்றவர்கள் சொல்லத்தக்கவர்களல்லர். யுத்தத்தில் என்னைப்போன்றவர்களைப்பற்றிப் பேசுகின்ற நீ இதனையும் மற்றதையும் அடைவாய். குந்திபுத்திர! உன்னுடைய வீட்டுச்குப்போ. அல்லது,எவ்விடத்திலகிருஷ்ணார்ஜுனர்களிருக்கிறார்களோ அங்கேபோ. ராஜனே! கர்ணன் எவ்விதத்திலும் யுத்தத்தில் உன்னைக்கொல்ல மாட்டான்.' என்றுசொன்னான். புருஷர்களுள் சிறந்தவனும் மஹாரதனுமான கர்ணன் குந்திதேவிக்குக் கொடுத்திருக்கிற வாக்கைநினைத்து, வதமடைய வேண்டிய நிலைமையையடைந்திருக்கின்ற தர்மராஜரைக் கொல்லவில்லை. பிறகு,மஹாபலசாலியான கர்ணன் இவ்வாறுசொல்லி யுதிஷ்டிரரை விட்டுவிட்டு வஜ்ரபாணியான இந்திரன் அஸுரஸேனையைக் கொல்வதுபோலப் பாண்டவஸேனையைக் கொன்றான். அரசரே! பிறகு, யுதிஷ்டிரராஜர் வெட்கமடைந்து விரைவாக யுத்தத்தைவிட்டு விலகினார். பிறகு, யுதிஷ்டிரராஜர் விலகினதாக எண்ணிச் சைதயர்களும் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் மஹாரதனான ஸாதயகியும் அவ்வாறே சூரர்களான த்ரௌபதிபத்திரர்களும் மாத்ரீபுத்திரர்களான நகுல ஸஹதேவர்களும் நிலையிலதவறாதவரான தர்மராஜரை அனுஸரித்தார்கள். பிறகு,வீரனான கர்ணன் திரும்பிச்செல்லுகின்ற யுதிஷ்டிரருடையபடையைக் கண்டு மகிழ்ச்சியுற்றுக் கௌரவர்களுடன்கூடிப் பின்புறத்தில் தொடர்ந்து சென்றான். பேரிகள்,சங்கங்கள், மிருதங்கங்கள், விற்கள்இவற்றின் ஒலியும் அவ்வாறே தார்த்தராஷ்டிரர்களுடைய ஸிம்மநாதமும்தோன்றின.கௌரவரே!மஹாராஜரே!

பெரியவரே! யுதிஷ்டிரரோ விரைவாக மருதகீர்த்தியினுடைய ரதத்திலேறிக்கொண்டு அந்தக் கர்ணனுடைய விக்கிரமத்தையும் அவனாலே சேனை துரத்தியடிக்கப்படுவதையுங் கண்டு கோபங்கொண்டு தம்முடைய யுத்தவீரர்களைப் பார்த்து, 'வீரர்களே! இவர்களைக் கொல்லுங்கள். ஏன் சும்மா, இருக்கிறீர்கள்?' என்று சொன்னார். பிறகு, அரசராலே அனுமதி கொடுக்கப்பட்டவர்களும் பீமஸேனனை முதன்மையாகக் கொண்டவர்களுமான பாண்டவர்களுடைய எல்லா மஹாரதர்களும் தம்முடைய புத்திரர்களை நோக்கி ஸமீபத்தில் வந்தார்கள். பாரதரே! அவ்விடத்தில் யுத்தவீரர்களுடைய சப்தமும் ஓடுகின்ற ரதங்கள், யானைகள், குதிரைகள், காலாட்கள் இவைகளுடைய பெரிய சப்தமும் ஆங்காங்கு உயரத் தூக்கிப்பிடிக்கப்பட்ட சஸ்திரங்களுடைய சப்தமும் மிகுதியாகத் தோன்றின. மஹாயுத்தத்தில் போர்வீரர்கள் 'வாருங்கள்; அடியுங்கள்; விரைவாக நாற்புறங்களிலும் ஓடுங்கள்' என்று சொல்லிக்கொண்டு ஒருவரையொருவர் அடித்தார்கள். அந்த ரணகளத்தில் ஆகாயத்தில் அம்புமழைகளால் மேகத்தினால் நிழலுண்டாவது போல நிழலுண்டாயிற்று. ஐயா! சூழ்ந்திருப்பவர்களும் ஒருவரையொருவர் துன்பஞ் செய்கின்றவர்களுமான புருஷஶ்ரேஷ்டர்களால் அரசர்கள் கொடிகளையும் கொடிமரங்களையும் குடைகளையும் குதிரைகளையும் ஸாரதிகளையும் ரதங்களையும் ஆயுதங்களையும் இழந்தவர்களாகவும் அங்கங்களையும் அங்கங்களின் உறுப்புக்களையுமிழந்தவர்களாகவும் க்ஷீணித்து, வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்ட மலைச்சிகரங்கள்போல விழுந்தார்கள். பாகர்களுடன்கூடின யானைகள் வெட்டப்பட்டும் உடைக்கப்பட்டும் மாறுபாடடைந்துமிருக்கின்ற கவசங்களுடனும் அலங்காரங்களுடனும்கூடின சரீரங்களையுடையவைகளாக வெட்டப்பட்டும் கொல்லப்பட்டும் பூமியில் விழுந்தன. வீரர்களேறிச்செலுத்திய குதிரைகள் அவ்வீரர்களும் கொல்லப்பட்டு ஆயிரமாயிரமாக விழுந்தன. ஆயுதங்களால் நன்கு அடிக்கப்பட்ட சரீரங்களையுடைய யானைகள் ரதிகர்களால் கொல்லப்பட்டன. யுத்தத்தில் ஆயிரக்கணக்கான காலாட்கூட்டங்கள் எதிரிவீரர்களால் நாசம்பண்ணப்பட்டன. அன்றியும் நீண்டும் சிவந்துமிருக்கின்ற கண்களையுடையவைகளும் தாமரைமலரும் சந்திரனும்போன்றவைகளுமான முகங்களுள்ள யுத்தவீரர்களுடைய தலைகளால் பூமியானது நான்குபக்கத்திலும் மூடப்பட்டது. ஜனங்கள் விமானத்தில் அப்ஸரஸ்ஸுக்கூட்டங்களின் கானவாத்யங்களின் சப்தங்களுடன்கூடின சப்தத்தைப் பூமியில்போல ஆகாயத்திலும் கேட்டார்கள். வீரர்களாலே லக்ஷக்கணக்காக எதிரில் கொல்

வெட்டப்பட்டிருக்கின்ற வீரர்களை அப்ஸரஸ்ஸுகளின்கூட்டங்கள் விமா னங்களில் ஏற்றிஏற்றி வைத்துக்கொண்டு சென்றனர். மிக்க ஆச்சர் யமான அந்தச்செய்கையைப் பிரத்யக்ஷமாகக்கண்டுஸ்வர்க்கத்திலுள்ள விருப்பத்தினலே சூரர்கள் மிக்க ஸந்தோஷமுள்ள மனத்தையுடைய வர்களாக ஒருவரையொருவர் விரைவாகக் கொன்ருர்கள். யுத்தத்தில் ரதிகர்கள் ரதிகர்களோடு எதிர்த்து விசித்திரமாக யுத்தம்செய்தார் கள். காலாட்களோடு காலாட்களும் யானைகளோடு யானைகளும் குதிரைகளோடு குதிரைகளும் போர்புரிந்தன. யானைகளுக்கும் குதி ரைகளுக்கும் மனிதர்களுக்கும் நாசத்தை உண்டுபண்ணுகின்ற யுத்த மானது சேனையினலே உண்டுபண்ணப்பட்ட புழுதியினலே மூடப்பட்டு இவ்வாறு நடந்துவரும்பொழுது நம்மவர் நம்மவரையும் பகைவர்கள் பகைவர்களையும் கொன்ருர்கள். வீரர்கள் ஒருவரையொருவர் மயி ரைப்பிடித்தும் பற்களாலகடித்தும் நகங்களால கிள்ளியும் சண்டை செய்தார்கள். வீரர்களுடைய தேகங்களையும் பாவங்களையும் போக்கு கின்ற முஷ்டியுத்தமும் வாகுயுத்தமும் நடந்தன. யானைகளுக்கும் குதிரைகளுக்கும் மனிதர்களுக்கும் பயத்தை உண்டுபண்ணுகின்ற அவ்வாருனயுத்தம் நடக்கும்போது மனிதர்கள் குதிரைகள் யானை கள் இவற்றின் தேகங்களினின்று இரத்தநதி பெருகியது. அந்த ரக்த நதியானது மனிதர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும்நெருங் கிய அந்த யுத்தத்தில் விழுந்திருக்கின்ற அநேக மனிதர்கள், குதிரை கள், யானைகள், பாகர்கள் இவர்களுடைய சரீரங்களை இழுத்துக் கொண்டு சென்றது. இரத்தத்தை ஜலமாகக்கொண்டதும் மிக்க கோரமாயிருப்பதும் மாம்ஸங்களாலும் ரக்தங்களாலும்சேறுள்ளதும் மனிதர்கள் குதிரைகள் யானைகளின்தேகங்களை இழுத்துக்கொண்டு செல்லுகின்றதுமான அந்த இரத்தநதியானது பயப்படுகிறவர்களுக் குப் பயத்தைச் செய்வதாயிருந்தது. வெற்றியை விரும்புகின்றவர் களான சிலர் அந்தரக்தநதியினுடைய அக்கரையை யானையினுல் அடைந்தார்கள். மற்றவர்கள் நீந்தியும் அமிழ்ந்தும் மேலெழுந்தும் அக்கரையை அடைந்தார்கள். பரதஸ்ரேஷ்டரே! அந்த வீரர்கள் ரக்தத்தினுல் பூசப்பட்ட அங்கங்களையுடையவர்களாகவும் சிவந் திருக்கின்ற கவசங்களையும் ஆயுதங்களையும் வஸ்திரங்களையுமுடைய வர்களாகவும் அந்தரக்தநதியில் மூழ்கினர்கள்; இரத்தத்தையுங் குடித் தார்கள். ஸந்தோஷத்தையும் இழந்தார்கள். ஆயிரக்கணக்காக விழுந் திருக்கின்ற ரதங்களையும் குதிரைகளையும் மனிதர்களையும் யானைக ளையும் ஆயுதங்களையும் ஆபரணங்களையும் கவசங்களையும் கண்டே.ஈப்.

ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும் பூமியையும் திக்குக்களையும் பெரும் பான்மையாகச் சிவந்தநிறமுள்ளவைகளாகக் கண்டோம். பாரதரே! ரக்தத்தினுடைய நாற்றத்தினாலும் ஸ்பர்சத்தினாலும் ரஸத்தினா லும் மிக்கசிவப்பான ரூபத்தாலும் பரவுகின்ற சப்தத்தினாலும் சே னைக்குப் பெரும்பான்மையாக மிக்கபெரிதான துயரம் நேர்ந்தது. பீமஸேனன்முதலான வீரர்களால் நன்றாக அடிக்கப்பட்ட உம் முடைய அந்தச்சேனையைக்குறித்து அப்பொழுது ஸாத்யகிமுத லானவீரர்கள் மறுபடியும் நன்றாக எதிர்த்துவந்தார்கள். ராஜரே! வருகின்ற அந்தவீரர்களுடையவேகம் ஸஹிக்கமுடியாமலிருப்பதைக் கண்டு உம்முடைய புத்திரர்களது பெருஞ்சேனையானது புறங்காட்டி ஓடியது. நான்குபக்கத்திலும் அந்த வீரர்களாலே கலக்கப்பட்ட உம் முடைய அந்தச்சேனையானது ரதங்களும் குதிரைகளும் யானைகளும் சிதறினதாகவும் மனிதர்களாலும் குதிரைகளாலும் வ்யாபிக்கப்பட்ட தாகவும் கவசங்களழிக்கப்பட்டதாகவும் நன்றாக அடிக்கப்பட்டிருக் கிற ஆயுதங்களையும் விற்களையுமுடையதாகவும் காட்டில் சிங்கத்தால் பிடிக்கப்படும் யானைக்கூட்டம்போல விரைவாக ஓடியது.

---

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

(கர்ணனைத் தோல்வ அடையச்செய்து கொல்லக்கருதிய பீமனைச் சல்யன காரணங்களைச்சொல்லித் தடுத்தது.)

மஹாராஜரே! எதிர்த்து வருகின்ற அந்தப் பாண்டவர்களைக் கண்டு உம்முடைய சேனையைத் துரியோதனன் நான்கு பக்கத்தி லும் தடுத்தான். பாரதரிற சிறந்தவரே! அரசரே! யுத்தவீரர்களையும் தன்னுடைய சேனையையும் நாற்புறங்களிலும் உம்முடைய புத்திரன் அழைத்துக்கொண்டிருக்கும்பொழுதே அவர்கள் திரும்பவில்லை. பாரதரே! பிறகு, பக்ஷங்களிலும் பக்ஷங்களுடைய நுனிகளிலும் நடுவிற்றிலும் நின்றுகொண்டிருந்த கௌரவர்கள் அப்பொழுது சஸ்திரங்களுடன்கூடினவர்களாக யுத்தத்தில் பீமஸேனனைக்குறித்து எதிர்த்துச்சென்றார்கள். கர்ணனும் புறங்காட்டி ஓடுகின்ற தார்த்த ராஷ்டிரர்களைக்கண்டு மத்ரராஜனைப்பார்த்து, 'பீமனுடைய ரதத்தை நோக்கிச்செல்' என்றுசொன்னான். கர்ணன் இவ்வாறு சொல்லக் கேட்ட மத்ரதேசாதிபதியான சல்யன் அப்பொழுது பீமஸேனனி ருக்குமிடத்துக்கு ஹம்ஸம்போன்ற நிறமுள்ள சிறந்த குதிரைகளை நடத்தினான். மஹாராஜரே! யுத்தத்தில் பிரகாசிக்கின்ற சல்யனாலே

தூண்டப்பட்டு அந்தக்குதிரைகள் பீமஸேனனுடைய ரதத்தை நெருங்கி நன்றாக எதிர்த்துநின்றன. பரதஸ்ரேஷ்டரே! எதிர்த்துவருகின்ற கர்ணனைக்கண்டு பீமன் கோபத்துடன் அவனுடைய அழிவின் பொருட்டுப் புத்தியைச் செலுத்தினான். அந்தப்பீமன் வீரனான ஸாத்யகியையும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனையும் பார்த்து, 'நீங்கள் தர்மாத்மாவான யுதிஷ்டிரராஜனை ரக்ஷியுங்கள்; நான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பெரிதான ஸம்சயத்தினின்று பிரயாஸத்தால் விடுபட்டார். துராத்மாவான ராதேயனால் துர்யோதனனுடைய ப்ரீதிக்காக என்முன்னிலையில் ராஜாவான தர்மநந்தனர் எல்லா உபகரணங்களும் முறிக்கப்பட்ட வராகச் செய்யப்பட்டார். பார்ஷத! இப்பொழுது அந்தத் துக்கத்தினுடைய முடிவை அடையப்போகிறேன். மிக்ககோரமான இந்தயுத்தத்தில் [1]இப்பொழுது கர்ணனையாவது நான் கொல்வேன். அல்லது கர்ணனாவது என்னைக்கொல்வான். இது ஸத்யமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். இப்பொழுது அரசரை உங்களிடத்தில் அடைக்கலப் பொருளாகக் கொடுக்கிறேன். நீங்களனைவரும் மனக்கவலையற்றவர்களாக அவரை ரக்ஷிப்பதில் முயற்சி எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னான். மிக்க தோள்வலிமையுள்ள பீமஸேனன் இவ்வாறு சொல்லிவிட்டு உரத்த ஸிம்மநாதத்தினாலே எல்லாத்திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டு கர்ணனைநோக்கி எதிர்த்துச்சென்றான். போரில் மகிழ்பவனும் விரைவாக வருகின்றவனுமான பீமனைக்கண்டு பிரபுவான மத்ரநாதன் பிறகு ஸூதபுத்திரனைப் பார்த்துக் கூறலானான். 'கர்ண! மிக்கபுஜபலமுள்ளவனும் கடுங்கோபமுள்ளவனும் நெடுநாளாகச் சேர்த்துவைத்த கோபத்தை உன்னிடத்தில் விடவேண்டுமென்று நிச்சயமான எண்ணங்கொண்டவனுமான பாண்டுநந்தனனைப் பார். கர்ண! முன்பு, அபிமன்யுகொல்லப்பட்டபோதும் ராக்ஷஸனான கடோத்கசன் கொல்லப்பட்டபோதுங்கூட இந்தப் பீமஸேனனிடத்தில் இவ்வித ரூபத்தை நான் ஒருபொழுதும் கண்டதில்லை. பீமன் கோபித்தால் மூவுலங்களனைத்தையும் எதிர்ப்பதில் ஸாமர்த்தியமுடையவன்; பிரளயகால நெருப்புக்குச்சமமான ஒளிபொருந்தியதும் தகுந்ததுமான ரூபத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறான்' என்று சொன்னான். அரசரே! மத்ரநாதன் ராதேயனைநோக்கி இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே விருகோதரன் கோபத்தினால் ஜ்வலித்துக்

1 இரண்டிலொன்று தீர்ந்துவிடட்டுமென்க.

கொண்டு கர்ணனை எதிர்த்துவந்தான். பிறகு, எதிர்த்து வருகின்றவனும் யுத்தத்தைக்கண்டு களிப்பவனுமான பீமனைக்கண்டு ராதேயன் உரக்கச் சிரித்துக்கொண்டு சல்யனைப்பார்த்து, 'மத்ரராஜனே! பிரபுவே! பீமஸேனனைப்பற்றி நீ என்னிடத்தில் இப்பொழுது சொல்லிய வார்த்தை உண்மையே. இந்த விஷயத்தில் ஸம்சயமில்லை. இந்த விருகோதரன் சூரன்; வீரன்; கடுஞ்சினமுள்ளவன்; சரீரத்தில் அபேக்ஷையில்லாதவன்; பலத்தினால் பலசாலிகளை மிஞ்சியவன். அப்பொழுது விராடநகரத்தில் அஜ்ஞாதவாஸஞ் செய்கின்ற பீமஸேனன், மறைந்திருக்குந்தன்மையை அடைந்து, த்ரௌபதிக்குப் பிரியத்தைச்செய்யும் விருப்பத்தினாலே தன்கைகளின் உதவியினாலேயே அவன் கீசகனைப் பந்துவர்க்கங்களுடன் கொன்றான். போர்முனையில் ஸன்னத்தனாயிருப்பவனும் கோபமுண்டவனுமான அந்தப் பீமஸேனன் இப்பொழுது காலதண்டத்தைக் கையிற்கொண்ட மிருத்யுவோடும் எதிர்த்து யுத்தத்தைச் செய்வான். 'யுத்தத்தில் அர்ஜுனனையாவது நான் கொல்ல வேண்டும்; அல்லது, அவனாவது என்னைக் கொல்ல வேண்டும்' என்கிற இந்த விருப்பமானது நெடுங்காலமாக என்னால் கொள்ளப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட என்னுடைய மனோரதமானது ஒருகால் இப்பொழுதே பீமனுடைய எதிர்ப்பினால் உண்டாகலாம். பீமஸேனன் கொல்லப்பட்டாலும் அல்லது ரதத்தை இழந்தவனாகச் செய்யப்பட்டாலும் அர்ஜுனன் என்னை எதிர்த்து வருவான். அது எனக்கு நல்லதாகும். இச்சமயத்தில் எதனைத் தகுந்ததாக எண்ணுகிறாயோ அதனைச் சீக்கிரமாக நிச்சயம் பண்ணு' என்று சொன்னான்.

சல்யன் அளவற்ற பராக்கிரமமுள்ள ராதேயனுடைய இந்த வார்த்தையைக்கேட்டு அவ்விதநிலைமையையடைந்திருக்கின்ற ஸூதபுத்திரனைப்பார்த்து, 'மிக்கதோள்வலியமைந்தவனே! மஹாபலசாலியான பீமஸேனனை எதிர்த்துச் செல். உன்னுடைய சக்தியை நன்றாகக் காட்டிக்கொண்டு (உயிரில்) அபேக்ஷையில்லாதவனாய் யுத்தஞ் செய். கர்ண! நெடுங்காலமாக உன்னால் விரும்பப்பட்டு மனத்திலேயேயிருக்கிற விருப்பத்தை நீ அடையப்போகிறாய். இது ஸத்தியமென்று உனக்குச் சொல்லுகிறேன்' என்று சொன்னான். பிறகு, இவ்வாறு சொல்லக்கேட்டு கர்ணன் மறுபடியும் சல்யனைப்பார்த்து, 'கோபமுள்ளவனான இந்தப் பீமஸேனனை நான் கொல்வேன். அல்லது, விருகோதரனாவது என்னைக் கொல்வான்' என்று கூறினான். மஹாராஜரே! ரதிகர்களுள் சிறந்தவனான ராதேயன் இவ்வாறு

சொல்லிவிட்டு யுத்தத்தில் மனத்தைச் செலுத்தி 'போ, போ' என்று தூண்டினன். அரசரே! பிறகு, மஹாவிலவாளியான பீமஸேனனை யைத்துரத்திவிட்டதற்குச் சல்யன் விரைவாக ரதத்தோடு சென்றான். ராஜேந்திரரே! கர்ணனுக்கும் பீமனுக்கும் யுத்தம் நேர்ந்திருக்குங்காலத்தில் தூர்யங்களுடையகோஷமும் பேரிகளுடையபேரொலியும் தோன்றின. பிறகு, பலசாலியான பீமஸேனன் கோபங்கொண்டு அணுக முடியாததான அந்தக் கர்ணனுடைய சேனையைப் பளபளப்புள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமான நாராசங்களாலே திக்குகளில் ஓடும்படி செய்தான். மன்னரே! மஹாராஜரே! புகழ்ந்த நிலகர்ணனுக்கும்பாண்டவனுக்கும் கலந்த நம் கோரமான காட்சியுள்ளதுமான அப்படிப்பட்ட யுத்தமானது அதிபயங்கரமாக நேர்ந்தது. ராஜேந்திரரே! பிறகு, மஹாபாகுபலமுள்ள பீமஸேனன் சிரித்துக்கொண்டே ஒரு முகூர்த்தகாலத்திற்குள் அதிக ஸ்ரமமில்லாமல் கர்ணனை அணுகஎண்ணி எதிரில்சென்றான். சூரியனுடைய குமாரனும் தார்மிகனுமான கர்ணன் எதிர்த்துவருகின்ற பீமஸேனனைக்கண்டு மிக்ககோபங்கொண்டு நாராசத்தினாலே நடுமார்பில் அடித்தான். அளவிடமுடியாதபலமுள்ளவனை அந்தக் கர்ணன் மீண்டும் பாணமழைகளைப் பீமஸேனன்மீது பொழிந்தான். ஸூதபுத்திரனாலே அடிக்கப்பட்ட அந்தப் பீமஸேனன் பாணங்களாலே அவனைமூடிக் கூர்மையுள்ளவைகளும் அமிழ்ந்த கணுக்களுள்ளவைகளுமான ஒன்பதுபாணங்களால் அடித்தான். கர்ணன் பாணங்களால் அந்தப்பீமஸேனனுடைய வில்லை நடுவில் இரண்டாகத் துண்டாக்கினன். பிறகு, வில்லறுக்கப்பட்ட அந்தப்பீமஸேனனை மிக்ககூர்மையுள்ளதும் எல்லாக்கவசங்களையும் உடைக்கத்தக்கமையுள்ளதுமான ஒரு நாராசத்தினால் நடுமார்பில் திருப்பியடித்தான். அரசரே! மர்மஸ்தானங்களை அறிந்தவனை அந்தப்பீமஸேனன் வேறுவில்லை எடுத்துக் கூர்மையுள்ளஅம்புகளால் கர்ணனை மர்மஸ்தானங்களில் அடித்து ஆகாயத்தையும் பூமியையும் நடுங்கச்செய்கிறவன்போலஉரத்தசப்தத்துடன் ஸிம்மநாதஞ்செய்தான். கர்ணன் காட்டிலமதம்பிடித்தசினஞ்செருக்குள்ள யானையைக் கொள்ளிக்கட்டைகளாலடிப்பதுபோல அந்தப்பீமஸேனனை இருபத்தைந்து நாராசபாணங்களாலடித்தான். பிறகு, பாணங்களால பிளக்கப்பட்ட அங்கங்களையுடையவனும் கோபமுண்டவனுமான பாண்டுநந்தனன் பாபரப்பினாலும் பொறுமையினாலும் கண்கள் சிவந்து ஸூதபுத்திரனைக் கொல்லவிரும்பி மஹாவேகமுள்ளதும் பெரியகார்யங்களை ஸாதிப்பதும் சிறந்ததும் மலைகளையும் பிளக்குந் திற

மையுள்ளதுமான ஓர் அம்பை வில்லில் பூட்டினன்; வாயுகுமாரனை ஹனுமானை மீறியிருக்கின்றவனும் மஹாவில்லாளியுமான அந்தப்பீமஸேனன் கோபங்கொண்டு திடமானவில்லைக் காதுவரையிலிழுத்துக் கர்ணனைக்கொல்லும் விருப்பத்தினால் அந்தப்பாணத்தைப் பிரயோகித்தான். பலசாலியான பீமஸேனனால் விடப்பட்டதும் வஜ்ராயுதம் இடி இவற்றின் சப்தத்திற்கொப்பான சப்தமுள்ளதுமான அந்தப்பாணமானது வஜ்ராயுதத்தினுடைய வேகமானது மலையைப் பிளப்பதுபோல யுத்தத்தில் கர்ணனைப் பிளந்தது. குருஸ்ரேஷ்டரே! பீமஸேனனால் அடிக்கப்பட்டவனும் பகைவர்களை அடக்குந்திறமையுடையவனும் ஸேனைபதியுமான அந்த ஸூதபுத்திரன் ரக்தத்தினால் நனைக்கப்பட்ட மேனியையுடையவனாகிப் பிரஜ்ஞையையிழந்து உயிரை விட்டவன்போல் தேர்நடுவில் உட்கார்ந்தான். இந்த ஸமயத்தில் கர்ணனைக் கொல்லக்கருதி வருகின்ற விருகோதரனைக் கண்டு திரும்பிச் செல்லும்படி செய்வதற்காக மத்ரராஜன் இந்த வார்த்தையைக் கூறலானான்.

'மிக்க புஜபலமுள்ளவனே! பீமஸேன! நான் உன்னைப் பார்த்துச் சொல்லுவதைக் கேள். காரணங்களோடுகூடின அந்த வார்த்தையைக்கேட்டு அதை அப்படியே செய்வாயாக. பராக்கிரமசாலியான கர்ணனுடைய வதமானது அர்ஜுனனால் பிரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிறது. ஸவ்யஸாசியினுடைய அந்தப் பிரதிஜ்ஞையை அப்படியே நிறைவேற்றுவாயாக. உனக்கு மங்களமுண்டாகுக' என்றான். பீமஸேனன், 'அரசர்களுள் சிறந்தவனே! பார்த்தனுடைய உறுதியான விரதத்தை நான் அறிவேன். பாபியான கர்ணன் என் அருகில் அரசரான தர்மநந்தனரைப் பலாத்காரமாகப் பீடித்தான். அதனாலுண்டான கோபத்தால் மூடப்பட்ட நான் மற்ற விஷயத்தை ஆலோசிக்கவில்லை. ராதேயன் விழுந்தாலும் என்னுடைய கோபம் சாந்தியை அடையாது. இவனுடைய நாவை அறுப்பதற்கு இதுவே தகுந்த ஸமயமென்பது என்னுடைய எண்ணம். சல்ய! மாதுல! அரசர்கள் ஒன்றுசேர்ந்திருக்குந்தருணத்தில் மிக்கக்ரூரனை இந்தக் கர்ணன் நாங்கள் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே பொறுக்கமுடியாத இழிவான அனேக வார்த்தைகளைச் சொன்னான். (அப்பொழுதே) தூரத்திலிருந்தும் இந்தக் கர்ணனுடைய நாவை அறுத்தலை நான் பிரதிஜ்ஞை செய்தேன். அப்பொழுதே அதனைச் செய்யவும் விரும்பினேன். யுதிஷ்டிரராஜருக்குப் பிரியத்தைச் செய்யும் விருப்பத்தினால் அந்தக்காலமானது பரிபாலிக்கப்பட்டது. மஹா

ராஜனே! க்ரஸ்ணகர்களுடனும் வர்க்கத்துடனுங்கூட என்னை நோக்கிக்கூறியவசனத்தை க்ரமானவீர்யமுள்ள ஸூலஷகம்போல்வற்றுக்கொண்டேன். பீபத்ஸுவானவன் பிரதிஜ்ஞையையிழந்து ஒருகாலும் ஜீவிக்கிருக்கமாட்டான். அவன் நாசமடைந்தால் சேசவருடன் கூடின நாங்களெல்லோரும் நாசமடைந்தவர்களே. கொடுந்தன்மையுடையவனும் பாவியும் பாவிகளுள்சிறந்தவனுமான கர்ணன் இப்பொழுது கிரீடியினால் பார்க்கப்பட்டவுடன், அவமானத்தை அடைவான். கொடியசெய்கையைச் செய்தவனை கர்ணன் யுதிஷ்டிரருடைய கோபத்தினால் முந்தியே எரிக்கப்பட்டிருக்கிறான். இப்பொழுது என்னுடைய ஸமீபத்தில் வந்திருக்கின்ற இந்தக்கர்ணன் என்னால் பாதுகாக்கப்பட்டான்' என்றான்.

மத்ரநாதன் இவ்வாறான வார்த்தையைக்கேட்டு, பிரஜ்ஞையையிழந்தவனும் யுத்தத்தில் விளங்குகின்றவனும் ஸூதபுத்திரனுமான கர்ணனை ரதத்தோடு யுத்தபூமியினின்று வேறிடத்திற்குக் கொண்டு சென்றான். பிறகு, கர்ணன் தோல்வியடையவே, துர்யோதனனுடைய பெரும்படையானது நான்குபக்கத்திலும் முறிய அடிக்கப்பட்டு ஹாஹாகாரங்கொண்டு நாற்புறங்களிலும் ஓடியது" என்று கூறினான்.

---

## நாற்பத்தாறுவது அத்யாயம்

(பீமனுக்கும் கர்ணனுக்கும் யுத்தம், பீமன் துர்யோதனன் தம்பியர் சிலரைக் கொன்றதும், ஸங்குல யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! மிக்க தோள்வலிமையமைந்த கர்ணன் விரும்பிடிசெய்யப்பட்ட காரணத்தினால் பீமனால்செய்யப்பட்ட இந்தக்காரியமானது எவ்விதத்தாலும் எவராலும் செய்யமுடியாதது. கர்ணன்ஒருவனே யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்களுடன்கூடின பாண்டவர்களைக் கொல்லத்திறமையுள்ளவனென்று துர்யோதனன் அடிக்கடி என்னிடத்தில் சொல்லியிருக்கிறான். பீமனால் யுத்தத்தில் கர்ணன் தோல்வியடைவிக்கப்பட்டதைக் கண்டு என் புத்திரனை துர்யோதனன் அதற்குப்பிறகு என்ன செய்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"மஹாராஜரே! மஹாயுத்தத்தில ஸூதபுத்ரனை 'கர்ணன் புறங்காட்டியதைப்பார்த்து உம்முடைய குமாரன் தம்பியர்களை நோக்கி, 'சீக்கிரமாகச் செல்லுங்கள். உங்களுக்கு மங்களம். ஆழ்ந்திருக்கின்றதும் பீமஸேனனிடத்தினின்று உண்டான பயத்துடன்

கூடியதுமான துயரக்கடலில் முழ்குகின்ற ராதேயனை நான்குபக்கங்களிலும் காப்பாற்றுங்கள்' என்று கட்டளையிட்டான். அரசனால் கட்டளையிடப்பட்ட அவர்களோ பீமஸேனனைக் கொல்லவிரும்பி மிக்க கோபத்துடன் விட்டில்பூச்சிகள் நெருப்பினிடம்வருவதுபோல (பீமஸேனனுக்கு) எதிரில்வந்தார்கள். வீர்யமுடையவர்களும் மிக்க வன்மையுடையவர்களுமான ச்ருதாயு, துர்த்தரான், க்ராதன், விவித்ஸு, விகடன், ஸமன், நிஷங்கி, கவசி, பாசி, நந்தன், உபநந்தகன், துஷ்ப்ரதர்ஷன், ஸுபாஹு, வாதவேகன், ஸுவர்ச்சஸ், தனுக்ராஹன், துர்மதன், ஜலஸந்தன், சலன், ஸஹன் ஆகிய இவர்கள் ரதிகர்களால் சூழப்பட்டவர்களாகிப் பீமஸேனனையடைந்து நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் பற்பல அடையாளமுள்ள பாணஸமூகங்களை நாற்புறங்களிலும் பிரயோகித்தார்கள். அரசரே! அவர்களால் அடிக்கப்படுகின்ற மஹாபலசாலியான பீமஸேனன் விரைவாக வருகின்ற அந்த உமது குமாரர்களுடைய ஐந்நூற்றைம்பது ரதங்களையும் நாசஞ்செய்தான். மஹாராஜரே! பிறகு, கோபமூண்ட பீமஸேனன், விவித்ஸுவினுடைய தலையை ஒரு பல்லத்தினால் கவர்ந்தான். அறுக்கப்பட்ட அந்தத் தலையானது பூமியில் விழுந்தது. மஹாராஜரே! குண்டலங்களோடுகூடியதும் தலைப்பாகையை யணிந்ததும் பூர்ணசந்திரனைப்போன்றதுமான அந்தத் தலையானது ஆகாயத்தில் பூர்ணசந்திரன் விளங்குவதுபோல் விளங்கியது. சூரனான அந்தவிவித்ஸு கொல்லப்பட்டதைக்கண்டு அப்பொழுது நாற்புறங்களிலுமுள்ளபிராதாக்கள் பயங்கரமானபராக்கிரமமுள்ள பீமனை யுத்தத்தில் எதிர்த்துவந்தார்கள். பிறகு, யுத்தத்திலபயங்கரமான பராக்கிரமமுள்ள பீமன் மஹாயுத்தத்தில் வேறு இரண்டு பல்லங்களாலே உமது இரண்டுகுமாரர்களுடைய உயிரைவாங்கினான். அரசரே! தேவகுமாரர்களுக்கொப்பான விகடன் ஸஹன் என்கிற இவ்விருவரும் காற்றினால் முறிக்கப்பட்ட இரண்டு மரங்கள் போலப் பூமியில் விழுந்தார்கள். பிறகு, பீமன் விரைவுள்ளவனாகி மிக்ககூர்மையுள்ள நாராசத்தினால் க்ராதனை, யமலோகத்துக்கு அனுப்பினான். அவன் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தான். ஜனேச்வரரே! பிறகு, வீரர்களும் வில்லாளிகளுமான உம்முடைய புத்திரர்கள் கொல்லப்படும்பொழுது மிக அதிகமான கூக்குரல் தோன்றியது. அவர்களுடைய சேனையானது நன்குகலக்கப்படுகையில் மஹாபலசாலியான பீமன் யுத்தத்தில் நந்தனையும் உபநந்தனையும் யமலோகத்துக்கனுப்பினான். பிறகு, யுத்தத்தில காலனுக்கும் அந்தகனுக்

கும் யமனுக்கும் ஒப்பான பீமஸேனனைக்கண்டு மனத்தளர்ச்சியடைந்த உம்முடைய அந்தப்புத்திரர்கள் பயந்து ஓடினார்கள். உம்முடைய புத்திரர்கள் கொல்லப்பட்டதைக்கண்டு மிக்கமனவருத்தமுற்றவனான கர்ணன் எந்த இடத்தில் பாண்டவனிருக்கிறானோ அந்தஇடத்திற்கு ஹம்ஸங்களுடைய நிறம்போன்ற நிறமுடைய குதிரைகளை மறுபடியும் ஓட்டும்படி செய்தான். மஹாராஜரே! மத்ரராஜனாலே ஓட்டப்பட்ட அந்தக்குதிரைகள் வேகத்துடன் பீமஸேனனுடைய தேரை அடைந்து ஸன்னத்தமாக நின்றன. வேந்தரே! யுத்தத்தில் கர்ணனுக்கும் பாண்டவனுக்கும் கைகலந்ததும் கோரமானதும் பயங்கரமுமான அப்படிப்பட்ட யுத்தமானது ஸம்பவித்தது. மஹாராஜரே! எதிர்த்திருக்கின்ற மஹாரதர்களான அவ்விருவரையுங்கண்டு 'இந்த யுத்தம் இப்பொழுது எவ்வாறாகுமோ' என்று எனக்கு எண்ணமுண்டாயிற்று. மஹாராஜரே! பிறகு, யுத்தத்தைப் புகழ்கின்றவனான பீமன், உம்முடைய புத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே யுத்தத்தில் பாணங்களால் கர்ணனை மூடினான். பிறகு, உத்தமமான அஸ்திரங்களை அறிந்த கர்ணன் அதிககோபங்கொண்டு கணுக்கள் படிந்துள்ளவைகளும் உருக்குமயமாயிருப்பவைகளுமான ஒன்பது பல்லங்களாலே பீமனை அடித்தான். மிக்கதோள்வலிமை அமைந்தவனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனுமான பீமன் அந்தப் பல்லங்களை நாசஞ்செய்து காதுவரையில் இழுத்து விடப்பட்ட ஏழுபாணங்களால் கர்ணனை அடித்தான். மஹாராஜரே! பிறகு, கர்ணன் ஸர்ப்பம்போலச் சீறிக்கொண்டு பெரிய அம்புமழையினால்பாண்டவனை மூடினான். மஹாபலசாலியான பீமனும் கௌரவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மஹாரதனான அந்தக்கர்ணனைப் பாண ஸமூகங்களால்மூடி ஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, கர்ணன் மிக்க கோபமுள்ளவனாகத் திடமானஒருவில்லையெடுத்துக் கழுகிறகுகள் பூண்டவைகளும் சாணைபிடிக்கப்பட்டவைகளுமான பத்துப்பாணங்களால் பீமனை அடித்தான்; கூர்மையுள்ள ஒரு பல்லத்தினால் அந்தப் பீமனுடைய வில்லையும் துண்டாக்கினான். பிறகு, மிக்க புஜபலமுள்ளவனும் அதிகபலசாலியுமான பீமன் பொற்பட்டங்களால் அலங்கரிக்கப்பட்டதும் வேறு யமதண்டம் போன்றதும் கோரமுமான ஒரு பரிகாயுதத்தை எடுத்துக் கர்ஜித்துக்கொண்டு கர்ணனைக் கொல்ல விரும்பிப் பிரயோகித்தான். வருகின்றதும் வஜ்ராயுதமும் இடியும் போன்றஒலியுள்ளதுமான பரிகாயுதத்தைக் கர்ணன் ஸர்ப்பம்போன்ற அம்புகளாலே பலவாறாகத் துண்டாக்கினான். பிறகு, பீமன் மிக்க

உறுதியான ஒருவில்லை எடுத்து அப்பொழுது பகைவர்களுடைய படையை நாசஞ்செய்கின்ற கர்ணனைப் பாணங்களால் மூடினான். பிறகு, யுத்தத்தில் அடிக்கடி ஒருவரை யொருவர் கொல்ல எண்ணங்கொண்டவர்களான கர்ணன் பாண்டவன் இருவருக்கும், பலிக்கும் இந்திரனுக்கும் யுத்தம் நேர்ந்தது போலக் கோரமான யுத்தம் நேர்ந்தது. மஹாராஜரே! பிறகு, கர்ணன் திடமான வில்லைவளைத்துக் காதுவரையில் இழுத்துவிடப்பட்ட மூன்றுபாணங்களால் பீமஸேனனை அடித்தான். கர்ணனாலே அதிகமாக அடிக்கப்பட்டவனும் பெரிய வில்லையுடையவனும் பலசாலிகளுள் சிறந்தவனுமான அந்தப்பீமன் கர்ணனுடைய சரீரத்தைப் பிளக்கக்கூடிய கோரமான ஒரு பாணத்தை எடுத்தான். அரசரே! அந்தப் பாணமானது அவனுடைய கவசத்தை உடைத்துச் சரீரத்தைப் பிளந்து புற்றில் பாம்பு நுழைவதுபோலப் பூமியில் நுழைந்தது. அந்த அதிகமான அடியினால் துன்பமுற்ற அந்தக் கர்ணன் மனத்தளர்ச்சி அடைந்து பூகம்பம் உண்டாகுங் காலத்தில் மலை அசைவதுபோல ரதத்தில் மிக்கநடுக்கமுற்றான். மஹாராஜரே? பிறகு. கர்ணன் கோபத்தோடும் பொறுமையோடும் அந்தப் பீமன்மீது இருபத்தைந்து நாராசங்களைப் பிரயோகித்து வேறு பாணத்தால் பாண்டவனுடைய வில்லை மிக விரைவாக வெட்டினான். ராஜேந்திரரே! பிறகு, கர்ணன் ஒரு முகூர்த்தத்திற்குள் அதிகஶ்ரமமில்லாமல் சிரித்துக்கொண்டே பயங்கரமான செய்கையுள்ள பீமனை ரதத்தை இழக்கச் செய்தான். பரதஶ்ரேஷ்டரே! மிக்ககைவன்மையுள்ளவனும் வாயுவுக்கு ஒப்பானவனுமான அந்தப் பீமஸேனன் ரதத்தை இழந்து உரக்கச் சிரித்துக்கொண்டும் கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டும் உத்தமமான ரதத்தினின்று குதித்தான். மஹாராஜரே! பகைவர்களை வாட்டுபவனான அந்தப் பீமஸேனன் யுத்தத்தில் மிகுந்தகோபமுள்ளவனாகிக் கதாயுதத்தினால் கர்ணனுடைய ரதகூபரத்தை நொறுக்கினான். கோபத்துக்கு வசப்பட்டவனும் சிறந்த ப்ரதாபமுள்ளவனும் வீரனுமான அந்தப் பாண்டுபுத்திரன் கதாயுதத்தினால் மஹாயுத்தத்தில் உம்முடையகுமாரர்களை ஓடும்படிசெய்தான். மன்னரே! அதிககோபங்கொண்டவனும் பகைவர்களை வாட்டுபவனுமான பீமன் அடிக்கும் தன்மையுள்ளவைகளும் ஏர்க்கால்போன்ற தந்தங்களையுடையவைகளுமான எழுநூறு யானைகளைப் பலத்தால் நாசஞ்செய்தான். பலசாலியும் மர்மஸ்தானங்களை யறிந்தவனுமான பீமஸேனன் தந்தக்கட்டுக்களிலும் நேத்திரங்களிலும் கும்பஸ்தலங்களிலும் கபோலங்

களிலும் மர்மஸ்தானங்களிலும் அந்த யானைகளை அடித்துக் கொன்றான். பிறகு, பீமஸேனனால் அடிக்கப்பட்டவைகளும் வீறிடுகின்றவைகளும் மிக்க துன்பமுற்றவைகளுமான அந்த யானைகள் அடிக்கடி அடிக்கப்பட்டுப் பயந்து ஓடின. யானைப்பாகர்கள் மேகங்கள் சூரியனைச் சூழ்ந்துகொள்வதுபோல அந்தப் பீமனைச் சூழ்ந்துகொண்டார்கள். பூமியிலிருக்கின்ற பீமஸேனன் வீரர்களால் ஏறப்பட்டவைகளும் ஆயுதங்களையும் கொடிகளையுமுடையவைகளுமான அப்படிப்பட்ட எழுநூறு யானைகளை, இந்திரன் வஜ்ராயுதத்தினால் மலைகளை அடிப்பதுபோலக் கதாயுதத்தினால் அடித்தான். பிறகு, பகைவர்களை அடக்குபவனான குந்திபுத்திரன் ஸுபலபுத்திரனான சகுனியினுடைய மிக்கபலமுள்ள ஐம்பத்திரண்டு யானைகளை மறுபடியும் நாசஞ்செய்தான். அவ்வாறே பாண்டவன் யுத்தத்தில் உமது சேனையைத் தபிக்கச் செய்துகொண்டு நூற்றுக்குமேற்பட்ட தேர்களையும் காலாட்களையும் பற்றவர்களையும் நூற்றுக்கணக்காகக் கொன்றான். சூரியன்போன்ற காணனாலும் மஹாத்மாவான பீமனாலும் மிகவாட்டப்படுகின்ற உம்முடைய படையானது நெருப்பில் போடப்பட்ட தோல்போலச் சுருங்கியது. பரதர்களுள் சிறந்தவரே! பீமனிடத்திலுண்டான பயத்தினாலே மிக நடுக்கமுற்ற உம்மைச் சேர்ந்த அந்தவீரர்கள் யுத்தத்தில் கர்ணனைவிட்டுவிட்டுப் பத்துத் திசைகளிலும் ஓடினார்கள். ஸிம்மநாதம் செய்கின்றவர்களும் அம்புகளைப் பொழிகின்றவர்களுமான வேறான ஐந்நூறு ரதிகர்கள் பாணஸமூகங்களால் நான்குபக்கத்திலும் அடித்துக்கொண்டு பீமனை எதிர்த்துவந்தார்கள். அந்தப் பீமன் கொடித்துணிகளோடும் கொடிமரங்களோடும் ஆயுதங்களோடுங்கூடின அந்த ஐந்நூறு வீரர்களையும் திருமால் அஸுரர்களை நொறுக்கியதுபோலக் கதையினால் அடித்து நொறுக்கினான். பிறகு, சூரர்களாலே ஒப்புக்கொள்ளப்பட்டவர்களான மூவாயிரம் குதிரைவீரர்கள் சகுனியினால் கட்டளையிடப்பட்டுப் பாணங்களையும் சக்திகளையும் ரிஷ்டிகளையும் கையில் கொண்டவர்களாக எதிர்த்து வந்தார்கள். அப்பொழுது, பகைவரைக் கொல்பவனான அந்தப் பீமன் குதிரைகளின்மேலேறியிருக்கிற வீரர்களோடுகூடின அந்தயவனர்களை எதிர்த்துப் பற்பலவிதமான யுத்தமார்க்கங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு கதாயுதத்தினால் அவர்களை நொறுக்கினான். பாரதரே! நான்கு பக்கங்களிலும் அடிக்கப்பட்ட அந்தயவனர்களுடைய பேரொலியானது தீயால் எரிக்கப்படுகின்ற கோரைகளுடைய ஒலிபோல உண்டாயிற்று. இவ்வாறு ஸுபலபுத்திரனை

சகுனியினுடைய மூவாயிரம் குதிரைவீரர்களைக் கொன்று வேறு தேரின்மீதேறிக்கொண்டுகோபமுள்ளவனாகி ராதேயனை எதிர்த்தான். அரசரே! அந்தக் கர்ணனும் பகைவர்களைச் சிக்ஷிப்பவரான தர்மபுத்திரரை யுத்தத்தில் பாணங்களால் மூடி ஸாரதியையும் தள்ளினான். பிறகு, மஹாரதனான அந்தக்கர்ணன் ஓடுகின்ற சேனையைக் கண்டு கழுகிறகு பூண்டவைகளும் நேராகச் செல்லுகின்றவைகளுமான பாணங்களை இறைத்துக்கொண்டு பின் தொடர்ந்து சென்றான். கோபமுள்ளவனான பீமஸேனன், யுதிஷ்டிரராஜனை எதிர்த்து வேகமாகச்செல்லுகின்ற கர்ணனைப் பாணங்களால் மூடி அம்புவலையினால் ஆகாயம் பூமிகளையும் நன்கு மூடினான். பிறகு, பகைவர்களைக் கொல்பவனான ராதேயன் விரைவுடன் திரும்பிக் கூர்மையுள்ள அம்புகளால் பீமனை நான்குபக்கத்திலும் மூடினான். பாரதரே! அளவிடற்கரியபலமுள்ளஸாத்யகியானவன்பீமஸேனனுடைய ரதத்தைஅடைய விரும்பின கர்ணனைத் தான் பீமஸேனனுடையபின்புறத்தைஅடுத்து நிற்கவேண்டியதற்காக எதிர்த்து அடித்தான். பாரதரே! கர்ணன், பீமஸேனனுடைய ரதத்தை அடையக்கருதிய சினிகுலத்தில் பிறந்தவனான ஸாத்யகியை அம்புமழைகளால் அடித்துக்கொண்டு எதிர்த்தான். எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவர்களும்பெரியமனமுள்ளவர்களுமான அவ்விருவர்களும் ஒருவரையொருவர் எதிர்த்துத்தாக்கி ஜ்வலிக்கின்ற பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு விளங்கினார்கள். ராஜேந்திரரே! அவ்விருவர்களாலும் ஆகாயத்தில் பரப்பப்பட்டதும் பயங்கரமான காட்சியுள்ளதும் க்ரௌஞ்சபக்ஷியின் பின்புறம்போலச் சிவந்திருக்கின்றதுமான பாண ஸமூஹமானது பயங்கரமாகக் காணப்பட்டது. மன்னவரே! ஆயிரக்கணக்காகப் பிரயோகிக்கப்பட்ட பாணங்களால் நாங்களாவது அவர்களாவது சூரியனுடைய ஒளிகளையும் அவ்வாறே திக்குக்களையும் திக்கோணங்களையும் காணவில்லை. அரசரே! உச்சிப்பொழுதில் ஜ்வலிக்கின்ற சூரியனுடைய பெரிய ஒளிகள்முழுதும் அப்பொழுது கர்ணன் ஸாத்யகி இவர்களுடைய பாணஸமூகங்களால் கவரப்பட்டன. சகுனியும் கிருதவர்மாவும் அஸ்வத்தாமாவும் கர்ணனும் கிருபரும் பாண்டவர்களோடெதிர்த்திருப்பதைக்கண்டு மீண்டும் கௌரவர்கள் திரும்பினார்கள். மன்னவரே! வருகின்ற அந்தக் கௌரவர்களுடைய மிக்க ஒலியானது மழையினால் பெருகிவருகின்ற ஸமுத்திரங்களுடைய பயங்கரமான ஒலிபோலிருந்தது. அந்த இருதிறத்துச் சேனைகளும் மஹாயுத்தத்தில் ஒன்றை மற்றொன்று பார்த்து அதிக ஸந்தோஷத்தோடு கூடிய

வைகளாக ஒன்றை மற்றொன்று பற்றிப்பிடித்துக்கொண்டு மிக கலந்த யுத்தத்தைச்செய்தது. பிறகு, சூரியன் உச்சியிலிருக்குங் காலத்தில் யுத்தம் நடந்தது. இவ்விதயுத்தமானது இதற்குமுன் நடந்ததாக நம்மால் கேட்கப்பட்டதுமில்லை; பார்க்கப்பட்டதுமில்லை. நீர்ப்பெருக்கானது வேகத்தோடு சமுத்திரத்தை அடைவதுபோலச் சேனைக்கூட்டமானது யுத்தத்தில் விரைவாக எதிரியின் சேனைக்கூட்டத்தை எதிர்த்து அருகில் நெருங்கிற்று. ஒன்றோடொன்று மோதிக்கொள்கின்ற பாணஸமூகங்களுடைய மிகப்பெரிய சப்தமானது முழங்குகின்ற ஸமுத்திரக்கூட்டங்களுடைய பெரிய சப்தம் போலிருந்தது. அந்த இரண்டு சேனைகளும் வேகமுள்ளவைகளாக ஒன்றையொன்று தாக்கி ஸங்கமஸ்தலத்தில் இரண்டு நதிகள் கலந்தாற்போலக் கலந்தன. வேந்தரே! பிறகு, மிக்க பெரிதான கீர்த்தியை அடைய விரும்புகின்றவர்களான கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கோரரூபமான யுத்தமானது நடந்தது. பாரதரே! ராஜரே! அந்த யுத்தத்தில் பெயர்களைக்குறிப்பிட்டுக் கர்ஜிக்கின்ற சூரர்களுடைய தொடர்ச்சியாக உண்டுபண்ணப்பட்ட பற்பலவித வாக்குக்கள் கேட்கப்பட்டன. மாதாவினிடத்தினின்றாவது பிதாவினிடத்தினின்றாவது செய்கையினாலாவது சீலத்தினாலாவது எவனுக்கு எந்தத் தோஷம் ஸம்பவித்திருக்குமோ அந்தத் தோஷத்தை அவன் யுத்தத்தில் கேட்கும்படி அவனது பகைவன் செய்தான். அரசரே! யுத்தத்தில் ஒருவரையொருவர் வெருட்டுகின்றவர்களான அந்தச்சூரர்களைக் கண்டு 'இவர்களுக்கு இனி உயிர் இராது' என்று எனக்கு எண்ணமுண்டாயிற்று. கோபங்கொண்டவர்களும் அதிக தேஜஸையுடையவர்களுமான அந்த வீரர்களுடைய சரீரங்களைக்கண்டு 'இது எப்படியாகுமோ', என்று எனக்கு மிகுதியான பயமுண்டாயிற்று. அரசரே! பிறகு, மஹாரதர்களான அந்தப்பாண்டவர்களும் கௌரவர்களும் ஒருவரையொருவர் ஜயிக்கவிருப்பங்கொண்டு அம்புகளால் விரைவாக அடித்தார்கள்.

---

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

(ஸங்குல யுத்தம்)

மஹாராஜரே! பகையைச் செய்துகொண்டவர்களும் அதிக பராக்கிரமசாலிகளுமான அந்தஅரசர்கள் ஒருவரையொருவர் கொல்வதில் நோக்கமுள்ளவர்களாக யுத்தத்தில் அன்யோன்யம் அடித்துக்கொண்டார்கள். மஹாராஜரே! ரதிகர்களுடைய கூட்டங்களும்

குதிரைக்கூட்டங்களும் காலாட்களுடைய கூட்டங்களும் யானைக்கூட்டங்களும் நாற்புறங்களிலும் ஒன்றோடொன்று எதிர்த்தன. மிக்க பயங்கரமானயுத்தத்தில் கதைகளும் பரிகங்களும் சக்திகளும் ப்ராஸங்களும் பிண்டிபாலங்களும் முஸுண்டிகளும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு நான்குபக்கத்தினின்றும் விழுவதையும்கண்டோம். பாணவர்ஷங்கள் நான்கு பக்கத்தினின்றும் விட்டிற்பூச்சிகள்போல் வந்து விழுந்தன. யானைகள் யானைகளைத் தாக்கி ஒன்றையொன்று நாசஞ்செய்தன. ராஜரே! யுத்தத்தில் குதிரைகள் குதிரைகளையும், அவ்வாறே ரதிகர்கள் ரதிகர்களையும், காலாட்கள் காலாட்படைக் கூட்டங்களையும், காலாட்கள் குதிரைக்கூட்டங்களையும் ரதங்களையும் யானைகளையும், ரதங்கள் யானைகளையும் குதிரைகளையும், விரைவாகச்செல்லுகின்றயானைகள் ரதங்களையும் குதிரைகளையும் காலாட்களையும் யுத்தத்தில் அழித்தன. அந்தயுத்தத்தில் கொல்லப்படுகின்றவர்களும் கொல்லுகிறவர்களுடைய சப்தம் பசுக்கள்கதறுவதுபோலக் கதறுகின்றவர்களுமான சூரர்களுக்குப் பரஸ்பரம் கோரமானயுத்தம் உண்டாயிற்று. பாரதரே! ரத்தம் எல்லாப் பக்கத்திலும் பரவியிருக்கிற யுத்தபூமியானது மாரிக்காலத்தில் இந்திரகோபமென்னும் பூச்சிகளுடைய கூட்டங்களால் நிரம்பிய பூமிபோல் விளங்கியது. பொன்னால் அலங்கரிக்கப்பட்ட வெண்ணிறமான இரண்டு வஸ்திரங்களைத் தரித்தவளும் நடுயௌவனத்திலிருப்பவளுமான யுவதிபோல யுத்தபூமியானது பிரகாசித்தது. தங்கத்தினால்கட்டப்பட்ட சூடாமணிகளைத்தரித்தவைகளும் அழகியகுண்டலங்களையுடையவைகளும் தள்ளப்பட்டவைகளுமான வீரர்களுடையதலைகளால் யுத்தபூமியானது விளங்கியது. பரதஸ்ரேஷ்டரே! பூமியானது மாம்ஸரத்தத்தால் பூசப்பட்டதுபோலவும் ஸ்வர்ணத்தால் இழைக்கப்பட்டதுபோலவும் ஜ்வாலை அடங்கியிருக்கின்ற அக்னிகளால் வ்யாபிக்கப்பட்டதுபோலவும் பிரகாசித்தது. பாரதரே! அறுக்கப்பட்ட தலைகள், கைகள், தொடைகள், அணிந்துகொள்ளப்பட்ட குண்டலங்கள், ஆபரணங்கள், கண்டாபரணங்கள், பொன்அரைஞாண்கள், வில்லாளிகளுடைய சரீரங்கள், கேடகங்கள், கொடிகள் இவைகளின் கூட்டங்கள் அந்தயுத்த பூமியில் வீழ்ந்தன. நான்குபக்கத்திலும் அதிகச் சேறுள்ள யுத்த பூமியானது நெருங்குதற்கரிதாகத் தோற்றமுள்ளதாயிற்று. மஹாராஜரே! யானைகள் யானைகளை எதிர்த்துக் கொம்புகளால் துன்பஞ்செய்தன. அந்தயுத்தபூமியில் கொம்புநுனிகளாலே அடிக்கப்பட்ட சிறந்த யானைகள் மலையிலுள்ளதாதுக்களைப் பெருகவிடுவதுபோல ரக்தத்

தால் நன்குஙணைக்கபபட்ட மேனியுள்ளவைகளாக மழைககாலகதில மின்னலகளுடன்கூடின மேகஙகளபோலப் பிரகாசிககன. அவ்வாறே யுததத்தில இரததகதிலை நனைக்கபபட்டயானைகள் தாதுக்களால அலஙகரிக்கபபட்டவையும் ஜலப்பெருககுடன் கூடினவையுமான பர்வதஙகளைப்போல விளஙகின. யுததத்தில வேறுசில யானைகள் யானைவீராகளால பிரயோகிககபபட்டவைகளும் மகதகததுக்குக் கீழே பாயந்திருப்பவைகளுமான அனேகதோமராயுதஙகளைக துதிக்கைகளால பிடுங்கி அவைகளை முறிககன. அரசரே! நாராசஙகளால கவசஙகள் உடைக்கபபட்ட உககமகஜஙகள் பனிர்காலகதில மேகமிலலாதவைகளான மலைகள்போல விளஙகின பாரதரே! பொன்னாலாகிய புஙகமுள்ள அம்புகளால நிரப்பப்பட்ட சிறநதயானைகள கொள்ளிக்கட்டைகளால ஜவலிக்கினற சிகரஙகளையுடைய மலைகள் போல விளஙகின. பெரியமலைகளுக்கொப்பான சிலயானைகள யானைகளாலஅடிக்கப்பட்டுச் சிறகுகளறுக்கபபட்ட மலைகள்போல அநதயுததத்தினின்று நகரவிலலை. வேறுசிலயானைகள பாணஙகளாலபீடிககப்பட்டும் காயஙகளால துன்புறுததபபட்டும் (யுததததைவிட்டு) விரைவாக ஓடின. மறறும்சிலயானைகள மஹாயுத்ததகில மககககதின் கீழ்ப்புறங்களாலும் மகதகஙகளாலும் பூமியிலவிழுந்தன. மறறயானைகள் ஸிம்மஙகள்போலப் பயஙகரமான சப்தஙகளை வெளிப்படுத்திக்கொண்டு விழுநதன. அரசரே! அனேகயானைகள இரத்தததைக் கக்கின. சில யானைகள் அலறின ஸவர்ணாலஙகாரஙகளால அலஙகரிக்கப்பட்ட குதிரைகள பாணஙகளால அடிக்கபபட்டு (அசைவறறு) நின்றன; வாட்டததையும அடைநதன; பத்துதிசைகளிலும் சுறறிவந்தன மறறக்குதிரைகள் துயரததை அடைவிக்கப்பட்டவைகளாகப் பூமியில விழுநது புரண்டன அம்புகளாலும் தோமரஙகளாலும் அடிககப்பட்டவர்கள் பலவித எண்ணஙகளை வெளியிட்டார்கள். ஐயா! மெதுவாக அலறுகின்ற மனிதாகளோ அநதயுததபூமியில கொலலபபட்டாாகள பாரதரே! சிலர் பந்துக்களைப்பார்த்தும் மறறவர்கள் தந்தையர்களையும் பாட்டன்மாாகளையும் பாாததும் வேறுசிலர் ஓடுகின்றபகைவர்களைப்பார்ததும் பிரஸித்தமானகோத்ரஙகளையும் பெயர்களையும் ஒருவரோடொருவர் புகழ்ந்துபேசினார்கள். மஹாராஜரே! அறுக்கபபட்டவைகளும் பொன்னாலாகிய பூஷணஙகளணிந்தவைகளுமான அவர்களுடைய கைகள் ததிததககுதிபபுரண்டன; தரையிலேயே புரண்டன; சுழன்றன, மேலே துள்ளின. அவவாறே ஆயிரக்கணக்காக மறறக்கைகள வீழ்ந்தன, துடிததன;

வேறு சில கைகள் ஐந்துதலை நாகங்கள்போல யுத்தத்தில் வேகத்தை வெளியிட்டன. மன்னரே! ஸர்ப்பங்களுடைய உடல்கள்போலப் பிரகாசிக்கின்றவைகளும் சந்தனத்தினால் பூசப்பட்டவைகளும் இரத்தத்தால் நனைந்திருப்பவைகளுமான அந்தக்கைகள் ஸ்வர்ணத்வஜங்கள் போல் மிகவும் பிரகாசித்தன. எல்லாத்திக்குக்களிலும் கோரமான ஸங்குலயுத்தமானது அவ்வாறு நடக்கும்போது (சூரர்கள்) அறியப்படாதவர்களாகி ஒருவரையொருவர் பிடித்துக்கொண்டு போர்புரிகிறார்கள். அரசரே! பூமியிலுண்டான புழுதியினாலே நான்கு பக்கத்திலும் வ்யாபிக்கப்பட்டதும் சஸ்திரங்களுடைய வீழ்ச்சிகளால் நெருங்கியதுமான இருளால் மூடப்பட்டு நம்மைச் சேர்ந்தவர்களும் பிறர்களும் அறியப்படவில்லை. அந்த யுத்தமானது அவ்விதம் கொடியகாட்சியுள்ளதாகவும் பயங்கரமாகவும் இருந்தது. அந்த யுத்தத்தில் அடிக்கடி குருதிவெள்ளம்நிரம்பிய பேராறுகள் பெருகின. வீரர்கள் அந்த யுத்தத்தில் தலைகளாகிற கற்களால் நன்றாக மூடப்பட்டவைகளும் மயிர்களாகிற பாசிக்கொத்துக்களுடனும் புலதரைகளுடனுங் கூடியவைகளும் எலும்புகளாகிற மீன்களால் நன்றாக வ்யாபிக்கப்பட்டவைகளும் விற்களும் அம்புகளும் கதைகளுமாகிற தெப்பங்களுடன் கூடியவைகளும் மாம்ஸங்களும் ரக்தங்களுமாகிற சேறுள்ளவைகளும் கோரரூபத்துடன் கூடியவைகளும் மிகபயங்கரமாயிருப்பவைகளும் இரத்தவெள்ளத்தால் விருத்தியடைந்துகொண்டிருப்பவைகளுமான நதிகளை உண்டு பண்ணினார்கள். பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணுகின்றவைகளும் சூரர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்தி பண்ணுகின்றவைகளும் கோரரூபமாயிருப்பவைகளும் எல்லாப் பிராணிகளையும் யமனுடையவீட்டை அடையச்செய்கின்றவைகளும் விழுந்தவர்களை அமிழ்த்துகின்றவைகளுமான அந்தநதிகள் க்ஷத்ரிய ஸமூகத்திற்குப் பயத்தை உண்டுபண்ணின. புருஷஸ்ரேஷ்டரே! அங்காங்கு சத்துநின்ற கொடியவிலங்குகளின் சப்தமும் பயத்தை உண்டுபண்ணியது. யுத்தபூமியானது யமனுடைய பட்டணத்துக்கொப்பாகக் கோரமாயிற்று. நான்குபக்கத்திலும் எண்ணிறந்த தலையில்லா முண்டங்கள் எழுந்தன. பூதகணங்கள் மாம்ஸங்களாலும் ரக்தங்களாலும் நன்றாகத்திருப்தியடைந்து கூத்தாடின. பாரதரே! அவ்வாறே காக்கைகளும் கழுகுகளும் கொக்குக்களும் அந்த யுத்தரங்கத்தில் இரத்தத்தைக்குடித்தும் ஊனீரைப்பருகியும் கொழுப்பினாலும் மஜ்ஜையினாலும் ஊனீரினாலும் மதங்கொண்டு மாம்ஸத்தி

ளுல் திருப்தியடைந்தவைகளாகவும் ஓடுகின்றவைகளாகவும் காணப்பட்டன. அரசரே! யுத்தவிரதத்தில் பிரஸித்தி பெற்றவர்களான சூரர்களோ எவ்விதத்தாலும் விடமுடியாத பயத்தை யுத்தத்தில் விட்டுப் பயமற்றவர்கள்போலக் கார்யங்களைச் செய்தார்கள். அம்புகளாலும் சக்திகளாலும் எல்லாப்பக்கத்திலும் வயாபிக்கப்பட்டதும் மாம்ஸத்தைப்புஜிக்கும் ஜந்துக்களுடையகூட்டங்களாலநெருங்கியதுமான யுத்தத்தில் சூரர்கள் தம்ஆண்மையை வெளிப்படுத்திக்கொண்டு ஸஞ்சரித்தார்கள். பாரதரே! பிரபுவே! வீரர்கள் பாணங்களில் பேர்களையும் குலங்களையும் பிதிர்க்களுடைய நாமதேயங்களையும் கோத்திரப்பெயர்களையும் யுத்தத்தில் கேட்கும்படி செய்தார்கள். அரசரே! அந்த யுத்தரங்கத்தில் அனேகயுத்தவீரர்கள் தத்தம் பிரஸித்தியாய் பகைவர் கேட்கும்படி சொல்லிக்கொண்டு சக்திகளாலும் தோமரங்களாலும் பட்டஸங்களாலும் அன்யோன்யம் அடித்துக்கொண்டார்கள். அவ்வாறு கோரரூபமுள்ளதும் மிக்க பயங்கரமுமான யுத்தமானது நடந்துவரும்பொழுது கௌரவஸேனையானது கடலில் உடைபட்ட மரக்கலம்போலத் துயரத்தை அடைந்தது.

---

## நாற்பத்தேட்டாவது அத்யாயம

(அர்ஜுனனுக்கு ஸம்சப்தகர்களோடு யுத்தம்.)

ஐயா! க்ஷத்திரியர்களை அழிக்கின்றதான யுத்தம் அவ்வாறு நடந்துவரும்பொழுது, காண்டீவத்தினுடைய பேரொலியானது யுத்தத்தில் கேட்கப்பட்டது. அரசரே! அந்தயுத்தத்தில் பாண்டவன் ஸம்சப்தகர்களுக்கும் கோஸலர்களுக்கும் அவ்வாறே நாராயணஸேனைக்கும் துன்பத்தை உண்டுபண்ணினான். யுத்தத்தில் ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான ஸம்சப்தகர்களோ அதிகோபங்கொண்டவர்களாகிப் பார்த்தனுடைய முடியின்மீது நான்கு பக்கங்களினின்றும் சரமாரியைப் பொழிந்தார்கள். பிரபுவான பார்த்தன் வருகின்ற அந்தச் சரமாரியை மார்பினால் தாங்கிக்கொண்டும் ரதிகர்களுள் சிறந்தவர்களை அடித்துக்கொண்டும் பகைவர்களுடைய மத்தியில் பிரவேசித்தான். பார்த்தன் கூர்மையில் தீட்டப்பட்டவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளுமான அம்புகளால் சேனையைக் கலக்கியபிறகு, மஹாரதனான ஸுசர்மாவை எதிர்த்தான். ரதிகர்களுள் சிறந்தவனான அந்தபார்த்தன் அந்த ஸுசர்மாவின்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். அவ்வாறே யுத்தத்தில் சிறக்கின்ற ஸம்சப்தகர்களும்

பார்த்தன்மீது சரமாரிகளைப் பொழிந்தார்கள். பிறகு, ஸுசர்மாவோ பத்துப்பாணங்களால் பார்த்தனை அடித்து மூன்று பாணங்களால் ஜனார்த்தனரை வலக்கையில் அடித்தான். ஐயா! அரசரே! பிறகு, ஸுசர்மா கோபம்மூண்டவனாக வேறொருபல்லத்தினால் பார்த்தனுடைய கொடியை யுத்தக்தில் அடித்தான். மன்னரே! விஸ்வகர்மாவினால் உண்டுபண்ணப்பட்டதும் பெரிதுமான அந்தச் சிறந்த வானரமானது கர்ச்சனம் செய்கின்றதுபோலப் பயமுறுத்திக்கொண்டு மிக்க உரத்த நாதத்துடன் சப்தித்தது. வானரத்தினுடைய சப்தத்தைக் கேட்டு உம்முடைய சேனையானது நடுக்க முற்றது; அதிக பயத்தை யடைந்து அசைவற்றதாகியது. வேந்தரே! பிறகு, அசைவற்றுநிற்கின்ற அந்தச் சேனையானது பற்பல புஷ்பங்களால் நன்றாக நிரம்பி விசித்திரமாகச் செய்யப்பட்ட வனம்போல விளங்கியது. குருஸ்ரேஷ்டரே! பிறகு, அந்த யுத்தவீரர்கள் பிரஜ்ஞையை அடைந்து மேகங்கள்(ஜலத்தால்) பர்வதத்தை நனைப்பதுபோல அம்புகளால் அர்ஜுனனை நனைத்தார்கள். அவர்கள் யுத்தத்தில் பார்த்தனை மூடிக்கொண்டு நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். ஐயா! அவர்கள் கோபத்தால் மூடப்பட்டவர்களாக நான்கு பக்கத்திலும் (அர்ஜுனனுடைய) குதிரைகளையும் தேருருளைகளையும் தேரின் ஏர்க்காலையும் பிடிப்பதற்கு ஆரம்பித்தார்கள். ஆயிரக்கணக்கான அந்த யுத்தவீரர்கள் அளவு கடந்த பராக்கிரமத்தையுடைய அந்த அர்ஜுனனுடைய ரதத்தைத்தடுத்து அந்த ரதத்தை அசையாமல் செய்தார்கள். ஸம்சப்தகர்களைச் சேர்ந்த சில யுத்தவீரர்கள் கிருஷ்ணனையும் பார்த்தனையும் பிடிக்க விரும்பி ரதத்தின்மீது ஏறினார்கள்; ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். சிலர் கேசவருடைய இரண்டு பெரிய கைகளையும் பிடித்துக்கொண்டார்கள். மஹாராஜரே! சிலர் ரதத்தின்மீதுள்ள பார்த்தனை ஸந்தோஷத்தோடு பிடித்துக்கொண்டார்கள். மிக்க தோள்வலிமையுள்ள அந்த அச்சுதர் யுத்த முனையில் கைகளை உதறுகின்றவராகித் துஷ்ட கஜமானது மாவுத்தர்களைத் தள்ளுவதுபோல அந்த ஸம்சப்தகவீரர்களனைவரையும் தள்ளினார். அரசரே! அந்த ஸம்சப்தகவீரர்களாலே பிடிக்கப்பட்ட மஹாத்மாவான பாண்டவனுடைய ரதமானது அசைவதற்குச் சக்தியற்றதாகியது. அது ஆச்சர்யம்போலிருந்தது. பிறகு, அந்த மஹாரதர்களால் சூழப்பட்டவனை மிக்க பாகுபலமுள்ள பார்த்தன் தடுக்கப்பட்டிருக்கிற ரதத்தையும் எதிர்த்து ஓடிவருகின்ற அந்தப் பலவீரர்களையும் ரதத்தின்மீதேறியிருக்கின்ற அனேக வீரர்களையும் காலால்

உதைத்துத் தள்ளினான். சத்ருபட்டணங்களை ஜயிப்பவனும் மிக்க தோள்வலியமைந்தவனுமான பார்த்தன் மனங்கலங்காமல் அவர்களைக் கீழே தள்ளி ஸமீபத்திலிருப்பவர்களை அடிக்கும் திறமையுள்ள அம்புகளால் அவர்களைத் தவிக்கச் செய்துவிட்டுப் புன்னகையுடன் கேசவனைப் பார்த்து, 'கிருஷ்ண! மஹாபாஹுபலமுள்ளவரே! எவ்விதத்தினாலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்கின்றவர்களும் மரிக்கப்போகின்றவர்களும் என்னால் நாசமடைவிக்கப்பட்டவர்களும் அனேகர்களுமான ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களைப் பாரும். உலகத்தில் இப்படிப்பட்ட ரதவேகத்தை அடைந்து தாங்கக்கூடிய க்ஷத்திரிய ஶ்ரேஷ்டன் பூமியில் என்னைத் தவிர வேறொருவனுமில்லை. கோவிந்தரே! போரில் என்னால் பிரயோகிக்கப்படுகின்றவைகளும் நன்றாகத் தீட்டப்பட்டவைகளும் ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளுமான அம்புகளாலே யுத்த பூமியில் விழும்படி செய்யப்படுகின்ற இவர்களை இப்பொழுது பாரும்' என்று சொன்னான். அளவிட முடியாத பலமுள்ள அர்ஜுனன், இவ்வாறு சொல்லிவிட்டு மஹாயுத்தத்தில் தேவதத்தமென்கிற உத்தமமான சிறந்த சங்கத்தை முழக்கினான். மிக்க புகழுள்ளவரான கேசவரும் தேவதத்தத்தினுடைய ஒலியைக்கேட்டு ஆகாயத்தையும் பூமியையும் நிரப்புகிறவர்போலப் பாஞ்சஜன்யத்தை முழக்கினார்., மஹாராஜரே! ஸம்சப்தகர்களுடைய சேனையானது அவ்விருவர்களுடைய சங்கத்வனியையும் கேட்டு ப்ரக்ருதியும் நிலைதவறியது; மிகப்பயந்தும் ஓடியது பிறகு, மஹாஸ்திரங்களை அறிந்தவனான அந்தப்பார்த்தன் சிரித்துக்கொண்டு நாகாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து அந்த அஸ்திரத்தினால் அவர்களுடைய கால்களைக் கட்டிவிட்டான். பார்த்தன் யுத்தத்தில் அவர்களை உத்தேசித்துக் கால்களைக் கட்டினவுடனே அந்த ஸம்சப்தக யுத்தவீரர்கள் அப்பொழுது அந்தக்கால்கட்டுக்களால் கட்டப்பட்டார்கள். அவர்கள், பாண்டவனுடைய அஸ்திரதேஜஸினால் அப்பொழுது அசைவற்றவர்களானார்கள். பாண்டுநந்தனன், பிறகு, அசைவற்றவர்களான யுத்தவீரர்களை முற்காலத்தில் இந்திரன் தாரகாஸுரனை வதஞ்செய்வதற்காக ஏற்பட்ட யுத்தத்தில் அஸுரர்களைக் கொன்றதுபோலக் கொன்றான். யுத்தத்தில் வதம்செய்யப்படுகின்ற அந்த வீரர்கள் அந்தஉத்தமரதத்தை விட்டுவிட்டார்கள்; எல்லா ஆயுதங்களையும் பிரயோகிக்க ஆரம்பித்தார்கள். ராஜேந்திரரே! பிறகு, மஹாரதனான ஸுசர்மா கட்டப்பட்டிருக்கிற ஸேனையைக்கண்டு விரைவானகாருடாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அரசரே! பிறகு, கருடன்கள்

ஸர்ப்பங்களைப் பக்ஷிக்க வந்தன. ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற அந்தக் கருடன்களைக்கண்டு பிறகு ஸர்ப்பங்கள் ஓடிவிட்டன. அரசரே! பாத பந்தத்தினின்று விடுபட்ட அந்தச்சேனையானது மேகபந்தத்தினின்று விடுபட்டுப் பிரஜைகளைத் தபிக்கச் செய்கின்ற சூரியன்போலப் பிரகாசித்தது. பெரியவரே! நாகபந்தத்தினின்று விடுப்பட்டவர்களான நம்மைச்சேர்ந்த யுத்தவீரர்கள் பல்குணனுடைய ரதத்தைக் குறித்துப் பாணசமூகங்களையும் சஸ்திரசமூகங்களையும் பிரயோகித்தார்கள். பாரதரே! பகைவீரர்களைக் கொல்பவனான அந்த இந்திரகுமாரன் மஹாஸ்திரமயமான அந்த மழையை அம்புகளால் அழித்துப் பிறகு யுத்தவீரர்களைக் கொன்றான். ராஜரே! பிறகு, ஸுசர்மாவோ வணங்கின கணுக்களுள்ள அம்பினால் அர்ஜுனனை மார்பிலடித்து வேறு இருபத்தொரு பாணங்களாலும் அடித்தான். நன்றாக அடிக்கப்பட்ட அந்த அர்ஜுனனானவன் துன்பமுற்றுத் தேர்நடுவில் உட்கார்ந்தான். பிறகு, எல்லோரும் பார்த்தன் கொல்லப்பட்டானென்று சொல்லிக்கொண்டு பெருங்கூச்சலிட்டார்கள். பிறகு, சங்கங்களுடையமுழக்கங்களும் கம்பீரமான பேரிகைமுழக்கங்களும் பற்பலவித வாத்யகோஷங்களும் ஸிம்மநாதங்களும் தோன்றின. மஹாராஜரே! பிறகு, ஸர்ப்பங்களுக்கொப்பான பாணங்களாலே நன்றாக அடிக்கப்பட்டவனும் பெரிய வில்லைக் கையிற் பிடித்தவனும் மஹாரதனும் மஹாஸ்திரங்களை அறிந்தவனும் கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் ச்வேதவாஹனனுமான அந்தப் பார்த்தன் ப்ரஜ்ஞையையடைந்து கோபத்தால் மூடப்பட்டவனாகி யுத்தத்தில் அந்தஸுசர்மாவை ஒருக்ஷணத்துக்குள் அநேக அம்புகளால் மூடித் திக்குக்களையும் பாணங்களால் மறைத்தான். அளவிட முடியாத பராக்கிரமமுள்ளதனஞ்சயன் யுத்தத்தில் ஸுசர்மாவைத் திரும்பியோடச்செய்து நகைத்துக்கொண்டு ஐந்திராஸ்திரத்தை வெளிப்படுத்தினான். ஐயா! பிறகு, அவனால் விடப்பட்ட ஆயிரம் பாணங்கள் எல்லாத் திக்குக்களிலும் காணப்பட்டன; ரதங்களையும் யானைகளையும் நாசஞ்செய்தன. அரசரே! இந்திரன் யுத்தத்தில் அஸுரர்களைக்கொல்வதுபோல அர்ஜுனன் யுத்தத்தில் லக்ஷக்கணக்கான குதிரைகளையும் காலாட்களையும் சஸ்திரங்களால் கொன்றுகொண்டு விளங்கினான். பாரதரே! பிறகு, சேனையானது கொல்லப்படும்பொழுது ஸம்சப்தர்களுடைய கூட்டங்களையும் கோபாலர்களையும் மிக்கபெரிதான பயம் வந்து அடைந்தது. அந்தயுத்தத்தில் அர்ஜுனனைத் தெரிந்துகொள்ளக்கூடிய மனிதன் ஒருவனுமில்லை. அந்தயுத்

கத்தில் வீரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உம்முடைய சேனையானது கொல்லப்பட்டது. கொல்லப்படுகின்ற அந்தப்படையானது பராக்கிரமத்தை வெளியிடவேண்டும் தருணத்தில் (கைகால்) அசைவற்றுகின்றது. மஹாராஜரே! பாண்டுபுத்திரன் அந்தயுத்தத்தில் பதினாயிரம் யுத்தவீரர்களைக்கொன்று புகையில்லாமலிருக்கிற அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு பிரகாசித்தான். பாரதரே! (அர்ஜுனன்) பதினாலாயிரம்வீரர்களையும் பதினாயிரம்ரதிகர்களையும் மூவாயிரம்யானைகளையும் (கொன்றான்). பிறகு, ஸம்சப்தர்கள்மரணத்தையோ அல்லது ஜயத்தையோ நிச்சயமாகக்கொண்டு மறுபடியும் தனஞ்சயனைச் சூழ்ந்துகொண்டார்கள். மன்னவரே! அச்சமயத்தில் உம்மைச்சேர்ந்தவீரர்களுக்குச் சூரனும் பலசாலியும் பாண்டுபுத்திரனுமான கிரீடியோடு பெரும்போர் நடந்தது. பார்த்தன், இந்திரன் அஸுரர்களை ஜயித்ததுபோல அந்தச் சத்துருக்களைஜயித்து நாசஞ்செய்தான்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

### (ஸங்குலயுத்தம்.)

ஐயா! கிருதவர்மா, கிருபர், அச்வத்தாமா, கர்ணன், உலூகன், சகுனி, ஸஹோதரர்களுடன்கூடின துர்யோதனராஜன் ஆகிய இவர்கள் பாண்டுபுத்திரனிடத்தினின்று உண்டானபயத்தினால் பீடிக்கப்பட்டுக் கடலில்உடைக்கப்பட்ட மரக்கலம்போல் ஆபத்திலகப்பட்டு வருந்துகின்ற சேனையைக்கண்டு வேகத்தோடு மீட்பதற்கு முயன்றார்கள். பாரதரே! பிறகு, பயப்படுகின்றவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகின்றதும் சூரர்களுக்கு உத்ஸாஹத்தைவிருத்திபண்ணுகின்றதுமான யுத்தமானது முஹூர்த்தகாலம் அத்புதமாக நடந்தது. யுத்தத்தில் கிருபரால் பிரயோகிக்கப்படும் அம்புமழைகள் விட்டிற்பூச்சிகளுடைய கூட்டங்கள்போல ஸ்ருஞ்சயர்களை மூடின. பிறகு, கோபங்கொண்ட சிகண்டியும் விரைவுடன் கிருபரை எதிர்த்துச் சென்று பிராம்மணோத்தமரான அவர்மீது நான்குபக்கத்திலும் அம்புமழைகளைப் பொழிந்தான். மஹாஸ்திரங்களை அறிந்தவரான கிருபரோ யுத்தத்தில் கோபங்கொண்டு அந்தச்சரமாரியை நாசஞ்செய்து பத்துப்பாணங்களால் சிகண்டியை அடித்தார். பிறகு, சிகண்டி கோபமூண்டு கழுகிறகுகள் பூண்டவைகளும் நேராகச் செல்லுகின்றவைகளுமான பாணங்களால் கோபங்கொண்ட

வரான கிருபரை யுத்தத்தில் அடித்தான். பிறகு, கூர்மையுள்ள அம்புகளால் அதிகமாக அடிக்கப்பட்டவரும் மஹாரதரும் பிராம் மணருமான அந்தக்கிருபர் நன்றாகத்தீட்டப்பட்டவைகளும் கூர்மை யுள்ளவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான க்ஷு ரப்ரங்களாலே சிகண்டியைக் குதிரைகளையும் ஸாரதியையும் தேரை யும் இழந்தவனாகச் செய்தார். பிறகு, மஹாரதனான சிகண்டி குதிரை கள் கொல்லப்பட்ட ரதத்தினின்று துள்ளிக்குதித்துக் கத்தியையும் கேடகத்தையும் கையிலெடுத்து விரைவுடன் பிராம்மணரை எதிர்த் துச்சென்றான். அந்தச்சிகண்டியைக் கிருபர் படிந்த கணுக்களுள்ள பாணங்களாலே யுத்தத்தில் விரைவாகத் தடுத்தார். அது ஆச்சரியமா யிருந்தது. வேந்தரே! அந்தயுத்தத்தில் சிகண்டி அசைவற்று நின்ற தைக் கற்கள் மிதப்பதைப்போல ஆச்சரியமாகக் கண்டோம். அரசரே! மஹாரதனான த்ருஷ்டத்யும்னன், கிருபராலே சிகண்டி தடுக்கப்பட்டதைக்கண்டு கிருபரை விரைவாக எதிர்த்தான். பிறகு மஹாரதனான கிருதவர்மா, க்ருபருடைய ரதத்தைக்குறித்துச்செல்லு கின்ற த்ருஷ்டத்யும்னனை வேகத்தோடு எதிர்த்தான். பிறகு, புத்தி ரர்களோடும் ஸைன்யங்களோடும் கிருபருடைய ரதத்தைக்குறித்து எதிர்த்துவருகின்ற யுதிஷ்டிரரைக் துரோணபுத்திரர் தடுத்தார். விரைவுள்ள மஹாரதர்களான நகுலஸஹதேவர்களை உம்முடைய புத்திரன் சாமாரியினால் தடுத்துக்கொண்டு எதிர்த்தான். பாரதரே! சூரியகுமாரனான கர்ணன், பீமஸேனனையும் கரூசர்களையும் ஸ்ருஞ் சயர்களுடன்கூடின கேகயர்களையும் யுத்தத்தில் தடுத்தான். பிறகு சாரத்வதரான கிருபர் விரைவுடன் பீபத்ஸுவினுடைய அருகில் சிகண்டியின்மீது யுத்தத்தில் பாணங்களைப் பிரயோகித்தார். பார தரே! அந்தக் கிருபரால் பிரயோகிக்கப்பட்டவைகளும் நான்கு பக்கத்திலும் ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான அந்த அம்புகளைச் சிகண்டியானவன் அடிக்கடி நான்கு பக்கத் திலும் கத்தியைச் சுழற்றி வெட்டினான். பாரதரே! கௌதமர் அந்தச் சிகண்டியினுடைய நூறுசந்திரப்பிரதிமைகளுள்ள கேட கத்தை அம்புகளால் விரைவாக நாசஞ்செய்தார். பிறகு, ஜனங் கள் பெருங்கூச்சலிட்டனர். மஹாராஜரே! கேடகத்தை இழந்தவ னான சிகண்டி கத்தியைக் கையிற்கொண்டு பக்கத்தில் விரைவாகச் சென்றான். கிருபர் விரைவில்வருகின்ற அந்தச்சிகண்டியைப் பாண ஸமூகங்களால் துன்பமுறும்படி செய்தார். அரசரே! மஹாபல சாலியும் சித்திரகேதுவினுடைய குமாரனுமான ஸுகேதுவானவன்

விரைவுள்ளவனாகி, சாரத்வதருடைய அம்புகளால் மூடப்பட்டுக் கிலேசத்தை அடைவிக்கப்பட்ட சிகண்டியை நோக்கிச் சென்றான். அளவுகடங்க, மனோதைரியத்துடன் கூடின அந்த ஸுகேது யுத்தத்தில் கூர்மையுள்ள அனேகபாணங்களைப் பிராம்மணர்மீது இறைத்துக்கொண்டு அவருடைய ரதத்தைநோக்கி எதிர்த்துவந்தான். ராஜஸ்ரேஷ்டரே! சிகண்டி, ஸுகேது எதிர்த்திருப்பதையும் பிராம்மணரானகிருபர் தடுக்கப்பட்டதையும் பார்த்துப் பிறகு விரைவாக விலகிச்சென்றான். மன்னரே! பிறகு, ஸுகேதுவோ கிருபரை ஒன்பது பாணங்களால் அடித்து மறுபடியும் அவரை எழுபத்துமூன்று பாணங்களால் அடித்தான். பெரியவரே! பிறகு, ஸுகேது இந்தக் கிருபருடைய அம்புகளுடன்கூடினவில்லைவெட்டி மறுபடியும் அவருடைய ஸாரதியை ஓர் அம்பினால் மர்மஸ்தானங்களில் அதிகமாக அடித்தான். பிறகு, கௌதமரோ கோபங்கொண்டு புதிதும் திடமுமான வில்லையெடுத்து முப்பதுபாணங்களால் ஸுகேதுவை எல்லா மர்மஸ்தானங்களிலும் அடித்தார். அந்த ஸுகேது எல்லா அங்கங்களும் தளர்ந்தவனாகி அசையாமலிருக்கிற மரமானது பூகம்பத்தில் மிக அசைவதுபோல உத்தமமானரதத்தில் அசைந்தான். நிலைகுலைந்தவனான அந்த ஸுகேதுவினுடைய சரீரத்தினின்று ஜ்வலிக்கின்ற குண்டலங்களுடன் கூடியதும் தலைப்பாகையைத் தரித்ததும் சிரஸை ரக்ஷிக்கின்ற ஸாதனங்களுடன் கூடினதுமான தலையை ஒரு க்ஷுரப்ரத்தினால் தள்ளினார். அந்தத் தலையானது கழுகினால் கொத்திக் கொண்டுபோகப்பட்ட மாம்ஸம்போலப் புமியில் விழுந்தது. பிறகு, அவனுடைய உடலானது தலைவிழுந்த பிறகு பூமியில் விழுந்தது. மஹாராஜரே! அந்த ஸுகேது கொல்லப்பட்டவுடனே, அனுஸரித்துவந்த அவனுடைய புத்திரர்கள் யுத்தத்தில் கிருபரை விட்டுவிட்டுப் பத்துத்திசைகளிலும் ஓடினார்கள். பாரதரே! மஹாரதனான கிருதவர்மா யுத்தத்தில் த்ருஷ்டத்யும்னனைத் தடுத்துத் தைரியமுள்ளவனாக, 'நில்; நில்.' என்றுசொன்னான். அரசரே! மாம்ஸத்துக்காகக் கோபங்கொண்ட இரண்டு கழுகுகளுக்கு யுத்தம் நேர்வதுபோலப் போர்க்களத்தில் த்ருஷ்டத்யும்னனுக்கும் கிருதவர்மாவுக்கும் கைகலந்தயுத்தம் நேர்ந்தது. த்ருஷ்டத்யும்னனோ கோபங்கொண்டு ஹ்ருதிகனுடைய குமாரனான கிருதவர்மாவை யுத்தத்தில் துன்பமடையும்படி ஒன்பதுபாணங்களால் மார்பில்அடித்தான். கிருதவர்மாவோ யுத்தத்தில் பார்ஷதனால நன்றாக அடிக்கப்பட்டு ரதத்தையும் குதிரைகளையுமுடைய பார்ஷதனை அம்பு

களால் மூடினான். வேந்தரே! ஜலத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற மேகங்களாலே நான்குபக்கத்திலும் மூடப்பட்ட சூரியன் போல அம்புகளால் மூடப்பட்ட ரதத்துடன்கூடிய த்ருஷ்டத்யும்னன் காணப்படவில்லை. மன்னரே! (ஆயுதங்களால்) உண்டு பண்ணப்பட்ட காயங்களையுடைய த்ருஷ்டத்யும்னன் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட அம்புகளாலே அந்தப் பாணஸமூகத்தைச் சிதற அடித்து யுத்தத்தில் பிரகாசித்தான். பிறகு, ஸேனாதிபதியான அவன் கோபங்கொண்டு கிருதவர்மாவை அணுகி மிக்க பயங்கரமான அம்புமழையைப் பிரயோகித்தான். ஹார்த்திக்யன் விரைவாக வருகின்ற மிக்க பயங்கரமான அந்தச் சரமாரியை அநேக ஆயிரக்கணக்கான அம்புகளால் யுத்தத்தில் தடுத்தான். பார்ஷதன் அணுக முடியாத சரமாரியானது யுத்தத்தில் (கிருதவர்மாவினால்) தடுக்கப்பட்டதைக்கண்டு அவனை நெருங்கித் தடுத்தான். த்ருஷ்டத்யும்னன் கத்தியையும் கேடகத்தையும் கையில் கொண்டு அவன் ரதத்தில் துள்ளிக் குதித்தான். பிறகு, குதிரைகள் ஒன்று சேர்ந்து பார்ஷதனும் பக்கத்தில் நெருங்கவே, அந்தப் பார்ஷதனுடைய முந்தினசெய்கையைக்கண்டு க்ருதவர்மா விரைவாகக் கதையைக் கையில் எடுத்தான். புரசரே! பிறகு, கதையைக் கையில்கொண்டவனை அவன் ரதத்தினின்று விரைவாகத் துள்ளிக்குதித்து ரதமத்தியில் பார்ஷதனைக்காணாமல் ஸாரதியை நன்றாக அடித்தான். கூர்மையான முனையுள்ள கத்தியினால் வெட்டப்பட்ட அந்தஸாரதியானவன் ரதத்தினின்று கீழேவிழுந்தான். பிறகு, கிருதவர்மா ஸந்தோஷமடைந்து தலத்வனியை உண்டுபண்ணினான். ராஜரே! பார்ஷதனைப்பார்த்து மறுபடியும்மறுபடியும், 'வா;வா' என்றும் சொன்னான். அந்தப் பார்ஷதன் யுத்தத்தில் கிருதவர்மாவினால் உண்டு பண்ணப்பட்ட அந்தத் தலத்வனியைப் பொறுக்கவில்லை. அவன் அந்தத்தேரினின்றுகிளம்பி மறுபடியும் தன் ரதத்தை நவந்தடைந்தான். அந்தத்ருஷ்டத்யும்னனே அந்தக்கிருதவர்மாவை எதிர்த்து, 'நில்; நில்' என்றும் சொன்னான். அரசரே! பிறகு, த்ருஷ்டத்யும்னன் கதையைக் கையிலெடுத்து மஹா வில்லாளியான கிருதவர்மாவை மறுபடியும் வேகத்தால் விரைவாக அடித்தான். பலசாலியான த்ருஷ்டத்யும்னனால் அதிகமாக அடிக்கப்பட்ட அந்தக்கிருதவர்மா மூர்ச்சையடைந்து கீழே விழுந்தான். அந்தக் கிருதவர்மாவை ஸ்ருதர்வாவானவன் ரதத்தின்

* அதிக பாடத்தில் அரை ஸ்லோகம் விடப்பட்டது.

மீதேற்றி வைத்துக்கொண்டு யுத்தரங்கத்தை விட்டுவிட்டு விலகிச்சென்றான். மஹாராஜரே! த்ருஷ்டத்யும்னனோ யுத்தத்தில் சத்ருருவைக்கண்டு கௌரவர்களை யுத்தத்தில் அம்புகளால் விரைவாகத் தடுத்தான். பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களான அந்த யுத்த வீரர்கள் த்ருஷ்டத்யும்னனுடைய அருகில் விரைவாகச் சென்றார்கள்; ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். பிறகு, யுத்தம் நடந்தது.

---

## ஐம்பதாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தமும், அச்வத்தாமாவனால் யுதிஷ்டிரர் தோற்றதும்.)

**ஸா**தயகியாலும் அவ்வாறே சூரர்களான த்ரௌபதீபுத்திரர்களாலும் யுதிஷ்டிரர் நான்குபக்கங்களிலும் பாதுகாக்கப் பட்டிருப்பதைக்கண்டு த்ரோணபுத்திரர் ஸந்தோஷமுள்ளவர்போல (அவரை) எதிர்த்தார். கைதேர்ந்தவரான அச்வத்தாமா கோரமாயிருப்பவைகளும் பொன்னாலமைந்த புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான பாணஸமூகங்களை இறைத்துக்கொண்டும் பயிற்சிவன்மையினாலே பற்பல மார்க்கங்களைக்காண்பித்துக்கொண்டும் கூர்மையுள்ளவைகளும் வேகமுள்ளவைகளுமான அம்புகளால் ஆகாயத்தை நான்கு பக்கத்திலும் நிரப்பிக்கொண்டும் யுத்தத்தில யுதிஷ்டிரரைச்சுற்றி எல்லாத் திக்குக்களையும் நன்றாக மூடிவிட்டார். அச்வத்தாமாவினுடைய அம்புகளால் மூடப்பட்டு ஒன்றுமே அறியப்படவில்லை. பெரிதான யுத்தமுனையானது முழுதும் பாணமயமாகவே ஆகியது. பரதர்களுள் சிறந்தவரே! ஸுவர்ணக்கட்டுக்களால அலங்கரிக்கப்பட்டதும் ஆகாயத்திலிருக்கின்றதுமான அந்தப் பாணஸமூகமானது (ஆகாயத்தில்) நிலைபெற்றிருக்கின்ற விமானம்போல் விளங்கியது. அரசரே! பிரகாசிக்கின்ற அந்தப் பாணஸமூகத்தினாலே பெரிச்சாம் மூடப்பட்டிருக்கும்பொழுது மேகங்களால் நிழல் உண்டானது போலிருந்தது. சூரியனும் காந்தியை இழந்தவனானான். பாணஸ்வரூபமாக இருக்கின்ற ஆகாயத்தில் அந்த ஆச்சர்யத்தைக் கண்டோம். அச்வத்தாமாவினுடைய பராக்கிரமத்தைப்பார்த்து ஒரு பிராணியும் அவரை எதிர்த்துவரவில்லை. முயற்சியுடன் யுத்தம் செய்கின்ற பாண்டுபுத்திரரான தர்மராஜரும் அவ்வாறே மற்றச் சேனைகளும் பராக்கிரமத்தை வெளிப்படுத்தவில்லை. மஹாராஜரே! அந்த யுத்தத்தில்

மஹாரதர்கள் த்ரோணபுத்திரருடைய தேர்ச்சியைக்கண்டு ஆச்சர்யம் அடைந்தார்கள். அந்த எல்லா அரசர்களும் பிரகாசிக்கின்ற சூரியன் போன்ற அந்த அஸ்வத்தாமாவை எதிரில் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பிறகு, சேனையானது கொல்லப்படும்பொழுது மஹாரதர்களான த்ரௌபதிகுமாரர்களும் ஸாத்யகியும் தர்மராஜரும் பாஞ்சாலர்களும் ஒன்றுசேர்ந்து ம்ருத்யுபயத்தைவிட்டுக் கோரஸ்வரூபியான த்ரோணபுத்திரருக்கருகில் விரைவாகச்சென்றார்கள். ஸாத்யகியானவன் த்ரோணபுத்திரரை இருபத்தேழு பாணங்களால் அடித்து மறுபடியும் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட ஏழு பாணங்களால் அடித்தான். யுதிஷ்டிரர் எழுபத்துமூன்றுபாணங்களாலும் ப்ரதிவிந்தியன் ஏழுபாணங்களாலும் ஸ்ருதகர்மா மூன்று பாணங்களாலும் ஸ்ருதகீர்த்தி ஏழுபாணங்களாலும் ஸுதஸோமன் ஒன்பதுபாணங்களாலும் சதானீகன் ஏழுபாணங்களாலும் அடித்தார்கள். மற்ற அநேகசூரர்களும் நாற்புறங்களிலும் அந்த அஸ்வத்தாமாவை அடித்தார்கள். அரசரே! பிறகு, கோபங்கொண்ட அந்த அஸ்வத்தாமாவோ ஸர்ப்பம்போலச் சீறிக்கொண்டு ஸாத்யகியை இருபத்தைந்துபாணங்களாலும் ஸ்ருதகீர்த்தியை ஒன்பதுபாணங்களாலும் ஸுதஸோமனை ஐந்துபாணங்களாலும் ஸ்ருதகர்மாவை எட்டுப்பாணங்களாலும் ப்ரதிவிந்தியனை மூன்றுபாணங்களாலும் சதானீகனை ஒன்பதுபாணங்களாலும் தர்மபுத்திரரை ஐந்துபாணங்களாலும் அவ்வாறே மற்றச் சூரர்களை இரண்டிரண்டுபாணங்களாலும் அடித்தார். அவ்வாறாகவே, கூர்மையுள்ள அம்புகளாலே ஸ்ருதகீர்த்தியினுடைய வில்லையும் துண்டாக்கினார். பிறகு, மஹாரதனான ஸ்ருதகீர்த்தியானவன் வேறுவில்லையெடுத்து மூன்றுபாணங்களால் அஸ்வத்தாமாவை அடித்துக் கூர்மையுள்ள வேறுபாணங்களாலும் அடித்தான். மஹாராஜரே! பெரியவரே! பாரதர்களுள் சிறந்தவரே! பிறகு, த்ரோணபுத்திரர் சரமாரியினால் அந்தச் சேனையை நான்குபக்கத்திலும் மூடினார். பிறகு, அளவிடமுடியாத மனவலிமையுள்ள த்ரோணபுத்திரர் மறுபடியும் தர்மராஜருடைய வில்லை அறுத்துச் சிரித்துக்கொண்டு மூன்றுபாணங்களால் அவரை அடித்தார். ராஜரே! பிறகு, தர்மநந்தனர் பெரிதான வேறொருவில்லை எடுத்து எழுபத்துமூன்றுபாணங்களால் த்ரோணபுத்திரரை இரண்டு கைகளிலும் மார்பிலும் அடித்தார். ஸாத்யகியோ பிறகு கோபங்கொண்டு யுத்தத்தில்அடிக்கின்ற த்ரோணபுத்திரருடையவில்லைக் கூர்மையுள்ள ஓர் அர்த்தசந்த்ரபாணத்தாலறுத்து மிகவும் கர்ஜித்தான்.

பிறகு, வில்லுறுக்கப்பட்டவரும் சக்தியையுமுடையவர்களுள் சிறந்தவருமான த்ரோணபுத்திரர் சக்தியாயுதத்தினால் சைனேயனுடைய ஸாரதியை ரதத்தினின்று விரைவாகத் தள்ளினார். பாரதரே! ப்ரதாபசாலியான த்ரோணபுத்திரர் பிறகு வேறுவில்லையெடுத்து ஸாத்யகியைச் சரமாரியினால் மூடினார். பாரதரே! யுத்தத்தில் ரதத்திலிருந்த ஸாரதி கீழேவிழுந்தவுடனே வேகத்தோடு ஓடுகின்ற அவனுடைய குதிரைகள் ஆங்காங்கு ஓடுகின்றவைகளாகக் காணப்பட்டன. யுதிஷ்டிரரைத் தலைமையாகக்கொண்ட பாண்டவவீரர்களோ கூர்மையான அம்புகளைப் பிரயோகித்துக்கொண்டு ஆயுதம்பிடிக்கிறவர்களுள் சிறந்தவரான அச்வத்தாமாவை வேகத்தோடு எதிர்த்து (அம்புகளை) வர்ஷித்தார்கள். பகைவர்களை வாட்டுகின்றவரான த்ரோணபுத்திரர் விரைவாக வருகின்றவர்களும் அதிககோபமுள்ளவர்களுமான அந்த வீரர்களை * ரக்கச்சிரித்துக்கொண்டு மஹாயுத்தத்தில் எதிர்த்தார். பிறகு, எழுந்த அக்கினியானது உலர்ந்தகாட்டை எரிப்பதுபோல அனேகபாணங்களாகிற ஜ்வாலைகளுடன்கூடின அச்வத்தாமா என்கிற நெருப்பானது சேனையாகிற உலர்ந்தகாட்டை மஹாயுத்தத்தில் கொளுத்தியது. பரதர்களிற் சிறந்தவரே! த்ரோணபுத்திரரால் நன்றாகவாட்டப்பட்ட பாண்டுபுத்திரருடைய அந்தச்சேனையானது அந்த ஸேனாமுகத்திலேயே தத்தளித்தது. பரதர்களிற் சிறந்தவரே! சூரியன் கிரணங்களால் தவிக்கச்செய்வதுபோல த்ரோணபுத்திரர் பாணங்களுடைய ஜ்வாலையினாலே பாண்டுபுத்திரருடைய அந்தச்சேனையைத் தவிக்கச்செய்தார். பிராம்மணருடைய பொறுமையினாலும் பாணங்களாலும் வாட்டப்படுகின்ற அந்தப்பாண்டவசேனையானது திமியினால் நதியின்முகம் கலங்குவதுபோலக் கலங்கிறது. மஹாராஜரே! துர்யோதனன் த்ரோணபுத்திரருடைய பராக்கிரமத்தைக்கண்டு யுத்தத்தில் எல்லாப்பார்த்தர்களையும் மாண்டவர்களாகவே எண்ணினான். யுதிஷ்டிரரோ விரைவுள்ளவராகி மஹாரதரான த்ரோணபுத்திரரை அடித்துக் கோபத்தோடும் பொருமையோடும் அவரைப்பார்த்துக் கூறலானார்.

'யுத்தத்தில் மனவைபெற்றவரே! [illegible] வீர்யமுள்ளவனென்றும் பலமுள்ளவனென்றும் அஸ்திரங்களைக் கற்றுத்தேர்ச்சியுள்ளவனென்றும் ஸமர்த்தனென்றும் அளவில்லாத பராக்கிரமமுள்ளவனென்றும் அறிவேன். நீ இந்தப்பலமனைத்தையும் பார்ஷத

* இரட்டித்தலால் ஒருசொல்விடப்பட்டது.

னிடத்தில் காண்பிப்பீராகில் அப்பொழுது உம்மைப் பலசாலியென்றும் அஸ்திரவித்தையில் தேர்ச்சியுள்ளவனென்றும் நாம் அறிவோம். யுத்தத்தில் பகைவர்களை நாசஞ்செய்பவனான த்ருஷ்டத்யும்னனைப் பார்த்தபின் உமக்குப் பலம் சிறிதுமுண்டாகாது. உம்மைப் பிராம்மணரென்று நான் சொல்லவில்லை. மனிதர்களுள் சிறந்தவரே! நீர் என்னையே இப்பொழுது கொல்லவிரும்புகிறீராதலால் உமக்கு அன்பு இல்லை; நன்றியறிவும் இல்லை. பிராம்மணனுக்குத் தவமும் சமதமங்களும் வேண்டும். வில் க்ஷத்திரியனால் வளைக்கத்தக்கது. அப்படிப்பட்ட நீர் பிராம்மணோத்தமர். மஹாபாகுபராக்ரமுள்ளவரே! நீர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் கௌரவர்களைஜயிப்பேன். பிராம்மணோத்தமரே! யுத்தத்தில் உமக்கிருப்பப்படி காரியத்தைச்செய்யக்கடவீரென்றும் சொன்னார். மஹாராஜரே! இவ்வாறுசொல்லப்பட்ட த்ரோணபுத்திரர் சிரித்துக்கொண்டே (யுதிஷ்டிரர் சொல்லியதைத்) தகுந்ததென்றும் உண்மையென்றும் எண்ணி ஒன்றும் மறுமொழி கூறவில்லை. பிறகு, த்ரோணபுத்ரர் ஒன்றும் மறுமொழிசொல்லாமல, கோபங்கொண்ட யமன் ப்ரஜைகளை (நாசஞ்செய்வது)போல யுத்தத்தில் சராமாரியினால் பாண்டவசைந்யத்தை மூடினார். ஐயா! த்ரோணபுத்திரரால அப்பொழுது மூடப்படுகின்ற அந்தயுதிஷ்டிரர் பெரும்படையைக் கூட்டிக்கொண்டு யுத்தத்தைவிட்டு விலகி அப்புறஞ்சென்றார். அரசரே! பிறகு, தர்மாத்மாவான அந்தயுதிஷ்டிரர் யுத்தத்தைவிட்டு விலகியபின் த்ரோணபுத்திரர் மஹாத்மாவான தர்மாத்மனுடைய விலக்கத்தால் சும்மாயிருக்கின்றார். அரசரே! பிறகு, யுதிஷ்டிரர் மஹாயுத்தத்தில் த்ரோணபுத்ரரை விட்டு ஜாக்கிரதையுடன்கூடியவராய்க் குரூரமான செய்கையின்பொருட்டு உம்முடைய சேனையில் பிரவேசித்தார்.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்.)

பாஞ்சாலர்களோடுகூடியவனும் சேதியர்களாலும் கேகயர்களாலும் சூழப்பட்டவனுமான பீமஸேனனை வைகர்த்தனனான கர்ணன் கோபங்கொண்டு தானே அம்புகளால தடுத்தான். பிறகு, கர்ணன் யுத்தத்தில் பீமஸேனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மஹாரதர்களான சேதியர்களையும் காருசர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் அடித்தான். பிறகு, பீமஸேனன் ரதிகர்களுள் சிறந்தவனான கர்ணனை விட்டுவிட்டு, ஜ்வலிக்கின்றநெருப்பானது உலர்ந்தகாட்டில் பிரவேசிப்

பதுபோலக் கௌரவசேனையில் பிரவேசித்தான். ஸஹதேவபுத்திரனும், யுத்தத்தில் மஹாவில்லாளிகளான பாஞ்சாலர்களையும் சேதியர்களையும் ஸ்ருஞ்ஜயர்களையும் ஆயிரக்கணக்காகக் கொன்றான். மஹாரதர்களாயிருக்கின்ற பார்த்தனும் விருகோதரனும் கர்ணனும், ஸம்சப்தகர்களுக்கும் கௌரவர்களுக்கும் பாஞ்சாலர்களுக்கும் நாசத்தை உண்டுபண்ணினார்கள். அரசரே! உம்முடைய தாரசேனையினால் அற்பட்ட யுத்தத்தில் அச்ஷிர்க்குப்பான அந்தப்பென் ருவீரர்களாலே அந்த க்ஷத்திரியர்கள் எரிக்கப்படுகின்றவர்களாகி நாசத்தை அடைந்தார்கள். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, துர்யோதனன் கோபங்கொண்டு நகுலனை மூன்பது பாணங்களால் அடித்து அவனுடைய நான்குகுதிரைகளையும் அடித்தான். ஜனாதிபரே! பிறகு, அளவிட முடியாத பலமுள்ள உம்முடைய புத்திரன் க்ஷுரத்தினால் ஸவர்ணமயமான ஸஹதேவனுடைய த்வஜத்தைத் துண்டாக்கினான். ராஜரே! பிறகு, நகுலனும் கோபங்கொண்டு உம்முடைய புத்திரனை எழுபாணங்களால் அடித்தான். ஸஹதேவன் யுத்தத்தில் ஐந்துபாணங்களால் (உம்முடைய புத்திரனை) அடித்தான். பரதஸ்ரேஷ்டர்களும் எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவர்களுமான அவ்விருவரையும் (உம்முடைய புத்திரன்) கோபங்கொண்டு ஐவைந்துபாணங்களால் மார்பில் அடித்தான். பிறகு, வீரனான உம்முடைய புத்திரன் பலாத்காரமாக வேறு இரண்டுபல்லங்களாலே இரட்டைப்பிள்ளைகளான அவர்களுடைய விற்களை வெட்டினான். மும்மூன்று பாணங்களால் விரைவாக அவர்களை அடித்தான். தேவகுமாரர்களுக்கொப்பான அந்த இரண்டு சூரர்களும் யுத்தத்தில் இந்திரவிற்போன்றவைகளும் மங்களகரமானவைகளும் சிறந்தவைகளுமான வேறு இரண்டுவிற்களை எடுத்துக்கொண்டு விளங்கினார்கள். பிறகு, யுத்தத்தில் கூடிசுறுப்புள்ளவர்களும் ஸஹோதரர்களுமான அவ்விருவரும் இரண்டு மஹாமேகங்கள் மலையின்மீது தீக்ஷ்ணதாரைகளைப்பொழிவதுபோல யுத்தத்தில் பிராதாவின்மீது கோரமானபாணங்களை வர்ஷித்தார்கள். மஹாராஜரே! பிறகு, மஹாரதனான உம்முடைய புத்திரன் கோபங்கொண்டு மஹாவில்லாளிகளான பாண்டுபுத்திரர்களிருவரையும் பாணங்களால் தடுத்தான். பாரதரே! யுத்தத்தில் துர்யோதனனுடைய வில்லானது வட்டமாகவே காணப்பட்டது; அம்புகளும் நான்குபக்கத்திலும் வெளிப்படுகின்றவைகளாகக் காணப்பட்டன. அந்தத் துர்யோதனனுடைய அம்புகளால் நன்றாக மூடப்பட்ட மாத்ரீபுத்திரர்கள் ஆகாயத்தில் மேகங்களாலமறைக்கப்பட்டு ஒளியை இழந்திருக்கின்ற சந்திரசூரியர்கள்

போலப் பிரகாசிக்கவில்லை. மஹாராஜரே! பொற்கட்டுக்களுள்ளவை யும் சாணையில் தீட்டப்பட்டவையுமான அந்தப்பாணங்கள் சூரிய னுடையகிரணங்கள்போலஎல்லாத்திக்குக்களையும்மறைத்தன. பிறகு, அந்த ஆகாயமானது பாணஸ்வரூபமாகி நன்றாக மூடப்பட்டிருக்கும் ஸமயத்தில் அரசனுடைய உருவமானது காலனுக்கும் அந்தகனுக் கும் யமனுக்கும் ஒப்பாகக்காணப்பட்டது. உமது குமாரனுடைய அந் தப் பராக்கிரமத்தைப்பார்த்து மஹாரதர்கள் மாத்ரீபுத்திரர்களை ம்ருத் யுவினுடைய ஸமீபத்தை அடைந்தவர்களென்றே எண்ணினார்கள். மன்னவரே! பிறகு, பாண்டவர்களுடைய ஸேனைபதியும் மஹாரதனு மான பார்ஷதன் துர்யோதனராஜனிருக்கிறவிடத்துக்குச் சென் றான். பிறகு, த்ருஷ்டத்யும்னன் மஹாரதர்களும் சூரர்களுமான மாத்ரீபுத்திரர்களைக் கண்டு உம்முடைய குமாரனை அம்புகளால் அடித்தான். அளவிடமுடியாத மனோபலமுடையவனும் புருஷ ச்ரேஷ்டனுமான உம்முடையபுத்திரன் கோபங்கொண்டு உரக்கச் சிரித்துக்கொண்டு அந்தப் பாஞ்சாலனை இருபத்தைந்துபாணங் களால் அடித்தான். பிறகு, அளவிடமுடியாத பராக்கிரமமுள்ள உம்முடைய புத்திரன் கோபமுள்ளவனாகித மறுபடியும் பாஞ் சாலனை அறுபத்தைந்து பாணங்களாலடித்து ஸிம்மநாதஞ் செய் தான். அரசரே! ராஜாவான துர்யோதனன் மிக்க கூர்மையுள்ள க்ஷுரப்ரத்தினால் அந்த த்ருஷ்டத்யும்னனுடைய அம்புடன் கூடினவில்லை யுத்தத்தில் கைப்பிடியில் வெட்டினான். பகை வர்களை அழிப்பவனான பாஞ்சாலயன் அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டுப் பாரத்தை ஸஹிக்கக்கூடிய புதிதான வேறொரு வில்லை வேகத்தோடு எடுத்தான். கோபத்தினால் ரக்தம்போலச் சிவந்த கண்களையுடையவனும் காயப்படுத்தப்பட்டவனும் சிறந்த வில்லாளியுமான த்ருஷ்டத்யும்னன் கோபத்தால் ஜ்வலிக்கின்றவன் போல விளங்கினான். அந்த த்ருஷ்டத்யும்னன் பரதஸ்ரேஷ்டனான துர்யோதனனைக் கொல்லவிரும்பி ஸர்ப்பம்போலச் சீறுகின்ற பதி னைந்து பாணங்களை அவன்மீது பிரயோகித்தான். கழுகிறகுகள் பூண்டவைகளும் மயிலிறகுகளுடன்கூடினவைகளுமான அந்தப் பாணங்கள் அரசனுடைய பொன்னாலசெய்யப்பட்ட கவசத்தை உடைத்து வேகத்துடன் பூமியில் பிரவேசித்தன. மஹாராஜரே! அதிகமாக அடிக்கப்பட்ட அந்த உம்முடைய குமாரன் வஸந்தகாலத் தில் நன்றாகப்பூத்திருக்கின்ற மிகப்பெரிதான பலாசமரம்போல் அதிகமாக விளங்கினான். கவசம் உடைக்கப்பட்டவனும் நாரா

சங்களுடைய வீழ்ச்சிகளால் வலிமைகுன்றியிருப்பவனுமான அந்தத் துர்யோதனன் கோபமுள்ளவனுகிப் ஒரு பல்லத்தினுல் த்ருஷ்டத்யும்னனுடைய வில்லை அறுத்தான். ராஜரே! பிறகு, ராஜாவான துர்யோதனன் விரைவுடன் வில் அறுக்கப்பட்டவனுன அந்த த்ருஷ்டத்யும்னனை இரண்டு புருவங்களின்இடையில் பந்துப்பாணங்களால் அடித்தான். கருமானுல் நன்கு சாணைபிடிக்கப்பட்ட அவ்வம்புகள், தேனில் ஆசைகொண்ட வண்டுகள் மலர்ந்த தாமரைப்பூவை அலங்கரிப்பதுபோல அந்த த்ருஷ்டத்யும்னனுடைய முகத்தை விளங்கச் செய்தன. பெரியமனமுள்ளவனுன த்ருஷ்டத்யும்னன் அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டு வேகத்தோடு வேறுவில்லையும் பதினுறுபல்லங்களையும் எடுத்தான். பிறகு, த்ருஷ்டத்யும்னன் ஐந்துபாணங்களாலே துர்யோதனனுடைய குதிரைகளையும் ஸாரதியையுங்கொன்று ஒருபல்லத்தினுலே ஸ்வர்ணத்தாலலங்கரிக்கப்பட்ட வில்லையும் வெட்டினுன். பார்ஷதன் பத்துப்பல்லங்களாலே உமது புத்திரனுடைய உபகரணங்களுடன் கூடின ரதத்தையும் குடையையும் சக்தியையும் கத்தியையும் கதையையும் த்வஜத்தையும் துண்டாக்கினுன். எல்லாஅரசர்களும் குருராஜனுடைய பொன்வளையமுள்ள குடையும், மணிமயமாயும் மங்களகரமாயுமுள்ள அரவக்கொடியும் அறுக்கப்பட்டதைக் கண்டார்கள். பரதர்களுள் சிறந்தவரே! ஸஹோதரர்கள் பிரர்தாவான துர்யோதனனை ரதத்தைஇழந்தவனுகவும் கவசமும்ஆயுதங்களும் த்வஜமும் அறுக்கப்பட்டவனுகவும் கண்டார்கள். அரசரே! குண்டதாரன் மனங்கலங்காமல் த்ருஷ்டத்யும்னன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, மஹா ரதனுன அந்தத்துர்யோதனனைத் தன்ரதத்தின்மீதேற்றிவைத்துக்கொண்டுவேறு இடத்திற்குக் கொண்டுபோனுன். அரசனிடத்தில் அதிகஆவலுள்ள கர்ணனே கோபங்கொண்டு ஸாத்யகியைவிட்டுவிட்டு யுகதரங்கத்தில் த்ரோணரைக்கொன்றவனும் உக்கிரமான பாணங்களையுடையவனுமான அந்த த்ருஷ்டத்யும்னனை எதிர்த்துச்சென்றுன். அம்புகளாலடிக்கப்பட்டவனுன சைனேயன் ஒரு யானையைப் பின்புறத்தில் வேருெரு யானையானது இரண்டு தந்தங்களாலும் (இடித்துக்கொண்டு) செல்வதுபோல அந்தக் கர்ணனை விரைவாகப் பின்புறத்தில் அனுஸரித்துச் சென்றுன். பாரதரே! கர்ணனுக்கும் பார்ஷதனுக்கும் சேர்ந்த மஹாயுத்தத்தில் மிகுந்த கோபமுள்ளவர்களும் அதிகபலசாலிகளும் முன்செல்பவர்களுமான அரசர்களுள்ளும் பாண்டவர்களுள்ளும் நம்மைச்சேர்ந்தவர்களுள்ளும் ஒருவனுவது யுத்தத்தில் பின்னிடுபவ

ளுகக் காணப்படவில்லை. கர்ணன் விரைவுடன் பாஞ்சாலர்களை நோக்கிச் சென்றான். அரசரே! நரஸ்ரேஷ்டரே! அந்த க்ஷணத்தில் நடுப்பகலில் இரண்டு பக்கத்திலும் யானைகள் குதிரைகள் தேர்களாகிய இவைகளுடைய அழிவுதோன்றியது. மஹாராஜரே! பாஞ்சாலர்களோ ஜயத்தில் விருப்பமுள்ளவர்களாக, ஒரு மரத்தைக்குறித்துப் பக்ஷிகள் ஓடி வருவதுபோலக் கர்ணனைக் குறித்து நான்கு பக்கத்தினின்றும் விரைவுடன் எதிர்த்து வந்தார்கள். அதிரதபுத்திரனான கர்ணன் அவ்வீரர்களுள் எதிரிலிருக்கின்ற தலைவர்களான பலசாலிகளைப் பாண ஸமூகங்களாலே தேடுகிறவன்போல அடைந்தான். வ்யாக்ரகேது, ஸுசர்மா, சுக்கிரன், சித்ராயுதன், சரது, துர்ஜயன், ரோசமானன், எட்டாமவனான ஸிம்மஸேனன் இவர்கள் யுத்தத்தில் பிரகாசிக்கின்ற புருஷஸ்ரேஷ்டனானகர்ணன்மீது விரைவான பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு பெரியதேர்க்கூட்டத்தோடு அவனைச்சூழ்ந்துகொண்டார்கள். அரசனே கர்ணன் யுத்தத்தில் முயற்சிசெய்கின்றவர்களான அந்த எட்டுப்பாஞ்சாலவீரர்களையும் கூர்மையுள்ள எட்டு அம்புகளால் கொன்றான். மஹாராஜரே! பிறகு, பிரதாபசாலியான ஸூதபுத்திரன் யுத்தத்தில் ஸமர்த்தர்களான அனேக ஆயிரக்கணக்கான மற்றப் போர்வீரர்களையும் கொன்றான். கர்ணன் மிகுந்த கோபமுள்ளவனாக யுத்தத்தில் சேதிதேசத்தார்களும் மஹாரதர்களுமான விஷ்ணுவையும் விஷ்ணுவர்மாவையும் தேவாபியையும் பத்ரனையும் தண்டதாரனையும் சித்ரனையும் சித்ராயுதனையும் ஹரியையும் ஸிம்மகேதுவையும் ரோசமானனையும் சலபனையும் கொன்றான். அவர்களுடைய உயிரைக்கவர்கின்றவனும் இரத்தத்தால் அங்கங்கள் நன்றாக நனைக்கப்பட்டவனுமான அந்தக் கர்ணனுடைய சரீரமானது ருத்திரருடைய சரீரம்போல அதிபயங்கரமாயிருந்தது. பாரதரே! அந்த யுத்தத்தில் கர்ணனால் அம்புகளால் அடிக்கப்பட்ட யானைகள் பயந்து பெரிதான (அச்சேனையை) மனங்கலங்கச்செய்துகொண்டு நாற்புறங்களிலும் ஓடின. யானைகள் யுத்தத்தில் கர்ணனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டவைகளாகப் பலபல சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு வஜ்ரத்தினால் தள்ளப்பட்ட மலைகள்போலப் பூமியில் விழுந்தன. நான்கு பக்கத்திலும் விழுகின்ற யானைகளாலும் குதிரைகளாலும் மனிதர்களாலும் உடைக்கப்பட்ட ரதங்களாலும் கொடிகளாலும் யுத்த பூமியானது நன்கு பரப்பப்பட்டது. யுத்தத்தில் கர்ணன் செய்ததுபோன்ற காரியத்தைப் பீஷ்மராவது த்ரோணராவது யுத்தபூமியிலிருந்த உம்மைச் சேர்ந்த மற்ற

வீரர்களாவது செய்யவில்லை. மிருகங்களுடைய மத்தியில் ஸிம்மம் பயமற்று ஸஞ்சரிப்பதுபோலக் கர்ணன் பாஞ்சாலர்களுடைய மத்தியில் பயமற்று ஸஞ்சரிக்கின்றவனாகக் காணப்பட்டான். பிறகு, புருஷச்ரேஷ்டனான ஸூதபுத்திரன் யானைகளிடத்திலும் குதிரைகளிடத்திலும் ரதிகர்களிடத்திலும் காலாட்களிடத்திலும் அதிக ஹிம்ஸையை உண்டுபண்ணினான். பயந்துகொண்டிருக்கிற மான் கூட்டங்களை ஸிம்மமானது திக்குக்களில் ஓடும்படி செய்வதுபோலக் கர்ணன் பாஞ்சால ரதிகர்களுடையகூட்டங்களை ஓடும்படிசெய்தான். ஸிம்மத்தை எதிர்த்து மான்கள் ஓரிடத்திலும் ஜீவிக்காததுபோல ஸ்ருஞ்சயர்கள் கர்ணனை எதிர்த்து ஜீவிக்கவில்லை. பாரதரே! அக்னிமுகத்தை அடைந்து எவ்வாறு விட்டிற்பூச்சிகள் எரிக்கப்படுமோ அவ்வாறே யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்கள் கர்ணனாகிற நெருப்பை அடைந்து எரிக்கப்பட்டார்கள். பாரதரே! கர்ணன்ஒருவனாலே சைத்யர்களிலும் பாஞ்சாலர்களிலும் சூரர்களென்று ஸம்மதிக்கப்பட்ட அனேகர்கள் பெயரைக் கேட்கும்படிசெய்து கொல்லப்பட்டார்கள். அரசரே! கர்ணனுடைய பராக்கிரமத்தைக்கண்டு 'கர்ணனிடத்தினின்று யுத்தத்தில் பாஞ்சாலர்களுள் ஒருவனாவது உயிரோடு விடுபடப்போகிறதில்லை' என்கிறபுத்தியானது எனக்கும் உண்டாயிற்று. ஸூதபுத்திரன் அடிக்கடி பாஞ்சாலர்களை யுத்தத்தில் அடித்துமிகுந்த கோபங்கொண்டு குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரை எதிர்த்துச்சென்றான். ஐயா! பகைவர்களைக் கொல்பவரான யுதிஷ்டிரராஜரை த்ருஷ்டத்யும்னனும் த்ரௌபதீபுத்திரர்களும் நூறுநூறாக மற்றஜனங்களும் சூழ்ந்துகொண்டார்கள். சிகண்டியும் ஸஹதேவனும் நகுலனும் அவ்வாறே நகுலபுத்திரனை ஜனமேஜயனும் ஸாத்யகியும் அனேகர்களான பிரபத்திரகர்களும் த்ருஷ்டத்யும்னனும் யுத்தத்தில் முந்திச் செல்பவர்களாகி, அழிக்கின்றவனும் அளவுகடந்த பராக்கிரமமுள்ளவனுமான கர்ணனைப் பாணங்களாலும் அஸ்திரங்களாலும் அடித்தார்கள். அந்தயுத்தத்தில், கருடன் ஸர்ப்பங்களை எதிர்ப்பதுபோல ஏகாகியானகர்ணன் அனேகசைத்யர்களையும் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் எதிர்த்தான். அரசரே! தேவர்களுக்கு அஸுரர்களோடு முற்காலத்தில் நடந்ததுபோன்ற பயங்கரமான யுத்தம் கர்ணனுக்கு அவர்களோடு நடந்தது. ஒன்றுசேர்ந்தவர்களும் பெரியவில்லையுடையவர்களும் சரமாரிகளைக் கூட்டங்கூட்டமாகப் பொழிகின்றவர்களுமான அந்தவீரர்களை, சூரியன் இருளை நாசஞ் செய்வதுபோல ஏகாகியானகர்ணன் மனக்கலக்கமற்றவனாக நாசஞ்செய்தான். பீ

ஸேனனே கர்ணன் பாண்டவர்களோடு எதிர்த்திருக்கும் ஸமயத்தில் கோபங்கொண்டவனாகி யமதண்டம்போன்ற அம்புகளாலே நான்கு பக்கத்திலும் கர்ணனை அடித்தான். மஹாவில்லாளியானகர்ணன் யுத்தத்தில் ஒருவனாயிருந்துகொண்டு பாஹ்லீகர்களையும் கேகயர்களையும் மாத்ஸ்யர்களையும் வஸாதயர்களையும் மதரர்களையும் ஸைந்தவர்களையும் எதிர்த்துப் போர் புரிந்துகொண்டு அதிகமாக விளங்கினான். அந்த யுத்தரங்கத்தில் பீமனால் மர்மஸ்தானங்களில் நாராசங்களால் அடிக்கப்பட்டயானைகள் யானைவீரர்கள் கொல்லப்பட்டவைகளாகிக் கீழேவிழுந்து பூமியைநடுங்கச்செய்தன. மஹாராஜரே! குதிரைவீரர்கள்கொல்லப்பட்ட குதிரைகளும் உயிரையிழந்தவர்களானகாலாட்களும் மிகுதியாக ரக்தத்தைக்கக்கிக்கொண்டு(பூமியில்) படுத்தார்கள். பெரியவரே! பீமஸேனனால் விரைவாகஅடிக்கப்பட்ட மஹாவேகமுள்ளயானைகள் வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட மலைகள் போலக் கீழேவிழுந்தன. மன்னரே! வேகமுள்ளவைகளும் கீழே விழுந்திருக்கின்றவைகளுமான அந்தமஹாரதங்களால் யுத்தபூமியானது சிதறிக்கிடக்கின்றமலைகளால் நிரப்பப்பட்டதுபோல விளங்கியது. ஆயிரக்கணக்கான ரதிகர்களும் காலாட்களும் ஆயுதங்களால் அடிக்கப்படாதவர்களாகவே பீமனிடத்தினின்று பயந்து ஆயுதங்களை விட்டு உயிரைவிட்டவர்களாகக் காணப்பட்டார்கள். யுத்தபூமியானது பீமஸேனனுடையஅம்புகளாலே வெட்டப்பட்ட ரதிகர்களாலும் குதிரைவீரர்களாலும் ஸாரதிகளாலும் காலாட்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் நான்குபக்கங்களிலும் மூடப்பட்டதாகியது. பீமஸேனனிடத்திலிருந்து உண்டானபயத்தினால் பிடிக்கப்பட்டதும் யுத்தத்தில் உத்ஸாகத்தைஇழந்ததாகச் செய்யப்பட்டதுமான அந்தத் துர்யோதனனுடைய ஸேனைமுழுவதும் அசைவற்றதுபோல நின்றது. அரசரே! அந்தமஹாயுத்தத்தில அசைவற்றதும் நெருங்கியதும் எளிமையுற்றதுமான அந்தச்சேனையானது தெளிந்தஜலத்தை யுடையதானகாலத்தில ஸமுத்திரம்விளங்குவதுபோலச் சலிக்காமல் நிலைபெற்றதாக விளங்கியது. கோபத்தோடும் வீர்யத்தோடும் பலத்தோடும்கூடின உமதுபுத்திரனுடைய அந்தச்சேனையானது அப்பொழுது மதத்தைஇழக்கும்படி செய்யப்பட்டு ஒளியையிழந்ததாயிற்று. பரதஸ்ரேஷ்டரே! பரஸ்பரம் பிடிக்கப்படுகின்ற அந்தஇருசேனைகளும் * ரக்தவெள்ளத்தால் நான்குபக்கங்களிலும் நனைக்கப்பட்ட

* வாக்சொல் விடப்பட்டது.

வைகளாயின. ஸூதபுத்திரன் கோபங்கொண்டவனைப் பாண்டவர்களுடைய சேனையைக் கொன்றான். பீமஸேனன் கௌரவசேனையையும் தனஞ்சயன் திரிகர்த்தர்களுடையபடையையும் நாசஞ்செய்தார்கள். அவ்வாறு பயங்கரமானதும் ஆச்சர்யகரமான காட்சியுள்ளதுமான யுத்தம் நடந்துவரும்பொழுது, ஜயசாலிகளுள் சிறந்தவனை அர்ஜுனன் சேனையின்மத்தியில் அநேகஸம்சப்தர்களுடைய கூட்டங்களைக்கொன்று பிறகு வாஸுதேவரைப்பார்த்துக் கூறலானான்.

'என்னோடுகூடப் போர்புரியப்போகிற இந்தச்சேனையானது நன்றாக முறிய அடிக்கப்பட்டுவிட்டதன்றோ? இந்தஸம்சப்தகமஹாரதர்கள் பரிவாரங்களோடு ஓடுகிறார்கள். இவர்கள் யுத்தத்தில் இந்திரனுடன்கூடின தேவர்களாலும் ஜயிக்கமுடியாதவர்கள். ஸிம்மத்தினுடைய கர்ஜனத்தை மான்கள் ஸஹிக்காததுபோல இவர்கள் என்னுடையபாணங்களை ஸஹிக்கச் சக்தியற்றவர்களாகிவிட்டார்கள். மஹாயுத்தத்தில் ஸ்ருஞ்சயர்களுடைய பெரும்படையானது பிளக்கப்படுகிறது. கௌரவர்களும் பீமஸேனனிடத்திலிருந்துண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகி ஓடுகின்றார்கள். வாஸுதேவரே! ராஜஸைன்யத்தினுடைய மத்தியில் அடிக்கடி ஸஞ்சரிக்கின்ற புத்திமானான கர்ணனுடைய யானைகட்டும்கச்சைக்கொடியானது இதோ காணப்படுகிறது. இந்தமஹாரதர்கள்கர்ணனையுத்தத்தில்ஜயிப்பதற்குச் சக்தியற்றவர்கள். நீர் கர்ணனைப் பகைவர்களைவெல்வதில் சிறந்த வீர்யமுடையவனென்று அறிந்திருக்கிறீரன்றோ! எங்கிருந்து கர்ணன் நம்முடையசேனையைத் துரத்துகிறானோ அந்தவிடத்திற்குச் செல்லும். திரிகர்த்தர்களைவிட்டுவிலகி மஹாரதனானஸூதபுத்திரனை நோக்கிச் செல்லும். மாதவரே! இது என்மனத்துக்கு விருப்பம். உமக்கு எப்படித்தோன்றுகிறதோ?' என்று வினவினான்.

அந்தஅர்ஜுனனுடைய இந்தவார்த்தையைக்கேட்டு, கோவிந்தர் உரக்கச் சிரித்துக்கொண்டு அவனைப்பார்த்து, 'பாண்டவ! கௌரவர்களைக்குறித்து விரைவாகச்செல்' என்றுகூறினார். பிறகு, அன்னநிறமுள்ளகுதிரைகள் கோவிந்தரால் தூண்டப்பட்டவைகளாகி அர்ஜுனனை யுத்தபூமியில் வைத்துக்கொண்டு பெரும்படையில் விரைவாகப் பிரவேசித்தன. சகலபக்கங்களிலும் பாய்கின்றவைகளும் வெண்ணிறமுள்ளவைகளும் பொன்னணிகளை அணிந்தவைகளும் (சேனையில்) பிரவேசிக்கின்றவைகளுமான குதிரைகளால் உம்முடையசேனையானது நான்குதிசைகளிலும் பிளக்கப்பட்டது. மேகத்

தின் இடிபோன்றமுழக்கமுள்ளதும் வானரக்கொடியையுடையதும் அசைகின்ற கொடித்துணியுடன் கூடியதுமான அந்தரதமானது விமானம் ஆகாயத்தில்பிரவேசிப்பதுபோல அந்தச்சேனையில் பிரவேசித்தது. பெருஞ்சேனையைப் பிளந்துகொண்டு நுழைந்தவர்களும் கோபமுள்ளவர்களும் கோபத்தினால் சிவந்தகண்களையுடையவர்களுமான அந்தக்கேசவரும் அர்ஜுனனும் மிக்க காந்தியுள்ளவர்களாக விளங்கினார்கள். யுத்தத்தில்ஸமர்த்தர்களும் யுத்தயாகத்திற்காகஅழைக்கப்பட்டுவந்தவர்களுமான அவ்விருவர்களும் யாகஞ்செய்பவர்களால் விதிப்படிஅழைக்கப்பட்டு யாகத்திற்குவந்திருக்கின்ற அச்வினிதேவதைகள்போல விளங்கினார்கள். கோபத்தினால்சிவந்தகண்களையுடையவர்களும் மஹாபலசாலிகளுமான (அந்தஇரண்டு) சூரர்களும் அதிக மதங்கொண்டவைகளும் கருஷ்டி ஸஞ்சாரத்துடன் ஸஞ்சரிக்கின்றவைகளுமான இரண்டுயானைகள்போல் விளங்கினார்கள். கோபங்கொண்டவர்களும் சிறந்தஉபாயமுள்ளவர்களுமான அந்தஇரண்டுபுருஷச்ரேஷ்டர்களும் தலத்வனியினால் கோபமூட்டப்பட்ட இரண்டு மஹாகஜங்கள்போல அடங்காத பலமுடையவர்களானார்கள். பல்குனன் தேர்ப்படையிலும் குதிரைக்கூட்டங்களிலும் நுழைந்து பாசத்தைக்கையில்கொண்ட யமன்போலச் சேனையின்மத்தியில் ஸஞ்சரித்தான். பாரதரே! யுத்தத்தில் உமதுசேனையில் விக்கிரமத்துடன் கூடின அந்தஅர்ஜுனனைக்கண்டு உம்முடையகுமாரன் ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களை மறுபடியும் ஏவினான். பிறகு, சூரர்களும் அஸ்திரவித்தையில் தேர்ச்சியுள்ளவர்களும் எங்கும்பிரசித்திபெற்றவர்களும் மஹாரதர்களும் வில்லாளிகளுமான ஸம்சப்தகர்கள் மஹாயுத்தத்தில் ஆயிரம்ரதங்களோடும் முந்நூறுயானைகளோடும் பதினாலாயிரம் குதிரைகளோடும் இரண்டுலக்ஷம் காலாட்களோடும் குந்திபுத்திரனை பாண்டுநந்தனனைச் சரமாரிகளால் நான்குபக்கத்திலும்மூடிக்கொண்டு எதிர்த்தார்கள். மஹாராஜரே! பகைவர்படையைக்கொல்பவனான அந்தப்பார்த்தன் யுத்தத்தில் அம்புகளால்மூடப்பட்டவனாகப் பாசதண்டத்தைக் கையில்கொண்ட யமன்போலத் தன்னுருவத்தைப் பயங்கரமாகக்காண்பித்துக்கொண்டும் ஸம்சப்தகர்களைக்கொன்றுகொண்டும் மிகவும் பார்க்கத்தக்கவனானான். பிறகு, கிரீடியினால் மின்னல்போலப் பிரகாசிக்கின்றவைகளும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான பாணங்களால் ஆகாயமானது மூடப்பட்டு இடைவெளியற்றதுபோல் ஆயிற்று. பிரபுவே! கிரீடியினுடையவில்லினால் விடப்பட்டவைகளும் ஸர்ப்பங்கள்போல நன்றாகவிழுகின்றவைகளுமான

பெரியஅம்புகளால் எல்லாம்மூடப்பட்டுப் பிரகாசிக்கிறது. அளத்தற்கு அரிய பராக்கிரமமுள்ள பாண்டவன் ஸவர்ணக்கட்டுள்ளவைகளும் கோரமானவைகளும் பளபளப்பானவைகளும் படிவான கணுக்களுள்ளவைகளுமானபாணங்களை எல்லாத்திக்குகளிலும்பிரயோகித்தான். பார்த்தனுடைய கையுறையில்மோதும்ஒலியினால் ஜனங்கள், பூமி, ஆகாயம், எல்லாத்திக்குகள், கடல்கள், மலைகள் இவைகளெல்லாம் வெடிக்கின்றனவென்று எண்ணினார்கள் மஹாரதனான கௌந்தேயன் பதினாயிரம்அரசர்களைக்கொன்று ஸம்சப்தகர்களுடைய பிரபக்ஷத்தைநோக்கி விரைவாகச்சென்றான். பார்த்தன் காம்போஜர்களால் ரக்ஷிக்கப்பட்டபிரபக்ஷத்தையடைந்து இந்திரன் அஸுரர்களை அழித்ததுபோலச் சேனையைப் பலவந்தமாகஅழித்தான். தன்னைக்கொல்ல வருகின்றபகைவர்களுடைய சஸ்திரங்களுள்ள கைகளுடன்கூடின புஜங்களையும் அவ்வாறே தலைகளையும் விரைவாகப் பல்லங்களினால் துண்டாக்கினான். நான்குபக்கத்திலும் காற்றினால் கிளைகள்முறிக்கப்பட்ட மரங்கள்போல அவர்கள் ஆயுதங்களையிழந்து வெட்டப்பட்ட அங்கங்களோடும் அங்கங்களின் உறுப்புக்களோடும் பூமியில்விழுந்தார்கள். யானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்கள் இவைகளுடைய கூட்டங்களைக் கொல்லுகின்றவனான அர்ஜுனனை ஸுதக்ஷிணனுக்குஇளையஸஹோதரன் எதிர்த்துச் சரமாரியினால் வர்ஷித்தான். அந்தப்பார்த்தன் (பாணங்களைப்) பிரயோகிக்கின்ற அந்தஸுதக்ஷிணனது இளையஸஹோதரனுடைய பரிகாயுதம்போன்ற இரண்டுகைகளையும் இரண்டு அர்த்தசந்திரபாணங்களால் அறுத்துப் பூர்ணசந்திரன்போலப் பிரகாசிக்கின்றமுகத்துடன்கூடினதலையையும் ஒருக்ஷுரத்தினால் அறுத்தான். பிறகு, தன்னிடத்தினின்று உண்டான ரக்தத்தினால் அலங்கரிக்கப்பட்டுள்ள அந்தத்தலையானது வஜ்ராயுதத்தினால் பிளக்கப்பட்ட மனோசிலைமயமான மலையினுடைய சிகரம்போல வேகத்துடன் கீழேவிழுந்தது. காம்போஜர்கள உன்னதனாயிருப்பவனும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும் மிகஇனியதோற்றமுள்ளவனும் பொற்றூண்போன்றவனும் கொல்லப்பட்டவனுமான ஸுதக்ஷிணனுடைய இளையஸஹோதரனைப் பிளக்கப்பட்ட மஹாமேருவைப்போலக் கண்டார்கள். பிறகு, கோரமும்மிக்கஆச்சர்யகரமுமானயுத்தம் மறுபடியும் உண்டாகியது. அந்தயுத்தத்தில் சண்டைசெய்கின்ற யுத்தவீரர்களுக்குப் பற்பல அவஸ்தைகள் உண்டாயின. அரசரே! பார்த்தனுடைய அம்புகளாலே அடிக்கப்பட்டு இரத்தத்தினால் நனைக்கப்பட்ட காம்போஜதேசக்குதிரைகளாலும் யவனர்

களாலும் சகர்களாலும் அப்பொழுது எல்லாம் ரக்தமாகியது. மஹா ராஜரே! அர்ஜுனனும் கர்ணனும் பீமஸேனனும் கோபத்துடன் கூடியவர்களாகவே, குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பட்ட ரதங்களாலும் குதிரைவீரர்கள்கொல்லப்பட்ட குதிரைகளாலும் பாகர்கள் அழிக்கப்பட்டயானைகளாலும் யானைகளழிக்கப்பெற்ற மஹாமாத்ரர்களாலும் அரசர்களுக்கு அந்யோந்யம் பயங்கரமானவிநாசம் உண்டாயிற்று. அந்தக்கௌரவசேனையின் பக்ஷக்கோடியும் பக்ஷமும் வதம் பண்ணப்படுங்கால், அதிகமகங்கொண்ட த்ரோணபுத்திரர் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட பெரிதானவில்லை அசைத்துக்கொண்டு சூரியன் தன்னுடையகிரணங்களை எடுப்பதுபோலக் கோரமானபாணங்களை எடுக்கின்றவராகவும் விரைபவராகவும் ஜயசாலிகளுள்சிறந்தவனை அர்ஜுனனை எதிர்த்தார். உலகத்தை ஆச்சர்யப்படும்படிசெய்கின்றவர்களும் உத்தமமானகீர்த்தியை விரும்புகின்றவர்களும் தர்மபுத்திருடையஸஹோதரர்களுமான அவ்விருவருக்கும் ஜயத்தில் நிச்சயமில்லாத பெரும்போர் நடந்தது. அர்ஜுனன், பீமஸேனன், கர்ணன், மூவரும் முறையே சுறுசுறுப்புள்ளவர்களாக ஸம்சப்தகர்களையும் கௌரவர்களையும் பாஞ்சாலர்களையும் அம்புகளால் நாசஞ்செய்தார்கள். மஹாராஜரே! ஸேனாமுகமானது அவ்வாறு மூன்றாகப் பிரிந்திருக்குந் தருணத்தில், அரசர்களுக்குக் கோரமானயுத்தமும் இவ்விதமான விநாசமும் நேர்ந்தன" என்றுகூறினான்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

**(ஸம்சப்தகர்களோடு போர்புரிகின்ற அர்ஜுனனை அஸ்வத்தாமா யுத்தஞ்செய்வதற்காக அழைத்ததும், அவ்விருவருக்கும் யுத்தமும்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய, அர்ஜுனனுக்கு ஸம்சப்தகர்களோடு எவ்வாறு யுத்தம்நடந்தது? ஸூதபுத்திரனை கர்ணனுக்குப் பாஞ்சாலர்களோடு எவ்வாறு யுத்தம் நடைபெற்றது? அஸ்வத்தாமாவுக்கும் அர்ஜுனனுக்கும் என்னைச்சேர்ந்தமற்றவீரர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்தயுத்தத்தையும் எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! வீரர்களுக்குத் தேகங்களையும் பாவங்களையும் அழிக்கின்றயுத்தமானது பகைவர்களோடு நடந்தவிதத்தைச் சொல்லுகின்றேன்; என்னிடத்தினின்று கேளும். பகைவர்களைப்பீடிப்பவனை

பார்த்தன் பெருங்காற்று ஸமுத்திரக்கைக் கொந்தளிக்கச்செய்வது போல ஸமுத்திரத்திற்கொப்பான ஸம்சப்தகர்களுடைய படையில் நுழைந்து அனேக சேனைகளிக்கச்செய்தான். தனஞ்சயன் கூர்மையுள்ளபல்லங்களாலே பூர்ணசந்திரன்போலப்பிரகாசிக்கின்ற முகமுள்ளவைகளும் அழகியகண்களையும் புருவங்களையும் பற்களையுமுடையவைகளுமான வீரர்களுடைய தலைகளை அறுத்துத் தாம்பிலலாத் தாமரைமலர்கள்போன்ற அவைகளால் பூமியை விரைவாக மூடினான். அர்ஜுனன் யுத்தத்தில் நன்கு திரட்சியாயிருப்பவைகளும் நீண்டவைகளும் புஷ்டியுள்ளவைகளும் சந்தனத்தினாலும் அகிலசாந்தினாலும் அலங்கரிக்கப்பட்டவைகளும் ஆயுதங்களுடன்கூடியவைகளும் கையுறைகளணிந்தவைகளுமாகிய ஐந்துதலைநாகம்போன்றவைகளுமான பகைவர்களுடையகைகளைக் க்ஷுரங்களால்வெட்டினான். பாண்டவன் தேரிற்பூட்டியிருக்கிற குதிரைகளையும் அவைகளைத்தவிர மற்றவைகளையும் ஸாரதிகளையும்கொடிமரங்களையும் வில்களையும் அம்புகளையும் கைகளையும் மிகக் கூர்மையுள்ள பல்லங்களால் துண்டாக்கினான். அரசரே! அர்ஜுனன் யுத்தத்தில் அனேக ஆயிரம் அம்புகளாலே ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் குதிரை பின்மீசேறியிருக்கின்ற வீரர்களையும் யமலோகத்துக்கு அனுப்பினான். சிறந்த வீரர்கள் மிக்க கோபங்கொண்டு யௌவனவயதுள்ள பசுவின் நிமித்தமாகக் கர்ஜிக்கின்றவைகளும் அடங்காகமதங்கொண்டவைகளுமான விருஷபங்கள் கொம்புகளால் (பசுக்களையை முட்டுவது) போலத் துணபுரு செய்பவனும் கோபமுள்ளவனுமான அர்ஜுனனை எதிர்த்துச்சென்று அம்புகளால் அடித்தார்கள். மூவுலகங்களையும் ஜயிப்பதற்காக அஸுரர்களுக்கு இந்திரனோடு எதிர்த்து யுத்தம் நடந்ததுபோல அந்த அர்ஜுனனுக்கும் அந்த ஸம்சப்தகர்களுக்கும் மயிர்க்கூச்செறியும்படியான யுத்தம் நடந்தது. அந்த அர்ஜுனன் சத்துருக்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால் நான்கு பக்கத்திலும் தடுத்து அனேகபாணங்களாலே விரைவாக அடித்து (அவர்களுடைய) உயிரைக் கவர்ந்தான். அர்ஜுனன் காற்றானது பெரியமேகங்களைச் சிதறச்செய்வதுபோல ரதங்களை * கரிவேணுவும் சக்ரமும் அச்சும் வெட்டப்பட்டவைகளாகவும் போர்வீரர்கள் கொல்லப்பட்டவைகளாகவும் ஸாரதிகளும் ஆயுதங்களும் அம்புப்பெட்டிகளும் கொடிகளும் அழிக்கப்பட்டவைகளாகவும் கட்டுக்கயிறுகளும் கடிவாளங்களும் தண்டுகளும் நன்கு அறுக்கப்பட்டவைகளாகவும் கரிவேணுக்களையும் வ

* துரோணபர்வம் 661-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

காலகளையும் இழுந்கவைகளாகவும் தேர்க்தட்டும் நுகமும் சரிந்தவை களாகவும் *அக்ஷப்பிரமண்டலங்கள் மிக நழுவினவைகளாகவும் துண்டு துண்டாகச் செய்துகொண்டு பார்ப்பவருக்கு ஆச்சர்யகரமும் சத்துருக்களுக்குப் பயங்கரமுமாயிருக்கின்ற செய்கையை ஆயிரம் மஹாரதர்களுக்குச்சமமாகச் செய்தான். ஸிததாரள் தேவரிஷி கள் இவர்களுடைய கூட்டங்களும் சாரணர்களும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். தேவதுந்துபிகள் ஒலித்தன. கேசவார்ஜுனர்களு டைய முடியில் பூமாரிகளும் விழுந்தன. அசரீரவாக்கும், 'சந்திரன், அக்னி, வாயு, சூரியன் இவர்களுடைய காந்தியையும் தேஜஸ்ஸையும் பலத்தையும் பிரகாசத்தையும் எப்பொழுதும் முறையேதரிக்கும் வீரர்களான கேசவார்ஜுனர்கள் இவர்களே முற்காலத்தில் பிரம்ம ருத்திரர்கள் வீற்றிருந்ததுபோல ஒரே ரதத்தில் வீற்றிருக்கின்ற இந்த இரண்டு வீரர்களும் எல்லாப்பிராணிகளுள்ளும் சிறந்தவர் களான நரநாராயணர்கள்' என்று மொழிந்தது. பாரதரே! இவ்வாறான இந்தப் பெரிய ஆச்சரியத்தைக் கண்டும் கேட்டும் அசுவத்தாமா மிக்க கோபங்கொண்டு யுத்தத்தில் கிருஷ்ணார்ஜுனர்களை விரைவாக எதிர்த் தார். பிறகு, துரோணபுத்திரர் அட்டஹாசஞ்செய்துகொண்டு பகை வரை அழிக்கக்கூடிய அம்புகளைத் தொடுக்கின்ற பாண்டவனை அம்புக ளுடன்கூடின கையினால் சண்டைக்கு அழைத்து,'வீர! நீ இச்சமயத் தில் வந்து எதிர்த்திருக்கின்றனென்னைத் தகுந்த அதிதியாக நினைப்பாயா கில் எல்லாவிதத்தினாலும் எனக்கு இப்பொழுது யுத்தம்என்கிறவிருந் தைக்கொடு' என்றுசொன்னார். ஆசாரியபுத்திரரால யுத்தஞ்செய்யும் விருப்பத்தோடு இவ்வாறு அழைக்கப்பட்ட அர்ஜுனன் தன்னை நன்கு மதித்தான். ஜனார்த்தனரைப்பார்த்தும் இவ்வாறுசொன்னான். 'மாத வரே! ஸம்சப்தகர்களை நான் கொல்லவேண்டும். அசுவத்தாமாவோ யுத்தத்திற்கு என்னை அழைக்கிறார். இச்சமயத்தில் எதை முதலில் செய்யவேண்டுமோ அதை எனக்குச் சொல்லும். தேவரீருக்கு விருப்பமிருந்தால் எதிர்கொண்டு ஆதித்யம்கொடுப்பேன்' என்று சொன்னான் இவ்வாறுசொல்லக்கேட்டமாதவர் யாகத்தில் தீக்ஷை யென்னும் வேதாங்கத்தில் கூறியமுறைப்படி அழைக்கப்பட்ட இந்தி ரனை வாயுவானவன் கொண்டுவந்துசேர்ப்பதுபோல அழைக்கப்பட்ட பார்த்தனை அசுவத்தாமாவின்பக்கத்தை அணுகும்படிசெய்தார். கேசவர் ஒரேமனத்தையுடையவரான அந்த அசுவத்தாமாவை

* ரதத்திலுள்ள நீட்டத்திலும் அச்சிலும் சேர்த்து இசைக்கப்பட்டிருக் கிற கட்டைகளின் ஸமூகம்

அழைத்து, 'அஸ்வத்தாமாவே! ஸ்திரமாயிருந்துகொண்டு விரைவாக அடிக்கக்கடவீர். ஆயுதங்களையும் நீர் ஸஹித்துக்கொள்ளும். வேலைக்காரர்களுக்கு யஜமானனிட்டசோறுங்கடனைக் கழிப்பதற்கு இஃதன்றோ காலம்! பிராம்மணர்களுடைய விவாதம் ஸூக்ஷ்மமானது. க்ஷத்திரியர்களுடைய வெற்றிதோல்விகள் ஸூக்ஷ்மமானவைகள். பார்த்தனுடையதிவ்யபூஜையை மயக்கத்தினால் பொறுமல்போவீராகில் நீர் முடிவைவிரும்பித் திடமாயிருந்துகொண்டு இப்பொழுது அர்ஜுனனோடு போர்புரிவீராக' என்று சொன்னார். வாஸுதேவரால் இவ்வாறுசொல்லப்பட்ட பிராம்மணோத்தமர் 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொல்லிக் கேசவரை அறுபதுநாராசங்களாலும்அர்ஜுனனை மூன்றுநாராசங்களாலும் அடித்தார். அர்ஜுனன் மிக்ககோபங்கொண்டு மூன்றுபாணங்களால அந்த அஸ்வத்தாமாவினுடைய வில்லைத் துண்டாக்கினான். த்ரௌணியானவர் மிக்ககோரமான வேறு வில்லை எடுத்து நாணேற்றி நிமிஷத்தினுள் பாண்டுநந்தனனான அர்ஜுனனையும் வஸுதேவபுத்திரனான கேசவனையும், ஆயிரம்பாணங்களாலும் முந்நூறுபாணங்களாலும் அடித்தார். பிறகு, முயற்சியுடையவரான த்ரோணகுமாரர் ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் லக்ஷக்கணக்காகவும் பாணங்களைப் பிரயோகித்து அர்ஜுனனை ஸ்தம்பிக்கச்செய்தார். ஐயா! பிரம்மவாதியான அஸ்வத்தாமாவினுடைய அம்பறாத்தூணியினின்றும் வில்லினின்றும்நாண்கயிற்றினின்றும் விரல்களினின்றும் இரண்டுகைகளினின்றும் இரண்டுபுஜங்களினின்றும் மார்பினின்றும் முகத்தினின்றும் மூக்கினின்றும் கண்ணினின்றும் இரண்டுகாதுகளினின்றும் தலையினின்றும்அங்கங்களினின்றும் ரோமங்களினின்றும் கவசங்களினின்றும் ரதத்தினின்றும் த்வஜத்தினின்றும் பாணங்கள் வெளிப்பட்டன. த்ரோணபுத்திரர் பெரிதானபாணவலையினால் மாதவனையும் அர்ஜுனனையுங்கட்டி ஸந்தோஷமுள்ளவராகப் பெரிய மேகக்கூட்டத்தினுடைய இடிமுழக்கம் போன்றசப்தத்தோடு ஸிம்மநாதஞ்செய்தார். மஹாராஜரே! த்ரௌணியினால்விடப்பட்டு நான்குபக்கத்தினின்றும் வந்துவிழுகின்ற அந்தப் பாணங்களால ரதத்திலிருக்கின்ற அந்தக் கிருஷ்ணார்ஜுனர் இருவரும் நன்றாக மூடப்பட்டார்கள். பிறகு, பிரதாபசாலியான அஸ்வத்தாமா யுத்தத்தில அந்தமாதவர் பாண்டவன் இருவரையும் கூர்மையுள்ள அனேக அம்புகளாலே அசைவற்றவர்களாகச் செய்தார். சராசரங்களுக்கு ரக்ஷகர்களான அவவிருவரும்பாணங்களால்நன்றாக மூடப்பட்டார்களென்பதைக் கண்டு ஜங்கமஸ்தாவரமனைத்தும் ஹா

ஹாகாரம்கொண்டன. ஸித்த சாரணர்களுடைய கூட்டங்கள் நான்கு பக்கத்தினின்றும் வந்தன; ‘இப்பொழுது உலகங்களுக்கு க்ஷேமமானது உண்டாகுமா’ என்றும் சொல்லின. அரசரே! யுத்தத்தில் கிருஷ்ணார்ஜுனர்களை மூடுகின்ற த்ரோணபுத்திரருக்கு உண்டானதுபோன்ற பராக்கிரமம் என்னால் இதற்குமுன் பார்க்கப் பட்டதேயில்லை. மன்னரே! யுத்தத்தில் ரதிகர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகிற த்ரௌணியினுடைய வில்லின் சப்தத்தைக் கர்ஜிக்கின்ற ஸிம்மத்தினுடைய சப்தத்தைப்போலப் பலதரம் கேட்டேன். யுத்தத்தில் இடமாகவும் வலமாகவும் ஸஞ்சரிக்கின்றவரும் (அம்புகளைத்) தொடுப்பவருமான இந்த அஸ்வத்தாமாவினுடைய வில்லிலுள்ள நாண்கயிறானது மேகத்தினுடைய மின்னல்போல விளங்குவதாகக் காணப்பட்டது. சுறுசுறுப்புடன் கார்யத்தைச்செய்பவனும் திடமான கைப்பிடியுள்ளவனும் பாண்டுநந்தனனுமான அந்தத் தனஞ்சயன் அப்பொழுது அதிகமதிமயக்கத்தையடைந்து பார்த்துக் கொண்டிருந்தான்; யுத்தகளத்தில் விக்கிரமத்துடன் இடமாகவும் வலமாகவும் ஸஞ்சரிக்கின்றவனும் (அம்புகளைப்) பிரயோகிக்கின்றவனுமான தன்னுடைய பராக்ரமத்தை யுத்தத்தில் அந்த அஸ்வத்தாமாவினால் கவரப்பட்டதாக எண்ணினான். வேந்தரே! பிறகு, யுத்தத்தில் அவ்விதமான கார்யத்தைச்செய்கின்ற த்ரோணபுத்திரருடைய ஸ்வரூபமானது ருத்திரருடைய சரீரம்போலப் பார்க்கமுடியாததாயிருந்தது. அரசரே! பிறகு, அந்த யுத்தத்தில் த்ரோணபுத்திரர் விருத்தியடைந்து குந்தீபுத்திரனும் குறைவுபடவே, ரோஷமானது கிருஷ்ணனை வந்தடைந்தது. அரசரே! அந்த வாஸுதேவர் ரோஷத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு கண்ணினால் எரிக்கின்றவர் போல யுத்தத்தில் த்ரோணபுத்திரரையும் பல்குனனையும் அடிக்கடி பார்த்தார்.

பிறகு, கண்ணபிரான் கோபங்கொண்டு பார்த்தனை நோக்கி, ‘பாரத! குந்தீபுத்திர! யுத்தத்தில் த்ரோணபுத்திரர் உன்னை இப்பொழுது மீறியதை உன்னிடத்தில் ஆச்சர்யமாக எண்ணுகிறேன். உன்னுடைய கையிலுள்ள காண்டீவமானது சிதறிப்போகாமலிருக்கின்றதா? கைப்பிடி உறுதியாயிருக்கின்றதா? வீர்யமானது முன்போல் இருக்கின்றதா? உனது இருகைகளுடைய பலமும் முன்போலிருக்கின்றதா? பாண்டவர்களுள் சிறந்தவனே! யுத்தத்தில் த்ரோண புத்திரரை அதிக ஆண்மையுள்ளவராகக் காண்கிறேன். குருபுத்திரரென்று இவரைக் கௌரவித்துக்கொண்டு போரில் உபேக்ஷைசெய்

யாதே. பார்த்த! உபேக்ஷைசெய்வதற்கு இது ஸமயமன்று' என்று அன்புடன் இவ்வசனத்தைக் கூறினார். அர்ஜுனன், 'யாதவரே! என் விஷயத்தில் குருபுத்திரருடைய துஷ்டஸ்வபாவத்தைப்பாரும். அம்புமயமானவீட்டில் பிரவேசிக்கச்செய்து நம்மை மாண்டவர்களென்று எண்ணுகிறார். சிக்ஷையினாலும் பலத்தினாலும் இதோ நான் இவரைக் கொல்ல ஸங்கல்பித்துவிட்டேன்' என்றுகூறினான். இவ்வாறுசொல்லிவிட்டு, பரதர்களுள் சிறந்தவனான அர்ஜுனன் அந்தஅஸ்வத்தாமாவினுடையவில்லையும் குடையையும் கொடித்துணியையும் தாழைமடல் போன்றவடிவமுள்ள சக்தியையும் சிறந்தகதாயுதத்தையும் கருமாரால் சாணையிடப்பட்டபல்லங்களால் துண்டாக்கினான். அர்ஜுனன் அஸ்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அம்புகள் ஒவ்வொன்றையும் மும்மூன்றாகத் துண்டாக்கி, காற்றானது பனியை நாசம்செய்வது போல நாசம்செய்தான். பிறகு, பாண்டவன் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் ரதங்களோடும் யானைகளோடும் த்வஜங்களோடும் காலாட்களுடைய கூட்டங்களோடுங்கூடின ஸம்சப்தகர்களை மறுபடியும் உக்கிரமான பாணங்களால் அடித்தான். அந்தயுத்தரங்கத்தில் அப்பொழுது பலபல ரூபமுடையவர்களாகக் காணப்பட்ட ஜனங்கள் அந்தயுத்தத்தில் தாங்களே தங்களைப் பாணங்களால் மூடப்பட்டவர்களாக எண்ணிக்கொண்டார்கள். காண்டீவத்தினால் விடப்பட்டவைகளும் பற்பல உருவமுள்ளவைகளுமான அவ்வம்புகள் யுத்தத்தில் ஒருக்ரோசத்துக்கு அப்புறத்திலுள்ள யானைகளையும் மனிதர்களையும் கொன்றன. காட்டில் கோடாலிகளால் வெட்டப்பட்ட இலவமரங்கள்போல மதத்தைப் பெருக்குகின்ற யானைகளுடைய துதிக்கைகள் பல்லங்களால் அறுக்கப்பட்டு விழுந்தன. பிறகு, மலைபோன்ற அந்தயானைகள் மாவுத்தர்களோடு இந்திரனுடைய வஜ்ராயுதத்தினால் பிளக்கப்பட்டமலைகளுடைய கூட்டங்கள்போலக் கீழேவிழுந்தன. தனஞ்சயன் நன்குபழக்கப்பட்ட வேகமுள்ளகுதிரைகளோடு கூடியவைகளும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட வீரர்களால் வீற்றிருக்கப்பட்டவைகளும் *கந்தர்வநகரம்போன்ற உருவமுள்ளவைகளும்நன்றாகஅமைக்கப்பட்டவைகளுமான ரதங்களைப் பாணங்களால் துண்டுதுண்டாகச் செய்து சத்துருக்களின்மேல் அம்புகளைப் பொழிந்தான். அவன் நன்றாகஅலங்கரிக்கப்பட்ட குதிரைவீரர்களையும் காலாட்களையும் கொன்

* பீஷ்மபர்வம், 402-ம் பக்கத்திலும் துரோணபர்வம் 72, 566-ம் பக்கங்களிலும் குறிப்பிற் காண்க.

ரூன். தனஞ்சயனுகிற பிரளயகாலத்துச்சூரியன் வறட்சியடை விக்கக்கூடாததான ஸம்சப்தகர்களாகிற மஹாஸமுத்திரத்தைக் கூர்மையுள்ள அம்புகளாகிற கிரணங்களால் வறளச் செய்தான். மறுபடியும் அர்ஜுனன் விரைவுள்ளவனுக மிக்கவேகமுள்ளவைகளும் வஜ்ராயுதத்திற்கொப்பானவைகளுமான நாராசங்களால் இந்திரன் பர்வதத்தைப்பிளப்பதுபோல் த்ரோணபுத்திரராகிற பெருமலையைப் பிளந்தான். கோபங்கொண்டவரான ஆசார்யகுமாரர் யுத்தம்செய்ய விரும்பிக் குதிரைகளுடனும் ஸாரதிகளுடனும் கூடின அந்தஅர்ஜுனன்மீது பாணங்களைப்பிரயோகித்துக்கொண்டு யுத்தம்செய்வதற்காக எதிரில்வந்தார். பார்த்தன் அவ்வம்புகளை வெட்டினுன். பிறகு, அஸ்வத்தாமா மிகுந்தகோபங்கொண்டு நற்குணமுள்ள அதிதிக்கு வீட்டை (=வீட்டிலுள்ளபொருள்களை) அர்ப்பணம்செய்வதுபோல் அம்பறாத்தூணியை (=தூணியிலுள்ள அம்புகளை) அர்ஜுனனுக்கே அர்ப்பணஞ்செய்தார். பிறகு, பாண்டவன், பந்தியிலமைவுக்குத்தகாதவர்களைவிட்டுப் பந்தியில்ஏற்றுக்கொள்ளத்தக்க யாசகனைக் கொடையாளியானவன் நாடுவதுபோல ஸம்சப்தர்களைவிட்டு த்ரோணபுத்திரனை எதிர்த்துவந்தான். ராஜரே! ஸம்சப்தகர்கள் மஹாத்மாக்களான அவ்விருவருடையயுத்தத்தையும் பார்த்துக்கொண்டே நின்றூர்கள்.

---

## ஐம்பத்துமூன்றுவது அத்யாயம்.

### (அர்ஜுனனுல் அஸ்வத்தாமா தோல்வ் அடைந்தது.)

பிறகு, சுக்கிரன் பிருகஸ்பதிஇவர்களுடைய தேஜஸ்போன்ற தேஜஸையுடையவர்களான அர்ஜுனன் அஸ்வத்தாமா இருவருக்கும், ஆகாயத்தில் நக்ஷத்திரத்தை லக்ஷயம்வைததுச் சுக்கிரனுக்கும் பிருஹஸ்பதிக்கும் யுத்தம்நேர்ந்ததுபோல யுத்தம் நேர்ந்தது. ஜ்வலிக்கின்றபாணங்களுடைய கிரணங்களால் ஒருவரையொருவர் நன்கு தபிக்கச்செய்கின்றவர்களான அவ்விருவரும்உலகத்துக்குப் பயத்தை உண்டுபண்ணுகின்றவைகளும் வக்ரகதிகளை அடைந்திருப்பவைகளுமான இரண்டுகிரஹங்கள்போலிருந்தார்கள். பிறகு, அர்ஜுனன் அஸ்வத்தாமாவை நாராசங்களால் இரண்டு புருவங்களுக்குமிடையில் நன்றாகஅடித்தான். அந்தஅடியினால் அந்தவீரர் மேல்நோக்கிய கிரணங்களையுடைய சூரியன்போல விளங்கினூர். பிறகு, அஸ்வத்தாமாவினுல் அநேக அம்புகளால் மிகவும் அடிக்கப்பட்ட கிருஷ்ணர்ஜுனர்கள் தம்முடைய கிரணஸமூகங்களால் மலர்ந்திருக்கின்ற

யுகாந்தகாலத்திலுள்ள இரண்டுசூரியர்கள்போலப் பிரகாசித்தார்கள். பிறகு, அர்ஜுனன், வாஸுதேவர் அவமதிக்கப்படவே, அஸ்வத்தாமாவின்மீது "நான்குபக்கத்திலும் பரவக்கூடிய அஸ்திரத்தைப் பிரயோகித்தான். த்ரோணபுத்திரரும், வஜ்ராயுதத்துக்கும் அக்னிக்கும் யமதண்டத்துக்கும் ஒப்பானஅம்புகளால் (அர்ஜுனனை) அடித்தார். அதிகதேஜஸையுடையவரும் மிகவும் பயங்கரமான செய்கையுள்ளவருமான அந்த அஸ்வத்தாமா, அடித்தால் யமனையுந் துன்பத்தைஅடைவிப்பவைகளும் நன்குவிடப்பட்டவைகளும் அதிதீவ்ரமான வேகமுள்ளவைகளுமான அம்புகளால் கேசவரையும் அர்ஜுனனையும் மர்மஸ்தானங்களில் அடித்தார். அர்ஜுனன் போர்புரிகின்ற த்ரோணபுத்திரருடைய பாணங்களை உறுதியான புங்கமுள்ளவைகளும் அவற்றிலும் இரண்டுமடங்குள்ளவைகளுமான அம்புகளால்நன்றாகத்தடுத்துக் குதிரைகளோடும்ஸாரதியோடும்கொடியோடுங்கூடின அந்த ஏகவீரரைத் தடுத்து ஸம்சப்தகர்களுடைய படையைக்குறித்துச்சென்றான். அவன், நன்றாகப்பிரயோகிக்கப்பட்ட அம்புகளால், புறங்காட்டாதவர்களும் நிற்பவர்களுமானபகைவர்களுடைய விற்களையும் பாணங்களையும் அம்பறாத்தூணிகளையும் வில்லிற்கட்டிய நாண்களையும் உள்ளங்கைகளையும் புஜங்களையும் கையிலிருந்தசஸ்திரத்தையும் குடைகளையும் கொடிகளையும் குதிரைகளையும் தேரின்ஏர்க்காலையும் ஆடைகளையும் மாலைகளையும், பூஷணங்களையும் கேடகங்களையும் அழகியகவசங்களையும் அவர்களின்தலைகளையும் பலாத்கரித்து வெட்டினான். மிக்க ஸன்னாகமுடையவைகளும்நல்லமுயற்சியுள்ளநரவீரர்களால் ஏறப்பட்டவைகளுமான ரதங்களும் குதிரைகளும் யானைகளும் பார்த்தனால் விடப்படும் அநேக அம்புகளாலே அடித்துத் தள்ளப்பட்டு அந்த நரவீரர்களோடுகூடவே அழிந்தன. அர்ஜுனன் தாமரைமலருக்கும் சூரியனுக்கும் பூர்ணசந்திரனுக்கும் ஒப்பானமுகமுள்ளவைகளும் கிரீடங்களாலும் புஷ்பமாலைகளாலும் ஆபரணங்களாலும் விளங்குகின்றவைகளுமான பகைவர்களுடைய தலைகளைப் பல்லங்களாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் க்ஷுரங்களாலும் ஓயாமல் நன்குஅறுத்துத் தள்ளினான். பிறகு, தேவசத்துருக்களான அஸுரர்கள்போன்றவர்களும் வீரர்களுமான கலிங்கர்களும் வங்கர்களும் அங்கர்களும் நிஷாதர்களும் அஸுரர்களுடைய யானைகள்போலப் பிரகாசிக்கின்றவைகளும் பலமும் கோபமும் வடிவெடுத்தாற்போன்றவைகளுமான யானைகளுடன் பாண்டவனைக் கொல்லவிரும்பி எதிர்த்துவந்தார்கள். பார்த்தன் அந்தயானைகளுடைய கவசங்களை

யும் தோல்களையும் தூணிக்கைகளையும் யானைவீரர்களையும் வெட்டினான். அந்தயானையினின்று கொடிகளும் கொடித்தூணிகளும் வஜ்ராத்தினாலடிக்கப்பட்ட மலைச்சிகரங்கள்போல் விழுந்தன. அந்த ஸம்சப்தகர்கள் முறிய அடிக்கப்பட்டவுடன், காற்றானது பெரிய மேகமண்டலங்களால் உதிக்கின்ற சூரியனை மூடுவதுபோலக் கிரீடியானவன் உதிக்கின்ற சூரியனுடைய வர்ணம்போன்ற வர்ணமுள்ள பாணங்களால் குருபுத்திரரை மூடினான். பிறகு, அஸ்வத்தாமா கூர்மையுள்ள அம்புகளால் அர்ஜுனனுடைய அம்புகளை நாசஞ்செய்து மாரிக்காலத்தில் சந்திர சூரியர்களை மேகமானது ஆகாயத்தில் மறைப்பதுபோல அர்ஜுனனையும் வாஸுதேவரையும் நன்றாகமூடி ஸிம்மநாதஞ்செய்தார். எதிர்த்துவந்து அந்தவீரர்களால் ஆயுதங்களாலடிக்கப்பட்ட குந்திபுத்திரனான அர்ஜுனன் பாணாந்தகாரத்தை விரைவாகச் சேதித்துச் சிறந்தபொற்கட்டமைந்த அம்புகளால் அந்த அஸ்வத்தாமாவையும் உம்மைச்சேர்ந்த அந்தவீரர்களையும் மீண்டும் அடித்தான். பாணங்களை எடுப்பவனும் ஸந்தானஞ்செய்பவனும் பிரயோகிப்பவனுமான ஸவ்யஸாசி ரதத்தில் காணப்படவில்லை. ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் காலாட்களையும் ஒன்றோடொன்று நன்றாகமோதிக்கொண்டிருக்கின்ற சரீரங்களையுடையவைகளாகவும் தொல்லைப்பட்டவைகளாகவும் கண்டார்கள். த்ரோணபுத்திரர் விரைபவராகிச் சிறந்த பத்து நாராசங்களை வேகமாகக்கொடுத்து ஒருபாணம்போலப் பிரயோகித்தார். அவைகளுள், ஐந்துபாணங்கள் அர்ஜுனனை எதிரில் அடித்தன. நல்லகட்டுக்களுடன்கூடின ஐந்துபாணங்கள் அச்சுதரைப்பிளந்தன. தனுர்வேதத்தை அறிந்தவரான அந்த அஸ்வத்தாமாவினால் அவ்வாறு அவமதிக்கப்பட்டவர்களும் அவ்வம்புகளாலே அடிக்கப்பட்டு ரத்தத்தைப் பெருக்கிக்கொண்டிருக்கிறவர்களும் குபேரனும் இந்திரனும் போன்றவர்களும் எல்லா மனிதர்களுள்ளும் சிறந்தவர்களுமான அவ்விருவர்களையும் யுத்தத்தில் மாண்டவர்களென்றே மற்றவர்கள் எண்ணினார்கள். பிறகு, தசார்ஹர்களுக்கு நாதரான ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனைப்பார்த்து, 'ஏன் அஜாக்ரதையாயிருக்கிறாய்? இந்தப் போர்வீரரைக் கொல். இவர் உபேக்ஷிக்கப்பட்டால் சிகித்ஸைசெய்யப்படாத கஷ்டமான வியாதிபோலக் தோஷத்தை விளைவிப்பாரன்றோ?' என்று சொன்னார்.

ஊக்கமுள்ள கிரீடியானவன் அச்சுதரைப்பார்த்து, 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு அட்டஹாஸஞ்செய்து விரைவாகக் காண்டீவத்தினின்று விடப்படுகின்றவைகளும் கோபங்கொண்டஸர்ப்

ம்போன்றவைகளுமான பாணங்களாலே த்ரோணபுத்திரருடைய சிறந்தசந்தனத்தினால்பூசப்பட்ட உத்தமமான இருகைகளையும் மார் பையும் தலையையும் அவ்வாறே நிகரற்ற இரண்டுதொடைகளையும் அடித்து த்ரோணபுத்திரரையும் யுத்தத்தில் பிளந்தான். அர்ஜுனன் கடிவாளங்களை அறுத்துக் குதிரைகளையும் அடித்தான். அந்தக்குதி ரைகள் அவரை யுத்தபூமியினின்று வெகுதூரம் இழுத்துக்கொண்டு சென்றுவிட்டன. காற்றின்வேகம்போன்ற வேகமுடைய அக்குதி ரைகளாலே இழுத்துக்கொண்டு போகப்பட்டவரும் புத்திசாலியுமான அந்த த்ரோணபுத்திரர் பார்த்தனுடையஅம்புகளால் திடமாகஅடிக் கப்பட்டு (மறுபடியும்) திரும்பிவந்து பார்த்தனோடு போர்புரிவதற்குச் சக்தியற்றவரானார். அங்கிரஸின்வம்சத்தில் பிறந்தவர்களுள் சிறந்த வரும் சிறந்தபலமுள்ளவருமான அந்தஅஸ்வத்தாமா பாணங்களும் அஸ்திரங்களும் குறைந்துபோய் உத்ஸாகத்தையிழந்து விருஷ்ணி வீரரான கிருஷ்ணரிடத்திலும் தனஞ்சயனிடத்திலும் ஜயம் நிச்சய மென்று ஆலோசித்துக் கர்ணனுடையபடையில் பிரவேசித்துவிட் டார். மந்திரங்களாலும் ஔஷதங்களாலும் சிகித்ஸைகளாலும் உபா யங்களாலும் தேகத்தினின்று எடுக்கப்பட்டவியாதிபோல விருத்த மானகாரியத்தைச்செய்ய எண்ணங்கொண்ட அஸ்வத்தாமா குதிரை களால் வேறிடத்திற்கு இழுத்துக்கொண்டுபோகப்பட்டபின், கேச வரும் அர்ஜுனனும் காற்றினால்அசைக்கப்பட்ட கொடியுள்ளதும் வெள்ளம்போல முழங்குகின்றதுமான ரதத்துடன் ஸம்சப்தகர்களுக் கெதிராகச் சென்றார்கள்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

### (அர்ஜுனன் தண்டதாரனையும் தண்டனையுங் கொன்றது.)

பிறகு, வடபுறத்தில் பாண்டவர்களுடையசேனையில் தண்ட தாரனால்கொல்லப்படுகின்ற ரதங்கள், யானைகள், குதிரைகள், காலாட் கள் இவைகளுடைய சப்தமானது தோன்றியது. கருடன் காற்று இவைகளுடைய வேகத்துக்குச்சமமான வேகமுள்ளகுதிரைகளை நடத்திக்கொண்டே செல்லுகின்ற கேசவர் ரதத்தைத்திருப்பி அர் ஜுனனைப்பார்த்து, 'பகைவரை அழிக்கின்றயானையோடு இதோ மகத நாடன் மீறிச்செல்லுகிறான். இவன் படைப்பயிற்சியினாலும் பலத் தினாலும் பகதத்தனுக்குக் குறைந்தவனல்லன். இவனைக்கொன்று மறுபடியும் ஸம்சப்தகர்களைக்கொல்வாய்' என்றுசொன்னார். பேச்சு

முடிவதற்குள் பார்த்தனைத் தண்டதாரனுடையயானையை அடையச் செய்தார். மாகதர்களுள்சிறந்தவனும் மஹாபலசாலியும் அமங்கள கார்யத்தில் பிடிவாதமுள்ளவனுமான அந்தத்தண்டதாரன் யுத்த வீரர்களுடைய கூட்டங்களோடுகூடிப் பயங்கரமாயும் விஸ்தீர்ண மாயுமுள்ள தூமகேதுஸ்வரூபியான உத்பாதகிரகமானது பூமிமுழு மையும் நாசஞ்செய்வதுபோலப் பகைவர்சேனையை நாசஞ்செய் தான். நன்குபழக்கப்பட்டதும் கஜாஸுரன்போன்றதும் மஹா மேகத்தினுடைய இடிமுழக்கம்போன்ற முழக்கமுள்ளதும் ரதங் களையும் குதிரைகளையும் யானைகளையும் மனிதர்களையும் நாசஞ்செய் கின்றதுமான சிறந்தயானையின்மீது வீற்றிருப்பவனும் யுத்தத்தில் வீர்யமுள்ளவனுமான அந்தத்தண்டதாரன் யுத்தத்தில் யானை வீரர்களையும் காலாட்கூட்டங்களையும் மஹாரதர்களையும் குதிரை வீரர்களுடன்கூடின குதிரைகளையும் யானைகளையும் காலசக்ரம் போல எல்லாப்பக்கங்களிலும் பாணங்களால் கொன்றான். அந்தத் தண்டதாரன் வெண்கலத்தாலானவையும் இரும்பினாலானவையுமான கவசங்களைப் பூஷணங்களாக அணிந்தவர்களும் குதிரைகளையுடைய வர்களுமான மனிதர்களைக் காலாட்களுடன்கூட விழும்படிசெய்து, பல முள்ள ஒருசிறந்தயானையானது பெருங்கோரைகளை ஓசையுடன் அழிப் பதுபோல நாசஞ்செய்தான். பிறகு, அர்ஜுனன் நாண்கயிற்றினின் றும் கைவிரலுறையினின்றும் சக்ரங்களுடைய நுனியினின்றும் உண்டானசப்தமுள்ளதும் மிருதங்கங்களாலும் பேரிகளாலும் அனேக சங்கங்களாலும் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்டதும் ரதங்களாலும் குதிரைகளாலும் ஆயிரக்கணக்கான யானைகளாலும் சப்தமுள்ள தாகச் செய்யப்பட்டதுமான யுத்தத்தில் சிறந்த ரதத்துடன் (தண்ட தாரனுடைய சிறந்தயானையை) எதிர்த்தான். பிறகு, அந்தத்தண்டதா ரன் அர்ஜுனனை உத்தமமான பன்னிரண்டுபாணங்களாலும் ஜனார்த் தனனைப் பதினாறுபாணங்களாலும் குதிரைகளை மும்மூன்றுபாணங்க ளாலும் அடித்து, பிறகு, ஸிம்மநாதஞ்செய்தான்; அடிக்கடி சிரிக்க வும் சிரித்தான். பிறகு, பார்த்தன் பல்லங்களாலே நாண்கயிறோடும் பாணங்களுடனும்கூடின அந்தத்தண்டதாரனுடைய வில்லையும் அலங் கரிக்கப்பட்ட த்வஜத்தையும் அறுத்து மறுபடியும் பாதரக்ஷகர்க ளோடு பாகர்களையும் கொன்றான். பிறகு, கிரிவ்ரஜதேசத்தரச னான அந்தத்தண்டதாரன் கோபங்கொண்டான். பிறகு, அர்ஜுனனை அதிகமாகக்கோபமூட்டக்கருதிய அந்தத்தண்டதாரன் கபோலங்களில் மதநீர்பெருகுவதும் துன்பஞ்செய்யும் தன்மையுள்ளதும் காற்றுப்

போன்றவேகமுள்ளதுமான யானையிலிருந்து தோமரங்களால் ஜனார்த்தனனையும் தனஞ்சயனையும் அடித்தான். பிறகு, பாண்டவன் மூன்று பாணங்களால் யானைத்துதிக்கைக்கொப்பான அந்தத் தண்டதாரனுடைய இரண்டு கைகளையும் பூர்ணசந்திரனுக்கொப்பான முகத்துடன்கூடினதலையையும் ஒரேஸமயத்தில் அறுத்து, பிறகு யானையின்மீது அனேக பாணங்களைப் பிரயோகித்தான். பொன்னாலலங்கரிக்கப்பட்ட பார்த்தனுடைய பாணங்களால் நன்கு சூழப்பட்டதும் பொற்கவசத்தை அணிந்திருப்பதுமான அந்தயானை இரவில் காட்டுத்தீயினால் பற்றியெரிகின்ற ஓஷதிகளோடும் மரங்களோடும்கூடின மலைபோல அதிகமாக விளங்கிற்று. மேகத்தையொத்த பீடிக்கப்பட்ட அந்த யானை மேகத்தினுடைய இடிமுழக்கம்போல் வீரிட்டுக் கதறிக்கொண்டும் நிலைதவறி நான்குபக்கத்திலும் சுற்றிக்கொண்டும் மனந்தடுமாறி (யுத்தரங்கத்தைவிட்டு) ஓடியது. துன்பத்தை அடைந்த அந்த யானை பாகனோடுகூடவே வஜ்ராயுதத்தினால் பிளக்கப்பட்டமலைபோல விழுந்தது. பனிபோல வெண்ணிறமுள்ளதும் பொன்மாலையை அணிந்ததும் இமயமலையினுடைய சிகரம்போன்றதுமான யானையுடன் பிராதாவானவன் யுத்தத்தில் கொல்லப்படவே, தண்டன் உபேந்திரனான கண்ணபிரானையும் அர்ஜுனனையும் கொல்லவெண்ணி விரைவாக ஓடிவந்தான். அந்த தண்டன் சூரியனுடைய கிரணங்கள்போற் பிரகாசிப்பவைகளும் கூர்மையுள்ளவைகளுமான மூன்று தோமரங்களால் ஜனார்த்தனனையும் ஐந்து தோமரங்களாலே அர்ஜுனனையும் அடித்து ஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, பாண்டவன் அடிப்பவனாகிய அவனுடைய இருகைகளையும் அறுத்தான். க்ஷுரப்ரத்தினாலறுக்கப்பட்டவைகளும் பருத்திருப்பவைகளும் தோமராயுதத்துடன்கூடியவைகளும் நல்ல தோள்வளைகளை அணிந்தவைகளும் சந்தனத்தினால் பூசப்பட்டவைகளும் யானையின்மீதிருந்து ஒரேஸமயத்தில் விழுகின்றவைகளுமான இருகைகளும் மலையினது சிகரத்தினின்று பூமியில் விழுகின்ற இரண்டு ஸர்ப்பங்கள்போல விளங்கின. பிறகு, கிரீடியினால் அர்த்தசந்திரபாணத்தாலறுக்கப்பட்ட தண்டனுடைய தலையானது யானையின்மீதிருந்து பூமியில் விழுந்தது. ரத்தத்தால் நனைந்து விழுகின்ற அந்தத்தண்டன் அஸ்தகிரியினின்று மேற்றிசையில் விழுகின்ற சூரியன்போல விளங்கினான். பிறகு, பார்த்தன் சூரியனுடைய கிரணங்களுக்கொப்பான உத்தமமான பாணங்களாலே இமயமலையினுடைய சிகரத்துக்கொப்பான அந்த யானையைப் பிளந்தான். அந்த யானையானது வஜ்ராயுதத்தினாலடிக்கப்பட்ட இமயமலையினுடைய

சிகரம்போல வீரிட்டுக்கொண்டு விழுந்தது. பிறகு, ஸவ்யஸாசியினால் யுத்தத்தில் ஜயத்தில் விருப்பமுள்ளவைகளான அந்த யானைபோன்ற மற்றயானைகளும் அந்த இரண்டு யானைகள்போலவே நாசஞ்செய்யப் பட்டன. பிறகு, மிகப்பெரிதான சத்துருவினுடைய படையானது நன்கு நாசஞ்செய்யப்பட்டது. யானைகளும் ரதிகர்களும் குதிரை களும் மனிதர்களும் கூட்டம்கூட்டமாகப் பரஸ்பரம் கொன்று கொண்டு யுத்தத்தில் விழுந்தார்கள். மிக்க தடுமாற்றமுற்றவர்களும் நன்கு அடிக்கப்பட்டவர்களும் அதைஅதைப் பலவாறாகப் பேசுகின் றவர்களுமான மனிதர்கள் ஒருவரால் மற்றொருவர் கொல்லப்பட் டார்கள். பிறகு, அர்ஜுனனுடைய படைவீரர்கள், தேவகணங்கள் இந்திரனைச்சூழ்ந்துகொள்வதுபோல அர்ஜுனனைச் சூழ்ந்துகொண்டு, 'வீர! பிரஜைகள் மரணத்தினின்று பயப்படுவதுபோல எவனிடத்தி னின்று பயமடைந்தோமோ அந்தச்சத்துருவானவன் எங்களுடைய பாக்கியத்தால் உன்னால் கொல்லப்பட்டான். பகைவர்களை நாசஞ் செய்பவனே! இவ்வாறு பலசாலிகளான பகைவர்களால் மிகப் பீடிக் கப்பட்ட இந்த ஜனங்களைப் பயத்தினின்று பாதுகாவாமற்போனால் அப்பொழுது, இவர்கள் கொல்லப்பட்டதால் இப்பொழுது நமக்கு உண்டானதுபோன்ற ஸந்தோஷம் பகைவர்களுக்கு உண்டாயிருக் கும்' என்று கூறினார்கள். அர்ஜுனன் இவ்வாறாகவே மறுபடியும் நண்பர்களால் புகழப்படுகின்ற வாக்குக்களைக்கேட்டு அப்போது ஸந் தோஷமுள்ள மனத்தையுடையவனாகத் தக்கபடி அந்த ஜனங்களுக் குப் பிரதிமரியாதைசெய்துவிட்டு மறுபடியும் ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களைக் கொல்லச் சென்றான்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

### (அர்ஜுனன் ஸம்சப்தகர்களைக் கொன்றது.)

அர்ஜுனன், அங்காரகக்கிரஹம்போல வக்ரானுவக்ரமான கதியினால் மறுபடியும் திரும்பிவந்து ஸம்சப்தகர்களை ஜயித்துப் பிர காசித்தான். அரசரே! பாரதரே! பார்த்தனுடைய அம்புகளாலடிக் கப்பட்ட மனிதர்களும் குதிரைகளும் ரதங்களும் யானைகளும் நிலை தவறின; சுற்றிவந்தன; அழிந்தன; விழுந்தன; மாண்டன. பாண்டவன் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிகின்ற சத்துருவீரர் களுடைய ரதத்தில் பூட்டியிருக்கின்ற குதிரைகளையும் மற்றைக்குதி ரைகளையும் ஸாரதிகளையும் கொடிகளையும் விற்களையும் பாணங்களுடன்

யும் அம்புகளையும் கைகளையும் கையிலுள்ள சஸ்திரங்களையும் புஜங்களையும் தலைகளையும் பல்லங்களாலும் க்ஷுரங்களாலும் அர்த்தசந்திர பாணங்களாலும் வத்ஸதந்தங்களாலும் அறுத்தான். உம்மைச் சேர்ந்த யுத்தவீரர்கள் கர்ஜித்துக்கொண்டு அந்த அர்ஜுனனை விரைவாக எதிர்த்தார்கள். ஒருபசுநிமித்தமாகச் சண்டைபோட எண்ணங்கொண்டகாளைகள் ஒருகாளையைத் தாக்குவதுபோலச் சூரர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் அர்ஜுனனைத் தாக்கினார்கள். அவர்களுக்கும் அந்த அர்ஜுனனுக்கும், மூவுலகங்களையும் ஜயிக்கும் விஷயத்தில் அஸுரர்களுக்கு இந்திரனோடு யுத்தம் நேர்ந்ததுபோல மயிர்புளகித்தலையுண்டுபண்ணுகின்ற போர் நடந்தது. அர்ஜுனன் கடிக்குந்தன்மையுள்ள ஸர்ப்பங்கள்போன்ற மூன்றுபாணங்களால் *உக்கிராயுதனை அடித்து அவனுடைய தலையைச் சரீரத்தினின்று கவர்ந்தான். அந்த ஸம்சப்தகவீரர்கள் கோபங்கொண்டு மாரிக்காலத்தில் காற்றுக்களால் செலுத்தப்பட்ட மேகங்கள் இமயமலையின் மீது பொழிவதுபோல அர்ஜுனன்மீது நான்குபக்கத்திலும் பற்பல சஸ்திரங்களைப் பொழிந்தார்கள். அர்ஜுனன் நான்குபக்கத்தினின்றும் வந்துவிழுகின்ற சத்துருக்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால் தடுத்து நன்கு பிரயோகிக்கப்பட்ட பாணங்களால் கணக்கிலடங்காத பகைவர்களனைவரையும் அடித்தான். அர்ஜுனன் விரைவானகிப் பாணங்களால் ரதங்களை, த்ரிவேணுவும் அச்சும் ஏர்க்கால்களும் வெட்டப்பட்டவைகளாகவும் குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பெற்றவைகளாகவும் கைகளினின்று நழுவிவிழுந்த அம்புத்தூணிகளையுடையவைகளாகவும் சக்கரங்களையும் தேர்க்கொடிகளையும் இழந்தவைகளாகவும் கடிவாளங்களும் கட்டுக்கயிறுகளும் அச்சுக்களும் அறுக்கப்பட்டவைகளாகவும் அநுகர்ஷங்களையும் நுகத்தடிகளையும் இழந்தவைகளாகவும் எல்லா ஸன்னாகங்களும் அழிக்கப்பட்டவைகளாகவும் செய்தான். அந்த யுத்தத்தில், நாசம் பண்ணப்பட்ட அந்தச் சிறந்த ரதங்கள் நெருப்பினாலும் காற்றினாலும் தண்ணீராலும் நாசம் செய்யப்பட்ட செல்வவான்களின் வீடுகள் போலப் பலவாறாக விளங்கின. யானைகள் வஜ்ராயுதத்துக்கும் இடிக்குஞ்சமமான அம்புகளால் உயிர்நிலைகள் நன்கு பிளக்கப்பட்டு, இடியினாலும் காற்றினாலும் நெருப்பினாலும் (நாசம் பண்ணப்பட்ட) மலையுச்சியிலுள்ள வீடுகள்போல விழுந்தன. இந்திரன் அஸுரர்களைக்

* திருதராஷ்டிரனுடைய குமாரன் அல்லன்; இவன் வேறு. 'உக்ராயுதகுமாரனை' என்பது வியாக்யான புஸ்தக பாடம்.

கொல்வதுபோலப் பார்த்தன் (வீரர்களை) வஜ்ராயுதத்திற்கும் தழலுக்கும் விஷத்துக்கும் ஒப்பான சாணைபிடிக்கப்பட்ட அனேக அம்புகளால் கொன்றான். அர்ஜுனனால் அடிக்கப்பட்ட அனேகம் குதிரைகள் ஏறியிருக்கின்ற வீரர்களோடுகூடவே விழுந்தன. ரக்தத்தினால் நனைந்திருக்கின்ற அக்குதிரைகள் நாக்கும் குடலும் வெளியில்வந்து பார்க்கத்தகாதவைகளாகி யுத்தபூமியில் உயிரையிழந்தன. அர்ஜுனனால் நாராசங்களால் நன்கு கோக்கப்பட்ட மனிதர்களும் யானைகளும் குதிரைகளும் சுழன்றன; தடுமாறமுற்றன; கீழேவிழுந்தன; அலறின; வாடின. விலையுயர்ந்த கவசமும் பூஷணமும் பூண்டவர்களும் நானாவிதமான ஆடைகளையும் ஆயுதங்களையும் தரித்தவர்களுமான வீரர்கள் தங்களோடும் குதிரைகளோடும் யானைகளோடும் அர்ஜுனனால் கொல்லப்பட்டுப் படுத்தார்கள். பயமற்றவர்களும் உயர்குலத்தில் தோன்றியவர்களும் ப்ரஸித்தர்களுமான புண்ணிய கர்மம் செய்தவர்கள் சரீரங்களால் பூமியை அடைந்தார்கள்; சிறந்த கர்மங்களால் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். பிறகு, பலபல தேசங்களுக்குத் தலைவர்களாயிருப்பவர்களும் கூட்டங்களோடு கூடியவர்களும் உம்மைச் சேர்ந்தவர்களுமான வீரர்கள் கோபங்கொண்டு அர்ஜுனனுடைய ரதத்தை நோக்கி எதிர்த்துச் சென்றார்கள். ரதங்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் சுமக்கப்படுகின்றவர்களும் காலாட்களும் கொல்ல எண்ணிப் பலவித ஆயுதங்களை விரைவாகப் பிரயோகித்துக் கொண்டு எதிர்த்து ஓடினார்கள். அர்ஜுனனாகிற காற்றானது, யுத்தவீரர்களாகிற மஹாமேகங்களால் பிரயோகிக்கப்பட்ட அந்த ஆயுதங்களாகிற பெருமழையைக் கூர்மையுள்ள பாணங்களால் விரைவாக நாசஞ்செய்தது. குதிரைகளோடும் காலாட்களோடும் யானைகளோடும் ரதங்களோடும் சேர்ந்ததும் பெரிய ஆயுதத்திரள்களால் வியாபிக்கப்பட்டதுமான பகைவர்களுடைய படையாகிற கடலைச் சஸ்திரங்களும் அஸ்திரங்களுமாகிற அணையினாலே விரைவாகத்தாண்டக்கருதிய பார்த்தனை வாஸுதேவர், 'பார்த்த! தோஷமற்றவனே! ஏன் விளையாடுகிறாய்! இந்த ஸம்சப்தகர்களை நாசஞ்செய்து பிறகு கர்ணனைக் கொல்லும் விஷயத்தில் விரைவு பாராட்டு' என்று கூறினார். அர்ஜுனன், 'அவ்வாறே ஆகட்டும்' என்று வலுவைப் பார்த்துச் சொல்லிவிட்டு அப்பொழுது மிகுந்திருக்கின்ற ஸம்சப்தகர்களை நாசஞ்செய்யப்போகின்றவனுக்கு இந்திரன் அஸுரர்களை அடித்ததுபோலப் பாணங்களால் அடித்தான். யுத்தத்தில் பாணங்களை எடுப்பவனும் தொடுப்பவனும்

விடுப்பவனுமான அர்ஜுனன் சிலரால் காணப்படவில்லை. மனிதர்கள் விரைவில் கொல்லப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். கோவிந்தர், 'ஆச்சர்யம்' என்று சொல்லிக்கொண்டு குதிரைகளை நடத்தினர். அன்னப்பறவைகளுடைய நிறம்போன்ற வெண்ணிறமுள்ள அந்தக் குதிரைகள் அன்னங்கள் தடாகத்தில் பிரவேசிப்பதுபோலக் கௌரவஸேனையில் பிரவேசித்தன. பிறகு, ஜனங்களுக்கு நாசமானது நடந்துகொண்டிருக்குந்தருணத்தில் அந்த யுத்த பூமியைப் பார்க்கின்ற கோவிந்தர் ஸவ்யஸாசியைப்பார்த்து, 'பார்த்த! மஹாபயங்கரமான பாரதர்களுடைய க்ஷயமானது இதோ நடந்து வருகின்றது. துர்யோதனனுக்காகப் பூமியிலுள்ள அரசர்களுக்கெல்லாம் பெரிதான நாசம் உண்டாகிவிட்டது. பாரத! கொல்லப்பட்ட வில்லாளிகளுடைய பொன்மயமான பின்புறமுள்ளவைகளும் புட்டித் தள்ளப்பட்டவைகளுமான விற்களையும் பூஷணங்களையும் அவ்வாறே அம்புத்தூணிகளையும் பொன்மயமான கட்டுக்களுள்ளவைகளும் படிந்த கணுக்களுள்ளவைகளுமான பாணங்களையும் எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டவைகளும் சட்டையுரித்த பாம்புகள்போன்றவைகளுமான நாராசங்களையும் நான்குபக்கத்திலும் இறைந்து கிடக்கின்ற தோமரங்களையும் குதிரைகளையும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட குடைகளையும் புட்டித் தள்ளப்பட்டவையும் பொன்னாலாகிய பின்புறமுள்ளவையுமான கேடகங்களையும் பொன்னால் சித்திரவேலை செய்யப்பட்ட ஈட்டிகளையும் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட சக்திகளையும் பொற்பட்டங்களால் கட்டப்பட்ட பெரிய கதைகளையும் பொன்மயமான ரிஷ்டிகளையும் பொன்னலங்காரமுள்ள பட்டஸங்களையும் பொன்னால் சித்திரவேலை செய்யப்பட்ட காம்புகளோடு முறிந்துக் கீழே தள்ளப்பட்ட பரசுகளையும் பரிகங்களையும் பிண்டிபாலங்களையும் புசுண்டிகளையும் கணபங்களையும் விழுந்திருக்கின்ற இரும்புமயமான குந்தங்களையும் பெரிய உலக்கைகளையும் பார். உயிரை யிழந்த பலசாலிகளான இந்த வீரர்கள் ஜயத்தில் விருப்பங்கொண்டு பற்பல வித சஸ்திரங்களைப் பிடித்து உயிரோடிருக்கின்றவர்கள்போலக் காணப்படுகிறார்கள். கதையினால் உடல்கள் நொறுக்கப்பட்டவர்களும் உலக்கைகளால் மண்டைகள் உடைக்கப்பட்டவர்களும் யானைகளாலும் குதிரைகளாலும் ரதங்களாலும் பொடிபண்ணப்பட்டவர்களுமான யுத்த வீரர்களை ஆயிரமாயிரமாகப் பார். பகைவர்களை அழிப்பவனே! பாணங்களாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் தோமரங்களாலும் கத்திகளாலும் பட்டஸங்களாலும் ஈட்டிகளாலும்

நகங்களாலும் லகுடங்களாலும் பலவாறு பிளக்கப்பட்டும் ரக்தவெள்ளத்தினால் நான்குபக்கமும் நனைக்கப்பட்டும் உயிர் துறந்த மனிதர்கள் யானைகள் குதிரைகள் இவற்றின் சரீரங்களால் யுத்தபூமியானது நன்கு மூடப்பட்டுவிட்டது. பாரதனே! சந்தனத்தினால் பூசப்பட்டவைகளும் தோள்வளைகளுடன் கூடியவைகளும் மங்களமான பூஷணங்களுள்ளவைகளும் கையுறைகளணிந்தவைகளும் கேயூரங்களுடன்கூடியவைகளுமான (வீரர்களுடைய) கைகளால் பூமியானது விளங்கியது. பரதர்களுள் உத்தமனே! விருஷபத்தின் கண்கள்போன்ற கண்களையுடையவர்களும் பலசாலிகளுமான வீரர்களுடைய விரலுறைகளுடன் கூடியவைகளும் அலங்கரிக்கப்பட்டவைகளும் அடித்துத தள்ளப்பட்டவைகளுமான நுனிக்கைகளாலும், அறுக்கப்பட்ட யானைத்துதிக்கைகளுக்கொப்பான தொடைகளாலும், உயர்ந்த சூடாமணியையணிந்தவைகளும் குண்டலங்களுடன்கூடியவைகளுமான தலைகளாலும், கூட்டம் கூட்டமாக அறுக்கப்பட்ட சரீரங்களாலும், பாணங்களாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் தோமரங்களாலும் உடல்களும் கழுத்துக்களும் அறுக்கப்பட்டவைகளும் ரக்தத்தினால் நனைக்கப்பட்டவைகளுமான யானைகள் குதிரைகள் மனிதர்கள் இவர்களுடைய தலையில்லாமுண்டங்களாலும், புமியானது யாகத்தில் தணிந்த அக்னிகளாலே விளங்குவதுபோல விளங்கியது. பொற்கிண்கிணிகளுள்ளவைகளும் மங்களகாமானவைகளும் பலவாறாக உடைக்கப்பட்டவைகளுமான ரதங்களையும் ரத்தத்தினால நனைக்கப்பட்டுப் பலவாறு (சிதறிக்கிடக்கின்ற) குதிரைகளையும் பார். அனுகர்ஷங்களையும், அம்புத்தூணிகளையும், கொடித்துணிகளையும், பலவிதமான த்வஜங்களையும், யுத்தவீரர்களுடைய பெரிய சங்கங்களையும், வெண்ணிறமுள்ள சாமரங்களையும், நாக்குத் தெறித்து மலைபோலச் சாய்ந்திருக்கின்ற யானைகளையும், விசித்திரமான வைஜயந்திகளையும், கொல்லப்பட்ட யானைவீரர்களையும், அனேக கம்பளங்களுடன்கூடின யானைகளுடைய மேல்விரிப்புக்களையும், அவ்வாறே கிழிக்கப்பட்ட விசித்திரமான பறபல வடிவமுள்ள விரிப்புக்களையும், பலவாறு உடைக்கப்பட்டும் விழுகின்ற யானைகளால் நொறுக்கப்பட்டுமிருக்கின்ற மணிகளையும், வைடூர்ய ரத்தினங்களிழைத்த பிடிகளுடன் பூமியில் விழுந்திருக்கின்ற மாவெட்டிகளையும், குதிரைகளுடைய நுகங்களையும் தலையலங்காரங்களையும், இரத்தினங்களால் சித்திரவேலை செய்யப்பட்ட கவசங்களையும், குதிரைவீரர்களின்மீதும் த்வஜங்களுடைய நுனி

களிலும் அடிக்கப்பட்டவையும் பொன்னால் சித்திரவேலை செய்யப்பட்டவையுமான விரிப்புக்களையும், மணிகளால் விசித்திரமாயிருப்பவைகளும் இரத்தினங்களால் சித்திரவேலை செய்யப்பட்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் ஆட்டுமயிரால் செய்யப்பட்டவைகளும் பூமியில் விழுந்திருப்பவைகளுமான குதிரைகளின் மீது விரிக்கின்ற விரிப்புக்களையும், அரசர்களுடைய சூடாமணிகளையும், விசித்திரமான பொன்மாலைகளையும், புரட்டித் தள்ளப்பட்ட குடைகளையும், சாமரங்களையும், விசிறிகளையும் பார். சந்திரன்போலும் நக்ஷத்திரங்கள்போலும் பிரகாசிப்பவைகளும் அழகிய குண்டலங்களணிந்தவைகளும் அழுந்த நறுக்கப்பட்ட மீசையுள்ளவைகளும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவைகளுமான வீரர்களுடைய முகங்களால் நன்கு மூடப்பட்டதும் ரத்தச்சேறுள்ளதுமான யுத்தபூமியைப்*பார். அரசே! ஆயுதங்களைக் கீழே வைத்தவர்களும் நான்கு பக்கங்களிலும் அலறுகின்றவர்களுமான ஞாதிகளால் சூழப்படுகின்றவர்களும் ஜலத்தால் நனைக்கப்பட்டவர்களும் அடிக்கடி சத்தமிடுகிறவர்களும் உயிருடன்கூடியவர்களுமான மனிதர்களையும் பார். பலசாலிகளும் ஜயத்தில் ஆவலுள்ளவர்களுமான வீரர்கள் உயிரை யிழந்தவர்களான மற்றப்போர்வீரர்களை மூடி (அடக்கம் செய்து) விட்டு அதிக கோபமுண்டு மீண்டும் யுத்தத்திற்குச் செல்லுகின்றார்கள். மற்றமனிதர்கள் அங்கங்கே எல்லாப்பக்கத்திலும் ஓடுகின்றார்கள். அநேகச் சூரர்கள் பிரஜ்ஞையற்றவர்களான இவர்களைப்பார்த்துத் திரும்பிவிட்டார்கள். பார்த! சிலர் கண்ணீர்சொரிந்து ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு விரைவாக ஓடுகின்றார்கள். பாரத! ஜலத்தைக் குடித்து உயிர் துறந்தவர்களையும் (ஜலத்தைக்) குடிக்கின்ற மற்றவர்களையும்பார். பந்துக்களிடத்தில் நேயமுள்ளவர்களான சில மஹாயுத்தத்தில் ஆங்காங்கு யுத்தபூமியில் பிரஜ்ஞையை இழந்தவர்களும் பிரியபந்துக்களுமான போர்வீரர்களைக் கட்டிக்கொண்டு (துயரமடைகின்றார்கள்). மனிதர்களுள் உத்தமனே! பற்களால் உதடுகளை நன்குகடித்துக்கொண்டிருப்பவர்களும் புருவநெறித்தலால் குடிலமான முகங்களோடு மஹாயுத்தத்தைப் பார்க்கின்றவர்களுமான மற்றவர்களையும் பார். அர்ஜுனா! பெரும்போரில் இச்செய்கை உனக்கே தகுந்தது. அல்லது, பெரும்போரில் உன்னாற்செய்யப்பட்ட செய்கையானது ஸ்வர்க்கலோகத்தில் தேவராஜனுக்குத் தகுந்தது' என்று கூறினார்.

* இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

மாதவர் கிரீடிக்கு அந்த யுத்தபூமியை இவ்வாறு காண்பித்துக் கொண்டு செல்லவே, துர்யோதனனுடைய படையில் பெரிய சங்க முழக்கத்தையும் துந்துபியின் முழக்கத்தையும் பேரியினுடைய பேரொலியையும் பணவங்களுடைய ஓசையையும் பயங்கரமான தேரொலிகளையும் குதிரைகளும் மனிதர்களும் யானைகளும் கால் வைப்பதினால் உண்டாகும் சப்தங்களையும் கேட்டார். வாஸுதேவர் காற்றைப்போன்ற வேகமுள்ள குதிரைகளால் அச்சேனையில் நுழைந்து பாண்டியனாலே எதிர்த்தடிக்கப்பட்டிருக்கின்ற உம்முடைய சேனையைக்கண்டு வியப்புற்றார். பாணங்களிலும் அஸ்த்ரங்களிலும் சிறந்தவனான பாண்டியன் யுத்தத்தில் நானாவிதமான பாணங்களால் ஆயுள்முடிந்தவர்களை யமன்கொல்வதுபோலப் பகைவர்களுடைய கூட்டங்களைக் கொன்றான். அடிப்பவர்களுள் சிறந்தவனான பாண்டியன் கூர்மையுள்ள பாணங்களால் யானைகள் குதிரைகள் மனிதர்கள் இவற்றின் சரீரங்களைப்பிளந்து சரீரங்களையும் உயிரையும் இழந்தவைகளாகச்செய்து தள்ளினான். அவன் சிறந்த சத்துருவீரர்களாலே பிரயோகிக்கப்படும் அஸ்திரங்களையும் பற்பல சஸ்திரங்களையும் அம்புகளால் வெட்டி இந்திரன் அஸுரர்களைக் கொன்றதுபோல அவர்களைக் கொன்றான்'' என்று கூறினான்.

---

## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

### (அஸ்வத்தாமா பாண்டியனைக் கொன்றது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பாண்டியன் உலகத்தில் பிரஸித்திபெற்ற உத்தம வீரனென்று முன்னமே உன்னால் சொல்லப்பட்டிருக்கிறான்; யுத்தத்தில் அவனுடைய செய்கையானது உன்னால் கூறப்படவில்லை. அந்த உத்தமவீரனுடைய விக்கிரமத்தையும் சிக்ஷையையும் ப்ரபாவத்தையும் வீர்யத்தையும் ப்ரமாணத்தையும் அகங்காரத்தையும் இப்பொழுது விஸ்தாரமாகச் சொல்வாயாக'' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத் தொடங்கினான்.

"தனுர்வேதத்தை முழுதும் அறிந்தவர்களென்றும் விற்பிடிப்பதில் சிறந்தவர்களென்றும் உம்மால் கருதப்படுகின்ற எழுவர்களான பீஷ்மர், துரோணர், கிருபர், அஸ்வத்தாமா, கர்ணன், அர்ஜுனன், ஜனார்த்தனர் ஆகிய எல்லா மஹாரதர்களையும் வீர்யத்தினால்அவமதிப்பவனும் ஓர்அரசனையும் தனக்குச் சமமாகக் கருதாதவனும் தனக்குத் துரோணபீஷ்மர்களோடு ஒப்புமையையும் பொறுதவனும்

தன்னிடத்தில் க்ருஷ்ணார்ஜுனர்களைக்காட்டிலும் குறையை விரும்பாதவனும் அரசர்களுள் சிறந்தவனும் எல்லாச் சஸ்திரதாரிகளுள்ளும் சிறந்தவனுமான அந்தப் பாண்டியன் பாசத்தைக் கையிற்கொண்ட யமன்போலக் கர்ணனுடைய படையை நாசஞ்செய்தான். பிரகாசிக்கின்ற தேர்களையும் குதிரைகளையும் யானைகளையுமுடையதும் சிறந்த காலாட்களால் நிரம்பியதும் குயவனுடைய சக்கரம்போலச் சுற்றிவருகின்றதுமான அந்தச் சேனையானது பாண்டியனால் பலத்தினால் எதிர்த்தடிக்கப்பட்டது. பாண்டியன், குதிரைகளையும் ஸாரதியையும் தவஜங்களையும் இழந்தவையும் நுகங்கள் தனியாகப் பிரிக்கப்பட்டவையுமான ரதங்களை, வாயுவானது மேகங்களை விலக்குவதுபோல நன்கு பிரயோகிக்கப்பட்ட அம்புகளாலே விலகச் செய்தான். அந்தப்பாண்டியன் சிறந்த பாகர்களுடன்கூடியவைகளும் கொடித்துணிகளையும் ஆயுதங்களையும் கொடிகளையும் இழந்தவைகளுமான யானைகளைப் பாதரக்ஷகர்களுடன் இந்திரன் வஜ்ராயுதத்தினலே மலைகளை அடிப்பதுபோல அடித்தான். அந்தப்பாண்டியன் சக்திகள் ஈட்டிகள் அம்புப்பெட்டிகள் இவைகளையுடைய குதிரைவீரர்களையும் குதிரைகளையும் கொன்றான். அந்தப்பாண்டியன் புளிந்தர்களையும் கஸர்களையும் பாஹ்லீகர்களையும் நிஷாதர்களையும் ஆந்த்ரர்களையும் குந்தலர்களையும் தென்தேசத்து வீரர்களையும் சூரர்களும் யுத்தத்தில் கடின ஸ்வபாவமுள்ளவர்களுமான போஜர்களையும் பாணங்களால் சஸ்திரங்களையும் கவசங்களையும் இழந்தவர்களாகச்செய்து உயிரையிழந்தவர்களாகவும் செய்தான். யுத்தத்தில் பாணங்களால் சதுரங்கசேனையை நாசஞ்செய்கின்றவனும் பரபரப்பில்லாதவனுமான பாண்டியனைக்கண்டு த்ரோணபுத்திரர் பிறகு பரபரப்பில்லாதவராக அவனுக்கு எதிரில் சென்றார். அடிப்பவர்களுள் சிறந்தவரான அவர் பயமற்றவராகிப் பயமற்றவனை அந்தப்பாண்டியனை இனிமையாக அழைத்து நகைத்துக்கொண்டு கூறலானார்.

'அரசனே! தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனே! பிரதானமான ஆயுதங்களையும் வாகனங்களையும் உடையவனே! வஜ்ரம்போன்ற தேகபலமுள்ளவனே! பிரஸித்தமான வலிமையும் ஆண்மையுமுடையவனே! கைப்பிடியினாலே விரல்கள் நசுக்கப்பட்டவைகளும் மிக நீண்டவைகளுமான இருகைகளாலும் பெரிய வில்லை நாணொலியிடும்படி செய்துகொண்டும் மஹாமேகம்போல் கர்ஜித்துக்கொண்டும் அதிகமாகப்பிரகாசிக்கிறாய். மிக்கவேகமுள்ள

பாணவர்ஷங்களைப் பகைவர்களின்மீது பொழிகின்ற உனக்கு யுத்தத்தில் என்னைத்தவிர மற்றவனை எதிரி வீரனாக நான் பார்க்கவில்லை. பயமற்றதும் பயங்கரமான பலமுள்ளதுமான ஸிம்மமானது வனத்தில் மிருகங்களுடைய கூட்டங்களைக்கொல்வதுபோல நீ ஒருவனாயிருந்துகொண்டு அநேக ரதங்களையும் யானைகளையும் காலாட்களையும் குதிரைகளையும் நாசஞ்செய்கிறாய். பெரிய தேரொலியினாலே ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டும் வெயிற்காலத்தில் பயிருள்ள பூமியைக் கிரணங்களால் கொளுத்துகிற சூரியன்போலப் போர்வீரர்களைத் தபிக்கச்செய்துகொண்டும் ஸர்ப்பங்கள்போன்ற அம்புகளால் நிறைந்த இரண்டு அம்புப்பெட்டிகளை நன்றாகத்தொட்டுக்கொண்டும் முக்கண்ணரோடு அந்தகனென்கிற அஸுரன் போர் புரிந்ததுபோல என் ஒருவனோடேயே யுத்தம் செய்' என்றுசொன்னார்.

இவ்வாறு சொல்லப்பட்ட அந்த மலயத்துவஜ பாண்டியராஜன் 'அஸ்வித்தமே ஆகுக' என்று சொல்லி இந்த அஸ்வத்தாமாவைக் கர்ணி என்கிற பாணத்தால் நன்றாக அடித்துத் துன்பமடையும்படி செய்தான். ஆசார்யபுத்திரரான அஸ்வத்தாமாவும் மர்மஸ்தானங்களைப்பிளக்கின்றவைகளும் அத்யுக்ரமாயிருப்பவைகளும் அக்னிஜ்வாலைக்கு ஒப்பானவைகளுமான பாணங்களால் பாண்டியனை மர்மஸ்தானங்களில் அடித்தார். பிறகு, அவர் கழுகிறகுகட்டியவைகளும் * பத்தாவதுகதியோடு கூடியவைகளுமான வேறு புதிய நாராசங்களை விரைவாகப் பாண்டியன்மீது பிரயோகித்தார். அப்பொழுது பாண்டியன் அந்தப்பாணங்களை வெட்டி வேறு நான்குபாணங்களாலே அஸ்வத்தாமாவினுடைய நான்குகுதிரைகளையும் விரைவாக அடித்தான். அவைகள் உயிரையிழந்தவைகளாயின. பிறகு, பாண்டியன் சூரியனுடைய காந்திபோன்ற காந்தியையுடையவரான த்ரோணபுத்திரருடைய அந்தப்பாணங்களை கூர்மையுள்ள அம்புகளால் வெட்டி, இழுத்துக்கட்டப்பட்ட வில்லினுள்ள நாண்கயிற்றையும் அறுத்தான். பகைவர்களை அழிப்பவரான த்ரோணபுத்திரர் சிறந்தவில்லை நாணேற்றிக் கிங்கரர்கள் வேறுசிறந்த குதிரைகளை விரைவாகத் தேரில் பூட்டியதைப் பார்த்தார். பிறகு, பிராம்மணர்

---

* பாணகதி பத்துவகை; அவை:—உன்முக, அபிமுக, திர்யக், மந்தா, கோமூத்திரிகா, த்ருவா, ஸ்கலிதா, யமகா, க்ராந்தா, க்ருஷ்டா என்பன. பத்தாவதான க்ருஷ்டா அதிக்ருஷ்டா என்றும் பெயர் கூறப்படுகிறது. அது தலையுடன்கூடத் தூரத்தில போய் விழக்கூடியது.

ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்து ஆகாயத்தையும் திக்குக்களையும் பாணங்களால் நெருங்கியதாகச் செய்தார். பிறகு, ஆண்மையிற் சிறந்தவனான பாண்டியன், பிரயோகிக்கின்ற மஹாத்மாவான த்ரோண புத்திரருடைய அந்தப்பாணங்களனைத்தையும் குறைவுபடாதவை யென்று அறிந்திருந்தும் அவைகளை அடித்து நாசஞ்செய்தான். பகைவனான பாண்டியன் முயற்சியோடு விடப்பட்ட அந்தத்ரோண புத்திரருடைய அம்புகளை அறுத்துக் கூர்மையுள்ள பாணங்களால் யுத்தத்தில் அவருடைய இரண்டு சக்கரரக்ஷகர்களையும் அடித்தான். பிறகு, த்ரோணபுத்திரர் அவனுடைய லாகவத்தைக்கண்டு வட்டமாகச் செய்யப்பட்ட வில்லுடன் (மழைக்கடவுளான) பர்ஜன்யன் மழையைப் பொழிவதுபோலப் பாணங்களைப்பிரயோகித்தார். ஐயா! எட்டு எட்டுக் காளைகள் கட்டின எட்டுவண்டிகள் சுமந்துவந்த அவ்வளவு ஆயுதங்களையும் த்ரோணபுத்திரர் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் பிரயோகித்துவிட்டார். அந்தகன்போலக் கோபங்கொண்டவரும் முடிவுக்காலத்தில் அழிக்கின்ற அந்தகன்போன்றவருமான அந்தஅச்வத்தாமாவினுடைய உருவத்தை எவரெவர்கள் கண்டார்களோ அவரவர்கள் பெரும்பான்மையாகப் பிரஜ்ஞையை இழந்தவர்களானார்கள். ஆசார்யபுத்திரர் வர்ஷாகாலத்தில் மேகமானது மலைகளுடனும் மரங்களுடனும்கூடிய பூமியின்மீது மழையைப் பொழிவதுபோல அந்தப் பாண்டவசேனையின்மீது அம்புமழையைப் பொழிந்தார். த்ரோண புத்திரராகிய பர்ஜன்யனால் விடப்பட்ட பொறுத்தற்கரிய அந்த அம்புமழையை அந்தப்பாண்டியனாகிற காற்றானது வாயவ்யாஸ்திரத்தினால் விரைவாக அடித்துச் சப்தித்தது. அடிக்கடி கர்ஜிக்கின்ற அந்தப் பாண்டியனுடைய சந்தனத்தினாலும் காரகிலினாலும், பூசப்பட்டதும் மலையபர்வதத்தினுடைய பிரதிமையுள்ளதுமான கொடியைத் துரோணபுத்திரர் அறுத்து நான்குகுதிரைகளையும் அடித்தார். ஸாரதியை ஓர் அம்பினாலடித்துப் பெரியமேகம் போலக் கர்ஜிக்கின்ற (அவனுடைய) வில்லையும் அறுத்து ஒரு பிறைக்கணையால் ரதத்தையும் எள்ளளவெள்ளளவாகச் சிதறச்செய்தார். அவர் அஸ்திரங்களால் அஸ்திரங்களைத்தடுத்து எல்லாஆயுதங்களையும் வெட்டி யுத்தம்செய்யும் விருப்பத்தினால், கிட்டியவனாயிருந்தும் பகைவனான அந்தப்பாண்டியனைக் கொல்லவில்லை. பாகன்கொல்லப்பட்டதும் (ஆஸனமுதலியன) நன்குஅமைக்கப்பெற்றதும் விரைவுள்ளதும் (யானைகளுடைய முழக்கத்தைக்கேட்டு) எதிர்முழக்கம் செய்கின்றதும் பலமுள்ளதும் பல்லுள்ளவற்றுட் சிறந்ததும்த்ரோண

புத்திரருடைய அம்புகளால்அடிக்கப்பட்டு வேகத்துடன் எதிரியினு டையயானைகளை வீரிடச்செய்துகொண்டு அந்தப்பாண்டியனுக்கருகில் விரைவுடன்ஓடிவந்ததும் மலையின்தாழ்வரைக்கொப்பானதும் யானை களுள் சிறந்ததுமான அந்தயானையின்மீது யானைப்போரில் பாண்டித் தியமுள்ளவனை மலயத்வஜராஜன் உரக்கக்கர்ஜிக்கின்ற சிங்கமானது மலையினுடைய உச்சியில் ஏறுவதுபோல விரைவுள்ளவனாக ஏறி வீற்றிருந்தான். தமிழ்நாட்டு அரசனான அந்தப்பாண்டியன் ஸிம்ம நாதஞ்செய்து யானையை அங்குசத்தினால் கோபிக்கச்செய்து கொண்டு குருபுத்திரரானஅஸ்வத்தாமாவைக்குறித் துப்பலத்தினாலும் அஸ்திரப்பிரயோகத்தினாலும்சிறந்தமுயற்சியினாலும்கோபத்தினாலும் சூரியனுடைய கிரணம்போன்ற ஒளியுள்ள ஒரு தோமராயுதத்தை விரைவாகப் பிரயோகித்தான். அவன், 'என்னால் நீ கொல்லப்பட் டாய்' என்று அடிக்கடி ஸந்தோஷத்தோடு ஸிம்மநாதஞ்செய்து கொண்டு உத்தமமான ரத்னங்களாலும் வஜ்ரங்களாலும் ஸவர்ணங் களாலும் வஸ்திரங்களாலும் மாலைகளாலும் முத்துக்களாலும் அலங்க ரிக்கப்பட்ட த்ரோணபுத்திரருடைய கிரீடத்தைப் பிளந்தான். சூரி யன் சந்திரன் ஜ்யோதிர்க்கிரஹங்கள் அக்னி இவைகளுடைய காந்தி போன்ற காந்தியையுடைய அந்தக் கிரீடமானது மஹேந்திர னுடைய வஜ்ராயுதத்தினாலடிக்கப்பட்டுப் பேரொலியுடன் பூமியில் விழுகின்ற மலைச்சிகரம்போல (பாண்டியனுடையஆயுதத்தினால்) நன் றாக அடிக்கப்பட்டுச் சுழன்றுகொண்டு கீழேவிழுந்தது. பிறகு, அஸ்வத்தாமா காலால் மிதிக்கப்பட்ட சிறந்த ஸர்ப்பம்போல அதிக கோபத்தோடு நன்றாக ஜ்வலித்தார். யமதண்டத்துக்கொப்பான வையும் பகைவர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகின்றவையுமான பதினான்குபாணங்களை எடுத்தார். அந்த த்ரோணபுத்திரர் ஐந்து பாணங்களாலே பாண்டியனது யானையினுடைய கால் நுனிகளையும் துதிக்கையையும் மூன்றுபாணங்களால அவனுடைய இரண்டு கைகளையும் தலையையும் அறுத்து ஆறுபாணங்களாலே ஆறு ருதுக்களுக்கொப்பான காந்தியையுடையவர்களும் மஹாரதர் களுமான பாண்டியராஜனுடைய துணைவீரர்களையும் கொன்றார். மிக நீண்டவைகளும் உருட்சியானவைகளும் சிறந்த சந்தனத் தினால் ஈனக்கப்பட்டவைகளும் பொன்னாலும் முத்துக்களாலும் மணிகளாலும் வஜ்ரங்களாலும் (இழைக்கப்பட்ட) பூஷணங்களை அணிந்தவைகளும் பூமியில் விழுந்தவைகளுமான அந்தப் பாண்டிய ராஜனுடைய இரண்டுகைகளும் கருடனால் கொல்லப்பட்ட இரண்டு

ஸர்ப்பங்கள்போலத்துடித்தன. பூர்ணசந்திரனுடையவொளிபோன்றவொளி பொருந்தியமுகமுள்ளதும் கோபத்தினால்சிவந்த அகன்றகண்களுள்ளதும் உயர்ந்தமூக்குள்ளதும் குண்டலங்களுடன்கூடியதுமான அந்தத் தலையானது, இரட்டையான விசாகநக்ஷத்திரங்களுக்கிடையிலுள்ள சந்திரன்பூமியிலும்விளங்குவதுபோல விளங்கியது. யுத்தஞ்செய்கின்றவரும் ஸமர்த்தருமான அஸ்வத்தாமாவினால் தேவதையை உத்தேசித்துப் பத்தாகப்பகுத்துக்கொடுக்கப்பட்ட ஹவிஸ்போல அந்தயானையானது ஐந்து உத்தமபாணங்களால் ஆறுதுண்டும் பாண்டியராஜன் மூன்றுபாணங்களால் நாலுதுண்டுமாகப் பத்துத்துண்டாகச்செய்யப்பட்டார்கள். பிதிர்க்களுக்குப்பிரியனான அந்தப்பாண்டியன் அனேக குதிரைகளையும் மனிதர்களையும் யானைகளையும் கால்வேறு கைவேறாகத் துண்டாடி அரக்கர்களுக்குஉணவாக்கி, சுடலைத்தீயானது உயிரற்றவுடலாகிற ஹவிஸைப்பெற்று மூண்டெரிந்து நீர்ப்பெருக்கால் நனைக்கப்பட்டுத் தணிவதுபோல ஓய்ந்தான். உம்முடையபுத்திரனான துர்யோதனராஜன் நண்பர்களால்சூழப்பெற்று வித்தையைமுறையாகக் கற்றவரும் போர்ச்செயலை நிறைவேற்றியவருமான குருபுத்திரரை அடைந்து பலிசக்கரவர்த்தி ஜயிக்கப்பட்டவுடன் இந்திரன் விஷ்ணுவைப்பூஜித்ததுபோல ஸந்தோஷத்தோடு அதிகமாகப் பூஜித்தான்" என்று கூறினான்.

---

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்)

திருதராஷ்டிரன், "பாண்டியன் கொல்லப்பட்டு ஏகவீரனான கர்ணனால் யுதிஷ்டிரரும் துரத்தப்பட்டவுடன், ஜயசாலிகளுள்சிறந்தவனும் வித்தையைமுழுதும்கற்றவனும் பலமுள்ளவனும் முயற்சியுள்ளவனும் வீரனும் மஹாத்மாவானசங்கரரால், ("எல்லாப்பிராணிகளுள்ளும் வெல்லப்படாதவனாவாய்' என்று) அநுக்கிரகிக்கப்பட்டவனும் பாண்டுபுத்திரனுமான அர்ஜுனன் யாதுசெய்தான்? ஸஞ்சய! பகைவர்களைக்கொல்பவனான அந்தத்தனஞ்சயனிடத்தினின்று கொடிதும் பெரிதுமான பயமானது உண்டாயிருக்கிறது. அந்தப்பார்த்தன் அந்தயுத்தத்தில் செய்ததை எனக்கு உரைப்பாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாண்டியன்கொல்லப்பட்டவுடன், வாஸுதேவர் விரைவுடன் அர்ஜுனனைப்பார்த்து ஹிதமானவார்த்தையைக் கூறலானார். 'நமது பாண்டியராஜன் கொல்லப்பட்டதையும் பாண்டவர்கள் ஓடுவதையும்

பார்.பெரும்போர்க்களத்தில்மண்டுகின்றநெருப்புப்போன்றகர்ணனைப் பார். மஹாவில்லாளியான இந்த பீமன் யுத்தத்தைநோக்கித் திரும்பி விட்டான். த்ருஷ்டத்யும்னனை முதன்மையாகக்கொண்டு அப்படிப் பட்ட இந்தப்பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் பாண்டவர்களுடைய படைமுகத்தை அனுசரித்து வரவில்லை. மீண்டும் திரும்பிவருகின்ற பார்த்தர்களாலே பெரிதானபகைவர்படையானது நாசஞ்செய்யப் பட்டது. இதோ கர்ணன், ஓடுகின்றகௌரவர்களை அதிகமாகத் தடுக்கிறான். குந்தீபுத்திர! வேகத்தில் யமனுக்கொப்பானவரும் பராக்கிரமத்தில் இந்திரனையொத்தவரும் சஸ்திரங்களைத் தரித்தவர் களுள சிறந்தவருமான த்ரோணபுத்திரர் செல்லுகிறார். மஹாரத னை இந்த த்ருஷ்டத்யும்னன் யுத்தத்தில் அவரைஎதிர்த்துச் செல் லுகிறான். குந்தீபுத்திர! அஸ்வத்தாமாவினால் யுத்தத்தில் எல்லா ஸ்ருஞ்சயர்களும் கொல்லப்பட்டார்கள். ரதங்களுக்கும் குதிரைக ளுக்கும் மனிதர்களுக்கும் யானைகளுக்கும் பெரிதான துன்பம் உண்டுபண்ணப்பட்டுவிட்டது' என்றார். வாஸுதேவர் இவை எல் லாவற்றையும் இவ்வாறு கிரீடிக்கு உரைத்தார்.

பாண்டவன் இவற்றைக்கேட்டும் பிராதாக்களுடையபெரிதான வியஸனத்தைப்பார்த்தும், 'ஹ்ருஷீகேசரே! குதிரைகளைவிரைவாக நடத்தும்' என்று சொன்னான். யுத்தத்தில் நிகரில்லாதவரான ஹ்ரு ஷீகேசர் ரதத்தோடு சென்றார். பிறகு, அந்த மஹாயுத்தத்தில் மீண் டும் புழுதியானது தோன்றியது. அரசரே! பிறகு, பெரிதும் மயிர் பொடித்தலைச் செய்கின்றதுமான போர் நடந்தது. வீரர்கள்சேர்ந்து யுத்தம்செய்யுங்காலத்தில் ஸிம்மநாதங்களுடைய ஓசைகளும் தோன் றின. மன்னரே! இரண்டு சேனைகளிலும் வீரர்கள் எக்காலத்தி லும் ம்ருத்யு இருப்பதாக எண்ணிப் போர்புரிந்தார்கள். பிறகு, கௌரவர்களும் ஸ்ருஞ்சயர்களும் யுதிஷ்டிரரை முதன்மையாகக் கொண்டபாண்டவர்களும் சூரியகுமாரனை கர்ணனை முதன்மை யாகக்கொண்ட நாங்களும் மறுபடியும் எதிர்த்தோம். வேந்தரே! பிறகு, கர்ணனுக்கும் பாண்டவர்களுக்கும் யமனுடைய ராஜ்யத்தை விருத்திபண்ணுகின்ற கோரமானயுத்தம் நடந்தது. பாரதரே! மஹா ராஜரே! நெருங்கியதும் மயிர்பொடிக்கச் செய்கின்றதுமான அந்த யுத்தமானது நடக்கத் தொடங்கி ஸம்சப்தகவீரர்களும் கொஞ்சம் மிகுந்திருக்கையில், த்ருஷ்டத்யும்னன் எல்லா அரசர்களுடனுங் கூடிக்கர்ணனையே எதிர்த்துச்சென்றான். மஹாரதர்களான பாண்ட வர்களும் கர்ணனை எதிர்த்தார்கள். எதிர்த்து வருகின்றவர்களும்

போரில் வெற்றியை விரும்புகின்றவர்களுமான அவர்களைக் கண்டு, மலையானது நீர்ப்பெருக்குக்களைத் தடுப்பதுபோலக் கர்ணன் ஒருவனாகவே யுத்தத்தில் தடுத்தான். அந்த மஹாரதர்கள் கர்ணனை அடைந்து ஜலப்பிரவாகங்கள் மலையில்விழுந்து எல்லாத்திக்குக்களிலும் சிதறுவதுபோலச் சிதறினார்கள். மஹாராஜரே! பெரிய யுத்தரங்கத்தில் விருத்தியடைகின்றவர்களும் பலசாலிகளும் பரஸ்பரம் ஜயிப்பதில் நோக்கமுள்ளவர்களுமான அவ்விருவருக்கும் கோரமான காட்சியுள்ள யுத்தமானது நடந்தது. த்ருஷ்டத்யும்னனோ மிகுந்த கோபங்கொண்டு கணுக்கள் படிந்துள்ள அம்பினாலே ராதேயனை அடித்து, 'நில், நில்' என்றும்சொன்னான். மஹாரதனான கர்ணன் வெற்றியைக்கொடுக்கக்கூடிய சிறந்தவில்லை அசையும்படி செய்து கொண்டு பார்ஷதனுடைய வில்லையறுத்து ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளைத் தன்வில்லில் பூட்டி மேகமானது மழையைப் பொழிவதுபோல அம்புமழையைப்பொழிந்தான். அவன் கோபமூண்டவனாகி ஒன்பதுபாணங்களால் பார்ஷதனை மூடினான். தோஷமற்றவரே! அந்தப்பாணங்கள், மஹாத்மாவான அந்தப்பார்ஷதனுடைய பொன்னால் செய்யப்பட்ட கவசத்தை உடைத்து ரக்தத்தினால்நனைக்கப்பட்டு, இந்திரகோபமென்னும் பூச்சிகள்போல்விளங்கின. பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டுப் பிறகு பலமுள்ளதும் பெரியகார்யத்திற்கு ஏற்றதுமான வேறொருவில்லையெடுத்துக் கணுக்கள் உட்படிந்துள்ள எழுபதுபாணங்களால் கர்ணனைஅடித்தான். அரசரே! அவ்வாறே,மஹாவில்லாளியான கர்ணனும், சத்துருக்களைத் தபிக்கச்செய்பவனும் த்ரோணருக்குச்சத்துருவுமான பார்ஷதனைக் கூர்மையுள்ள பாணங்களால் அடித்தான். மஹாராஜரே!கர்ணன், பொன்னால்அலங்கரிக்கப்பட்டதும் வேறொரு யமதண்டம்போன்றதுமான வேறோர்அம்பையெடுத்து யுத்தத்தில் பார்ஷதன்மேல் மீண்டும் பிரயோகித்தான். அரசரே! வேகத்துடன் வருகின்றதும் கோரரூபமுள்ளதுமான அந்த அம்பைப் பார்ஷதன் கைதேர்ச்சியால் நூறாகத் துண்டாக்கினான். மன்னவரே! கர்ணன் பாணம் பூமியில் விழுந்ததைக்கண்டான். பார்ஷதன் நான்குபக்கத்திலும் அம்புமழையால் தடுத்தான். அப்பொழுது பார்ஷதனும் இந்தக் கர்ணனை விரைவாக ஏழு பாணங்களால் அடித்தான். கர்ணனும் பொன்னலங்காரமுள்ள பத்துப்பாணங்களால் அந்தப்பார்ஷதனைத் திருப்பி அடித்தான். கண்களையும் காதுகளையும் மனத்தையும் கவர்கின்ற யுத்தமானது அவ்விருவருக்கும் நேர்ந்தது. அந்தயுத்த

மானது கோரமாகவும் விசித்திரமாகவும் எல்லாவிதத்தாலும் பார்க்கத்தக்கதாகவுமிருந்தது. அரசரே! அந்த யுத்தத்தில் கர்ண த்ருஷ்டத்யும்னர்களுடைய அச்செய்கையைக் கண்டு எல்லாப் பிராணிகளுக்கும் மயிர்க்கூச்சம் உண்டாயிற்று. இச்சமயத்தில் த்ரோணபுத்திரர், பகைவர்களை அடக்குகிறவனும் பகைவர்களுடைய வீர்யத்தையும் உயிரையும் அழிப்பவனும் மஹாரதனுமான அந்தப் பார்ஷதனை எதிர்த்துவந்தார். அந்தப்பிராம்மணர் யுத்தத்தில்செல்லுகின்றவனும் பயமற்றவனும் சத்ருக்களைத் தபிக்கச்செய்பவனும் மஹாரதனுமான அந்த த்ருஷ்டத்யும்னனைப் பார்த்து, மிகுந்த கோபமுள்ளவராகி அவனுடைய ரதத்தோடு தன் ரதத்தைநெருக்கி, 'அடா! பிரம்மஹத்தி செய்தவனே! நில; நில; நீ உயிரோடு என்னிடத்திலிருந்து விடுபடப்போகிறதில்லை' என்று சொன்னார். சீக்கிரமாக யுத்தம் செய்கிறவரும் மகாரதரும் யுத்தத்தில் முயற்சியுள்ளவருமான வீரர் இவ்வாறு சொல்லிவிட்டுக் கூர்மையுள்ள அம்புகளால் யுத்தத்தில் நன்றாக அவனை மூடினார். மன்னரே! யுத்தத்தில் அதிக கோபங்கொண்ட அவர் முயற்சியுடன் மஹாரதனான த்ருஷ்டத்யும்னனை எதிர்த்துப் பெரியசக்தியுடன் போர்புரிந்தார். பிரஜைகளுக்கு நாதரே! அவ்விருவருக்கும் மிக்ககோரமானயுத்தம் நடந்தது. பெரியவரே! த்ரோணபுத்திரர் யுத்தத்தில் பார்ஷதனைக் கண்டு (அவனைத்) தமக்கு ம்ருத்யுவாக எண்ணி மகிழ்ச்சிகுன்றிய மனமுள்ளவரானார். மஹாபலசாலியான அந்த அச்வத்தாமா மஹாயுத்தத்தில் அந்தப் பார்ஷதனைப் பிதாவுக்குக் கடும்பகையாளியாகவும் தம்மை யுத்தத்தில் சஸ்திரங்களால் கொல்லத்தகாதவனாகவும் அறிந்து, வாழ்நாளின்முடிவில் காலன்வருவதுபோல் வேகத்தோடு (அந்தப்பார்ஷதனை) எதிர்த்துச்சென்றார். ராஜேந்திரரே! வீரரான அவர், ஸன்னத்தனாக நிற்கின்ற த்ருஷ்டத்யும்னனைப் பார்த்துக் கோபத்தினால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு அவனை நன்றாக எதிர்த்துச் சென்றார். அந்த இரண்டு வீரர்களும் உறுதியான நான்கயிறுள்ள பெரியவிற்களைக் கையில் பிடித்து ஒருவரையொருவர் பார்த்தே, அதிக கோபத்தை அடைந்தார்கள். மஹாராஜரே! மன்னரே! பிறகு, பிரதாபசாலியான த்ரோணபுத்திரர் விரைவுடன் ஸமீபத்திலிருக்கிற த்ருஷ்டத்யும்னனைப் பார்த்து, 'பாஞ்சாலர்களுள் இழிந்தவனே! இப்பொழுது உன்னை யமனுடைய வீட்டுக்குஅனுப்புகிறேன். யுத்தத்தில் என்பிதாவைக்கொன்ற உன்னால் எந்தப்பாபகாரியம் செய்யப்பட்டதோ அதன்பயனை இப்பொழுது அடையப்போகிறாய். யுத்தத்தில்

பார்த்தனால் பாதுகாக்கப்படாமல் நீ நின்றாலும் ஸரி; அல்லது மோகத்தினால் யுத்தத்தைவிட்டு ஓடாமலிருந்தாலும் ஸரி; நீ க்ஷேமத்தை அடையாவண்ணம் செய்யப்படுவாய். இதை ஸத்யமாக உனக்குச் சொல்லுகிறேன்' என்று கூறினார்.

---

## ஐம்பத்தேட்டாவது அத்யாயம்

### (அர்ஜுனன் த்ருஷ்டத்யும்னனைக்காத்து அஸ்வத்தாமாவை வென்று ஸம்சப்தகர்களைக்குறித்துச் சென்றது.)

இவ்வாறு சொல்லக்கேட்ட பிரதாபசாலியான த்ருஷ்டத்யும்னன், அஸ்வத்தாமாவைப்பார்த்து, 'யுத்தத்தில் முயல்கின்ற உம்முடைய பிதாவுக்குச் செய்யப்பட்டதுபோன்ற கொண்டாடத்தக்க தன்மையை என்னுடைய கத்தியானது உமக்குக் கொடுக்கப்போகிறது. எந்தக்கத்தியினாலே யுத்தத்தில் முயல்கின்ற உம துபிதாவினுடைய தலைஅறுக்கப்பட்டதோ அப்படிப்பட்ட என்னுடைய இந்தக்கத்தியே உமக்கு மறுமொழியைக் கொடுக்கப்போகின்றது. ப்ராம்மணர்களுள் அபசதரான த்ரோணரையே நான் கொன்றமையால் பாபியான உம்மை யுத்தத்தில் இப்பொழுது நான் ஏன் கொல்லமாட்டேன்?' என்று மறுமொழிகூறினன். மஹாதேஜஸ்வியும் பகைவர்களை அடக்குகிறவனும் ஸேனாபதியுமான பார்ஷதன் இவ்வாறு சொல்லிவிட்டு, மிக்க கூர்மையுள்ள ஒரு பல்லத்தினால் த்ரோணபுத்திரரை அடித்தான். அரசரே! பிறகு, அவர் மிக்க கோபம்கொண்டு கணுக்கள் உட்படிந்துள்ள அம்புகளால யுத்தகளத்தில் த்ருஷ்டத்யும்னனை நான்குதிசைகளிலும் மூடினார். மஹாராஜரே! நான்கு பக்கத்திலும் அம்புகளால் மூடப்பட்டபோது ஆகாயமாவது திக்குக்களாவது ஆயிரக்கணக்கான யுத்தவீரர்களாவது காணப்படவில்லை. அஸ்வத்தாமா ஒருவரே பார்க்கத் தக்கவராயிருந்துகொண்டு நாற்புறங்களிலும் நடித்தார். அரசரே! அவ்வாறு பார்ஷதனும் யுத்தத்தில் பிரகாசிக்கின்ற அஸ்வத்தாமாவைக் கர்ணன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அம்புகளால்மூடினன். மஹாராஜரே! பார்ப்பதற்கினிய காட்சியுள்ள கர்ணனும் தான் ஒருவனாகவேயிருந்துகொண்டு பாண்டவர்களோடுகூடின பாஞ்சாலர்களையும் த்ரௌபதிபுத்திரர்களையும் யுதாமன்யுவையும் உத்தமௌஜஸையும் ஸாத்யகியையும் ஆயிரக்கணக்காக இருக்கின்ற இன்னும் மற்றப்போர்வீரர்களையும் அம்புகளால் நான்குபக்கத்திலும் தடுத்தான். த்ருஷ்டத்யும்னனே

எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே யுத்தரங்கத்தில் மிக்ககூர்மையுள்ள ஒரு க்ஷுரப்ரத்தினால் த்ரௌணியினுடைய வில்லை அறுத்தான். த்ரோணபுத்திரர், அறுக்கப்பட்ட அந்த வில்லை எறிந்துவிட்டு யுத்தத்தில் வேகமுள்ளதும் கோரமாயிருப்பதுமான வேறொருவில்லையும் ஸர்ப்பங்களுக்கொப்பானபாணங்களையும் கையில் எடுத்தார். ராஜேந்திரரே! அவர் பார்ஷதனுடைய வில்லையும் சக்தியையும் கதையையும் தவஜத்தையும் குதிரைகளையும் ஸாரதியையும் ரதத்தையும் ஒரு நிமிஷத்தில் அம்புகளால் நாசஞ்செய்தார். வில் அறுக்கப்பட்டவனும் ரதத்தையிழந்தவனும் குதிரைகளும் ஸாரதியும்கொல்லப்பட்டவனுமான பார்ஷதன் ஒருபெரியகத்தியையும் ஒளிபொருந்தியதும் நூறுசந்திரப்பிரதிமைகளுடன்கூடியதுமானஒருகேடகத்தையும் கையிலெடுத்தான் ராஜேந்திரரே! மஹாரதரும் வீரரும் கைதேர்ந்தவரும் திடமானஆயுதங்களை உடையவருமான த்ரோணபுத்திரர் எல்லாஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ரதத்தினின்று கீழேஇறங்காதவனும் வில்லாளியும் தோள்வலிமிக்கவனுமான அந்தப் பார்ஷதனுடைய அந்தக்கத்தியையும் கேடகத்தையும் யுத்தத்தில் பல்லங்களால் விரைவாகத் துண்டாக்கினார். அது ஆச்சர்யமாயிருந்தது. பரதர்களுள்சிறந்தவரே! முயற்சியையுடையவரும் மஹாரதருமான த்ரோணபுத்திரர் ரதத்தை இழந்தவனும் குதிரைகளும் தோப்பாகனும் கொல்லப்பெற்றவனும் சஸ்திரங்களால்பலவாறுஅடிக்கப்பட்டவனும் அஸ்திரங்களால்அறுக்கப்பட்டவனுமான த்ருஷ்டத்யும்னனை (வல்லமையினால்) மீறவில்லை. அரசரே! வீரரான த்ரோணபுத்திரர்,பாணங்களாலேஅந்தத்ருஷ்டத்யும்னனுக்கு முடிவைஉண்டுபண்ண இயலாமற்போனதும், ரதத்தை விட்டுவிட்டுப் பொன்னாலலங்கரிக்கப்பட்ட பெரியகத்தியையெடுத்துக்கொண்டு வேகமுள்ளவராக அவனைநோக்கிச் சென்றார். அரசரே! வேகமாகவருகின்ற மஹாத்மாவான அந்தஅச்வத்தாமாவினுடைய சரீரமானது உத்தமமானஸர்ப்பத்தைப் பிடிக்கவிரும்பி விழுகின்ற கருடனுடையசரீரம்போலாயிற்று. இச்சமயத்தில், பகைவீரர்களைக் கொல்பவரானகேசவர் பரதர்களுள்சிறந்தவனும் ஜயிப்பவர்களுள் சிறந்தவனுமான அர்ஜுனனைப்பார்த்துக் கூறலானார்:

'அர்ஜுனா! பார்ஷதனுடைய வதத்தைக்குறித்து முயல்கின்ற த்ரோணபுத்ரரைப் பார். அதிகமுயற்சி செய்கிறார்; இவனைக் கொன்றுவிடுவார். ஸம்சயமில்லை. மிக்க கைவன்மையுள்ளவனே! வீர! ம்ருத்யுவினுடைய வாயையடைந்ததுபோல் த்ரோணபுத்திரருடைய

வாயையடைந்திருக்கின்றவனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனுமான இந்தப் பார்ஷதனைப் பாதுகாப்பாயாக' என்று சொன்னார். மஹாராஜரே! பிரதாபமுள்ளவாஸுதேவர் இவ்வாறு சொல்லிவிட்டு வீரரான த்ரோணபுத்திரரிருக்குமிடத்துக்குக் குதிரைகளை ஓட்டினார். சந்திரனுக்கொப்பான அந்தக்குதிரைகள் கேசவரால்ஓட்டப்பட்டு ஆகாயத்தைப் பானம்பண்ணுகின்றவைகள்போல மஹாரதரான அச்வத்தாமாவை நாடின. மஹாராஜரே! மஹாபலசாலியானத்ரோணபுத்திரர் வாஸுதேவரையும் தனஞ்சயனையும்பார்த்து த்ருஷ்டத்யும்னனைக் கொல்லும்விஷயத்தில் முயற்சியைச்செய்தார். ஜனேச்வரரே! மஹாரதனானஅர்ஜுனன் த்ரோணபுத்திரராலே அதிகமாய்ஹிம்ஸிக்கப்படுகிற த்ருஷ்டத்யும்னனைக்கண்டே அச்வத்தாமாவின்மீது பாணங்களைப் பிரயோகித்தான். பொன்னலலங்கரிக்கப்பட்டவைகளும் காண்டீவத்தினால் அதிகமாய்ப் பிரயோகிக்கப்பட்டவைகளுமான அந்தஅம்புகள் அச்வத்தாமாவையடைந்து புற்றில பாம்புகள் நுழைவதுபோலநுழைந்தன. வேந்தரே! பிரதாபசாலியும் வீரருமான த்ரோணபுத்திரர் கோரமான அவ்வம்புகளால் அடிக்கப்பட்டு யுத்தத்தில அளத்தற்கரிய பலமுள்ளபாஞ்சாலனை விட்டு விட்டுத் தனஞ்சயனுடையஅம்புகளால் பீடிக்கப்பட்டவராக ரதத்தின்மீதேறினார். அவர் சிறந்த வில்லைக் கையில் பிடித்துப் பார்த்தனை அம்புகளால் அடித்தனர். அரசரே! இச்சமயத்தில், சூரனான ஸஹதேவன் பகைவர்களைவாட்டுபவனான பார்ஷதனை யுத்தத்தில் ரதத்திலேற்றி வேறிடத்திற்குக் கொண்டுசென்றான். மஹாராஜரே! அர்ஜுனனும் த்ரோணபுத்திரரை அம்புகளால் அடித்தான். த்ரோணபுத்திரரும் கோபமூண்டவராகி அந்தஅர்ஜுனனை இரண்டு கைகளிலும் மார்பிலும் அடித்தார். கோபமூட்டப்பட்டபார்த்தன் யுத்தத்தில் வேறொரு யமதண்டம்போன்றதும் காலனுக்கொப்பானதுமான நாராசத்தை த்ரோணபுத்திரர்மீது பிரயோகித்தான். அந்த அம்பானது மிக்க காந்தியுள்ளவரான பிராம்மணருடைய தோளில் விழுந்தது. மஹாராஜரே! யுத்தத்தில் பாணவேகத்தினால் அடிக்கப்பட்ட அந்த அச்வத்தாமா தேர்தட்டில் உட்கார்ந்து மிக்க மனத்தளர்ச்சியடைந்தார். ஸாரதியானவன் சத்துருக்களை ஹிம்ஸிப்பவரான அந்தவிப்ரரை யுத்தத்தில் கொல்லப்பட்டவராக எண்ணி யுத்தபூமியினின்று தேரோடு வேறிடத்திற்குக்கொண்டுசென்றான். மஹாராஜரே! பிறகு, விடுவிக்கப்பட்டபார்ஷதனையும் பீடிக்கப்பட்ட த்ரோணபுத்திரரையுங்கண்டு ஜயத்தினால்பிரகாசிக்கின்ற பாஞ்சாலர்கள் உரக்கச்சத்த

மிட்டார்கள். அந்த அற்புத யுத்தத்தைக்கண்டு திவ்யமான நான்கு வித வாத்யங்களும் வாசிக்கப்பட்டன. ஸிம்மநாதமும் தோன்றியது.

மஹாராஜரே! பிறகு, மிக்க காந்தியையுடையவனான கர்ணன் யுத்தத்தில் அர்ஜுனனைப்பார்த்துக் கோபங்கொண்டு பார்த்தனோடு த்வந்துவயுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவனாகி வெற்றியைத்தரக்கூடிய வில்லை அசைத்துக்கொண்டு அடிக்கடி (அதனைப்) பார்த்தான். ப்ருதாபுத்திரனான தனஞ்சயன் இவ்வாறுசெய்துவிட்டு வாஸுதேவரைப் பார்த்து, 'மாதவரே! ஸம்சப்தகர்களைக்குறித்துச் செல்லும். இது எனக்கு முக்கியமானகார்யம்' என்றுசொன்னான். பிறகு, கோவிந்தர் பார்த்தனுடையவார்த்தைகளைக்கேட்டு அதிகமான கொடித்துணிகளுடன்கூடினதும் மனதுக்கும் காற்றுக்கும் ஒப்பான வேகமுள்ளதுமான ரதத்தோடு (ஸம்சப்தகர்களைக் குறித்துச்) சென்றார். பூமிக்குநாதரே! உம்முடைய துராலோசனையினால் இவ்வாறு உம்முடைய ஸைனிகர்களுக்கும் சத்ருக்களுக்கும் பூமியில் இப்படிப்பட்ட அழிவு நேர்ந்தது.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்.)

அரசர்களுள் சிறந்தவரே! பிறகு, கர்ணனுக்கும் பாண்டவர்களுக்கும் யமனுடைய ராஜ்யத்தைவிருத்திபண்ணக்கூடிய யுத்தமானது மறுபடியும் நடக்கஆரம்பித்தது. யுத்தவீரர்கள் வாட்களையும் பாணங்களையும் பரிகங்களையும் கத்திகளையும் பட்டஸங்களையும் தோமரங்களையும் உலக்கைகளையும் புசுண்டிகளையும்சக்திகளையும் ரிஷ்டிகளையும் பரசுகளையும் கதைகளையும் ப்ராஸங்களையும் கூர்மையுள்ள குந்தங்களையும் பிண்டிபாலங்களையும் பெரியமாவெட்டிகளையும் எடுத்துக்கொண்டு ஒருவரையொருவர் கொல்ல விரும்பி விரைவாக வந்தார்கள். அவர்கள் பாணங்களுடைய சப்தத்தினாலும் நாணொலியினாலும் தலத்வனியினாலும் ஸ்வர்க்கத்தையும் திக்குக்களையும் திக்கோணங்களையும்ஆகாயத்தையும் தேருருளையின் நேமியினால உண்டுபண்ணப்பட்ட ஓசையினால் பூமியையும் ஒலியிடும்படி செய்துகொண்டு பகைவர்களை எதிர்த்துச் சென்றார்கள். வீரர்கள் மஹாகோரமான யுத்தத்தைத் தாண்டிச் செல்லக்கருதி அந்தப்பேரொலியினால மிக்க உத்ஸாகத்தைப்பெற்று வீரர்களோடு போர்புரிந்தார்கள். நாணொலிகளின் ஓசைகளையும் தலத்வனிகளையும் யானைகளின் ஒலிகளையும் பிரயோகிக்கப்படுகின்றகஸ்

திரங்களுடைய சத்தங்களையும் அடிக்கப்பட்டு விழுகின்ற காலாட்க ளுடைய கூக்குரல்களையும் எதிர்த்துக் கர்ஜிக்கின்றசூரர்களுடையபற் பலவித பாணசப்தங்களையும் கேட்டு யானைகள் மிக்க பயமடைந்தன; கீழே விழுந்தன. ஸைனிகர்கள் வாட்டமுற்றார்கள். சப்திக்கின்ற வர்களும் சஸ்திரவர்ஷத்தை விடுகின்றவர்களுமான அனேக சத்ருக் களை வீரனை கர்ணன் பாணங்களால் பிளந்தான். அவன் குதிரைக ளோடும் ஸாரதிகளோடும் த்வஜங்களோடுங் கூடின பாஞ்சால வீரர் களுடைய இருபது ரதங்களைப் பாணங்களால் யமலோகத்துக்கனுப்பி னன். யுத்தத்தில் மஹா வீர்யமுடையவர்களும் தேர்ச்சி பெற்றவர் களும் தலைவர்களுமான பாண்டவ வீரர்கள் கர்ணனை எதிர்த்தோடி வந்து நான்கு பக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, கர்ணன் பக்ஷிகளால் நான்கு பக்கத்திலும் சூழப்பட்ட ஒரு தாமரை ஓடை யை யூதபதியான ஒருயானை இறங்கிக் கலக்குவதுபோலச் சத்துரு சேனையைச் சரமாரியால் கலக்கிக்கொண்டு அச்சேனையில் நுழைந் தான். ராதேயன், சத்துருஸேனையை எதிர்த்து உத்தமமான வில்லை உதறிக்கொண்டு கூர்மையுள்ள அம்புகளாலே (பகைவர்களுடைய) தலைகளை அறுத்துத் தள்ளினன். அவன் யானைவீரர்களுடன்கூடின யானைகளையும் குதிரைவீரர்களுடன் கூடின குதிரைகளையும் சுற்று கின்ற ரதிகர்களையும் ஒரு பாணத்தால் தள்ளினன். பிராணிகள் காற் றும் உள்ளே புகாத கவசத்தையாவது தோலையாவது அணிந்திருந்தா லும் அந்தக்கர்ணனுடைய இரண்டாவது பாணம்படுவதைப் பொறுக்க வில்லை. கர்ணன் வில்லினின்று கூர்மையான பாணங்களைப்பிரயோகித் துக்கொண்டு கொறடாவினல் குதிரைகளை அடிப்பதுபோலக் கவசங் களையணிந்த தேகங்களிலும் நாண்கயிற்றிலும் கையுறையிலும் அடித் தான். அவன் ஸிம்மம் மிருகக்கூட்டங்களை அடிப்பதுபோலப் பாணத் திற்கிலக்கான இடத்தை வந்தடைந்திருக்கின்ற பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் பாஞ்சாலர்களையும் பலத்தினல்அடித்தான். ஐயா! பிறகு, பாஞ்சாலபுத்திரனும் த்ரௌபதிபுத்திரர்களும் நகுல ஸஹ தேவர்களும் யுயுதானனும் விரைபவர்களாகிக் கர்ணனை எதிர்த்தார் கள். அந்தக்கௌரவர்களும் பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் முயலும்பொழுது, யுத்தவீரர்கள் யுத்தத்தில் உயிரில் ஆசையை விட்டு ஒருவரையொருவர் கொன்றுகொண்டார்கள். பெரியவரே! நல்ல யுத்தஸன்னகமுள்ளவர்களும் கவசமணிந்தவர்களும் தலைப்பா கைகளையுடையவர்களும் பூஷணங்களை அணிந்தவர்களும் மஹாபல சாலிகளுமான மற்ற வீரர்கள் உயர எடுக்கப்பட்ட காலதண்டம்

போன்ற கதைகளோடும் உலக்கைகளோடும் பரிகங்களோடும் கர்ஜித்துக்கொண்டும் யுத்தத்திற்காக அழைத்துக்கொண்டும் அதிகப்பரபரப்புடன் பகைவர்களை எதிர்த்துச்சென்றார்கள். பிறகு, வீரர்கள் ஒருவரையொருவர் கொன்றார்கள். ஒருவராலொருவர் அடிக்கப்பட்டு மூளை சிதறிக் கண்தெறிக்கவும் ஆயுதங்கள் சிதறவும் சரீரங்களால் இரத்தத்தைக்கக்கிக்கொண்டு விழுந்தார்கள். சிலர் சஸ்திர ஸமூகங்களால் நிறைக்கப்பட்டவர்களாக உதிரத்துடன் கூடினவைகளும் தந்தங்களால் நிறைந்தவைகளும் மாதுளம்பழம் போன்றவைகளுமான வாய்களோடு உயிருள்ளவர்கள்போல் இருந்தார்கள். அரசரே ! மஹாயுத்தத்தில் மற்றயுத்தவீரர்கள் பரசுகளாலும் பட்டஸங்களாலும் கத்திகளாலும் சக்திகளாலும் பிண்டிபாலங்களாலும் நகங்களாலும் ஈட்டிகளாலும் தோமரங்களாலும் செதுக்கினார்கள்; வெட்டினார்கள் ; பிளந்தார்கள் ; அவ்வாறே விலக்கித் தள்ளினார்கள்; நன்றாக அறுத்தார்கள் ; கொன்றார்கள். ஒருவராலொருவர் அடிக்கப்பட்ட வீரர்கள் வெட்டப்பட்டும், தம்மிடத்திலுள்ள சிவப்பான சாற்றைக் கக்கிக்கொண்டிருக்கின்ற சிவந்த சந்தன மரங்கள்போல இரத்தத்தால் நனைக்கப்பட்டும், உயிரையிழந்து விழுந்தார்கள். தேர்களால் தேர்கள் அடிக்கப்பட்டன. யானைகளால் யானைகள் கொல்லப்பட்டன. காலாட்களால் காலாட்கள் கொல்லப்பட்டுவிழுந்தார்கள். குதிரைகளால், குதிரைகளும் ஆயிரமாயிரமாகக் கொல்லப்பட்டன. கொடிகளும் தலைகளும் குடைகளும் யானைத்துதிக்கைகளும் மனிதர்களுடையகைகளும் க்ஷுரங்களாலும் பல்லங்களாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் அறுக்கப்பட்டுப் பூமியில் விழுந்தன. மனிதர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் ரதிகர்களாலும் கொல்லப்படுகின்றவர்களும் விழுந்து வீறிடுகின்றவர்களுமான மனிதர்கள் குதிரைகள் யானைகள் தேராளிகள் இவர்களுடைய சப்தங்கள் பயங்கரமாகத் தோன்றின. வீரர்கள் யுத்தத்தில் மனிதர்களையும் யானைகளையும் ரதங்களையும் குதிரைகளையும் அடித்தார்கள். குதிரைவீரர்களால் சூரர்கள் கொல்லப்பட்டார்கள். யானைகள் துதிக்கைகள் அறுக்கப்பட்டவைகளாகவும் கொடித்துணிகளுடனும் கொடிகளுடனும் கூடியவைகளாகவும் சிதறின; மலைகள்போல் கீழே வீழ்ந்தன. காலாட்களால் பாய்ந்து யானைகளும் அவ்வாறே ரதிகர்களும் கொல்லப்பட்டவர்களாகவும் கொல்லப்படுகின்றவர்களாகவும் நான்குபக்கத்திலும் விழுந்தார்கள். விரைவுள்ளவர்களான குதிரைவீரர்கள் காலாட்களாலே நெருங்கிக் கொல்லப்பட்டார்கள். குதிரை

வீரர்களாலே காலாட்களுடைய கூட்டங்களும் கொல்லப்பட்டு யுத்தத்தில் படுத்தன. மஹாயுத்தத்தில் கொல்லப்பட்ட வீரர்களுடைய முகங்கள் கசக்கப்பட்ட தாமரைமலர்கள்போலவும்,சரீரங்கள் நன்றாக வாடியிருக்கின்ற மாலைகள்போலவும் இருந்தன. அரசரே! யானைகள் குதிரைகள் காலாட்கள்இவற்றின் மிகஅழகிய உருவங்கள், உப்புக் கசிவினால்அழுக்கடைந்த வஸ்திரங்கள்போல மிகவும் பார்க்கத் தகாத நிலைமையை அடைந்தன.

---

## அறுபதாவது அத்யாயம்.

### (யானைப்போரும் ஸங்குல யுத்தமும்.)

அரசரே! 'த்ருஷ்டத்யும்னனை யானைகளால் விரைந்து கொல்லுங்கள்' என்று உம்முடையபுத்திரனால் தூண்டப்பட்டயானைவீரர்கள் குரோதத்துடன் பார்ஷதனை எதிர்த்துச் சென்றார்கள். பாரதரே! பிறகு, யானைப்போரில் ஸாமர்த்தியமுள்ளவர்களான எல்லாக் கீழ்நாட்டுவீரர்களும் தென்னாட்டு வீரர்களும் யானைப்போர்புரிவதில் மிகுந்த தேர்ச்சியுள்ளவர்களான அங்கர்களும் வங்கர்களும் புண்ட்ரர்களும் மாகதர்களும் தாம்ரலிப்தகர்களும் மேகலர்களும் கோஸலர்களும் மத்ரர்களும் தசார்ணர்களும் நிஷதர்களும் கலிங்கர்களோடு சேர்ந்து மழைபொழிகின்றமேகங்கள்போல யுத்தத்தில் பாஞ்சால சேனையின்மீது அம்புகளையும் தோமரங்களையும் நாராசங்களையும் வர்ஷித்தார்கள். த்ருஷ்டத்யும்னன், எதிர்த்துவருகின்றவைகளும் மதத்தினுடைய வேகத்தினால் மிக்ககொழுப்புள்ளவைகளுமான அந்த யானைகளின்மீது விபாடங்களையும் க்ஷுரங்களையும் நாராசங்களையும் வர்ஷித்தான். பார்ஷதன் பர்வதங்களுக்கொப்பான யானைகளில் ஒவ்வொன்றையும் பத்துப்பத்துப் பாணங்களாலும் ஆறுஆறுபாணங்களாலும் எட்டெட்டுப்பாணங்களாலும் விரைவாக அடித்தான். மேகங்களால் சூர்யன் மூடப்படுவதுபோல யானைகளால் நன்குமூடப்படுகின்ற அந்தத்ருஷ்டத்யும்னனைப் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸிம்மநாதஞ் செய்துகொண்டு விற்களைக் கையிற்கொண்டவர்களாக நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். வீரர்களான நகுலனும் ஸஹதேவனும் த்ரௌபதீகுமாரர்களும் ப்ரபத்ரகர்களும் ஸாத்யகியும் சிகண்டியும் வீர்யமுள்ள சேகிதானனும், நாணும் கையுறையும் ஒலிக்கச் சூரர்களுக்குரியதாளங்களுடன் வீரநர்த்தனஞ்செய்துகொண்டு மேகங்கள் மலைகளின்மீது ஜலத்தைப்பொழிவதுபோல

அந்தயானைகளின்மீது (பாணங்களை) நாற்புறங்களிலும் பொழிந்தனர். மிலேச்சர்களாலே தூண்டப்பட்டு மிக்ககோபங்கொண்ட அந்தயானைகள் மனிதர்களையும் குதிரைகளையும் ரதங்களையும் துதிக்கைகளால் பிடித்து இழுத்துத்தள்ளிக் கால்களால்துகைத்தன; கொம்புநுனிகளாலே பிளந்து தூக்கி எறிந்தன. கொம்புகளில் சிக்கிக்கொண்டிருக்கிற மற்றவைகள் மிக்க பயங்கரமாகக் கீழேவிழுந்தன. எதிரில் நிற்கின்ற அங்கனுடையயானையை ஸாத்யகி உக்கிரவேகத்துடன் கூடின நாராசத்தினால் பிளந்து மர்மஸ்தானங்களில் அடித்தான். அவன் யானையினின்று மேலே எழும்பித் தாவப்போகின்றவனும் எதிரியினுடைய ஆயுதப்பிரயோகங்களை வஞ்சிப்பதினால் காப்பாற்றப்பட்டிருக்கிற சரீரமுள்ளவனுமான அந்த அங்கனுடைய மார்பை நாராசத்தால் அடித்தான். அவன் பூமியில் விழுந்தான். எதிர்த்துவருகின்ற புண்ட்ரனுடைய நடக்கின்ற பர்வதம்போன்றயானையை ஸஹதேவன் கூர்மையான முனையுள்ள மூன்று அம்புகளால் அடித்தான். அவன் அந்தயானையைக் கொடியையிழந்ததாகவும் பாகனையிழந்ததாகவும் கவசத்தையும் துவஜத்தையும் உயிரையுமிழந்ததாகவும் செய்துவிட்டு மறுபடியும் அங்கனை எதிர்த்தான். ஸஹதேவனைத் தடுத்து நகுலன் யமதண்டம்போலப் பிரகாசிக்கின்ற மூன்றுநாராசங்களாலே அங்கனையும் நூறு அம்புகளால் அந்த யானையையும் அடித்தான். அங்கன் நகுலன்மீது சூரியகிரணம்போன்ற நூற்றெட்டுத்தோமரங்களைப் பிரயோகித்தான். அந்தநகுலன் ஒவ்வொன்றையும் மும்மூன்றாகத் துண்டாக்கினான். பாண்டுகுமாரனை அவன் அவ்வாறே அர்த்தசந்திரபாணத்தினால் அவனுடைய தலையை அறுத்தான். அந்த மிலேச்சன் கொல்லப்பட்டுஅந்த யானையுடனே விழுந்தான். பிறகு, யானையைப் பழக்குவதில் ஸமர்த்தனான அங்கபுத்திரன் கொல்லப்படவே, அங்கதேசத்து மஹாமாத்திரர்கள் கோபங்கொண்டு நகுலனைஅடிக்கவிரும்பி விரைபவர்களாகி அசைகின்ற கொடிகளையுடையவைகளும் அழகிய முகங்களையுடையவைகளும் ஸ்வர்ணமயமான முதுகில்கட்டியிருக்கிற தோல் கவசங்கள்இவைகளையுடையவைகளும் நன்குவிளங்குகின்ற மலைகள்போன்றவைகளுமான யானைகளோடு நகுலனை எதிர்த்தார்கள். மேகலர்களும் உத்கலர்களும் கலிங்கர்களும் நிஷதர்களும் தாம்ரலிப்தர்களும் (நகுலனைக்) கொல்லக்கருதி அம்புமழைகளையும் தோமரமழைகளையும் பொழிந்தார்கள். மேகங்களால் மூடப்படுகின்ற சந்திரனைப்போல அந்தவீரர்களால் மூடப்படுகின்றநகுலனைப்

பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸாத்யகர்களும் மிக்க பரபரப்புள்ளவர்களாக நான்கு பக்கத்திலும் சூழ்ந்துகொண்டனர். பிறகு, அம்புமழைகளையும் ஆயிரமாயிரமாகத் தோமரங்களையும் பிரயோகிக்கின்ற ரதிகர்களுக்கு யானைகளோடு அவ்விதமான யுத்தம் நேர்ந்தது. அந்தவீரர்களால் பொன்னலங்காரமுள்ள நாராசங்களால் நன்றாக அடிக்கப்பட்டயானைகளுடைய மததகங்கள் வெடித்தன. மர்மஸ்தானங்கள் வெடித்தன; நகங்கள் சிதறின; பற்கள் உடைந்தன. ஸஹதேவன் நல்ல முனையுள்ள அறுபத்துநான்கு நாராசங்களால் அந்த யானைகளுள் எட்டுப் பெரியயானைகளைப் பாகர்களோடு கூடவே கீழேதள்ளினான். குலத்தை ஆனந்தப்படுத்துகின்றவனான நகுலன் சிறந்த யுத்தகதிகளுடன் முயற்சியினாலே உத்தமமானவில்லை வளைத்து நாராசங்களால் யானைகளை அடித்தான். பிறகு, த்ருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் த்ரௌபதீபுத்திரர்களும் பிரபத்ரகர்களும் சிகண்டியும் சரமாரிகளால் பெரியயானைகளை நனைத்தார்கள். பாண்டவசேனையிலுள்ள யுத்தவீரர்களாகிற மேகங்களால் பாணங்களாகிற மழைகளால் அடிக்கப்பட்ட சத்துருக்களுடைய யானைகளாகிறமலைகள் வஜ்ரவர்ஷங்களால் மலைகள் விழுவதுபோல் விழுந்தன. பாண்டவர்களுடைய அந்த ரதிகஸ்ரேஷ்டர்கள் இவ்வாறாக உம்முடைய யானைகளைக்கொன்று, கரையை உடைத்துக்கொண்டு பெருகுகின்ற நதியைப்போன்ற சேனையின்மீது விரைவாக அம்புகளைப் பொழிந்தார்கள். பாண்டுபுத்திரனுடைய ஸைனிகர்கள் உம்முடைய அந்தச் சேனையைக்கலக்கிக் கொந்தளிக்கும்படிசெய்து மறுபடியும் கர்ணனை எதிர்த்துச் சென்றார்கள்.

---

## அறுபத்தோராவது அத்யாயம்.

(கௌரவர்கள் யுதிஷ்டிரரைப்பிடிக்கமுயல்வதை மாதவர் அர்ஜுனனுக்குக் கூறியது.)

பெரிதும் ரக்தவெள்ளத்துடன்கூடிபயங்கரமான யுத்தமானது அந்தவீரர்களுக்குள் நடக்கும்போது, பல்வாறு ரக்தத்தினால்நனைக்கப்பட்ட பூமியானது மிகவும் விளங்கியது. பிறகு, புழுதி அடங்கவே, நான்குபக்கத்திலும் பிரகாசமுண்டாயிற்று. இந்தச்சமயத்தில், வாஸுதேவர் குந்தீபுத்திரரும் தர்மராஜருமான யுதிஷ்டிரரைக் காண்பித்து அர்ஜுனனைப்பார்த்து வசனிக்கலானார்.

'பாண்டவ! இதோ உன்னுடைய பிராதாவானயுதிஷ்டிரர் மஹா பலசாலிகளும் கொல்லக்கருதினவர்களும் பெரியவில்லைக் கையிற் பிடித்தவர்களுமான தார்த்தராஷ்டிரர்களாலே சீக்கிரமாகப் பின் தொடரப்படுகிருர். பாரத! பாஞ்சாலர்களும் சைத்யர்களும் மாத்ஸ யர்களும் மஹாத்மாவான யுதிஷ்டிரரைப் பாதுகாக்கஎண்ணி அதிக வேகமுள்ளவர்களாக அவரைக் கூடவே தொடர்கின்ருர்கள். பார்த்த! உலகமுழுமைக்கும் அரசனும் பலசாலியும் கவசம்பூண்ட வனுமான இந்தத்துரியோதனன், புருஷஶ்ரேஷ்டரான தர்மபுத்திர ரைக் கொல்லக்கருதி ஸர்ப்பங்கள்போலத் தீண்டுகின்றவர்களும் எல்லா ஆயுதங்களிலும் ஸமர்த்தர்களும் ஸிம்மநாதங்களை வெளியிடு கின்றவர்களும் சங்கங்களைமுழக்குகின்றவர்களும் சிறந்த பலமுள்ள வர்களும் பெரியவில்லையுடையவர்களும் விற்களை உதறுகின்றவர்களு மான பிராதாக்களோடுகூடி யானைப்படையுடன் யுதிஷ்டிரராஜரைப் பின்தொடருகிருன். துர்யோதனனைச்சேர்ந்த இந்தயானைகளும் குதி ரைகளும் ரதங்களும் காலாட்களும், யாசகர்கள் உத்தமமான இரத்தி னத்தை விரும்புவதுபோல யுதிஷ்டிரரைப்பிடிக்கவிரும்பிச் செல்லு கின்ருர்கள். அமிர்தத்தைக்கவரக்கருதிய அஸுரர்கள் யுத்தத்தில் இந் திரனுலும் அக்னியினுலும் தடுக்கப்பட்டதுபோல ஸாத்யகியினுலும் பீமனுலும் தடுக்கப்பட்டு (இந்த ஸைனிகர்கள்) மீண்டும் நின்று விட் டார்கள்; பார். கார்காலத்தில் நீர்ப்பெருக்குக்கள் ஸமுத்திரத்தை அடைவதுபோல இந்தமஹாரதர்கள்அனேகர்களாயிருப்பதினுல் மறு படியும் தர்மபுத்ரரைக்குறித்துச் செல்லுகின்ருர்கள். துர்யோதன னுடைய வசத்தை அடைந்திருக்கின்ற குந்தீபுத்திரரான யுதிஷ் டிரரை மிருத்யுவின்வாயைஅடைந்தவரென்றும்அக்னியில் ஹோமம் பண்ணப்பட்டவரென்றும் எண்ணுகிறேன். பாண்டவ! தார்த்த ராஷ்டிரருடைய சேனையானது தக்கபடி எதிர்த்திருப்பதால் இந்த ஸேனையினுடைய பாணங்களுக்கு இலக்காகாமல் இந்திரனும் விடுபட மாட்டான். வீரனும் பாணஸமூகங்களைச் சீக்கிரமாகப் பிரயோகிக் கின்றவனும் மிக்ககோபங்கொண்ட யமன்போன்றவனுமான துர்யோ தனனுடையவேகத்தை யுத்தத்தில் எவன் ஸஹிப்பான்? கர்ஜிக் கின்ற வீரனுன அந்தத்துர்யோதனன் த்ரோணபுத்திரர் கிருபர் கர் ணன் இவர்களுடைய பாணவேகமானது மலைகளையும் சிதறும்படி செய்யும். யுதிஷ்டிரராஜர் இப்பொழுது கர்ணனுல் தோற்கச்செய்யப் பட்டவராகக் காணப்படுகிருர். சிறந்தபலமுள்ளவனும் ஹஸ்தலாகவ முள்ளவனும் ஸமர்த்தனும் யுத்தத்தில் ஸாமர்த்தியமுடையவனுமான

கர்ணன் சூரர்களும் மஹாபலசாலிகளுமான திருதராஷ்டிரபுத்திரர்களோடு சேர்ந்து யுத்தத்தில் பாண்டவஸ்ரேஷ்டரைப் பீடிக்கக் கூடியவனாயிருக்கிறான். போர்புரிகின்றவரும் யுத்தத்தில் புகழ்ப்பட்ட பலத்துடன் கூடியவருமான அந்தப் பார்த்தருக்கு இந்தத் துர்யோதனன் முதலானவர்களாலும் மற்றவர்களாலும் தோல்வி உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. பரதஸ்ரேஷ்டரும் பிரபுவுமான தர்மராஜர் உபவாஸத்தினால் மிகவும் இளைத்திருக்கிறார்; பிராம்மணருக்குரிய பொறுமையில் நிலைபெற்றிருக்கிறார்; க்ஷத்திரியருக்குரிய கொடுமையில் நிலைபெற்றிருக்கவில்லை. சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவரும் பாண்டுபுத்திரருமான இந்தயுதிஷ்டிரராஜர் கர்ணனால் எதிர்க்கப்பட்டுப் பிராணஸம்சயத்தை அடைந்துவிட்டார். பார்த்த! கோபமுள்ளவனும் பகைவர்களை அடக்குந்திறமையுள்ளவனுமான பீமஸேனன் அடிக்கடி கர்ஜிக்கின்றவர்களும் மஹா சங்கங்களை ஊதுகின்றவர்களும் யுத்தத்தில் ஜயத்தினால் பிரகாசிக்கின்றவர்களுமான தார்த்தராஷ்டிரருடைய ஸிம்மநாதத்தைப் பொறுத்துக்கொண்டிருத்தலால் மஹாராஜரான யுதிஷ்டிரர் பிழைக்கமாட்டாரென்று எண்ணுகிறேன். பரதர்களுள் சிறந்தவனே! இந்தக்கர்ணன், 'பாண்டுபுத்திரனை யுதிஷ்டிரனைக் கொல்லுங்கள்' என்று மஹா பலசாலிகளான தார்த்தராஷ்டிரர்களை ஏவுகிறான். பார்த்த! மஹாரதர்கள் யுதிஷ்டிரராஜனை ஸ்தூணாகர்ணமென்கிற கந்தர்வனைத்தேவதையாகக்கொண்ட அஸ்திரஸமூகத்தினாலும் பாசுபதாஸ்திரத்தினாலும் நன்கு மூடுகின்றார்கள்; தொடர்ந்தும் செல்லுகின்றார்கள்.

---

## அறுபத்திரண்டாவது அத்யாயம்.

**(மாதவர் யுதிஷ்டிரருக்கு நேர்ந்த அவமானத்தை அர்ஜுனனுக்குக் கூறிக் கர்ணனது போரையும் பீமனதுபோரையும் காட்டியது.)**

பாரத! விரையவேண்டும்போது விரைபவர்களும் பலசாலிகளும் எல்லாச் சஸ்திரதாரிகளுள்ளும் சிறந்தவர்களுமான பாஞ்சாலர்கள், பாண்டவர்களோடு, பாதாளத்தில் அமிழ்கின்றவர்போலிருக்கின்ற யுதிஷ்டிரரைக் கரையேற்றிவிட எண்ணி இந்தயுதிஷ்டிரரைப் பின்தொடர்தலால் இவர் மிக்க துன்பமுற்றிருக்கிறாரென்றும் தாங்கக்கூடாத கெட்டநிலைமையையடைந்திருக்கிறாரென்றும் நான் எண்ணுகிறேன். பார்த்த! பிரபுவே! நகுல ஸஹதேவர்களும் ஸாத்யகியும் சிகண்டியும் த்ருஷ்டத்யும்னனும் பீமஸேனனும் சதானீகனும்

பாஞ்சாலர்களும் எல்லாச்சைத்யர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, யுதிஷ்டிர ராஜருடைய கொடியானது கர்ணனுடைய பாணங்களால் மூடப்பட்டுக் காணப்படவில்லை. பாரத! பார்த்த! இந்தக்கர்ணன், தாமரை ஓடையை ஒரு யானையானது நாசஞ்செய்வது போல யுத்தத்தில் பாண்டவர்களுடைய சேனையை அம்புகளால் நாசஞ் செய்துவிட்டான். பாண்டுநந்தன! இதோ உன்னைச் சேர்ந்த ரதிகர்கள் ஓடுகிறார்கள். பார்த்த! இந்த மஹாரதர்கள் ஓடும்விதத்தைப் பார்; பார். பாரத! இந்தயானைகள் கர்ணனால் பாணங்களால் அடிக்கப்பட்டுத் துன்பத்தைத் தெரிவிக்கும் ஒலிகளை வெளியிட்டுக் கொண்டு பத்துத்திசைகளிலும் ஓடுகின்றன. பார்த்த! அளவுகடந்த வல்லமையுள்ள கர்ணனாலே யுத்தத்தில் ஓட்டப்படுகின்ற ரதிகர்களுடைய கூட்டமானது இதோ நான்குபக்கத்திலும் ஓடுகின்றது.' சிறந்த கொடியுடையவர்களுள் சிறந்தவனே! ரணகளத்தில் ஆங்காங்கு ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற கர்ணனுடைய தேரிலுள்ள யானைக்கச்சைவடிவமான கொடியைப் பார். இந்த ராதேயன் நூற்றுக்கணக்காக அம்புகளை இறைத்துக்கொண்டும் உன்னுடைய சேனையை நாசஞ்செய்துகொண்டும் பீமஸேனனுடைய ரதத்தை நோக்கி விரைவாகச் செல்லுகிறான். தீரனான கர்ணனால் துரத்தப்படுகின்ற பாஞ்சாலர்கள் மஹாத்மாவான இந்திரனாலே துரத்தப்படுகின்றஅஸுரர்கள்போலஇதோஓடுகின்றார்கள். இதோ கர்ணன் யுத்தத்தில் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் ஜயித்துஉன்நிமித்தமாக எல்லாத்திக்குக்களையும் பார்க்கிறானென்பது என்னுடைய எண்ணம். சிறந்தவில்லைஉதறிக்கொண்டிருக்கின்ற இந்தக்கர்ணன் சத்துருவைஜயித்துத் தேவர்களுடையகூட்டங்களால் சூழப்பட்ட இந்திரன் போல அதிகமாகப்பிரகாசிக்கிறான். இதோ கௌரவர்கள் யுத்தத்தில் பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் நான்குபக்கத்திலும் பயமுறுத்துகின்றவர்களாகிக் கர்ணனுடைய பராக்கிரமத்தைக்கண்டு கர்ஜிக்கின்றார்கள். (பகைவர்களுடைய) கௌரவத்தை அழிப்பவனே! இதோ ராதேயன் மஹாயுத்தத்தில் பாண்டவர்களை எல்லாவிதத்திலும் பயமுறுத்தி எல்லாப்போர்வீரர்களையும் பார்த்து, 'கௌரவர்களே! எதிர்த்தோடுங்கள்.உங்களுக்கு மங்களம். விரைவாக ஓடுங்கள். யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்கள் ஒருவனாவது உயிரோடு விடுபடாதபடி செய்யுங்கள். நாங்களும் முயற்சியுள்ளவர்களாகப் பின்புறத்தில் வருகிறோம்' என்று சொல்லுகிறான். இந்தக்கர்ணன் இவ்வாறு சொல்லிவிட்டுப் பாணங்களை இறைத்துக்கொண்டு பின்புறத்தில் சென்றுவிட்டான். பார்த்த!

சந்திரனால் 'பிரகாசிக்கின்ற உதயபர்வதம்போல யுத்தத்தில் வெள்ளைக்குடையோடு விளங்குகின்ற கர்ணனைப் பார். பாரத! தனஞ்சய! இதோ கர்ணன் யுத்தத்தில் தூக்கிப்பிடிக்கப்படுகின்றதும் காந்தியுள்ள நூறுகம்பிகளுள்ளதும் பூர்ண சந்திரன்போன்றதுமான முடியின்மீதுள்ள குடையோடுகூடியவனாக உன்னைக் கடைக்கண்ணால் பார்க்கிறான். யுத்தத்தில் சிறந்த முயற்சியைக் கைக்கொண்டு (உன்னை)நிச்சயமாக எதிர்க்கப்போகிறான். மிக்க தோள்வலியுள்ளவனே! மஹாயுத்தத்தில் பெரியவில்லை நடுங்கச்செய்கின்றவனும் அரவங்கள்போன்ற அம்புகளை எய்பவனுமான இந்தக்கர்ணனைப் பார். பகைவர்களை வாட்டுகின்றவனே! பார்த்த! இதோ ராதேயன் உன்னுடைய வானரக்கொடியைக்கண்டு உன்னோடு யுத்தத்தை விரும்பித் திரும்பிவிட்டான். இந்தக்கர்ணன் விட்டிற்பூச்சி நெருப்பை எதிர்ப்பதுபோலத் தன் நாசத்திற்காக உன்னை வந்து எதிர்க்கிறான். பாரதர்களுள் சிறந்தவனே! திருதராஷ்டிர புத்திரனான துர்யோதனன், தர்மாத்மாவான யுதிஷ்டிரருக்குத் தீங்கிழைத்தவனும் யுத்தரங்கத்தில் ஏகாகியாயிருப்பவனும் ராதா புத்திரனுமான கர்ணனையும், கர்ணனைக்குறித்து மிக்க பரபரப்புள்ள மஹாரதனான உன்னையும், காரியம் நிறைவேறினவனான தன்னையும்பார்த்துக் கோபங்கொண்டவனாகவும் தேர்ப்படையுடன் கர்ணனைக்காக்கக் கருதியவனாகவும் நல்ல முயற்சியுள்ளவனாகவும் திரும்புகிறான். கீர்த்தியையும் ராஜ்யத்தையும் உத்தமமான ஸுகத்தையும் விரும்புகின்ற நீ துஷ்டாத்மாவான துர்யோதனனை இவர்களனைவரோடும் முயற்சியினால் கொல். பார்த்த! தேவாஸுரயுத்தத்தில் தேவாஸுரர்கள்போலப் போர்புரியப் போகின்றவர்களும் தைர்யசாலிகளும் பிரஸித்தி பெற்றவர்களுமான உங்களிருவருடைய யுத்தத்தில் எல்லாக்கௌரவர்களும் உன்னுடைய பராக்கிரமத்தைப் பார்க்கட்டும். பார்த்த! பரதர்களுள் சிறந்தவனே! மிக்க கோபமுள்ளவனான உன்னையும் கர்ணனையும் கண்டு கோபமுள்ளவனான அந்தத் துரியோதனன் மேலே செய்யவேண்டிய காரியத்தை அறியப்போகிறதில்லை. பரதஶ்ரேஷ்ட! குந்தீபுத்திர! தகுதியுள்ளவனான உன்னையும் தர்மாத்மாவான யுதிஷ்டிரருக்குத் தீங்கிழைத்தவனான கர்ணனையும் பார்த்து இச்சமயத்துக்கேற்றதும் அடுத்துச் செய்ய வேண்டியதுமான காரியத்தைத் தெரிந்துகொண்டு செய். யுத்தத்தில் சிறந்த புத்தியைச் செலுத்தித் தேர்ப்படைகளைக் காப்பவனான கர்ணனை எதிர்த்துச்செல். ரதிகளுள் சிறந்தவனே! குந்தீபுத்திர! வீர! யுத்தத்தில் பலசாலிகளும்

மான தேஜஸுள்ளவர்களும் முக்கியர்களுமான வேறு ஐந்நூறு ரதிகர்களும் ஐயாயிரம் யானைகளும் பதினாயிரங் குதிரைகளும் லக்ஷம் காலாட்களும் அடங்கின இந்தப்பெரும்படையானது ஒன்றுசேர்ந்து அந்யோந்யம் பாதுகாக்கப்பட்டுத் துரோணபுத்திரரை முன்னிட்டுக் கொண்டு யுத்தத்தில் உன்னை எதிர்த்துவருகின்றது. இச்சேனையைச் சீக்கிரமாக நாசஞ்செய். வலிமைபொருந்தியதும் உலகத்தில் பிரஸித்தி பெற்றதுமான இந்தத் தேர்ப்படையை நாசஞ்செய்து சிறந்த வில்லாளியான ஸூதபுத்திரனிடத்தில் உன் பௌருஷத்தை நீயே காட்டுவாயாக. பாரதர்களுள் சிறந்தவனே! உத்தமமான வேகத்தைக்கைக்கொண்டு இவனை எதிர்த்துச்செல். இந்தக்கர்ணன் மிக்க கோபங்கொண்டவனாகப் பாஞ்சாலர்களை எதிர்த்துச் செல்லுகிறான். பகைவர்களை வாட்டுபவனே! த்ருஷ்டத்யும்னனுடைய ரதத்திற்கு நேராக இவனுடைய கொடியைக் காண்கிறேன். இவன் பாஞ்சாலர்களை நன்கு எதிர்க்கப்போகிறானென்று நினைக்கிறேன். பாரதர்களுள் உத்தமனே! பார்த்த! உனக்குப்பிரியமான இதைச் சொல்லுகிறேன். தர்மபுத்திரரும் அரசருமான அந்தயுதிஷ்டிரர் க்ஷேமமுள்ளவராகவும் ஒளியுள்ளவராகவுமிருக்கிறார். பாரத! மிக்க தோள்வலியுள்ளவனான இந்தப் பீமன் ஸ்ருஞ்சயர்களுடையசேனையினாலும் ஸாத்யகியினாலும் சூழப்பட்டுப் படைமுகத்தில் திரும்பிவிட்டான். குந்திபுத்திர! பீமஸேனனாலும் மஹாத்மாக்களான பாஞ்சாலர்களாலும் கூர்மையான அம்புகளாலே யுத்தத்தில இந்தக்கௌரவர்கள் கொல்லப்படுகிறார்கள். துர்யோதனனுடைய ஸேனையானது பீமஸேனனுடையவேகத்தினால் பற்பல அம்புகளால் அடிக்கப்பட்டு யுத்தத்தினின்று புறங்காட்டி ஓடிவிட்டது. பாரதஸ்ரேஷ்ட! பாரதஸேனையானது பயிரழிந்த பூமிபோல இரங்கற்குரிய கோறமுள்ளதும் ரக்தத்தால்நனைக்கப்பட்டதுமாயிற்று. குந்தீ புத்திர! யுத்தஞ்செய்பவர்களுக்குத் தலைவனும் ஸர்ப்பம்போலக் கோபங்கொண்டவனும் திரும்பியிருப்பவனுமான பீமஸேனனைப் பார். அவனிடத்தினின்று பாரதசேனையானது ஓடுகின்றது. அர்ஜுன! மஞ்சள் நிறமுள்ளவைகளும் சிவப்புநிறமுள்ளவைகளும் கறுப்புநிறமுள்ளவைகளும் வெண்ணிறமுள்ளவைகளும் நக்ஷத்திரப் பிரதிமைகளாலும் சந்திரப்பிரதிமைகளாலும் சூரியப் பிரதிமைகளாலும் அலங்கரிக்கப்பட்டவைகளுமான கொடிகளும் குடைகளும் இதோ சிதறச் செய்யப்படுகின்றன. பொன்மயமாயும் வெள்ளிமயமாயும் தேஜோமயமாயும் வெவ்வேறு விதமாயுமிருக்கின்ற கொடிகள் எதிரில் தள்ளப்படுகின்றன. யானைகளும்

குதிரைகளும் அலைக்கப்படுகின்றன. இந்த ரதிகர்கள் பயந்தோடாத தன்மையுள்ள பாஞ்சாலர்களால் பற்பல வர்ணமுள்ள பாணங்களால் அடிக்கப்பட்டு உயிரையிழந்து தேர்களினின்று சாய்கின்றார்கள். தனஞ்சய! வேகமுள்ளவர்களான பாஞ்சாலர்கள் கௌரவ சேனையிலுள்ள வீரர்களையிழந்த யானைகளையும் குதிரைவீரர்களில்லாத குதிரைகளையும் ரதிகர்களில்லாத ரதங்களையும் நோக்கி நான்கு பக்கத்திலின்றும் விரைவாகச் செல்லுகின்றார்கள். பகைவர்களை அடக்குபவனே! புருஷஸ்ரேஷ்டர்கள் பீமஸேனனுடைய பலத்தை ஆதாரமாகக்கொண்டு உயிரில் ஆசையைவிட்டு ஒருவராலும் அவமதிக்க முடியாத பகைவர்களுடைய படையை நன்றாக அடிக்கின்றார்கள். இதோ பாஞ்சாலர்கள் கர்ஜிக்கின்றார்கள்; சங்கங்களை ஊதுகின்றார்கள்; யுத்தத்தில் பாணங்களால் சத்துருக்களை அடித்துக்கொண்டு எதிர்த்துச்செல்லுகின்றார்கள். ஸ்வர்க்கத்தினுடைய பெருமையைப் பார். பாஞ்சாலர்கள் வல்லமையினால் தார்த்தராஷ்டிரர்களை நாசஞ்செய்துகொண்டு உத்தமர்களான ரதிகர்களிடத்தில் இதோ பிரவேசிக்கின்றார்கள். ஆயுதமில்லாதவர்களும் வீணாகாத அஸ்திரங்களையுடையவர்களுமான இந்தப்பாஞ்சாலர்கள் ஆயுதம் பிடித்திருப்பவர்களான பகைவர்களுடைய ஆயுதங்களைப்பிடுங்கி அவற்றினாலேயே இவர்களைக் கொல்லுகின்றார்கள்; கர்ஜிக்கவும் கர்ஜிக்கின்றார்கள். பகைவர்களுடைய இந்தத் தலைகளும் கைகளும் தள்ளப்படுகின்றன. ரதங்களும் யானைகளும் குதிரைகளும் கீர்த்திசாலிகளான எல்லா வீரர்களும் கீழே தள்ளப்படுகிறார்கள். நான்கு பக்கத்திலும் ஆபத்தை அடைவிக்கப்பட்ட இந்தத் துர்யோதனனைச்சேர்ந்த பெரும்படையானது உயிரில் ஆசையைவிட்ட மஹாவில்லாளிகளான பாஞ்சாலர்களால் நான்கு பக்கத்திலும் கீழே தள்ளப்படுகின்றது. பிரபுவே! பகைவர்களைவாட்டுபவனே! ஸ்னேகிதர்களும் பராக்கிரமசாலிகளும் மஹா வில்லாளிகளுமான கிருபர் கர்ணன் முதலானவர்கள் பாஞ்சாலர்களைத்தடுப்பதில் (முயல்கின்றார்கள்.) சத்துருக்களைத் தபிக்கச் செய்பவனே! திருஷ்டத்யும்னனை முதன்மையாகக்கொண்ட வீரர்கள் திரும்பாதவர்களும் பயந்தவர்களும் ஆயிரமாயிரமாயிருப்பவர்களும் பகைவர்களுமான அந்தத் தார்த்தராஷ்டிரர்களைக் கொல்லுகின்றார்கள். பரதஸ்ரேஷ்டனே பீமஸேனன் திரும்பினவுடனே பற்பல விதமான எல்லா ரதங்களும் துர்யோதனனுடைய பெரும்படையும் பெரும்பான்மையாக நிறம் மாறிய முகங்களையுடையனவாயின. பீமனாலே நாராசங்களால் பிளக்கப்பட்ட இந்தயானைகள்

இந்திரனுடைய வஜ்ராயுதத்தினால் பிளக்கப்பட்ட மலைகளினுடைய சிகரங்கள்போலக் கீழே விழுகின்றன; பார். கணுக்கள் படிந்துள்ள பீமஸேனனுடைய பாணங்களால் அடிக்கப்படுகின்ற இந்தப் பெரிய யானைகள் தம்படைகளையே நாசஞ்செய்துகொண்டு ஓடுகின்றன. பீமஸேனனிடத்திலிருந்து உண்டான பயத்தினால் பீடிக்கப்படுகின்ற இந்தக்கௌரவர்கள் ஆயிரமாயிரமாக ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையுமிழந்து ஓடுகின்றார்கள். ஓடுகின்ற யானைகள் குதிரைகள் ரதங்கள் காலாட்கள் இவர்களுடைய சப்தத்தையும் கௌரவர்களைத்துரத்துகிற பீமஸேனனுடைய சப்தத்தையும் கர்ஜிக்கின்றவனும் யுத்தத்தில் ஜயத்தினால் பிரகாசிப்பவனும் பாண்டுநந்தனனுமான பீமஸேனனுடையஸிம்மநாதத்தையும் அடிக்கடி நான்தெரிந்துகொள்ளுகிறேன். இதோ நிஷாதகேசாதிபதியானவன் கோபங்கொண்டு காலதண்டத்தைக்கையில்கொண்டயமன்போலத் தோமரங்களைப்பிரயோகித்துக்கொண்டு உத்தமமான யானையோடு பீமனைஎதிர்த்துவருகிறான். கர்ஜிக்கின்ற அவனுடைய இருகைகளும் பீமஸேனனால் அறுக்கப்பட்டுவிட்டன. யானையும் வாள்போன்ற பத்துநாராசங்களால்அடிக்கப்பட்டது. அடிக்குந்திறமையுள்ளவைகளும் கறுத்தமைக் குவியல்கள்போற் பிரகாசிப்பவைகளும் யானைவீரர்களால் வீற்றிருக்கப்பட்டவைகளும் சக்திகளாலும் தோமரங்களுடைய கூட்டங்களாலும் பீமனைப்பீடிக்கின்றவைகளுமான வேறுசிலயானைகள் இதோ மறுபடியும் வருகின்றன. பார்த்த! உனக்கு மூத்தஸஹோதரனான பீமஸேனனால் யானையின்மீதிருக்கின்ற த்வஜங்களுடன்கூடின நாற்பத்தொன்பது வைஜயந்திகளும் கூர்மையுள்ள தொண்ணூறுபாணங்களால அறுக்கப்பட்டுவிட்டன. ஒவ்வொரு யானையும் பப்பத்துநாராசங்களால் அடிக்கப்பட்டுவிட்டன. இந்திரனுக்கொப்பானவனும் பரதர்களுள் சிறந்தவனுமான பீமஸேனன் கோபங்கொண்டு யுத்தத்திறகுத்திரும்பினவுடனே, தார்த்தராஷ்டிரர்களுடைய இந்தச்சப்தம் அவ்வாறாகக் கேட்கப்படவில்லை. அவ்வாறு ஒன்றுசேர்ந்திருக்கின்ற தார்த்தராஷ்டிரனுடைய மூன்று* அக்ஷௌஹிணிஸேனைகள் புருஷஶ்ரேஷ்டனும் கோபங்கொண்டவனுமான பீமஸேனனால் தடுக்கப்பட்டுவிட்டன. துர்பலமான கண்களையுடையமனிதர்கள், நடுப்பகலை அடைந்திருக்கின்ற சூரியனைப் பார்க்கச் சக்தியற்றவர்களாவதுபோல அரசர்கள் பார்த்தனைப் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். ஸிம்மத்

---

* ஆதிபர்வம் 31-வது பக்கத்திற் காண்க.

துக்கு மற்றமிருகங்கள் நடுங்குமா நீ போ க்கவீரர்கள் பீமனுடைய அம்புகளால பயமுறுத்தப்பட்டு புகத்தல ஓரிடத்திலாவது ஸுகத்தை அடையவில்லை. அந்த மதேயன் பயப்படுந்தன்மையுள்ள அந்தத் துர்யோதனன் விருத்தியடையும்படி செய்துகொண்டும் வில்லைக் கையிற்கொண்டும் மஹாராஜனான அந்தக் தார்த்தராஷ்டிரனைப் பாதுகாத்துக்கொண்டும் சேனையுடன்கூடியவனாகவும் வேகமுள்ளவனாகவும் அனேகவீரர்களோடு அவனருகில் செல்லுகின்றான்' என்று கூறினார்.

மிக்க புஜபலமுள்ள அர்ஜுனன் வாஸுதேவரிடத்தினின்று இந்தவார்த்தையைக்கேட்டும் பீமஸேனனால் செய்யப்பட்டதும்ஒருவராலும் செய்யமுடியாததுமான அச்செய்கையைக்கண்டும் மிகுந்திருக்கின்ற அனேக ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களை நாசஞ்செய்தான். பிரபுவே! பார்த்தனால் கொல்லப்படுகின்ற அந்த ஸம்சப்தர்களுடைய கூட்டங்கள் அப்பொழுது இந்திரனுக்கு அதிதியாயிருக்கும் நிலைமையையடைந்து சோகமற்றவைகளாயின. பாண்டுநந்தனன் உத்தமமானவேகத்தைக் கைப்பற்றிப் பெருங்காற்றானது மேகங்களை அழிப்பதுபோல நாராயணர்களையும் கோபாலர்களையும் நாசஞ்செய்தான். பாரதரே! பயந்தவர்களான அந்தவீரர்கள் அந்தஅந்தஇடத்திலேயே சிதற அடிக்கப்பட்டார்கள். பிறகு, புருஷோத்தமனான அர்ஜுனன் வாட்டப்பட்டிருக்கிற அந்த வீரர்களைக் கொன்றான். புருஷச்ரேஷ்டனான அவன் துர்யோதனனுடைய சதுரங்கசேனையுடன் கூடின படையைக் கூர்னுக்கள்படிந்துள்ள அம்புகளால மறுபடியும் கொன்றான்" என்று கூறினன்.

---

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

**(த்வந்துவயுத்தத்துக்காக அரசர்கள் எதிர்த்ததும், கர்ணன் சிகண்டியை வென்றதும், த்ருஷ்டத்யும்னனுக்கும் துச்சாஸனனுக்கும் யுத்தமும்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பீமஸேனனும் பாண்டவனான யுதிஷ்டிரனும் திரும்பிப் பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களாலும் என்னுடைய சேனையும் கொல்லப்பட்டுச் சேனைக்கூட்டமும் அலறிக்கொண்டு அடிக்கடி ஓடினதனால் என்னுடைய சேனைகளில் மிகுந்திருப்பவனை நான் காணவில்லை. அந்தோ! கஷ்டமான நிலைமையை நான் அடைந்துவிட்டேன். நான் ஜீவிப்பதற்குச் சக்தியற்றவனாகிவிட்டேன். ஸூத! பின்வாங்காதவர்களான என்புத்திரர்களுக்கு

ஜயத்தைவிரும்பின நான் என்னுடைய வீரர்கள் கொல்லப்பட்டதைக் கேட்டு எவ்வாறு ஜீவித்திருப்பேன்? இப்பொழுது அனேகவிதமான வார்த்தையைச் சொல்வதினால் யாதுபயன்? அவர்களுக்கு அதிருஷ்டமானது முக்கியமாயிருக்கின்றது. ஸஞ்சய! என்னைச்சேர்ந்தவர்கள் என்னசெய்தார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அரசரே! மிக்கபுஜபலமுள்ளவனான பீமனைக்கண்டு சிறந்த பிரதாபமுள்ளவனான உம்முடைய குமாரன் கோபத்தினால் சிவந்த கண்களுடன் பீமஸேனனை எதிர்த்துச்சென்றான். 'குந்தீபுத்திர! நில்; நில்; என் பராக்கிரமத்தை இப்பொழுது பார். இப்பொழுது உன்னை யமனுடைய வீட்டுக்கு அனுப்பப்போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு பீமஸேனனிருக்கிற அந்த இடத்திற்குச் சென்றான். பலசாலியானகர்ணன் பீமஸேனனிடத்தினின்று திரும்புகின்ற உம்முடைய சேனையைக்கண்டு அதிகமுயற்சியோடு அதனை நிலைபெறும்படிசெய்தான். நீண்டகைகளையுடையவனான கர்ணன் உமது புத்திரனுடைய சேனையை நிலைநிறுத்தி யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட பாண்டவர்களை அப்பொழுது எதிர்த்துச்சென்றான். பாண்டவர்களைச்சேர்ந்த மஹாரதர்கள் யுத்தத்தில் விற்களை அசைத்துக்கொண்டும் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டும் ராதேயனை எதிர்த்தார்கள். யுத்தத்தில் ஜயத்தினால் விளங்குகின்றவர்களான பீமஸேனனும் ஸாத்யகியும் சிகண்டியும் ஜனமேஜயனும் சிறந்தபலமுடையவனான த்ருஷ்டத்யும்னனும் எல்லாப் பிரபத்ரகர்களும் புருஷ ஸ்ரேஷ்டர்களான பாஞ்சாலர்களும் மிக்ககோபங்கொண்டவர்களாக உம்முடையபடையை நான்குபக்கத்திலும் எதிர்த்துவந்தார்கள். அரசரே! அவ்வாறே உம்முடையபோர்வீரர்கள் (பாண்டவஸேனையிலுள்ள) மஹாரதர்களைக் கொல்லவிரும்பி, விரைவுடன் பாண்டவர்களுடைய சேனையை எதிர்த்துச்சென்றார்கள். ஆண்மையிற் சிறந்தவரே! ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் வியாபிக்கப்பட்டும் காலாட்களாலும் த்வஜங்களாலும் நிறைக்கப்பட்டுமிருக்கின்ற சேனையானது ஆச்சர்யகரமான காட்சியுள்ளதாயிற்று. மஹாராஜரே! சிகண்டி கர்ணனை எதிர்த்தான். த்ருஷ்டத்யும்னன் பெருஞ்சேனையுடன் உம்முடையபுத்திரனான துர்யோதனனையும் துச்சாஸனனையும் எதிர்த்தான். நகுலன் விருஷஸேனனை எதிர்த்தான். யுதிஷ்டிரர் சித்திரஸேனனை எதிர்த்தார். மன்னரே! ஸஹதேவன் யுத்தத்தில் உலூகனை எதிர்த்தான். ஸாத்யகி சகுனியையும் த்ரௌ

பதிபுத்திரர்கள் கௌரவர்களையும் எதிர்த்தார்கள். யுத்தத்தில் முயற்சியுள்ளவரும் மஹாரதருமான த்ரோணபுத்திரர் அர்ஜுனனை எதிர்த்தார். கிருபர் மஹாவில்லாளியான யுதாமன்யுவை யுத்தத்தில் எதிர்த்தார். பலசாலியான கிருத்வர்மா உத்தமௌஜஸை எதிர்த்தான். ஐயா! மிக்கதோள்வலியமைந்த பீமஸேனன் குருகுலத்திலுதித்தவர்களும் ஸேனையுடன்கூடியவர்களுமான உம்முடைய புத்திரர்களனைவர்களையும் ஒருவனாகவே எதிர்த்தான். மஹாராஜரே! பிறகு, பீஷ்மரைக் கொன்றவனான சிகண்டி பயமற்றவன்போல ஸஞ்சரிக்கின்ற கர்ணனைப் பாணங்களால் தடுத்தான். பிறகு, தடுக்கப்பட்ட கர்ணன் கோபத்தினால் உதடுகள்மிகத்துடிக்க, சிகண்டியை மூன்றுபாணங்களால் இரண்டுபுருவங்களுடைய மத்தியிலும் அடித்தான். அந்தப்பாணங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்ற அந்தச்சிகண்டி மூன்றுசிகரங்களோடுகூடின வெள்ளிமலைபோல் மிகவிளங்கினான். ஸூதபுத்திரனால் யுத்தத்தில் நன்றாயடிக்கப்பட்ட சிறந்தவில்லாளியான அந்தச் சிகண்டி யுத்தத்தில் கூர்மையுள்ள தொண்ணூறுபாணங்களால் கர்ணனை அடித்தான். மஹாரதனான கர்ணன், மூன்றுபாணங்களால் அந்தச்சிகண்டியினுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்று ஒரு க்ஷுரப்ரத்தினால் அவனுடைய கொடியையும் நாசஞ்செய்தான். பிறகு, பகைவர்களை வாட்டுபவனும் மஹாரதனுமானசிகண்டி மிகுந்தகோபங்கொண்டு குதிரைகள்கொல்லப்பட்ட அந்தரதத்தினின்று துள்ளிக்குதித்துக் கர்ணன்மீது ஒரு சக்தியைப் பிரயோகித்தான். பாரதரே! கர்ணன் யுத்தத்தில் அந்தச்சக்தியை மூன்றுபாணங்களால் துண்டாக்கிப் பிறகு கூர்மையுள்ள ஒன்பதுபாணங்களால் சிகண்டியைஅடித்தான். புருஷஶ்ரேஷ்டனானசிகண்டி மிகவும்காயப்படுத்தப்பட்டுக் கர்ணனுடையவில்லினின்று வெளிப்பட்டுவருகின்ற பாணங்களைத் தன்மீது தாக்காமலிருக்கும்படி செய்துகொண்டு அந்த யுத்தரங்கத்தினின்று விரைவாக ஓடினான். மஹாராஜரே! பிறகு, கர்ணன், அதிகபலமுள்ள காற்றானது பஞ்சுக்குவியலையடைந்து அழிப்பதுபோலப் பாண்டவர்களுடைய படைவீரர்களை நாசஞ்செய்தான். மஹாராஜரே! உம்முடைய புத்திரனாலே பீடிக்கப்பட்ட த்ருஷ்டத்யும்னன் துச்சாஸனனை மூன்றுபாணங்களால் நடுமார்பில் திருப்பிஅடித்தான். பெரியவரே! துச்சாஸனன் பொன்மயமான புங்கமுள்ளதும் உட்படிந்த கணுக்களுள்ளதுமான அந்தப்பல்லத்தினாலே த்ருஷ்டத்யும்னனுடைய இடக்கையை அடித்தான். பாரதரே! ரோஷமுள்ளவனான த்ருஷ்டத்யும்னனே அடிக்கப்பட்டு மிக்ககோபத்

மூன்டு துச்சாஸனனைக்குறித்துக் கொடிய ஓர்அம்பைப்பிரயோகித்தான். அரசரே! த்ருஷ்டத்யும்னனால்விடப்பட்டு வருகின்ற மஹா வேகமுள்ளஅந்தஅம்பை உம்முடையபுத்திரன் மூன்றுபாணங்களால் துண்டாக்கினன். பிறகு, ஸ்வர்ணலங்காரங்களுடன்கூடின வேறு பதினறுபல்லங்களாலே த்ருஷ்டத்யும்னனை எதிர்த்து இருகைகளிலும் மார்பிலும் அடித்தான். ஐயா! பிறகு, அந்தப்பார்ஷதன் கோபங்கொண்டவனுகி மிக்ககூர்மையுள்ள ஒரு க்ஷுரப்ரத்தினல் வில்லை வெட்டிஎறிந்தான். பிறகு, ஜனங்கள் பெருங்கூச்சலிட்டார்கள். பிறகு, உம்முடையபுத்திரன் அட்டஹாஸஞ்செய்து வேறொரு வில்லைஎடுத்து த்ருஷ்டத்யும்னனைப்பாணஸமூகங்களால்நான்குபக்கத்திலும் தடுத்தான். மிக்கபலசாலியான உம்முடையபுத்திரனுடைய பராக்கிரமத்தைக்கண்டு யுத்தத்தில் யுத்தவீரர்களும் ஸித்தர்களும் அவ்வாறே அப்ஸரஸுகளும் ஆச்சர்யமடைந்தார்கள்.போர்புரிகின்றவனும் மஹாபலசாலியும் துச்சாஸனனல் தடுக்கப்பட்டவனுமான த்ருஷ்டத்யும்னனைச் சிங்கத்தினலே தடுக்கப்பட்ட பெரியயானையைப் போல் கண்டோம்.

---

## அறுபத்துநான்காவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்.)

பிறகு, தேர்களையும் யானைகளையும் குதிரைகளையுமுடையவர்களான பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஸேனபதியான த்ருஷ்டத்யும்னனைப் பாதுகாக்கவெண்ணி உம்முடையபுத்திரனைத் தடுத்தார்கள். பகைவர்களைவாட்டுபவரே! பிறகு, அக்காலத்தில், உம்மைச்சேர்ந்தவீரர்களுக்குக் கோரமும் மிக்கபயங்கரமுமான யுத்தமானது பகைவர்களோடு நடக்கத்தொடங்கியது. நகுலன், பிதாவினுடைய பக்கத்தில் நிற்கின்ற விருஷஸேனனை ஐந்துபாணங்களால்அடித்து வேறு மூன்றுபாணங்களாலும் அடித்தான். பிறகு, சூரனை விருஷஸேனன் சிரிக்கின்றவன்போலிருந்துகொண்டு மிக்க கூர்மையுள்ளநாராசத்தால நகுலனை மார்பில் அதிகமாகஅடித்தான். பகைவர்களை அழிப்பவரே! பலசாலியான பகைவனுல் நன்ருகஅடிக்கப்பட்ட, அந்தநகுலன் சத்துருவை இருபதுபாணத்தினல்அடித்து அவனுடையஸாரதியையும் ஏழுபாணங்களால் அடித்தான். பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களான அவ்விருவரும் ஆயிரம்பாணங்களால் ஒருவரைஒருவர் மூடினார்கள். உம்முடையசேனையானது நொறுக்கப்

பட்டது. அரசரே! அந்த ஸூதபுத்திரன் கௌரவர்களுடையசேனை விரைவாகவோடுவதைக்கண்டு பின்தொடர்ந்து பலாத்காரத்தினால் திருப்பினான். வேந்தரே! இந்தச் சமயத்தில் கஷ்டமானயுத்தமானது நடந்தது. பிறகு, சேனை திரும்பினவுடனே, நகுலன் கௌரவர்களைக்குறித்துச் சென்றான். ஐயா! கர்ணபுத்திரனோ யுத்தத்தில் நகுலனைவிட்டுவிட்டு விரைபவனாகி ராதேயனுடையசேனையை ரக்ஷித்தான். பெரியவரே! யுத்தத்தில் கோபங்கொண்ட உலூகனோ கோபங்கொண்ட ஸஹதேவனாலேயுத்தமுனையில்அனேகஅம்புகளால்தடுக்கப்பட்டான். சிறந்த பிரதாபமுள்ளவனான ஸஹதேவன் அவனுடைய நான்குகுதிரைகளையுங்கொன்று ஸாரதியையும் யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். மன்னரே! பிதாவுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகின்ற உலூகனோ பிறகு வாகனத்தினின்று கீழேகுதித்துத் திரிகர்த்தருடைய படையைக்குறித்து விரைவாகச்சென்றான். ஸாத்யகி கூர்மையுள்ள இருபதுபாணங்களால் சகுனியைஅடித்துச் சிரித்துக்கொண்டே ஒருபல்லத்தினால் அவனுடையத்வஜத்தை வெட்டிஎறிந்தான். அரசரே! பிரதாபசாலியான சகுனி யுத்தத்தில் கோபங்கொண்டு அந்தஸாத்யகியினுடைய கவசத்தைப்பிளந்து மீண்டும் பொன்மயமான த்வஜத்தையும் அறுத்தான். மஹாராஜரே! அவ்வாறே ஸாத்யகி கூர்மையுள்ளபாணங்களால் இந்தச்சகுனியைத் திருப்பிஅடித்து ஸாரதியையும் மூன்றுபாணங்களால் அடித்தான். பிறகு, விரைபவனான ஸாத்யகி இந்தச்சகுனியினுடையகுதிரைகளையும் பாணங்களால் யமன்வீட்டையடைவித்தான். பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, சகுனி விரைவுடன் குதித்து மஹாத்மாவான உலூகனுடைய ரதத்தில் விரைவாக ஏறிக்கொண்டான். அந்தச்சகுனி, பிறகு, யுத்தஞ்செய்கின்ற ஸாத்யகியினிடத்தினின்று விரைவாக வேறிடத்திற்குச் சென்றுவிட்டான். அரசரே! ஸாத்யகியோ யுத்தத்தில் உம்முடைய படையைநோக்கி வேகத்துடன் எதிர்த்துச்சென்றான். பிறகு, சேனையானதுஅடிக்கப்பட்டது.வேந்தரே!ஸாத்யகியினுடைய பாணங்களால் நன்றாகமூடப்பட்ட உம்முடையசேனைகள் விரைவாகப் பததுத்திக்குக்களையும் அடைந்தன; உயிரையிழந்தவைபோல விழுந்தன. உம்முடையகுமாரனான துரியோதனன் யுத்தத்தில் பீமஸேனனைத் தடுத்தான். பீமன் லோகேஶ்வரனான அந்தத்துர்யோதனனை ஒருமுகூர்த்தத்தில் குதிரைகளையும் ஸாரதியையும் ரதத்தையும் த்வஜத்தையும் இழந்தவனாகச் செய்தான். அச்சமயத்தில் அந்தச்செய்கையினால் ஜனங்கள் ஸந்தோஷமடைந்தார்கள். பிறகு, பீம

ஸேனனிடத்திலிருந்துண்டான பயத்தினால் பீடிக்கப்பட்ட அந்தத் துர்யோதனராஜன் அந்தயுத்தரங்கத்தைவிட்டு விலகிச் சென்றுவிட்டான். பிறகு, கௌரவசேனை முழுவதும் பீமஸேனனுக்கருகில் விரைவாகச்சென்றது. அந்தயுத்தரங்கத்தில் பீமஸேனனைக்கொல்ல விரும்பினவீரர்களுடைய பெரியசப்தம் உண்டாயிற்று. யுதாமன்யு கிருபரைஅடித்து அவருடையவில்லை விரைவாகவெட்டினான். சஸ்திரதாரிகளுள் உத்தமரானகிருபர், பிறகு, வேறுவில்லைக் கையிலெடுத்து யுதாமன்யுவினுடைய கொடியையும் ஸாரதியையும் குடையையும் பூமியில் தள்ளினார். பிறகு, மஹாரதனான யுதாமன்யு ரதத்தோடேயேவிலகி வேறிடத்திற்குச் சென்றுவிட்டான். உத்தமௌஜஸானவன் பயங்கரனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனுமான கிருதவர்மாவை மேகமானது மழையினால் மலையைமூடுவதுபோல விரைவாகமூடினான். பகைவர்களை வாட்டுபவரே! மிகப்பெரிதும் கொடிதுமான அப்படிப்பட்டயுத்தம் நடந்தது. அரசரே! அவ்விதமானயுத்தம் என்னால் முன் பார்க்கப்பட்டதில்லை. அரசரே! பிறகு, கிருதவர்மா யுத்தத்தில் உத்தமௌஜஸை விரைவாக மார்பில்அடித்துத் தேர்நடுவில் உட்காரும்படிசெய்துவிட்டான். ரதிகர்களுள் சிறந்தவனான அந்தஉத்தமௌஜஸை ஸாரதியானவன் ரதத்தோடு போர்க்களத்தைவிட்டு வேறிடத்திற்குக் கொண்டுபோனான். வேந்தரே! பிறகு, கிருதவர்மா பாண்டவசேனையை எதிர்த்துச்சென்றான். துச்சாஸனனும் சகுனியும் பெரியயானைப்படையோடு பாண்டவனைச் சூழ்ந்துகொண்டு க்ஷுத்ரகங்களென்கிற பாணங்களால் நான்குபக்கங்களிலும் அடித்தார்கள். பிறகு, பீமன் கோபமுள்ளவனான துர்யோதனனை அனேகஅம்புகளால் புறங்காட்டிஓடும்படி அடித்து வேகத்துடன் யானைப்படைக்கு அருகில்சென்றான். விருகோதரன் விரைவாக எதிரில்வருகின்ற அந்தயானைப்படையைக்கண்டவுடனே, மிக்க கோபங்கொண்டு திவ்யாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்தான். இந்திரன் வஜ்ராயுதத்தினால் அஸுரர்களை அடிப்பதுபோல யானைகளாலே யானைகளை அடித்தான். பிறகு, யுத்தத்தில் யானைகளைக்கொல்லுகின்ற விருகோதரன் விட்டிற்பூச்சிகளால் மரத்தைமூடுவதுபோலப் பாணஸமூகங்களால் ஆகாயத்தை மூடினான். பிறகு, பீமன் ஆயிரக்கணக்காக ஒன்றுகூடியிருக்கின்ற யானைக்கூட்டங்களைக் காற்றானது மேகக்கூட்டங்களை நாசஞ்செய்வதுபோல வேகத்துடன் நாசஞ்செய்தான். பொன்னாலாகியவிரிப்புக்களாலும் ரத்னஸமூகங்களாலும் மூடப்பட்ட யானைகள் யுத்தரங்கத்தில் மின்னல்களுடன்கூடின மேகங்கள்போல

அதிகமாகவிளங்கின. மன்னரே! பீமனாலே கொல்லப்படுகின்ற அந்த யானைகள் விரைவாக ஓடின. சிலயானைகள் மார்புபிளக்கப்பட்டவை களாகப் பூமியில்விழுந்தன. கீழேவிழுந்தவைகளும் விழுகின்றவை களும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளும் சிதறஅடிக்கப் பட்ட மலைபோன்றவைகளுமான யானைகளால் அச்சமயத்தில் யுத்த பூமி விளங்கியது. பிரகாசிக்கின்றவர்களும் சிறந்த இரத்தினங்களை அணிந்தவர்களும் கீழேவிழுந்திருக்கின்றவர்களும் புண்ணியம்குறைந் ததினால் விழுந்திருக்கின்ற கிரஹங்கள்போன்றவர்களுமான யானைவீ ரர்களாலே பூமி விளங்கியது. பிறகு, யுத்தத்தில் பீமஸேனனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டுக் கபோலமுடைந்தும் மத்தகம்பிளந்தும் அவ்வாறே துதிக்கையறுந்துமிருக்கின்றயானைகள் நூறுநூறாகஓடின. பர்வதம் போன்ற சிலயானைகள் ரக்தத்தைக்கக்கிக்கொண்டும் பயத் தினால் பீடிக்கப்பட்டும் அம்புகளால்அடிக்கப்பட்ட அங்கங்களோடு கூடியவைகளாகித் தாதுக்களால் பற்பலநிறத்துடன்கூடின மலைகள் போல ஓடின. மஹாஸர்ப்பங்களுக்கொப்பானவைகளும் சந்தனத் தினாலும் அகிற்சாந்தினாலும் பூசப்பட்டவைகளும் வில்லினின்று அம்புகளைவிடுப்பவைகளுமான பீமஸேனனுடைய இருகைகளையும் கண்டேன். அந்தப்பீமஸேனனுடைய இடிமுழக்கத்துக்கொப்பான நாணொலியையும் தலத்வனியையும் கேட்டு யானைகள் பயத்தினால் மல ஜலங்களைப் பெருக்கிக்கொண்டு அதிகமாகஓடின. அரசரே! ஒருவனா யிருப்பவனும் புத்திமானுமான பீமஸேனனுடைய அந்தச்செய்கை யானது (பிரளயகாலத்தில்) எல்லாப்பிராணிகளையும் ஸம்ஹரிக்கின்ற ருத்ரருடைய செய்கைபோல் விளங்கியது.

---

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

### (ஸங்குல யுத்தம்.)

பிறகு, வெண்மையான குதிரைகளோடுகூடியதும் நாராயண ரால்நடத்தப்படுவதுமான உத்தமமான ரதத்தில் வீற்றிருக்கிற அர்ஜு னன் மிகுந்த காந்தியையுடையவனானான். அரசர்களுள் சிறந்தவரே! அதிகமான யுத்தமுயற்சியுள்ள குதிரைகளுடன்கூடின உம்முடைய அந்தச்சேனையை யுத்தத்தில் விஜயன் காற்று பெருங்கடலைக் கலக்கு வதுபோலக் கலக்கினான். ஶ்வேதவாஹனன் அஜாக்ரதையாயிருக் கும்போது, உம்முடையகுமாரனை துர்யோதனன் கோபம் மூண்டவ னாகவும் பாதிச்சேனையினால் சூழப்பட்டவனாகவும் விரைவாக எதிர்த்

துச்சென்று, கோபங்கொண்டுவருகின்ற யுதிஷ்டிரரை நாற்புறத்தி லும் சூழ்ந்துகொண்டான்; பிறகு, எழுபத்துமூன்று க்ஷுரப்ரங்களால் அவரை அடித்தான். குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் அச்சமயத்தில் அதிககோபங்கொண்டார். அவர் உம்முடைய புத்திரன்மீது முப்பது பல்லங்களை விரைவாகப் பிரயோகித்தார். பிறகு, கௌரவர்கள் யுதிஷ் டிரரைப் பிடிக்க எண்ணி ஓடினார்கள். பகைவர்களுடைய கெட்ட எண்ணத்தைஅறிந்து மஹாரதர்கள் ஒன்றுகூடிக் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரைப் பாதுகாக்க எண்ணி அவரை வந்தடைந்தார்கள். யுதிஷ் டிரர் சித்ரஸேனன்மீது சரமாரிகளைப் பொழிந்தார். சித்ரஸேனனோ மிக்ககோபங்கொண்டு குந்தீபுத்திரரைத் தடுத்தான். அந்தத் தர்மரா ஜர் சித்ரஸேனனை ஒருமுகூர்த்தத்தில் புறங்காட்டி ஓடும்படிசெய்து உம்முடைய படையை நான்குபக்கத்திலும் கூர்மையுள்ளபாணங் களால் அடித்தார். புஜபலமுள்ளவரே! துர்யோதனனை முதன்மை யாகக்கொண்ட உம்மைச்சேர்ந்தவர்கள யுதிஷ்டிரரைப் பிடிக்க எண் ணங்கொண்டு எல்லாச்சேனையையும் நன்றாக விலக்கித்தள்ளினார்கள். முன்னரேஅறியப்பட்ட பிரபாவமுள்ள அந்தமஹாரதர்கள் சேர்ந்து வந்திருப்பதைஅறிந்து நகுலனும் ஸஹதேவனும் பார்ஷதனான த்ருஷ் டத்யும்னனும் பாண்டுபுத்திரரானயுதிஷ்டிரரைப் பாதுகாக்கக்கருதி ஓர்அக்ஷௌஹிணிஸேனையினால் சூழப்பட்டவர்களாக யுதிஷ்டிரருக்கு எதிரில் ஓடிவந்தார்கள். பீமஸேனனும் உம்முடைய மஹாரதர்களை நாராசங்களால் அடித்துக்கொண்டு பகைவர்களால்சூழப்பட்டிருக்கிற யுதிஷ்டிரராஜரை மீட்கவிரும்பி எதிரில் ஓடிவந்தான். சூரியகுமார னும் தர்மவானுமான கர்ணன் வந்திருக்கின்ற அந்தஎல்லாமஹாவில் லாளிகளையும் பெரிதானசரமாரியினால் தடுத்தான். அம்புத்திரள் களைத் தொடுக்கின்றவர்களும் யானைகளைத்தூண்டிநடத்துகின்றவர் களுமான அந்தவீரர்கள் சிறந்தமுயற்சியுள்ளவர்களாயிருந்தும் ராதே யனைப் பார்ப்பதற்குஞ் சக்தியற்றவர்களாயிருந்தார்கள். ராதேயன் எல்லாச்சஸ்திரங்களையும் பிரயோகிப்பதில் ஸமர்த்தர்களான அந்த எல்லாமஹாவில்லாளிகளையும் பெரியசரமாரியினால் தடுத்தான். பல சாலியும் ஸமர்த்தனுமானஸஹதேவன் விரைவாக எதிரில்வந்து ராஜ னான துரியோதனனை இருபதுநாராசங்களால் அடித்தான். சேனை யின்அருகில் ஸஹதேவனால்அடிக்கப்பட்ட அந்தத்துரியோதனன் இரத்தத்தினால் நான்குபக்கத்திலும் நனைக்கப்பட்டவனாகி மதப் பெருக்குள்ள யானைபோல் விளங்கினான். ரதிகர்களுள் சிறந்தவனான ராதேயன் அந்த யுத்தகளத்தில் நன்றாகத்தீட்டப்பட்ட அம்புகளால்

மிக அடிக்கப்பட்டிருக்கின்ற உம்முடைய புத்திரனைக்கண்டு மிக்க கோபங்கொண்டு அவனுக்கு எதிரில் ஓடினான். பெரியவரே! அந்தக் கர்ணன் அவ்வித நிலைமையிலிருக்கின்ற துர்யோதனனைக்கண்டு சீக்கிரம் அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பாண்டவர்களுடைய சேனையையும் பாஞ்சாலர்களையும் கொன்றான். அரசரே! பிறகு, மஹாத்மாவான ஸூதபுத்திரனுடைய பாணங்களால் ஹிம்ஸிக்கப்பட்ட யுதிஷ்டிரருடைய படையானது விரைவாக ஓடியது. கர்ணனுடைய வில்லினின்று விடுபட்டவைகளும் குதைகளுள்ளவைகளுமான பற்பலவித பல்லங்களும் அம்புகளும் அந்த ரணகளத்தில் ஒன்றன்மீதொன்று விழுந்தன. மஹாராஜரே! ஆகாயத்தில் பாய்கின்றபாண ஸமூகங்கள் ஒன்றோடொன்று உரைந்துகொள்வதினாலே நெருப்புத் தோன்றியது. ராஜரே! பிறகு, கர்ணன் விட்டிற்பூச்சிகள் போலப் பத்துத்திசைகளிலும் செல்லுகின்றவைகளும் பகைவர்களுடைய சரீரங்களை அடைகின்றவைகளுமான அம்புகளாலே விரைவாக எதிர்த்தடித்தான். அவன் உத்தமமான அஸ்திரங்களை வெளியிட்டுக்கொண்டு செஞ்சந்தனங்களால் நன்றாகப்பூசப்பட்டவைகளும் இரத்தினங்களாலும் பொன்னணிகளாலும் அலங்கரிக்கப்பட்டவைகளுமான இரண்டுகைகளாலும் பிரயோகித்தான். மன்னரே! பிறகு, கர்ணன் எல்லாத்திக்குக்களையும் பாணங்களால்நன்றாகமயங்கச் செய்துகொண்டு தர்மராஜரான யுதிஷ்டிரரை மிகவும் பீடித்தான். மஹாராஜரே! பிறகு, தர்மபுத்திரரான யுதிஷ்டிரர் கோபங்கொண்டு கர்ணன்மீது கூர்மையுள்ள ஐம்பது பாணங்களைப் பிரயோகித்தார். அந்த யுத்தமானது பாணங்களால் உண்டுபண்ணப்பட்ட இருளுள்ளதும் கோரமான காட்சியுள்ளதுமாகியது. ராஜரே! அப்பொழுது (உம்முடைய) சேனையானது தர்மபுத்திரரால் பற்பல்விதமானவைகளும் கூர்மையுள்ளவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளாலும் பற்பல விதமான அநேகபல்லங்களாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் இருப்புலக்கைகளாலும் கொல்லப்படும்பொழுது உம்மைச்சேர்ந்தவர்களுடைய பெரிய கூக்குரல் உண்டாயிற்று. பரதர்களுள் சிறந்தவரே! தர்மாத்மாவான அந்த யுதிஷ்டிரர் எந்தஎந்த இடத்தில் குரூரமான பார்வையைச்செலுத்தினாரோ அந்தஅந்தஇடத்தில் உம்மைச்சேர்ந்தவர்கள் சிதற அடிக்கப்பட்டார்கள். மிக்ககோபமுள்ள கர்ணனும் தர்மராஜரான யுதிஷ்டிரரை யுத்தத்தில் நாராசங்களினாலும் அர்த்தசந்திரபாணங்களினாலும் வத்ஸதந்தங்களினாலும் அடித்தான். பொரு

தவனும் கோபமுள்ளவனும் கோபத்தினால் வாய்துடிக்கின்றவனும் அளவிடமுடியாத பராக்கிரமமுள்ளவனுமான கர்ணன் யுதிஷ்டிரரை அம்புகளால் அடித்துக்கொண்டு எதிர்த்துச்சென்றான்.' அந்தயுதிஷ்டிரரும் கர்ணனைப்பொற்புங்கமுள்ள கூர்மையான அம்புகளால் அடித்தார். கர்ணன் கழுகிறகுகளுடன் கூடியவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளால் குந்தீபுத்திரரும் ராஜாவுமான யுதிஷ்டிரரை அட்டஹாஸத்துடன் மார்பில் அடித்தான். அந்தக் கர்ணனாலே நன்றாக ஹிம்ஸிக்கப்பட்ட அந்தத்தர்மராஜரான யுதிஷ்டிரர் தேர்நடுவில் உட்கார்ந்து ஸாரதியைப்பார்த்து, 'இந்தயுத்தரங்கத்தைவிட்டுச் செல்' என்று ஏவினார். பிறகு, கௌரவர்களனைவரும் துர்யோதனராஜனும் ஆரவாரித்தார்கள். 'அரசனைப் பிடியுங்கள்' என்று நாற்புறங்களிலுமிருந்து எதிரில் ஓடிவந்தார்கள். அரசரே! பிறகு, பகைவர்களை அடிக்கும் தன்மையுள்ளவர்களான ஆயிரத்தெழுநூறு கேகயர்கள் பாஞ்சாலர்களோடுகூடிக் கௌரவர்களைத் தடுத்தார்கள். அவ்வாறு கைகலந்தயுத்தத்தில், ஜனங்களுக்கு அழிவானது நேர்ந்திருக்கும் ஸமயத்தில், மஹாபலசாலிகளான துர்யோதனனும் பீமனும் யுத்தத்திற்காக எதிர்த்தார்கள்.

---

## அறுபத்தாறாவது அத்யாயம்.

**(கர்ணனுடைய பர்ணங்களால் பீடிக்கப்பட்ட யுதிஷ்டிரர் இளைப்பாறப்போனது.)**

கர்ணனும், முற்படையில் நிற்பவர்களும் மஹாவில்லாளிகளும் மஹாரதர்களுமான கேகயர்களைப் பாணஸமூகத்தினால் அடித்தான். அவன், தன்னைத் தடுக்கும் விஷயத்தில் அதிகமாக முயல்கின்றவர்களான அந்தக்கேகயவீரர்களுடைய ஐந்நூறு ரதிகர்களை யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். யுத்தத்தில் ராதேயனை மிகவும் தாங்கமாட்டாதவனென்றுகண்டு யுத்தவீரர்கள் அவனுடைய பாணத்தினால் நன்றாகப்பீடிக்கப்பட்டவர்களாகப் பீமஸேனனை வந்தடைந்தார்கள். அரசரே! கர்ணன் தேர்ப்படையைப் பாணங்களால் அனேகவிதமாகப் பிளந்துகொண்டே ஒற்றைத்தேருடனேயே யுதிஷ்டிரரை எதிர்த்து அருகில் சென்றான். பாணங்களால் அதிகமாகப்பீடிக்கப்பட்டவரும் ஸேனை தங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் செல்பவரும் நகுல ஸஹதேவர்களுடைய மத்தியத்தையடைந்தவரும் வீரரும் மெதுவாகச்செல்லுகின்றவரும் பிரஜ்ஞையற்றவருமான யுதிஷ்டிர

ராஜரை ஸூதபுத்திரனான அந்தக்கர்ணன் அணுகித் துர்யோதன னுக்கு நன்மையைச்செய்யும் விருப்பத்தினாலே கூர்மையுள்ளமூன்று உத்தமமான பாணங்களால் அடித்தான். அவ்வாறே, யுதிஷ்டிர ராஜரும் ராதேயனை நடுமார்பில் திருப்பி அடித்து மூன்றுபாணங் களால் (அவனுடைய) ஸாரதியையும் நான்குபாணங்களால் நான்கு குதிரைகளையும் அடித்தார். சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்ற வர்களும் ராஜகுமாரர்களும் சக்கரரக்ஷகர்களுமான அந்த மாத்ரீ குமாரர்களிருவரும் யுதிஷ்டிரராஜரைக் கொல்லாமலிருக்கவேண்டு மென்று கர்ணனை எதிர்த்தோடினார்கள். நகுலஸஹதேவரிருவ ரும் அதிக முயற்சியுடையவர்களாக அம்புமழைகளை ராதேயன்மீது தனித்தனி பொழிந்தார்கள். பிரதாபசாலியான ஸூதபுத்திரன், மஹாத்மாக்களும் பகைவர்களை அடக்குகின்றவர்களுமான அவ்விரு வரையும் கூர்மையானமுனையுள்ள இரண்டு பல்லங்களாலே அவ்வா றே திருப்பியடித்தான். கர்ணன் தந்தம்போன்ற நிறமுள்ளவை களும் மனோவேகம்போன்ற வேகமுள்ளவைகளும் கறுத்தவாலுள்ள வைகளுமான யுதிஷ்டிரருடைய சிறந்த குதிரைகளை யுத்தத்தில் கொன்றான். பிறகு, மஹாவில்லாளியான ஸூதபுத்திரன் அட்ட ஹாஸத்துடன் வேறொரு பல்லத்தினாலே யுதிஷ்டிரருடைய தலைப்பா கையைத் தள்ளினான். பாரதரே! மஹாரதனான அவன் அவ்வாறே நகுலனுடைய குதிரைகளையும் கொன்று, பிறகு, மிக்க கூர்மையுள்ள வேறொரு பல்லத்தினாலே வீரனும் புத்திசாலியுமான அவனுடைய வில்லையும் வெட்டினான். குதிரைகளையும் ரதங்களையும் இழந்தவர் களும் மிகக் காயப்படுத்தப்பட்டவர்களும் ஸஹோதரர்களுமான அந் தப் பாண்டவர்களிருவரும் அப்பொழுது ஸஹதேவனுடைய ரதத் தின்மீது ஏறினார்கள். சத்துருவீரர்களை அழிப்பவனும் அம்மானு மான மத்ரராஜன், அந்த யுத்தகளத்தில் ரதத்தையிழந்தவர்களான அந்தப்பாண்டவர்கள் இருவரையும் கண்டு தயையினால் ராதேய னைப்பார்த்து, 'கர்ண! குந்தீபுத்திரனான தனஞ்சயனை நீ தேடவேண் டும். ஆதலால், தர்மராஜனோடு நீ யாதுகாரணம்பற்றி இப்பொழுது போர்புரிகிறாய்? ராதேய! நீ கவசமிழந்து சஸ்திரமும் அஸ்திரமும் குறைந்து பாணமும் பாணப்பெட்டியும் அற்று ஸாரதியும் குதிரை களும் களைப்படைந்து பகைவரின் பாணங்களால் மூடப்பட்டு பிறகு, பார்த்தனை யடைந்து பரிஹாஸத்திற்குப் பாத்ரனாவாய்' என்று கூறி னான். அப்படிச்சொல்லப்பட்டாலும் கர்ணன் கோபமுள்ளவனாகக் கூர்மையுள்ளவைகளும் மஹாவீர்யமுள்ளவைகளுமான அம்புகளால்

யுதிஷ்டிரரையும் மாத்ரீபுத்திரர்களான பாண்டவர்களையும் பிடித்தான். பிறகு, சல்யன் உரக்கச்சிரித்து, தேரிலிருப்பவனும் அதிக கோபமுள்ளவனும் யுதிஷ்டிரரைக் கொல்வதில் உறுதியாயிருப்பவனுமான கர்ணனைப்பார்த்து, 'ராதேய! தார்த்தராஷ்டிரனால் எந்த அர்ஜுனனுக்காக நீ எப்பொழுதும் வெகுமானிக்கப்பட்டாயோ அந்த அர்ஜுனனைக் கொல். யுதிஷ்டிரனைக்கொன்று உனக்குஎன்னபயன்? இவன் கொல்லப்பட்டால் அர்ஜுனன் நிச்சயமாக நமது எல்லாரதிகர்களையும் கொன்றுவிடுவான். அந்த அர்ஜுனன் கொல்லப்பட்டாலன்றோ தார்த்தராஷ்டிரனுக்கு நிச்சயமான ஜயம். அதோ அந்த அர்ஜுனனுடைய கொடியானது பிரகாசிக்கின்ற சூரியன்போலக் காணப்படுகிறது. மிக்க புஜபலமுள்ளவனே! இதல்லவோ பயன்? யுதிஷ்டிரனைக்கொன்று உனக்கு என்னபயன்? இதோ ஊதப்படுகின்ற கிருஷ்ணார்ஜுனருடைய இரண்டு சங்கங்களுடைய பேரொலியும் கேட்கிறது. மாரிக்காலத்தில் மேகத்தினுடைய இடிமுழக்கம்போல வில்லினுடைய நாணொலியும் கேட்கிறது. கர்ண! இந்த அர்ஜுனன் அம்புமழைகளால் சிறந்த ரதிகர்களை அழித்துக் கொண்டு நம்முடைய சேனையனைத்தையும் விழுங்குகிறான். யுத்தத்தில் இவனைப் பார். சூரனான அர்ஜுனனுடைய பின்புறத்தை ரக்ஷிக்கின்றவர்களான யுதாமன்யுவையும் உத்தமௌஜஸையும் பார். சூரனான ஸாத்யகி இவனுடைய வடபுறத்திலுள்ள ஸேனாஸமூகத்தை ரக்ஷிக்கிறான். அவ்வாறே த்ருஷ்டத்யும்னன் இவனுடைய தென்புறத்திலுள்ளசேனையைப் பாதுகாக்கிறான். பீமஸேனனும் துர்யோதனராஜனோடு போர்புரிகின்றான். நாம் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமன் இப்பொழுது துர்யோதனனைக் கொல்லாமலிருக்கும்படியும் துர்யோதனராஜன் விடுபடும்படியும் செய். யுத்தத்தில் பிரகாசிக்கின்ற பீமஸேனனால் விழுங்கப்பட்டிருக்கிற இந்தத் துர்யோதனனைப் பார். இவன் இப்பொழுது பீமனிடத்தினின்று விடப்படுவானானால் மிக்கபெரிதான ஆச்சர்யம் உண்டாகும். அதிக ஸம்சயத்தை அடைந்திருக்கின்ற இந்தத் துர்யோதனனை அணுகிப் பாதுகாப்பாயாக. மாத்ரீபுத்திரர்களையும் ராஜனான யுதிஷ்டிரனையும் கொன்று என்னபயன்?' என்றுகூறினான்.

மன்னரே! வீர்யமுள்ளவனான ராதேயன் இவ்வாறான சல்யனுடைய வார்த்தையைக்கேட்டு,மஹாயுத்தத்தில்துரியோதனன் பீமனால் விழுங்கப்பட்டதையுங் கண்டு, சல்யனுடைய சொல்லினால் தூண்டப்பட்டு, அரசனிடத்திலுள்ளபேரவாவால் அஜாதசத்ருவையும் மாத்ரீ

புத்திரர்களான பாண்டவர்களையும் விட்டுவிட்டு உம்முடையபுத்திர னைப் பாதுகாப்பதற்காக எதிரில் ஓடினான். பெரியவரே! கர்ணன் மத்ர ராஜனால் தூண்டப்பட்டவைகளும் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்றவை போலிருப்பவைகளுமான குதிரைகளோடு (துர்யோதனனுடைய அருகில்) சென்றவுடன், பாண்டுவினுடைய புத்திரரும் குந்தீபுத்திர ருமான யுதிஷ்டிரர் வேகமுள்ள ஸஹதேவனுடைய குதிரைகளோடு யுத்தத்தைவிட்டு விலகிச்சென்றார். பாணங்களால் நன்றாகக் காயப் படுத்தப்பட்ட அந்த யுதிஷ்டிரராஜர் வெட்கினவர்போல அந்தநகுல ஸஹதேவர்களோடு விரைவாகத் தம்முடைய சேனை தங்கியிருக்கும் இடத்தை அடைந்து ரதத்தினின்று கீழே இறங்கிச்சீக்கிரமாகப் படுக் கையில் படுத்தார். மேனியில் தைத்திருக்கிற பாணங்களை விலக்கிக் கொண்டவரும் மனத்துயரத்தால் பீடிக்கப்பட்டவருமான அந்த யுதிஷ்டிரராஜர் மஹாரதர்களும் வீரர்களும் பிராதாக்களுமான மாத்ரீ புத்திரர்களைப் பார்த்து, 'வீரர்களே! பீமன் இருக்குமிடத்திற்கு விரைவாகச்செல்லுங்கள்' என்றுகட்டளையிட்டார். அந்தப்பாண்டவர் களெல்லோரும் ஒருவரோடொருவர் ஸல்லாபஞ்செய்தபிறகு, பாண்ட வர்களான நகுலஸஹதேவர்கள் பீமஸேனனுடைய சேனையைக்குறித் துச் சென்றார்கள். அந்தவிருகோதரனோ (அந்தஇடத்தில்) மேகம் போலக் கர்ஜித்துக்கொண்டு போர்புரிந்துகொண்டிருக்கிறான். பிறகு, பகைவர்களை அழிப்பவர்களும் பலமுள்ளவர்களும் பிராதாக்களுமான ரதிக ஶ்ரேஷ்டனான நகுலனும் தேஜஸ்வியான ஸஹதேவனுமாகிய இருவரும் வேறுரதத்தின்மீதேறிச் சிறந்தவேகமுள்ள குதிரைக ளோடு பீமன்போர்புரியுமிடத்தில் சேனைகளோடுசென்று நின்றார்கள்.

---

## அறுபத்தேழாவது அத்யாயம்

**(அர்ஜுனன் அஶ்வத்தாமாவை வென்றதும், கர்ணன் பாண்டவஸேனை யைத் துன்புறுத்தியதும்.)**

அரசரே! த்ரோணபுத்திரர் பெரிய ரதஸமூகத்தினால் சூழப் பட்டு, பார்த்தன் ஸன்னத்தமாயிருந்தவிடத்திற்கு விரைவாகச் சென் றார். வருகின்ற அந்தஅஶ்வத்தமாவைச் சூரனும் கண்ணபிரானைத் துணையாகக்கொண்டவனுமான அர்ஜுனன் கரையானது கடலைத் தடுப்பதுபோல்யுத்தத்தில்விரைவாகத்தடுத்தான். மஹாராஜரே! பிறகு, கோபங்கொண்டவரும் பிரதாபசாலியுமான த்ரோணபுத்திரர் அர்ஜு னனையும் வாஸுதேவரையும் பாணங்களால் மூடினார். பிறகு, மஹா

ரதர்களான கௌரவர்கள் அப்பொழுது அந்தயுத்தத்தில் கிருஷ்ணார் ஜுனர்கள்(பாணங்களால்)மூடப்பட்டதைக்கண்டு அதிகஆச்சர்யத்தை அடைந்து பார்த்துக்கொண்டிருந்தனர். பாரதரே! பிறகு, அர்ஜுன னே சிரித்துக்கொண்டு திவ்யாஸ்திரத்தைப் பிரயோகித்தான். பிராம் மணர் யுத்தத்தில்அந்தஅஸ்திரத்தைத் தடுத்தார். பல்குனன், (அஸ் வத்தாமாவைக்) கொல்லவேண்டுமென்ற எண்ணத்தினால் பிரயோ கித்த அஸ்திரத்தையெல்லாம் மஹாவில்லாளியான அவர் அஸ்திரங்க ளால் நாசஞ்செய்தார். மஹாராஜரே! மஹாபயங்கரமான அஸ்திர யுத்தம் நடந்துவருங்காலத்தில்யுத்தத்தில் அஸ்வத்தாமாவை வாயைத் திறந்திருக்கும் அந்தகனைப்போலக் கண்டோம். அந்தஅஸ்வத்தாமா திக்குக்களையும் திக்கோணங்களையும் பாணங்களால்மூடி வாஸுதேவ னை மூன்றுபாணங்களால் வலக்கையில் அடித்தார். பிறகு, அர்ஜு னன் அந்தஅஸ்வத்தாமாவுக்குத் துணையாகவந்திருக்கின்ற ரதிகர்க ளெல்லோரையுங்கொன்று யுத்தத்தில்பூமியை இரத்தவெள்ளத்தினால் நான்குபக்கத்திலும் நனைக்கப்பட்டதாகச் செய்தான். பார்த்தனுடைய வில்லினின்று விடுக்கப்படும்பாணங்களாலே (அடிக்கப்படும்) ரதிகர் கள், எல்லாப்பிராணிகளையும் இழுத்துக்கொண்டு செல்லுகின்றதும் பயங்கரமானதும் பரலோகத்தைக்குறித்துச் செல்லுகின்றதுமான நதியில் ரதங்களோடு விழுந்தார்கள். யுத்தத்தில் த்ரோணபுத்திரரால் அடிக்கப்பட்டவீரர்களை ஜனங்கள் கண்டார்கள். அந்த த்ரோணபுத் திரரும் அப்பொழுது மிக்ககோரமானதும் பகைவர்களை இழுத்துச் செல்வதுமான ஒருரக்தநதியை உண்டுபண்ணினர். அவருக்கும் பார்த்தனுக்கும் பயங்கரமான கைகலந்தயுத்தம் நடந்துவருங்காலத் தில் வீரர்கள வரம்புகடந்து போர்புரிகின்றவர்களாகப் பின்புறத்தில் ஓடிவந்தார்கள். குதிரைகளும் ஸாரதிகளும்கொல்லப்பட்ட ரதங் களாலும் வீரர்கள்கொல்லப்பட்ட குதிரைகளாலும் வீரர்கள்கொல் லப்பட்ட யானைகளாலும் யானைகள்கொல்லப்பட்ட வீரர்களாலும் யுத்தபூமியானது நிரம்பியது. மன்னரே! பார்த்தனால் யுத்தத்தில் கோரமானஜனநாசம் உண்டுபண்ணப்பட்டது. ரதிகர்கள் பார்த்த னுடைய வில்லினின்றுவிடுபட்ட அம்புகளாலே கொல்லப்பட்டு விழுந்தார்கள். குதிரைகளும் கடிவாளங்களறுபட்டு ஆங்காங்கு நான்குபக்கத்திலும் ஓடின. பிறகு, வீர்யவானான * துரோணபுத்திரர், யுத்தத்தில்பிரகாசிக்கின்ற பார்த்தனுடைய அச்செய்கையைக் கண்டு

* இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

விரைபவனும் ஜயசாலிகளுள்சிறந்தவனுமான அவனை அணுகி, ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட பெரியவில்லை அசைத்துக்கொண்டு, கூர்மையுள்ளபாணங்களை நான்குபக்கத்திலும் இறைத்தார். மஹாராஜரே! மறுபடியும் அவர் முயன்று ஒருபாணத்தினால் பார்த்தனை மார்பில் தயையின்றி மிகஅடித்தார். பாரதரே! யுத்தத்தில் அந்த த்ரோணபுத்திரரால் அதிகமாகஅடிக்கப்பட்டவனும் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனும் உதாரமானபுத்தியையுடையவனுமான அர்ஜுனன் பாணவர்ஷங்களினால் யுத்தத்தில் பலாத்காரமாக த்ரோணபுத்திரரைமூடி அவருடையவில்லையும் துண்டாக்கினான். வில்அறுக்கப்பட்ட அந்த த்ரோணபுத்திரர்யுத்தத்தில் வஜ்ராயுதம்போலத்தாக்குகின்ற ஒருபரிகத்தைஎடுத்து அப்பொழுது கிரீடியின்மீது பிரயோகித்தனர். ராஜரே! எதிரில்வருகின்றதும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தப்பரிகத்தைப் பாண்டவன் உரக்கச்சிரித்துக்கொண்டு உடனே துண்டாக்கினான். அரசரே! பார்த்தனுடைய அம்புகளால் அறுக்கப்பட்ட அந்தப் பரிகமானது அப்பொழுது வஜ்ரத்தினால் அடிக்கப்பட்ட மலைபோலச் சிதறிப் பூமியில் விழுந்தது. மஹாராஜரே! பிறகு, கோபங்கொண்ட மஹாரதரான த்ரோணபுத்திரர் பீபத்ஸுவின்மீது வேகமுள்ள ஐந்திராஸ்திரத்தைப் பிரயோகித்தார். வேந்தரே! அந்தப்பார்த்தன் பிரயோகிக்கப்பட்ட, அந்த அஸ்வத்தாமாவினுடைய ஐந்திராஸ்திரத்தைக்கண்டு காண்டீவத்தை எடுத்தான். பலசாலியான அவன், மஹேந்திரனால் கொடுக்கப்பட்ட உத்தமமான அஸ்திரத்தைஎடுத்து ஐந்திராஸ்திரத்தைத் திருப்பி அடித்தான். அவன் ஐந்திராஸ்திரத்தினால் உண்டுபண்ணப்பட்ட அந்தப் பாணவலையைப்பிளந்து பிறகு ஒருக்ஷணத்தில் அஸ்வத்தாமாவினுடையரதத்தை நன்றாக மூடினான். பிறகு, பார்த்தனுடைய அம்புகளால் அடிக்கப்பட்ட த்ரோணபுத்திரர், அப்பொழுது அவனை எதிர்த்து அருகில்வந்து அவனுடைய சரமாரியில்நுழைந்து பாணங்களாலே சிறந்தபெயரை வெளிப்படுத்திப் பிறகு நூறுபாணங்களால் கோவிந்தரையும் முந்நூறுக்ஷுத்ரகங்களால் அர்ஜுனனையும் விரைவாக அடித்தார். பிறகு, அர்ஜுனன் உம்மைச்சேர்ந்தவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நூறுபாணங்களால் குருபுத்திரரை மர்மஸ்தானங்களில்பிளந்து அவருடைய குதிரைகளின்மீதும் ஸாரதியின்மீதும் வில் நாணின்மீதும் (பாணங்களை) இறைத்தான். சத்துரு வீரர்களைக் கொல்லுகின்றவனான பாண்டவன் த்ரோணபுத்திரரை

மர்மஸ்தானங்களில் அடித்து அவருடைய ஸாரதியை ஒரு பல்லத்தினால் தேர்த்தட்டினின்று கீழேதள்ளினன். அந்த அஸ்வத்தாமா தாமே குதிரைகளைப்பிடித்து நடத்திக்கொண்டு க்ருஷ்ணார்ஜுனர்களை அம்புகளால் மூடினர். தாமே குதிரைகளை நடத்திக்கொண்டு பல்குனனையும் எதிர்த்துப் போர்புரிந்ததாகிய சுறுசுறுப்புடன்கூடின த்ரோணபுத்திரருடைய பராக்கிரமத்தை அந்த யுத்தத்தில் ஆச்சர்யமாகக் கண்டோம். அரசரே! யுத்தத்தில் த்ரௌணியினுடைய அந்தப்பராக்கிரமத்தைஎல்லாப்பிராணிகளும்புகழ்ந்தன. அவருடைய அவ்விதமான பராக்கிரமத்தினால் உம்மைச்சேர்ந்த எல்லா யுத்தவீரர்களும் யுத்தத்தில் அவரைப் புகழ்ந்தார்கள். ப்ருதாபுத்திரனை விஜயன் வில்லேந்தினவரான த்ரோணபுத்திரரால் மீறப்பட்டவுடன், அட்டஹாஸஞ்செய்து யுத்தத்தில் த்ரோணபுத்திரருடைய குதிரைகளின் கடிவாளங்களை க்ஷுரப்ரங்களால் விரைவாக வெட்டினன். அந்த அஸ்வத்தாமாவினுடைய குதிரைகள் பாணவேகத்தினால் நன்ருகப் பீடிக்கப்பட்டு ஓடின. பாரதரே! பிறகு, உமது சேனையினுடைய கோரமான சப்தமானது தோன்றியது. ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான பாண்டவர்களோ ஜயத்தைப்பெற்று நான்கு பக்கங்களிலும் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகிக்கின்றவர்களாக உமது படையைத் துரத்தினர்கள். மஹாராஜரே! ஜனங்களுக்கு நாதரே! ஜயத்தினால் பிரகாசிக்கின்ற வீரர்களான பாண்டவர்களால் நான்கு அங்கங்களுள்ள உம்முடைய இந்தப்பெரும் படையானது, விசித்திரமாகப் போர்புரிகின்ற உம்முடைய குமாரர்களும் ஸுபலகுமாரனை சகுனியும் கர்ணனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, அடிக்கடி நன்கு அழிக்கப்பட்டது. ஜனேஸ்வரரே! உம்முடைய புத்திரர்களாலே தடுக்கப்படுகின்ற பெரிய சேனையானது நான்குபக்கத்திலும் ஹிம்ஸிக்கப்பட்டு யுத்தத்தில் நிலைபெறவில்லை. மஹாராஜரே! பிறகு, நான்குபக்கத்திலும் ஓடுகின்ற யுத்தவீரர்களோடு கூடியதான உமது குமாரர்களுடைய பெரும்படையானது பயந்ததும் துன்பமுற்றதுமாகியது. மஹாபலசாலிகளான பாண்டவஸேனைவீரர்களாலே பீடிக்கப்படுகின்ற அந்தச் சேனையானது ஸூதபுத்திரனை கர்ணனால், 'நில், நில்,' என்று எப்போதும் சொல்லப்பட்டும் நிலைபெறவில்லை.

மஹாராஜரே! பிறகு, ஜயத்தினால் பிரகாசிக்கின்ற பாண்டவர்களாலே அதிகமாக அலறும்படிசெய்யப்பட்டதும் நான்குபக்கத்திலும்

ஓடுகின்றதுமான தன்னுடையதான படையைக்கண்டு, பிறகு, துரியோதனன் அன்புடன் கர்ணனைப்பார்த்து, 'கர்ண! பாண்டவர்களாலே அதிகமாகப் பீடிக்கப்பட்ட நமது பெரிய சேனையைப் பார். நீ நின்றுகொண்டிருக்கும்பொழுதே சேனையானது நான்கு பக்கத்திலும் பயத்தினால் ஓடுகின்றது. மிக்க புஜபலமுள்ளவனே! பகைவர்களை அடக்குபவனே! இதனை அறிந்து செய்யத்தக்கதைச்செய். ஆண்மையிற் சிறந்தவனே! வீர! பாண்டவர்களாலே துரத்தப்படுகின்ற ஆயிரக்கணக்கான யுத்த வீரர்கள் யுத்தத்தில் உன்னையே அழைக்கின்றார்கள்' என்று சொல்லினன். கர்ணன், கௌரவம்பொருந்தின துர்யோதனனுடைய இந்த வார்த்தையைக்கேட்டு, அட்டஹாஸஞ்செய்துகொண்டு மத்ரராஜனைப்பார்த்து, 'ஜனேஸ்வர! என்னுடைய புஜவீர்யத்தையும் அஸ்திரவீர்யத்தையும் பார். யுத்தத்தில் பாண்டவர்களையும் எல்லாப்பாஞ்சாலர்களையும் இப்பொழுது கொல்லுகிறேன். புருஷஸ்ரேஷ்ட! குதிரைகளை நடத்து. மத்ரநாத! ஸம்சயமில்லை' என இந்த வாக்யத்தை உரைத்தான். மஹாராஜரே! பிரதாபசாலியும் வீரனும் அளவிடமுடியாத பராக்கிரமமுள்ளவனும் மஹாபலசாலியுமான ஸூதபுத்திரன் இவ்வாறு சொல்லிவிட்டு வெற்றியைத்தரக்கூடிய புராதனமான சிறந்த வில்லையெடுத்து நாணேற்றி அடிக்கடி துடைத்து, ஸத்யத்தாலும் சபதத்தாலும் அந்த யுத்தவீரர்களைத் தடுத்துப் பரசுராமரால் கொடுக்கப்பட்ட அஸ்திரத்தைப் பிரயோகித்தான். அரசரே! மஹாயுத்தத்தில் அந்த அஸ்திரத்தினின்று ஆயிரக்கணக்காகவும் லக்ஷக்கணக்காகவும் பத்துலக்ஷக்கணக்காகவும் கோடிக்கணக்காகவும் கூர்மையானஅம்புகள் வெளிப்பட்டன. ஜ்வலிக்கின்றவைகளும் கோரமானவைகளும் கழுகிறகுகளால் வேகமுள்ளவைகளாகச் செய்யப்பட்டவைகளுமான அவ்வம்புகளாலே பாண்டவசேனை நன்றாகமூடப்பட்டுவிட்டது. ஒன்றும் அறியப்படவில்லை. பிரஜைகளுக்கு நாதரே! யுத்தத்தில் சிறந்த பலமுள்ள பார்க்கவாஸ்திரத்தினால் பீடிக்கப்பட்ட பாண்டவர்களுடைய, 'ஆ! ஆ!' என்னும் ஒலியானது மிகுதியாகத் தோன்றியது. அரசரே! புருஷஸ்ரேஷ்டரே! நாற்புறத்திலும் ஆயிரக்கணக்காக விழுகின்ற யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் மனிதர்களாலும் பூமியானது மிக நடுக்கமுற்றது. வேந்தரே! பாண்டவர்களுடைய பெரும்படையானது நான்குபக்கத்திலும் கொல்லப்பட்ட, அவைகளாலே முழுதும் வ்யாகுலமடைந்ததாகி

யது. யுத்தம் செய்பவர்களுள் சிறந்தவனும் புருஷர்களுள் உத்தம னும் பகைவர்களைத்தபிக்கச்செய்கின்றவனுமான அந்தக் கர்ணன் ஒருவனே புகையற்றநெருப்புப்போலப் பகைவர்களை எரித்துக் கொண்டு பிரகாசித்தான். அவனால் கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ் சாலர்களும் சைத்யர்களும், காடு எரியும்போது யானைகள் ஆங்காங்கு மயங்குவதுபோல மயக்கமடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டரே! புருஷ ஸ்ரேஷ்டர்கள் பலத்திற்குத் தக்கபடி அலறினார்கள். மன்னரே! தீனமாக அலறுகின்றவர்களும் போர்முனையில் பயந்தவர்களும் அத னால் ஓடுகின்றவர்களும் நான்குபக்கத்திலும் நடுங்குகிறவர்களுமான அவர்களுடைய தீனஸ்வரமானது, பிரளயத்தில் பிராணிகளுடைய சப்தம்போல் அந்தச்சமயத்தில் தோன்றியது. ஐயா! ஸூதபுத்திர னாலே கொல்லப்படுகின்ற அந்தயுத்தவீரர்களைக்கண்டு திர்யக்ஜாதி யில் தோன்றிய எல்லாப்பிராணிகளும் பயமடைந்தன. யுத்தத் தில் ஸூதபுத்திரனால் கொல்லப்படுகின்ற அந்த ஸ்ருஞ்சயர்கள் பிரஜ்ஞையற்றவர்களாகி யமனுடைய நகரத்தில் பிராணிகள் யமனை அழைப்பதுபோல அடிக்கடி அர்ஜுனனையும் வாஸுதேவரையும் அழைத்தார்கள். கர்ணனுடைய அம்புகளால் கொல்லப்படுகின்ற அவர்களுடைய சப்தத்தைக்கேட்டும் அந்தயுத்தத்தில் பிரயோகிக்கப் பட்ட மஹாகோரமான பார்க்கவாஸ்திரத்தைக்கண்டும், பிறகு, குந்தீ புத்திரனை தனஞ்சயன் வாஸுதேவரைப்பார்த்து, 'கிருஷ்ண! மிக்க புஜபலமுள்ளவரே! பார்க்கவாஸ்திரத்தினுடைய விக்கிரமத் தைப் பாரும். இந்த அஸ்திரத்தை யுத்தத்தில் எவ்விதத்தாலும் நாசஞ்செய்யமுடியாது. மாதவரே! மஹாயுத்தத்தில் வீர்யத்தில் யமனுக்கொப்பானவனும் பயங்கரமான கார்யத்தைச்செய்பவனும் கோபமுள்ளவனுமான ஸூதபுத்திரனைப் பாரும். அடிக்கடி குதிரை களை நடத்திக்கொண்டு அவன் என்னை அடிக்கடி பார்க்கிறான். அவ னுடைய யுத்தத்தில் நான் ஓடக்கூடியவனாகமாட்டேன். மனிதன் பிழைத்திருப்பானாகில் யுத்தத்தில் வெற்றிதோல்விகளை அடைகி றான். ஹ்ருஷீகேசரே! மரித்தவனுக்கு நாசமேயொழிய ஜயமேது? இந்தக்கர்ணன் யுத்தத்தில் மத்யான்ன சூரியன்போலப் பிரகாசிக் கிறான். கோவிந்தரே! ரதத்தைத் திருப்பும். உயிரோடிருப்பவன் மங்களங்களைக் காண்கிறான்' என்றான்.

## அறுபத்தேட்டாவது அத்யாயம்.

(யுதிஷ்டிரர் பாசறைக்கு வந்ததையறிந்த கண்ணபிரான் பீமனைப் பகைவரையெதிர்க்க ஏவித் தாம் அர்ஜுனனுடன் யுதிஷ்டிரரிடம் வந்தது.)

கௌரவரே! 'யுத்தத்தைவிட்டு ரதத்துடன் சீக்கிரமாக விலகிச்செல்லும்' என்கிற அந்த அர்ஜுனனுடையவார்த்தையைக்கேட்டு வீரரான ஜனார்த்தனர், 'நன்றாக எதிர்க்கின்ற கௌரவர்களைத் தாங்குவதற்கு இவனல்லவோ போதுமான திறமையுடையவன்' என்று பயங்கரமான பராக்கிரமமுள்ளபீமனைப் பகைவர்படைக்கு எதிரில் நிறுத்தி, யுத்தத்தில் கர்ணனை ஶ்ரமத்தை அடையும்படி செய்விக்கும் பொருட்டும் மஹாத்மாவான பார்த்தன் இளைப்பாறுவதன்பொருட்டும் யுதிஷ்டிரராஜரைப்பார்ப்பதன்பொருட்டும் யுத்தரங்கத்தைவிட்டு விலகிச்சென்றார். வாஸுதேவர் அர்ஜுனனைப்பார்த்து, 'குருஶ்ரேஷ்ட! அரசர் நான்குபக்கத்திலும் காயப்படுத்தப்பட்டிருக்கிறார். அவரைக் களைப்பாறச்செய்தபிறகு கர்ணனைக் கொல்வாய்' என்று கூறினார். பிறகு, தனஞ்சயன் அரசர் பாணங்களால் பீடிக்கப்பட்டிருக்கிறாரென்பதைக்கேட்டு, 'விருஷ்ணி வம்சத்தில் உதித்தவரே! திடமான என்மனமானது அரசரைப்பற்றிப் பரிதாபத்தை அடைகிறது. போம், போம்' என்று பலவாறாக வாஸுதேவரை ஏவினான். கேசியை அழித்தவரும் விருஷ்ணிகளை ஸந்தோஷிக்கச் செய்பவருமான அந்த வாஸுதேவர் அர்ஜுனனால் தூண்டப்பட்டுக் கோரமான காட்சியுள்ள யுத்தத்தினின்று சீக்கிரமாக ரதத்துடன் விலகிச்சென்றார். தர்மராஜரைப் பார்க்கவேண்டுமென்கிற எண்ணத்தோடு குந்திபுத்திரனான அர்ஜுனன் சென்றுகொண்டே சேனையைப் பார்த்தான். அவ்விடத்தில் தமயனாரைக் காணவில்லை. பாரதரே! நாண்கழற்றிவிடப்பட்ட கொடிய வில்லுள்ளவனும் பகைவர்களால் அவமதிக்கத் தகாதவனும் சூரனும் சூரர்களை ஸந்தோஷிக்கச் செய்கின்றவனும் இடக்கையினாலும் பாணங்களைப் பிரயோகிப்பவனும் குந்திபுத்திரனுமான தனஞ்ஜயன், துரோணபுத்திரரோடு போர்புரிந்து,யுத்தத்தில் இந்திரனாலும் ஸஹிக்கமுடியாத குருபுத்திரரான அஶ்வத்தாமாவைத் தோல்வியடைவித்து, செய்யமுடியாததும் பெரிதுமான வீரச்செய்கையைச் செய்தபிறகு தன்சேனையைப் பார்த்தான். சூரனான ஸவ்யஸாசி படைமுகத்தில் நின்று நன்றாகப் போர்புரிகின்ற சூரர்களை ஸந்தோஷிக்கச் செய்துகொண்டும் தன்

னுடைய தேராளிகளைப் பிரஸித்தமான அவர்களுடைய முந்தின செய்கைகளால் புகழ்ந்துகொண்டும் அவர்களைப்படையில் நிலைபெற்றிருப்பவர்களாகச் செய்தான். கிரீடியானவன் அஜமீடனுடைய வம்சத்தில் தோன்றியவரும் பிராதாவுமான யுதிஷ்டிரரைக் காணமல் விரைவாகப் பீமனை அடைந்து, 'அரசருடைய விருத்தாந்தமென்ன? இப்பொழுது அவர் எங்கே இருக்கிறார் ?' என்று வினவினான். பீமஸேனன், 'தர்மபுத்திரரும் அரசருமான யுதிஷ்டிரர் கர்ணனுடைய பாணங்களால் அங்கங்கள் மிகத் தவிக்கச்செய்யப்பட்டு இவ்விடத்தினின்று விலகிச் சென்றுவிட்டார். ஶ்ரமப்பட்டு ஜீவித்திருக்கலாம்' என்று மறுமொழிகூறினான் அர்ஜுனன், 'அப்படி இருக்குமானால் புருஷஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரருடைய விருத்தாந்தத்தை அறிதற்காக நீ சீக்ரமாக இவ்விடத்தினின்று போ. அரசரான அந்தத் தர்மநந்தனர் நிச்சயமாகக் கர்ணனால் பாணங்களால் நன்கு அடிக்கப்பட்டுப் பாசறையைக்குறித்துச் சென்றுவிட்டார். பலசாலியான யுதிஷ்டிரர் யுத்தம் நடந்துவரும்போது துரோணரால் ஆயுதங்களால் நன்றாக அடிக்கப்பட்டும் அந்த ஸமயத்தில் ஜயத்தை எதிர்பார்த்துக்கொண்டு உறுதியாக நின்றார் ; துரோணராலும் கொல்லப்படவில்லை. மஹானுபாவரும் பாண்டவர்களுள் சிறந்தவருமான அந்த யுதிஷ்டிரர் இப்பொழுது யுத்தத்தில் கர்ணனால் ஸம்சயத்தை அடையும்படி செய்யப்பட்டுவிட்டார். பீம ! இப்பொழுது அந்த யுதிஷ்டிரரை அறியவேண்டி விரைவாகச்செல். நான் பகைவர்களுடைய கூட்டங்களைத் தடுத்துக்கொண்டு நிற்கப்போகிறேன்' என்று சொன்னான். பீமஸேனன், 'மஹானுபாவ! பரதர்களுள் சிறந்தவரான யுதிஷ்டிரராஜருடைய விருத்தாந்தத்தை நீயே அறி. அர்ஜுன ! நான் போனால் சத்துருவீரர்கள் என்னைப் பயந்தவனென்று சொல்லுவார்கள்' என்று சொன்னான். பிறகு, அர்ஜுனன் பீமஸேனனைப் பார்த்து, 'ஸம்சப்தகர்கள் என்னுடைய எதிர்ப்படையில் நிற்கின்றார்கள். இப்பொழுது இவர்களைக் கொல்லாமல் இந்தச் சத்துருக்கூட்டத்தினிடையிலிருந்து விலகிச் செல்வதற்கு என்னால் முடியாது' என்று சொன்னான். பிறகு, பீமஸேனன் அர்ஜுனனைப் பார்த்து, 'பாண்டவர்களுள் சிறந்தவீர! என்னுடைய வீரியத்தையே கடைப்பிடித்துப் போரில் எல்லா ஸம்சப்தகர்களையும் எதிர்த்துப் போர்புரிவேன். தனஞ்சய! நீ போ' என்று சொன்னான். தனஞ்சயன் பகைவர்களுடைய மத்தியில் ஸகோதரனை பீமஸேனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, கௌரவ ஶ்ரேஷ்டரான யுதிஷ்டிர

ரைப் பார்ப்பதற்குச் செல்பவனாகி அப்பொழுது விருஷ்ணிகளுள் சிறந்தவரான மாதவரைப்பார்த்து உரைக்கலானான். 'விருஷ்ணி குலத்தில் உதித்தவரே! மன்னரைப்பற்றி என்மனம் அதிக வருத்த மடைகிறது. ஹ்ருஷீகேசரே! இந்தஸேனாஸமுத்திரத்தை விட்டுக் குதிரைகளை நடத்தும். கேசவரே! அரசரான அஜாதசத்ருவைப் பார்க்க விரும்புகிறேன்' என்றான். ஸ்ரீமந் நாராயணஸ்வரூபியான வாஸுதேவர் அர்ஜுனனுடைய வசனத்தினால் அந்த ரதத்தைச் செலுத்தினார். பிறகு, தாசார்கரனைவருள்ளும் சிறந்தவரான ஸ்ரீ கிருஷ்ணர் குதிரைகளை நடத்திக்கொண்டே பீமனைப்பார்த்து, 'பீம! இந்த உன்னுடைய செய்கையானது இப்பொழுது ஆச்சரியகர மன்று. பிருதையின்புத்ர! (நாங்களிருவரும்) போகப்போகிறோம். சத்துருக்கூட்டங்களை நீயே கொல்வாயாக' என்றுசொன்னார்.

அரசரே! ராஜேந்திரரே! பிறகு, ஹ்ருஷீகேசர் எதிரியின் படையில் புகைவர்களை அடக்குகிறவனான பீமஸேனனை இருக்கும்படிசெய்து விருகோதரனை அவனைக் குறித்து யுத்தத்தைப் பற்றின விஷயங்களைச் சொல்லிவிட்டுக் கருடனுக்கொப்பான குதிரைகளாலே மிக்க விரைவுடன் அரசரான யுதிஷ்டிரர் இருக்குமிடத்திற்குச் சென்றார். பிறகு, புருஷர்களுள் சிறந்தவர்களான அவ்விருவரும்சென்று, தனித்துப் படுத்திருக்கின்ற அரசரை அடைந்து அந்த ரதத்தினின்று கீழேஇறங்கி அவருடைய இரண்டு சரணங்களிலும் வந்தனம்செய்தார்கள். மஹாராஜரே! இவ்விதம் உமதுஸேனையைக்கொன்று போர்க்களம் விட்டுச் சென்றவரும் சஸ்திரங்களால் காயப்படுத்தப்பட்டு ரக்தத்தால் நனைந்தவருமான அவ்விருவரும் (யுதிஷ்டிரரை) வந்தனம்செய்து கைகுவித்து நின்றனர். கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் க்ஷேமமுள்ளவரும் புருஷஸ்ரேஷ்டருமான அந்த யுதிஷ்டிரரைக்கண்டு இந்திரனைப்பார்த்து அஸ்வினீதேவர்கள் புகழ்வதுபோல ஸந்தோஷத்தினால் புகழ்ந்தார்கள். யுதிஷ்டிரராஜரும், அஸ்வினீதேவர்களைப்பார்த்து ஸூர்யன் புகழ்ந்ததுபோலவும் ஜம்பனென்கிற மஹாஸுரன் கொல்லப்பட்டவுடன் இந்திரனையும் விஷ்ணுவையும்பார்த்து ப்ருகஸ்பதி புகழ்ந்ததுபோலவும் அவ்விருவரையும்கண்டு புகழ்ந்தார். சத்துருபட்டணங்களைஜயிப்பவரும் புருஷஸ்ரேஷ்டரும் சத்துருக்களைத்தவிக்கச் செய்பவருமான அந்த யுதிஷ்டிரர், கர்ணன் மாண்டதாக எண்ணி ப்ரீதியை அடைந்து அச்சமயத்தில் ஸந்தோஷத்தால் தழுதழுத்த வாக்குடன் கூறலானார்.

## அறுபத்தோன்பதாவது அத்யாயம்.

(அர்ஜுனன் கர்ணனைக் கொன்றுவிட்டானென்கிற பிரமத்தினால் யுதிஷ்டிரர் அர்ஜுனனைப் புகழ்ந்தது.)

பிறகு, யுதிஷ்டிரர், அருகில் வந்திருக்கின்றவர்களும் விசாலமான சிவந்த கண்களையுடையவர்களும் பாணங்களால் நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்ட அங்கங்களையுடையவர்களும் ரக்தத்தினால் நன்றாகப் பூசப்பட்டவர்களும் படைமுகத்தில் செல்லுகின்ற நரஶ்ரேஷ்டர்களுமான கிருஷ்ணார்ஜுனர்களைக்கண்டுபின்வரும்வாக்கியத்தை உரைக்கலானார். பிறகு, யுதிஷ்டிரர் சேர்ந்திருக்கின்ற கேசவரையும் அர்ஜுனனையும் பார்த்து யுத்தத்தில் காண்டீவத்தை வில்லாகக் கொண்ட அர்ஜுனனால் கர்ணன் கொல்லப்பட்டானென்று எண்ணினார். பரதர்களுள் சிறந்தவரே! குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் சத்துருக்களைக் கொல்பவனான அர்ஜுனனைப் புன்சிரிப்பை முன்னிட்டுக்கொண்டு புகழ்கின்றவராகி, மனத்துக்கு மிகவும் இனிமையான வார்த்தையினால் அவர்கள் இருவரையும் துதித்தார். யுதிஷ்டிரர், 'தேவகீபுத்திரரே! நல்வரவா? தனஞ்சய! உனக்கு நல்வரவா? மஹாரதனான கர்ணனைக்கொன்று காயப்படுத்தப்படாதவர்களாகவும் க்ஷேமமுள்ளவர்களாகவும் இருக்கின்ற புருஷஶ்ரேஷ்டர்களான உங்கள் இருவர்களுடைய தர்சனமும் எனக்கு மிகவும் பிரியமானது. யுத்தத்தில் ஸர்ப்பம்போலிருப்பவனும் எல்லாச்சஸ்திரங்களிலும் கைதேர்ந்தவனும் த்ருதராஷ்டிர புத்திரர்களனைவர்களுக்கும் முந்திச் செல்லுகின்றவனும் ஸுகத்தைக்கொடுப்பவனும் கவசம்போலிருப்பவனும் விருஷஸேனனாலும் வில்லாளியான ஸுஷேணனாலும் பாதுகாக்கப் பட்டவனும் மஹாவீர்யமுள்ளவனும் பரசுராமரால் அஸ்திரவித்தையில் (தேர்ச்சியை அடைவித்து) அனுமதிகொடுக்கப்பட்டவனும் எவ்விதத்தினாலும் ஜயிக்க முடியாதவனும் எல்லா ஜனங்களுள்ளும் சிறப்புற்றவனும் உலகத்தில் பிரஸித்திபெற்ற ரதிகனும் தார்த்தராஷ்டிரர்களைக் காப்பாற்றுகிறவனும் படைமுகத்தில் செல்பவனும் பகைவர்களுடைய சேனைகளைக் கொல்லுகிறவனும் சத்துருக்களுடைய கூட்டத்தை அடிக்கின்றவனும் துரியோதனனுக்கு ஹிதத்தைச்செய்வதில் பற்றுள்ளவனும் நமக்குத்துக்கத்தை உண்டுபண்ணுவதின்பொருட்டு முயல்கின்றவனும் மகாயுத்தத்தில் இந்திரனுடன் கூடின தேவர்களாலும் அவமதிக்க முடியாதவனும் தேஜஸினாலும் பலத்தினாலும் நெருப்புக்கும் காற்றுக்குமொப்பானவனும் பாதாளம்போல்ஆழ்ந்தஇருதயமுடையவனும் நண்பர்களுக்குச்சந்தோஷத்தை

விருத்தி பண்ணுகிறவனும் எனது சிநேகிதர்களுக்கு யமனுயிருந்த வனுமான கர்ணனை மகாயுத்தத்தில் கொன்று, அஸுரனைக்கொன்று வந்த இரண்டு தேவர்கள்போலப் பாக்கியவிசேஷத்தால் நீங்கள் இருவரும் என் அருகில் வந்தீர்கள். மஹா பாகுபலமுள்ள மாதவரே! அர்ஜுனா! த்ருஷ்டத்யும்னன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நான் பயமற்றவனுன அந்தக்கர்ணனோடு கோரமான யுத்தத்தைச் செய்தேன். எல்லாப்பிரஜைகளையும் கொல்லும் விருப்பத்தினுல் கோபம்கொண்ட யமன்போன்ற அந்தக்கர்ணனுல் என்னுடைய கொடியும் அறுக்கப்பட்டது. இருபக்கத்திலிருந்த ஸாரதிகளும் கொல்லப்பட்டார்கள். யுயுதானன் திருஷ்டத்யும்னன் நகுலஸஹதேவர்கள் வீரனுன சிகண்டி த்ரௌபதிபுத்திரர்கள் மஹாத்மாவான சதத்ரு இவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நான் குதிரைகளை இழந்தவனுகச் செய்யப்பட்டேன். மஹா பாகுபலமுள்ளவனே! மஹாவீர்யமுள்ளவனுன கர்ணன் இந்த அனேகம் பகைவர் கூட்டங்களைவென்று மஹாயுத்தத்தில் முயல்கின்றவனுகி என்னையும் ஜயித்தான். யுத்தவீரர்களுள் சிறந்தவனே! கர்ணன் என்னை யுத்தத்தில் ஸம்சயமில்லாமல் ஆங்காங்கு அவமதித்துப் பின்தொடர்ந்து கடுமையான சொற்களைப் பலவாறு உரைத்தான். தனஞ்சய! பீமஸேனனுடைய பிரபாவத்தினுல் ஜீவிக்கிறேன். இந்த விஷயத்தில் அதிகமாகச் சொல்வதினுல் என்னபயன்? *நான்அவனை ஸஹிப்பதற்குச் சத்தியற்றவனுக இருக்கிறேன். தனஞ்சய! எவனிடத்தினின்று நான் பதின்மூன்று வருஷமாகப் பயந்துகொண்டு இரவில் உறக்கத்தையும் பகலில் ஸுகத்தையும் ஒருஸமயத்திலும் அடையவில்லையோ, எவனுடைய பகையோடுகூடி நான் என்னுடைய மரணத்தை அறிந்து, † வாத்ரீணஸபக்ஷிபோலத் தவித்துக் கொண்டிருந்தேனே அந்தக்கர்ணன் என்னுல் எவ்வாறு யுத்தத்தில் நாசம் செய்யதக்கவனுவான்என்று நெடுநாளாக நான்சிந்தித்துக்கொண்டிருந்தேன். தனஞ்சய! அதற்கு ஸமயம்வந்துவிட்டது. குந்தீபுத்திர! விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் உறங்கிக்கொண்டிருக்கும்பொழுதும் கர்ணனையே நான் நினைக்கிறேன். ஆங்காங்கு இந்தஉலகத்தைக் கர்ணமயமாய்விட்டதாகப் பார்க்கிறேன். தனஞ்சய! கர்ணனிடத்தில்பயந்தவனுன நான் செல்லுமிடங்களிலெல்லாம் கர்ணனையே எதிரில் நிற்கின்றவனுகக் காண்கிறேன். பார்த்த! அப்படிப்பட்டநான் யுத்தங்களில்

* வேறு பாடம். † கறுத்தகழுத்தும் சிவந்ததலையும் வெளுத்தசிறகுமுள்ள ஒருவகைப்பறவை.

ஓடாதவனை அந்த வீரனாலேயே குதிரைகளுடனும் ரதத்துடனும் கூடினவனாகத் தோல்வியடைவிக்கப்பட்டு உயிரோடுவிடப்பட்டேன். யுத்தத்தில் பிரகாசிக்கின்ற அவனால் இப்பொழுது இவ்வாறு அடிக்கப்பட்டிருக்கிற எனக்கு உயிரினால் என்னபயன்? மறுபடியும் ராஜ்யத்தினால் யாதுபயன்? முன் யுத்தத்தில் பீஷ்மரிடத்தினின்றும் கிருபரிடத்தினின்றும் துரோணரிடத்தினின்றுங்கூட அடையப்படாத (துன்பமானது) யுத்தத்தில் மஹாரதனை ஸூதபுத்திரனிடத்தினின்று என்னால் இப்பொழுது அடையப்பட்டது. குந்தீபுத்திர! அப்படிப்பட்ட நான் உன்னை வினவுகிறேன். நிகரற்ற திறமையமைந்த கர்ணன் உன்னால் கொல்லப்பட்ட விதத்தை முழுதும் எனக்கு உரைப்பாயாக. யுத்தத்தில் இந்திரனுக்கொப்பான பலத்தையுடையவனும் பராக்கிரமத்தில் யமனுக்கு நிகரானவனும் அவ்வாறே* அஸ்திரங்களில் பரசுராமர்போன்றவனுமான அந்தக் கர்ணன் உன்னால் எவ்வாறு நாசஞ்செய்யப்பட்டான்? அர்ஜுன! மஹாரதனென்று பிரஸித்திபெற்றவனும் எல்லாயுத்தங்களிலும் ஸமர்த்தனும் எல்லாவில்லாளிகளுள்ளும் எப்பொழுதும் சிறந்தவனும் *புத்திரர்களுடன்கூடின த்ருதராஷ்டிரனாலே உன்னிமித்தமாகவே பூஜிக்கப்பட்டிருந்தவனுமான அந்தக் கர்ணன் உன்னால் எவ்வாறு கொல்லப்பட்டான்? அர்ஜுன! புருஷஸ்ரேஷ்ட! எப்பொழுதும் த்ருதராஷ்டிர புத்திரனைச்சேர்ந்த போர்வீரர்களனைவரும் எந்தக் கர்ணனை யுத்தத்தில் உனக்கு ம்ருத்யுவாக எண்ணுகிறார்களோ அவன் உன்னால் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டான்? புருஷர்களுள் சிறந்தவனே! குந்தீபுத்திர! அவன் உன்னால் நாசஞ்செய்யப்பட்ட விதத்தை எனக்குச் சொல்வாயாக. புருஷப்புலியே! சிங்கத்தினால் ருருஎன்கிற மானுடைய தலையானது கவரப்படுவதுபோல நண்பர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உயரத்தூக்கப்பட்டிருந்த அந்தக் கர்ணனுடைய தலையானது உன்னால் கவரப்பட்டது. மனிதர்களுக்கு ரத்னங்களால் நிறைந்தவண்டியைக் கொடுக்க எண்ணங்கொண்ட கர்ணன் யுத்தத்தில் உன்னைக் கவர்ந்துகொள்ளவிரும்பி உனக்காக எல்லாத்திக்குக்களிலும் ஸஞ்சாரம் செய்தான். அந்தக் கர்ணன் எவ்வாறு உன்னால் இப்பொழுது கொல்லப்பட்டான்? துராத்மாவான கர்ணன் உன்னால் யுத்தத்தில் கொல்லப்பட்டுப் பூமியில் படுத்திருக்கிறானா? ஸூதபுத்திரனை யுத்தத்தில் கொன்று உன்னால் எனக்கு இப்பொழுது சிறந்த நன்மைசெய்யப்பட்டதா? கர்வமுள்ளவனை ஸூதபுத்திரன் ஸங்

'ஒருசொல் விடப்பட்டது' *

தோஷத்தோடு உன்னிமித்தமாக எல்லாத்திசைகளிலும் சுற்றிவந்தான். சூரனென்கிற எண்ணமுள்ளவனுன அந்த ஸூதபுத்திரன் யுத்தத்தில் எதிர்த்து உன்னுல் கொல்லப்பட்டாளு? உன்னிமித்தமாக யானைகளோடும் பசுக்களோடும் குதிரைகளோடும் கூடின சிறந்தராஜ்யத்தைப் பகைவர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு உன்னேடு யுத்தகளத்தில் போர்புரிந்த பாபபுத்தியுள்ள கர்ணன் உன்னுல் கொல்லப்பட்டாளு? அப்பனே! சௌர்யமதத்தினுல் நித்தியம் மயங்கினவனுன துர்யோதனனுடைய பிரீதியின்பொருட்டுக் கௌரவர்களுடையஸபையில் தன்னைப்புகழ்ந்து கொள்ளும் பாபியான கர்ணன் உன்னுல் இப்பொழுது கொல்லப்பட்டாளு? ஸூதபுத்திரன் (உன்னை) எதிர்த்து, வில்லினின்று விடுபட்டவைகளும் உன்னுல் பிரயோகிக்கப்பட்டவைகளும் இரும்பினுற் செய்தவைகளுமான அம்புகளால் பிளக்கப்பட்டுப் புழுதிகளில் படுத்திருக்கிருளு? தார்த்தராஷ்டிரனுடைய இரண்டு கைகளும் முறிக்கப்பட்டனவா? அப்பா! கொழுப்புள்ள எவன் துர்யோதனனை மகிழ்விப்பதற்காக, 'நான் எல்லாப்பாண்டுபுத்ரர்களையும் கொல்லப்போகிறேன்; பல்குனனையும் கொல்லப்போகிறேன்' என்று மயக்கத்தினுல் அரசர்களுடைய மத்தியில் எப்பொழுதும் தன்னைப்புகழ்ந்து கொண்டிருந்தானே, அந்தக் கர்ணன், 'ஓ! த்ரௌபதி! நீ பதிகளை இழந்தவள். பாண்டவர்கள் நிந்திக்கத்தக்கவர்கள்' என்று ஸபையின் மத்தியில் (நமது) பிரியையான திரௌபதியைக் குறித்துச் சொல்லியதும் கொடியதும் பலவிதமாயுள்ளதுமான வசனமானது உன்னுல் வீணுகச்செய்யப்பட்டதா? பகைவரைத் தாங்குகிறவனும் துர்யோதனனுடைய கார்யத்தில் மிகப்பற்றின புத்தியையுடையவனும் 'யுத்தங்களில் உக்கிரமான வேகமுள்ள தனஞ்சயனை நான் கொல்லும்வரையில் கால்களை அலம்புகிறதில்லை' என்று கோரமான விரதத்தைப் பன்னிரண்டுவர்ஷகாலம் தரித்தவனும் மஹாத்மாவுமான கர்ணன் நிச்சயமாகச் சத்துருவல்லனே? பல்குன! யுத்தத்தில் அவனைக்கொன்று அவனுடையவிரதமானது உன்னுல் இப்பொழுது நாசஞ்செய்யப்பட்டதா? துஷ்ட புத்தியையுடையவனுன எந்தக் கர்ணன் ஸபையில் குருவீரர்களின் மத்தியில த்ரௌபதியைப் பார்த்து, 'ஓ! க்ருஷ்ணையே! மிக்கதுர்ப்பலர்களும் பதிதர்களும் பலத்தை இழந்தவர்களுமான பாண்டவர்களை நீ ஏன் விடுகிருயில்லை?' என்று சொன்னுனே, எந்தக் கர்ணன் உன்னிமித்தமாகவே, 'நான் கிருஷ்ணனேடுகூடப் பார்த்தனைக்கொல்லாமல் இங்கு திரும்பி வரப்போகிற

தில்லை' என்று பிரதிஜ்ஞைசெய்தானே பாபபுத்தியையுடையவனை அந்தக் கர்ணன் அம்புகளால் நன்குபிளக்கப்பட்ட சரீரத்தையுடைய வனகப் படுத்திருக்கிறானா? ஸ்ருஞ்சயர்களுக்கும் கௌரவர்களுக்கும் எதிர்த்தல் நேர்ந்தபோது நேர்ந்த இந்த யுத்தமானது உன்னால் அறியப்பட்டதா? (அந்தயுத்தத்தில்) எவனால் நான் இவ்விதமானநிலைமையை அடைவிக்கப்பட்டேனோ அந்தத் துராத்மாவானவன் உன்னால் இப்பொழுது கொல்லப்பட்டானா? ஸவ்யஸாசியே! காண்டீவத்தினின்று விடுபட்டவைகளும் ஜ்வலிக்கின்றவைகளுமான பாணங்களால் மிக்க மந்தபுத்தியுள்ளவனான அந்தக் கர்ணனுடைய குண்டலங்களுடன் கூடியதும் ஒளிபொருந்தியதுமான தலையானது யுத்தத்தில் சரீரத்தினின்று உன்னால் நன்றாக அறுக்கப்பட்டதா? வீர! பாணங்களால் நன்றாக அடிக்கப்பட்டிருக்கிற நான் கர்ணனுடைய வதத்தின் பொருட்டு உன்னை நினைத்ததாகிய என்னுடைய தியானமானது கர்ணனுடைய மரணத்தினால் இப்பொழுது உன்னால் ஸபலமாகச் செய்யப்பட்டதா? அகங்காரத்தினால் நிறைந்த அந்தத்துரியோதனன் எந்தக் கர்ணனைப்பின்பற்றி நம்மை எரிக்க எண்ணங்கொண்டிருக்கிறானோ அந்தத் துர்யோதனனுக்கு நல்ல ஆதாரமாயிருந்த அந்தக் கர்ணன் உன்னால் பராக்ரமத்தை வெளியிட்டு இப்பொழுது நாசஞ்செய்யப்பட்டானா? எவன் முற்காலத்தில் ஸபையின் நடுவில் கௌரவர்களுக்கு நேரில் நம்மை, 'எள்ளுப்பதர்கள்' என்று சொன்னானோ கெட்ட புத்தியையுடையவனும் பொறுமையுள்ளவனும் ஸூதபுத்திரனுமான அந்தக் கர்ணன் யுத்தத்தில் அருகில் நெருங்கி உன்னால் கொல்லப்பட்டானா? மஹா பலசாலியே! துராத்மாவான எந்த ஸூதபுத்திரன், 'சகுனியே! சூதாட்டத்தினால் ஜயிக்கப்பட்டிருக்கின்ற க்ருஷ்ணையை இங்கு அழைத்துவா' என்று அனுப்பினானோ மந்தபுத்தியுள்ளவனான அந்தக் கர்ணன் பலாத்காரமாக இப்பொழுது கொல்லப்பட்டானா? மஹாத்மாவே! அல்பபுத்தியுள்ளவனும் அர்த்தரதனாக எண்ணப்பட்டவனுமான எந்தக்கர்ணன் உலகத்தில் சஸ்திரதாரிகளுள் மிக்க சிறப்புற்றவரான பிதாமஹரைத் திக்காரம் செய்தானோ அந்தக்கர்ணன் உன்னால் இப்பொழுது கொல்லப்பட்டானா? பல்குன! கோபத்தினால் உண்டானதும் வஞ்சனையாகிற காற்றினால் தூண்டிவிடப்பட்டதும் எப்பொழுதுமே என்னுடைய ஹ்ருதயத்தில் இருப்பதுமான இந்த நெருப்பை 'என்னால் இப்பொழுது யுத்தத்தில் எதிர்த்து அந்தக்கர்ணன் கொல்லப்பட்டான்' என்று சொல்லி இப்பொழுது தணியச்செய்கிறாய்' என்று கூறினார்.

## எழுபதாவது அத்யாயம்.

(அர்ஜுனன் தன்னுடைய யுத்தத்தின் வரலாற்றைக் கூறிக் கர்ணனுடைய வதத்தைப் பிரதிஜ்ஞைசெய்தது.)

தர்மசீலரும் கோபங்கொண்டவருமான அரசருடைய அந்த வசனத்தைக்கேட்டு அதிரதனும் மஹாத்மாவும் தீரஸ்வபாவமுடையவனும் முடிவில்லாத வீர்யமுள்ளவனுமான ஜிஷ்ணுவானவன், பொறுமையில்லாதவரான யுதிஷ்டிரரைப்பார்த்துக் கூறலானான். 'குந்தீபுத்திரரே! அளவிடமுடியாத பராக்கிரமத்தையுடையவனும் அதிரதபுத்திரனும் மிக்ககொடையாளியுமான அந்தக் கர்ணன், துரோணர் கொல்லப்பட்டதையும் தார்த்தராஷ்டிரர்கள் ஆழ்ந்த கடலில் உடைபட்ட மரக்கலம்போல் மதிமயக்கமுற்றவர்களாகவும் சத்ருக்களை ஜயிப்பதில் உத்ஸாஹத்தை இழந்தவர்களாகவுமிருப்பதையும் அறிந்து, பிறகு ஸஹோதரன்போல் விரைபவனாகவும் திருதராஷ்டிர புத்திரர்களைக் கரையேற்றிவிடுகிறவனாகவும் யுத்தத்தில் ரதத்தோடு என்னை விரைவாக எதிர்த்துவந்தான். அரசரே! நான் இப்பொழுது ஸம்சப்தகர்களோடு போர்புரிந்துகொண்டிருக்கும் ஸமயத்தில், என் முன்னிலையில், குருசேனைக்கு முன்பாகத்தில செல்லுந்தன்மையுள்ள அஸ்வத்தாமா ஸர்ப்பங்கள்போலவிளங்குகிற பாணஸமூகங்களை இறைத்துக்கொண்டு விரைவாகத் தோன்றினார். மிக்க சூரரான அந்தத் துரோணபுத்திரர் என்னுடையத்வஜத்தின் நுனியைப்பார்த்து அனேக ரதிகர்களுடைய கூட்டங்களை ஏவினார். நான் அவர்களுள் ஐந்நூறு ரதிகர்களையும் கொன்று, கர்ஜிக்கின்ற துரோணபுத்ரரை அடைந்தேன். மஹாத்மாவான அந்தத்துரோணபுத்திரர், அந்தச் சேனையின்மத்தியில், ஸ்வாதியை அடைந்திருக்கின்ற சுக்கிரன் போலப் பற்பலவிதமாயும் விசித்திரமாயுமிருக்கிற பாணஸமூகங்களை இறைத்துக்கொண்டு ஸமானனான என்னையும் தடுத்தார். அவர் என்மீது கழுகிறகுகளுடன் கூடியவைகளும் பூமியில் பிரகாசிக்கின்றவைகளுமான பாணங்களை நான்குபக்கத்திலும் பிரயோகித்து யுத்தமத்தியில் அதிசீக்கிரமாகத் தடுத்துப் பிறகும் என்மீது பாணஸமூகங்களைப் பிரயோகித்தார். அந்த மஹாரதருடைய நாண்கயிற்றையிழுத்தலும் இழுத்து அம்புகளையெய்தலும் காணப்படவில்லை. அவர் அம்புகளை எடுப்பவராகவாவது வில்லில் பூட்டுபவராகவாவது வில்லை அசைப்பவராகவாவது இழுப்பவராகவாவது அம்பை விடுப்பவராகவாவது காணப்படவில்லை. இடக்கையினாலோ வலக்கையி

ஞலோ எதனல் எய்கிருரென்பதும் காணப்படவே இல்லை. ஆசார்யரைப்போல நான்குபக்கத்திலும் மிக்க ஆச்சரியத்தைக் காட்டிக்கொண்டு யுத்தபூமியில் சுற்றிவந்தார். கண்களுக்கு விஷமாயிருப்பதும் பகைவர்களுடைய உயிரை வாங்குகின்றதும் பாணஸமூகங்களால் எல்லாத் திக்குக்களையும் நிரப்புகின்றதுமான மஹாத்மாவான பிராம்மணுதமருடைய வில்லானது எப்பொழுதும் வளைந்து கொள்ளிவட்டம்போலிருந்தது. பிறகு, வீரரான த்ரௌணியானவர் விரைவாக அஸ்திர பலத்தினல் காலமேகமானது மாரிக்காலத்தில் நீரைப்பொழிவதுபோலக் காதுவரையில் நன்ருக இழுத்துவிடப்பட்ட பலவேறு அம்புத்திரள்களைப் பிரயோகித்தார். அவர் ஐந்து பாணங்களால் என்னையும் கூர்மையுள்ள ஐந்து பாணங்களால் வாஸுதேவரையும் அடித்தார். நான் ஒரு நிமிஷநேரத்துக்குள்ளாக நல்ல முனையுள்ளவைகளும் ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ளவைகளுமான பாணங்களால் அவரை அடித்தேன். நன்ருக அடிக்கப்பட்டவரும் ரதத்தை இழந்தவருமான அந்தத்துரோணபுத்திரர் தம்முடைய ரதத்திலுள்ள ஸாமக்ரிகள்என்னலழிக்கப்பட்டதையும் அஸ்திரங்கள் ரக்தத்தினல் பூசப்பட்டதையும் பார்த்துக் கொண்டே கர்ணனுடைய தேர்ப்படையில் நுழைந்தார். பிறகு, யுத்தத்தில் அவமதிக்கப்பட்டதும் யுத்தவீரர்களழிக்கப்பட்டதும் ஓடுகின்ற யானைக்கூட்டங்களோடு கூடியதுமான சேனையைக்கண்டு, நாசஞ்செய்யுந்தன்மை பொருந்தினவனை கர்ணன் விரைபவனுகிப் பிரதானர்களான ஐம்பதுரதிகர்களோடுகூடி (என்னை) எதிர்த்து வந்தான். நான் அவர்களை நாசஞ்செய்து கர்ணனைத்துரத்திவிட்டு உம்மைப் பார்ப்பதற்காக விரைவுடன் வந்தேன். ஸிம்மத்தைக்கண்ட பசுக்கள்போல எல்லாப்பாஞ்சாலர்களும் கர்ணனைக்கண்டு பயமடைகிருர்கள். ப்ருதாபுத்திரரே! திறக்கப்பட்டிருக்கிற யமனுடைய வாயை நோக்கிச்செல்வதுபோலக் கர்ணனை எதிர்த்துச்சென்று பிரபத்திரகர்களெல்லாரும் பயமடைந்திருக்கிருர்கள். அந்தச்சேனைக் கூட்டங்களைக் கரையேற்றுவிப்பதற்காகப் போகப்போகிறேன். பாக்கியத்தினல் உம்மை க்ஷேமமுள்ளவராகப் பார்த்தேன். பாரதரே! இப்பொழுது இந்த யுத்தத்தில் காணப்படுவேனேயாகில், நான் ஸூதபுத்திரனைக் கொல்வேன். வாரும். யுத்தத்திற்காக நிச்சயத்துடன்கூடினவர்களும் யுத்தம்செய்வதில் விருப்பமுள்ளவர்களுமான என்னையும் ஸூதபுத்திரனையும் இப்பொழுது பாரும். பாரதரே! ராஜகுமாரர்களான ஆறுயிரம்பிரபத்திரகர்கள் பெரிய மீனினுடைய வாயை

அடைந்தாறபோலக் கர்ணனுடைய வாயை அடைந்து ஸ்வர்க்கலோகத்தை அடைவதின்பொருட்டு யுத்தத்தில் மூழ்கிவிட்டார்கள். இப்பொழுது அவர்களை யுத்தத்தினின்று விடுவிப்பதற்கும் எல்லா விதத்தாலும் ஸூதபுத்திரனைக் கொல்வதற்கும் போகப்போகிறேன். மஹானுபாவரே! அரசர்களுள் சிறந்தவரே! பிறகு, விஸ்தாரமாகப் பகைவர்படையை எதிர்த்துக்கொண்டு இந்திரன் விருத்ராஸுரனோடு போர்புரிவதுபோலச் சிறந்தவீரனை ஸூதபுத்திரனோடு எதிர்த்து நான் யுத்தத்தில் போர்புரியப்போகிறேன். இப்படி இருக்கும் ஸமயத்தில் நான் இப்பொழுது ஸூதபுத்திரனை வெல்லும் விஷயத்திலும் அவ்வாறே அரசனை துர்யோதனனை வெல்லும் விஷயத்திலும் இன்னும் என்னோடு எதிர்த்துப் போர்புரிய விரும்புகிறவர்கள்விஷயத்திலும் செய்யவேண்டியதைச் செய்யச் சக்தியுள்ளவனாயிருக்கிறேன். அரசரே! அரசர்களுள் சிங்கம்போன்றவரே! பந்துக்களோடு சேர்ந்திருப்பவனும் பலாத்காரமாகப் போர்புரிகின்றவனுமான கர்ணனை இப்பொழுது நான் கொல்லாமல் போனால் செய்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றாதவர்களுக்கு எந்தக்கஷ்டமான கதி உண்டோ அந்தக்கதியை நான் அடையக்கடவேன். உம்மிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளுகிறேன். யுத்தத்தில் எனக்கு ஜயத்தைக் கூறும். தார்த்தராஷ்டிரர்கள் பீமனை விழுங்கப்போகிறார்கள். ராஜஶ்ரேஷ்டரே! ஸூதபுத்திரனையும் ஸேனையையும் அவ்வாறே எல்லாப் பகைவர்களுடைய கூட்டங்களையும் கொல்வேன்' என்று சொன்னான்.

---

## எழுபத்தோராவது அத்யாயம்.

(கர்ணன் மாளவில்லை யென்றறிந்த யுதிஷ்டிரர் அர்ஜுனனை நிந்தித்துக் காண்டீவத்தைக் கிருஷ்ணனிடம் கொடுக்கஏவியது.)

அளவுகடந்தவல்லமையுடையவரும் கர்ணனுடைய பாணங்களால் மிகத்தவிக்கச்செய்யப்பட்டவரும் குந்தீபுத்திரரும் அரசருமானயுதிஷ்டிரர், கர்ணன் ஸௌக்கியமாயிருக்கிறானென்பதைக்கேட்டுப் பல்குனன் விஷயத்தில் கோபங்கொண்டு அவனைப்பார்த்துப் பின்வரும் வாக்யத்தை உரைக்கலானார். 'பல்குன! நானும் பீமஸேனனும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும் வாஸுதேவரும் ஆகிய நாங்கள் கர்ணனால் ஜயிக்கப்பட்டோம். கர்ணனிடத்தினின்று உண்டான பயத்தினால் இந்த வாஸஸ்தானத்தை இழந்து மறுபடியும் கானகஞ் சென்று தவம்புரிவோம். அல்லது, தார்த்தராஷ்டிரர்களுக்குத்

தொண்டுசெய்வோம்' என்றார். கோபத்தினால் கண்கள் மிகச்சிவந்த தர்மராஜரான யுதிஷ்டிரர் பீபத்ஸுவைப்பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு மீண்டும் அவனிடத்தில் கூறலானார். "'மன்னவ! 'கர்ணனை எதிர்த்துப்போர்புரிவதற்கு நான் ஸமர்த்தனல்லேன்' என்று இந்தவசனம் த்வைதவனத்தில் நன்கு சொல்லப்பட்டிருந்தால், பிறகு, நாங்கள் ஸமயத்துக்குத்தக்கபடி கார்யத்தைச்செய்து அவ்வாறே ராஜ்யத்தை உபேக்ஷித்திருப்போம். அப்படிப்பட்ட நீ யுத்தத்தில் கர்ணனுடையவதத்தையும் அவ்வாறே கௌரவசேனையில் பாதியைக்கொல்வதையும் என்னிடம் பிரதிஜ்ஞைசெய்து என்னைப் பகைவர்களுடைய மத்தியில் கொண்டுவந்து யாது காரணத்தினால் உயரத்தூக்கிப் பூமியில் போட்டுப் பொடிசெய்தாய்? பார்த்த! ஸத்யத்துடன் அநுஸரித்திருந்து வாஸுதேவரோடு ஸத்யத்தின்மீது ஆணையிட்டுச் சொல்லியவார்த்தையாகிய நம்முடைய ஸத்யத்தைப் பயனற்றதாகச்செய்தாய். பலகாலத்தில் பூத்தமரத்தை வெட்டினாய். மூர்க்க! நீ அபகீர்த்திகளால் நன்கு மூடப்பட்டிருக்கிறாய்.' அர்ஜுன! நீ அர்த்தமில்லாத பேச்சை உடையவன். ஸாதுவல்லை. பயங்கரர்களான எல்லாவீரர்களுள்ளும் பயங்கரனாயிருக்கிற பீமனை விட்டு, ஸூதபுத்ரனைக் கொல்வதற்காக நீ ஏற்படுத்தப்பட்டாய். மந்தபுத்தியுள்ளவனான நீ பிறந்து ஏழாவதுநாளில், 'புண்யாத்மாவும், இந்திரனுக்குக் குந்தியிடத்தில் பிறந்தவனுமான இந்தஅர்ஜுனனே அனேக யுத்தங்களில் ஜயமடையப்போகிறான்' என்று ஆகாயத்தில் கூறியவாக்கு வீணாகப்போய்விட்டது. 'உத்தமமான தேஜஸுள்ள இந்தப்பாண்டவன் தேவர்களுடைய கூட்டங்களையும் எல்லாப்பிராணிகளையும் ஜயிக்கப்போகிறான். இவன் மத்ரர்களையும் களிங்கதேசத்தில் பிறந்தவர்களையும் அஸுரர்களையும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற ராக்ஷஸர்களையும் ஜயிக்கப்போகிறான்; பூமண்டலம் முழுமையையும் மிச்சமின்றி ஜயிக்கப்போகிறான்; கௌரவர்களையும் ஜயிக்கப்போகிறான்; தன்னைச்சேர்ந்தவர்களுடைய கூட்டங்களையும் ஜயிக்கப்போகிறான்; இவனைக்காட்டிலும் சிறந்த வில்லாளியானவன் உண்டாகப்போகிறதில்லை. இவனை ஜயிக்கிறவன் ஒருவனும் முன் உண்டானதுமில்லை; இனி உண்டாகப்போவதுமில்லை. குருவினிடத்தினின்று முறையோடு எல்லா வித்தைகளையும் நன்றாகக்கற்றவனும் ஜிதேந்திரியனுமான இந்தப்பார்த்தன் விரும்பினால் எல்லாப்பிராணிகளையும் தன் வசத்தில் இருக்கும்படிசெய்வான். ஓ! குந்தி! உன்னுடைய மஹாத்மாவான இந்தப்புத்திரன் காந்தியினால் சந்திர

னுக்கும் வேகத்தினால் வாயுவுக்கும் நிலைத்திருப்பதனால் மேரு வுக்கும் பொறுமையினால் பூமிக்கும் தாபத்தினால் அக்னிக்கும் ஐஸ்வர்யத்தினால் குபேரனுக்கும் சௌர்யத்தினால் இந்திரனுக்கும் ஜயத்தினால் விஷ்ணுவுக்கும் ஒப்பானவன். அதிதிக்கு மஹாதேஜஸ்வியான விஷ்ணுதோன்றியதுபோல (உனக்கு இவன்) தோன்றியிருக்கிறான். உனக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவனான இந்த மஹாத்மா தன்னைச்சேர்ந்தவர்களின் ஜயத்தின்பொருட்டும் பகைவர்களுடைய வதத்தின்பொருட்டும் தோன்றியிருக்கிறான்' என்று ஆகாயத்தில் ஒரு வாக்கானது சதஸ்ருங்கபர்வதத்தின் சிகரத்தில் தபஸ்விகள்கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது உரைத்தது. இப்பொழுது இவ்விதமாயிருக்கிற நீ அவ்விதம் ஆகவில்லை. தேவர்களுங்கூட நிச்சயமாகப் பொய்சொல்லுகிறார்கள். அவ்வாறே உன்னை எப்பொழுதும் புகழ்கின்ற மற்ற ரிஷீஸ்வரர்களுடைய வார்த்தைகளைக் கேட்டுத் துர்யோதனனுக்கு நான் கீழ்ப்படியாமலிருந்தேன். நீ கர்ணனிடத்தினின்று உண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டவனென்பதை நான் அறியேன். பார்த்த! விஸ்வகர்மாவினால் உண்டுபண்ணப்பட்டதும் சத்தமிடாத அச்சுடன்கூடியதும் மங்களகரமானதும் வானரத்தைக் கொடியாகக் கொண்டதுமான அப்படிப்பட்ட ரதத்தின்மீதேறி, கத்தியையும் ஸ்வர்ணத்தினால் விசித்திரமான கட்டுக்களுள்ளதும் பனையளவுள்ளதுமான காண்டீவமென்கிற சிறந்தவில்லையும் பிடித்து, வாஸுதேவரால் நடத்தப்படுகின்றவனான நீ எவ்வாறு கர்ணனிடத்தினின்று பயந்து யுத்தரங்கத்தைவிட்டு விலகிச்சென்றாய்? 'மஹாபலசாலியான கர்ணனுடைய யுத்தத்தில் பல்குனன் எதிரில் நிற்கமாட்டான்' என்று துர்யோதனன் முன்பு சொல்லியதை நான் மூர்க்கத்தனத்தால் அறியாமற்போனேன். நண்பர்களின் கூட்டமானது அளவிடமுடியாத துன்பத்தில் அகப்பட்டுவிட்டமையால் இப்பொழுது தவிக்கப்போகிறேன். அர்ஜுன! 'நான் எவ்விதத்தினாலும் ஸூதபுத்திரனை எதிர்த்துப்போர்புரியமாட்டேன்' என்று அப்பொழுதே நீ எனக்குச் சொல்லியிருக்கவேண்டுமென்றோ? அவ்வாறு நீ சொல்லியிருந்தால் நான் ஸ்ருஞ்சயர்களையும் கேகயர்களையும் மற்ற நண்பர்களையும் யுத்தத்துக்கு அழைத்து வந்திருக்கமாட்டேன். இவ்வாறு நடந்துபோனபிறகு, இப்பொழுது ஸூதபுத்திரனையும் அவ்வாறே அரசனான துர்யோதனனையும் மற்றும் ஒன்றுசேர்ந்து என்னைஎதிர்த்துப் போர்புரிவதில் விருப்பமுள்ளவர்களாயிருப்பவர்களையும் அடக்குவதிலும் நான் எதைச்செய்யக் கூடியவனாவேன்?

கோவிந்தரே! துர்யோதனனுடன்கூடின கௌரவர்களும் யுத்தஞ் செய்ய எண்ணங்கொண்டவர்களாக ஒன்றுசேர்ந்திருக்கிற மற்றவர்களுமாகிய இவர்களின்மத்தியில் நான் ஸூதபுத்திரனுடைய வசத்தை அடைந்தமையால், நான் உயிரோடிருப்பது இப்பொழுது நிந்திக்கத்தக்கது. எந்தப்பீமனால் மஹாபயங்கரமான யுத்தத்தில் நான்ரக்ஷிக்கப்பட்டேனோ அவன்ஒருவனே எனக்கு இப்பொழுது நாதன். அவன் ரோஷத்தோடு என்னையும் விடுவித்துப் பிறகு கூர்மையான பாணத்தால் கர்ணனையும் பிளந்தான். பீமஸேனன் கதாயுதத்தை நுனிக்கையிற்கொண்டு இரதத்தினால் நனைக்கப்பட்ட மேனியையுடையவனாகிப் பிரளயகாலத்தில் காலன்போல ரணகளத்தில் ஸஞ்சரித்துக் கொண்டு, போரில் உயிரில் ஆசையைவிட்டு, ஒன்றுசேர்ந்திருக்கின்ற கௌரவ முக்கியர்களோடு போர்புரிந்தான். இதோ பீமனுடைய பெரியசப்தமானது தார்த்தராஷ்டிரர்களால் அடிக்கடி கேட்கப்படுகிறது. பார்த்த! மஹாரதர்களுள் சிறந்தவனும் புருஷஶ்ரேஷ்டனும் யுத்தத்தில்பகைவர்களைக்கொல்பவனும் உன்னுடைய புதல்வனுமான அபிமன்யு இப்பொழுது ஜீவித்திருப்பனாகில் நான் யுத்தத்தில் அவமானத்தை அடையமாட்டேன். மேலும், யுத்தத்துக்கு முந்திச் செல்பவனும் மஹாஸ்திரங்களை அறிந்தவனும் உன்னையொத்தவனும் பீமனுடைய குமாரனுமான கடோத்கசன் யுத்தத்தில் உயிரோடிருப்பானாயின் நான் யுத்தத்தில் புறங்கொடுப்பவனாயிருக்கமாட்டேன். எவனை எதிர்த்து நமது பகைவர்களுடைய படையானது பயத்தினால் கவரப்பட்டதும் கண்களை மூடிக்கொண்டதுமாயிற்றோ, எவன் ஒருவனாக இருந்துகொண்டு இரவில் யுத்தம்செய்தானோ எவனிடமிருந்து பயந்து (பகைவர்கள்) யுத்தத்தைவிட்டு ஓடினார்களோ அந்த மஹானுபாவனும், யுத்தத்தில் கர்ணனை எதிர்த்துப் பாணஸமூகங்களால் நன்றாக மயங்கச்செய்து, பிறகு தைர்யத்தில் நிலைபெற்றிருக்கிற அந்த ஸூதபுத்திரனால் இந்திரனால் கொடுக்கப்பட்ட அந்தச் சக்தியினால் கொல்லப்பட்டான். (எல்லாம்) என்னுடைய பாக்கியமே. பூர்வஜன்மத்தில் செய்யப்பட்ட பாபங்கள் நிச்சயமாக யுத்தத்தில் பலிக்கின்றன. யுத்தத்தில் உன்னைத் துரும்பாக எண்ணித் துராத்மாவான கர்ணனால் நான் இவ்வண்ணம் துன்புறுத்தப்பட்டேன். சக்தியற்றவனும் பந்துக்களை இழந்தவனுமான ஒருமனிதன் எவ்வாறு செய்யப்படுவனோ அவ்வாறே நான் கர்ணனாலேயே செய்யப்பட்டேன். எந்தமனிதன் ஆபத்தை அடைந்திருப்பவனை விடுவிப்பனோ அவனே பந்து; ஸ்னேகத்துடன்கூடின ஸுஹ்ருத்து.

இவவாறு புராதனர்களான ரிஷிகள் சொலலுகிருர்கள். பெரியோர் களால இந்தக்காரியம் எபபொழுதும் செய்யப்படடுமிருக்கிறது. பொறபிடியுடன்கூடின சததியையும் தனுர்வேதத்தையும் பனைமர அளவுள்ள காண்டீவதததையும் தரிததவனும் கேசவரால நடத்தப்படு கின்றவனும் குந்தீபுத்திரனுமான நீ எவ்வாறு கர்ணனிடத்தினின்று விலகுவதறகு எண்ணஙகொண்டாய்? அபபடிபபட்ட நீ காண்டீ வததைக் கேசவரிடம் கொடுததுவிடடுக கேசவருககு ஸாரதியா யிருப்பாயாகில அப்பொழுது அவா, வஜ்ராயுததததைக் கையிற கொண்ட தேவராஜன் விருதரனைக் கொன்றதுபோல உக்கிரனை கர்ணனை நாசஞ்செய்வார். நீ (காப்பத்தினின்று) ஐந்தாவது மாதத் திலேயேவிழுந்திருந்தாலும் அலலது குநதியினுடைய கர்ப்பததில நீ உண்டாகாமலிருந்தாலும் என்னைவிடச் சிறந்த ராஜகுமாரனுகப் பிறந்திருப்பாய். உன்னுடைய 'பலகுனன்' என்னும் கீர்த்தியும் இவவாறு அழிநதுபோயிராது' என்று கூறினா.

---

## எழுபத்திரணடாவது அததியாயம.

(யுதிஷ்டிரரைக் கொல்லமுயன்ற அர்ஜுனனை மாதவர்தடுத்து அவரை நிந்திக்கமட்டும் சொல்லியது.)

யுதிஷ்டிரர் இவவாறு சொலலியதைக் கேட்டவனும் வெண்மை யான குதிரைகளையுடையவனும் குநதீபுததிரனுமான அர்ஜுனன் மிகுந்த கோபஙகொண்டு பரதப்ரேஷ்டரான யுதிஷ்டிரரைக்கொல்ல எண்ணங்கொண்டு கததியைச் கையில எடுததான். அபபொழுது, அவன்சிததததை அறிந்தவரான கேசவர் அவனுடைய கோபததை அறிநது, 'அர்ஜுன! ஏன் இந்தகசததியை எடுக்கிருய்? எனக்குச் சொல. தனஞசய! உன்னுல இவவிடததில யுததஞ்செய்யததக்கது ஒன்றையும் நான் காணவிலலை. தாரததராஷ்டிரர்கள இஙகே வர விலலை. எலலோரும் பீமனுல தடுககபபட்டாாகள். குநதீபுத்திர! இந்த யுதிஷ்டிரராஜரைப் பார்க்கவேண்டுமென்று இவவிடம் வந்தாய். அப்படிபபட்ட யுதிஷ்டிரராஜர் க்ஷேமமுள்ளவராயிருப்பதைப் பார்ததாய். புலிக்கொப்பான வலலமையுள்ளவரும் புருஷப்ரேஷ் டருமான அந்த யுதிஷ்டிரரைக்கண்டு ஸநதோஷ காலம் வந்திருக்க, ஏன் கோபம் உன்னை வந்துஅடைநதது? குநதீபுததிர! இவவிடத் தில உன்னுல கொலலததக்கவனை நான் காணவிலலை. யாதுகாரணத தினுல வெட்ட விரும்புகிருய்? உனக்கு என்ன புததிமயக்கம்?

யாரைக்குறித்து அஸாதாரணமாகப் பெரியகத்தியைக் கையில் எடுக்கிறாய்? குந்திபுத்திர! ஆச்சர்யமான விக்கிரமமுள்ளவனே! கத்தியை உருவினதால் உன்னைக் கேட்கிறேன். நீ செய்யவிரும்பின இக்காரியம் என்ன?' என வினவினார்.' வாஸுதேவர் இவ்வாறு சொல்ல, அர்ஜுனன் கடைக்கண்ணால் யுதிஷ்டிரரைப் பார்த்துக்கொண்டும் கோபங்கொண்ட ஸர்ப்பம்போல் மூச்சுவிட்டுக்கொண்டும் கோவிந்தரைப்பார்த்து, 'எவன், 'காண்டீவத்தை வேறு ஒருவனுக்குக் கொடு' என்று என்னை ஏவுவனோ அவன்தலையை நான் பிளப்பேன்' என்பது என்னுடைய ரஹஸ்யமானவிரதம். ஜனார்த்தனரே! அந்த யுதிஷ்டிரரால் (அவ்விதம்) நான் சொல்லப்பட்டவனாகிறேன். கோவிந்தரே! கீர்த்திசாலியான இந்த அரசரால் என்னை நோக்கிக் கம்பீரமான அர்த்தத்தையுடைய எந்தவிஷயம் உமக்குமுன்னிலையில் உரைக்கப்பட்டதோ அதை நான் இப்பொழுது பொறுக்கச் சக்தியற்றவனாயிருக்கிறேன். ஆதலால், தர்மத்தில்ஸஞ்சரிப்பவரான இந்த யுதிஷ்டிரராஜேந்த்ர வதஞ்செய்யப்போகிறேன். புருஷஸ்ரேஷ்டரான இவரைக்கொன்று பிரதிஜ்ஞையைப் பரிபாலிக்கப்போகிறேன். யதுநந்தனரே! இதற்காக என்னால் கத்தி எடுக்கப்பட்டது. ஜனார்த்தனரே! அப்படிப்பட்டநான் யுதிஷ்டிரரைக்கொன்று ஸத்யத்தின் விஷயத்தில் கடனாளியாகாதிருத்தலை அடைந்து சோகத்தைவிட்டு மனக்கொதிப்பைப் போக்கிக்கொண்டவனாகப்போகிறேன். ஐயா! இந்தக்கார்யம் (இவ்விதம்) நேர்ந்திருக்கும் தருணத்தில் நீர் எதைத் தக்கதென்று எண்ணுகிறீர்? நீர் இந்த உலகத்தினுடைய உற்பத்தி நாசங்களனைத்தையும் அறிகிறீர். உம்மிடத்தினின்றே தர்மாதர்மங்கள் உண்டாயினவென்று சிறந்ததானவேதம் கூறுகிறது. நீர் என்னை நோக்கிச்சொல்வதை நான்அப்படியே செய்வேன்'என்றுசொன்னான்.

கோவிந்தர், பார்த்தனைப்பார்த்து, 'நீ நிந்திக்கத்தக்கவன்; நிந்திக்கத்தக்கவன்'என்றேசொல்லிவிட்டு மறுபடியும் சொல்லலானார். 'பார்த்த! புருஷஸ்ரேஷ்ட! அகாலத்தில் கோபத்தை அடைந்தமையால், நீ பெரியோர்களை உபாஸித்ததில்லையென்று இப்பொழுது நான் அறிகிறேன். தனஞ்சய! தர்மத்தைக்கண்டு பயந்தவனும் அபண்டிதனுமான நீ இப்பொழுது பாண்டவஸ்ரேஷ்டரான யுதிஷ்டிரர்விஷயத்தில் செய்யமுயன்றதுபோலத் தர்மங்களுடைய பிரிவுகளை அறிந்தவர்கள் செய்யமாட்டார்களன்றோ? பார்த்த! எவன் அகார்யங்களைச் செய்தல் அவ்வாறே கார்யங்களைச்செய்யாமை இவற்றினுடைய ஸம்பந்தத்தை அறிகிறானில்லையோ அவன் மனிதர்களுள் அதமன். தர்

மத்தை அனுஸரித்து நன்றாக (அதில்) நிலைபெற்றவர்களும் தர்மத்தி னுடைய சுருக்கத்தையும் விரிவையும் அறிந்தவர்களுமான வித்வான் களுடைய நிச்சயத்தை நீ அறியவில்லை. பார்த்த! கார்யாகார்யங்களை நிச்சயிக்கவேண்டிய விஷயத்தில் (ஸந்தேகத்துக்கு உடன்பட்டு) நிச் சயத்தை அறியாமலிருக்கிற மனிதன், நீ மதிமயக்கத்தை அடைந் திருப்பதுபோலவே அவசனாயிருந்துகொண்டு புத்திமயக்கத்தை அடைகிறான். கார்யமோ அகார்யமோ இவைகளை எவ்விதத்தினா லும் எளிதில்அறிவது இயலாது. எல்லாம் சாஸ்திரத்தினால் அறி யப்படுகிறது. அதனையோ நீ தெரிந்துகொள்ளவில்லை. தர்மங்களை அறிந்தவனான நீ அஜ்ஞானத்தினால் இப்பொழுது,ஸத்யத்தைக் காப் பாற்றுகிறாய். பார்த்த! தார்மிகனான நீ பிராணிகளுடைய வதத்தை அறிகிறாயில்லை. அப்பா! பிராணிகளுடைய வதத்தினால் தர்மமானது வீணாகிவிடுகிறதென்பது என்னுடைய அபிப்பிராயம். பொய்யா னது சொல்லத்தக்கதாகலாம். ஒருபொழுதும் ஹிம்ஸைசெய்யத் தக்கதன்று. மனிதர்களில் சிறந்தவனே ! அப்படிப்பட்ட நீ அரச ரும் தர்மங்களை அறிந்தவருமான ஜ்யேஷ்டபிராதாவை ஸாமான்ய னை வேறு ஒருமனிதன்போல எவ்வாறு கொல்லலாம்? (பகை வரின்) கௌரவத்தை நாசஞ்செய்பவனே ! யுத்தஞ்செய்யாத வனும் குருவாக இருப்பவனும் அவ்வாறே சத்துருவாக இராதவ னும் புறங்காட்டிஓடுகிறவனும் சரணமடைகின்றவனும் கைகளைக் குவித்துக் கீழ்ப்படிந்தவனும் அவ்வாறே அஜாக்கிரதையாயிருப்பவ வனுமான மனிதனுடையவதமானது ஸாதுக்களால் புகழப்படுகிற தில்லை. அவைஅனைத்தும் உன்னுடைய குருவானயுதிஷ்டிரரிடத்தில் இருக்கின்றன. பார்த்த! முற்காலத்தில் இந்தவிரதத்தை நீ குழந்தை போலச் செய்தாய். அதனால் (உண்டான) மூர்க்கத்தன்மையினாலேயே அதர்மத்துடன்சேர்ந்த இந்தக் காரியத்தைச்செய்ய முயல்கிறாய். பார்த்த! ஸூக்ஷ்மமானதும் மீறக்கூடாததுமான தர்மங்களுடைய கதியை நன்றாகத் தெரிந்துகொள்ளாமல் யாதுகாரணத்தினால் நீ உன்னுடைய குருவைக் கொல்லவிருப்பமுள்ளவனாக எதிர்த்து ஓடு கிறாய் ? பாண்டவ! இந்தத் தர்மரஹஸ்யத்தை உனக்குச் சொல்லு கிறேன். பரதர்களில் சிறந்தவனே ! எதனை உனக்குப் பீஷ்மராவது அரசரான யுதிஷ்டிரராவது க்ஷத்தாவான விதுரராவது புகழ்பெற்ற வளான காந்தாரியாவது குந்தியாவது கீர்த்திமதியான த்ரௌபதியா வது உரைப்பார்களோ அதனை உனக்கு உரைக்கப்போகிறேன்.தனஞ் சய! இதனைஉண்மையாக நீ தெரிந்துகொள் ஸத்யத்தை உரைப்பது

நலம். ஸத்யத்தைவிட மேலானதுஇல்லை. அந்த ஸத்யமானது உள்ளபடி அறியப்படுவது மிக்க கஷ்டமென்பது என்னுடைய அபிப்பிராயம். எந்த இடத்தில் பொய் மெய்யின்பயனைத்தருமோ மெய் பொய்யின்பயனைத்தருமோ அந்த 'இடத்தில் மெய்யானது சொல்லத்தகாததாக இருக்கும்; பொய்யானது சொல்லத்தக்கதாக இருக்கும். விவாககாலத்திலும் மாதைச் சேருங்காலத்திலும் பிராணபத்து நேர்ந்த ஸமயத்திலும் எல்லாச் சொத்துக்களும் கொள்ளைபோகும் தருணத்திலும் பிராம்மணனுக்கு உபகாரஞ் செய்யவேண்டிய விஷயத்திலும் பொய் சொல்லலாம். இந்த ஐந்துபொய்களும், பாதகத்துக்குக் காரணமாகாவென்று (பெரி யோர்கள்) சொல்லுகிறார்கள். எல்லாப்பொருள்களும் களவுபோகுந் தருணத்தில் பொய் சொல்லத்தக்கதாகஇருக்கும். அச்சமயத்தில் பொய் உண்மையாகும். ஸத்யமும் பொய்யாகும். எவனால் ஸத்யமா னது நிச்சயிக்கப்பட வில்லையோ அப்படிப்பட்ட அறிவில்லாதவன் நாசஞ்செய்யப்படுகிறான். (மனிதன்) மெய்யையும் பொய்யையும் நன் றாக நிச்சயித்தபிறகே தர்மங்களை அறிந்தவனாகிறான். மிக்கஉக்கிர னான புருஷன்கூட அறிவுள்ளவனாக இருப்பானாகில், கண்ணில்லாத ஒருபிராணியை வதம்செய்ததினால் பலாகனென்பவன் அடைந்தது போல மிக்கஅதிகமானபுண்யத்தை அடைவான். என்னஆச்சர்யம்! பண்டிதனல்லாத ஒருமூடன் தர்மத்தில் விருப்பமுள்ளவனாயிருந்தும் நதிகளில் கௌசிகன்அடைந்ததுபோல் மிக்கஅதிகமான பாவத்தை அடைவான்' என்றுகூறினர்.

அர்ஜுனன், 'பகவானே! இதனை நான்அறியும்படி பலா கனுக்கும் கண்ணில்லாத பிராணிக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் நதிகளுக்கும் கௌசிகனுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் உரைப் பீராக' என்றுவினவ, வாஸுதேவர், 'பாரத! பலாகனென்கிற ஒரு மிருகவேட்டையாடுகிறவன் இருந்தான். அவன் பிள்ளைகளை யும் பெண்களையும் மனைவியையும் ரக்ஷிப்பதற்காக மிருகங்களைக் கொன்றுகொண்டிருந்தான். மனப்பூர்வமாக (அவைகளைக்) கொல்ல வில்லை. தன்னுடையதர்மத்தில் நிலைதவறாதவனான அந்தப்பலாகன் அஸூயையில்லாதவனாக(கொண்டுவந்தமிருகங்களின்மாம்ஸங்களைத்) தினந்தோறும் நன்றாகப்பகிர்ந்து வயதுமுதிர்ந்தவர்களான தாய்தந் தையர்களையும் தன்னைஅடுத்திருக்கின்ற மற்றவர்களையும் போஷித்து வந்தான். அவன் ஒருஸமயத்தில் மிருகங்களைஅடையவிரும்பிஒரிடத் திலாவது மிருகத்தைஅடையவில்லை. பிறகு, அவன் பெரியதும் மூக்

கையேகண்ணுகக்கொண்டதுமான ஒருதுஷ்டமிருகத்தைக்கண்டான். முன்பு பார்த்திராததானாலும் அந்தப்பிராணியானது அவனால் அப்பொழுது கொல்லப்பட்டது. பொட்டையான அந்தப்பிராணியானது கொல்லப்படவே ஆகாயத்தினின்று பூமாரியானது விழுந்தது. பிறகு, மிருகவேடனை அழைத்துக்கொண்டுபோவதற்காக அப்ஸரஸ்திரீகளுடைய கானங்களாலும் நான்குவிதவாத்யகோஷங்களாலும் ஒலிக்கின்ற மனோஹரமான விமானமானது ஸ்வர்க்கத்தினின்று புறப்பட்டு வந்தது. அர்ஜுன! அந்தப்பிராணியானது எல்லாப்பிராணிகளும் நாசமடைவதற்காகத் தவம்புரிந்து வரத்தைப்பெற்றது. பிரம்மதேவரால் அது குருடாகச்செய்யப்பட்டது. எல்லாப்பிராணிகளையும் அழிப்பதில் நிச்சயமுள்ள அந்தப்பிராணியைக் கொன்று பலாகன் ஸ்வர்க்கலோகத்தை அடைந்தான். இவ்வாறு, தர்மமானது எளிதில் அறியமுடியாதது. தவஞ்செய்பவர்களுள் சிறந்தவனும் அநேகசாஸ்திரங்களைக் கற்றறிந்தவனுமான * கௌசிகன்என்கிற ஒருபிராம்மணன் இருந்தான். அவன் நதிகள்சேருமிடத்தில் கிராமத்துக்குச் சிறிது தூரத்தில் வஸித்துவந்தான். 'நான் எப்பொழுதும் மெய்யே சொல்லவேண்டும்' என்று அவன் விரதங்கொண்டிருந்தான். தனஞ்சய! அப்பொழுது அவன் ஸத்யவாதி என்று பிரஸித்திபெற்றிருந்தான். பிறகு, திருடர்களிடமிருந்துபயந்து அப்பொழுது சிலர் அந்தவனத்தில் வந்துபுகுந்தார்கள். திருடர்கள் கோபங்கொண்டு அவ்விடத்திலும் முயற்சியோடு அவர்களைத் தேடினார்கள். பிறகு, அந்தத்திருடர்கள் ஸத்யவாதியான கௌசிகனை வந்துஅடைந்து, 'பகவானே! ஜனங்கள் எந்தவழியினாலே சென்றார்கள்? எங்களால் வினவப்பட்ட நீர் ஸத்யமாகச்சொல்லும். அதனை நீர் அறிவீராகில் எங்களுக்குச் சொல்லும்' என்று வினவினார்கள். ஸத்யத்தினுடைய வகைகளை அறியாதவனான அந்தக்கௌசிகன் அந்தத்திருடர்களுக்கு மெய்யைச் சொல்லிவிட்டான். அந்தக்கௌசிகன், 'திருடர்களே! ஜனங்கள் அநேகமரங்களாலும் கொடிகளாலும் புதர்களாலும் அடர்ந்

*சாந்திபர்வம் 109-வது அத்யாயம் பார்க்க. அங்கே, கௌசிகன்கதை வேறாக இருக்கிறது. அங்கு, 'கங்கைக்கரையிலுள்ள கோட்டானைப்போலக் கொலை செய்கிறவனும் மிகப்பெரியபுண்யத்தை அடைவான்' என்று உள்ளது. 'கங்கைக்கரையில் ஒருகோட்டான் ஸர்ப்பங்களுடைய அநேகமுட்டைகளை நாசஞ்செய்தது' என்றும், 'அதனால் அநேகஸர்ப்பங்கள்உண்டாகி உலகத்திற்குத் தீங்கு விளைக்காமற்போனதனால் அக்கொலை நன்மையாயிற்று' என்றும் பழையஉரை ஒரு கதை கூறுகிறது.

திருக்கின்ற இந்தவனத்தை அடைந்திருக்கிறார்கள்' என்று அவர்களைப்பற்றித் திருடர்களிடம் உண்மையை வெளிப்படுத்தினான். பிறகு, குரூரர்களான அந்தத்திருடர்கள் அந்த ஜனங்களைக்கண்டு கொன்றுவிட்டார்களெனக் கேள்வி. தர்மஸூக்ஷ்மங்களில் உண்மையை அறியாதவனானகௌசிகன் பிறகு பெரியஅதர்மமான கெட்ட வாக்கின் தோஷத்தினால் மிகவும்கஷ்டமான நரகத்தைஅடைந்தான். புராதனசாஸ்திரங்களை அறிந்தும் தர்மங்களைநன்றாகத்தெரிந்துகொள்ளாதவனும் முதியவர்களிடத்து ஸந்தேஹங்களைக் கேளாதவனுமான மூடன், குருடன் குழியில்விழுவதுபோல் விழுகிறான். அதில் உனக்குக் குறிப்பிட்டுச்சொல்லத்தக்க லக்ஷணம் ஒன்றேஆகும். முழுதும்தெரிந்து அனுஷ்டிப்பது அஸாத்யமென்று இதில் வ்யவஸ்தை ஏற்பட்டுள்ளது. முக்கியர்களான அநேக ஜனங்கள் ஸத்யத்தைத் தர்மமென்று சொல்லுகிறார்கள். பார்த்த! இதைப்பற்றி நான் அஸூயைப்படவில்லை. இது எல்லாஇடத்திலும் விதிக்கப்படவில்லை. மற்ற அனேக ஜனங்கள்வேதத்தைஓதி உணரவேண்டுமென்றுகூறுகின்றார்கள். நான் இதைப்பற்றியும் அஸூயைப்படவில்லை. அதில் எல்லாம் விதிக்கப்பட்டிருக்கின்றன. எது அஹிம்ஸையோடு கூடினதோ அது தர்மமென்பது நிச்சயம். ஹிம்ஸைசெய்யப்பட்டவர்களுடைய ஹிம்ஸையை நிவிர்த்திப்பதின்பொருட்டுத் தர்மசாஸ்திரம் செய்யப்பட்டிருக்கிறது. தரிக்கிற சக்தியுள்ளதாயிருப்பதனால் தர்மம் என்று சொல்லுகிறார்கள். தர்மம் பிரஜைகளைத் தரிக்கிறது. பிராணிகளுடைய அபிவிருத்தியின்பொருட்டுத் தர்மசாஸ்திரம் செய்யப்பட்டிருக்கிறது. அது (பிராணிகளின்) உற்பத்தியுடனும் விருத்தியுடனும் கூடியிருத்தலாலேயே தர்மமென்பது நிச்சயம். அநீதியினால் ஐயத்தைஅடைய எண்ணங்கொண்டு தர்மத்தைவினவுகிறமனிதர்கள் விஷயத்தில் சொல்லாமலிருத்தலால விடுதல்உண்டாகுமாகில் எவ்விதத்தினாலும் சொல்லக்கூடாது. அவசியம் சொல்லத்தக்கவிஷயத்தில் சொல்லாமலிருப்பதால் ஸந்தேகத்தையும் பாராட்டுவார்கள். அநியாயமாக ஒருவனுடையதைக் கவரஎண்ணித் தர்மத்தைவினவுகிறவர்கள்விஷயத்தில் மெய்சொல்வதைவிடப் பொய்சொல்வது நலமாகுமென்பது திண்ணம். பிராணாபாயஸமயத்திலும் விவாகத்திலும் எல்லாஜாதிக்கும் மஹாபயம் நேர்ந்திருக்கும்ஸமயத்திலும் எல்லாப் பொருள்களுக்கும் அழிவுநேர்ந்தஸமயத்திலும் பொய்யானது சொல்லத்தக்கதாகும். அந்தவிஷயங்களில் புத்திமான்கள் பொய்சொல்லுதலை அதர்மமாகஎண்ணுகிறார்களில்லை. ஸமர்த்தன், எது பொய்

யாகாதோ அதனை எல்லாவிதத்திலும் சொல்லவேண்டும். திருடர்களோடுசேர்ந்திருக்கின்றஸம்பந்தமானது சபதத்திலுங்கூட விடப்படவேண்டும். அந்தவிஷயத்தில மெய்சொல்லுவதைவிடப் பொய்சொல்லியாவது விலக்குதல் நலமென்று (பெரியோர்களால்)ஆராய்ந்து நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஸத்யத்துக்குஉடன்பட்டு எவ்விதத்திலும் திருடர்களுக்குப் பொருளைக் கொடுத்தலாகாது. பாபிகளுக்குப் பொருள்கொடுக்கப்படுமாகில், அது கொடுத்தவனையும் பீடிக்கும். ஆதலால், ஒருவன் தர்மகார்யத்தின்பொருட்டுப் பொய்சொல்லுதலால் பொய்யனாகான். பார்த்த! முறைப்படி (ஸத்யத்தினுடைய) லக்ஷணம் உனக்கு என்னால் உரைக்கப்பட்டது. இதனைஅறிந்து யுதிஷ்டிரர் கொல்லப்படத்தக்கவரானால் சொல்'என்று கூறினார்.

அர்ஜுனன், 'பேரறிவாளரும் மிக்க புகழுள்ளவரும் எங்கள் க்ஷேமத்தில் விருப்பமுள்ளவரும் சொல்வதுபோலவே, எங்களுக்கு நீர், வார்த்தையைச் சொன்னீர். கோவிந்தரே! நீர் எமக்குத் தாய்க்கு ஒப்பானவர்; நீர் தந்தைக்கும் ஒப்பானவர்; நீர் உத்தமமானகதி; நீரே எவ்விதத்திலும் அடையத்தக்க பொருள். உமக்கு மூவுலகங்களிலும் ஓரிடத்திலாவது தெரியாதது இல்லை. ஆதலால், நீர் உத்தமமான தர்மம்அனைத்தையும் உள்ளபடி அறிகிறீர். தர்மராஜரும் பாண்டுபுத்திரருமான யுதிஷ்டிரரைக் கொல்லத்தகாதவரென்று எண்ணுகிறேன். அதர்மத்துடன்கூடின இந்தக்கார்யத்தில வதம்செய்யாமல் பிரதிஜ்ஞையை ரக்ஷித்துக் கொள்வதற்குரியகார்யத்தை உரைப்பீராக. இந்தவிஷயத்திலேயே சொல்லவேண்டுமென்று விரும்பப்பட்ட இந்த வேறோர் உண்மையைச்சொல்லும். தாசார்ஹரே! என்னுடையவிரதத்தை அறிந்திருக்கிறீர். கேசவரே! மனிதர்களுள் எவனொருவன் என்னைப்பார்த்து, 'பார்த்த! வேறுஒருவனுக்குக் காண்டீவத்தை நீ கொடுத்துவிடு' என்றுசொல்லுவனோ, எவன் என்னைவிட அஸ்திரத்தில் வீர்யத்திலாவது அதிகரித்தவனோ அவனை, பீமன், 'தூபரக' என்று தன்னை அழைத்தவனைக் கொல்லுவதுபோல நான் பலாத்காரமாகக் கொல்வேன். கேசவரே! ஆதலால், ராஜாவானயுதிஷ்டிரர் உமக்குஎதிரில் என்னைப் பார்த்து 'விருஷ்ணிவீரரிடத்தில் வில்லைக்கொடுத்துவிடு' என்று அடிக்கடி சொன்னாரன்றோ? அவரை நான் கொல்வேனேயாகில் நிச்சயமாக அரசருடைய வதத்தைநினைந்து, வீர்யத்தை இழந்தவனும் மனநிலைமையை இழந்தவனுமானநான் பாவத்தில் விடுபட்டவனானாலும் ஜீவலோகத்தில் சிறிதுகாலங்கூட இருக்கமாட்டேன். தார்மிகர்

களுள் சிறந்தவரே ! மாதவரே ! எவ்வாறு என்னுடைய பிரதிஜ்ஞை யானது உலகத்திலுள்ள ஜனங்களுடைய புத்தியில் ஸத்யமாகத் தோன்றுமோ, எவ்வாறு யுதிஷ்டிரரும் நானும் உயிரோடிருப் போமோ, அவ்வாறான புத்தியைத் தருவதற்கு நீர் தகுந்தவராக நக்கிறீர்' என்று பிரார்த்தித்தான்.

வாஸுதேவர், 'வேந்தரான யுதிஷ்டிரர் யுத்தத்தில் கர்ணனால் கூர்மையுள்ள பாணங்களுடைய ஸங்கங்களால் விசேஷமாக அடிக் கப்பட்டவராகவும் துன்பமுற்றவராகவும் களைத்தவராகவும் இருக் கிறார். வீர ! இவர் எப்பொழுதும் போர்புரிந்தும் ஸூதபுத்திரனால் அம்புகளால் அதிகமாகஅடிக்கப்பட்டும் இருக்கிறார். ஆதலால், நீ, துக் கத்தையுடைய இவரால் கோபத்துடன் தகாததான இந்தவசனத்தை உரைக்கப்பட்டாய். 'கோபத்தையடையும்படி செய்யப்படாவிட்டால்' இவன் யுத்தத்தில் கர்ணனைக் கொல்லமாட்டான்' என்று அவர் இவ் வண்ணம் உரைத்தார். பார்த்த! பாண்டுநந்தனரான இந்த யுதிஷ்டிரர், அந்தப்பாவியானகர்ணன் உலகத்தில் மற்றவர்களால் ஸஹிக்கத்தகா தவனென்பதையும் அறிந்திருக்கிறார். ஆதலால், அதிககோபமுள்ளவ ரான அவரால் நீ எனக்குநேரில் கடுமையானவார்த்தைகளை உரைக்கப் பட்டாய். எப்பொழுதும் விடாமுயற்சியுள்ளவனும் (பகைவர்களால்) எப்பொழுதும் ஸஹிக்கமுடியாதவனுமான கர்ணன்விஷயத்தில் 'இப்பொழுது யுத்தரங்கத்தில் யுத்தரூபமானசூதாட்டமானது தொ டங்கப்பட்டிருக்கிறது. அவன்கொல்லப்பட்டால் கௌரவர்கள் ஜயிக் கப்பட்டவர்களாவார்கள்' என்றுஅரசரான தர்மபுத்திரருக்கு எண்ண மிருக்கிறது. அர்ஜுன ! ஆதலால், தர்மபுத்திரர் வதத்துக்கு உரிய வரல்லர். உன்னுடைய பிரதிஜ்ஞையானது பாதுகாக்கத்தக்கது. இவர் உயிரோடிருந்துகொண்டே எதனால் மரித்தவராவாரோ அப்படிப்பட் டதும் உனக்குத்தகுந்ததுமான ஒருவிஷயத்தை என்னிடமிருந்து இப்பொழுது நீ தெரிந்துகொள். கௌரவத்துக்குத்தகுந்தவனை ஒரு மனிதன் எப்பொழுது கௌரவத்தைப்பெறுகிறானோ அப்பொழுது தான் அவன் ஜீவலோகத்தில் பிழைத்திருப்பவனாகிறான்;எப்பொழுது பெரியஅவமானத்தை அடைகிறானோ அப்பொழுது அவன் பிழைத் திருந்தாலும் மரித்தவன் என்றே சொல்லப்படுகிறான். இந்தஅரசர் எப்பொழுதுமே உன்னாலும் பீமனாலும் அவ்வாறே நகுலஸஹதேவர் களாலும் உலகத்திலுள்ள முதியோர்களாலும் சூரர்களாலும் நன்கு மதிக்கப்பட்டவர். இவருக்கு அவமானத்தைச் சிறிதுவெளிப்படுத்து வாயாக, பார்த்த ! பூஜ்யரானயுதிஷ்டிரரை 'நீ' என்றுசொல். பாரத!

குருவானவர், 'நீ' என்றுசொல்லப்பட்டாலே கொல்லப்பட்டவராகி ரூர். குந்திபுத்திர! தர்மராஜரானயுதிஷ்டிரரிடத்தில் இவ்வாறு நடந்துகொள். குருஸ்ரேஷ்ட! அதர்மத்துடன்கூடின இந்தக்காரிய த்தைச்செய். சுருதிகளுள்உத்தமமான இந்தஸ்ருதியானது அதர் வாவினாலும் அங்கிரஸினாலும் கண்டறியப்பட்டிருக்கிறதன்ருே? மேன்மையில்விருப்பமுள்ள மனிதர்கள் இதனைஎப்பொழுதும் ஆலோ சியாமலே அனுஷ்டிக்கவேண்டும். பிரபுவாகவும் குருவாகவும் இருப் பவர், 'நீ' என்றுசொல்லப்படுவராகில் அது அவருக்கு ஆயுதங்கள் விழாமலே நேர்ந்த வதமாகும். தர்மங்களைஅறிந்தவனான நீ தர்ம ராஜர்விஷயத்தில் நான் சொல்லியதைச் சொல்வாயாக. பாண்டவ! இந்தத்தர்மராஜர் உன்னிடத்திலிருந்து தகாததான அவமானத்தை நன்ருக அடைந்தவுடன், இவருடைய சரணங்களில் அபிவாதனஞ் செய்து, பிறகு, நன்மையை விளைவிக்கக்கூடியதும் ஸமாதானப் பேச்சுடன்கூடியதும் ஹிதமாயிருப்பதுமான சிறந்தவசனத்தைச் சொல். தர்மமார்க்கத்தை அனுஸரித்தவரும் கற்றறிருந்தவரும் அரச ரும் பிராதாவுமான யுதிஷ்டிரர் ஒருகாலும் உன்விஷயத்தில் கோபத் தைப் பாராட்டமாட்டார். பார்த்த! நீ பாவத்தை விளைவிக்கின்ற பொய்யினின்றும் ப்ராதாவின்வதத்தினின்றும் விடுபட்டவனாகிப் பிறகு தைர்யத்துடன் கர்ணனை நாசஞ்செய்வாயாக' என்று கூறினர்.

---

## எழுபத்துமூன்ருவது அத்யாயம்.

(யுதிஷ்டிரரை நிந்தித்ததற்காகத் தற்கொலைசெய்துகொள்ள முயன்ற அர்ஜுனனை மாதவர்தடுத்துத் தற்புகழ்ச்சி செய்யச்சொல்ல, அவன் அங்ஙனமேசெய்து பின்பு பொறுக்கும்படி யுதிஷ்டிரரை வேண்டினது.)

ஜனார்த்தனர் இவ்வாறு சொல்லக் கேட்ட குந்திபுத்ரனான அர்ஜுனன், பிறகு, அந்த நண்பருடைய வசனத்தைப் புகழ்ந்து, அதன்பிறகு தர்மராஜரைப்பார்த்து இதற்குமுன் சொல்லப்படாத குரூரமான வசனத்தைப் பலாத்காரமாகச் சொல்லத்தொடங்கினான். 'அரசனே! இப்பொழுது நீ பாபத்தைச்சொல்லாதே. நீ போர்க் களத்திலிருந்து ஒருக்ரோசதூரம் விலகி நிற்கிருய். எந்தப்பீமன் எல்லா உலகங்களிலுமுள்ள வீரர்களோடும் யுத்தம் செய்கிருனே அவனல்லனே என்னை நிந்திப்பதற்குத்தகுந்தவன்? வீரனான பீமன் ஸமயத்தில் பகைவர்களை மிக்க துன்பமடையும்படிசெய்து

அரசர்களுள் சிறந்தவீரர்களையும் கொன்று பிராதனர்களான ரதிகர்களையும் முக்கியமான யானைகளையும் யுத்தத்தில் சிறந்த வீரர்களையும் சூரர்களையும் கொன்றான். பீமன், வேறு ஒருவனாலும் செய்யமுடியாதென்னும்படி மிகவும் செயற்கரிய கார்யத்தைச் செய்கிறான். அவ்வாறே, ரதத்தினின்று துள்ளிக்குதித்துக் கதாயுதத்தை உருவிக்கொண்டு யுத்தத்தில் யானைகளைக் கொல்லுகிறான். எவன் ஆயிரத்துக்குமேற்பட்ட யானைகளைக்கொன்று பெரியஸிம்மநாதத்தை வெளியிட்டுக்கொண்டு காம்போஜதேசத்திலும் வனயுதேசத்திலும் மலைகளிலும் தோன்றினவைகளும் செந்நாய்போலப் பிரகாசிப்பவைகளுமான குதிரைகளையும் மஹாரதர்களையும் மலைபோன்ற இரண்டு தந்தமுள்ள யானைகளையும் கொல்லத்தக்கவையான குஞ்சரங்களையும் கொன்று களைப்படையானோ அப்படிப்பட்ட பீமஸேனன் தார்த்தராஷ்டிரர்களுள் மூழ்கிவிட்டான். பகைவர்களை அடக்குகிறவனான அந்தப்பீமன் என்னை நிந்திப்பதற்குத் தகுந்தவன். இந்திரனுக்கு ஒப்பான பராக்கிரமமுள்ள பீமன் சிறந்தகததியினாலே மனிதர்களையும் குதிரைகளையும் யானைகளையும் கொல்லுகிறான்; அவ்வாறே, சக்கரங்களாலும் வில்லினாலும் பகைவரைக் கொல்லுகிறான்; இருகால்களாலும் பகைவர்களைத்துகைதது மீண்டும் இருகைகளாலும் கொல்லுகிறான். மஹாபலசாலியும் குபேரனுக்கும் அந்தகனுக்கும ஒப்பானவனும் பகைவர்களுடைய கீர்த்திகளை வலியக் கவர்கின்றவனுமான அந்தப்பீமஸேனன் (என்னை) நிந்திக்கத்தகுதியுள்ளவன். எப்பொழுதும் ஸுஹ்ருத்துக்களால் காக்கப்படுகின்ற நீ நிந்திப்பதறகுத் தகுதியுள்ளவனல்லை. எவன் பெரியமலைகளுக்கும் மேகங்களுக்கும் ஒப்பான களிங்கர்களையும் வங்கர்களையும் அங்கர்களையும் நிஷாதர்களையும் மாகதர்களையும் பறபல சத்துருக்களின் கூட்டங்களையும் எப்பொழுதும் கொல்லுகிறானோ அவனல்லவோ நிரபராதியான என்னைப் பற்றிப் பேசுவதறகுத் தகுதியுள்ளவன்? மஹாபலசாலியான எந்தப் பீமன் யுத்தஸமயத்தில் (குதிரைகளுடன்) கூடினரதத்தில் ஏறிக்கொண்டு வில்லை உதறுகின்றவனாகவும் பாணங்களால் நிறைந்த கைப்பிடியுள்ளவனாகவும் பகைவர்கள்மீது மேகமானது நீர்த்தாரைகளைப் பொழிவதுபோல அம்புத்திரள்களைத் தொடுப்பானோ, பகைவர்கூட்டங்களை அழிப்பவனான எந்தப் பீமஸேனன் எண்ணூறு யானைகளை மத்தகத்திரள்களும் துதிக்கைமுனைகளும் சிதறஅடிக்கப்பட்டவைகளாகக் காண்பித்தானோ பகைவர்களை அடக்குகிறவனான அந்தப்பீமன் என்னை நிந்திப்பதறகுத தகுதியுள்ளவன். அரசனே! எந்தப் பீமனாலே

இப்பொழுது யுத்தத்தில் கூட்டங்கூட்டமாக ரதங்களும் யானைகளும் குதிரைகளும் மிக்கபலசாலிகளான அனேகஅரசர்களும் கொல்லப் பட்டார்களோ, பகைவர்களை அடக்குகிறவனான அந்தப்பீமன் என்னை நிந்திப்பதற்குத் தகுதியுள்ளவன். பலசாலிகளான திருதராஷ்டிரபுத்தி ரர்களும் மஹாபலசாலிகளான வீரர்களும் எவனால் பெரும்பான்மை யாகக் கொல்லப்பட்டார்களோ சூரனும் யுத்தத்தில் எதிர்த்துத்தடுக்க முடியாத வீர்யமுள்ளவனும் பகைவர்களைச் சிக்ஷிப்பவனுமான அந் தப்பீமன் என்னை நிந்திப்பதற்குத்தக்கவன். உக்கிரமான ரூபமுள்ள துர்யோதனனுடைய அந்தச்சேனையை யுத்தத்தில் நன்றாகத்தவிக்கச் செய்பவனும் வீரனும் பகைவர்களால் தாங்கமுடியாத ஆண்மை யுள்ளவனுமான எவன் ஒருவனாகவேயிருந்துகொண்டே ஸஹிக்கிறா னோ அந்தப்பீமனால் நான் நிந்திக்கப்படத்தக்கவனாக இருக்கிறேன். உன் னால்ஒருபொழுதும்சொல்லப்படத்தக்கவனல்லேன். எந்தஎந்தயுத்தத் தில் மஹாரதர்கள் உன்னுடையபடையை இப்பொழுது இஷ்டப்படி பிளக்கிறார்களோ அந்த அந்த யுத்தத்தில் மஹாத்மாவான பீமன் சத்துருக்களுடைய கூட்டங்களைத் திடமாக அடித்தான். அந்தப்பீம னால் நான் சொல்லப்படத்தக்கவனாக இருக்கிறேன். நான் உன்னால் ஒருபொழுதும் சொல்லப்படத்தக்கவனல்லன். குந்தீபுத்ர! இந்தஸம யத்தில் குரூரமாகச்சொல்லாதே; சொல்லாதே. நீ எல்லா உலகத்தாரா லும் இகழப்படத்தக்கவனாவதுபோல எம்மைப்போன்றவன் உன்னால் நிந்திக்கப்படத் தக்கவனாகான். மன்னவ! இவ்வாறு என்னைச்சொல்லு கின்ற உன்னுடைய நாவானது இப்பொழுது ஏன் நூறுதுணுக்காகச் சிதறிப் போகாமலிருக்கிறது? ஆ! ஆ! நீ இப்பொழுது இங்கு இஷ்டப் படி சொல்லிய இந்தவார்த்தை மிக்க கொடுமையானது. உத்தமர்க ளான க்ஷத்திரியர்களுக்கு உரியதாகப் பெரும்பான்மையாகச்சொல் லப்படும் பலமானது உன்னால் கொள்ளப்படவில்லை. பாரத! நீ வலி மையற்றவன்; கொடியன். நான் எப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளவ னென்பதை நீயேஅறிகிறாய். வேந்தே! நகுலனால் யுத்தத்தில் எதிர்க் கப்பட்டயானைகளாலும் குதிரைவீரர்களாலும் போர்புரிகின்றவீரர்கள் விரைவாகக்கொல்லப்பட்டார்கள். யுத்தத்தில் பிராணனில் ஆசையை விட்டுப் போர்புரிவதில் விருப்பமுள்ளவனும் பகைவர்களை அடக்குகிற வனுமான அந்தநகுலன் என்னை நிந்திப்பதற்குத் தகுந்தவன். பகைப் படையைநொறுக்கிக்கொண்டு போர்புரிகின்ற ஸஹதேவனால் எவரா லும் செய்யமுடியாத காரியம் செய்யப்பட்டது. இவ்விடத்தில் வந்த பலசாலியானஅந்தஸஹதேவன் ஒன்றும் சொல்லவில்லை. அவனுக்

கும் உனக்குமுள்ள வேறுபாட்டைப்பார். த்ருஷ்டத்யும்னன், ஸாத்யகி, த்ரௌபதிபுத்திரர்கள், யுதாமன்யு, உத்தமௌஜஸ், சிகண்டி இவர்கள் இப்பொழுது யுத்தத்தில்நன்ருகப்பீடிக்கப்பட்டிருக்கிருர்கள். அவர்கள் என்னை நிந்திப்பதற்குத் தகுந்தவர்கள். நீ தகுதியுள்ளவனல்லே. உன்மூலமாகவே இந்தவைரம் நம்மால் அடையப்பட்டது. அவ்வாறே, அதிகோரமான துயரமும் அடையப்பட்டது. சூதாட்டத்தில் அஜாக்கிரதையுள்ள உன்ருல் அடிக்கடி இது செய்யப்பட்டது. அவ்வாறிருக்க, எந்தக்காரணத்திருல் இத்தருணத்தில் நீ நிந்திக்கிருய்? அரசனே ! நீயே எப்பொழுதும் அஜாக்கிரதையுள்ளவன்; நீயே மூடன்; பரதகுலத்தில் பிறந்தவர்களுள் துஷ்டன். உன்னை அடைந்து இந்த ராஜ்யம் போய்விட்டது. பாண்டவர்களும் மஹத்தான அடிமைத்தொழிலே அடைந்தார்கள். வீர ! உன்ருலேயே எங்களுக்கு வனவாஸதுக்கமானது உண்டுபண்ணப்பட்டது; ராஜ்யநாசமும் கோரமான அபிமன்யுவின்வதமும் உண்டு பண்ணப்பட்டன. உன்னை இவ்வாறு மிக்ககொடுந்தன்மையுள்ளவனென்று அறிந்திருந்தும் யாதுகாரணம்பற்றி இப்பொழுது என்னை நிந்திக்கிருய்? அரசனே! உனக்கு லஜ்ஜைஇருக்குமாகில் வெட்கமடைவாயாக. நன்றிமறந்தவனுனநீ பேசாமலிருந்துகொண்டு எல்லாவற்றையும் பார். பீமன் நித்யம் யுத்தம்செய்கிருன்; நித்யம் அடிக்கடி (பகைவர்களுடைய) கர்வத்தைப்பிளக்கிருன். வேந்தனே ! யுத்தத்தில் தனக்குச் சக்தியில்லாத மனிதன் எப்பொழுதும் பொறுமையையே பாராட்டவேண்டும்.பிராம்மணோத்தமர்களுக்கு வாக்கில்பலமென்றும் க்ஷத்திரியர்களுக்குக் கைகளில்பலமென்றும் பிராம்மணர்கள் சொல்லுகின்ருர்கள். பாரத! நீ வாக்கில் பலமுள்ளவனுக இருக்கிருய்; நிஷ்டுரனுகவுமிருக்கிருய்.நான் எப்படிப்பட்டவனென்பதை நீயேஅறிந்திருக்கிருய். நான் மனைவிகளாலும் புத்திரர்களாலும் உயிரினுலும் தேகத்தினுலும் எப்பொழுதும் உனக்கு இஷ்டத்தைச்செய்வதற்கு முயன்று கொண்டிருக்கிறேன். இவ்வாறு இருக்கிற என்னை ஊசிகள்போன்ற சொற்களால் துன்பஞ்செய்கிருய். உன்ருல் நாங்கள் ஒருஸுகத்தையும் அறிந்தோமில்லே. த்ரௌபதியின் படுக்கையிலிருக்கிற நீ என்னை அவமதியாதே. உன்னிமித்தமாக மஹாரதர்களைக் கொல்லுகிறேன். அஜாக்கிரதையுள்ள நீ எல்லோரிடத்திலும் அதிகஸந்தேகமுள்ளவனுகஇருக்கிருய். உன்ருல் ஸுகத்தைச் சிறிதும் நான் அறியவில்லே. நரதேவ ! உனக்குப்பிரியத்தின்பொருட்டே ஸத்யஸந்தரான பீஷ்மர் யுத்தத்தில் தாமே தம்வதோபாயத்தைச் சொன்னர். யுத்தத்தில்

உனக்காகவே என்னால் நாற்புறத்திலும் காக்கப்பட்ட சிகண்டியி னால் பீஷ்மர் கொல்லப்பட்டார். எப்பொழுதும் உபகாரியாயிருந்த துரோணர் ரதத்தினின்று பற்றிஇழுக்கப்பட்டு த்ருஷ்டத்யும்னனால் கொல்லப்பட்டார். பரிவாரங்களுடன்கூடினவரும் மஹாத்மாவு மான அந்தத்ரோணபுத்திரரும் தடுக்கப்பட்டார். அவ்வாறிருந்தும், நீ க்ரூரன்போற் பேசுகிறாய். அரசனே! உனக்கு நானே பிரியத் தைச் செய்யாதவனாகிறேனாதலால் உனக்குப் பிரியத்தைச் செய் வது கடினம். என்னைத்தவிர வேறுஎந்தமனிதன் அப்பிரியத் தைச் செய்யஆரம்பிப்பனோ அந்த மனிதன் ஸ்வர்க்கத்திலும் இந்தப் பூமியிலும் (என்னால்) விடப்படமாட்டான். நீ சூதாடும்காய்களில் மிக்கபற்றுள்ளவனாகிவிட்டமையால் ராஜ்யவிஷயத்தில் நான் மகிழ் வதில்லை. உன்னாலேயே உண்டுபண்ணப்பட்டதும் பாபமானதும் இழிகுணங்களால் அடையப்படுவதுமான வியஸனத்தை யுத்தத்தில் எங்களால் தாண்டவிரும்புகிறாய். சூதுகாய்களில் தர்மவிரோத மான பலதோஷங்கள் உண்டென்று ஸஹதேவன் சொல்லியவற்றை நீ செவிகொடுத்துக் கேட்டிருக்கிறாய். இழிந்தவர்களால் பற்றப்பட்ட அந்தச்சூதுகாய்களை விடுவதற்கு நீ விரும்பாமையால் கோரமான நரகத்தில் உன்னால் எல்லோரும் தள்ளப்பட்டோம். அரசனே! நீ சூதாடினாய். உன்னாலேயே ராஜ்யத்தை இழந்தோம். நமக்கு விய ஸனம் உன்னால் உண்டாகியது. நீ கடுஞ்சொற்களாகிற கொறடாக் களால் எம்மைத் துன்பத்தையடையச்செய்யாதே. அரசனே! அல்ப புத்தியினால் மறுபடியும் என்னைக் கோபிக்கச்செய்கிறாய்' என்றான்.

ஸ்திரமான பிரதிஜ்ஞையுள்ள ஸவ்யஸாசி க்ரூரமான இந்தச் சொற்களை யுதிஷ்டிரரைக் கேட்கச்செய்து பெருமூச்சைவிட்டுக் கொண்டு அவரைநோக்கி அனிஷ்டத்தைச்சொல்லி, அதன்பிறகு உறையிலிருந்து கத்தியை மேலேஉருவினான். வாஸுதேவர், அந்த அர்ஜுனனைப்பார்த்து, '(அர்ஜுன)! இதென்ன? மறுபடியும் நீ ஆகாயம்போன்றநிறமுள்ள கத்தியை உறையிலிருந்து உருவுகிறாய்? மித்திர! உண்மையான மறுமொழியைச் சொல். உன்னுடைய கார்ய ஸித்தியின்பொருட்டு மீண்டும் ஒருவசனத்தை உரைக்கப்போகி றேன்' என்று சொன்னார். புருஷோத்தமரால் இவ்விதமாகக்கேட்கப் பட்டபார்த்தன் மிக்கதுயரமுற்றவனாக அவரைப்பார்த்து, 'மாதவரே! நான் குருவைப்பார்த்துக் கடுஞ்சொற்களைஉரைத்தமையால் இந்தஎன் சரீரத்தை நாசஞ்செய்யப்போகிறேன்' என்றுசொன்னான். தார்மிகர் களுள் சிறந்தவரான ஜனார்த்தனர் பார்த்தனுடைய இந்தவசனத்தைக்

கேட்டு, 'பார்த்த! உன்னுடையகுணங்களை இப்பொழுது விசேஷ மாகச்சொல். அப்படிச்செய்வதனால் நீ உருவமழிக்கப்பட்டவனாவா யென்பது நிச்சயம்' என்றுசொன்னார். கோவிந்தருடைய அவ் வாறான வசனத்தைக்கேட்டுப் பிறகு அர்ஜுனன், வில்லைக்கையில் எடுத்துத் தார்மிகர்களுள் சிறந்தவரான யுதிஷ்டிரரை நோக்கி, 'அர சரே!என்னால் சொல்லப்படப்போகிற கெட்டவார்த்தையைக்கேளும்' என்று கூறலானான். 'நரதேவரே! பிநாகத்தை வில்லாகக்கொண்ட மஹாதேவரைத்தவிர என்னையொத்த வேறு ஒருவில்லாளி இல்லை. நானே அந்தமஹாத்மாவினால் அனுமதிகொடுக்கப்பட்டால் க்ஷணத் திற்குள் சராசரங்களுடன்கூடின உலகத்தை நாசஞ்செய்வேன். ராஜரே! என்னாலல்லவோ திக்பாலகர்களையும் திசைகளையும் ஜயித்து எல்லாம் உமக்கு வசப்படுத்தப்பட்டன? என்னுடைய பராக்ரமத்தி னால்அந்த ராஜஸூயயாகமானது நிறைந்ததக்ஷிணைகளுள்ளதாக நிறை வேற்றப்பட்டது. உமக்குத் திவ்யமானஸபையும் ஏற்படுத்திவைக்கப் பட்டது. இந்த இரண்டுகைகளோ பாணங்களால்எல்லாப்பக்கத்திலும் கீறப்பட்டிருக்கின்றன. இடக்கையில் நாணேற்றப்பட்டதும் பாணங்க ளுடன் கூடியதுமான வில்லும்இருக்கிறது. என்னுடையபாதங்களும் லக்ஷணத்தினால் சிறந்தவைகள். யுத்தத்தை அடைந்திருக்கின்ற என் போன்றவனை (சத்துருக்கள்) ஜயிக்கமாட்டார்கள். (என்னால்) வட நாட்டுவீரர்கள் கொல்லப்பட்டார்கள்; மேல்நாட்டு வீரர்களும் அழிக் கப்பட்டார்கள்; கீழ்நாட்டு வீரர்களும் துரத்தப்பட்டார்கள்; தென் னாட்டுவீரர்களும் நாசஞ்செய்யப்பட்டார்கள். ஸம்சப்தகர்களில் சிறு பான்மையரே மிகுந்திருக்கின்றனர். என்னால் உலகமுழுவதிலும் பாதி கொல்லப்பட்டுவிட்டது. பகைவர்களுடையபடையானது என் னால்கொல்லப்பட்டு அறுக்கப்பட்டிருக்கின்ற அவயவங்களோடு பூமி யில் துடித்துக்கொண்டு படுத்திருக்கிறது. அஸ்திரங்களை அறியாத வர்களை அஸ்திரங்களால் கொல்லுகிறதே இல்லை. அதனால், உலகங்க ளைச் சாம்பலாகச்செய்யவில்லை. மாதவரே! இப்பொழுது இந்த அரச ரான யுதிஷ்டிரர் பிக்ஷுகியாக இருக்கட்டும். ஜயத்தைத்தரக் கூடிய பயங்கரமான ரதத்தின்மீதேறி ஸூதபுத்திரனைக் கொல்வதற் குச் சீக்கிரம் செல்லுகிறேன். யுத்தத்தில் கர்ணனைப் பாணங்க ளால் நாசஞ்செய்யப்போகிறேன்' என்றான். பார்த்தன், தார்மிகர்களுள் சிறந்தவரான யுதிஷ்டிரரைக்குறித்து இவ்வாறு உரைத்துவிட்டு மறு படியும், 'என்னாலேயாவது அந்தக் கர்ணனாலாவது ஸூதனுடைய மாதாவோ குந்தியோ இப்பொழுது புத்திரனில்லாதவளாகப் போகி

ருள். நான் ஸத்தியமாகச் சொல்லுகிறேன். இப்பொழுது யுத்தத்தில் கர்ணனைப் பாணங்களால் கொல்லாமல் நான் கவசத்தைக் கழற்றப் போகிறதில்லை' என்று கூறினன்.

ப்ருதாபுத்திரனை அந்தக் கிரீடியானவன் தார்மிகர்களுள் சிறந்தவரான யுதிஷ்டிரரைக்குறித்து மறுபடியும் இவ்வாறு சொல்லிவிட்டுச் சஸ்திரங்களைக் கழற்றிவைத்து வில்லைக் கீழே வைத்து விரைவாக உறையில் கத்தியைப்போட்டுவிட்டு வெட்கத்தினால் தலைகுனிந்தவனாக இருகைகளையும் குவித்துக்கொண்டு யுதிஷ்டிரரைநோக்கி, 'அரசரே! கருணைபுரிவீராக. என்னால் எது சொல்லப்பட்டதோ அதனைப் பொறுத்துக்கொள்ளும். அதனை நீர் ஸமயத்தில் அறிவீர். உமக்கு வந்தனம்' என்று கூறினான். பிறகு, ஜ்வலிக்கின்ற தேஜஸையுடையவனும் ப்ருதாபுத்திரனுமான கிரீடி எழுந்திருந்து இருகால்களையும் பிடித்துக்கொண்டு பகைவர்களைத் தாங்குகிறவரான அரசரை மனத்தெளிவை அடையச்செய்து நின்றுகொண்டு, பரிதபிக்கின்ற அவரைப்பார்த்து (பின்வருமாறு) கூறலானான். 'யுத்தத்தினின்று பீமனை விடுவிப்பதற்காகவும் எல்லாவிதத்தினாலும் ஸூதபுத்திரனைக் கொல்வதற்காகவும் இதோ நான் செல்லுகிறேன். மன்னரே! உமக்குப் பிரியத்தைச் செய்வதின்பொருட்டே என்னுடையஉயிர் இருக்கிறதன்றோ? உண்மையாகச் சொல்லுகிறேன். அதனைத் தெரிந்துகொள்ளும். இது வெகுகாலம்கழித்து வரப்போகிறதன்று. அதிக சீக்கிரத்தில் இது நேரப்போகிறது. இதோ அவன் நேரில்வருகிறான். இவனைஎதிர்த்துச் செல்லுகிறேன். அரசரே! என்னால் கர்ணனாவது கர்ணனால் நானாவது கொல்லப்பட்டு ராதையோ குந்தியோ இன்று புத்திரனில்லாதவளாகப் போகிறார்கள். அப்படிப்பட்ட இந்த விஷயத்தைத் தெரிந்துகொள்ளும்' என்று சொன்னான்.

---

## எழுபத்துநான்காவது அத்யாயம்.

(அர்ஜுனன் செய்த அவமானத்தினால் கானகம் செல்லக்கருதிய யுதிஷ்டிரரைக் கிருஷ்ணன் ஸமாதானஞ்செய்தது.)

பாண்டுபுத்திரரான தர்மராஜர், பிராதாவான பல்குனனுடைய இந்தக் கொடியவாக்கியத்தைக் கேட்டு அந்தப்படுக்கையிலிருந்து எழுந்திருந்து துக்கத்தினால் கவரப்பட்ட மனத்தையுடையவராகிப் பார்த்தனைப் பார்த்துப் பிறகு கூறலானார். 'பார்த்த! மிக்ககொடிய

துயரமானது உங்களால் அடையப்பட்டமையால் என்னால் நல்ல காரியம் செய்யப்படவில்லை. வீர ! ஆதலால், குலத்துக்கு முடிவைச் செய்பவனும் அதமனும் பாபியும் பாபத்தினால் கெடுக்கப்பட்டவனும் விசேஷமாக மூடபுத்தியுள்ளவனும் சேர்ம்பேறியும் பயப்படுகிறவனும் பெரியோர்களை அவமதிப்பவனும் க்ரூரனுமான என்னுடைய இந்தத்தலையை இப்பொழுது வெட்டு. கொடியனை என்னை நெடுங்காலமாக அனுஸரித்து உனக்கு என்ன (நன்மை) உண்டாயிற்று? பாபியான நான் இப்பொழுதே காட்டுக்குப்போகிறேன். நீ என்னை விட்டுச் சுகமாயிரு. மஹாத்மாவான பீமஸேனன் தகுந்த அரசன். சக்தியற்றவனை எனக்கு ராஜ்யகாரியம் எதற்காக? கோபத்துடன்கூடின உன்னுடைய கடுமையான இச்சொற்களைப் பொறுப்பதற்கு நான் சக்தியற்றவன். வீர ! பீமன் அரசனாக இருக்கட்டும். அவமதிக்கப்பட்ட என்னுடைய உயிர்வாழ்க்கையால் இப்பொழுது காரியமில்லை' என்றார். யுதிஷ்டிரர் இவ்வாறு சொல்லிவிட்டுக் கோபத்துடன் அந்தப்படுக்கையைவிட்டு உடனேஎழுந்திருந்து பிறகு வனத்துக்குச்செல்வதற்கு விருப்பமுள்ளவரானார். அவரை வாஸுதேவர் வணங்கிக் கூறலானார். 'அரசரே ! ஸத்யஸந்தனும் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனுமான அர்ஜுனனுடைய காண்டீவத்தைப்பற்றின பிரஸித்தமான பிரதிஜ்ஞை எவ்விதமென்பது உமக்குத் தெரியாதா? 'நீ இந்தக்காண்டீவத்தை வேறு ஒருவனிடம் கொடு' என்று இவனைச் சொல்லுகிற மனிதன் உலகில் இவனுக்குக் கொல்லத்தக்கவனாகிறான். உம்மால் இவன் இவ்விதமானவசனத்தை உரைக்கப்பட்டான். அரசரே ! ஆதலால், ஸத்யமான அந்தப்பிரதிஜ்ஞையைக் காப்பாற்றுகிறவனை பார்த்தனால் என்னுடைய அபிப்பிராயப்படி உமக்கு இந்த அவமானமானது செய்யப்பட்டது. குருக்களுக்கு, அவமானமானது வதமென்று சொல்லப்படுகிறது. வேந்தரே ! மிக்க புஜபலமுள்ளவரே ! ஆதலால், ஸத்யத்தைக் காப்பாற்றுவதற்காக, நானும் பார்த்தனும் (ஆகிய நாங்கள்) இருவரும்செய்த இந்த அவமானத்தைப் பொறுத்துக்கொள்ளும். மஹாராஜரே ! நாங்கள்இருவரும் உம்மைச் சரணமடைந்தோம். ராஜரே ! வணங்கி வேண்டுகின்ற என்னுடைய (அக்ரமத்தைப்) பொறுப்பீராக. இப்பொழுது பாபியானராதேயனுடைய ரக்தத்தைப்பூமியானது பானஞ் செய்யப்போகிறது. உம்மிடத்தில் ஸத்யமாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். இப்பொழுது ஸூதபுத்திரனைக் கொல்லப்பட்டவனாக அறிந்து கொள்ளும். எவனுடையவதத்தை நீர் விரும்புகிறீரோ அவனுடைய

உயிர் இப்பொழுது போனதே' என்று கூறினார். இவ்விதமான மாதவருடையவசனத்தைக்கேட்டுத் தர்மராஜரான யுதிஷ்டிரர், அப்பொழுது, வணங்கியிருக்கிற ஹ்ருஷீகேசரைப் பரபரப்புடன் எடுத்து நிறுத்தி, கைகூப்பிக்கொண்டிருக்கிற அவரைப்பார்த்துமேலேசொல்வதற்கேற்ற பின்வருமாறான வாக்கியத்தை உரைக்கலானார். 'நீர் சொல்லியது சொன்னபடியேஆகும். என்னிடத்தில் இந்த அக்ரமமானது இருக்கிறது. கோவிந்தரே! மாதவரே! நான் ஸமாதானம் செய்யப்பட்டேன்; (ஆபத்தினின்று) கரைஏறும்படியும் செய்யப்பட்டேன். அச்சுதரே! உம்மால் கோரமானவ்யஸனத்தினின்று நாம் இப்பொழுது விடுவிக்கப்பட்டோம். அறியாமையினால் மதிமயக்கமுற்ற நாங்களிருவரும் இப்பொழுது உம்மை ஓடமாகக்கொண்டு கோரமான துயர்க்கடலினின்று கரை ஏறினோம். அச்சுதரே! உம்முடைய புத்தியாகிற ஓடத்தை அடைந்து நாங்கள் மந்திரிகளோடு துக்கமாகிற ஸமுத்திரத்தினின்று நன்கு கரைஏறினோம்; உம்மால் நாதனுள்ளவர்களானோம்' என்று கூறினார்.

---

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

### (அர்ஜுனன் யுதிஷ்டிரரை மனத்தெளிவடையச்செய்து கர்ணன்வதத்தைப் பிரதிஜ்ஞைசெய்தது.)

பார்த்தன், கேசவருடைய வசனத்தினால் யுதிஷ்டிரரைப்பார்த்து இவ்வாறு மறுமொழிசொல்லிவிட்டு ஒருபாதகத்தைச் செய்தவன் போலத் துயரமுற்றவனானான். பிறகு, வாஸுதேவர் சிரித்துக்கொண்டு பாண்டவனைப்பார்த்து, 'பார்த்த! தர்மத்தில் நிலைபெற்றவரும் தர்மராஜனிடத்தினின்றுதோன்றியவருமான யுதிஷ்டிரரை நீ கூரியமுனையுள்ளகத்தியினால் கொன்றிருப்பாயாகில் இது எப்படிஆகுமோ? நீ, அரசரைப்பார்த்து, 'நீ' என்றுசொல்லிவிட்டுப் பிறகு இவ்வாறு மதிமயக்கத்தை அடைந்துவிட்டாயே? பார்த்த! அரசரைக் கொன்றுவிட்டு மேல் என்னசெய்வாய்? தர்மமானது இவ்விதம் அறிதற்கரிதாயிருக்கிறது, அறிவீனர்களால் அறியவேமுடியாது. நீ தர்மத்தினிடத்தில் பயந்தவனாயிருப்பதினால் மூத்த தமயனுடையவதத்தினால் கோரரூபமுள்ளதும் பேரிருள் மயமாயிருப்பதுமான நரகத்தை நிச்சயமாக அடைவாய். நீ தர்மவான்களுள் சிறந்தவரும் தர்மத்தில் நிலைபெற்றவரும் கௌரவர்களுள் சிறந்தவருமான அரசரைக் கருணைபுரியும்படி செய்துகொள்வாயாக. இவர்விஷயத்தில் இது

செய்வது எனக்குச் சம்மதம். அரசரைப் பக்தியினால் அருள்புரியச் செய்து அவர் பிரீதியுள்ளவரானவுடன், ஸூதபுத்திரனுடைய தேரைக்குறித்து யுத்தம் செய்வதற்காக விரைந்து செல்வோம். (பகைவர்களுடைய) மானத்தை அழிப்பவனே ! நீ இப்பொழுது யுத்தத்தில் கூர்மையுள்ள அம்புகளால் கர்ணனைக்கொன்று தர்ம புத்திரருக்கு அதிகப்பிரீதியை உண்டுபண்ணுவாயாக. மிக்க புஜபல முள்ளவனே ! இதுதான் இந்தஸமயத்துக்கு ஏற்றதென்பது என் னுடைய எண்ணம். இவ்வாறு செய்யப்பட்டால் உன்னுடைய கார் யம் நிறைவேற்றப்பட்டதாகும்' என்று சொன்னார். மஹாராஜரே ! பிறகு, அர்ஜுனன் வெட்கினவனாகித் தர்மராஜருடைய சரணங்களை அடைந்துதலைவணங்கினான். அவன், 'அரசரே! தர்மத்தினின்றுபயந்த வனான நான் சொல்லியதை நீர் பொறுத்துக்கொள்ளும்; கிருபைசெய் யும்' என்று பரதஶ்ரேஷ்டரான தர்மநந்தனரைப்பார்த்து அடிக்கடி வேண்டினான். தர்மத்தினால் விளங்குபவரும் அரசரும் பூமிக்குநாத ருமான யுதிஷ்டிரர் சரணங்களில் விழுந்து அழுகின்றவனும் பகை வர்களை நாசஞ்செய்பவனும் பரதர்களுள் சிறந்தவனும் ப்ராதாவுமான தனஞ்சயனைப் பார்த்து எடுத்து நிறுத்தி அன்புடன் நன்றாகத் தழு விக்கொண்டு உரக்க அழுதார். மஹாராஜரே ! மிக்க ஒளிபொருந்தி யவர்களான பிராதாக்கள்இருவரும் நெடுநேரம் அழுது சுத்தியைச் செய்துகொண்டவர்களும் பிரீதியையுடையவர்களுமானார்கள். பிறகு, பாண்டுபுத்திரரானதர்மராஜர் அந்தஅர்ஜுனனை அன்புடன் தழுவிக் கொண்டு உச்சிமோந்து அதிகப்ரீதியுள்ளவராகவும்அடிக்கடி ஆச்சர்ய த்தைஅடைந்தவராகவும் மஹாவில்லாளியான அந்தத்தனஞ்சயனைப் பார்த்து, 'மிக்கதோள்வலியமைந்தவனே! மகிமைதங்கியவில்லையுடை யவனே ! எல்லாச் சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது யுத்தத்தில் முயல்கின்ற என்னுடைய கவசமும் த்வஜமும் வில்லும சக்தியும் குதிரைகளும் பாணங்களும் கர்ணனால் பாணங்களால் அறுக்கப்பட்டன. பல்குன ! அப்படிப்பட்டநான் யுத்தத்தில் அந்தக் கர்ணனுடைய செய்கையைப்பார்த்துத் துக்கத்தினால் விசேஷமாக வாடுகிறேன். என்னுடைய உயிரில் எனக்கு விருப்பமில்லை. யுத்தத் தில் அந்த வீரனை நீ இப்பொழுது கொல்லாமற்போவாயாகில் பிரா ணனை விடவேபோகிறேன். எனக்குப் பிழைத்திருப்பதினால் யாது பயன் ?' என்று சொன்னார். பரதரிற் சிறந்தவரே ! இவ்வாறு சொல் லப்பட்ட விஜயன், 'அரசரே ! பூமிக்கு நாதரே ! நரஶ்ரேஷ்டரே ! ஸத்யத்தின்மீதும் அவ்வாறே உம்முடைய பாதத்தின்மீதும் பீம

நகுல ஸஹதேவர்கள்மீதும் ஆணையிடுகிறேன். அரசரே! புருஷ ஶ்ரேஷ்டரே! நான் இப்பொழுது மந்திரிகளுடன்கூடின இந்தக் கர்ணனை யுத்தத்தில் கொல்வேன். அல்லது, நானாவது கொல்லப்பட்டுப் பூமியில் விழுவேன். உண்மையாக ஆயுதத்தைத் தொட்டுச் சபதம் செய்கிறேன்' என்று மறுமொழி உரைத்தான். அர்ஜுனன் அரசரைப் பார்த்து இவ்விதமான வசனத்தை உரைத்து விட்டு, மாதவரைப்பார்த்து, 'கேசவரே! இப்பொழுது கர்ணனை யுத்தத்தில் கொல்லப்போகிறேன்; ஸம்சயமில்லை. உமக்கு மங்களம். நீர் அந்தத்துராத்மாவான கர்ணனுடைய வதத்தை தியானம் செய்யும்' என்று சொன்னான். ராஜஶ்ரேஷ்டரே! இவ்வண்ணம் உரைக்கப்பட்ட கேசவர் பார்த்தனைப்பார்த்து, 'பரதர்களுள் சிறந்தவனே! நீ என்னைநோக்கிச் சொல்லுகிறவிஷயத்துக்குரிய முயற்சியைச் செய்வதற்குச் சக்தியுள்ளவனாக இருக்கிறாய். மஹாரதரிற் சிறந்தவனே! 'நீ யுத்தத்தில் கர்ணனை எப்படி கொல்லப்போகிறாய்' என்கிற இந்த எண்ணமானது எனக்கு நித்தியமாகவே இருக்கிறது' என்று கூறினார். அரசரே! பிறகு, இவ்வாறு சொல்லக் கேட்ட பார்த்தன், 'புரளவிடப்பட்டவைகளும் ஸாரதிகளால் பழக்கப் பட்டிருப்பனவைகளுமான குதிரைகளை உத்தமமான ரதத்தில் மறுபடியும் பூட்டக்கடவீர். இரண்டுரதிகர்களுக்கும் நடக்கும் யுத்தத்தில் (அவன்) கொல்லப்படுவான். தேரில் இருக்கவேண்டிய எல்லா உபகரணங்களோடும் என்னுடைய தேரானது விரைவாகச்செல்லவேண்டும்' என்கிற வசனத்தைக் கூறினான். மஹாராஜரே! மஹாத்மாவான பல்குணன் இவ்வாறு சொல்லக் கேட்ட கேசவர் தாருகனைப் பார்த்து, 'பரதர்களுள் சிறந்தவனும் எல்லாவில்லாளிகளுள்ளும் மேன்மைபெற்றவனுமான அர்ஜுனன் சொல்லியவற்றையெல்லாம் செய்வாக' என்று கட்டளையிட்டனர். ராஜஶ்ரேஷ்டரே! பிறகு, மாதவரால் கட்டளையிடப்பெற்ற தாருகன் சத்துருக்களைத் தவிக்கச் செய்கின்றதும் புலித்தோலால் மூடப்பட்டதுமான ரதத்தில் (குதிரைகளைப்) பூட்டினான். ஸித்தமாயிருப்பதாகவும் மஹாத்மாவான பாண்டவனிடத்தில் சொன்னான். யுத்தத்தினுடைய முடிவைச்செய்கின்ற பத்மநாபர் மஹாத்மாவான தாருகனால் பூட்டிஓட்டப்பட்டு அருகில் வந்திருக்கிற தேரைப்பார்த்து, சிறந்தபுத்தியுள்ளவரான அவர் மீண்டும் தர்மநந்தனரை நோக்கிச் சொல்லலானார்.

'யுதிஷ்டிரரே! நீர் இந்தப்பீபத்ஸுவை ஸமாதானம்செய்து, இப்பொழுது துராத்மாவான கர்ணனுடைய வதத்துக்கு அனுமதி

கொடுக்கக்கடவீர். பாண்டுநந்தனரே! நாங்களிருவரும், மஹாயுத்தத்தில் நீர் கர்ணனுடைய பாணங்களால் பீடிக்கப்பட்டிருக்கிறீரென்பதைக் கேட்டு உம்முடைய விருத்தாந்தத்தை அறிவதற்காக இவ்விடம் வந்தோம். அரசரே! பாக்கியத்தினால் துக்கமற்றவராயிருக்கிறீர். பாக்கியத்தினால் சத்துருவசத்தை அடையாமலிருக்கிறீர். பீபத்ஸுவை ஸமாதானம் செய்யும். தோஷமற்றவரே! ஜயத்தை அனுக்ரஹம் செய்யும்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'பார்த்த! பீபத்ஸுவே! இங்கே வா; இங்கேவா; பாண்டவ! என்னை ஆலிங்கனஞ்செய்துகொள். நான் உன்னால் சொல்லத்தக்க * ஹிதமான வசனத்தை உரைக்கப்பட்டேன். அதனை நான் பொறுத்துக்கொண்டேன். நான் உனக்கு அனுமதிகொடுக்கிறேன். தனஞ்சய! கர்ணனைக்கொல். பார்த்த! நான்சொல்லிய கடுஞ்சொற்களால் கோபங்கொள்ளாதே' என்றார். அரசரே! பெரியவரே! பிறகு, தனஞ்சயன் முடியினால்வணங்கி, அப்பொழுது தமையனாருடைய இருசரணங்களையும் இருகைகளாலும் பிடித்துக்கொண்டான். பிறகு, யுதிஷ்டிரராஜர், அவனைத்தூக்கி நிறுத்தி இறுகத் தழுவிக்கொண்டு உச்சிமோந்து அவனைப்பார்த்து மறுபடியும் இந்தவசனத்தை உரைக்கலானார். 'தனஞ்சய! மிக்கபுஜபலமுள்ளவனே! நான் உன்னால் நன்கு கௌரவிக்கப்பட்டேன். சாஸ்வதமான மஹிமையையும் விஜயத்தையும் மீண்டும் அடைவாயாக' என்றார்.

அர்ஜுனன், 'நான் பாவச்செய்கையைச் செய்பவனும் பலத்தினால் கர்வங்கொண்டவனுமான ராதாபுத்திரனை இப்பொழுது யுத்தத்தில் எதிர்த்து அவனைப் பரிவாரங்களுடன் அம்புகளால் நாசத்தை அடைவிக்கப்போகிறேன். திடமான வில்லைவளைத்து அம்புகளால் உம்மைப் பீடித்ததாகிய அச்செய்கையின் கொடிய பலனைக் கர்ணன் இப்பொழுது அடையப்போகிறான். பூமிக்கு நாதரே? கர்ணனைக்கொன்று இப்பொழுது நான் உம்மை வந்து அணுகப்போகிறேன். யுத்தத்தினால் உம்மை ஆராதிக்கிறேன். இவ்வண்ணம்செய்வது ஸத்யமென்று உமக்குச் சொல்லுகிறேன். அரசரே! கர்ணனைக்கொல்லாமல் யுத்தத்தினின்று இப்பொழுது நான் திரும்பப்போகிறதில்லை. இது ஸத்யமென்று உம்முடைய இருசரணங்களையும் தொடுகிறேன்' என்றுகூறினான். இவ்வாறு சொல்லுகின்ற கிரீடியைப்பார்த்து அப்பொழுது நல்லமனமுள்ள யுதிஷ்டிரர்,

* வேறுபாடம்.

'தேவதைகள் உனக்கு அக்ஷயமான கீர்த்தியையும் வாழ்நாளையும் மனோரதஸித்தியையும் எப்பொழுதும் ஜயத்தையும் வீர்யத்தையும் சத்துருநாசத்தையும் பெருக்கத்தையும் கொடுக்கட்டும். செல். நான் விரும்புவது உனக்கு அப்படியே உண்டாகட்டும். விரைவாகச்செல். இந்திரன் விருத்ரனைக்கொன்றதுபோல் உன்னுடைய அபிவிருத்தியின்பொருட்டு யுத்தத்தில் கர்ணனைக் கொல்வாயாக' என்று மிக்க பெரிதான வசனத்தைக் கூறினர்.

---

## எழுபத்தாறாவது அத்யாயம்.

(கர்ணனோடு போர்புரிய விரும்பின அர்ஜுனனுக்குச் சுபநிமித்தங்கள் தோன்றினதும், ஸ்ரீ வாஸுதேவர் அர்ஜுனனை மிக உத்ஸாஹப்படுத்தியதும்.)

அர்ஜுனன், தர்மராஜரை மனத்தெளிவடையச்செய்து மிக்க ஸந்தோஷமுள்ள சித்தத்துடன் எல்லாத்தேவதைகளையும் நன்றாகப் பூஜித்துப் பிராம்மணர்களை ஸ்வஸ்திவசனங்களைச் சொல்லும்படி செய்து மிக்கமங்களகரமானதும் க்ஷேமத்துக்கு ஸாதனமாயிருப்பதும் உத்தமமுமான ரதத்தின்மீது ஏறினன். அரசரும் பேரறிவாளரும் தர்மத்தினால் பிரகாசிப்பவருமான யுதிஷ்டிரர், (யுத்த) ஸன்னத்தமான கர்ணனுடைய ரதத்தைக் குறித்து (எதிர்க்கப்போகிறவனான) அந்தஅர்ஜுனனுக்கு உத்தமமான ஆசீர்வாதங்களைச்செய்தார். பாரதரே! வருகின்ற அந்த மகாவில்லாளியைக்கண்டு(எல்லாப்) பிராணிகளும் மஹாத்மாவான பாண்டவனால் கர்ணனைக் கொல்லப்பட்டவனாக எண்ணின. அரசரே! எல்லாத்திக்குக்களும் நாற்புறங்களிலும் மாசற்றவையாயின. ஜனநாதரே! * சாஷங்களும் சதபத்ரங்களும் க்ரௌஞ்சங்களும் அப்பொழுது பாண்டுநந்தனனை வலமாகச் சுற்றிவந்தன. மன்னரே! †மங்களகரமான, 'பும்' என்கிற பெயருள்ள அனேகபக்ஷிகள் யுத்தவிஷயத்தில் அர்ஜுனனைவிரையச்செய்துகொண்டு மிக்கஸந்தோஷமுள்ளவைகளாகச் சப்தித்தன. ராஜரே! பயங்கரமான ‡கங்கங்களும் ‡கிருத்ரங்களும் ‡ஸ்யேனங்களும் கொக்குக்களும் காக்கைகளும் (மாம்ஸங்களை) பக்ஷிப்பதற்காக அவனுக்குமுன் சென்றன. முக்கியமான நிமித்தங்கள் பகைவர்படைகளின் அழிவையும் அவ்வாறே கர்ணனுடைய வதத்தையும் அர்ஜுனனுக்குத் தெரிவித்தன. பிறகு, (யுத்தத்துக்கு) புறப்பட்டவனான பார்த்தனுக்கு

---

* பறவைகளின்வகை. † ஒருசொல் விடப்பட்டது. ‡ கழுகின்வகைகள்.

அதிகமான வேர்வை உண்டாயிற்று. 'இது எவ்விதமாகும்' என்று பெருங்கவலையும் உண்டாயிற்று. பிறகு, ஸவ்யஸாசியைத் துக்க முற்றவனாகஅறிந்து தேஜஸ்வியும் மது என்கிற அஸுரனைக் கொன்றவருமானஅச்சுதர் வானரத்வஜனை அவனை நன்றாகத் தூண்டினார். பிறகு, மதுஸூதனர் அப்பொழுது கவலையினால் கவரப்பட்டவனும் அவ்வாறு வருகின்றவனும் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனுமான பார்த்தனைப்பார்த்துக் கூறலானார்.

'காண்டீவத்தை வில்லாகக் கொண்டவனே! யுத்தத்தில் உன்னால் வில்லினால் ஜயிக்கப்பட்டவர்களை ஜயிப்பவன் உன்னைத் தவிர வேறுமனிதன் இவ்வுலகில் இல்லை. இந்திரன்போன்ற பராக்கிரமமுள்ளவர்களான இந்தஅனேகசூரர்கள் யுத்தத்தில்சூரனை உன்னைஎதிர்த்து உத்தமகதியை அடைந்துவிட்டார்கள். ஐயா! உன்னைப்போல ஸாமர்த்தியமுள்ளவனல்லாத எந்தமனிதன்தான் துரோணரையும் பீஷ்மரையும் பகதத்தனையும் அவந்திதேசத்தரசர்களான விந்தாநுவிந்தர்களையும் காம்போஜதேசாதிபதியான ஸுதக்ஷிணனையும் சுருதாயுவையும் அச்ருதாயுவையும் மஹாரதனைசதாயுவையும் எதிர்த்து க்ஷேமமுள்ளவனாவான்? அர்ஜுன! உன்னிடத்தில் திவ்யாஸ்திரங்களும் லாகவமும் பலமும் யுத்தங்களில் மதிமயக்கமின்மையும் விஜ்ஞானத்தினுடைய வணக்கமும் லக்ஷயத்தை அடிக்கிற சக்தியும் லக்ஷயங்களில் தவறாமல் அம்புகளைத் தாக்கும்படிசெய்கிற சக்தியும் தகுந்தஸன்னாஹமும் இருக்கின்றன. பார்த்த! நீ தேவர்களையும் கந்தர்வர்களையும் எல்லாஅரக்கர்களையும்கொல்லுவாய். யுத்தத்தில் உனக்கு ஸமமாகப் போர்புரிகின்றமனிதன் பூமியில்இல்லை. யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களான எந்தச்சிலக்ஷத்திரியர்கள் விற்பிடிக்கின்றார்களோ அவர்களுள் உனக்கு ஸமமாக இருப்பவனை நான் காணவுமில்லை; கேட்கவுமில்லை. பார்த்த! பிரம்மாவினால் பிரஜைகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. எதனால் நீ யுத்தம்செய்கிறாயோ அந்தக் காண்டீவம் என்கிறபெரியவில்லும் அவராலேயே படைக்கப்பட்டது. ஆதலால்,உனக்குநிகரானவன் இல்லை. பாண்டவ! உனக்கு ஹிதமான வசனத்தை நான்அவச்யம் சொல்லவேண்டும். மிக்க புஜபலமுள்ளவனே! யுத்தத்தில் பிரகாசிக்கின்றவனான கர்ணனை அவமதியாதே. கர்ணன் பலசாலி; கொழுத்தவன்; அஸ்திரங்களில் தேர்ச்சியுள்ளவன்; மஹாரதன்; ஸமர்த்தன்; ஆச்சரியகரமாக யுத்தஞ்செய்பவன்; தேசகாலங்களை அறிந்தவன். பாண்டவ! இப்பொழுது பல வார்த்தையினால் யாது பயன்? சுருக்கமாகக் கேள். மஹாரதனான கர்ணனை

உனக்கு ஸமானனாகவாவது உன்னைக்காட்டிலும் சிறந்தவனாகவா வது நினைக்கிறேன். மஹாயுத்தத்தில் அதிகமான முயற்சியைச் செய்து உன்னால் கர்ணன் கொல்லப்படத் தக்கவன். கர்ணன் தேஜ ஸினால் நெருப்புக்கு ஒப்பானவன்; வேகத்தினால் வாயுவுக்கு ஸமானன்; கோபத்தினால் யமனுக்குநிகரானவன்; ஸிம்மம்போன்ற தேகபலமுள்ளவன்; பலசாலி; எட்டு * ரத்னி உயரமுள்ள வன்; நீண்டகைகளையுடையவன்; அகன்றமார்பை யுடையவன்; எவ்விதத்தினாலும் ஜயிக்கமுடியாதவன்; (நான்என்கிற) அபிமான முள்ளவன்; சூரன்; சிறந்தவீரன்; பார்க்கஇனியவன்; யுத்தவீரர் களுக்குரிய எல்லாக்குணங்களும் பொருந்தியவன்; மித்திரர்களுக்கு அபயம்கொடுப்பவன்; எப்பொழுதும் பாண்டவர்களைப் பகைப் பவன்; திருதராஷ்டிரபுத்திரர்களுக்கு நன்மையைச் செய்வதில் பற்றுதலுள்ளவன். உன்னைத்தவிர இந்திரனுடன்கூடின எல்லாத் தேவர்களாலும் ராதேயன் கொல்லப்படக்கூடியவனல்லனென் பது என்னுடைய எண்ணம். ஆதலால், இப்பொழுது ஸூதபுத் திரனை நாசஞ்செய். முயற்சியுள்ள தேவர்களாலும் மாம்ஸமும் ரக்தமும் மிகுந்திருப்பவர்களும் யுத்தஞ் செய்வதில் விருப் பமுற்றவர்களுமான எல்லாவீரர்களாலும் அந்த ரதிகன் ஜயிக்கப் படமுடியாதவன். கெட்ட எண்ணமுள்ளவனும் பாவமான நடை யுள்ளவனும் க்ரூரனும் பாண்டவர்களிடத்தில் எப்பொழுதும் கெட்ட எண்ணமுடையவனும் பாண்டவர்களோடு விரோதத்தைப் பாராட்டு வதில் தன்பிரயோஜனத்தை விட்டவனுமான கர்ணனை இப்பொ ழுது கொன்று நிச்சயமான கார்யஸித்தியையுடையவனாகிவிடு. ரதி கர்களுள் சிறந்தவனும் தன்னை ஜயிக்கக்கூடிய எதிர்வீரனற்றவனு மான அந்தஸூதபுத்திரனை இப்பொழுது காலனுக்குவசப்பட்டவனா கச்செய்வாயாக. ரதிகர்களுள் சிறந்தவனான அந்த ஸூதபுத்திர னைக்கொன்று தர்மராஜருக்குப் பிரீதியை உண்டுபண்ணு. பார்த்த! தேவாஸுரர்களாலும் தடுக்கமுடியாததான உன்னுடைய வீர்யத்தை உள்ளபடி நான் அறிவேன். துராத்மாவான இந்தஸூதபுத்திரன் கொழுப்பினால் எப்பொழுதும் பாண்டுபுத்திரர்களை அவமதிக்கிறானன்றோ? தனஞ்சய! பாபியான துர்யோதனன் எவனால் தன்னை வீரனாக எண்ணுகிறானோ பாவங்களுக்கு மூலமான அந்த ஸூதபுத்திரனை இப்பொழுது வதஞ்செய்வாயாக. தனஞ்சய! கத்தியாகிற நாவை யுடையதும் வில்லாகிறவாயையுடையதும் அம்புகளாகிற கோரப்பற்

* ரத்னி என்பது இருபத்தோரங்குல நீளம்.

களையுடையதும் வேகமுள்ளதும் கொழுப்புள்ளதுமான கர்ணனென்கிற ஆண்புலியைக் கொல். நீ வீர்யத்தோடும் பலத்தோடும் விளங்கும்படி வேண்டுகிறேன். சிங்கமானது யானையைக் கொல்வதுபோல யுத்தத்தில் சூரனான கர்ணனை நாசஞ்செய்." பார்த்த! எவனுடைய வீர்யத்தினால் தார்த்தராஷ்டிரன் உன்னுடைய வீர்யத்தை அவமதிக்கின்றானோ அந்தச்சூரியகுமாரனான கர்ணனை யுத்தத்தில் இப்பொழுது அழிப்பாயாக' என்று கூறினார்.

## எழுபத்தேழாவது அத்யாயம்.

**(வாஸுதேவர் பீஷ்மர் முதலியோரின் மரணத்துக்குந் துரியோதனனுடைய அநீதிகளுக்கும் கர்ணனே காரணமென்பதைக்கூறி அவனை அவசியம் கொல்லும்படி அர்ஜுனனை வற்புறுத்தியது.)**

**பா**ரதரே! பிறகு, அளவிடமுடியாத பெருமையையுடைய கேசவர், கர்ணனைக்கொல்வதில் திடமானநிச்சயத்தோடுவருகின்ற அர்ஜுனனைப்பார்த்து, மீண்டும்,'ராஜனே! மனிதர்களுக்கும் யானைகளுக்கும் குதிரைகளுக்கும் அதிகோரமான விநாசமானது தினந்தோறும் நடந்துவருகின்றது. (இவ்வாறானஇந்தயுத்தம்) இன்றைக்குப் பதினேழாவதுநாள். உன்னைச்சேர்ந்தவர்களுடையபடையானது பெரிதாயிருந்து பகைவர்களோடு அன்யோன்யம் சண்டைசெய்து சிறிது மிகுதியுள்ளதாக இருக்கிறது. பார்த்த! கௌரவர்கள் மிகுதியான யானைகளுடனும் குதிரைகளுடனும் கூடியவர்களாயிருந்து யுத்தமுனையில் சத்துருவான உன்னை எதிர்த்து நாசமடைந்தார்கள். இந்த அரசர்களும் ஸ்ருஞ்சயர்களும் பாண்டவர்களும் (பகைவர்களால் எவ்விதத்தினாலும்) அவமதிக்கமுடியாத உன்னைப் பின்பற்றிவந்து (சத்துருவதத்தில்) நிலைபெற்றிருக்கிறார்கள். உன்னால் காக்கப்பட்டவர்களும் பகைவர்களை நாசஞ்செய்பவர்களுமான பாஞ்சாலர்களாலும் பாண்டவர்களாலும் மாத்ஸ்யர்களாலும் காரூசர்களாலும் சைத்யர்களாலும் மாகதர்களாலும் பாரிஜாதர்களாலும் கேரளர்களுடன்கூடின தென்னாட்டுவீரர்களாலும் சத்துருக்கூட்டங்களுக்கு நாசமானது உண்டுபண்ணப்பட்டது. * அப்பா! வெண்மையான குதிரைகளையுடையவனும் வானரக்கொடியையுடையவனுமான பாண்டவனைத் தவிர வேறெந்தமனிதன் யுத்தத்தில் கௌரவர்களை ஜயிக்கச்சக்தியுள்ளவன்? நீயோ தேவர்களுடனும் அஸுரர்களுடனும் மனிதர்

* 'ரணே,' 'யுத்தே' என்னும் சொற்கள் விடப்பட்டன.

களுடனும்சேர்ந்த மூவுலகங்களையும் * யுத்தத்தில் ஜயிக்கச்சக்தியுள்ளவன். அவ்வாறிருக்க, கௌரவஸேனையை ஜயிக்கச்சக்தியுள்ளவனென்பதில் ஸந்தேகமென்ன? புருஷஶ்ரேஷ்டனே! இந்திரனுக்கு ஒப்பானவனாயிருந்தாலும் உன்னைத்தவிர வேறெந்தமனிதன் அரசனைபகதத்தனை ஜயிக்கச்சக்தியுள்ளவன்? பார்த்த! தோஷமற்றவனே? அவ்வாறே, உன்னால்காக்கப்பட்டிருக்கிற இந்தப்பெரும்படையை எல்லாஅரசர்களும் கண்களால்பார்ப்பதறகும் சக்தியுள்ளவர்களாகவில்லை. பார்த்த! அவ்வாறே, உன்னால் எப்பொழுதும் யுத்தத்தில் ரக்ஷிக்கப்பட்டிருக்கிற த்ருஷ்டத்யும்னனாலும் சிகண்டியினாலும் (முறையே) துரோணரும் பீஷ்மரும் கொல்லப்பட்டார்கள். பார்த்த! இந்திரனுக்கு ஒப்பான பராக்கிரமமுள்ளவர்களும் பரதர்களுள்மஹாரதர்களுமான பீஷ்மரையும் த்ரோணரையும் யுத்தரங்கத்தில் யுத்தத்தினால்ஜயிப்பதறகு எவன் சக்தியுள்ளவன்? புருஷஶ்ரேஷ்டனே! வீரர்களும் அஸ்திரங்களில் தேர்ச்சியுடையவர்களும் யுத்தத்தில் எல்லோரையும் திரும்பிவராமலிருக்கும்படி செய்கின்றவர்களும் அக்ஷௌஹிணீஸேனைக்குத் தலைவர்களாயிருப்பவர்களும் கொடுந்தன்மையுள்ளவர்களும் ஒன்றுசேர்ந்திருப்பவர்களும் யுத்தத்தில்கெட்டமதங்கொண்டவர்களுமான சந்தனுபுத்திரரான பீஷ்மரையும் துரோணரையும் கர்ணனையும் கிருபரையும் துரோணபுத்திரரையும் ஸோமதத்தகுமாரனையும் க்ருதவர்மாவையும் ஸிந்துராஜனான ஜயத்ரதனையும் மத்ரராஜனான சல்யனையும் அரசனானதுர்யோதனனையும் உன்னைத்தவிர வேறெந்தமனிதன் இவ்வுலகத்தில் ஜயிக்கவல்லமையுள்ளவன்? குதிரைகளும் ரதங்களும் யானைகளும் நன்கு பிளக்கப்பட்டு, அனேகம் படைவரிசைகள் அழிந்தன. பற்பலநாடுகளிலிருந்துவந்த பொறுமையுள்ளவர்களும் உக்ரமானவர்களுமான க்ஷத்திரியர்களுடைய வரிசைகள் அழிந்தன. பாரத! தாசமீயர்கள் வஸாதிகள் இவர்களின் கூட்டங்கள் நாசமடைந்தன. பாரத! கீழ்நாட்டுவீரர்கள் வாடதானர்கள் கர்ஷிகளானபோஜர்கள் மற்றும்எல்லா அரசர்கள் இவர்களின் கொழுப்புள்ளகுதிரைகளுடனும் யானைகளுடனுங்கூடின சேனையானது உன்னையும் பீமனையும் எதிர்த்து நாசமடைந்தது. சத்துருக்களைத் தவிக்கச்செய்பவனே! துர்யோதனன் நிமித்தமாகக் கௌரவர்களுடன் (கூடினவர்களும்) மிக்ககோபங்கொண்டவர்களும் பரபரப்புள்ளவர்களும் யுத்தத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்களும் பலசாலிகளும் தண்டங்களைக் கையில்கொண்டவர்

* 'ஸமரே' என்னும் சொல் விடப்பட்டது.

களும் உக்கிரர்களும் பயங்கரமான செய்கையையுடையவர்களு மான இந்தத் துஷாரர்களும் யவனர்களும் கசர்களும் தார்வாபி ஸாரர்களும் தரதர்களும் சகர்களும் மாடரர்களும் தங்கணர்களும் ஆந்திரகர்களும் குளிந்தர்களும் உக்கிரமான விக்கிரமமுள்ள கிரா தர்களும் மிலேச்சர்களும் மலைநாட்டார்களும் கடற்கரையினருகி லிருக்கிற தேசவாஸிகளும் உன்னைத்தவிர வேறுஒருவனாலும் யுத் தத்தில் ஜயிக்கப்படத்தகாதவர்கள். அடங்காததும் அணிவகுக்கப்பட் டிருக்கிறதும் பெரிதுமான துர்யோதனனுடைய படையைக் கண்டு நீ (உன்ஸேனைக்கு) ரக்ஷகனாகாமற் போவாயாகில் எந்த மனிதன் (கௌரவஸேனையை) எதிர்த்துச் செல்வான்? விபுவே! உன்னால் காக்கப்பட்டிருக்கின்றவர்களும் கோபங் கொண்டவர்களுமான பாண்டவவீரர்களால் ஸமுத்திரம்போல் கொந்தளிக்கின்றதும் புழு தியினால் நன்றாக மூடப்பட்டிருக்கின்றதுமான அந்தக் கௌரவ ஸேனை பிளந்து நாசம்பண்ணப்பட்டது. மஹாபலசாலியும் மகத தேசாதிபதியுமான ஜயத்ஸேனன் யுத்தத்தில் அபிமன்யுவினால் கொல்லப்பட்டான். இன்றோடு ஏழுநாள்கள் சென்றன. பிறகு, பீமன், அந்த அரசனுடையஸேனையிலுள்ள பயங்கரமானசெய்கை களுடன்கூடின பதினாயிரம் யானைகளைக் கதாயுதத்தினால் கொன் றான். அவ்வாறே, நூற்றுக்கணக்கான மற்றயானைகளும் ரதங்களும் பலத்தினால்அடிக்கப்பட்டன. பாண்டவ! பார்த்த! ஆதலால், இவ்வாறு மஹாபயங்கரமாகநடந்துவருகிறயுத்தத்தில் பீமஸேனனையும் உன்னை யும்அணுகிக் கௌரவர்கள் குதிரைகளோடும் ரதங்களோடும் யானைக ளோடும் கூடினவர்களாக இவ்விடத்தினின்றும் ம்ருத்யுலோகத்தை அடைந்தார்கள். குந்தீபுத்திர! ஐயா! பாண்டவர்களால் அந்தப்படை முகமானது அவ்வாறு நாசஞ்செய்யப்படவே, பீஷ்மர் உக்கிரமானசர மாரிகளைப்பிரயோகித்தார். உத்தமமான அஸ்திரங்களை அறிந்தவரான அந்தப்பீஷ்மர் சேதிதேசத்துவீரர்களையும் காசிதேசத்துவீரர்களையும் பாஞ்சாலர்களையும் கரூசர்களையும் மச்சதேசத்தார்களையும் கேகயர்களை யும் அம்புகளால்மூடி நாசஞ்செய்தார். அவருடையவில்லினின்று விடுபட்டவைகளும் பிறருடைய தேகங்களைப்பிளக்கின்றவைகளும் ஸ்வர்ணமயமான கட்டுக்களுடன் கூடியவைகளும் நேராகச்செல்ப வைகளுமான பாணங்களால் ஆகாசமானது நிறைக்கப்பட்டதாயிற்று. அவர் ஒவ்வொருகைக்குத்தினாலேயே, ஒன்றுசேர்ந்திருப்பவர்களும் மிக்க பலசாலிகளுமான லக்ஷம் மனிதர்களையும் யானைகளையும் கொன்று ஆயிரம்ரதங்களையும் அழித்தன. அந்தப்பீஷ்மர் குற்ற

முள்ள ஒன்பதுகதிகளைவிட்டு யுத்தத்தில் பாணங்களைப் பிர யோகித்தார். அவ்வம்புகள் பத்தாவதுகதியுடன் சென்று குதிரை களையும் யானைகளையும் தேர்களையும் கொன்றன. உன்னுடைய படையைப் பத்துநாள் அழித்த பீஷ்மரால், ரதங்களுடைய நடு விடங்கள் சூன்யமாக்கப்பட்டன ; யானைகளும் குதிரைகளும் கொல்லப்பட்டன. அரசனே! பீஷ்மர், தெப்பமில்லாதவனாகமுழுகு கின்ற மந்தனான துர்யோதனனைக் கரைஏற்றிவிடவிரும்பி, பத்தாவது நாள்வந்தவுடனே,கோரமானபராக்கிரமத்தை வெளியிட்டு யுத்தத்தில் ருத்திரருக்கும் விஷ்ணுவுக்கும் ஸமமான தமதுரூபத்தைக் காண்பித் துக்கொண்டு பாண்டவர்களுடைய படைகளில்பிரவேசித்து அரசர் களையும் சைத்யர்களையும் பாஞ்சாலர்களையும் கேகயர்களையும் வதஞ் செய்துகொண்டு ரதங்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் நெருங்கியிருக்கிற பாண்டவஸேனையை நாசஞ்செய்தார். வெம்பு கின்றசூரியன்போல அவ்வாறு யுத்தத்தில் ஸஞ்சரிக்கின்றவரும் யுத் தத்தில்ஜயத்தினால் பிரகாசிக்கின்றவருமான அந்தப்பீஷ்மரைஉத்தம மான ஆயுதங்களைக் கையில்கொண்டவர்களான ஆயிரம்கோடிக்கணக் கான காலாட்களும் ஸ்ருஞ்சயர்களும் அவ்வாறே மற்றஅரசர்களும் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பீஷ்மர் அதிகமானஎல்லா முயற்சியுடனும் பாண்டவர்களை எதிர்த்துச்சென்றார். அந்தப்பீஷ் மரோ யுத்தத்தில் ஒருவராகவேயிருந்துக்கொண்டு பாண்டவர்களை யும் ஸ்ருஞ்சயர்களையும் ஓடும்படிசெய்து யுத்தத்தில் நிகரில்லாத வீரத் தன்மையை அடைந்தார். பெரிதானவிரதத்தையுடையவரும் புருஷ ஶ்ரேஷ்டருமான அந்தப் பீஷ்மரைச் சிகண்டி உன்னால் காக்கப் பட்டவனாக எதிர்த்துப் படிந்தகணுக்களுடன்கூடின அம்புகளால் வதம்செய்தான். பிதாமஹரான அப்படிப்பட்ட இந்தப் பீஷ்மர், இந் திரனை எதிர்த்து விருத்ரன் வீழ்ந்ததுபோலப் புருஷ ஶ்ரேஷ்டனான உன்னை எதிர்த்து விழுந்து சரதல்பத்தில் படுத்திருக்கிறார். மஹா ரதரும் அந்தகனுக்கொப்பானவரும் உக்ரரூபியுமான துரோணர் பகைவர்படையை ஐந்துநாள் அழித்து உடைக்கமுடியாத வ்யூ ஹத்தை ஏற்படுத்தி மஹாரதர்களைக் கீழே வீழ்த்தி யுத்தத்தில் ஜயத்ரதனைக் காப்பாற்றி * ராத்ரியுத்தத்தில பிரஜைகளை எதிர்த்தார். வீரரும் பிரதாபசாலியுமான அந்தப் பாரத்வாஜர் யுத்தவீரர்களை அம்புகளால்எரித்து த்ருஷ்டத்யும்னனைஎதிர்த்து உத்தமமானகதியை அடைந்தார். நீ யுத்தத்தில் கர்ணன்முதலானரதிகர்களை இப்பொழுது

* உக்ர: என்னும் சொல்விடப்பட்டது.

தடுக்காமற்போயிருப்பாயாகில் துரோணர் யுத்தத்தில் நாசமடைந் திருக்கவேமாட்டார். உன்னாலன்றோ தார்த்தராஷ்டிரனுடைய சேனை முழுவதும் தடுக்கப்பட்டது? தனஞ்சய! அதனால், துரோணர் யுத்தத்தில் பார்ஷதனால் கொல்லப்பட்டார். பார்த்த! ஜயத்ரத னுடைய வதத்தைப்பற்றி உன்னால் செய்யப்பட்டதுபோன்ற காரி யத்தை உன்னைத்தவிர மனிதனென்று சொல்பவன் எவன் யுத்தத் தில் செய்யச்சக்தியுள்ளவன்? உன்னால் அதிக பலமுள்ள அஸ்திர தேஜஸினால் பெருஞ்சேனையைத்தடுத்துச் சூரர்களான அரசர்களையும் கொன்று அரசனான ஸைந்தவன் கொல்லப்பட்டான். அரசர்கள் ஸிந்துராஜனுடைய வதத்தை ஆச்சரியமென்று எண்ணுகிறார் கள். அந்தச்செய்கை உன்னிடத்தினின்று (உண்டாயிற்றென் பது) ஆச்சர்யமன்று. பார்த்த! நீ மஹாரதனன்றோ? பாரத! க்ஷத்திரிய ஜாதியானது யுத்தத்தில் உன்னை எதிர்த்து ஒரேநாளில் நாசமடையுமானால் அது தகுந்ததென்று நான் எண்ணுவேன். இவ்வாறு என்னுடைய எண்ணம். பார்த்த! கோரமான அப் படிப்பட்ட இந்தத்துர்யோதனனுடைய சேனையானது, யுத்தத்தில் பெரும்பான்மையாக எல்லாச் சிறந்த பொருளும் நாசஞ்செய்யப் பட்டதாயிற்று. அவ்வாறே, பீஷ்மத்ரோணர்கள் கொல்லப்பட் டார்கள். சிதற அடிக்கப்பட்ட சிறந்த யுத்தவீரர்களால் நிறைந் ததும் குதிரைகளும் தேர்களும் யானைகளும் அழிக்கப்பட்டதுமான பாரதஸேனையானது சூரியனாலும் சந்திரனாலும் நக்ஷத்திரங்களா லும் விடுபட்டிருக்கின்ற ஆகாயம்போல விளங்குகிறது. பார்த்த! பயங்கரமான விக்ரமமுள்ளவனே! இந்தச்சேனையானது தேவராஜ னுடைய பராக்கிரமங்களால் பெரிதான அஸுரர்படை அழிக்கப் பட்டதுபோல யுத்தத்தில் அழிக்கப்பட்டதன்றோ? அந்தக் கௌரவ வீரர்களுள் மாண்டவர்கள்போக மிகுந்திருப்பவர்கள் த்ரோணபுத்ரர், க்ருதவர்மா, கர்ணன், சல்யன், கிருபர் ஆகிய ஐந்துமஹாரதர்களே. புருஷர்களுள்சிறந்தவனே! அந்த ஐந்துமஹாரதர்களையும் நீ இப்பொ ழுது கொன்று பகைவர்களழியப்பெற்றவனாகத் தீவுகளுடனும் பட் டணங்களுடனுங்கூடின பூமியை அரசருக்கு அளிப்பாயாக. ஆகாசம், ஜலம், பாதாளம், பர்வதங்கள், பெருங்காடுகள் இவைகளுடன்கூடின பூமியை இப்பொழுது அளவுகடந்த வீர்யமுள்ளவரான யுதிஷ்டிர ருக்குக் கொடு. முற்காலத்தில் தைத்யர்களையும் தானவர்களையும் விஷ்ணு கொன்றதுபோலக் (கௌரவர்களைக்) கொன்று, அவர் இந் திரனுக்குப் பூமியை அளித்ததுபோல் இந்தப்பூமியை அரசரான

யுதிஷ்டிரருக்குக் கொடுப்பாயாக. விஷ்ணுவினால் அஸுரர்கள் கொல்லப்பட்டகாலத்தில் தேவதைகள் ஸந்தோஷமடைந்ததுபோல உன்னால் பகைவர்கள் கொல்லப்பட்டிருக்குந்தருணத்தில் பாஞ்சாலர்கள் இப்பொழுது ஸந்தோஷத்தை அடையட்டும். செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையாய்! மனிதர்களுள் சிறந்தவரும் ஆசார்யருமான துரோணரைக் கௌரவிக்கின்ற உனக்கு அச்வத்தாமாவினிடத்திலும் ஆசார்யர் என்கிற கௌரவத்தினால் கிருபரிடத்திலும் கருணையிருந்தாலும், மிக்கமரியாதைக்குரியவர்களான உன் பந்துக்களையும் உன் தாய்வழி உறவினர்களையும் பூஜிக்கின்ற நீ க்ருதவர்மாவை எதிர்த்து யமனுடைய வீட்டுக்கு அனுப்பாமலிருந்தாலும், மாதாவுக்கு ஸஹோதரனும் மத்ரராஜனுமான சல்யனை எதிர்த்து நீ தயையுள்ளவனாகிக் கொல்லவிருப்பமற்றவனாயிருந்தாலும், உன்னுடைய இந்தக்கார்யங்களில் ஒருகார்யமும் நல்லகாரியமாக இல்லை. நாமும் அனுமதி கொடுக்கிறோம். இந்தக்கார்யங்களில் ஒரு தோஷமும் இல்லை. புருஷர்களுள் சிறந்தவனே! பார்த்த! பாண்டவர்களைப்பற்றிப் பாபபுத்தியுள்ளவனும் மிக்க அற்பனுமான இந்தக்கர்ணனைக் கூர்மையுள்ள பாணங்களால் இப்பொழுது வதஞ்செய். தோஷமற்றவனே! துர்யோதனன் இரவில் புத்திரர்களுடனிருப்பவளான உன்தாயாரை (அரக்குமாளிகையில்) எரிக்கும் விஷயத்திலும் சூதாட்டத்திலும் உங்கள்விஷயத்தில் பிரவிர்த்தித்தது (முதலிய) அந்த எல்லாக்கார்யங்களுக்கும் துராத்மாவான கர்ணனே காரணமென்பது நிச்சயம். பாரத! துராத்மாவான கர்ணன் மிக்க கெட்டபுத்தியுள்ளவனான துர்யோதனனை ஊக்கமூட்டுகிறான். யுத்தத்தில் பெருமைபேசிக்கொள்ளுகிறான். அவனை இப்பொழுது கொல். அர்ஜுன! திருதராஷ்டிரனுடைய புத்திரனான துர்யோதனன் உங்கள்விஷயத்தில் செய்த கொடியசெய்கைகளெல்லாவற்றுக்கும் இப்பொழுது துர்ப்புத்தியுள்ளவனான கர்ணனே மூலம். துர்யோதனன் எப்பொழுதும் கர்ணனை ரக்ஷகனாக நினைக்கிறானன்றோ? அதனால், என்னைக்கூடப் பராக்கிரமத்தினால் அடக்குவதற்கு விருப்பமுள்ளவனாயிருக்கிறான். கர்ணன் எல்லாப்பாண்டவர்களையும் யுத்தத்தில் பாணங்களால் நாசஞ்செய்யப்போகிறானென்று அரசர்களும் துரியோதனனுமாகிய இருவகையாருக்கும் எண்ணம் உறுதியாக இருக்கிறது. குந்தீபுத்திர! துர்யோதனன் உன்னுடைய பலத்தை அறிந்தவனாயிருந்தும் கர்ணனைத்துணையாகக்கொண்டு உன்னோடு சண்டைசெய்ய விரும்புகிறான். கர்ணன், 'மஹாயுத்தத்தில்

ஒன்றுசேர்ந்திருக்கின்ற பார்த்தர்களையும் தாசார்ஹனனவாஸு தேவனையும் நான் ஜயிப்பேன்' என்று நித்யம் பிதற்றுகிறான். பல்குன! கர்ணன் யுத்தத்தில் துள்ளுகிறான். அவனை இப்பொழுது வதஞ்செய். சிறந்த பிரதாபசாலியான துர்யோதனன் கர்ணனை ஆதாரமாகக்கொண்டு உங்களிடங்களில் பாவமானசெய்கையை ஸபையில் முன்பு நித்யம் செய்துவந்தான். மேலும், தார்த்தராஷ்ட்ரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மஹாரதர்களான ஆறு சூரர்களால் சூழப்பட்டவனும் சூரனும் பகைவர்களால் ஜயிக்கக்கூடாதவனும் பெரிய அம்புகளால் வீரர்களான துரோணர், அஸ்வத்தாமா, கிருபர் இவர்களை நடுங்கச்செய்கிறவனும் சேனைகளை அழிக்கின்றவனும் மஹாரதர்களை நன்றாக அடிக்கின்றவனும் மனிதர்களையும் குதிரைகளையும் யானைகளையும் யமனுடைய வீட்டுக்கு அனுப்புகிறவனும் பாணங்களால் பகைவர்களுடையபடையை எதிர்த்துக்கொண்டு வருகின்றவனும் ஸுபத்ராபுத்திரனுமான அபிமன்யுவைக் கண்டு யுத்தத்தில்பயந்து யானைகள் வீரர்களை இழந்தவைகளாகவும் மஹாரதர்கள் ரதங்களை இழந்தவர்களாகவும் திசைகளில் ஓடினார்கள். குதிரைகளை உயிரை இழந்தவைகளாகவும் காலாட்களை ஆயுதங்களையும் உயிரையும் இழந்தவர்களாகவும் செய்கின்றவனும் காளையின் திமில் போன்ற தோளையுடையவனும் கௌரவர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் கீர்த்தியை யுண்டுபண்ணுகின்றவனும் ஸுபத்ராதேவியின் புதல்வனுமான அபிமன்யுவின்விஷயத்தில் செய்தது என்னுடைய அவயவங்களை எரிக்கிறது. மித்திர! உன்னிடத்தில் ஸத்யமாகச் சபதம் செய்கிறேன். மிகக் கொடியமனமுள்ள பிரபுவான கர்ணன் அப்பொழுது இருந்திருப்பானுகில் கொல்லப்பட்டிருப்பான். யுத்தத்தில் அபிமன்யுவினுடைய முன்னிலையில் கர்ணன் நிற்கச்சக்தியற்றவனன்றோ? கர்ணன் ஸுபத்ராபுத்திரனுடையபாணங்களால் பிளக்கப்பட்டும் பிரஜ்ஞையற்றும் ரக்தத்தினுல் நனைக்கப்பட்டும் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் கோபத்தினுல் நன்றாக ஜ்வலித்துக்கொண்டும் பாணங்களால் பீடிக்கப்பட்டும் திரும்பி ஓடுபவனானான். பாரத! அந்தக்கர்ணன் யுத்தத்தில் ஆயுதவீழ்ச்சிகளால் உண்டுபண்ணப்பட்ட * களைப்பையுடையவனாகவும் உத்ஸாஹத்தை இழந்தவனாகவும் ஓடுவதில் ஊக்கமுள்ளவனாகவும் தைர்யத்தை இழந்து மனத்தளர்ச்சி உடையனாகவும் நின்றான். பார்த்த! அந்தக்கர்ணன் அபிமன்யுவினுடைய மஹாயுத்தத்தில் துர்யோதனனைப் போர்க்களத்தில் கண்டு

* வேறுபாடம்.

அடிக்கடி வெட்கமடைந்தனவகி அந்த யுத்தகளத்தினின்றும் விலகிச் செல்லவில்லை.அவன் துரோணரைக்கண்டு அபிமன்யுவினுடைய வதோபாயத்தை ,வினவினன். துரோணருடைய கொடிய வசனத்தைக்கேட்டு, பிறகு, வில்லை அறுத்தான். பிறகு, அந்தக்கர்ணனல் அபிமன்யுவின் ஆயுதம் அறுக்கப்பட்டதைக்கண்டு, ஐந்து மஹாரதர்களும், வஞ்சனையில் பண்டிதனும் கெட்ட எண்ணமுள்ளவனும் உரத்தஅட்டஹாஸத்துடன்கூடியவனுமான அந்தக்கர்ணனும், அரசனை துர்யோதனனும் அவனைச் சரமாரிகளால் (பரலோகத்துக்கு) அனுப்பினர்கள். கர்ணன், ஸபையில் பாண்டவர்களும் கௌரவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே (அவர்களுக்கு) முன்னிலையில் திரௌபதியைப்பார்த்து, 'கிருஷ்ணையே! பாண்டவர்கள் நசித்துவிட்டார்கள்; சாஸ்வதமான நரகத்தை அடைந்துவிட்டார்கள். பருத்தநிதம்பங்களை யுடையவளே! மெதுவாகப் பேசுகிறவளே! வேறு பர்த்தாவை வரித்துக்கொள். தாஸியாயிருக்கிற இப்படிப்பட்ட நீ திருதராஷ்டிரருடைய அரண்மனையில் பிரவேசிப்பாயாக. இமைமயிர்கள் கோணலாயிருக்கும் கண்களையுடையவளே! உனக்குப் பதிகள் இல்லை. கிருஷ்ணையே! எவ்விதத்திலும் பாண்டவர்கள் உனக்கு (நாதர்கள்) ஆகப்போகிறதில்லை. பாஞ்சாலி! நீ அடிமையின்மனைவி. மங்களகரியே! நீ ஸ்வயமே அடிமையாயுமிருக்கிருய். இப்பொழுது துர்யோதனராஜன் பூமியில் அரசனக எண்ணப்பட்டான். எல்லாஅரசர்களும் இவனுடைய யோகக்ஷேமத்தைப் பார்க்கின்றனர்கள். கல்யாணி! இப்பொழுது பார். பாண்டவர்கள் தார்த்தராஷ்டிரனுடைய தேஜஸினல், ஸமமாக உட்கார்ந்துகொண்டு ஒருவரைஒருவர் பார்க்கின்றனர்கள். (ஆதலால்) இவர்கள் எள்ளுப்பதர்களேயென்பது வெளிப்படை; நரகத்திலும் அமிழ்த்தப்பட்டுவிட்டார்கள். வேலைக்காரர்கள்போலக் கௌரவ ராஜனை ஸ்தோத்திரம் செய்யப்போகிறர்கள்' என்று குரூரமானவசனத்தை உரைத்தான். தனஞ்சய! பாபத்தில் மனமுள்ளவனும் அவ்வாறே அதிக கெட்டபுத்தியையுடையவனும் பாவியுமான கர்ணன் நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பாவமான வசனத்தை உரைத்தான். பொன்னல் சித்திரிக்கப்பட்டவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகள் இந்தக்கர்ணனுடைய உயிரை நாசஞ்செய்துகொண்டு இந்தப்பாவியினுடைய அந்த வாக்கியத்தைத் தணிக்கப்போகின்றன. யுத்தத்தில் இப்பொழுது உன்னல் விழுங்கப்பட்டிருக்கிற கர்ணனை, ஸ்வர்க்கத்தினின்று கீழே இறங்குவதில்

முயற்சியுள்ளவனாக ஸ்வர்க்கவாயிலை அடைந்திருக்கிற ஒருவனைப் போலக் கௌரவர்கள் பார்க்கட்டும். கௌரவயுத்தவீரர்கள் இப்பொழுது உன்னுடையவீர்யத்தை யுத்தத்தில் பார்க்கட்டும். பார்த்த! ஸூதபுத்திரன் கொல்லப்பட்ட பிறகு, உன்னை மஹாரதனாக அறியட்டும். ஐயா! இப்பொழுது *காகங்களுடைய கூட்டங்களும் *வாயஸங்களும் கழுகுகளும் நரிகளும் ஸூதபுத்திரனுடைய அவயங்களை இழுக்கட்டும். இப்பொழுது உன்னால் யுத்தத்தில் அடித்துத்தள்ளப் பட்டவனும் கொல்லப்பட்டவனுமான கர்ணன் கௌரவர்களுக்குச் சோகத்தையும் பாண்டவர்களுக்கு ஸந்தோஷத்தையும் உண்டுபண்ணட்டும். விருத்ரனுடைய வதமானபிறகு, எல்லாத்தேவர்களும் இந்திரனைப் புகழ்ந்ததுபோல இப்பொழுது பாண்டவர்களோடு சேர்ந்து பாஞ்சாலர்கள் உன்னைப் † புகழட்டும். பார்த்த! இப்போழுது கர்ணனை யுத்தத்தில் கொன்று உத்தமமான கீர்த்தியைப்பெற்றுச் சோகத்தையும் ஜ்வரத்தையும் விட்டவனும் பந்துக்களால் புகழப் பட்டவனும் ஆகக்கடவாய். பிரபுவான விஷ்ணு நரஸிம்மசரீரத்தை எடுத்து திதிபுத்ரனும் மஹாஸுரனுமான ஹிரண்யகசிபுவைக் கொன்றதுபோல நீயும் கோரமான மஹாசரீரத்தை எடுத்து யுத்தத்தில் ராதாபுத்ரனைக் கொல். மிக்க தோள்வலியமைந்தவனே! உன்னைச் சேர்ந்தவர்களைப் பயத்தினின்று காப்பாயாக. ஆ! ஆ! என்று அலறுபவனும்எளிமையுற்றவனும்வியஸனமுற்றவனும்உன்னுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டவனும் பூமியில் விழுகின்றவனுமான கர்ணனை அரசர்கள் ‡ பார்க்கட்டும். தன்னுடைய ரக்தத்தில் மூழ்கினவனும் பூமியில் விழுந்து கிடப்பவனும் புரட்டி அடித்துத் தள்ளப்பட்ட ஆயுதங்களையுடையவனுமான கர்ணனை இப்பொழுது பந்துக்கள் பார்க்கட்டும். இப்பொழுது காண்டீவத்தினால் பிரயோகிக்கப்படும் பாணங்களால் (அடிக்கப்பட்டு) § பெரிதான அந்தக்கவசமானது ஆகாயத்தினின்று சந்திரன்சிதறுவதுபோல் ரதத்தின்மத்தியில் சிதறட்டும். மஹாவேகமுள்ளவைகளாக வந்துவிழுகின்ற அந்தக்கர்ணனுடைய பாணங்கள் இப்பொழுது உன்னுடையபாணங்களால் விரைவாக முனை அறுக்கப்பட்டவைகளாகப் பூமியில் சிதறட்டும். பரதர்களுள்சிறந்தவனே! உன்னால் இப்பொழுது அந்தக்கர்ணனுடையவிக்ரமமானது நாசஞ்செய்யப்பட்டபிறகு, எல்லா அரசர்களும், திரும்பி ஓடுகின்றவர்களும் உயிரை இழந்தவர்களுமாகட்

* காகபேதங்கள். † வேறுபாடம்.

‡ 'கர்ணம்' என்னும் சொல்விடப்பட்டது. § வேறுபாடம்.

டும்; கர்ணன் அவ்வாறு காலஞ்சென்றபிறகு, எல்லாஉலகங்களி லுமுள்ள வில்லாளிகளுள்ளும் அந்தக்கர்ணனைச் சிறந்தவனென்று எண்ணுகின்ற கௌரவர்களும் திசைகளைநோக்கிச்செல்லட்டும். த்ருத ராஷ்டிரகுமாரனான அந்தத்துரியோதனனும் இப்பொழுது பயத்தி னால் பெரும்படையை இழந்து பயத்தினால் மனநிலை தவறினவனாகித் தன் வீட்டைநோக்கி ஓடட்டும். அவ்வாறே, ஜனங்களுக்குநாதனும் பூமிக்கு நாதனுமான த்ருதராஷ்டிரன், கர்ணன் நாசஞ்செய்யப்பட்ட தைக்கேட்டு இப்பொழுது க்ஷணத்தில் ப்ரஜ்ஞையை இழந்து பூமி யில் விழட்டும். பார்த்த! எல்லா யுத்தவீரர்களும் இப்பொழுது உன்னுடைய பராக்கிரமத்தை அறியட்டும். பாரத! பர தர்களுள், சிறந்தவனே! ஸபையின்மத்தியில் உன்விஷயத்தில் துர்யோதனன் உரைத்தகடுஞ்சொற்களையும் கெட்டஎண்ணமுள்ள அவன் உன்விஷயத்தில்செய்த வேறுபாவச்செயல்களையும் உன் னுடைய சரங்கள் இப்பொழுது நாசஞ்செய்யட்டும். பகைவர்களைத் தவிக்கச்செய்பவனே! கர்ஜிக்கின்றவனும் அளவற்றஆண்மையுள் ளவனுமான சிறந்த சத்துருவை யுத்தத்தில்கொன்று கிருஷ்ணை யினுடைய க்லேசத்தைத் தணி. புருஷர்களுள் சிறந்தவனே! இப் பொழுது எல்லாப் பக்கத்திலும் உன்னுடையபாணங்களால் அடிக் கப்பட்ட கர்ணன் உன்னை எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவ னாக எண்ணட்டும். பார்த்த! இப்பொழுது கர்ணன் யுத்தத்தில் காண்டீவத்தினின்று வெளிப்பட்டவைகளும் மேனியில் பாய்ந் திருப்பவைகளுமான பாணங்களை முள்ளம்பன்றியானது முட்களைத் தரிப்பதுபோல ஏற்றுக்கொள்ளட்டும். வீர! ஒருவனாக எல்லாப் பாஞ்சாலர்களையும் தினந்தோறும் நாசஞ்செய்துகொண்டு பாஞ்சால ரதிகர்களுடைய கூட்டத்தில் காலன்போல ஸஞ்சரிக்கிற கர்ணனை அடைந்து மஹாரதர்கள் எவ்வாறுஓடுவார்கள்? சினேகிதர்களிடத்து மிக்க அன்புள்ளவனே! எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவர்களும் பகைவர்களை அடக்கும் திறமையுள்ளவர்களுமான பாஞ்சாலர்கள் கர்ணனிடத்தினின்று பயந்து திரும்பாமலிருப்பார்களாகில், அவர்கள் யுத்தத்தில் அவ்வாறாக அஸ்திரங்களால் ஜ்வலிக்கின்றவரும் எல்லா வில்லாளிகளுள்ளும் சூரராயிருப்பவரும் (சத்துருக்களை) எரிக்கின்ற வரும் (வீர்யத்தினால்) மிக்கமேன்மைபெற்றவரும் (ஒருவராலும்) அவமதிக்கத் தகாதவரும் சத்துருவுமான அந்தத்துரோணரைக்கூட மித்திரகார்யத்துக்காக எதிர்த்து விரைவாகப்போர்புரிந்து ஜயிப்பதற் குச் சக்தியுள்ளவர்களாவார்கள். நெருப்பானது விட்டிற்பூச்சிகளு

டைய உயிரைவாங்குவதுபோலச் சூரனுனகர்ணன், எதிர்த்துவருகின் றவர்களும் பலசாலிகளுமான அந்தப்பாஞ்சாலர்களுடைய உயிர்களை அம்புகளால் வாங்கினன். இதோ பாஞ்சாலர்கள் ஓடுகிருர்கள்; நிச்சயமாகப் போர்வீரர்களால் துரத்தியடிக்கப்படுகின்ருர்கள். பரதர் களில் சிறந்தவனே! கர்ணனுல் அவ்வாறு செய்யப்படிருக்கிறவர் களைப் பார்; பார். மிக்கபாகுபலமுள்ளவனே! நன்ருகவிருத்தியடை கின்றவர்களும் மித்திரனுக்காக உயிரை விடுகின்றவர்களுமான அந்தச் சூரர்களை நெருப்புக்கொப்பான கர்ணனுடைய அஸ்தி ரத்தினின்று மீட்சியடையச்செய். எவனை அடுத்துப் பெரிய சேனையானது தன் ஆற்றலால் விளங்குகிறதோ அந்தக் கர்ண னுல் சிஷ்யஸ்ரேஷ்டரான பார்க்கவராமரிடத்தினின்று அப்பொழுது அடையப்பட்டதும் எல்லாச் சேனைகளையும் தவிக்கச்செய்கின்ற தும் கோரரூபமுள்ளதும் பயங்கரமானதுமான அஸ்திரத்தினு டைய கொடிய உருவமானது வெளிப்படுத்தப்படுகின்றது. பிரபு வே! யுத்தத்தில் கர்ணனுடைய வில்லினின்று விடுபடுகின்ற இந்தப் பாணங்கள் ஒளியினுல் சத்துரு ஜனங்களை நாசஞ்செய்துகொண்டு ஸஞ்சரிக்கின்றன. ஐயா! மஹாத்மாக்களாலும் எவ்விதத்தினுலும் தடுக்க முடியாததான கர்ணனுடைய அஸ்திரத்தை யுத்தத்தில் அடைந்து இந்தப் பாஞ்சாலர்கள் சுழலுகின்ருர்கள்; வேகமாக ஓடவும் ஓடுகின்ருர்கள். கர்ணனைஜயித்தவனும் உறுதியானகோப முள்ளவனுமான இந்தப் பீமன் நான்குபக்கத்திலும் ஸ்ருஞ்சயர்களால் சூழப்பட்டவனுகக் கூர்மையுள்ள பாணங்களால் பீடிக்கப்படுகிருன். பாரத! ம்ருத்யுவானகர்ணன் உபேக்ஷைபண்ணப்படுவனுகில், ரோக மானது தேகத்தை அழிப்பதுபோலப் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர் களையும் பாண்டவர்களையும் எரிப்பான். யுதிஷ்டிரருடைய சேனையில் ராதேயனை எதிர்த்து க்ஷேமமுள்ளவனுக வீட்டுக்குத் திரும்பிவரக் கூடிய யுத்தவீரன் உன்னைத்தவிர வேறு ஒருவனையும் நான் காண வில்லை. பரதர்களுள் சிறந்தவனே! பார்த்த! அப்படிப்பட்ட கர் ணனைக் கூர்மையுள்ள பாணங்களால் நீ இப்பொழுது கொன்று செய்யப்பட்ட பிரதிஜ்ஞையை நிறைவேற்றிக் கீர்த்தியை அடைவா யாக. நீயல்லவோ அரசர்களுடன் கர்ணனை யுத்தத்தில் ஜயிக்கச்சக்தி யுள்ளவன்? யுத்தஞ்செய்பவர்களுள் சிறந்தவனே! வேறுஒருவனும் யுத்தத்தில் ஜயிக்கச் சக்தியுள்ளவனுகான். இது ஸத்யமென்று உனக்குச் சொல்லுகிறேன். பார்த்த! நரோத்தம! இந்தப் பெரிய கார்யத்தைச்செய்து மஹாரதனை கர்ணனைக்கொன்று கிருதார்த்த

ளுகவும் கருதியபயனையடைந்தவனுகவும் ஸுகியாகவும் இருப்பா யாக' என்று சொன்னார்.

---

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

(அர்ஜுனன் கிருஷ்ணனிடம் கர்ணனுடைய வதத்திற்குப்பின் நேரக்கூடியவற்றைக் கூறி அவனுடைய வதத்தைப் பிரதிஜ்ஞை செய்தது.)

பாரதரே! அந்த அர்ஜுனன் கேசவருடைய வசனததைக் கேட்டு க்ஷணததுக்குள் சோகம் நீங்கி மிககமனக்களிபபுள்ளவனு னன். பிறகு, நாண்கயிறறைததுடைதது விரைவாகக் காண்டீவ மென்கிறவில்லேஉதறிக காணனுடைய நாசததின்பொருட்டுக் கையில தரிததுக் கேசவனைபபார்த்து உரைக்கலானுன். 'கோவிந்தரே! சென்றதையும் நிகழுவதையும் வருவதையும் படைப்பவரான பக வான். பிரஸன்னராயிருககபபெறற எனககு நாதரான உம்மால ஜயம் நிசசயமே. மாதவரே! உம்மைத துணையாககக்கொண்ட நான் ஒன்று சேர்ந்திருக்கின்ற மூவுலகங்களையும் பரலோகததை அடைவிபபேன். மஹாயுததததில காணனைக்கொலவதில யாது ஸம்சயம்? ஜனார்த்தன ரே! பாஞ்சாலர்களுடைய ஸேனைஓடுவதைப பாாக்கிறேன். கர்ணன் யுததததில பயமறறவன்போல ஸஞ்சரிபபதையும் பார்ககிறேன். விருஷ்ணிகுலததில உதிததவரே! இந்திரனுல பெரிய வஜ்ராயுதம் விடப்பட்டதுபோல நான்குபக்கததிலும் ஜவலிககின்ற பார்க்கவா ஸதிரமானது கர்ணனுல விடபபட்டதையும் பார்க்கிறேன். வாஸு தேவரே! இநதக் கர்ணனுடன் யுததததில என்னுல செயயப்படுவ தையன்றோ பூமியுளளவரையில எலலாபபிராணிகளும் சொலலப் போகின்றன. மாதவரே! இபபொழுது காண்டீவததினின்று விடப் படுகின்றவைகளும் பகைவரைக கொலலுகின்றவைகளும் என்னு டைய கையினுல பிரயோகிக்கபபடுகின்றவைகளுமான என்னுடைய விகர்ணமென்னும் அம்புகள் கர்ணனை ம்ருதயுவைஅடையும்படிசெய் யபபோகின்றன அரசனை தருதராஷ்டிரன் எநதபபுததியினுலராஜ் யததுக்குத தகாதவனுன் துரியோதனனை ராஜயததில அபிஷேகஞ் செய்விததாஞே அந்தத தனது புததியை இப்பொழுது இகழ்ந்து கொளளபபோகிறுன். மஹாபாகுபலமுள்ளவரே! த்ருதராஷ்டிரன் இப்பொழுது அரசாட்சியினின்றும் ஸுகததினின்றும் ஐஸ்வர்யத்தி னின்றும் ராஜயததினின்றும் பட்டணத்தினினறும் அவவாறே புத்

திரர்களிடத்தினின்றும் விடுபடப்போகிறான். கோவிந்தரே! எவன் நற்குணமுள்ளவனை விட்டுக் குணமில்லாதவனைத் தலைவனாகச் செய்கிறானோ அவன் சீக்கிரமாக நாசம் வரும்போது நெடுங்காலம் துக்கிக்கிறான். பகைவர்களுடைய கர்வத்தையழிப்பவரே!, ஜனார்த்தனரே! புஷ்பத்தைக்கண்டு பழத்தில் பேராவலுள்ள மூடனான ஒரு மனிதன் பெரிய மாந்தோப்பை வெட்டிப் பலாசவிருக்ஷங்களைத் தண்ணீர் வார்த்து வளர்ப்பதில புத்தியைச்செலுத்திப் பின்பு பழத்தைக்கண்டு எவ்வாறு துக்கப்படுவானோ அவ்வாறே புஷ்பத்தைக்கண்டு பேராவலுற்ற த்ருதராஷ்டிரனுக்கு இந்தப்பலத்தைக்கண்டு அதிகமான துக்கம் உண்டாகப்போகிறது. ஸூதபுத்திரன் கொல்லப்பட்டால், பிரபுவான திருதராஷ்டிரன் இப்பொழுது ஆசையை இழந்தவனாவான். இப்பொழுது கர்ணன் கொல்லப்படுவானாகில் துர்யோதனன் ராஜ்யத்தினின்றும் தன் உயிரினின்றும் ஆசையை இழந்தவனாவான். ஸத்யமாக உமக்குச் சொல்லுகிறேன். இப்பொழுது என்னால் பாணங்களால் கர்ணன் துண்டுதுண்டாகச்செய்யப்பட்டதைக்கண்டு ஜனேச்வரனான திருதராஷ்டிரன் ஸமாதானத்தைப்பற்றிய உம்முடைய வாக்கியங்களை நினைக்கட்டும். கேசவரே! இப்பொழுது அந்தச்சகுனி அம்புகளைச் சூதாட்டமாகவும் காண்டீவத்தை பாச்சிகையாகவும் என் ரதத்தைக் காய்களை வைக்கும் பலகையாகவும் அறியட்டும். கோவிந்தரே! இப்பொழுது நான் கூர்மையுள்ள பாணங்களால் கர்ணனைக்கொன்று குந்தியின்புதல்வரானயுதிஷ்டிரராஜருடைய திடமான தூக்கமில்லாமையைப் போக்கப்போகிறேன். இப்பொழுது அரசரான குந்தீபுத்திரர் என்னால் ஸூதபுத்திரன்கொல்லப்பட்டவுடனே, மிக்க மனக்களிப்புற்றவராகவும் ப்ரீதியுள்ளவராகவும் நெடுங்காலம் ஸுகத்தைஅடையப்போகிறார். கேசவரே! இப்பொழுதுகர்ணனைஉயிரினின்று நழுவும்படி செய்யக்கூடியதும் (பகைவர்களால்) திருப்பியடிக்கமுடியாததும் ஒப்பற்றதுமான ஓர் அம்பை இந்த யுத்தத்தில் பிரயோகிக்கப்போகிறேன். மதுஸூதனரே! என்னைக் கொல்லும் விஷயத்தில் 'பல்குனனை நான் கொல்லும வரையில் என் இருகால்களையும் கழுவுவதில்லை' என்று விரதம் பூண்டவனும் துராத்மாவும் பாவியுமான கர்ணனுடைய விரதத்தைப் பொய்யாகச்செய்து படிந்த கணுக்களுள்ள பாணங்களால் அவனுடைய சரீரத்தை ரதத்தினின்று கீழே தள்ளப்போகிறேன். எவன் பூமியில் வேறு ஒரு மனிதனை யுத்தத்தில் ஸமர்த்தனென்று ஒப்புக்கொள்ளுகிறதில்லையோ அந்தக் கர்ணனுடைய இரத்தத்தை இப்பொழுது பூமி

குடிக்கப்போகிறது. ஸூதபுத்திரனான கர்ணன் தன்குணங்களைப் புகழ்ந்துகொண்டு திருதராஷ்டிரனுடைய ஸபைத்தின்மேல் (த்ரௌபதியை நோக்கி), 'கிருஷ்ணையே! நீ கணவர்களை இழந்தவளாயிருக்கிறாய்' என்று சொல்லிய வசனத்தை என்னுடைய கூர்மையுள்ள பாணங்கள் பொய்யாகச்செய்யப்போகின்றன. (என்னுடைய பாணங்கள்) கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போல அந்தக்கர்ணனுடைய உதிரத்தைக் குடிக்கப்போகின்றன. கைத்தேர்ச்சியுள்ள என்னால் விடப்பட்டவைகளும் மின்னலொளிபோன்ற ஒளிபொருந்தியவைகளும் காண்டீவத்தினின்று விடப்பட்டவைகளுமான நாராசங்கள் கர்ணனுக்கு உத்தமமானகதியைக் கொடுக்கப்போகின்றன. ராதேயன் பாண்டவர்களை நிந்தித்துக்கொண்டு பாஞ்சாலியைப்பற்றி ஸபையின் நடுவில் சொல்லிய கடுஞ்சொற்களை (நினைத்து) இப்பொழுது தாபத்தை அடைவான். 'க்ருஷ்ணையே! இந்தப்பாண்டவர்கள் எள்ளுப்பதர்கள்; வீர்யமில்லாதவர்கள்; ஆண்மையை இழந்தவர்கள்; நான் உங்களைப் பாண்டவர்களிடத்திலிருந்து உண்டான பயத்தினின்று காக்கப்போகிறேன்' என்றும் சொன்னான். 'பாரத! நான் இப்பொழுது புத்திரர்களுடன் கூடினபாண்டவர்களனைவர்களையும் கொல்லப்போகிறேன்' என்று அவன் சொல்லியவசனத்தை என்னுடைய கூரியபாணங்கள் ஸூர்யபுத்திரனும் ஸூதபுத்திரனும் துராத்மாவுமான அவனைக்கொன்று பொய்யாகச்செய்யப்போகின்றன. மதுஸூதனரே! எவனுடைய வீர்யத்தை ஆதாரமாகக் கொண்டு துர்யோதனன் (அகங்காரத்தினால்) மிகுந்த மனத்தையுடையவனாயிருக்கிறானோ அந்தக்கர்ணனை இப்பொழுது நான் யுத்தத்தில் கொல்லப்போகிறேன். கர்ணன் இப்பொழுது கொல்லப்படுவனாகில் அரசனுடன்கூடின தார்த்தராஷ்டிரர்கள் ஸிம்ஹத்தைக்கண்ட மிருகங்கள் பயப்படுவதுபோலப் பயந்து திசைகளை நோக்கி ஓடிவிடுவார்கள். இப்பொழுது புத்திரர்களோடும் நண்பர்களோடும் கர்ணன் என்னால் யுத்தத்தில்கொல்லப்பட்டால் துர்யோதனராஜன் பூமியைப் பார்க்கமாட்டான். அதிகப்பொறாமையுள்ளவனான துர்யோதனன் இப்பொழுது, கர்ணன் கொல்லப்பட்டதைக்கண்டு என்னை யுத்தத்தில் எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவனாக எண்ணட்டும். துர்யோதனன் புத்திரர்களோடும் பௌத்திரர்களோடும் மந்திரிகளோடும் ஸுஹ்ருத்துக்களோடும்கூட மனோரதங்களை இழந்தவனும் பிதாவினுடைய ராஜ்யத்தில் ஆசையற்றவனும் ஆதாரமில்லாதவனுமாவான். இப்பொழுது அரசனானதர்மபுத்திரர் பகைவர்கள் கொல்லப்பெற்றவ

ராவார். இப்பொழுது துர்யோதனன் விளங்குகின்றசெல்வத்தை யும் ராஜ்யத்தையும் இழக்கப்போகிறான். மாதவரே! விகர்த்தன குமாரனான கர்ணனும் பீஷ்மரும் துரோணரும் யுத்தத்தில் கொல் லப்பட்ட பிறகு எந்தச்சேனையானது பிரவேசித்து (அரசனை) *விடு விக்குமோ அந்தச்சேனையானது பயமடைந்துவிட்டது. தர்மராஜ னுடைய புதல்வரான யுதிஷ்டிரரை நண்பர்களும் முன் அறியப் பட்டவர்களான பிராம்மணர்களும் இன்றுமுதல் அரசராக எண்ணி ஆனந்தமடையட்டும். இன்று சூரியகுமாரனான கர்ணன் என்னால் கொல்லப்பட்டானென்பதைக்கேட்டுப் படகங்களோடுகலந்த தேவதா ஸ்தானபூஜையை (ஜனங்கள்) செய்யட்டும். கோவிந்தரே! மிக்க புஜபலமுள்ளவரே! இப்பொழுது கர்ணன் கொல்லப்பட்டால் ஜனங் கள் நெடுநாளாகச் செய்ய உத்தேசித்திருக்கிற தேவதைகளுடைய ஆராதனத்தை விதிப்படி செய்யட்டும். ஹ்ருஷீகேசரே! இப் பொழுது இந்தமனோரதமானது நிறைவேறினவுடன், மாதாவான குந்திதேவியும் திரௌபதியும் விரைவுடன் ஒருவரையொருவர் கட்டிக்கொள்ளட்டும். மாதவரே! இப்பொழுது கர்ணன் கொல்லப் படுவானாகில் குளிர்ந்த கண்ணால் நீர் பாரும்; பாண்டவர்களுள் மூத் தவரான யுதிஷ்டிரரும் பூஜ்யனான விருகோதரனும் பார்க்கட்டும். நான் பெரியோர்களை அபிவாதனஞ்செய்து இளையவர்களால் அபிவாத னஞ்செய்யப்பெற்று இருகைகளாலும் ஆலிங்கனம்செய்து பெரிய கீர்த்தியை அடையப்போகிறேன். வாஸுதேவரே! இப்பொழுது கர்ணன் கொல்லப்பட்டவுடன், தேவர்கள் அர்ஜுனனைப் புகழ்ந்து கொண்டு ஸ்வர்க்கத்தை அடையட்டும். தவத்தையே பொருளா கக்கொண்ட மஹரிஷிகளும் ஒன்றுசேர்ந்து ஸந்தோஷமுள்ளவர்க ளாகச் செல்லட்டும். கிருஷ்ணரே! இரண்டுரதிகர்களுக்கு நேர்ந்த த்வைரதமென்னும் சண்டையில் ஸவ்யஸாசியான என்னால் கொல் லப்பட்ட கர்ணனைப்பார்த்து இப்பொழுது மூவுலகங்களும் என்னு டைய ஆண்மையை அறியட்டும். மாதவரே! இன்று நான் வில்லாளிகளுக்கும் ரதத்துக்கும் பாணங்களுக்கும் காண்டீவமென் கிற வில்லுக்கும் கடனைத்தீர்த்தவனாகப் போகிறேன். வாஸுதேவ ரே! இந்திரன் சம்பரனைக் கொன்றதுபோல யுத்தத்தில் கர்ணனைக் கொன்று பதின்மூன்று வருஷகாலமாகச் சேர்த்துவைக்கப்பட்டிருக் கிற பெருந்துக்கத்தை விலக்கப்போகிறேன். இன்று யுத்தத்தில் கர் ணன் கொல்லப்பட்டால், யுத்தத்தில் மித்திரகார்யத்தில் விருப்பமுற்ற

* வேறுபாடம்.

மஹாரதர்களான ஸோமகர்கள் மேற்கொண்ட நற்காரியம் நிறை வேறினவர்களாக ஸந்தோஷமடையட்டும். மாதவரே! இப்பொழுது ஸாத்யகிக்குப் ப்ரீதியுண்டாகும் விதத்தை நான் அறியேன். நான் யுத்தத்தில் கர்ணனையும் *வெற்றியினால் மேம்பட்டவர்களான அவ னுடைய புத்திரர்களையும் கொன்று பீமனுக்கும் ஸாத்யகிக்கும் நகுல ஸஹதேவர்களுக்கும் வீரனான த்ருஷ்டத்யும்னனுக்கும் சிகண்டிக் கும் பிரீதியைச் செய்யப்போகிறேன். விருஷ்ணிகுலத்தில் உதித்த வரே! ஏகாந்தத்தில் தர்மராஜருக்கு (கர்ணவத) சபதத்தைப் பிரதிஜ் ஞைசெய்தபடி, கர்ணனை மஹாயுத்தத்தில் கொன்று இப்பொழுது கடனாளியாகாமலிருக்கும் தன்மையை அடையப்போகிறேன். கோப முள்ளவனும் கௌரவர்களோடு யுத்தஞ்செய்கின்றவனும் ஸூதபுத் திரனைக் கொல்லுகின்றவனுமான தனஞ்சயனை யுத்தத்தில் (எல்லோ ரும்) இன்று பார்க்கட்டும். நான் இப்பொழுது சத்துருக்களில் சிறந் தவனான ஸூதபுத்திரனைக் கொல்லுகின்றேனென்று மறுபடியுமே தற்புகழ்ச்சியை உமக்கு முன்னிலையில் சொல்வேன். உலகத்தில் தனுர்வேதத்தில் எனக்குநிகரானவன் எவன் இருக்கிறான்? பராக்கிர மத்திலாவது எனக்கு எவன் நிகராவன்? பொறுமையில் எனக்கு ஸம னானமனிதன் வேறு எவன் இருக்கிறான்? கருணையில் எனக்கு ஒப் பானமனிதன் வேறு எவன் இருக்கிறான்? சிறந்தவில்லையுடையவனான நான் என்னுடைய தோள்வலிமையினால் தேவர்களையும் அஸுரர்களை யும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற எல்லாப்பிராணிகளையும் அவமானமடை யும்படி செய்வேன். சிறந்தவீரர்களுடைய வல்லமையைக்காட்டிலும் என்னுடைய வல்லமையே மேலானதென்று தெரிந்துகொள்ளும். அப்படிப்பட்ட நான் ஒருவனாகவே எல்லாக் கௌரவர்களையும் பாஹ் லிகர்களையும் விரைவாக எதிர்த்து, பனிக்காலங்கழிந்தபிறகு உலர்ந்த காட்டையடைந்த நெருப்பு எரிப்பதுபோலக் காண்டீவத்தினால் (விடப்படும்) பாணங்களுடைய ஜ்வாலையினால் பலாத்காரமாக விரை வில் எரிப்பேன். என்னுடைய இந்த இருகைகளும் அம்புகளால் கீறப்பட்டிருக்கின்றன. வில்லும் யுத்தத்தில் பாணங்களுடன்கூடிய தாகவும் வளைக்கப்பட்டதாகவுமிருக்கிறது. இந்த இருகால்களும் ரத ரேகைகளுடனும் த்வஜரேகைகளுடனும் கூடியவைகளாக இருக் கின்றன. யுத்தத்தையடைந்திருக்கின்ற என்னைப்போன்றவனை (வீரர்கள்) * ஜயிக்கமாட்டார்கள்' என்றான்'' என்றுகூறினான்.

---

வேறுபாடம்.

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

### (த்வந்த்வ யுத்தம்.)

த்ருதராஷ்டிரன், "அப்பா! பாண்டவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் நிலைகுலைக்க முடியாததும் மஹாபயங்கரமுமான எதிர்ப்பு ஏற்பட்டுத் தனஞ்சயனும் கர்ணனோடு யுத்தத்துக்காகச் சென்றபிறகு, அந்த யுத்தகளத்தில் அந்தயுத்தம் எவ்வாறு நடந்தது!" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பெரியத்வஜங்களுள்ளவையும் நன்கு எதிர்த்தவையும் பேரிகளுடைய சப்தங்களால் அதிக ஒலியுள்ளவையும் ரணகளத்தில் நிறைந்திருக்கின்றவையுமான அவர்களுடைய சேனைகள் மழைக்காலத்தில் காற்றினால் தள்ளப்பட்ட மேகங்கள்போலக் கர்ஜித்தன. பெரிய யானைகளாகிற மேகங்களால் சூழப்பட்டதும் அஸ்திரங்களாகிற ஜலத்தோடுகூடியதும் நான்குவித வாத்யங்களுடைய சப்தங்களுடனும் சக்கரங்களுடைய நுனியினின்று உண்டாகிறசத்தத்துடனும் தலத்வனியுடனும்கூடியதும் தங்கத்தினால் சித்திரிக்கப்பட்டிருக்கிற ஆயுதங்களாகிற மின்னல்களுடன்கூடியதும் அம்புகளும் கத்திகளும் நாராசங்களும் மஹாஸ்திரங்களுமாகிற தாரைகளுடன்கூடியதும் பயங்கரமான வேகமுள்ளதும் இரத்தவெள்ளத்தைப் பெருகச்செய்கின்றதும் கத்திகளால் நிரம்பியதும் க்ஷத்திரியர்களுடைய உயிரை நாசஞ்செய்வதும் காலந்தவறி உண்டானதும் குரூரமாயிருக்கின்றதுமான அந்தக்கெடுதலான மழையானது ஜனங்களுக்குக் கலக்கத்தை உண்டுபண்ணுகிறதாகியது. அனேகரதிகர்கள் ஒன்றுசேர்ந்து ஒரு ரதிகனைச் சூழ்ந்துகொண்டு (அவனுக்கு) மரணத்தை உண்டுபண்ணினார்கள். அவ்வாறே, ஒரு ரதிகன் ஒரு ரதிகனையும் சிறந்த அனேக ரதிகர்களையும் நாசஞ்செய்தான். ஒருரதிகன் ஸாரதியோடும் குதிரைகளோடும்கூடின ஒருரதிகனை யமனுக்கு வசப்பட்டவனாகச் செய்தான். ஒருவன் ஒருயானையினால் அனேக ரதிகர்களையும் குதிரைகளையும் ம்ருத்யுவின் வசத்தை அடையச்செய்தான். அவ்வாறே, பார்த்தன் ஸாரதிகளோடும் குதிரைகளோடுங்கூடின தேர்களையும் யானைகளையும் எல்லாச் சத்துருக்களையும் குதிரைக்காரர்களுடன் கூடின குதிரைகளையும் காலாட்களுடைய கூட்டங்களையும் பாணஸமூகங்களால் ம்ருத்யுவுக்கு வசப்படும்படி செய்தான். கிருபரும் சிகண்டியும் யுத்தத்துக்காக எதிர்த்தார்கள். ஸாத்யகியானவன் துர்யோதனனை எதிர்த்தான், ஸ்ருதஸ்ரவஸ் த்ரோணபுத்திர

ரோடு எதிர்த்தான். யுதாமன்யு சித்திரஸேனனோடு எதிர்த்தான். ரதிகனும் ஸ்ருஞ்சயனுமான உத்தமௌஜஸ் கர்ணனுடையபுத்திரனை ஸுஷேணனை எதிர்த்தான். ஸஹதேவன் சூதாடியும் காந்தாரதேசாதிபதியுமானசகுனியை ஒருசிங்கமானது பெரியகாளையை எதிர்ப்பதுபோல் எதிர்த்தான். யௌவனமுள்ள நகுலபுத்திரனை சதானீகன், யௌவனமுள்ள கர்ணபுத்திரனை விருஷஸேனனைப் பாணஸமூகங்களால் அடித்தான். சூரனை கர்ணபுத்திரனும் பாஞ்சாலீபுத்திரனை சதானீகனை அனேகபாணவர்ஷங்களால் அடித்தான். ரதிகர்களுள் சிறந்தவனும் ஆச்சர்யகரமாக யுத்தஞ்செய்பவனும் மாத்ரீபுத்திரனுமான நகுலன் கிருதவர்மாவை எதிர்த்தான். பாஞ்சாலர்களுக்குத் தலைவனும் ஸேனாபதியுமான த்ருஷ்டத்யும்னன் ஸேனைகளுடன்கூடின கர்ணனை எதிர்த்தான். பாரதரே! துச்சாஸனன், பரதகுலத்திலுதித்தவனும் வாயைத்திறந்திருக்கும் யமன்போல் விளங்குபவனும் க்ரூரனும் யுத்தத்தில் பயங்கரனும் சஸ்திரதாரிகளுள் சிறந்தவனும் ஸஹிக்கத்தகாதவேகமுள்ளவனுமான அந்தப் பீமனை எதிர்த்தான். அவ்வாறே, வீரனை உத்தமௌஜஸ் அந்த யுத்தத்தில் பலாத்காரமாகக் கர்ணபுத்திரனைக் கொன்றான்; அவனுடைய தலையையும் அறுத்தான். அவனுடைய முடியானது ஒலியினால் பூமியையும் ஆகாயத்தையும் எதிரொலியிடும்படிசெய்துகொண்டு பூமியில் விழுந்தது. பூமியில்விழுந்த ஸுஷேணனுடைய தலையைக்கண்டு கர்ணன் அப்பொழுது துக்கமுற்றவனாகிப் பிறகு கோபத்தினால் அந்த உத்தமௌஜஸினுடைய குதிரைகளையும் தேரையும் கொடியையும் நல்லநுனியுள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமான பாணங்களால் அறுத்தான். அந்தஉத்தமௌஜஸ் கூர்மையுள்ள அம்புகளாலும் பிரகாசிக்கின்ற கத்தியினாலும் கிருபனை அடித்து (அவருடைய) பின்பக்கத்தை ரக்ஷிக்கின்ற வீரர்களையும் கொன்று, பிறகு, சிகண்டியினுடைய ரதத்தின்மீதேறினான். ரதத்திலிருக்கிற சிகண்டியானவன் கிருபர் ரதத்தை இழந்ததைக்கண்டு அவரை அம்புகளால் அடிக்கவிரும்பவில்லை. துரோணபுத்திரர் கிருபருடைய அந்தத்தேரைச் சூழ்ந்துகொண்டு சேற்றில் ஆழ்ந்த பசுவைப்போலக் கரையேற்றினார். பொற்கவசமணிந்தவனும் வாயுவுக்குப் புத்திரனுமானபீமன் கோடைக்காலத்தில் உச்சியைஅடைந்திருக்கின்ற சூரியன்போல (ப்ரகாசித்துக்கொண்டு) கூர்மையுள்ள அம்புகளால் உம்முடைய குமாரர்களுடையபடையை அதிகமாகத் தவிக்கச் செய்தான்.

## எண்பதாவது அத்யாயம்.

(பீமஸேனனுக்கும் வ்சோகனுக்கும் ஸம்வாதம்.)

பிறகு, கைகலந்த யுத்தத்தில், அனேகசத்துருக்களால் சூழப்பட்டஒருவனான பீமன், மஹாயுத்தத்தில் ஸாரதியைப்பார்த்து,'ஸாரதியே! இப்பொழுது நீ தார்த்தராஷ்டிரர்களுடைய சேனையைக்குறித்து (குதிரைகளை) நடத்து. வேகத்தோடு குதிரைகளுடன் செல். இந்தத் தார்த்தராஷ்டிரர்களை யமனிடத்தில் அனுப்புகிறேன்' என்று சொன்னான். பீமஸேனனால் இவ்வாறு தூண்டப்பட்ட அந்த ஸாரதி, கடிய வேகத்துடன், பீமன் அந்தச் சேனையை எதிர்க்க விரும்பினவிடத்தில் உம்முடையபுத்திரர்களுடைய சேனையைக்குறித்து விரைவாகச் சென்றான். பிறகு, மற்றக்கௌரவர்கள் யானைகளோடும் ரதங்களோடும் குதிரைகளோடும் காலாட்களோடும் நான்குபக்கத்திலும் அவனை எதிர்த்தார்கள். அவர்கள், மிக்கவேகமுள்ள பீமனுடைய சிறந்த குதிரையைப் பாணஸமூகங்களால் நாற்புறங்களிலும் அடித்தார்கள். பிறகு, மிக்கவலிமையமைந்த பீமன் வருகின்றஅம்புகளை ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ள பாணங்களால் வெட்டினான். பொற்புங்கமுள்ள அந்தப்பாணங்கள் பீமனுடைய பாணங்களால் இரண்டாகவும் மூன்றாகவும் அறுக்கப்பட்டுக் கீழேவிழுந்தன. அரசரே! பிறகு, சிறந்த அரசர்களுடைய மத்தியில் பீமனால்கொல்லப்படுகிற யானைகள் ரதிகர்கள் யௌவனமுள்ளகுதிரைகள் இவற்றின் கோரமும் மிக்கபெரிதுமான சப்தமானது அப்பொழுது வஜ்ரத்தினால் பிளக்கப்பட்டமலைகளுடைய சப்தம்போலத் தோன்றியது. பீமனுடைய சிறந்தபாணங்களால் பிளக்கப்பட்டு வதம்செய்யப்படுகின்ற அந்தச்சிறந்த அரசர்கள், பறவைகள் மலர்களுக்காக மரத்தைநோக்கிவருவதுபோல யுத்தத்தில் எல்லாப்பக்கத்திலும் பீமனைநோக்கி எதிர்த்துவந்தார்கள். உம்முடைய சேனையானது எதிர்த்துச்செல்லுங்காலத்தில் முடிவற்ற வேகமுள்ளவனான அந்தப்பீமன், பிரளயகாலத்தில் காலதண்டத்தைக் கையிற் கொண்டவனும் நாசஞ்செய்பவனும் எரிக்க எண்ணங்கொண்டவனும் பிராணிகளை அழிப்பவனுமான காலன்போல வேகத்தை வெளிப்படுத்தினான். ஊழிக்காலத்தில் பிரஜைகளைக்கவர்கின்றவனும் வாயைத்திறந்துகொண்டு வருகின்றவனுமான காலனுடைய (வேகத்தை) பிராணிகள் தாங்கமாட்டாததுபோல யுத்தத்தில் அதிக வேகமுள்ளவனான அந்தப்பீமனுடைய அதிகவேகத்தைத் தாங்குவதற்கு உம்மைச்சேர்ந்தவர்கள் வல்லமையுள்ளவர்களாகவில்லை. பாரதரே!

பிறகு, யுத்தத்தில் மகாத்மாவான பீமனால் நன்றாக எரிக்கப்படு கின்ற பாரதசேனையானது, அவனால் துரத்தியடிக்கப்பட்டதாகவும் பயந்ததாகவும், பெரிய காற்றினால் மேகங்களுடைய கூட்டங்கள் சிதற அடிக்கப்படுவதுபோலத் திசைகளில் சிதற அடிக்கப்பட் டது. பிறகு, சிறந்த புத்தியுள்ளவனும் மிக்க வலிமையுள்ளவனு மான அந்தப் பீமஸேனன் மறுபடியுமே ஸந்தோஷமுள்ளவனாகி ஸாரதியைப்பார்த்து, 'ஸூத! ஒன்றுசேர்ந்து வருகின்ற தேர் களையும் கொடிகளையும், நம்மைச் சேர்ந்தவைகளா, பிறருடைய வைகளா என்று தெரிந்துகொள். யுத்தம்செய்கின்றவனான நான் ஒன்றையும் அறியவில்லை. அஜாக்ரதையுள்ளவனான நான் உன் னுடைய சேனையை (ஆயுதங்களால்) மூடாமலிருக்க வேண்டும். சாகத்தை விட்டவர்களானசத்துருக்களை நான்குபக்கத்திலும் பார்த் துப் பெரியகோபமானது மறுபடியும் அதிகமாக என்னை வந்தடை கிறது. அரசரான யுதிஷ்டிரர் துன்பத்தை அடைந்திருக்கிறார். அர்ஜுனன் வராமையால் அனேகதுக்கங்களை நினைக்கிறேன். தர்ம ராஜர் பகைவர்களுடைய மத்தியில் என்னை விட்டுவிட்டுச் சென்றதி னாலுண்டான இந்தத் துக்கத்தைத் தரிக்கிறேன். இவர் உயிரோ டிருக்கிறாரோ, இல்லையோ; நான் அறியேன். அர்ஜுனனையும் நான் அறியேன். அதனால், எனக்கு இப்பொழுது அதிகதுக்கம் உண்டா கிறது. அதிக பிரஸித்திபெற்ற அப்படிப்பட்டநான் அதிக பல முள்ள பகைவர்படையை நாசஞ்செய்வேன். யுத்தத்தின்மத்தியில் ஒன்றுகூடியிருக்கின்ற இந்தச்சேனையைக்கொன்று இப்பொழுது உன்னுடன் ப்ரீதியடைந்தவனாகப்போகிறேன். ஸூத! என்தேரி லுள்ள எல்லா அம்புப்பெட்டிகளையும் பாணங்களையும் பார்த்துப் பாணங்களுள் அதிகமாயிருப்பவற்றின் வகை என்னவென்பதையும் தொகை என்னவென்பதையும் நன்குஅறிந்து சொல்வாயாக. ஸாரதி யே! பாணங்கள் எத்தனை ஆயிரங்களிருக்கின்றன? எத்தனை நூறுக ளிருக்கின்றன? இதனை விரைவாக எனக்குச்சொல்' என்றுசொன்னான்.

விசோகன், 'வீரரே! இப்பொழுது உமக்குக் கார்யஸித்தியைத் தரக்கூடிய எல்லாவற்றையும்அறிந்து இவ்வண்ணம் கூறுவேன். கேக யர்கள், காம்போஜர்கள், ஸௌராஷ்டிரர்கள், பாஹ்லீகர்கள், மிலேச் சர்கள், ஸுஹ்மர்கள், பரதங்கணர்கள், மத்ரர்கள், வங்கர்கள், மகதர்கள், குளிந்தர்கள், ஆனர்த்தகர்கள், ஆவர்த்தகர்கள், மலைநாட்டுவீரர்கள் ஆகியஇவர்களெல்லாரும் சிறந்தஆயுதங்களைத்தரித்து உம்மைநாற்பக் கங்களிலும் சூழ்ந்துசூழ்ந்து பிறகு ஸிம்மநாதஞ்செய்தார்கள். வீரரே!

உம்முடைய இந்தத்தேரில் கூர்மையுள்ளவைகளும் நன்கு துவைந்தவைகளுமான பன்னீராயிரம்பல்லங்கள் இருக்கின்றன. அறுபதினாயிரம்பாணங்களிருக்கின்றன. அவ்வாறே பதினாயிரக்கணக்கான க்ஷுரங்களும் பல்லங்களுமிருக்கின்றன. வீரரே! குந்தீபுத்திரரே! இரண்டாயிரம்நாராசங்களும் மூவாயிரம் ப்ரதரங்களும் இருக்கின்றன. பாண்டுநந்தனரே! ஆறுஎருதுகள் பூட்டிய வண்டிகள் சுமக்கமுடியாத அவ்வளவு ஆயுதங்கள் மிகுந்திருக்கின்றன. கற்றறிந்தவரே! ஆயிரக்கணக்காக இவைகளைப் பிரயோகம்செய்யும். உமக்குக் கதாயுதபலமும் கத்தியின்பலமும் கைவன்மையுமிருக்கின்றன. ஈட்டிகளும் உலக்கைகளும் சக்திகளும் எறிவளையங்களும் இருக்கின்றன. ஆயுதங்கள்குறைபடுமென்று நீர்பயப்படவேண்டாம்' என்று 'கூறினன். பீமஸேனன், 'விசோக! யுத்தத்தில் பீமஸேனன் பகைவரைவிடாதவன்; ஒருவனுகவே யுத்தத்தில் பகைவர்களை ஜயித்தான்' என்று எல்லா உலகத்திலும் பிராணிகள் என்னுடைய பிரதிஜ்ஞையை நிச்சயமாக இன்றைக்கே நிறைவேறினதாகச் சொல்லட்டும். விரும்பப்பட்ட விஷயங்களுள் இது ஒன்றே (எனக்கு) ஸித்திக்கட்டும். தேவர்கள் என்னுடைய இந்த விருப்பத்தைபூர்ணமாக நிறைவேற்றட்டும். ஸூத! இப்பொழுது என்கையிலிருப்பவைகளும் எல்லா அரசர்களையும் கொல்லுகின்றவைகளும் அதிகவேகமுள்ளவைகளுமான பாணங்களால் மூடப்பட்டதும் கோர ரூபமுள்ளதுமான யுத்தமானது சூரியனைமறைப்பதும் ம்ருத்யுவினுலகத்திற்கொப்பானதும் ஆகப்போகிறது. ஸூத! 'யுத்தத்தில் பீமஸேனன் மூழ்கிப்போய்விட்டான்; அல்லது ஒருவனுக இருந்துகொண்டு யுத்தத்தில் கௌரவர்களைவென்றான்' என இந்த விருத்தாந்தமானது அரசர்களுள் பாலர்வரையில் தெரிந்ததாகப்போகின்றது. எல்லாக்கௌரவர்களும் யுத்தத்தில் விழட்டும். ஜனங்கள் சிறுகுழந்தைகள்வரையில் என்னைப்புகழட்டும். நானொருவனுகவே அவர்களனைவர்களையும் கீழேதள்ளப்போகிறேன். அவர்களனைவர்களுமாவது என்னைக்கொல்லட்டும். உத்தமமான செய்கையை விரும்புகிறதேவர்கள் என்னுடைய இந்தவிருப்பத்தை ஸபலமாகச் செய்யட்டும். கேசவரை ஸாரதியாகக்கொண்ட ரதிகன் யஜ்ஞத்தில் அழைக்கப்பட்டிருக்கும் இந்திரனைப்போல விரைவாக இங்குவருகிருன். பிளக்கப்படுகின்ற இந்தப் பாரதஸேனையைப் பார். இந்த அரசர்கள் யாதுகாரணத்தினுல் ஓடுகிருர்கள்? சிறந்தபுத்தியுள்ளவனும் புருஷர்களுள் உத்தமனுமான ஸவ்யஸாசி இந்தச் சேனையை

விரைவாகப் பாணங்களினால் வ்யக்தமாக மூடுகின்றான். விசோக! யுத்தத்தில், த்வஜங்களையும் ஓடுகின்ற யானைகளையும் குதிரைகளையும் காலாட்கூட்டங்களையும் பார். ஸாரதியே! பாணங்களாலும் சக்திகளாலும் அடிக்கப்பட்டுச் சிதறிப்போயிருக்கின்ற தேர்களையும் இந்த ரதிகர்களையும் பார். வஜ்ராயுதத்திற்கு ஸமமான வேகமுள்ளவைகளும் ஸ்வர்ணமயமான இறகுகள்நிறைகளாலடர்ந்தவைகளுமான தனஞ்சயனுடைய பாணங்களால் கவரப்பட்டிருக்கின்றதும் அதிகமாகப் பீடிக்கப்படுகின்றதுமான இந்தக் கௌரவஸேனையானது அடிக்கடி நான்கு பக்கத்திலும் நிறைக்கப்படுகின்றது. இந்த ரதங்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்களுடைய கூட்டங்களை அதிகமாகத் துகைத்துக்கொண்டு ஓடுகின்றன. எல்லாக்கௌரவர்களும் மிக்க மயக்கங்கொண்டவர்களாக, தீயெரிவதைக்கண்டு பயந்த யானைகளைப்போல ஓடுகின்றார்கள். விசோக! யுத்தத்தில் 'ஹா! ஹா!' என்று அலறும் பெரியயானைகள் பேரொலிகளை வெளியிடுகின்றன' என்று கூறினான்.

வீசோகன், 'பீமஸேனரே! இச்சமயத்தில் காண்டீவத்தினுடைய அதிகோரமான இந்த த்வனியை நீர் கேட்கவில்லையா? கோபங்கொண்டிருக்கின்ற பார்த்தனால் இழுக்கப்பட்ட நாண்கயிற்றின் ஒலியினால் உம்முடைய இந்த இருகாதுகளும் செவிடாகாமலிருக்கின்றனவா? பாண்டுநந்தனரே! உம்முடையஎல்லாவிருப்பங்களும் நிறைவேறிவிட்டன. யானைப்படையில் இதோ வானரம் காணப்படுகிறது. கறுத்தமேகத்தில் மின்னல் பிரகாசிப்பதுபோலப் பிரகாசிக்கின்ற நாண்கயிற்றைப் பாரும். இந்த வானரமானது தனஞ்சயனுடைய த்வஜத்தின் நுனியிலேறி யுத்தத்தில் பகைவர்களின் கூட்டங்களைப் பயமடையச் செய்துகொண்டு நான்கு பக்கத்திலும் பார்க்கின்றது. நேரில் பார்த்து நானே இதனிடத்தினின்று பயமடைகிறேன். விசித்திரமான இந்தத்தனஞ்சயனுடைய கிரீடமானது அதிகமாகப் பிரகாசிக்கின்றது. கிரீடத்திலிருக்கும் சிறந்த இந்த ரத்தினமும் சூரியனுடைய காந்திபோன்ற காந்தியையுடையதாக விளங்கின்றது. பயங்கரமானதும் வெண்ணிறமுள்ள மேகம்போல் பிரகாசிக்கின்றதும் நல்ல ஒலியுள்ளதுமான தேவதத்தமென்னும் சங்கத்தைப் பக்கத்திற்பாரும். வீரரே! கடிவாளங்களைக் கையிற் பிடித்தவரும் பகைவருடையபடைகளில் நுழைகிறவருமான ஜனார்த்தனருடைய சூரியனுடைய ஒளிபோன்ற ஒளியுடையதும் நடுவில் வஜ்ரமிழைத்ததும் முனையில் கத்திகளோடு கூடியதும் அவ

ருடைய பக்கத்திலிருப்பதும் அவருடைய கீர்த்தியை விருத்தி செய்வதும் யாதவர்களால் எப்பொழுதும் பூஜிக்கப்படுவதுமான சக்கரத்தைப் பாரும். ஸாளவிருக்ஷங்களுக்கொப்பான பெரிய யானைகளுடைய துதிக்கைகள் க்ஷுரங்களினால் அறுக்கப்பட்டு இதோ விழுகின்றன. அந்தக்கிரீடியினால் மறுபடியும் அம்புகளால் அறுக்கப் பட்ட யானைகள் மாவுத்தர்களோடுகூடியவைகளாக வஜ்ரங்களால் அடிக்கப்பட்டிருக்கிற மலைகள்போலக் கீழேவிழுந்தன. குந்தீநந்தனரே! அவ்வாறே, மிக்க சிறப்புற்றதும் சந்திரனுடைய வர்ணம்போன்ற வர்ணமுடையதுமான அந்த வாஸுதேவருடைய பாஞ்சஜன்யத்தையும் பாரும். மார்பில் மிக ஜ்வலிக்கின்ற கௌஸ்துப ரத்தினத்தையும் விஜயத்தைக்கொடுக்கக்கூடிய வனமாலையையும் பாரும். ரதிகர்களுள் சிறந்தவனும் சிறந்த ரதத்தையுடையவனுமான பார்த்தன் இந்தச் சத்துருக்களின் சேனையை நிச்சயமாகத் துரத்திக்கொண்டு, வெண்ணிறமுள்ள மேகம்போன்ற நிறமுள்ளவைகளும் வாஸுதேவரால் ஓட்டப்பட்டவைகளுமான சிறந்த குதிரைகளோடு வருகிறான். பாணங்களால் பிளக்கப்பட்ட ரதங்களையும் குதிரைகளையும் காலாட்களுடைய கூட்டங்களையும் பாரும். தேவராஜனுடைய காந்திபோன்ற காந்தியையுடையவனை உம்முடைய இளையஸகோதரனாலே இந்தச் சேனைகள் கருடனுடைய காற்றினால் பெரியகாடுகள் விழுவதுபோலக் கீழேவிழுகின்றன. யுத்தத்தில் கிரீடியினால் பெரிய அம்புகளால் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் சேர்ந்து நாசஞ்செய்யப்பட்ட இந்த நானூறு தேர்களையும் எழுநூறு யானைகளையும் அனேகர்களான காலாட்களையும் குதிரைவீரர்களையும் ரதங்களையும் பாரும். பலவானான இந்த அர்ஜுனன் சித்திரமான கிரகம்போலக் கௌரவர்களை நாசஞ்செய்துகொண்டு உம்முடைய பக்கத்தைநோக்கி எதிரில் வருகிறான். விருப்பங்கள் நிறைவேற்றப்பெற்றவராகிறீர். உம்முடைய பகைவர்கள் மாண்டார்கள். உம்முடைய பலமும் நீண்ட ஆயுளும் விருத்தியடையட்டும்' என்றான். பீமஸேனன், 'ஸாரதியே! நீ பிரியத்தைச் சொன்னதனால் மிக்க மனக்களிப்புற்ற நான் உனக்குச் சிறந்த பதினான்கு கிராமங்களைக் கொடுக்கிறேன். விசோக! நீ எனக்கு அர்ஜுனனைத் தெரிவித்ததலால் உனக்கு நூறு தாஸிகளையும் இருபது ரதங்களையும் கொடுக்கிறேன்' என்று சொன்னான்."

## எண்பத்தோராவது அத்யாயம்.

(பார்த்தனுடைய பராக்கிரமமும், துர்யோதனனால் ஏவப்பட்ட சகுனியைப் பீமன் தோல்வியடையச் செய்ததும்.)

யுத்தத்தில் ரதங்களுடைய சப்தத்தையும் ஸிம்மநாதத்தையுங் கேட்டு அர்ஜுனன் கோவிந்தரைப் பார்த்து, 'குதிரைகளைச் சீக்கிரமாக நடத்தும்' என்று சொன்னான். கோவிந்தர், அர்ஜுனனுடைய வார்த்தையைக்கேட்டு, 'அவனைப்பார்த்து, 'பீமனிருக்குமிடத்திற்கு இதோ நான் அதிசீக்ரமாகச் செல்லுகிறேன்' என்று சொன்னார். சொல்லுகின்ற அந்த அர்ஜுனனைப் பனியையும் சங்கத்தையும் போன்ற நிறமுள்ளவைகளும் பொன்னாலும் முத்துக்களாலும் மணிகளாலும் செய்யப்பட்ட கவசம்பூண்டவைகளுமான குதிரைகள் ஜம்பனைக்கொல்ல எண்ணங்கொண்டு வஜ்ராயுதத்தைக் கையில் பிடித்த இந்திரனை அக்காலத்தில் குதிரைகள் அந்தயுத்தத்தில் தாங்கியதுபோலத் தாங்கின. கோபங்கொண்டவர்களும் ரதங்களுடனும் குதிரைகளுடனும் யானைகளுடனும் காலாட்கூட்டங்களுடனும்கூடியவர்களுமான புருஷஶ்ரேஷ்டர்கள் பாணங்களுடைய ஒலிகளினாலும் சக்கரங்களுடைய ஓரங்களிலுண்டாகின்ற சப்தங்களினாலும் குளப்படிச் சத்தங்களினாலும் பூமியையும் திசைகளையும் நன்றாகஒலியடையும்படி செய்துகொண்டு ஜயத்தைக்கருதி எதிர்த்துச் சென்றார்கள். பெரியவரே! அவர்களுக்கும் பார்த்தனுக்கும் தேகங்களையும் உயிரையும் பாவத்தையும் நாசஞ்செய்கின்ற நல்லயுத்தமானது, (முற்காலத்தில்) மூவுலகங்களின் நிமித்தமாக ஜயசீலர்களுள் உத்தமரும் விளையாடுகின்றவருமான விஷ்ணுவுக்கு அஸுரர்களோடு யுத்தம் நேர்ந்ததுபோல் நேர்ந்தது. கிரீடதாரியான அர்ஜுனன் ஒருவனாகஇருந்துகொண்டே அவர்களால் பிரயோகிக்கப்பட்ட பற்பலவிதமான அந்த ஆயுதத்தைத் துண்டாக்கி க்ஷுரங்களாலும் அர்த்த சந்திரபாணங்களாலும் கூர்மையுள்ள பல்லங்களாலும் அவர்களுடையதலைகளையும் கைகளையும் குடைகளையும் சாமரங்களையும் கொடிகளையும் குதிரைகளையும் ரதங்களையும் காலாட்களுடைய கூட்டங்களையும் யானைகளையும் பலவாறாகத் துண்டாக்கினான். பலவாறு அறுக்கப்பட்ட அவைகள் காற்றினால் முறித்துத்தள்ளப்பட்ட காடுகள்போலப் பூமியில் விழுந்தன. பொன்விரிப்புக்களால் மூடப்பட்டவைகளும் கொடித்துணிகளுடனும் கொடிகளுடனும் யுத்த வீரர்களுடனும் கூடினவையாகச் செய்யப்பட்டவைகளும் பொற்புங்

கங்களுள்ள பாணங்களால் நிறைக்கப்பட்டிருப்பவைகளுமான பெரிய யானைகள் எரிகின்ற மலைகள்போல விளங்கின. தனஞ்சயன் இந்திர னுடைய வஜ்ராயுதத்துக்குச் சமமான உத்தமபாணங்களால் யானை களையும் குதிரைகளையும் ரதங்களையும் பிளந்து கர்ணனைக்கொல்ல வேண்டுமென்கிற எண்ணத்தினால் முற்காலத்தில் பலனென்னும் அஸுரனை வதஞ்செய்வதற்காக இந்திரன்சென்றதுபோல விரை வாகச் சென்றான். பிறகு, புருஷஸ்ரேஷ்டனும் பகைவர்களை அடக்குகிறவனும் மஹாபாகுபலமுள்ளவனுமான அந்த அர்ஜுனன், மகரமானது ஸமுத்திரத்தில் பிரவேசிப்பதுபோல் ஸைன்யத்தில் பிரவேசித்தான். அரசரே! ரதங்களோடும் காலாட்களோடும் கூடியவர்களும் யானைகளாலும் குதிரைகளாலும் குதிரைவீரர்களா லும் அதிகரித்தவர்களுமான உம்மைச்சேர்ந்த வீரர்கள் ஸந்தோஷ முள்ளவர்களாக அந்தப்பாண்டவனை விரைவாக எதிர்த்து அருகில் வந்தார்கள். பார்த்தனைக்குறித்து வருகின்ற அவர்களுடைய மிக்க பெரிதான சப்தமானது கலக்கப்பட்ட ஸமுத்திரத்தினுடைய ஜலத் தினது ஒலிபோலத் தோன்றியது. அந்தமஹாரதர்களோ யுத்தத்தில் பிராணபயத்தைவிட்டு அந்தப்புருஷஸ்ரேஷ்டனைப் புலிகள்போல் எதிர்த்துவந்தனர். அந்தஇடத்தில சரமாரிகளைப்பொழிந்துகொண்டு வருகின்ற அந்தக்கௌரவவீரர்களுடைய படையை, அர்ஜுனன், பெருங்காற்று மேகங்களைச் சிதறச்செய்வதுபோலச் சிதறச் செய் தான். (பகைவர்களை) நன்றாக அடிப்பவர்களும் சிறந்த வில்லாளிகளு மான அந்தவீரர்கள் ஒன்றுசேர்ந்து ரதஸமூகங்களோடுகூடி அர்ஜு னனை எதிர்த்துக் கூர்மையுள்ளபாணங்களால் அடித்தார்கள். பிறகு, அர்ஜுனன் ஆயிரக்கணக்கான தேர்களையும் யானைகளையும் குதிரை களையும்பாணங்களால் யமனுடையவீட்டுக்குஅனுப்பினான். யுத்தத்தில் பார்த்தனுடையவில்லினின்று விடுபடுகின்றபாணங்களால் கொல்லப் படுகின்ற அந்தமஹாரதர்கள் பயமுண்டாகவே ஆங்காங்கு பதுங்கி னார்கள். அர்ஜுனன் அவர்களுள் முயற்சியுள்ளவர்களும் மஹாரதர் களுமான நானூறுவீரர்களைக் கூர்மையுள்ளபாணங்களால்யமனுடைய வீட்டை அடையச்செய்தான். யுத்தத்தில் பலபலஅடையாளங் களுள்ள கூர்மையானபாணங்களால் பீடிக்கப்படுகின்ற அந்தவீரர்கள் அர்ஜுனனைவிட்டுவிட்டுப் பத்துத்திசைகளிலும் ஓடினார்கள். ஸேனா முகத்தில் ஓடுகின்றஅந்தவீரர்களுடைய பெரியசப்தமானது மலையை அடைந்து சிதறுகின்ற மேகஸமூகத்தினுடைய சப்தம் போலத் தோன்றியது. உமக்கு மங்களம். ஐயா! குந்தீபுத்திரனான அர்ஜு

ன் அந்தஸேனையைப் பாணங்களால் நன்ருக அடித்துத் துரத்தி ஸூதபுத்திரனுடைய படைக்குள நிராகச்சென்ருன். பகைவர்களை எதிர்த்துச்செல்லுகின்ற அந்தஅர்ஜுனனுடைய பெரியசப்தமானது முற்காலத்தில் ஸர்ப்பங்களுக்காகப் பறந்துவருகின்ற கருடனுடைய சப்தம்போல் உண்டாயிற்று. அர்ஜுனனைப் பார்ப்பதில் மிகுந்தஆவலுள்ளவனும் மஹாபலசாலியுமான பீமஸேனன் அந்தச் சப்தத்தைக்கேட்டு அதிகபிரீதியுள்ளவனுனன்.மஹாராஜரே! ப்ரதாபசாலியான பீமஸேனன் அர்ஜுனன்வருகின்றதைக் கேட்டமாத்திரத்திலேயே உயிரில்பற்றைவிட்டு உமதுசேனையை அடித்தான். வாயுவினுடைய வீர்யத்துக்கு ஒப்பானவீர்யமுள்ளவனும் வேகத்தில் வாயுவுக்குச்சமமாக இருப்பவனும் சிறந்தபிரதாபமுள்ளவனும் வாயுவுக்குப்புத்திரனுமானபீமன் வாயுவைப்போல் ஸஞ்சரித்தான். ராஜ ஸ்ரேஷ்டரே! ஜனநாதரே! மகாராஜரே! அவனுல் துன்புறுத்தப் படுகின்ற உம்முடைய சேனையானது ஸமுத்திரத்தில் உடைபட்ட மரக்கலம்போலக் கீழேஅழுந்தியது. பீமன் கைத்தேர்ச்சியைக்காண்பித்துக்கொண்டு அப்பொழுது அந்தச்சேனையை யமனுடைய வீட்டுக்கு அனுப்பப்போகிறவனுக உக்கிரமான பாணங்களால் அறுத்தான். பாரதரே! அந்த யுத்தத்தில் யுத்தவீரர்கள் யுகம் முடியுங் காலத்தில் காலனுடையபலம்போன்ற அதிமானுஷமான பீமனுடைய பலத்தைக்கண்டு விசேஷமாகப் பயமடைந்தார்கள். பாரதரே! பீமஸேனனுல் அவ்வாறு பயங்கரமான பலமுள்ள வீரர்கள் அடிக்கப் பட்டதுகண்டு அரசனுன துரியோதனன் இந்த வசனத்தை உரைக்கலானுன். பரதர்களுள் சிறந்தவரே! துர்யோதனன் யுத்தத்தில் மஹாவில்லாளிகளான எல்லாச்சேனைத்தலைவர்களையும் யுத்தவீரர்களையும் நோக்கி, 'பீமனைக்கொல்லுங்கள். அவன் கொல்லப்பட்டால் பாண்டவசேனை முழுவதும் கொல்லப்பட்டதென்று எண்ணுகிறேன்' என்று கட்டளையிட்டான். அரசர்கள் உமது புத்திரனுடைய அந்தக் கட்டளையை ஏற்றுக்கொண்டு பீமனைச் சரமாரிகளால் நாற்புறத்திலும் நன்ருக மூடினுர்கள். ராஜேந்திரரே! வேந்தரே! அனேக யானைகளும் ஜயத்தில்விருப்பமுள்ள மனிதர்களும் ரதத்திலிருப்பவர்களும் விருகோதரனைச் சூழ்ந்துகொண்டார்கள். மன்னவரே! நாற்புறங்களிலும் அந்தச் சூரர்களால் சூழப்பட்டவனும் பரதவம்சத்தில் உதித்தவர்களுள் சிறந்தவனுமான அந்தச்சூரன் நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரன்போல விளங்கினுன். மஹாராஜரே! வட்டமான ரேகையுடன்கூடின பூர்ணசந்திரன் விளங்குவதுபோல்

யுத்தத்தில் பார்க்க இனிமையான அந்தப்புருஷஸ்ரேஷ்டன், யுத்தத்தில் விஜயனோடு வேற்றுமையில்லாதவனாகவே விளங்கினான். கோபத்தினால் சிவந்தகண்களையுடையவர்களும் சூரர்களுமான அந்த அரசர்கள் அனைவரும் விருகோதரனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணமுள்ளவர்களாக அவன்மீது சரமாரியைப் பொழிந்தார்கள். பீமன் படிந்தகணுக்களுள்ள பாணங்களால் அந்தப் பெருஞ்சேனையைப் பிளந்து ஒரு மீனானது ஜலத்தில் வலையினின்று வெளிப்படுவது போல யுத்தத்தினின்று வெளிப்பட்டான். பாரதரே! பீமன், திரும்பாதவைகளான பதினாயிரம் யானைகளையும் இரண்டுலக்ஷத்திருநூறு மனிதர்களையும் ஐயாயிரம் குதிரைகளையும் நூறுரதிகர்களையும் கொன்று, இரத்தவெள்ளத்துடன்கூடின நதியைப்பெருகியோடச் செய்தான். புருஷஸ்ரேஷ்டனான பீமன் இரத்தமாகிற ஜலத்துடன் கூடியதும் ரதங்களாகிற சுழல்களுள்ளதும் யானைகளாகிற பெருமீன்களால் நாற்பக்கத்திலும் சூழப்பட்டதும் மனிதர்களாகிற மீன்களையும் குதிரைகளாகிற முதலைகளையுமுடையதும் மயிர்களாகிற பாசிகளும் புல்தரைகளுமுள்ளதும் அறுக்கப்பட்டகைகளாகிற சிறந்த ஸர்ப்பங்களுடன்கூடியதும் அனேக ரத்னங்களைக் கவர்ந்துகொண்டு போகின்றதும் தொடைகளாகிற முதலைகளையுடையதும் மாம்ஸங்களாகிற சேற்றையுடையதும் தலைகளாகிற கற்களால் நன்றாகச் சூழப்பட்டதும் விற்களாகிற நாணலகளையுடையதும் அம்புகளாகிற *தெப்பங்களையுடையதும் கதாயுதங்களும் பரிகங்களும் கொடிகளுமுள்ளதும் குடைகளாகிற அன்னப்பறவைகளையுடையதும் த்வஜங்களுடன் கூடியதும் உத்தமமான தலைப்பாகைகளாகிற நுரைகளுள்ளதும் ஆரங்களாகிற தாமரைமலர்களுக்கு உத்பத்திஸ்தானமாயிருப்பதும் பூமியிலுண்டான புழுதிகளாகிற அலைகளுடையவரிசைகளையுடையதும் சிறந்த வீரர்களுடைய செய்கைகளுடன்கூடியதும் யுத்தத்தில் மிக்க பயமுள்ளவர்களால தாண்டமுடியாததும் யுத்தவீரர்களாகிற முதலைகளையுடையதும் யுத்தபூமியில் யமனுடைய வாஸஸ்தானத்தைக் குறித்துச்செல்லுவதும் வைதரணிபோல் உக்ரமாயிருப்பதும் மனோதைர்யமற்றவர்களால் எவ்விதத்தினாலும் தாண்டமுடியாததும் அவ்வாறு கோரமாயிருப்பதும் தாண்ட முடியாததும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்தி பண்ணுகின்றதுமான ஒருநதியைக் கணப்பொழுதில் பெருகச்செய்தான். ரதிகர்களுள் சிறந்தவனான பாண்டுநந்தனன் சென்ற சென்ற விடங்

* வேறுபாடம்.

களிலெல்லாம் லக்ஷக்கணக்காக யுத்தவீரர்கள் எதிர்த்து வந்தார்கள். மஹாராராஜரே! யுத்தத்தில் பீமஸேனனால் இவ்வாறு செய்யப்பட்ட செய்கையைக்கண்டு துர்யோதனன் சகுனியைப்பார்த்து, 'மாமா! யுத்தத்தில் மஹாபலசாலியான பீமஸேனனைக் கொல். இவன் ஜயிக்கப்பட்டால் பாண்டவர்களுடைய பெரும்படையானது ஜயிக்கப்பட்டதென்றே எண்ணுகிறேன்' என்றான். மஹாராஜரே! பிறகு, சிறந்த பிரதாபமுள்ள சகுனி பெரும்போருக்கு ஸன்னத்தனாகிப் பிராதாக்களால் சூழப்பட்டுச் சென்றான். வீரனான அந்தச் சகுனி யுத்தத்தில் பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்தப் பீமனை எதிர்த்துக் கரையானது ஸமுத்திரத்தைத் தடுப்பதுபோலத் தடுத்தான். கூர்மையுள்ள அம்புகளால் தடுக்கப்படுகின்ற பீமன் அந்தச் சகுனியை நோக்கித் திரும்பினான். ராஜஸ்ரேஷ்டரே! சகுனி அந்தப்பீமனுடைய இடவிலாப்பக்கத்திலும் நடுமார்பிலும் தங்கக் கட்டுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான நாராசங்களைப் பிரயோகித்தான். கோரரூபமுள்ளவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளுமான அவ்வம்புகள் மஹாத்மாவான பாண்டவனுடைய கவசத்தையுடைத்து அழுந்தின. பாரதரே! யுத்தத்தில நன்றாக அடிக்கப்பட்ட அந்தப்பீமன் ரோஷத்தினால் ஸௌபலனைக் குறித்துப் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட ஓர் அம்பைப் பிரயோகித்தான். அரசரே! நல்ல கைப்பழக்கமுள்ளவனும் மஹாபலசாலியும் பகைவர்களைத் தவிக்கச்செய்பவனுமான சகுனி, வருகின்ற அந்தக் கோரமான பாணத்தை ஏழாகத்துண்டாக்கினான். ஜனங்களுக்கு நாதரே! அது பூமியில் விழுந்தவுடன், பீமன் கோபங்கொண்டு சிரித்துக்கொண்டே ஒரு பல்லத்தினால் சகுனியினுடையவில்லைவெட்டினான். அரசரே! பிரதாபசாலியான சகுனி அறுக்கப்பட்ட அந்த வில்லை எறிந்துவிட்டு வேகத்துடன் வேறுவில்லையும் பதினாறு பாணங்களையும் எடுத்துப் படிந்ககணுக்களுள்ள அந்தப்பல்லங்களுள் இரண்டு பல்லங்களால் அவனுடைய ஸாரதியையும் ஏழுபல்லங்களால் பீமனையும் அடித்து ஒரு பல்லத்தினால் த்வஜத்தையும் இரண்டு பல்லங்களால குடையையும் நான்கு பலலங்களால் நான்கு குதிரைகளையும் அடித்தான். மஹாராஜரே! பிறகு, பிரதாபசாலியான பீமஸேனன், கோபங்கொண்டு யுத்தத்தில பொற்பிடியுள்ள உருக்கினாலாகிய சக்தியைப் பிரயோகித்தான். பீமனுடைய கையினால் எறியப்பட்டதும் ஸர்ப்பத்தினுடைய நாவைப்போல் அசைவதுமான அந்தச் சக்தியானது யுத்தத்தில் மஹாபலசாலியான

சகுனியின்மீது விரைவாக விழுந்தது. ஜனாதரே! பிறகு, அதிக கோபங்கொண்ட சகுனி பொன்னலங்காரமுள்ள அந்தச் சக்தியைப் பிடித்து அதனையே பீமஸேனன்மீது எறிந்தான். அந்தச்சக்தியாயுத மானது மஹாத்மாவான பாண்டவனுடைய இடக்கையைப் பிளந்து கொண்டு ஆகாயத்தினின்று நழுவினமின்னல்போல் அப்பொழுது பூமி யில் விழுந்தது. மஹாராஜரே! பிறகு,கௌரவர்கள் நான்குபக்கத்தி லும் பெருங்கூச்சலிட்டனர்.பீமனோ பலசாலிகளுடைய அந்த ஸிம்ம நாதத்தைப்பொறுக்கவில்லை.ராஜேந்திரரே!மஹாபலசாலியான பீமன் விரைவுடன் வேறுவில்லைஎடுத்து நாணேற்றி ஸிம்மநாதத்தைவெளி இட்டு யுத்தத்தில் சகுனியினுடையசேனையை ஒருமுகூர்த்தத்துக்குள் ளாக அம்புகளால் மூடினான். அரசரே! மஹாபலசாலியான பீமன் விரைபவனுகி அந்தச் சகுனியினுடைய நான்குகுதிரைகளையும் ஸாரதியையுங்கொன்று ஒரு பல்லத்தினால் த்வஜத்தையும் அறுத் தான். புருஷஸ்ரேஷ்டனான சகுனி சினத்தினால் கண்கள்சிவந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு குதிரைகள் கொல்லப்பட்டதேரை விட்டு வில்லை விரைவாக நாணொலி செய்துகொண்டு (பூமியில்) நின் ருன். அரசரே! சகுனி நான்கு பக்கத்திலும் அம்புகளால் பலவாறு பீமனை அடித்தான். பிரதாபசாலியான பீமஸேனன் அதிககோபங் கொண்டவனாகித் திருப்பியடித்து அவனுடையவில்லையும் துண் டாக்கிக் கூர்மையுள்ள அம்புகளால் அடித்தான். பலசாலியான சத்துருவினால் அதிகமாக அடிக்கப்பட்டவனும் பகைவர்களை நாசஞ் செய்பவனுமான காந்தாரராஜன் அப்பொழுது குறைவுயிருள்ளவனாகிக் கீழேவிழுந்தான். அரசரே! பிறகு, சகுனி தளர்ச்சியுற்றவனாயிருக் கிறானென்பதை அறிந்து உம்முடையபுத்திரன் யுத்தத்தில் பீமஸே னன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவனை ரதத்துடன் வே றிடத்துக்குக் கொண்டுபோனான். பிரபுவே! துன்பமுற்று மெய்ம்மறந் திருக்கிற சகுனியைக்கண்டு கௌரவர்கள் புறங்காட்டுபவர்களாகிப் பீம ஸேனனிடத்திலிருந்து உண்டானபயத்தினால் நடுக்கமுற்றுத் திசை களை நோக்கி ஓடினார்கள். அரசரே! சகுனியானவன் சிறந்தவில் லாளியான பீமஸேனனால ஜயிக்கப்படவே, உம்முடையபுத்திரனான துரியோதனன் அதிகபயத்தினால மூடப்பட்டு மாதுலனைப்பற்றி அதிககவலையுள்ளவனாக வேகமுள்ளகுதிரைகளோடு விலகிச்சென் ருன். பாரதரே! திரும்பினஅரசனைக்கண்டு சேனைகள் த்வந்துவ யுத்தங்களைவிட்டு நான்கு பக்கத்திலும் ஓடிவிட்டன. புறங்காட்டி ஓடுகின்ற அந்த எல்லாக்கௌரவர்களையும் கண்டு பீமன் நூற்றுக்

கணக்கான அனேகபாணங்களை இறைத்துக்கொண்டு வேகத்துடன் எதிர்த்துவந்தான். அரசரே! யுத்தத்தில் பீமனால் பீடிக்கப்படுகின்றவர்களும் புறங்காட்டி ஓடுகின்றவர்களுமான அந்தக்கௌரவர்கள் கர்ணனை அடைந்து நான்குபக்கத்திலும் நின்றார்கள். மஹாவீர்யமுள்ளவனும் மஹாபலசாலியுமான அந்தக்கர்ணன் (ஆபத்தாகிறகடலில் அமிழ்கின்ற) அவர்களுக்கு ஒரு திட்டானான். * அரசரே! புருஷஶ்ரேஷ்டரே! கெட்டகாலத்தில் உடைபட்ட கப்பல்களையுடைய மாலுமிகள் ஒருதிட்டையடைந்து ஸுகம்பெறுவதுபோல உம்மைச்சேர்ந்தவர்கள் கர்ணனைஅடைந்து ஸுகத்தைஅடைந்தார்கள். அரசரே! அவர்கள் மனத்தில் ஸமாதானத்தைஅடைந்து நிலைபெற்று நின்று பரஸ்பரம் ஸந்தோஷத்தைஅடைந்து மரணம்வரையில் திரும்புவதில்லை என்று எண்ணி யுத்தத்துக்காக ஒன்றுசேர்ந்தார்கள்" என்றான்.

---

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

### (கர்ணனுடைய பராக்கிரமத்தை வர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பீமஸேனனால் யுத்தத்தில் ஸைன்யங்கள் முறியஅடிக்கப்பட்ட பிறகு, துர்யோதனனாவது சகுனியாவது ஜயசீலர்களுள் சிறந்தவனான கர்ணனாவது என்னைச்சார்ந்த யுத்தவீரர்களாவது கிருபராவது கிருதவர்மாவாவது துரோணபுத்திரராவது துச்சாஸனனாவது யுத்தத்தில் யாது கூறினர்? பீமன் ஒருவனாகவே யுத்தத்தில் என்னைச்சேர்ந்த எல்லாவீரர்களோடும் போர்புரிந்தமையால் நான் பாண்டுபுத்திரனான பீமஸேனனுடைய பராக்கிரமத்தை மிக்க ஆச்சர்யகரமென்று எண்ணுகிறேன். ராதேயன் யுத்தவீரர்கள்விஷயத்தில் பிரதிஜ்ஞைசெய்தபடி (கார்யங்களைச்) செய்தானா? ஸஞ்சய! பகைவர்களை அழிப்பவனான கர்ணன் எல்லாக்கௌரவர்களுக்கும் ஸுகத்தைக்கொடுப்பவன்; கவசம்போன்றவன்; ஆதாரமாகஇருப்பவன்; உயிரோடிருக்கும் விருப்பத்துக்குக் காரணமாயிருப்பவன்; அளவுகடந்த வல்லமைபொருந்தின பீமஸேனனால் அந்தத்தன்சேனை நாசஞ்செய்யப்பட்டதைக்கண்டு விற்பிடித்தவர்களுள் மிகச்சிறந்தவனான கர்ணன் யுத்தத்தில் யாது செய்தான்? ஜயிக்கமுடியாதவர்களான என்னுடையபுத்திரர்களாவது மஹாரதர்களான அரசர்களாவது யாது செய்தனர்? ஸஞ்சய! இவை

---

* ஒருசொல் விடப்பட்டது.

அனைத்தையும் எனக்கு உரைப்பாயாக. நீ ஸமர்த்தனாயிருக்கிறாய்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"மஹாராஜரே! பிற்பகலில், பிரதாபசாலியான ஸூதபுத்திரன், பீமஸேனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே 'எல்லாஸோமகர்களையும் கொன்றான். பீமனும் அதிகபலமுள்ள கௌரவசேனையை நாசஞ்செய்தான். புத்திசாலியான பீமஸேனனால் சேனை துரத்தப்படுகின்றதைக்கண்டு, கர்ணன் ஸாரதியைப்பார்த்து, 'என்னைப்பாஞ்சாலர்களிடம் போகச்செய்' என்று கூறினான். பிறகு, மஹாபலசாலியும் மத்ரராஜனுமானசல்யன் மஹாவேகமுள்ள வெண்மையான குதிரைகளைச் சைத்யர்களைக்குறித்தும் பாஞ்சாலர்களைக்குறித்தும் கரூசர்களைக்குறித்தும் நடத்தினான். பகைவர்களுடைய படையை அழிப்பவனான சல்யன் பெரியசேனையில் நுழைந்து எங்கே எங்கே அந்த ரதங்கள் இருக்கின்றனவோ அங்கே அங்கே குதிரைகளை ஸந்தோஷத்துடன் நடத்தினான். பிரஜைகளுக்கு நாதரே! மேகம்போன்றதும் புலித்தோலால் நாற்புறங்களிலும் மூடப்பட்டதுமான அந்த ரதத்தைக்கண்டு பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் பயந்தார்கள். பிறகு, மஹாயுத்தத்தில் மேகத்தினது இடிமுழக்கம்போன்றதும் பிளக்கப்படுகின்றமலையினது சப்தம்போன்றதுமான ரதத்தினுடைய சப்தமானது தோன்றியது. பிறகு, கர்ணன் கூர்மையுள்ளவைகளும் காதுவரையில் இழுத்துவிடப்பட்டவைகளுமான அனேக அம்புகளால் நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் பாண்டவசேனையைக் கொன்றான். அவ்வாறு யுத்தத்தில் கார்யத்தைச் செய்கின்றவனும் (பகைவர்களால்) ஜயிக்கப்படாதவனுமான அந்தக் கர்ணனைப் பெரிய வில்லையுடையவர்களான பாண்டவர்களைச் சேர்ந்த மஹாரதர்கள் சூழ்ந்துகொண்டார்கள். சிகண்டியும் பீமனும் பார்ஷதனைத்ருஷ்டத்யும்னனும் நகுலனும் ஸஹதேவனும் த்ரௌபதீபுத்திரர்களும் ஸாத்யகியும் சரமாரிகளால் கொல்ல எண்ணம்கொண்டவர்களாக அந்தக் கர்ணனைச் சூழ்ந்துகொண்டார்கள். யுத்தத்தில் சூரனும் நரச்ரேஷ்டனுமான ஸாத்யகியோ அப்பொழுது கூர்மையுள்ள இருபது பாணங்களால் கர்ணனைத் தோள்பூட்டில் அடித்தான். யுத்தத்தில் கர்ணனைச் சிகண்டி இருபத்தைந்து பாணங்களாலும் த்ருஷ்டத்யும்னன் ஏழுபாணங்களாலும் த்ரௌபதீபுத்திரர்கள் அறுபத்துநான்கு பாணங்களாலும் ஸஹதேவன் ஏழுபாணங்களாலும் நகுலன் நூறு பாணங்களாலும் அடித்தார்கள். மஹாபலசாலியான பீமஸேனனோ யுத்தத்தில் கோபங்கொண்டவனாகப் படிந்தகணுக்களுள்ள தொண்

ஹுறுபாணங்களால் ராதேயனைத் தோள்பூட்டில் அடித்தான். பிறகு, மிக்க பலமுள்ளவனை கர்ணன் அட்டஹாஸம்செய்து உத்தமமான்வில்லை நாணேலியெழுப்பிக் கூர்மையுள்ளபாணங்களை உறுதியாக இழுத்துவிட்டான். அவர்களை ஐவைந்துபாணங்களால் திருப்பியடித்தான். பரதர்களிற் சிறந்தவரே! ராதேயன் ஸாத்யகியினுடையவில்லையும் கொடியையும் அறுத்து அவனையும் நடுமார்பில் ஒன்பது பாணங்களால் அடித்து, பிறகு, கோபங்கொண்டு முப்பது பாணங்களால் பீமஸேனனையும் அடித்தான். பெரியவரே! சத்துருக்களைத் தவிக்கச்செய்கிறவனை கர்ணன் ஒருபல்லத்தினால் ஸஹதேவனுடைய கொடியைத் துண்டாக்கினான். ஸாரதியையும் மூன்றுபாணங்களால் கொன்றான். பரதர்களுள் சிறந்தவரே! அவன் கண்களின் இமைக்கொட்டும் நேரத்துக்குள் த்ரௌபதி புத்திரர்களையும் ரதங்களை இழந்தவர்களாகச் செய்தான். அது ஆச்சரியமாயிருந்தது. கணுக்கள் உட்படிந்துள்ள அம்புகளால் அவர்கள் அனைவர்களையும் புறங்காட்டினவர்களாகச்செய்து சூரர்களான பாஞ்சாலர்களையும் மஹாரதர்களான சைத்யர்களையும் அடித்தான். பிரஜாநாதரே! யுத்தத்தில் வதஞ்செய்யப்படுகின்ற அந்தச் சைத்யர்களும் மாத்ஸ்யர்களும் கர்ணன் ஒருவனையே எதிர்த்து விரைவாக வந்து அம்புத்திரள்களை எய்தார்கள். மஹாரதனை ஸூதபுத்திரன் அவர்களைக் கூர்மையுள்ள அம்புகளால் கொன்றான். அரசரே! யுத்தத்தில் வதஞ்செய்யப்படுகின்ற அந்தச்சைத்யர்களும் மாத்ஸ்யர்களும் ஸிம்மத்தினிடம் பயந்தமிருகங்கள்போலப் பயந்து யுத்தத்தில் ஓடினார்கள். பாரதரே! பிரதாபசாலியான ஸூதபுத்திரன் ஒருவனாகவே யுத்தத்தில் சூரர்களைக் கொன்றதாகிய மிக்கஆச்சர்யகரமான இந்தச்செய்கையை நான் கண்டேன். மஹாராஜரே! அதிகமாக முயல்கின்றவர்களும் வல்லமையுடன் போர் புரிகின்றவைகளும் வில்லாளிகளுமான பாண்டவவீரர்களை யுத்தத்தில் பாணங்களால் தடுத்தான். பாரதரே! அந்த யுத்தத்தில் மஹாத்மாவான கர்ணனுடைய லாகவத்தினால் எல்லாத்தேவதைகளும் ஸித்தர்களும் சாரணர்களுடன் ஸந்தோஷமடைந்தார்கள். துர்யோதனனைச் சேர்ந்த மஹாவில்லாளிகள், சிறந்த ரதிகர்களுள் சிறந்தவனும் வில்லாளிகளுள் உத்தமனும் புருஷச்ரேஷ்டனுமான கர்ணனைப் பூஜித்தார்கள். மஹாராஜரே! பிறகு, கர்ணன் வெயிற்காலத்தில் நெருப்பானது எரிப்பதுபோலப் பகைவர்களுடைய படையை எரித்தான். கர்ணனால் வதஞ் செய்யப்படுகின்ற அந்தப் பாண்டவஸேனை

வீரர்கள் மஹாரதனான கர்ணனைக்கண்டு யுத்தத்தில்பயந்து ஆங்காங்கு ஓடினார்கள். அந்த மஹாயுத்தத்தில் கர்ணனுடைய சிறந்த வில்லினின்று விடுபட்ட கூர்மையுள்ள அம்புகளால் வதஞ் செய்யப்படுகின்ற பாஞ்சாலர்களுடைய பெரிய அழுகையொலியானது தோன்றியது. பாண்டவர்களுடைய பெரும்படையானது அந்தச் சப்தத்தினால் மிக்க பயமடைந்தது. பகைவர்கள் அந்த ஸமயத்தில் கர்ணன் ஒருவனையே யுத்தத்தில் போர்வீரனென்று எண்ணினார்கள். பகைவர்களை அழிப்பவனான கர்ணன் மீண்டும் அந்தயுத்தத்தில் ஆச்சர்யகரமான செய்கையைச் செய்தான். பாண்டவர்களனைவரும் இவனைப் பார்ப்பதற்குஞ் சக்தியற்றவர்களானார்கள். ஜலப்பிரவாகமானது சிறந்தமலையை அணுகி உடைக்கப்படுவதுபோல அந்தப்பாண்டவசேனையானது கர்ணனை அடைந்து பிளக்கப்பட்டது. அரசரே! மிக்க புஜபலமுள்ள கர்ணனும் யுத்தத்தில் புகைதணிந்த தீப்போல் ஜ்வலித்துக்கொண்டும் பாண்டவர்களுடைய பெரும்படையை எரித்துக்கொண்டும் நின்றான். மஹாராஜரே! வீரனானகர்ணன் வீரர்களுடைய தலைகளையும் குண்டலங்களுடன் கூடின காதுகளையும் கைகளையும் அம்புகளால் விரைவாக அறுத்தான். வேந்தரே! யுத்தவீரவிரதத்தை அனுஷ்டிக்கின்ற கர்ணன் யானைத்தந்தத்தினால் செய்யப்பட்ட பிடிகளையுடைய கத்திகளையும் த்வஜங்களையும் சக்திகளையும் குதிரைகளையும் யானைகளையும் பலவரதங்களையும் கொடிகளையும் விசிறிகளையும் அச்சுக்களையும் நுகத்தடிகளையும் பலவ சக்ரங்களையும் பலவாறு துண்டாக்கினான். பாரதரே! அந்தயுத்தத்தில் கர்ணனால் கொல்லப்பட்ட யானைகளாலும் குதிரைகளாலும் நெருங்கமுடியாமலிருக்கிறபோர்க்களமானது மாம்ஸங்களாலும் இரத்தங்களாலும் சேறுள்ளதாயிற்று. நாசஞ்செய்யப்பட்ட குதிரைகளாலும் காலாட்களாலும் ரதங்களாலும் யானைகளாலும் மேடுபள்ளமாகவும் ஸமமாகவுமிருக்கின்ற (யுத்தரங்கத்தில்) ஒன்றுமே அறியப்படவில்லை. கோரமான பாணாந்தகாரமும் கர்ணனுடைய அஸ்திரமும் மிகுந்தியடையவே, தன்னைச்சேர்ந்த யுத்தவீரர்களாவது பிறரைச்சேர்ந்த யுத்தவீரர்களாவது பரஸ்பரம் அறியப்படவில்லை. மஹாராஜரே! கர்ணனுடைய வில்லினின்று விடுபட்டவைகளும் ஸ்வர்ணபூஷணங்களுடன் கூடியவைகளுமான பாணங்களால் பாண்டவர்களுடைய மஹாரதர்கள் நன்றாகமூடப்பட்டார்கள். மஹாராஜரே! முயலுகின்றவர்களும் பாண்டவர்களைச் சேர்ந்தவர்களுமான அந்த மஹாரதர்கள் யுத்தத்தில் ராதேயனால்

அடிக்கடி முறியஅடிக்கப்பட்டார்கள். காட்டில் கோபங்கொண்ட சிங்கம் மிருகக்கூட்டங்களைத் துரத்துவதுபோலப் பகைவர்களான சிறந்த பாஞ்சாலரதிகர்களைத் துரத்தினான். சிறந்த பெரும்புகழை யுடையவனான கர்ணனே யுத்தத்தில் போர்வீரர்களைப் பயமடையச் செய்துகொண்டு ஓநாயானது பசுக்களுடைய கூட்டங்களைத் துரத்து வதுபோல் அந்தச்சேனையைத் துரத்தினான். புறங்காட்டி ஓடுகின்ற பாண்டவசேனையைக் கண்டு மஹாவில்லாளிகளான கௌரவர்கள் பயங்கரமான ஒலிகளை வெளியிட்டுக்கொண்டு அவ்விடத்தில் வந்தார் கள். ராஜஸ்ரேஷ்டரே! துர்யோதனனே அதிகஸந்தோஷத்துடனும் அதிகஉத்ஸாஹத்துடனும் நான்குபக்கத்திலும் பற்பலவாத்தியங்களை முழங்கச்செய்தான். அந்தயுக்தத்தில் முறிய அடிக்கப்பட்டவர்களும் பெரியவில்லையுடையவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களும் சூரர்களுமான பாஞ்சாலர்கள் அப்பொழுது மரணம்வரையில் திரும்புவதில்லை என்று எண்ணி (யுக்தந்நிற்குத்) திரும்பினார்கள். மஹாராஜரே! பகைவர்களைத் தவிக்கச்செய்கிறவனும் புருஷஸ்ரேஷ்டனுமான ராதேயன் யுத்தத்தில் திரும்பிவந்திருக்கின்றவர்களான அந்தச் சூரர் களைப் பலவாறாக நாசஞ்செய்தான். பரதகுலத்தில் உதித்தவரே! அந்தயுத்தத்தில் கர்ணனால் கோபத்துடன் பாணங்களால் இருபது பாஞ்சாலரதிகர்களும் நூற்றுக்கணக்குக்கு மேலான சைத்யர்களும் கொல்லப்பட்டார்கள். பாரதரே! பகைவர்களை வாட்டுகின்றவனும் காலன் அந்தகன் இவர்களுடைய சரீரம்போன்ற சரீரத்தையுடையவ னும்சூரனுமான ஸூதபுத்திரன் தேர்களின்நடுவிடங்களையும் குதிரை களுடையமுதுகுகளையும் சூன்யமாகவும் யானைகளின்பிடர்களைமனிதர் களில்லாதவைகளாகவும் காலாட்களை ஓடுகின்றவர்களாகவும் செய்து, நடுப்பகலில் சூரியன்போலப் பார்க்கமுடியாதவனாகப் பிரகாசித்தான். மஹாராஜரே! மஹாவில்லாளியும் பகைவர்கூட்டங்களை அழிப்பவனு மான கர்ணன் இவ்வாறு மனிதர்களையும் குதிரைகளையும் ரதிகர்களை யும் யானைகளையும் கொன்று நின்றான். மஹாபலசாலியான காலன் பூதகணங்களைக் கொன்றுநிற்பதுபோல மஹாரதனான அந்தக்கர்ணன் ஒருவனாகவே ஸோமகர்களைக் கொன்றுநின்றான். கொல்லப்படுகின்ற வர்களாயிருந்தும், பாஞ்சாலர்கள் யுத்தமுனையில் கர்ணனைவிட்டு விலகாமலிருந்தமையால் அவர்களுடைய ஆச்சரியகரமான வல்லமையை அந்த யுத்தத்தில் கண்டோம். அரசனும் துச்சாஸனனும் அவ்வாறே சரத்வானுடைய குமாரரான கிருபரும் அஸ்வத்தாமாவும் கிருதவர் மாவும் மஹா பலசாலியான சகுனியும் நூறுநூறாகவும் ஆயிரம்

ஆயிரமாகவும் பாண்டவசேனையைக் கொன்றார்கள். ராஜேந்திரரே! உண்மையான பராக்ரமமுள்ளவர்களும் ஸஹோதரர்களுமான கர்ண புத்திரர்கள் இருவரும் கோபமுள்ளவர்களாகப் பாண்டவர்களுடைய படையை இங்கும் அங்குமாகக் கொன்றார்கள். அச்சமயத்தில் க்ரூரமானதும் பெரியதுன்பத்தை உண்டுபண்ணுகின்றதுமான பெரிய யுத்தம்நடந்தது. அவ்வாறே, சூரர்களானபாண்டவர்களும் திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் மிக்க கோபங்கொண்டவர்களான த்ரௌபதீ புத்திரர்களும் உம்முடைய சேனையை எதிர்த்து நாசஞ்செய்தார்கள். இவ்வாறு, பாண்டவர்களுடைய படைக்கு ஆங்காங்கு இந்தநாசமுண்டாயிற்று. மஹாபலசாலியான பீமனை அணுகி உம்மைச் சேர்ந்தவர்களுக்கும் யுத்தத்தில் நாசமுண்டாயிற்று.

---

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

(அர்ஜுனன் விருப்பப்படி மாதவர் தேரைக் கர்ணனருகிற் செலுத்தியதும், சல்யன் கர்ணனை உத்ஸாஹப்படுத்தியதும், கர்ணன் அர்ஜுனனைப்புகழ்ந்து அவனைக் கொல்வதாகச் சபதமுரைத்ததும், ஸங்குல யுத்தமும்.)

சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனும் பீபத்ஸு என்கிற பெயர் பெற்றவனும் புருஷஶ்ரேஷ்டனுமான பல்குனன், தனித்தனியாகக் கௌரவர்களுடைய சேனையைக் கொன்று, மகாயுத்தத்தில் ஸூதபுத்திரனுடைய பரபரப்பைக்கண்டு, ரக்தத்தையே ஜலமாகக் கொண்டதும், * மாம்ஸங்களாலும் ஊனீராலும் எலும்புகளாலும் சேறுள்ளதும், மனுஷ்யர்களுடைய தலைகளாகிற கற்களுள்ளதும், யானைகளாலும் குதிரைகளாலுமமைந்த கரையுடன்கூடியதும், நன்றாகச் சிதறியிருக்கின்ற சூரர்களுடைய எலும்புக்கூட்டத்தினால் வியாபிக்கப்பட்டதும், காக்கைகளாலும் கழுகுகளாலும் எதிரொலியுள்ளதாகச் செய்யப்பட்டதும், குடைகளாகிற அன்னங்களோடும் தெப்பத்தோடுங்கூடியதும், வீரர்களாகிறமரங்களை அடித்துக்கொண்டு போகின்றதும், ஹாரங்களாகிற தாமரைமடுக்களையுடையதும்; சிறந்த தலைப்பாகைகளாகிற நுரைகளுள்ளதும்,விற்களும் பாணங்களும் த்வஜங்களுமுள்ளதும்,மணிதர்களாகிற சிறியஓடுகளுடன்கூடியதும்,கேடகங்களும் கவசங்களுமாகிற சுழலோடுகூடியதும், ரதங்களாகிற தெப்பங்களால் நிரம்பியதும், ஜயத்தில் விருப்பமுற்றவர்களால் ஸுலப

---

* இரண்டு சொற்கள் விடப்பட்டன.

மாகத் தாண்டக்கூடியதும் பயந்தவர்களால் எவ்விதத்திலும் தாண்ட முடியாததுமான ஒரு நதியை உண்டுபண்ணி வாஸுதேவரைப் பார்த்து, இந்தவாக்கியத்தை உரைக்கலானான். 'கிருஷ்ணா! யுத்தரங்கத்தில் ஸூதபுத்திரனுடைய கொடியானது இதோ காணப்படுகிறது. பீமஸேனன்முதலான இந்தவீரர்களும் மஹாரதனோடு போர்புரிகிறார்கள். ஜனார்த்தனரே! இதோ பாஞ்சாலர்கள் கர்ணனிடம் பயந்து ஓடுகின்றார்கள். இதோ துர்யோதனராஜன் வெண்மையான குடை பிடிக்கப் பட்டவனாகக் கர்ணனால் முறிய அடிக்கப்பட்ட பாஞ்சாலர்களை ஓடும்படிசெய்துகொண்டு அதிகமாகப் பிரகாசிக்கிறான். ஸூதபுத்திரனால் ரக்ஷிக்கப்படுகின்ற கிருபரும் கிருதவர்மாவும் மஹாரதரான அச்வத்தாமாவும் அரசனைக் காப்பாற்றுகிறார்கள். நம்மால் கொல்லப்படாமற்போனால் அவர்கள் ஸோமகர்களுடன் போர்புரிவார்கள். மாதவரே! கடிவாளம்பிடிப்பதில் ஸமர்த்தனும் தேர்நடவிவிருப்பவனுமான இந்தச்சல்யன் கர்ணனுடைய தேரினைநடத்திக் கொண்டு மிகவிளங்குகிறான். அந்தஇடத்தில் செல்லவேண்டுமென்கிறபுத்தி எனக்கு உண்டாயிருக்கிறது. அந்த இடத்திற்கு என்னுடைய தேரினைநடத்தும். யுத்தத்தில் கர்ணனைக் கொல்லாமல் எவ்விதத்திலும் நான் திரும்பமாட்டேன். ஜனார்த்தனரே! கர்ணன், நாம் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே, யுத்தத்தில் பார்த்தர்களையும் மஹாரதர்களான ஸ்ருஞ்சயர்களையும் யுத்தகளத்தில் மிச்சமில்லாமல் நாசமடையச் செய்யவேண்டாம்' என்று கூறினான்.

பிறகு, கேசவர், ஸவ்யஸாசியுடன் த்வந்த்வயுத்தஞ்செய்வதில் (விருப்பமுள்ளவனும்) மகிமைதங்கிய வில்லைக் கையிற்கொண்டவனுமான கர்ணனை லக்ஷ்யம்வைத்து உம்முடைய சேனையைக்குறித்து வேகத்துடன் விரைவாகச்சென்றார். அரசரே! மஹாயுத்தத்தில் அந்தக்கேசவர் எல்லாஇடங்களிலுமிருக்கின்ற பாண்டவஸைன்யங்களைச் சீக்கிரமாக யுத்தத்தில் மனத்தேறுதலடையும்படி செய்வதற்காக ரதத்தோடு விரைவாகச்சென்றார். பெரியவரே! பிறகு, இந்திரனுடைய அஸ்திரமானது பர்வதங்களில் விழுந்தால் உண்டாகும் சப்தம்போல அந்தப்பாண்டவனுடைய தேரொலியானது தோன்றியது. ஸத்யமான பராக்ரமமுள்ளவனும் அளவிடமுடியாத பலமுள்ளவனுமான பாண்டவன் உம்முடையசேனையை வெல்லக் கருதிப், பெரிதான தேரொலியுடன் எதிர்த்துச்சென்றான். அவ்வாறு வருகின்றவனும் வெண்மையான குதிரைகளையுடையவனும் வாஸுதேவரை ஸாரதியாகக் கொண்டவனுமான அந்த அர்ஜு

னைப் பார்த்து மஹாத்மாவான அவனுடையகொடியையுங் கண்டு, மத்ரராஜன் கர்ணனைப்பார்த்து, 'கர்ண! யுத்தத்தில் எவனைப்பற்றி நீ கேட்கிறாயோ வெண்மையானகுதிரைகளையுடையவனும் கிருஷ்ணனை ஸாரதியாகக் கொண்டவனுமான அந்தரதிகன் இதோ பகைவர்களை அடித்துக்கொண்டு வருகிறான். இதோ குந்தீபுத்திரன் காண்டீவமென்கிற வில்லைப் பிடித்துக்கொண்டு நிற்கின்றனன். அவனை இப்பொழுது கொல்வாயாகில் அது நமக்கு நன்மையாகும். கர்ண! சந்திரப்ரதிமைகளையும் நக்ஷத்திர ப்ரதிமைகளையும் அடையாளமாகக்கொண்டதும் கொடிகளோடும் கிண்கிணிகளோடும் கூடியதுமான அர்ஜுனனுடைய வில்லிலுள்ள இந்த நாண்கயிறானது ஆகாயத்தில் மின்னல்போல் இதோ பிரகாசிக்கிறது; பார். இதோ பார்த்தனுடைய கொடிநுனியில் நாற்புறங்களையும் பார்க்கின்றதும் பார்க்கிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகின்றதும் பயங்கரமுமான வானரம் காணப்படுகின்றது. பிரபுவே! பாண்டவனுடைய ரதத்தில் குதிரைகளை ஓட்டுகின்ற வாஸுதேவருடைய சக்கரமும் கதையும் சங்கமும் சார்ங்கமென்கிற வில்லும் இதோ காணப்படுகின்றன. ஸவ்யஸாசியினால் இழுத்துவிடப்படுகிற காண்டீவம் இதோ ஒலிக்கிறது. கைத்தேர்ச்சியுள்ள அர்ஜுனனால் பிரயோகிக்கப்பட்ட கூர்மையுள்ள இந்தப்பாணங்கள் பகைவர்களை நாசஞ்செய்கின்றன. (யுத்தத்தைவிட்டு) ஓடாதவர்களான மன்னர்களுடைய அகன்றும் நீண்டும் சிவந்துமிருக்கின்ற கண்களுள்ளவைகளும் பூர்ணசந்திரனுக்கொப்பான முகங்களுள்ளவைகளுமான தலைகளால் இந்தப்பூமியானது பரப்பப்படுகிறது. பரிகங்கள் போன்றவைகளும் சந்தனத்தினால் பூசப்பட்டவைகளும் திமிருள்ளவைகளுமான ரணசூரர்களுடைய கைகள் ஆயுதங்களுடனே இதோ தள்ளப்படுகின்றன. குதிரைவீரர்களோடு தள்ளப்பட்டவைகளும் தள்ளப்படுகின்றவைகளுமான குதிரைகள் நுனி நாக்குக்களும் கண்களும் தெறித்துப்போனவைகளாக நாசமடைந்து பூமியில் படுக்கின்றன. மலைச்சிகரங்கள் போன்றவைகளும் இமயமலையிலுண்டானவைகளுமான யானைகள் பார்த்தனால் மத்தகங்கள் நன்றாக வெட்டப்பட்டு இதோ மலைபோல் விழுகின்றன. கொல்லப்பட்ட இந்த அரசர்கள் கந்தர்வநகரம்போன்ற ரதங்களினின்று புண்யத்தின் முடிவில் ஸ்வர்க்கவாஸிகள் விமானத்திலிருந்து விழுவதுபோல விழுகின்றார்கள். ஸிம்மத்தினால் ஆயிரக்கணக்கான பற்பல மிருகக்கூட்டம் நாசஞ்செய்யப்படுவதுபோலக்

அதிகமாகத் துன்பத்துக்கு உடன்படுத்தப்பட்டிருக்கின்ற ஸைந்யத்தைப் பார். கர்ண! சிறந்த ரதிகர்களைக் கொன்றுகொண்டு உன்னை எதிர்க்கவிரும்பி அர்ஜுனன் வருகிறான். ராதேய! *அந்த அர்ஜுனனைக்குறித்து நீ தடையின்றிச் செல்வாயாக. அனேகசத்துருக்களைக் கொல்லுகின்ற அர்ஜுனனிடத்திலிருந்து விரைவாக உண்டானபயத்தினால் நான்கு பக்கத்திலும் இந்தத்தார்த்தராஷ்டிர சேனையானது பிளக்கப்படுகிறது. இந்தத் தனஞ்சயனுடைய தேகமானது மிக்க பரபரப்பையடைந்திருப்பதனால் இவன் உன்னிமித்தமாக எல்லாச்சேனைகளையும் விட்டு, விரைவுபடுகிறானென்று நான் நினைக்கிறேன். விருகோதரன் பீடிக்கப்படுந் தருணத்தில் கோபத்தினால் ஜ்வலிக்கின்ற பார்த்தன் உன்னை விட்டு வேறொருவனோடும் எதிர்த்துப் போர்புரிய எண்ணங்கொண்டு நிற்கமாட்டான். நிகரற்ற தேராளியும் பகைவர்களைத் தவிக்கச் செய்பவனுமான பார்த்தன், தர்மராஜர் தேரிழந்து மிகஅடித்துக் காயப்படுத்தப்பட்டிருப்பதைக் கண்டும் சிகண்டியும் ஸாத்யகியும் பார்ஷதனை த்ருஷ்டத்யும்னனும் த்ரௌபதீகுமாரர்களும் யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் நகுலஸஹதேவர்களும் உனக்கு வசப்பட்டிருப்பதைக் கண்டும் குரோதத்தினால் கண்கள் சிவந்து கோபமுண்டு எல்லா அரசர்களையும் கொல்லவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனாகி விரைவாக உன்னை எதிர்த்து வருகிறான். அவன் சேனைகளைவிட்டுவிட்டு ஸம்சயமில்லாமல் நம்மைக்குறித்தே விரைந்து எதிரில் வருகிறான். கர்ண! நீ இவனை எதிர்த்துச்செல். (இவ்விஷயத்தில்) வேறு வில்லாளி இல்லையன்றோ? கடலைக் கரை தடுப்பதுபோல யுத்தத்தில் கோபமுள்ள அர்ஜுனனைத் தடுக்கக்கூடிய வில்லாளி உன்னைத்தவிர வேறுஒருவனை இவ்வுலகத்தில் நான் காணவில்லை. இவனுக்குப் பக்கங்களிலும் பின்புறத்திலும் காவலை நான் காணவில்லை. இவன் ஒருவனாகவே உன்னைஎதிர்த்து வருகிறான். நீ பயன்பெறுதலைப் பார். பகைவரைத் தவிக்கச்செய்கின்றவர்களான இந்தக் கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தில் எதிர்த்துப் போர் புரிவதற்கு நீ அல்லவோ வல்லமைபொருந்தியவன்? ராதாபுத்திர! பொறுப்பு உன்னுடையதே. தனஞ்சயனை எதிர்த்து முயற்சி செய். நீ பீஷ்மரோடும் துரோணரோடும் அஸ்வத்தாமாவோடும் கிருபரோடும் ஸமானனாயிருக்கிறாயன்றோ? வருகின்ற ஸவ்ய

* 'பாரத' என்னும் சொல் விடப்பட்டது.

ஸாசியை மஹாயுத்தத்தில தடுப்பாயாக. கர்ண! ஸர்ப்பம்போல (நாக்கினால உதடுகளை) நக்கிக்கொள்ளுகிறவனும் காளைபோலக் கர் ஜிக்கின்றவனும் வனத்திலிருக்கின்ற புலிபோன்றவனுமான தனஞ் சயனை வதஞ்செய்வாயாக. மிக்கபலசாலிகளும் துர்யோதனனைச் சேர்ந்தவர்களுமான இந்த அரசர்கள் அர்ஜுனனிடம் பயந்து நடுக்க முற்றவர்களாகவும் யுத்தத்தில விருப்பமில்லாதவர்களாகவும் யுத்தத் தினின்று ஓடுகிறார்கள். ஸூதநந்தன! ஓடுகின்ற அந்த வீரர் களுடைய பயத்தைப் போக்கக்கூடியமனிதன் யுத்ததகில உன்னைத் தவிர வேறு ஒருவனுமிலலை. புருஷஸ்ரேஷ்டனே! இந்தக் கௌர வர்களனைவரும் யுததததில திட்டைப்போலிருக்கிற உன்னை அடைந்து உன்னிடத்தின்று காவலை விரும்பினவர்களாக நிற்கின் றார்கள். ராதேய! எவவிததத்திலும் வெலல முடியாதவர்களான வைதேகர்களும் அம்பஷ்டர்களும் காம்போஜர்களும் நக்னஜித்துக் களும் காநதாரர்களும் எந்தத் தைர்யத்தினால யுததததில உன்னால் ஜயிக்கப்பட்டார்களோ அந்தத் தைர்யத்தை உண்டுபண்ணிக்கொள். பிறகு, பாண்டவனை எதிர்த்துச்செல. மிக்க புஜபலமுள்ளவனே! பேராண்மையில நிலைபெற்றவனாக இருந்து, கிரீடியினால மகிழ் விக்கப்படுகின்றவரும் விருஷ்ணிகுலத்திலுதித்தவருமான வாஸு தேவனையும் எதிர்த்துச்செல' என்றான். கர்ணன், 'சலய! உன் நிலைமையில நிற்கிறாய். இப்பொழுதுதான் நீ என்மனத்துக்கு உகப் பாக இருப்பவன். மிக்கபுஜபலமுள்ளவனே! அவவாறே தனஞ்ச யனிடத்தில பயப்படாதவனாகவும் தோற்றுகிறாய். சிக்ஷைபெற்றி ருக்கின்ற என்னுடைய இரண்டுகைகளின்பலத்தையும் இப்பொழுது பார். என்னுடைய பயிற்சிவன்மையையும் பார். ஆண்மையிற் சிறந் தவனே! நான் ஒருவனாகவே இப்பொழுது பாண்டவர்களுடைய பெரும்படையைக் கொலவேன்; பிறகு, கிருஷ்ணார்ஜுனர்களையும் கொலவேன். உண்மையை உன்னிடததில உரைக்கிறேன். அந்த இரண்டு வீரர்களையும் யுத்தத்தில கொலலாமல எவவிதத்திலும் நான் திரும்பப்போகிறதிலலை. அவர்களாலாவது அடிக்கப்பட்டு நான் படுப்பேன். யுதததில ஜயமானது நிலையற்றதன்றோ? நான் இப் பொழுது (அவர்களைக்) கொன்றோ, அலலது (அவர்களால) நான் கொலலப்பட்டோ கிருதார்த்தனாகப்போகிறேன்' என்றுகூறினான். சலயன், 'கர்ண! மஹாரதர்கள், ரதிகர்களுள் சிறந்தவீரனான இந்த அர்ஜுனனை ஏகாகியாயிருந்தாலே ஜயிக்கமுடியாதவனென்றுசொல் லுகிறார்கள். கிருஷ்ணனால நாற்புறத்திலும் காக்கப்பட்டிருக்கிற இந்த

அர்ஜுனனைஜயிக்க எவன் இவ்வுலகத்தில் ஸாமர்த்தியமுள்ளவன்?' என்று சொன்னான்.

கர்ணன், 'இப்படிப்பட்ட உத்தமரதிகன் உலகத்தில் ஒருபொழுதும் இருந்ததில்லை. நாம் முழுதும் கேட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட இந்தப்பார்த்தனை எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். பெரும்போரில் எனதாண்மையைப்பார். கௌரவராஜகுமாரனே இந்தத்தேர்வீரன்வெண்மையானகுதிரைகளோடுயுத்தபூமியில் ஸஞ்சரிக்கிறான். இப்பொழுது, அவனுவது என்னைக் கஷ்டத்தை அடைவிக்கப்போகிறான். கர்ணனுவது அவனுக்கு நாசத்தை உண்டுபண்ணுவதில் இந்தச்சமயத்தில் ஸமர்த்தனாவான். ராஜகுமாரனே இந்த அர்ஜுனனுடைய இரண்டுகைகளும் வேர்வையில்லாதவைகளும் நடுக்கமற்றவைகளும் தழும்புள்ளவைகளும் பெரியவைகளுமாயிருக்கின்றன. திடமான ஆயுதங்களையுடையவனும் முயற்சியுள்ளவனும் கைச்சுறுசுறுப்புள்ளவனுமான ஒருயுத்தவீரன் அர்ஜுனனுக்கு ஸமானனாக (உலகத்தில்) இல்லை. இவன் கழுகிறகுகள்பூண்ட அனேகபாணங்களையும் எடுக்கிறான்; அவைகளை ஒருபாணம் போல விரைவாக நாண்கயிற்றிற் பூட்டிஎய்கிறான். அவைகள் ஒருகுரோசதூரம்சென்றும் வீணாகாமல் (லக்ஷயத்தில்) தாக்குகின்றன. பூமியில் எந்தயுத்தவீரன் இவனுக்கு நிகராயிருக்கிறான்? கிருஷ்ணனைத் துணையாகக்கொண்டவனும் பராக்ரமமுள்ளவனும் அதிரதனுமான அர்ஜுனன் காண்டவவனத்தில் அக்கினியை மகிழ்வித்தான். அப்பொழுது மஹாத்மாவான கிருஷ்ணன் சக்கரத்தைப் பெறறான். இடக்கையினாலும் அம்புகளைத்தொடுக்கின்றவனும் நீண்டகைகளையுடையவனும் உதாரமனமுள்ளவனும் பாண்டுவின் புதல்வனுமான அர்ஜுனன் அக்னியினிடத்தினின்று காண்டீவம் என்கிறவில்லையும் வெண்மையான குதிரைகள்கட்டிய நல்லசத்தமுள்ள உக்கிரமான ரதத்தையும் திவ்யரூபமுள்ள அம்பறாத்தூணிகளையும் தெய்வத்தன்மைவாய்ந்த சஸ்திரங்களையும் பெற்றான்; இந்திரலோகத்தில் கணக்கிடமுடியாதவர்களான தைத்யர்களையும் எல்லாக்காலகேயர்களையும் கொன்றான்; அந்தத் தேவலோகத்தில் தேவதத்தமென்கிற சங்கத்தையும் பெற்றான். அந்த அர்ஜுனனைவிட மேலானமனிதன் பூமியில் எவன் இருக்கிறான்? சல்ய! மஹானுபாவனும் மஹாதேவரை அஸ்திரங்களாலும் நேரில்செய்த நல்லயுத்தத்தினாலும் ஸந்தோஷிக்கச் செய்தவனும் அவரிடத்தினின்று மூவுலகங்களையும் கொல்லும்திறமையுள்ளதும் மிக்ககோரமாயிருப்பதுமான பாசுபத மஹாஸ்திரத்தைப் பெற்ற

வனும் யுத்தத்தில் லோகபாலர்களால் தனித்தனியாகவும் ஒன்றுசேர்ந் தும் எண்ணுதற்கரியவையான மஹாஸ்திரங்களைக் கொடுக்கப் பெற்றவனும் புருஷஶ்ரேஷ்டனும் காலகேயர்களுடன் ஒன்று சேர்ந்த அஸுரர்களை அஸ்திரங்களால் யுத்தத்தில் விரைவாகக் கொன்றவனும் அவ்வாறே விராடனுடைய நகரத்தில் சேர்ந்திருக் கின்ற நம்மனைவரையும் ஒரேதேரினால் வென்று யுத்தமத்தியில் அந்தப்பசுக்கூட்டத்தைத் திருப்பி மஹாரதர்களுடைய ஆடைகளை யும் உரிந்தவனும் வீர்யத்துடனும் குணங்களுடனும் கூடியவனும் கிருஷ்ணனை ஸஹாயனாகக் கொண்டவனும் அரசர்களுள் சிறந்த வனுமான அர்ஜுனனை நான் யுத்தத்திற்கு அழைப்பதான இதனை எல்லாஉலகங்களிலும் மிக்கஸாஹஸமென்று நினைக்கிறேன். மஹாத் மாவும் சங்கத்தையும் சக்கரத்தையும் கத்தியையும் கையில்கொண் டவரும் எங்கும் வியாபித்திருப்பவரும் ஜயசீலரும் வஸுதேவ ருடைய புத்திரரும் சேர்ந்திருக்கின்ற எல்லாஉலகங்களாலும் பதினா யிரம் வர்ஷங்களால்கூடச் சொல்லமுடியாத குணங்களுள்ளவரும் முடிவற்ற வீர்யமுள்ளவரும் நிகரில்லாதவரும் நாராயணருமான கேச வரால் காக்கப்பட்டிருக்கின்றான். ஒருரதத்தில் சேர்ந்திருப்பவர் களான கிருஷ்ணார்ஜுனர்களைப் பார்த்தும் எனக்குப் பயமும் நடுக்க மும் உண்டாகவில்லை. இந்தஅர்ஜுனன் வில்வித்தையில் ராஜகுமா ரர்களை மீறினவன். கேசவரும் சக்கரயுத்தத்தில் மற்றவர்களை மீறி னவர். இமயமலையும் தன்னிருப்பிடத்தை விட்டு அசைவுறும்; வஸுதேவநந்தனராகவும்இப்படிப்பட்ட பாண்டுநந்தனனாகவும் இருக் கிற கிருஷ்ணார்ஜுனர்கள் அசையமாட்டார்கள். இவ்விருவர்களும் சூரர்கள்; பலசாலிகள்; திடமான ஆயுதங்களையுடையவர்கள்; மஹா ரதர்கள்; நல்ல தேகமுள்ளவர்கள். சேர்ந்திருக்கின்றவர்களும் புருஷ ஶ்ரேஷ்டர்களுமான இவ்விருவீரர்களும் இருப்பிடத்தினின்று நழுவின தேவகுமாரர்கள்போலஇருக்கின்றார்கள். இவர்கள் அக்னிசூர் யர்களோ! இந்திரபிருஹஸ்பதிகளோ! யமாந்தகர்களோ! சந்திரஸூர் யர்களோ! பகனுடைய அம்சபூதர்களான மித்திராவருணர்களோ! அஶ்வனிதேவர்களோ! மருத்கணங்களோ! சேர்ந்திருக்கின்ற வஸுக் களோ! வீரர்கள் தனித்தனியாகவாவது சேர்ந்தாவது யுத்தத்தினால் அச்சுதரையும் அர்ஜுனனையும் பலாத்காரமாக ஜயிப்பதற்குச் சக்தி யுள்ளவர்களாகார்கள். சல்ய! அப்படிப்பட்ட இந்த அர்ஜுனனையும் வாஸுதேவரையும் என்னைத்தவிர வேறுஎவன் எதிர்ப்பான்? எல்லா விருஷ்ணி வீரர்களுடைய ஐஶ்வர்யமும் வாஸுதேவரிடத்தில் நிலை

பெற்றிருக்கின்றது. எல்லாபபாண்டுபுததிரர்களுடைய ஜயமும் பார்த் தனிடததில நிலைபெறறிருககிறது. புருஷஸரேஷடாகளான அவ் விருவரும் ஒருரததத்திலிருநதுகொண்டு என்னை ஒருவனை எதிரதது யுததம் செயயப்போகின்றார்கள சலய! என்னுடைய பிறப்பா னது மேனமை பெறறது. ஸநதோஷிககிறேன. தாமதததிறகு இது ஸமயமன்று. என்னுடைய இநத ரதத்தை விரைவாக நடதது. இவவிருவாகளையும் இவவிதம் எதிரததுச செலலுகிறேன். இநத முகூாததததில கொல்லபபட்ட கிருஷ்ணாஜுனாகளையாவது அலலது அநத இரண்டு சததுருககளாலே யுததததில கொலலப பட்ட என்னையாவது பார்' என்று கூறினான்.

'இவவாறு சொலலுகின்ற மஹாரதனை ஸூதபுததிரன் விரை வாகப பாண்டவனை எதிரததுசசென்றான். குருவீராகளுள சிறந்த மஹாரதாகளான கிருபா, போஜனை கருதவாமா, இளையஸஹோதரா களுடன் கூடின காநதாராதிபதியான சகுனி, குருவான துரோண ருடைய குமாரர், உம்முடைய குமாராகள, அவவாறே கலாட்களு டைய கூட்டஙகள், யானைவீராகள ஆகிய இவாகளுககு எதிரிலவந்து உம்முடைய புததிரனான துரியோதனன் அபபொழுது அவாகளைப் புகழ்ந்து 'கிருஷ்ணாஜுனரிருவாகளையும் தகையுஙகள; எதிரததுச செலலுஙகள, எலலாவிததததாலும் விரைவாகக களைபபடையச செயயுஙகள. உஙகளால நன்றாகக காயபபடுததபபட்ட இருவாகளை யும் என்னுடைய ஸேனாபதி எளிதிற கொலலும்படி செயயுங கள்' என்று ஸமீபததில வநது உரைததான. சிறநத வீாயமுடைய வர்களான அவாகள, 'அவவாறே ஆகட்டும்' என்று சொலலி விட்டு, விரைவுள்ளவாகளாகவும் அாஜுனனைக கொலலவேண்டு மென்ற எண்ணமுளளவாகளாகவும் அவனை நோககி நன்றாக எதிரததுச சென்றாகள. காணனுடைய கட்டளையை அனுஷ்டிக கின்ற மஹாரதர்கள அநத அாஜுனனை யுததததில அம்புகளாலடித தாாகள். அதிகஜலததையுடைய மஹாஸமுததிரமானது நதிகளையும் நதஙகளையும் குடிபபதுபோல அாஜுனன் யுததததில அவாகளைக் குடிததுவிட்டான். அவன் உததமமான பாணஙகளைத தொடுக்கின் றவனாகவாவது அபபடியே விடுகின்றவனாகவாவது பகைவர்களால காணபபட்டவில்லை. தனஞசயனால பிரயோகிககப்படும் அம்பு களாலே பிளக்கபபட்ட மனிதாகளும் குதிரைகளும யானைகளும் உயிரை இழநது விழுந்தனா. கிரணஙகள போன்ற பாணஙகளை யுடையவனும் அழகியமண்டலம் போன்ற காண்டீவததையுடைய

வனும் யுகத்தின் முடிவுக்காலத்திலுள்ள ஸூர்யனுக்கு ஒப்பான தேஜஸுள்ளவனுமான விஜயனை, கண்ணுள்ள ஜனங்கள் எவ்வாறு ஸூர்யனைப்பார்க்கச்சக்தியற்றவர்களோ அவ்வாறு கௌரவர்கள் ஏறிட்டுப் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பார்த்தன் மகாரதர்களால் நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட உத்தமமான பாணங்களை உரக்கச் சிரித்துக்கொண்டு பாணஸமூகங்களினால் துண்டாக்கினான். காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனன் மீண்டும் வில்லை வட்டமாக வளைத்து இழுத்துவிடப்பட்ட அம்புகளால் அந்த அம்புத்திரள்களை நாசஞ்செய்தான். அரசர்களுட் சிறந்தவரே! ஆனி ஆடி மாதங்களுடைய மத்தியத்தை அடைந்தவனும் உக்கிரமான கிரணங்களுள்ளவனுமான ஸூர்யன் நீர்ப்பெருக்கை நாசம் செய்வதுபோல அர்ஜுனன் பாணஸமூகங்களை* நாசம்செய்து உம்முடையசேனையை எரித்தான். கிருபரும் அவ்வாறே போஜனும் உம்முடையபுத்திரனும் மகாரதரான துரோணபுத்திரரும் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு அந்த அர்ஜுனனை எதிர்த்து ஓடிவந்தார்கள். மேகங்கள் மலையின்மீது நீர்த்தாரைகளைப்பெய்வதுபோலப் பாணங்களை இறைத்தார்கள். அந்தப்பாண்டவன் (தன்னைக்) கொல்ல எண்ணங் கொண்டவர்களும் ஸமர்த்தர்களும் மகாபலசாலிகளுமான அந்தக்கௌரவவீரர்களாலே முயற்சியுடன் பிரயோகிக்கப்பட்ட அந்தஉத்தமமான பாணங்களை விரைவுடன் அம்புகளால வெட்டி அந்தச்சத்துருக்களை மும்மூன்று பாணங்களால் பிளந்தான். வட்டமான காண்டீவமாகிற பூர்ண மண்டலத்துடன்கூடியவனும் பகைவர்களை வாட்டுகின்றவனுமான அந்த அர்ஜுனனாகிறஸூர்யன், அம்புகளாகிற உக்கிரமான கிரணங்களுடன் கூடியவனாக, ஆனி ஆடிமாதங்களுடைய மத்தியத்தை அடைந்தவனும் அவ்வாறே நாறபுறத்திலுமுள்ள வட்டமான ரேகையுடன்கூடினவனுமான ஸூர்யன்போல விளங்கினான். பிறகு, துரோணபுத்திரர் சிறந்த பத்துப்பாணங்களால் தனஞ்சயனையும் மூன்று பாணங்களால் அச்சுதரையும் நான்குபாணங்களால் நான்கு குதிரைகளையும் பிளந்தார்; பிறகு, வானரத்தின்மீதும் அம்புகளையும் சிறந்தநாராசங்களையும் இறைத்தார். பிறகு, தனஞ்ஜயன் நன்றாகப்பிரகாசிக்கின்ற அந்ததுரோணபுத்திரருடைய வில்லையும் ஸாரதியினுடைய தலையையும் மூன்றுபாணங்களால அறுத்தான். நான்கு பாணங்களால நான்கு குதிரைகளையும் மூன்றுபாணங்களால்

* 'நிரஸ்ய' என்பதுமூலம்; 'வாரியிறைத்து' என்றும் கொள்ளலாம்.

கொடியையும் துரோணபுத்திரருடையரதத்திலிருந்து தள்ளினான். குணங்கள் நிரம்பியவரான அந்தத்ரோணபுத்திரர் கோபத்தால்நிறை தவராகி அளவில்லாத வஜ்ரங்களாலும் பொன்னாலும் அலங்கரிக்கப் பட்டதும் தக்ஷகனுடைய உடல்போலப் பிரகாசிக்கின்றதுமான வேறொரு வில்லை அந்த அர்ஜுனனைக்கொல்லுவதற்காகச் சிறந்தபெரிய ஸர்ப்பத்தைப்போலக் கையிலெடுத்தார். அவர் தம் ஆயுதத்தைப் பூமியில் எறிந்துவிட்டு வில்லைநாணேற்றி ஜயிக்கப்படாதவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவர்களையும் நன்குமதித்துக்கொண்டு உத்தமமான பாணங்களால் ஸமீபத்திலிருந்து அடித்தார். மஹாரதர்களும் யுத்தமுனையில் நிற்பவர்களுமான கிருபரும் உம்முடைய குமாரனும் க்ருதவர்மாவும் அந்தக் கௌரவவீரர்களும் யுத்தத்தில் பாண்டவஸ்ரேஷ்டனை அனேக பாணங்களால் (அடித்துக் கொண்டு) ஸூர்யனை மேகங்கள் சூழ்வதுபோலச் சூழ்ந்தார்கள். ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீர்யார்ஜுனனுக்கு ஒப்பான பராக்ரமமுள்ள பார்த்தன் கிருபருடைய அம்புகளுடன்கூடின வில்லையும் குதிரைகளையும் த்வஜங்களையும் ஸாரதியையும், முற்காலத்தில் வஜ்ரபாணியான இந்திரன் பலியை அடித்ததுபோலப் பாணங்களாலடித்தான். பார்த்தனுடைய பாணங்களால் ஆயுதங்கள் (அடித்துத்) தள்ளப்பட்ட அந்தக் கிருபர் மஹாயுத்தத்தில் த்வஜம் நாசஞ்செய்யப்பட்ட பிறகு, கிரீடியினால் முன்பு பீஷ்மர் கட்டப்பட்டதுபோல ஆயிரம்பாணங்களால் கட்டப்பட்டார். அர்ஜுனன் கர்ஜிக்கின்ற உமது குமாரனுடைய த்வஜத்தை அம்புகளால் துண்டாக்கினான்; வில்லையும் அறுத்தான்; கிருதவர்மாவினுடைய மங்களகரமான குதிரைகளையும் கொன்றான்; கொடியையும் துண்டாக்கினான். அந்த அர்ஜுனன் விரைவுடன் உமதுகுமாரனுடைய குதிரைகளையும் ஸாரதிகளையும் வீரர்களையும் கொடிகளையும் யானைவீரர்களையும் குதிரைவீரர்களையும் தேராளிகளையும் அழித்தான். பிறகு, நான்கு பக்கங்களிலும் சிதறியிருக்கின்ற மிக்கபெரிதான உம்முடைய சேனை ஸூர்யனுடைய தேஜஸினால் துன்புறுத்தப் படுவதுபோல அர்ஜுனனுடைய பிரதாபத்தினால் மிகவும் துன்புறுத்தப்பட்டது. பிறகு, கேசவர் துன்பமுற்றிருக்கிற சத்துருக்களை அர்ஜுனனுடைய ரதத்தினால் விரைவாக வலமாகச் சுற்றி வந்தார். பிறகு, யுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவர்களான மற்ற வீரர்கள் விருத்திரனைக்கொன்ற இந்திரனைப்போல விரைவுடன் செல்லுகின்ற தனஞ்சயனை நல்ல குதிரைகள் பூட்டப்பட்டவை

களும் மறுபடியும் துவஜங்கள் தூக்கி நிறுத்தப்பட்டவைகளுமான தேர்களோடு பின்தொடர்ந்து ஓடினார்கள். பிறகு, மஹாரதர்களான சிகண்டியும் ஸைனேயனும் நகுலஸஹதேவர்களும் தனஞ்சயனைப் பின்தொடர்ந்து செல்லுகின்ற பகைவர்களை எதிர்த்து ஓடித் தடுத்துக் கூர்மையுள்ள பாணங்களால் பிளந்து மிக்கபயங்கரமாகக் கர்ஜித்தார்கள். பிறகு, கோபங்கொண்டவர்களும் ஜயத்திலும் ஸ்வர்க்கத்தைஅடைவதிலும் விருப்பமுள்ளவர்களுமான கௌரவர்கள், அஸுரர்கள் தேவராஜனை ஹிம்ஸித்ததுபோல நேராகச் செல்லுகின்றவைகளும் நன்கு தீட்டப்பட்டவைகளுமான பாணங்களால் ஸ்ருஞ்சயர்களோடு பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். பகைவர்களைத் தவிக்கச் செய்பவரே! யானைகளும் குதிரைகளும் விழுந்தன. ரதிகர்களும் விழுந்தார்கள். அவ்வாறே வீரர்கள் அனைவர்களும் நன்றாக விடப்படும் பாணங்களால் தனித்தனியாக ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். அரசரே! மஹாபலசாலிகளான சிறந்த யுத்தவீரர்களால் மகாயுத்தத்தில் பரஸ்பரம் (எய்யப்படுகின்ற) பாணங்களால் இருளானது உண்டுபண்ணப்பட்டிருக்குந்தருணத்தில், நான்கு திக்குக்களும் திக்கோணங்களும் சூரியனுடைய ஒளியும் இருளால் மூடப்பட்டனவாயின.

---

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

(ஸங்குல யுத்தம்.)

அரசரே! பாரதரே! மிக்க சிறப்புற்றவைகளான கௌரவர்களுடைய சேனைகளால் எதிர்க்கப்பட்டவனும் மூழ்குகின்றவனைப் போலிருப்பவனும் குந்தீபுத்திரனுமான பீமனை மேலே தூக்கிவிடக் கருதிய தனஞ்சயன், கர்ணனுடைய சேனையை அம்புகளால்அதிகமாக அடித்துச் சத்துருவீரர்களை யமலோகத்துக்கு அனுப்பினான். பிறகு, இந்த அர்ஜுனனுடைய சரக்கூட்டங்கள் துண்டு துண்டாக ஆகாயத்தை அடைந்து காணப்பட்டன. அவ்வாறே, மற்றப் பாண்டவவீரர்களும் உம்முடைய சேனையைக்கொன்றார்கள். மஹாபாகுபலமுள்ள அந்தத் தனஞ்சயன் பறவைக்கூட்டங்கள் ஸஞ்சரிக்கின்ற ஆகாயத்தைப் பாணங்களால் நிரப்பிக்கொண்டு கௌரவர்களுக்கு யமனானான். பிறகு, அவன் பல்லங்களாலும் க்ஷுரப்ரங்களாலும் பளபளப்பான நாராசங்களாலும் சரீரங்களை வெட்டினான்; தலைகளையும் அறுத்தான். சரீரங்கள் வெட்டப்பட்டவர்களும் கவசங்களை இழந்தவர்களும் தலை

களை இழந்தவர்களும் நான்கு பக்கத்திலும் தள்ளப்பட்டவர்களும் விழுகின்றவர்களுமான யுத்தவீரர்களால் (யுத்தபூமியானது) நன்றாக மூடப்பட்டது. தனஞ்சயனுடைய அம்புகளால் அடிக்கப்பட்ட தேர்களாலும் குதிரைகளாலும் ரதிகர்களாலும் யானைகளாலும் நன்றாக வெட்டப்பட்டவர்களும் பிளக்கப்பட்டவர்களும் அழிக்கப் பட்டவர்களும் அங்கங்களையும் அங்கங்களுடைய அவயவங்களை யும் இழந்தவர்களும் உயிர்துறந்தவர்களும் உயிருடன் கூடியவர் களுமான மனிதர்களாலும் பூமியானது பரப்பப்பட்டதாயிற்று. மன்னரே! ரணபூமியானது வைதரணீநதிபோல் எவ்விதத்தினு லும் நாடமுடியாததும் அதிகமாக மேடுபள்ளமுள்ளதும் கோர ரூபத்துடன்கூடியதும் மிகவும் பார்க்கமுடியாததும் ஆயிற்று. பூமியானது ஏர்க்கால்களாலும், சக்கரங்களாலும், அச்சுக்களாலும், பல்லங்களாலும் குதிரைகளை இழந்தவைகளும் குதிரைகளுடன் கூடியவைகளும் ஸாரதிகளுடன் கூடினவைகளும் ஸாரதிகள் கொல் லப்பட்டவைகளுமான யுத்தவீரர்களுடைய தேர்களாலும், பரப்பப் பட்டதாகிறது. பொற்கவசங்களணிந்தவர்களும் ஸன்னைகமுள்ளவர் களும் பொன்மாலையைத் தரித்தவர்களுமான போர்வீரர்களால் வீற்றி ருக்கப்பட்டவைகளும் கவசம் பூட்டப்பெற்றவைகளும் எப்பொழு தும் மதப்பெருக்குள்ளவைகளும் பத்ரமென்கிற வகுப்பைச் சார்ந்த வைகளுமான யானைகள் க்ரூரர்களான யானைவீரர்களால் தூண்டப் பட்டவைகளாகக் கோபத்துடன் அர்ஜுனனை எதிர்த்துச்சென்றன. கிரீடியினால் அடிக்கப்பட்டநானூறு சிறந்ததேர்கள், தள்ளப்பட்டவை களும் பிராணிகளுடன்கூடியவைகளுமான பெரியமலையின் சிகரங் கள்போல் விழுந்தன. தனஞ்சயனுடைய பாணங்களால் தள்ளப்பட்ட சிறந்தயானைகளால் பூமியானது மூடப்பட்டது. அவனுடைய ரத மானது நான்குபக்கங்களிலும் மேகங்கள்போல் விளங்குகின்றவை களும் மதஜலத்தைப் பொழிகின்றவைகளுமான யானைகளை ஸூர்யன் மேகங்களைப் பிளப்பதுபோல் எதிர்த்துத் தாக்கியது. பல்குனனால் கொல்லப்பட்ட யானைகளாலும் மனிதர்களாலும் குதிரைகளாலும் பலவாறாக உடைக்கப்பட்ட ரதங்களாலும் சஸ்திரங்களையும் யந்திரங் களையும் கவசங்களையும் இழந்து உயிர்துறந்திருக்கின்ற யுத்தவீரர் களாலும் அறுத்துத் தள்ளப்பட்ட ஆயுதங்களாலும் வழியானது மூடப்பட்டதாயிற்று. நாணொலியுள்ளதாகச் செய்யப்பட்ட காண் டீவமானது கர்ஜிக்கின்ற மேகம் பேரிடிமுழக்கத்தை உண்டுபண்ணு வதுபோலப் பயங்கரமான சத்தத்தை உண்டுபண்ணியது. பிறகு,

தனஞ்சயனுடைய அம்புகளாலடிக்கப்பட்ட சேனையானது ஸமுத்திரத்தில் பெருங்காற்றினால் நாற்புறங்களிலும் அடிக்கப்பட்ட பெருங்கப்பல்போலப் பிளக்கப்பட்டது. காண்டீவத்தினால் பிரயோகிக்கப்பட்டவைகளும் பற்பல ரூபங்களுள்ளவைகளும் உயிரைவாங்குகின்றவைகளும் கொள்ளிக்கட்டை தூமகேது வஜ்ராயுதம் இவைகள் போன்றவைகளுமான பாணங்கள் உமது படையை எரித்தன. பெரிய மலையின்மீதுள்ள மூங்கிற்காடானது இரவில் எரிந்தாற்போல உம்முடைய பெருஞ்சேனையானது பாணங்களால பீடிக்கப்பட்டு அதிகமாகத் துடித்தது. கிரீடியினால் மிகஅடிக்கப்பட்டதும் பெரும்பாலும் நாசஞ்செய்யப்பட்டதும் பாணங்களால் கொல்லப்பட்டும் சின்னபின்னம் செய்யப்பட்டிருப்பதுமான உம்முடைய அந்தச் சேனையானது, நான்கு திக்குக்களிலும் ஓடியது. ஸவ்யஸாசியினால் நன்றாக எரிக்கப்பட்ட கௌரவர்கள் *பெருங்காட்டில் காட்டுத்தீயினால் பயமுறுத்தப்பட்ட மிருகங்களுடைய கூட்டங்கள்போலச் சுழன்றார்கள். அதிக பயத்தை அடைந்திருக்கின்ற கௌரவர்களுடைய படையானது மிக்க தோள்வலியமைந்த பீமஸேனனை யுத்தத்தில் விட்டுவிட்டு முழுதும் புறங்காட்டி ஓடியது. பிறகு, கௌரவர்கள் தோல்வியடைவிக்கப்பட்ட தருணத்தில் ஜயிக்கப்படாதவனான அந்தப் பீபத்ஸு பீமஸேனனை அடைந்து ஒருமுகூர்த்தம் எதிரிலிருந்தான். பாரதரே! பல்குனீநக்ஷத்ரத்திலுதித்தவனான தனஞ்சயன் பீமஸேனனோடு சேர்ந்து அலோசனைசெய்து அவனிடத்தில் யுதிஷ்டிரர் சல்யங்கள் நீங்கினவராகவும் துன்பமற்றவராகவும் இருக்கிறாரென்பதைச்சொல்லிப் அவனாலே அனுமதி கொடுக்கப்பட்டவனாகி, பிறகு, ரதத்தின் ஒலியினால் பூமியையும் ஆகாயத்தையும் ஒலியிடும்படிசெய்துகொண்டு; அவ்விடத்தினின்று புறப்பட்டுச் சென்றான்.

பிறகு, பகைவர்களை வாட்டுகிறவனான தனஞ்சயன், துச்சாஸனனுக்கு இளையவர்களும் வீரர்களுமான உம்முடைய குமாரர்கள் பதின்மர்களால் சூழப்பட்டான். பாரதரே! நாணேற்றப்பட்ட விற்களையுடையவர்களும் நர்த்தனம் செய்கின்றவர்கள் போன்றவர்களுமான அந்த வீரர்கள், கொள்ளிகளால் யானையைத் துன்புறுத்துவதுபோல அவனைப் பாணங்களால் துன்புறுத்தினார்கள். மதுஸூதனர் ரதத்தினால் அவர்களை இடமாகச் சுற்றிச்சென்றார். ஏனெனில், அவர், அவர்கள் கிரீடியினால் உடனே யமனிடம் அனுப்பப்பட்டுவிடுவார்

* வேறுபாடம்.

கனென்றே எண்ணினார். அவ்வாறு திரும்பிப்போகின்றவன்போ லிருக்கின்ற அர்ஜுனனைப்பார்த்து * வேறு சில மூடர்கள் உரக்கக் கர்ஜித்தார்கள். பார்த்தன், அடிக்கடி கர்ஜிக்கின்ற அந்த வீரர்களு டைய கொடிகளையும் குதிரைகளையும் விற்களையும் ஸாரதிகளையும் நாராசங்களாலும் பிறைக்கணைகளாலும் விரைவாக அறுத்தான். பிறகு, வேறு பத்துப்பல்லங்களால் அவர்களுடைய தலைகளைத் தள்ளினான். கோபத்தினால் சிவந்த கண்களையுடையவைகளும் நன் ருகக் கடிக்கப்பட்டிருக்கிற உதடுகளையுடையவைகளும் பூமியில் விழுந்திருப்பவைகளுமான அவர்களுடைய முகங்கள் ஆகாயத்தில் நக்ஷத்திரங்களுடைய கூட்டங்கள்போல் விளங்கின. பகைவர்களைக் கொல்லுகிறவனான அர்ஜுனன், பொன்னாலாகிய தோள்வளைகளை அணிந்தவர்களான அந்தப் பத்துக்கௌரவவீரர்களையும் பொற் புங்கமுள்ளவைகளும் மிக்க வேகமுள்ளவைகளுமான பத்துப்பாணங் களால் அடித்துவிட்டு வேறிடம் சென்றான்.

---

* 'தயாநெ வாணஉநு உெவா:' என்பது மூலம். 'ததெவ வாஜவநு மெரா:' என்பது நீலகண்டவ்யாக்யான புஸ்தக பாடம்.

'திருதராஷ்டிரகுமாரர்களில் பதின்மரை அர்ஜுனன் கொன்றான்' என்று பொருள்தரும்படியான நீலகண்டவ்யாக்யானபாடமும் அதனைப்பின்பற்றிய இரண்டு இங்கிலீஷ்மொழிபெயர்ப்புக்களும் பொருந்துமேற்கொள்க. நேரான பாடங்கொண்ட T. R. கிருஷ்ணசார்யரவர்களும் அர்ஜுனன் அந்தப்பதின் மரைக்கொன்றதாகவே நிச்சயித்துக் குறிப்புஎழுதியிருக்கிறார்கள். இங்ஙனம் சொல்லுதல், முன்பின்கதைத்தொடர்ச்சிக்கு விரோதமாகும். அர்ஜுனன் அப்படிக்கொன்றிருந்தால், பலநீங்குகள் விளையலாகும். அது யுத்தமுறையும் அன்று. ஸர்வஜ்ஞனான வாஸுதேவன் தேரினை அவர்களுக்கு இடமாகச்செலு த்தியது இவற்றைத் திருவுளத்திற்கொண்டேபோலும். மேலும், 'பொற்புங்க முள்ள பத்துப்பாணங்களால் அவர்களையே திரும்பவும் அடித்தான்' என்றால், 'தலையற்றமுண்டங்களை அடித்தான்' என்ற பொருள்தந்து, சுத்தவீரனான அர்ஜு னனுடையபெருமைக்கு ஒருபெருங்குறை தோன்றநிற்கும்: இங்கே, ஸ்லோகங் களிலுள்ள சொல்லமைப்பும் ஆராயத்தக்கது.

திருதராஷ்டிரகுமாரர்களில பதின்மரை அர்ஜுனன்கொன்றதாகப் பொ ருள்தரும் பாடமே கொள்வர் சிலர். அவர், 'ஸ்ரீமஹாபாரதத்தில் எளிதிற் பொருள்செய்யமுடியாத பலவிஷயங்கள் உள்ளன. எழுவகைப் பேதங்கள் முதலிய முறைகளைக்கொண்டு அவற்றிற்கு அர்த்தநிச்சயம் செய்யவேண்டும். எழுவகைப்பேதங்களாவன:—(1) வ்யத்யாஸம் (2) ப்ராதிலோம்யம் (3) கோ மூத்ரீ (4) ப்ரஹஸம் (5) உத்க்ஷணம் (6) ஸுந்தரம் (7) ஸாது என்பன. அவைக ளுள், வ்யத்யாஸம், 'தேசவ்யத்யாஸம், காலவ்யத்யாஸம், புருஷவ்யத்யாஸம்'

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

(ஸங்குலயுத்தம்.)

மஹா வேகமுள்ள குதிரைகளுடன் வருகின்ற அந்தச் சிறந்த வானரத்வஜனை வீரர்களான தொண்ணூறு கௌரவரதிகர்கள் யுத்தத்திற்காக எதிர்த்துச்சென்றார்கள். புருஷஸ்ரேஷ்டர்களான ஸம்சப்தகர்கள் பரலோகஸாதகமான கோரமான சபதத்தைச் செய்துகொண்டு புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனனை யுத்தத்தில் சூழ்ந்துகொண்டார்கள். வாஸுதேவர், மஹாவேகமுள்ளவைகளும் ஸ்வர்ணமயமான பூஷணங்களுடன் கூடியவைகளும், முத்துமயமான மேல்விரிப்புக்களால் மூடப்பட்டவைகளுமான வெண்மையான குதிரைகளைக் கர்ணனுடைய ரதத்தைநோக்கிச்செலுத்தினார். கர்ணனுடைய ரதத்தை நோக்கிச்செல்பவனும் பகைவர்களை நாசஞ்செய்பவனுமான அந்தத் தனஞ்சயனைப்பார்த்து ஸம்சப்தகர்களுடைய கூட்டங்கள் சரமாரிகளால் எதிர்த்து அடித்துக்கொண்டு சென்றன. அர்ஜுனன் விரைபவர்களும் ஸாரதிகளுடனும் விற்களுடனும் த்வஜங்களுடனுங் கூடினவர்களுமான அந்தத்தொண்ணூறு ஸம்சப்தக வீரர்களையும் கூர்மையுள்ள பாணங்களால் மிச்சமின்றிக்கொன்றான். கிரீடியினால் பற்பலஉருவமுள்ள பாணங்களால் அடிக்கப்பட்ட அந்த ஸம்சப்தகர்கள், புண்யம்செய்தவர்கள் புண்யம் குறைந்தவுடன் ஸ்வர்க்கத்தினின்றும் விமானங்களிலிருந்து விழுவதுபோல் விழுந்தார்கள். பிறகு, தேர்களையும் யானைகளையும் குதிரைகளையுமுடைய கௌரவர்கள் பயமற்றவர்களாகிக் கௌரவர்களுள் மிகச்சிறந்தவனும் பரதஸ்ரேஷ்டனுமான பல்குனனை எதிர்த்தார்கள். முயற்சியுள்ளமனிதர்களுடனும் குதிரைகளுடனுங் கூடியதும் பலத்தினால் அதிகரித்த சிறந்தயானைகளுள்ளதுமான உமது புத்திரர்களுடைய அந்தப்பெரும் படையானது தனஞ்சயனை நன்றாகத்தடுத்தது. மஹாவில்லாளிகளான கௌரவர்கள் குருநந்தனனை அர்ஜுனனைச் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் தோமரங்களாலும் ஈட்டிகளாலும் கதைகளாலும் கத்திகளாலும் பாணங்களாலும் நன்றாக மூடினார்கள். பாண்டவன்

---

என மூன்றுவகைப்படும். தேசவ்யத்யாஸமாவது, ஓரிடத்தில்நடந்ததை மற்றோரிடத்தில்நடந்ததாகச் சொல்வது; காலவ்யத்யாஸமாவது ஒருகாலத்தில் நடந்ததை வேறொருகாலத்தில் நடந்ததாகச் சொல்வது; புருஷவ்யத்யாஸமாவது ஒருமனிதன்செய்ததை மற்றொருமனிதன் செய்ததாகச் சொல்வது. இந்த வேறுபாடுபற்றிப் பீமஸேனன்செய்ததை அர்ஜுனன்செய்ததாக ஏதோ ஒரு காரணத்தால் சொல்லப்பட்டிருக்கவேண்டும்' என்று ஸமாதானம்கூறுவர். இது மத்வஸம்பிரதாயக்கொள்கை.

ஆகாயத்தில் நாற்புறத்திலும் பரப்பப்பட்டிருக்கிற அந்த அம்புமழை யை ஸூர்யன் கிரணங்களால் இருளை நாசஞ்செய்வதுபோலப் பாணங்களால் நாசஞ்செய்தான். பிறகு, மிலேச்சர்கள் மதங் கொண்ட ஆயிரத்துமுந்நூறு யானைகளுடன்கூட நின்றுகொண்டு உமது புத்திரனுடைய கட்டளையினால் பார்த்தனை விலாப்புறத்தில் அடித்தார்கள். ரதத்திலிருக்கிற பார்த்தனைக் கர்ணிகளாலும் நாளீகங் களாலும் நாராசங்களாலும் தோமரங்களாலும் ரிஷ்டிகளாலும் சக்தி களாலும் கம்பணங்களாலும் பிண்டிபாலங்களாலும் ஹிம்ஸித்தார் கள். பிரபுவான பல்குனன், யானையின்மீதிருப்பவர்களால் பிரயோ கிக்கப்பட்டதும் ஒப்பற்றதுமான அந்த ஆயுதமழையைக் கூர்மை யுள்ள பல்லங்களாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் வெட்டியபிறகு, கொடித்துணிகளுடனும் த்வஜங்களுடனும் மாவுத்தர்களுடனும் கூடின அந்த எல்லா யானைகளையும் பற்பல அடையாளங்களுள்ள உத்தமமான பாணங்களால் (இந்திரன்) வஜ்ராயுதத்தினால் மலைகளைப் பிளப்பதுபோலப் பிளந்தான். அந்தப் பொன்மாலைகளை அணிந்த பெரிய யானைகள் ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ள பாணங்களால் அடிக்கப்பட்டுத் துன்பமடைந்து அக்னியின் ஜ்வாலைகளுடன்கூடின மலைகளைப்போல விழுந்தன. அரசரே! பிறகு, பெரிதான காண் டீவத்தின் ஒலியும் சத்தமிடுகின்ற மனிதர்கள் மெதுவாகக்கூச்ச லிடுகின்ற யானைகள் குதிரைகள் இவற்றின் ஒலியும் தோன் றின. மன்னரே! அடிக்கப்பட்ட அந்த யானைகளும் நான்கு பக் கத்திலும் ஓடின. குதிரைகளும் ஸாரதிகள் கொல்லப்பட்டவை களாகப் பத்துத்திக்குகளிலும் ஓடின. மஹாராஜரே! ரதிகர்களா லும் அவ்வாறே குதிரைகளாலும்விடுபட்டிருக்கின்ற ரதங்கள் கந்தர்வ நகரங்கள்போல ஆயிரம் ஆயிரமாகக் காணப்பட்டன. மஹாராஜரே! இங்குமங்கும் ஓடுகின்ற குதிரைவீரர்கள் பார்த்தனுடைய அம்பு களால் கொல்லப்பட்டவர்களாக அந்த அந்த இடத்திலேயே காணப் பட்டார்கள். பார்த்தன் ஒருவனாகவேயிருந்துகொண்டு யுத்தத்தில் யானைவீரர்களையும் யானைகளையும் ஜயித்ததினால் அந்த க்ஷணத்தில் பாண்டவனுடைய கைகளின் பலம் காணப்பட்டது. அரசரே! அந்தமனிதர்களும் யானைகளும் ரதிகர்களும் ஒன்றுசேராமலே யுத் தத்தை உத்தேசித்துத் திரும்பினவர்களாகக் கர்ஜித்துக்கொண்டு அர்ஜுனனை எதிர்த்தார்கள்.

பரதர்களுள் சிறந்தவரே! மன்னரே! பிறகு, மூன்றங்கங்க ளுடன்கூடின பெரும்படையினால் சூழப்பட்டிருக்கிற கிரீடியைக்

கண்டு பயங்கரனான பீமஸேனன் கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருக்கிற சிலரான உம்மைச்சேர்ந்த தேராளிகளை விட்டுவிட்டுத் தனஞ்சயனுடைய ரதத்தைக்குறித்து வேகத்துடன் சென்றான். அப்பொழுது, பிராதாவான அர்ஜுனனைக்குறித்து வருகின்ற பீமனைக் கண்டு, பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டதும் துன்பமுற்றதுமான அச்சேனையானது அங்கிருந்து ஓடியது. மஹாபலசாலியான பீமன் களைப்படையாமல் மஹாயுத்தத்தில் கதையைக் கையில்கொண்டு, அர்ஜுனனால் கொல்லப்பட்டதுபோக மிகுந்திருக்கின்ற குதிரைகளைக் கொன்றான். பாரதரே! கௌரவர்கள் அப்பொழுது கதையைக் கையில்கொண்ட பீமனைக்கண்டு, காலதண்டத்தைக் கையிற்கொண்டு வந்திருக்கின்ற அந்த அந்தகனென்றே எண்ணினார்கள். பீமன் காலராத்திரிபோல அதிகஉக்கிரமாயிருக்கிறதும் மனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும் புஜிக்கின்றதும் கோட்டைமதில்களையும் உப்பரிகைகளையும் நகரவாயில்களையும் அவைகளைச்சார்ந்த வாயில்களையும் பிளக்கின்றதும் அதிகபயங்கரமாயிருக்கின்றதுமான கதாயுதத்தைக் குதிரைகளை நாசஞ்செய்வதற்காக விரைவுடன் பிரயோகித்தான். ஐயா,! அந்தக்கதையானது அனேககுதிரைகளையும் குதிரையின்மீதேறியிருக்கின்ற வீரர்களையும் கொன்றது. பாண்டவன் வெண்கலமயமாயும் உருக்குமயமாயுமிருக்கின்ற கவசங்களையணிந்த மனிதர்களையும் குதிரைகளையும் கதையினால் நாசஞ்செய்தான். கொல்லப்பட்ட அவைகள் வீரிட்டுக்கொண்டு விழுந்தன. இரத்தத்தினால் நனைக்கப்பட்டவைகளும் தலைகளும் எலும்புகளும் கால்களும் ஓடிக்கப்பட்டவைகளுமான குதிரைகள், புலால் தின்னும் ஜந்துக்களுடைய கூட்டத்துக்கு ஆகாரமாக, பறகளால் பூமியைக்கௌவிக்கொண்டு படுத்தன. இரத்தத்தினாலும் மாம்ஸத்தினாலும் ஊனீராலும் த்ருப்தியைஅடைந்த கதையானது எலும்புகளைக்கூடப் பக்ஷிக்கின்றதாகக் காலராத்திரிபோலப் பார்க்கமுடியாததாயிருந்தது. மிக்க கோபங்கொண்ட பீமன் பதினாயிரம் குதிரைகளையும் அனேக காலாட்களையும் கொன்று கதாபாணியாக அங்குமிங்கும் எதிர்த்து ஓடினான். பாரதரே! பிறகு, உம்மைச்சேர்ந்தவர்கள் கதையைக் கையிற்கொண்ட பீமனைக்கண்டு காலதண்டத்தைக் கையிற்கொண்டிருக்கிற யமன் என்று எண்ணினார்கள். மதங்கொண்டிருக்கிற யானைபோல மிக்ககோபங்கொண்ட அந்தப் பாண்டுநந்தனன் முதலையானது கடலில் பிரவேசிப்பதுபோல யானைப்படையில் பிரவேசித்

தான். அதிககோபங்கொண்ட பீமன் யானைப்படையில் நுழைந்து பெரிதான கதையைக் கையில் எடுத்து ஒருக்ஷணத்தில் அந்த யானைப்படையை யமனுடைய வாஸஸ்தானத்தை அடையச்செய்தான். கவசங்களுடனும் மேலே ஏறியிருக்கிற வீரர்களுடனும் கொடிகளுடனும் விழுகின்ற மதயானைகளைச் சிறகுகளுள்ள மலைகளைப்போலக் கண்டோம். மஹாபலசாலியான பீமஸேனனே அந்த யானைப்படையைக்கொன்று மீண்டும் தனது தேரில் ஏறி அர்ஜுனனுக்குப் பின்புறத்தில் சென்றான். மஹாராஜரே! பிறகு, பெரும்பான்மையாக ஆயுதங்களால்சூழப்பட்ட உம்முடையசேனையானது அப்பொழுது உத்ஸாஹத்தை இழந்ததும் புறங்காட்டி ஓடுவதில் நோக்கங்கொண்டதும் ஆயிற்று. அர்ஜுனன் தாமதிப்பதாகவும் தைர்யத்தை இழந்ததாகவும் நிற்கின்ற அந்தச்சேனையைக்கண்டு பாணங்களாலும் சஸ்திர மழைகளாலும் மூடினான். யுத்தத்தில் காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனால் பாணஸமூகங்களால் நிறைக்கப்பட்ட மனிதர்களும் குதிரைகளும் ரதங்களும் யானைகளும் கேஸரங்களோடு கூடிய கடப்பமலர்கள்போல் விளங்கின. அரசரே! பிறகு, மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவர்களின் பிராணனைக் கவர்கின்ற கிரீடியினுடைய பாணங்களைக்கண்டு கௌரவர்கள் பெரிதான துன்பக் கூக்குரலை வெளியிட்டார்கள். அப்பொழுது, உம்முடைய சேனையானது கூக்குரலுள்ளதும் மிக்கபயமுற்றதும் ஒன்றின்மீதொன்று பதுங்குகின்றதுமாகக் கொள்ளிவட்டம்போலச் சுழன்றது. பிறகு, கௌரவர்களுடைய மிக்கபெரிய சேனையானது அர்ஜுனனுடைய பாணங்களால் அழிக்கப்பட்டது. அந்தயுத்தத்தில் பிளக்கப்படாத ரதமாவது குதிரைவீரனாவது குதிரையாவது யானையாவது இல்லை. அரசரே! பாணங்களால் உடைக்கப்பட்ட கவசங்களுள்ள அந்தச் சேனையானது நான்குபக்கத்திலும் எரிகின்றதுபோன்றதும் தன் ரக்தத்தினால் நனைக்கப்பட்டதும் அச்சந்தருவதும் நாசமடைந்ததுமாயிற்று. பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டதும் கூர்மையுள்ள பாணங்களால் நாற்புறங்களிலும் அடிக்கப்பட்டதுமான அந்தப்படையானது பகைவர்களைத் தவிக்கச்செய்கிறவனான பல்குனனை எதிர்த்து யுத்தத்தை விடவில்லை. பரதர்களுள் சிறந்தவரே! கொல்லப்படுகின்றவர்களாயிருந்தும், கௌரவர்கள் பார்த்தனை விட்டு விலகாமலிருந்ததாகிய அவர்களுடைய பராக்கிரமத்தை அந்தயுத்தத்தில் ஆச்சரியமாகக்கண்டோம். கௌரவர்களனைவரும் அந்த ஸவ்யஸாசியினுடைய அந்தப்பராக்ரமத்தைக்

கண்டு கர்ணனுடைய உயிர்வாழ்வில் ஆசையற்றவர்களானார்கள். காண்டீவத்தை வில்லாகக்கொண்ட பார்த்தனால் ஜயிக்கப்பட்ட கௌரவர்கள் யுத்தத்தில் பார்த்தனுடைய பாணங்களுடைய தாக்குதலைப் பொறுக்கமுடியாததென்றெண்ணித் திரும்பிவிட்டார்கள். அம்புகளால வதஞ்செய்யப்படுகின்ற அந்தக்கௌரவர்கள் யுத்தத்தில் பார்த்தனைவிட்டுப் பயந்து திசைகளில் ஓடினார்கள்; கர்ணனையும் அழைத்தார்கள். பார்த்தன் பாண்டவசேனையையும் யுதிஷ்டிரராஜரையும் ஸந்தோஷமடையச்செய்துகொண்டு அனேக அம்புகளை இறைத்து அவர்களைத் துரத்தினான். மஹாராஜரே! உம்முடைய புத்திரர்கள் கர்ணனுடையரதத்தைக்குறித்துச் சென்றார்கள். ஆழ்ந்த யுத்தக்கடலில் மூழ்குகின்ற அவர்களுக்குக் கர்ணன் அப்பொழுது ஒரு தீட்டானான். மஹாராஜரே! கௌரவர்களோ, காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனிடத்திலிருந்து உண்டானபயத்தினால் விஷமில்லாத ஸர்ப்பங்கள்போல, (வீர்யமற்றவர்களாகக்) கர்ணனுடைய அருகிலேயே பதுங்கினார்கள். மன்னவரே! எல்லாப் பிராணிகளும் மிருத்யுவினிடத்திலிருந்து நடுங்கி உலகங்களுக்கு முக்கியகதியான தர்மத்தை அடுப்பதுபோல, உம்முடையபுத்திரர்கள் மஹாத்மாவான பாண்டவனிடத்திலிருந்து உண்டான பயத்தினால் சிறந்தவில்லாளியான கர்ணனை அடுத்துப் பதுங்கினார்கள். கர்ணன், மனத்தில் பயமடைந்தவர்களும் இரதத்தினால் நான்குபக்கத்திலும் நனைக்கபபட்டவர்களும் ஆபத்தில் அகப்பட்டவர்களும் அம்புகளால் பீடிக்கப்பட்டவர்களுமான அவர்களை, 'பயப்படவேண்டாம்' என்று சொன்னான். பார்த்தனால் வலிமையினால் நன்றாக முறியஅடிக்கப்பட்ட உம்முடையசேனையைக்கண்டு கர்ணன் பகைவர்களைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் வில்லை நாணேலிசெய்துகொண்டு நின்றான். சஸ்திரதாரிகளுள் சிறந்தவனான கர்ணன் வேகமாகவோடுகின்ற அந்தக்கௌரவர்களைக்கண்டு பெருமூச்சு விட்டுக்கொண்டு நன்றாக ஆலோசித்துப் பார்த்தனைக் கொல்லும்விஷயத்தில் மனத்தைச்செலுத்தினான். பிறகு, அதிரதபுத்திரனான கர்ணன் மிக்க பெரிதானவில்லை நாணேலியிடும்படி செய்துகொண்டு, ஸவ்யஸாசி பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மீண்டும் பாஞ்சாலர்களைக் குறித்து ஓடினான். பிறகு, இரத்தம்போன்ற கண்களையுடையவர்களான அரசர்கள் பெரியமேகங்கள் மலையைமூடுவதுபோல் ஒரு க்ஷணத்தில் பாணங்களுடையகூட்டங்களால் கர்ணனை மூடினார்கள். பெரியவரே! பிறகு, கர்ணனால் விடப்பட்ட ஆயிரக்கணக்கான

பாணங்கள், சூரியன் இருளைக்கவர்வதுபோலப் பாஞ்சாலர்களுடைய உயிர்களைக் கவர்ந்தன. மஹாபுத்தியுள்ளவரே! மித்திரன்விஷயத்தில் பேரன்புள்ள ஸூதபுத்ரனுக்கும் அவனால் மித்திரனுக்காகக் கொல்லப்படுகின்ற பாஞ்சாலர்களுக்கும் அப்பொழுது பெரும்போர் நடந்தது.

---

## எண்பத்தாறுவது அத்யாயம்.

(ஸங்குலயுத்தமும் பீமனுக்கும் துச்சாஸனனுக்கும் எதிர்ப்பும், ஸம்வாதமும்.)

அரசரே! பிறகு, வெள்ளைக்குதிரைகட்டிய தேரையுடைய அர்ஜுனனால் கௌரவர்கள் துரத்தப்பட்டிருக்கும் ஸமயத்தில் ஸூதபுத்திரனான கர்ணன் பாஞ்சாலபுத்திரர்களைக் காற்று மேகக்கூட்டங்களை நாசம்செய்வதுபோலப் பெரிய அம்புகளால் நாசஞ்செய்தான். கர்ணன் ஜனமேஜயனுடைய ரதத்தினின்று அஞ்சலிகங்களால் ஸூதனை விழும்படிசெய்து குதிரைகளையும் கொன்றான். சதானீகனையும் ஸுதஸோமனையும் பல்லங்களால் அடித்து இரண்டு விற்களையும் வெட்டினான். ஸூதபுத்திரன் பிறகு யுத்தத்தில் த்ருஷ்டத்யும்னனை ஆறுபாணங்களால் பிளந்து அவனுடைய திறமையுள்ள குதிரைகளையும் கொன்றான்; ஸாத்யகியினுடைய குதிரைகளையும் கொன்று கேகயராஜனுடைய புத்திரனான விசோகனையும் கொன்றான். கேகயராஜகுமாரனும் ஸேனாபதியுமான மித்திரவர்மா, தன் புத்திரன் கொல்லப்படவே, அந்தக்கர்ணனை எதிர்த்து ஓடினான்; அதிக உக்கிரமான வேகமுள்ள அம்புகளால் அதிகமாக நடுங்கச் செய்துகொண்டு கர்ணனுடைய புதல்வனான ஸுதேவனையும் கொன்றான். கர்ணன் அட்டஹாஸம்செய்து மூன்று அர்த்தசந்திரபாணங்களால் அவனுடைய இருகைகளையும் தலையையும் அறுத்தான். அவன், கோடாலிகளால் வெட்டிமுறிக்கப்பட்ட ஸாலவிருக்ஷம்போல, உயிர் துறந்து தேரினின்று பூமியில் விழுந்தான். கர்ணனுடைய குமாரனான ஸுஷேணன், குதிரைகள் கொல்லப்பட்ட ஸாத்யகியை விரைவாகச்செல்லுகின்ற கூர்மையுள்ள அம்புகளால் நன்றாகமூடி நர்த்தனஞ்செய்கிறவன்போல் (தோன்றி), ஸாத்யகியினுடைய பாணங்களால் நேரில் அடிக்கப்பட்டு விழுந்தான். புத்திரன் கொல்லப்பட்டவுடன், குரோதத்தினால் மூடப்பட்ட மனத்தையுடையவனான கர்ணன், சிநிகளுள் மிகச்சிறந்தவனான ஸாத்யகி

யைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, 'ஸாத்யகியே! நீ மாண்டாய்' என்று உரக்கச்சொல்லிக்கொண்டு பகைவர்களால் தாங்கமுடியாத பாணத்தைப் பிரயோகித்தான். சிகண்டியானவன், இந்தக் கர்ணனுடைய அந்தப்பாணத்தை மூன்று பாணங்களால் துண்டாக்கி மூன்று பாணங்களால் கர்ணனையும் துன்பமடையச் செய்தான். *கர்ணன் சிகண்டியினுடைய வில்லையும் கொடியையும் வெட்டி இரண்டு க்ஷுரங்களால் அவனையும் பீடித்தான். உக்கிரனும் மஹாத்மாவுமான அந்தக்கர்ணன் சிகண்டியை ஆறுபாணங்களால் அடித்துத் திருஷ்டத்யும்னனுடைய புத்திரனது தலையையும் அறுத்தான். பிறகு, நன்றாகத்தீட்டப்பட்ட க்ஷுரத்தினால் ஸுதஸோமனையும் பிளந்தான். பிறகு, அந்த யுத்தத்தில் கைகலந்த சண்டை நடந்து த்ருஷ்டத்யும்னனுடைய புத்திரனும் கொல்லப்பட்டவுடன், மாதவர் அர்ஜுனனைப்பார்த்து, 'பார்த்த! ராஜஸிம்மமே! நமது ஸேனையானது பாஞ்சால வீரர்களில்லாததாகச் செய்யப்படுகிறது. செல்; கர்ணனைக்கொல்' என்று கூறினார். பிறகு, புருஷஸ்ரேஷ்டனும் நல்லகைகளையுடையவனுமான அர்ஜுனன் பயங்கரமான யுத்தத்தில் ரதயூதபதியினால் எதிர்த்துத் தாக்கப்பட்டிருக்கிற அவர்களைக் காக்க விரும்பினவனாக உரக்கச் சிரித்துக்கொண்டு விரைவாகக் கர்ணனுடைய ரதத்தைக்குறித்துத் தன் ரதத்தோடு சென்றான். பாரதரே! பிறகு, எவ்விதத்தினாலும் நடுக்கமடையச்செய்யமுடியாதவர்களான வேறு பாஞ்சாலரதிகர்களுடைய கூட்டங்கள் சேர்ந்தன. விறபிடித்தவீரர்களுள் சிறந்தவர்களான உத்தமரதிகர்கள் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள்போலப் பிரகாசித்துக்கொண்டு எதிர்த்து நின்றார்கள். பிறகு, அர்ஜுனன், காண்டீவத்தை உக்ரமாகமுழங்கும்படி நாணொலிசெய்து நாண்கயிற்றைக் கையுறையில் நன்றாகமோதும்படி செய்து பாணங்களால் இருளை உடனே உண்டுபண்ணி யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் த்வஜங்களையும் நாசஞ்செய்தான். கிரீடியானவன், நாணேற்றப்பட்டு வட்டவடிவமுள்ள காண்டீவத்தோடு விருத்தியடைகின்றவனாகப் பயங்கரமான முகூர்த்தத்தில் (சத்துருக்களை) எதிர்த்துச் சென்றபொழுது, எதிரொலியானது ஆகாயத்தில் பரவிற்று; பறவைகள் மலைக்குகைகளை நோக்கி விரைந்து சென்றன. அவனை நிகரற்றவீரனான பீமஸேனன் பின்புறத்தில் பாதுகாத்துக்கொண்டு ரதத்தோடு பின்தொடர்ந்தான். பகைவர்களோடு போர்புரிவதில் விருப்பமுள்ளவர்களான

* 'ஸுஜாத:' என்பது மூலம்; 'நற்பிறப்புள்ளவன்' என்பதுபொருள்.

அந்த ராஜபுத்திரர்களிருவரும் கர்ணனைக்குறித்து விரைவாகத் தேரில் சென்றார்கள். அந்தச்சமயத்தில் அதிக மகிமைபொருந்திய ஸூதபுத்திரன் ஸோமகர்களை நாசஞ்செய்துகொண்டு யுத்தம் செய்தான். ரதிகர்களையும் குதிரைகளையும் யானைக்கூட்டங்களையும் கொன்று பாணங்களால் திசைகளையும் மூடினான். உத்தமௌஜஸும் ஜனமேஜயனும் கோபங்கொண்டவர்களான யுதாமன்யுவும் சிகண்டியும் ஒன்றுசேர்ந்து பார்ஷதனான திருஷ்டத்யும்னனோடுகூட ஸிம்மநாதஞ்செய்பவர்களாகி அம்புகளால் கர்ணனைப் பிளந்தார்கள். ஒன்றுசேர்ந்தவர்களும் விகர்த்தனகுமாரனான கர்ணனைக்குறித்து எதிர்த்துச்செல்லுகின்றவர்களுமான அந்த ஐந்து பாஞ்சாலரதிகர்களும், இந்திரிய விஷயங்கள் ஜிதேந்திரியனைத் தைரியத்தினிடமிருந்து நழுவச்செய்ய மாட்டாததுபோலக் கர்ணனை அந்த ரதத்தினின்று நழுவச்செய்வதற்குச் சக்தியுள்ளவர்களாகவில்லை. கர்ணன் அவர்களுடைய விற்களையும் த்வஜங்களையும் குதிரைகளையும் ஸாரதிகளையும் கொடிகளையும் பாணங்களால் விரைவாக அறுத்து அந்தப்பாஞ்சாலர்களை அம்புகளால் எதிரில் அடித்தான்; பிறகு, ஸிம்மம்போல் உரக்கக் கர்ஜித்தான். '(பாணங்களை) பிரயோகிக்கின்றவனும் அவர்களை எதிர்த்து அடிக்கின்றவனும் நாண்கயிற்றையும் பாணங்களையும் கையில்கொண்டவனுமான அந்தக்கர்ணனுடைய வில்லின் சத்தத்தினால் மலைகளுடனும் மரங்களுடனுங்கூடின பூமியானது அதிகமாகச் சிதறினதாகவே ஆகும்' என எண்ணி ஜனஸமூகமானது துயரமடைந்தது. நன்றாக நாணேற்றப்பட்டதும் இந்திரதனுஸுக்கு ஒப்பானதுமான வில்லினால் பாணங்களைப் பிரயோகிக்கின்ற அந்தக் கர்ணன் ஜ்வலிக்கின்ற கிரணஸமூகங்களையும் சுற்றியிருக்கிற வட்டமான ரேகையையுமுடைய சூரியன்போல் யுத்தத்தில் விளங்கினான். கர்ணன் சிகண்டியைப் பன்னிரண்டு பாணங்களாலும் உத்தமௌஜஸைக் கூர்மையுள்ள ஆறுபாணங்களாலும் யுதாமன்யுவை மூன்று பாணங்களாலும் ஸோமகனையும் பார்ஷதனுடைய புத்திரனையும் மும்மூன்று பாணங்களாலும் அடித்தான். பெரியவரே! மனத்தை அடக்கினவனால் இந்திரியங்களின் விருப்பங்கள் வெல்லப்படுவது போல மஹாயுத்தத்தில் ஸூதபுத்திரனால் தோல்வியடைவிக்கப்பட்ட அந்த ஐந்து மஹாரதர்களும் உத்ஸாஹத்தை இழந்தவர்களாகப் பகைவரை மகிழ்விப்பவராயினர். கப்பல் உடைந்து கடலில் மூழ்குகின்ற வியாபாரிகளை ஓடங்களால் ஸமுத்திரத்தினின்று கரையேற்றி விடுவதுபோலக் கர்ணனாகிற ஸமுத்திரத்தில் மூழ்குகின்ற அந்தத்

தம்முடைய மாதுலர்களை த்ரௌபதீபுத்திரர்கள் நன்றாகச் செய்யப் பட்டிருக்கின்ற ரதங்களால் மேலே தூக்கிவிட்டார்கள். பிறகு, சினிகளுள் உத்தமனை ஸாத்யகி கூரிய அம்புகளால கர்ணனால் பிர யோகிக்கப்பட்ட அனேக அம்புகளை அறுத்து உருக்குமயமானகூரிய பாணங்களால கர்ணனையும் பிளந்து உம்முடைய ஜயேஷ்டகுமாரனை யும் எட்டுப்பாணங்களால அடித்தான். பிறகு, கிருபரும் போஜனும் அவ்வாறே உம்முடையகுமாரனும் கர்ணனும் கூர்மையுள்ள அம்பு களால் (ஸாதயகியை) அடித்தார்கள். யாதவர்களுள் சிறந்தவனான அந்தஸாதயகி திக்குப்பாலர்களோடு அஸுரராஜன் போர்புரிந்தது போல அந்த நான்கு வீரர்களோடும் போர்புரிந்தான். இடி விழுத லின் ஒளிபோன்ற ஒளிபொருந்திய அந்த ஸாதயகி நன்றாக நாணேற றப்பட்டதும் சப்திக்கின்றதும் மிககவலியுள்ளதுமான வில்லினால சரத்காலத்தில ஆகாயத்தின் உச்சியை அடைந்திருக்கின்ற சூரியன் போல எவ்விதத்தினாலும் ஜயிக்கமுடியாதவனானான். நன்கு கவசம் பூண்டவர்களும் பகைவர்களை வாட்டுபவர்களுமான பாஞ்சாலமஹா ரதர்கள் யுத்தத்தில ஒன்றுசேர்ந்து மீண்டும் ரதங்களில வீற்றிருந்து, தேவகணங்கள் சத்துருக்களால ஆபத்துவிளையக்கூடிய யுத்தத்தில இந்திரனைக்காத்ததுபோல ஸாத்யகியைக் காத்தார்கள் பிறகு, அதிகபயங்கரமானதும் ரதங்களையும் குதிரைகளையும் யானைகளையும் நாசம் செய்கின்றதுமான (அந்த) யுத்தமானது, முன்காலத்தில் தேவர் களுக்கு அஸுரர்களோடு உண்டானதுபோல உம்முடைய சத்துருக் களுக்கு உம்முடைய படைவீரர்களோடு உண்டாயிற்று. நானாவித சஸ்திரங்களால சூழப்பட்டிருக்கின்ற ரதங்களும் யானைகளும் குதி ரைகளும் காலாட்களும் சுழன்றன; ஒன்றினால ஒன்று அடிக்கப்பட் டுத் தடுமாற்றமுற்றன; விசேஷமாகச் சத்தமிட்டன; துன்பத்தை அடைந்தன; அப்படியே உயிர்துறந்து கீழேவிழுந்தன. அரச னுடைய இளைய ஸஹோதரனான உம்முடையபுத்திரன் பயமில லாதவனாகப் பாணங்களை இறைத்துக்கொண்டு அவ்விதநிலைமை யை அடைந்திருக்கின்ற பீமனை எதிர்த்தான். விருகோதரன் விரைவுடன் பெரிதான * ருருவை ஸிம்மம் எதிர்ப்பதுபோல அவனை எதிர்த்துவந்தான். பிறகு, உயிரைப் பந்தயம்வைத்துப் போர்ச்சூதாடுகின்ற அவ்விருவர்களுக்கும் ஒருவர்மேல ஒருவர் கோபங்கொண்டவர்களும் அதிசப்பிரபரப்புள்ளவர்களுமான சம் பரன் இந்திரன் இவ்விருவர்களுக்கும் யுத்தம் நடந்ததுபோல மிக்க

* ருருவகைமிருகம்.

பயங்கரமான யுத்தம் நடந்தது. பெண்யானைக்கருகில் மதங் கொண்ட இரண்டு பெரிய யானைகள் ஒன்றோடொன்று அடித் துக்கொள்வதுபோலக் கைகளால் திடமாக அடித்துப் பிடிக்கின்ற அவ்விருவர்களும் சரீரத்துக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகின்ற வைகளும் நன்றாகத் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளால் அதிக மாக ஒருவரையொருவர் அடித்தார்கள். அப்பொழுது, ஸாரதி களுடன்கூடின சூரர்களான அவர்கள் இருவர்களும் ஓரேஸமயத் தில் ஒருவரையொருவர் பார்த்து, பீமன், 'ஸாரதியே! துச்சாஸனன் பக்கத்திலேபோ' என்றும், துச்சாஸனன், 'விருகோதரனை நோக்கிச் செல்' என்றும் கூறினார்கள். பற்பல ஆயுதங்களுடனும் குடை களுடனும் கொடித்துணிகளுடனும் கூடியவைகளும் த்வஜத்துடன் கூடியவைகளுமான அவர்களுடைய அந்த இரண்டுரதங்களும் ஸாரதி களால் விரைவாக ஓட்டப்பட்டவைகளாக முற்காலத்தில் ஸ்வர்க்கத் தில் இந்திரன் பலன் இவ்விருவர்களுடைய ரதங்களும் யுத்தத்தில் நெருங்கியதுபோல விரைவாக நன்றாகநெருங்கி எதிர்த்தன. பீமன் (துச்சாஸனனைப் பார்த்து), 'துச்சாஸன! பாக்யத்தால் இப்பொழுது காணப்பட்டவனாகிறாய். வட்டியுடன் முதலைக் கணப்பொழுதில் கொடுக்கிறேன். த்ரௌபதியைத் தொட்டதினால் ஸபையில் உன் விஷயத்தில் என்னால் எந்தவிஷயம் வெகுகாலத்திற்குமுந்தி உரைக் கப்பட்டதோ, அதனை என்னிடத்திலிருந்து பெற்றுக்கொள்" என் றான். பிறகு, இவ்வாறு உரைக்கக்கேட்டவனும் மஹாபலசாலியும் வீரனுமான அந்தத்துச்சாஸனன் (பீமனைப்பார்த்து), 'பீமஸேன! நான் எல்லாவற்றையும் நினைத்துக்கொண்டேயிருக்கும்பொழுதே மறந்துபோகிறேன். நான் உரைப்பதைக்கேள். அரக்குமாளிகை யில் நெடுங்கலாம் இராப்பகல்களாக அனுபவிக்கப்பட்ட துன்பத் துக்கு நானே காரணமென்று நினைக்கிறேன். மேலும், நம்பிக்கை யில்லாதவர்களும் வேட்டையாடுகின்றவர்களும் எல்லாஇடத்திலும் அவமதிக்கப்பட்டவர்களும் இரவும்பகலும் மஹாபயத்தை நினைக் கின்றவர்களும் அவ்வாறே போகங்களினின்றும் ஸுகத்தினின்றும் விடுபட்டவர்களுமாக வஸித்தீர்கள். காடுகளிலும் மலைச்சந்துகளி லும் ஸஞ்சரித்துப் பாஞ்சாலராஜனுடைய பட்டணத்தில் நுழைந் தீர்கள். உங்களுள் பல்குனன் கிருஷ்ணையினால் வரிக்கப்பட்டமை யால், நீங்கள் ஒருமாயையை அடைந்திருந்தீர்கள். மாதாவினுடைய செய்கைக்குத்தக்கபடி பாபிகளான உங்களனைவர்களாலும் ஒன்று சேர்ந்து அப்பொழுது அப்படிப்பட்ட கெட்டகாரியம் செய்யப்பட்

டது. ஒருவரிடத்தினின்று ஒருவர் வெட்கமடையாதவர்களான உங்கள் ஐவர்களாலும் அந்தப்பாஞ்சாலி ஒருத்தி வரிக்கப்பட்டாள்; மனைவியாகவும் அடையப்பட்டாள். ஸுபலனுடைய குமாரனான சகுனியினால் ஸபையில் த்ரௌபதியுடன் நீங்கள் அடிமையாக்கப்பட்டதை நினைக்கிறேன்' என்று கூறினான். உமது புத்திரனால் இவ்வாறு சொல்லப்பட்ட பாண்டுவின் புதல்வனான விருகோதரனே கோபத்துக்கு வசப்பட்டவனாகி உமது குமாரனுடைய வில்லையும் கொடியையும் இரண்டு க்ஷுரங்களால் வெட்டினான். இவனுடைய நெற்றியையும் ஒரு பாணத்தினால் பிளந்தான். ஸாரதியினுடைய தலையையும் உடலினின்றும் கவர்ந்தான். அந்த ராஜகுமாரன் வேறு வில்லை எடுத்து விருகோதரனைப் பன்னிரண்டு பாணங்களால் பிளந்து தானே குதிரைகளை நடத்திக்கொண்டு, நேராகச்செல்லும் அம்புகளை அவன்மீது மறுபடியும் பொழிந்தான்.

---

## எண்பத்தேழாவது அத்யாயம்.

(பீமன் அரசர்களுக்கெதிரில் துச்சாஸனனுடைய ரத்தத்தைப் பானம் பண்ணியது.)

ராஜபுத்திரனும் உக்கிரனுமான துச்சாஸனனால் வஞ்சனையினால் பீடிக்கப்பட்ட அந்தப் பீமஸேனன், நன்றாகப் போர்புரிந்தான். ராஜபுத்திரனும் கௌரவர்களுள் வீரனும் வலிமைமிக்கவனுமான துச்சாஸனன், ஜம்பாஸுரன் உதாரமான வீர்யமுள்ள இந்திரனை எதிர்த்துப் போர்புரிந்ததுபோலப் பீமஸேனனை எதிர்த்துப் போர்புரிந்தமையால், அந்த யுத்தத்தில் (ஒருவராலும்) செய்யமுடியாத காரியத்தைச்செய்தான். அவன் யுத்தத்தில் இரண்டு பாணங்களால் பீமஸேனனுடைய வில்லையும் அறுத்து ஸாரதியையும் அடித்தான்; பிறகு, சிறந்த முப்பது பாணங்களால் சிறந்த காட்டானையை அடிப்பது போலப் பீமஸேனனை அடித்தான். அந்தப் பீமனோ, அப்பொழுது பெருங்காரியத்தைமுடிக்கவல்ல ஒரு வில்லைமெடுத்துக் கடியவேகமுள்ள சிறந்தயானையை ஈட்டிகளால் குத்துவதுபோல ஐம்பதுபாணங்களால் ராஜபுத்திரனை நடுமார்பில் அடித்தான். அரசரே! பிறகு, பலவானான துச்சாஸனன், யுத்தத்தில் இந்தப் பீமனுடைய நான்கு குதிரைகளையும் கொன்று, மறுபடியுமே தேரின் ஏர்க்காலை வெட்டி எறிந்து, பீமஸேனனை ரதத்தை இழந்தவனாகச்செய்தான். மஹாத்மாவான விருகோதரன், பிறகு, தேரினின்று இறங்கிப் பூமியில

நின்றுகொண்டு கதையினால் அவனுடைய குதிரைகளை யமனுடைய வீட்டுக்குஅனுப்பி, அந்தராஜபுத்திரனுடைய தேரினையும் நன்றாகப் பற்றி இழுத்தான். துச்சாஸனன், அந்தரதத்தினின்று துள்ளிக் குதித்துக் கொடியவேகமுள்ள ஒருதோமரத்தைப் பிரயோகித்தான். அளவிடமுடியாத'சக்தியுள்ள அந்தப் பீமஸேனன், அந்தத்தோமரத்தினால் மார்பிலடிக்கப்பட்டு அந்தத்துச்சாஸனனைக்குறித்து அளத்தற்கரியஆற்றலமைந்த கதையைப் பிரயோகித்தான். பிறகு, பீமஸேனன், உண்டுபண்ணப்பட்ட எல்லாத்துக்கங்களையும் கோபத்தினால் நினைத்தான். அந்தராஜபுத்திரனும் அவ்வாறு உக்கிரமானபீமனுடைய பிரதிஜ்ஞையை நினைத்துநினைத்து வியஸனமடைந்தான். புருஷர்களுள் மிகச்சிறந்தவனும் சிறந்தபலமுள்ளவனுமான அந்த விருகோதரன் பதின்மூன்று வருஷகாலமாக நன்றாகச்சிந்திக்கப்பட்டிருக்கிற ரோஷத்தை அதிகவேகத்தினால் வெளியிட்டு வஜ்ராயுதத்துக்கும் இடிக்கும் ஸமமானவேகத்துடன்கூடின கதாயுதத்தை எடுத்து ரோஷத்தினால் பூமியில் அடித்து, பிறகு, (ராஜபுத்திரனை) நன்றாக அடித்தான். துச்சாஸனன் அதிகமாக அடிக்கப்பட்டும் பிளக்கப்பட்டுமிருக்கிற சரீரத்துடன் பூமியில் விழுந்தான். ரணகளத்தில் ராஜபுத்திரனைக் கழுத்தில் மிதித்துக்கொண்டு சிவந்தகண்களையுடையவனும் மிகுந்தவேகமுள்ளவனுமான பீமன் உமதுபுத்ரனை அந்தத் துச்சாஸனனைப் பார்த்து, 'நீ எம்மை அவமதித்துவிட்டு எதைத் தேடிக்கொண்டு மறுபடியும் இங்குவந்தாய்? அதனைச்சொல். அதிகமாகஜ்வலிக்கின்றதும் நெடுநாளாகத்தேடப்பட்டுள்ளதும் மிகவும் பிரகாசிக்கின்றதுமான என்னுடைய அப்படிப்பட்டரோஷத்தை அதிகமாக விளங்கும்படிசெய்துகொண்டு உன்னுடைய மார்பாகிற பாத்திரத்தினின்று (ரக்தமாகிற) சாராயத்தைக் குடிக்கப்போகிறேன்' என்றுசொன்னான். பிறகு, அவன் துச்சாஸனனைக் கழுத்தில் மிதித்துக்கொண்டு க்ரூரமானகார்யத்தைச் செய்ய ஆரம்பித்தான். சிறந்தவேகமுள்ள அந்தத்துச்சாஸனன் பலத்தினால் அவனை விலக்கித்தள்ளிவிட்டு விரைவாக ஒடினான். பீமன் உம்முடையபுத்ரனை துச்சாஸனனிடத்திலுள்ள பகைமையைக் காட்டிக்கொண்டு அவனைத் தொடர்ந்துஓடினான். பலவானான பீமன் காட்டில் ஸிம்மக்குட்டியானது ஒருமானை அடிக்கடி துரத்துவதுபோல மஹாபலசாலியான் துச்சாஸனனை விரைவாகத்துரத்திச் சிறந்த முயற்சியினால் அவனைப் பிடித்து அவனை மேலே தூக்கித்தூக்கியெறிந்து அப்பொழுது பூமியில் விரைவாகத்தேய்த்தான். பிறகு, வீரனான பீமன்

பளபளப்பான கத்தியை உறையினின்று வெளியில் உருவினான். பிறகு, விருகோதரன் அந்தத்துச்சாஸனனைக் கீழேதள்ளித் திசைகளை ஒலியிடும்படிசெய்துகொண்டு ஸந்தோஷத்தினால் கர்ஜித்தான். அஜமீடனுடைய வம்சத்திலுதித்தவரே! அந்த நாதத்தினால் பக்கத்திலிருந்தவர்கள் அனைவர்களும் மூர்ச்சையடைந்து கீழேவிழுந்தார்கள். அரசரே! மகாபாகுபலமுள்ளவனும் நினைக்கத்தகாத செய்கைகளையுடையவனுமான பீமஸேனன் அந்த ரணகளத்தில் துச்சாஸனனைப்பார்த்துத் தேவியினுடைய நலமயிரைப் பிடித்ததையும் ரஜஸ்வலையாயிருந்த அந்தத்தேவியின் துகிலுரிந்ததையும் நினைத்துக் குற்றமற்றவளும் பர்த்தாக்களால் அனாதரிக்கப்பட்டவளுமான அந்த த்ரௌபதிக்குக் கொடுக்கப்பட்ட துக்கங்களையும் நன்றாக நினைத்து நெய்யினால் ஹோமம்செய்யப்பட்ட அக்னிபோலக் கோபத்தினால் ஜ்வலித்தான். அப்பொழுது, அவன் கர்ணனையும் துர்யோதனனையும் கிருபரையும் அஸ்வத்தாமாவையும் கிருதவர்மாவையும்பார்த்து, 'ஓ! போர்வீரர்களே! இப்பொழுது பாவியான துச்சாஸனனைக் கொல்லுகிறேன். இப்பொழுது எல்லாரும் ரக்ஷியுங்கள்' என்றான்; 'த்ரோணபுத்திரர் கிருதவர்மா இவர்களையும் கொல்லுகிறேன்' என்றும் கூறினான். அதிகபலமும் வேகமுமுள்ள விருகோதரன் இவ்வாறுசொல்லிவிட்டு (துச்சாஸனனைக்) கொல்லவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனாக விரைவாக அவனைஎதிர்த்து ஓடினான். நிகரற்ற வீரனான விருகோதரன் ஸிம்மமானது பெரியயானையைப் பாய்ந்து பிடிப்பதுபோல் யுத்தத்தில் அதிகமாகப்பாய்ந்து துர்யோதனனுக்கும் கர்ணனுக்கும்எதிரில் துச்சாஸனனைப்பிடித்து, தீட்டப்பட்டதும் கூரிய நுனியையுடையதுமான கத்தியை மேலேஎடுத்து, நடுங்குகின்ற துச்சாஸனனைக் கழுத்தில் காலால் மிதித்துக்கொண்டு, 'கெட்ட எண்ணமுள்ளவனே! ஸந்தோஷமுள்ளவனாகக் கர்ணனுடனும் துர்யோதனனுடனும் சேர்ந்து (பாஞ்சாலியைப் பார்த்து) 'பசு' என்று எந்த வார்த்தையைச் சொன்னாயோ அதனையும் ராஜஸூயயாகத்தினுடைய அவப்ருதத்தில் பரிசுத்தமான த்ரௌபதியினுடைய கூந்தல்கள் எந்தக்கையினால் பற்றி இழுக்கப்பட்டனவோ அதனையும் சொல். பீமஸேனன் உன்னை வினவுகிறான்' என்று கூறினான். துச்சாஸனன் மிக்க பயங்கரமான அந்தப் பீமனுடைய வசனத்தைக்கேட்டு அவனைப்பார்த்து அப்பொழுது கௌரவர்களும் ஸோமகர்களும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே கர்வத்தினால் பயங்கரமாக ஜ்வலித்துக்கொண்டு கண்களைப் புரட்டிவிழித்து அவ்

வாழு கோபத்துடன் பீமனைநோக்கி, 'யானையின் துதிக்கைக்கு ஒப்பானதும் பருத்தகொங்கைகளை மர்த்திக்கின்றதும் ஆயிரம் பசுக்களைக்கொடுத்ததும் க்ஷத்திரியர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறதுமான கை இதுதான். பீம! கௌரவர்களுள் தலைவர்களும் நீங்களும் ஸபையின்கண் வீற்றிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே என்னுடைய இந்தக்கையினால்தான் திரௌபதியினுடைய கூந்தல்கள் பற்றி இழுக்கப்பட்டன' என்று இவ்விதமான வசனத்தை யுத்தத்தில் உரைத்தான். இவ்வாறு சொல்லுகின்ற ராஜபுத்திரனுடைய வசனத்தைக் கேட்டு அந்தப்பீமன் யுத்தத்தில் அவனுடைய மார்பை நன்றாக மிதித்துப் பலத்தினால் இருகைகளாலும் அவனைத் தூக்கிக்கொண்டு எல்லாப்போர்வீரர்களையும் பார்த்து உரக்க ஸிம்மநாதம் செய்துகொண்டு, 'இவன் இப்பொழுது இருகைகளையும் இழந்தவனாகப்போகிறான். பலமுள்ளவன் ரக்ஷிக்கட்டும்' என்று சொன்னான். இவ்வாறு, கோபமுள்ளவனும் மஹா பலசாலியும் மஹாத்மாவுமான பீமஸேனன் பலத்தினால் யுத்தவீரர்களை அவமதித்து, உயிரை இழக்கப்போகிற துச்சாஸனனுடைய கையைக் கையினால் ஒடித்தான். அந்தப் பீமன் வீரர்களுடைய மத்தியில் வஜ்ராயுதத்துக்கும் இடிக்கும் ஒப்பான அந்தக்கையினால் துச்சாஸனனைக் கொன்றான். பீமன், துடிக்கின்ற துச்சாஸனனைக் கழுத்தில் மிதித்துக்கொண்டு அப்பொழுது காலனுக்கும் அந்தகனுக்கும் ஸமமானதும் மிக்க பயங்கரமாயிருப்பதும் சிறந்ததுமான உருவத்தைத் தரித்து, மஹாரதனும் சத்துருக்களை அடக்கி ஆள்பவனும் பூமியில் வீழ்ந்திருப்பவனுமான அந்தத் துச்சாஸனனுடைய மார்பைப் பிளந்து நரலை எடுத்துப் பிறகு சிறிது உஷ்ணமாக இருக்கிற அவனுடைய ரக்தத்தைச் சுவைத்துச்சுவைத்து நாற்புறமும் பார்த்துக்கொண்டே பானம்செய்தான். கோபமுள்ளவனும் மிக்க ஸந்தோஷமுள்ளவனுமான பீமன், 'இப்பொழுது இந்தச்சத்துருவின் இரத்தத்தினுடைய சுவையானது தாய்ப்பால், அமிருதம், தேன், ரஸம், மதுபானம், யவகபானம், பால, தயிர், சிறந்தமோர், மனோஹரமானகருப்பஞ்சாறு இவைகள் எல்லாவற்றையும்விட அதிகருசியுள்ளதென்பது என்னுடைய எண்ணம்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லுகின்றவனும் மறுபடியும் எழுந்திருந்தவனும் தோள்களைத் தட்டிக்கொண்டு கூத்தாடுகின்றவனும் மிக்க மனக்களிப்புற்றவனுமான பீமஸேனனை எவர்கள் அப்பொழுது பார்த்தார்களோ அவர்களும் மிக்க துன்பமுற்றுக் கீழேவிழுந்தார்கள். எந்த மனிதர்கள் விழவில்லையோ

அவர்களின் கைகளிலிருந்து சஸ்திரம் கீழே விழுந்தது. அந்த ரண களத்தில் அப்பொழுது மனிதர்கள் பயத்தினால் விகாரமான குரலுடன் அலறினார்கள். கண்களை மூடிக்கொண்டு மூர்ச்சையையும் அடைந்தார்கள். அந்த யுத்தகளத்தில் துச்சாஸனனுடைய ரக்தத்தைப் பானம் பண்ணுகிற பீமனை அணுகிப் பார்த்தவர்களனைவரும், 'இவன் மனுஷ்யனல்லன்' என்று சொல்லிக்கொண்டு பயத்தினால் மூடப்பட்டவர்களாக ஓடினார்கள்.

---

## எண்பத்தெட்டாவது அத்யாயம்.

(பீமன் தன்னை எதிர்த்த துச்சாஸனன்தம்பியரையும் கொன்றதும், கர்ணன் அச்சமடையச் சல்யன்தேற்றியதும், ஸங்குல யுத்தமும்.)

பாரதரே! அந்த விருகோதரன் அந்தத் துச்சாஸனனுடைய உதிரத்தைப் பானம்பண்ணி அவனுடைய இருகால்களையும் பிடித்துக் கூத்தாடிக்கொண்டு பின்வருமாறான வசனத்தை உரக்கச் சொல்லலானான். 'இதோ உன்னுடைய இரத்தத்தை ராக்ஷஸன் போல நன்கு உறிஞ்சப்போகிறேன். நீ மிக்ககோபங்கொண்டு மீண்டும் 'பசு, பசு' என்று இப்பொழுது சொல். எவர்கள் அப்பொழுது எங்களை நோக்கி, 'பசு, பசு' என்று சொல்லிக்கொண்டு கூத்தாடினார்களோ அவர்களைக்குறித்து நாம் மறுபடியும் 'பசு, பசு' என்று சொல்லிக்கொண்டு எதிர்க்கூத்தாடுகிறோம். புத்திரர்களுடன் கூடின திருதராஷ்டிரனுடைய தீமையினால் பிரமாணகோடியில் படுத்திருக்கும் ஸமயத்தில் காலகூட விஷத்தைப் புஜித்தது, கொடிய பாம்புகளால் கடிபட்டது, அரக்குமாளிகையில் எரிக்கப்பட்டது, சூதாட்டத்தினால் அனேககோஷங்களை அனுபவித்தது, காற்றிலும் நெருப்பிலும் பர்ணசாலைகளிலும் அரண்யத்தில் வஸித்தது, யுத்தத்தில் அம்புகளையும் அஸ்திரங்களையும் தரித்தது ஆகிய இவ்விதமான துக்கங்களையே நாங்கள் எப்பொழுதும் அறிகிறோம். ஒரு ஸமயத்திலாவது ஸுகங்களை நாங்கள் அறியோம்' என்று கூறினான். மஹாராஜரே! விருகோதரன் இப்படிப்பட்ட வசனத்தை உரக்கச் சொல்லி ஜயத்தை அடைந்து மறுபடியுமே உமது சேனையை எதிர்த்து ஓடினான். பிறகு, மஹாபலசாலியும் கதையைக்கையில் பிடித்தவனுமான பீமன் இரத்தத்தினால் கைகள் நனைந்தவனாக முடிவுக்காலத்தில் காலன்போல உமது புத்திரனுடைய சேனையை விசேஷமாகப் பயமடையச்செய்துகொண்டு உமது சேனையைக்குறித்து இங்குமங்குமாக ஓடினான். பார

தரே! பிறகு, கோபத்தினால் பிரகாசிக்கின்ற அவன் யுத்தமத்தியில் துச்சாஸனனுடைய இரத்தத்தைக் குடித்ததனால் மிக்ககோரமான கௌரவர்களுடைய யுத்தகளமானது ஒருக்ஷணத்திற்குள் சூன்யமாயிற்று. அரசரே! பலத்தினால் மேலான ஸிம்மமானது புள்ளிமானைக் கொல்வதுபோல் மதத்தினால் மிக்கவனை அந்தப் பீமன் யுத்தத்தில் மஹாபலசாலியான துச்சாஸனனைக்கொன்று விருப்பம்நிறைவேறியவனானன். மகாராஜரே! பகைவர்களைத் தவிக்கச்செய்பவனும் இரத்தத்தினால் நனைந்தவனுமான பீமஸேனன் பூத்தபலாசவிருக்ஷம்போல் இரத்தத்தினால் மிக்கசிவப்பாக விளங்கினான். அரசரே! குருதியினால் நனைக்கப்பட்டவனும் கோரமான வேஷத்துடன் கூடியவனும் குரோதமுள்ளவனுமான பீமன் (துச்சாஸனனைப்பார்த்து), 'பாபபுத்தியுள்ளவனே! கொலைகார! இப்பொழுது சொல். கீழேவிழுந்திருக்கிறாய். துச்சாஸனன் விஷயத்தில் எவ்விதமான பிரதிஜ்ஞை எம்மால் செய்யப்பட்டதோ அது முழுதுமே பாண்டவர்களாகிய எம்மால் அடையப்பட்டது. இந்தஇடத்திலேயே யஜ்ஞபசுவான துர்யோதனனைக்கொன்று இரண்டாவதான மற்றொருபிரதிஜ்ஞையையும் அடையப்போகிறேன். நான் கௌரவர்களுக்கு முன்னிலையில் இவனுடைய தலையைநொறுக்கி மீண்டும் சாந்தியை அடையப்போகிறேன். பதிகளை இழந்திருந்த அந்தப்பாஞ்சாலியானவள் பதிகளை அடைந்தவளானாள். பதிகளுள்ளவர்களாயிருந்த கௌரவஸ்திரீகள் பதிகளை இழந்தவர்களானார்கள். உலகத்திலுள்ள பற்பலவிதமான ஆச்சர்யத்தைப் பாருங்கள். எவர்கள், எள்ளாகஇருந்தார்களோ அவர்கள் பதரானார்கள். ஜயஸித்தியைப்பெற்றவர்களான அந்தச்சத்துருக்களே நாசத்தை அடைந்தார்களானால் ஜீவலோகத்தில் மிக்கஆச்சரியமானவிஷயம் எது இருக்கிறது?' என்றுகூறினான். மிக்க மனக்களிப்புற்றவனும் உதிரத்தினால் நனைந்தமுகமுள்ளவனும் அதிகபலசாலியும் மஹாத்மாவுமான பீமன் இவ்வளவுமாத்திரம் வார்த்தை சொல்லிவிட்டு உரக்கஸிம்மநாதஞ் செய்தான்; விருத்திரனைக் கொன்று ஆயிரங்கண்ணனை இந்திரன் கூத்தாடியதுபோலக் கூத்தாடினான். கூத்தாடுகிறவனும் மிக்க வீர்யமுள்ளவனுமான பீமனைப் பிரஜைகளுடைய முடிவுக்காலத்தில் (ஸம்ஹரிக்கின்ற) காலனைப் போலக்கண்டு கர்ணனை மஹாபயம் வந்தடைந்தது. உமது குமாரர்கள் ஜயத்தில் ஆசையற்றவர்களானார்கள். அரசரே! துச்சாஸனன் கொல்லப்பட்டவுடன், மஹாரதர்களும் வீரர்களும் மஹாபலசாலிகளும் மஹாவீர்யமுள்ளவர்களுமான அந்த உம்முடைய குமாரர்கள்

மிக்ககோபமாகிறவிஷத்தைத் தரித்தவர்களாகப் பீமனை அம்புகளால் நன்றாக மூடினார்கள். அம்பறாத்தூணிகளையுடையவர்களும் கவசம் பூண்டவர்களும் கத்தியுள்ளவர்களும் தண்டங்களைத்தரித்தவர் களும் விற்பிடித்தவர்களுமான அலம்பு, ஜலஸந்தன், வாத வேகன், ஸுவர்ச்சஸ், இவர்கள் ஒன்றுகூடினவர்களாகவும் பிராதாவினுடைய துயரத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகவும் மிக்க புஜபலமுள்ள பீமஸேனனை விரைவாகப் பிடித்தார்கள். நான்கு பக்கத்திலும் அந்த மஹாரதர்களால் அம்புகளால் பீடிக்கப்படு கின்ற அந்தப்பீமன் கோபத்தினால் கண்கள் நன்குசிவந்து கோபத் துடன்கூடின காலன்போல விளங்கினான். அரசரே! பிறகு, பகைவர்களைத் தவிக்கச்செய்கிறவர்களும் துச்சாஸனனுடைய இளைய ஸகோதரர்களுமான உம்முடைய ஒன்பது குமாரர்களால் விருகோ தரன் சூழப்பட்டான். பாரதரே! பிருதாபுத்ரனானபீமன் ஸ்வர்ண மயமான தோள்வளைகளுடன்கூடின அந்த ஒன்பதுவீரர்களையும் பொற்புங்கமுள்ளவைகளும் மிக்கவேகமுள்ளவைகளுமான ஒன்பது பல்லங்களால் யமலோகத்துக்கு அனுப்பினான். உமதுபுத்திரர்கள் கொல்லப்பட்டவுடன், பீமனிடத்தினின்று உண்டான பயத்தினால் பீடிக்கப்பட்ட அந்தச்சேனையானது ஸூதபுத்திரன் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே ஓடிவிட்டது. மஹாராஜரே! பிறகு, பிரஜை களிடத்தில் யமனுடைய பராக்ரமத்தைப்போன்ற பீமனுடைய பராக்ரமத்தைக் கண்டு கர்ணனைப் பெரும்பயம் வந்தடைந்தது. அவனுடைய வடிவத்தையும் மனோபாவத்தையும் அறிந்தவனும் யுத் தத்தில் வல்லமைபொருந்தியவனுமான சல்யன் அப்பொழுது கர்ண னைப்பார்த்து ஸமயோசிதமாகவும் ஹிதமாகவுமிருக்கிற வசனத்தை உரைத்தான்.

'ராதாநந்தன! நீ வியஸனமடையாதே. இம்மாதிரி இருப்பது உன்னிடத்தில் பொருந்தாது. இந்தஅரசர்கள் பீமஸேனனிடத்தி லிருந்து உண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாக ஓடுகின்றார் கள். துர்யோதனனும் பிராதாவினது துயரத்தினால் பீடிக்கப்பட்டு மதிமயங்கியிருக்கிறான். மஹாபலசாலியான பீமனால் துச்சாஸன னுடைய உதிரமானது குடிக்கப்படுங்கால், துர்யோதனன் மனநிலை தவறினவனாகவும் சோகத்தினால்விரைந்துஅறிவுபோக்கப்பட்டவனாக வும் இருக்கிறான். கர்ண! கிருபரைத் தலைவராக உடையவர்களும் கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருக்கின்றவர்களும் மஹாரதர் களுமான இந்த (த்துர்யோதனனுடைய) ஸஹோதரர்கள் நான்குபக்

க்த்திலும் சூழ்ந்துகொண்டு உன்னையே உபாஸிக்கின்றார்கள். அஸ்த்ரங்களில்நல்லதேர்ச்சியுடையவர்களும் தனஞ்சயனை முதன்மையாகக் கொண்டவர்களும் சூரர்களுமான பாண்டவர்கள் யுத்தத்தின்பொருட்டு உன்னையே எதிர்பார்த்துக்கொண்டு அணுகிவிட்டார்கள். புருஷ ஸ்ரேஷ்டனே! 'சிறந்த ஆண்மையில் நிலைபெற்றவனை அப்படிப் பட்டநீ க்ஷத்திரியதர்மத்தைமுன்னிட்டுத் தனஞ்சயனை எதிர்த்துச் செல். தார்த்தராஷ்டிரனால் எல்லாப்பாரமும் உன்னிடத்தில் வைக்கப்பட்டிருக்கிறதன்றோ?, மஹாபாகுபலமுள்ளவனே! சக்திக்கும் பலத்துக்கும் தக்கபடி அந்தப்பாரத்தைச் சுமப்பாயாக. ஜயித்தால் பெரிதானகீர்த்தி உண்டாகிறது; அபஜயமுண்டாகுமானால் ஸ்வர்க்கம் நிச்சயம். ராதாபுத்திர! நீ மதிமயக்கத்தை அடையவே, உன்னுடைய குமாரனை விருஷஸேனன் மிக்ககோபங்கொண்டு பாண்டவர்களை எதிர்த்து ஓடுகிறான்' என்றுசொன்னான். கர்ணன், அளவுகடந்த தேஜஸுள்ள சல்யனுடைய இந்தவார்த்தையைக்கேட்டு, மனத்தில் போருக்காக உறுதிகொண்டவர்களின்தன்மையை அடைந்து (யுத்தத்திற்காக) நின்றான். பிறகு, கோபமுள்ளவனை விருஷஸேனன் எதிர்த்து வருகின்றவனும் சத்துருக்களை ஸஹிப்பவனும் அம்புகளை இறைக்கின்றவனும் * கோரரூபத்துடன் வாயைத்திறந்துகொண்டு வருகின்ற யமன்போன்றவனுமான பீமனை எதிர்த்துச்சென்றான். நகுலன், யுத்தத்தில் நல்ல உத்ஸாஹமுள்ளவனும் சிறந்தவீரனும் சத்துருவுமான அந்தக்கர்ணபுத்திரனைத் தூரத்திலிருந்தே அம்புகளால் மிகத்துன்புறுத்திக்கொண்டு,ஜயசீலனை இந்திரன் கொல்லஎண்ணங் கொண்டு ஜம்பனைஎதிர்த்ததுபோல எதிர்த்து விரைவாகச்சென்றான். பிறகு, நகுலன் தைர்யத்துடன் ஒருக்ஷுரத்தினால் கர்ணபுத்திரனுடைய ஸ்படிகத்தினாலும்ஸ்வர்ணத்தினாலும் சித்திரவேலைசெய்யப் பட்ட துவஜத்தையும்வெட்டி ஸ்வர்ணத்தினால் விசித்திரமாகக் கட்டப்பட்டதும் ஆச்சரியகரமாயிருப்பதுமான வில்லையும் ஒருபல்லத்தால் துண்டாக்கினான். பிறகு, அந்தக்கர்ணபுத்திரன் சீக்கிரமாக வேறுவில்லை எடுத்துக்கொண்டு பாண்டவனை எதிர்த்தடித்தான். அப்பொழுது,கர்ணபுத்திரன் அஸ்திரவித்தையில் நல்லதேர்ச்சியுள்ள அந்த நகுலன்மீது திவ்யாஸ்திரங்களைப் பொழிந்தான். பிறகு, கோபங்கொண்ட நகுலன் பெரியகொள்ளிகள்போன்ற பாணங்களால் கர்ணபுத்திரனை ஹிம்ஸித்தான். அரசரே! அந்தக்கர்ணபுத்திரன் நகுலனுடைய எல்லா அஸ்திரங்களையும் உத்தமமான அஸ்திரங்களால

---

* ஒருசொல் விடப்பட்டது.

தடுத்தான். பரதர்களுள் சிறந்த வீரரே! அப்பொழுது, கர்ணபுத்திரனுக்கும் பாண்டவனுக்கும் அதிகோரமானயுத்தம்நேர்ந்தது. வீரனான கர்ணபுத்திரன் யுத்தரங்கத்தில் வனாயுதேசத்தில் தோன்றியவைகளும் ஸுகுமாரமாயிருக்கின்றவைகளும் அந்த வெண்ணிறமுள்ளவைகளும் ஸுவர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளும் ஆச்சர்யகாமாக இருப்பவைகளுமான நகுலனுடைய குதிரைகளைக் கொன்றான். பிறகு, நகுலன் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று இறங்கி மயில்பிரதிமைகளால் சித்திரிக்கப்பட்ட அழகிய கேடகத்தையும் ஆகாயத்துக்கு ஒப்பான கத்தியையும் கையில் எடுத்துக்கொண்டு பிரகாசிக்கின்றவனைப் பக்ஷிபோல ஸஞ்சரித்தான். பிறகு, சுறுசுறுப்பாகக் கார்யங்களைச்செய்யுந் தன்மையுள்ள நகுலன் கர்ணபுத்திரனைச்சார்ந்த இரண்டாயிரம் வீரர்களை யமனுடையவீட்டுக்குஅனுப்பினான். அவர்கள் சத்தியினால் வெட்டப்பட்டவர்களாக அச்வமேதத்தில் *சமிதாவினால் கொல்லப்படுகிற பசுக்கள்போலக் கீழேவிழுந்தார்கள். வெற்றியைவிரும்பிய நகுலன்ஒருவனால் துரத்தப்பட்டவர்களும் †சிறந்தசந்தனம்பூசின அங்கங்களையுடையவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களும் பலபல தேசங்களில் தோன்றினவர்களும்(நமக்கு)ஸஹ்ருத்துக்களும் ஸத்யஸந்தர்களுமானவீரர்கள் அங்ஙனம் ஜயிக்கப்பட்டார்கள். பூமியில் ஸஞ்சரிக்கின்ற நகுலனை ரதிகர்களுடைய கூட்டங்கள் நாற்புறத்திலும் பாணங்களால் எதிர்ந்து அடித்தன. அம்புகளால் துன்புறுத்தப்படுகின்ற அந்தநகுலன் யுத்தத்தில் பகைவர்களைக்கொன்றுகொண்டு ஸஞ்சரித்தான். யுத்தத்தில்ஸஞ்சரிப்பவனும் மனிதர்களையும் குதிரைகளையும் யானைகளையும் ரதவீரர்களையும் கொல்லுகின்றவனுமான அந்தநகுலனைக் கர்ணபுத்திரனும் பதினெட்டுப்பாணங்களால் அடித்தான். அடிக்கப்பட்ட அந்தவீரன் கோபங்கொண்டான். பிறகு,பாண்டுநந்தனன்,நரவீரனான கர்ணபுத்திரனைக்கொல்ல எண்ணங்கொண்டவனாக யுத்தத்தில் எதிர்த்து ஓடினான். ஸூதபுத்திரன், மஹாயுத்தத்தில ஆயிரம்பாரம் நிறையுள்ள அந்த நகுலனுடைய கவசத்தைப் பாணங்களால உடைத்தான். பிறகு, சத்துருவேகத்தை ஸஹிக்கிறவனான கர்ணபுத்திரன, வெண்கலமயமாயிருப்பதும் நன்றாகத்தீட்டப்பட்டதும் நன்குதுலங்குவதும் பெரிதான பாரத்தை ஸஹிக்கின்றதும் பகைவர்களுடைய சரீரத்தைக் கவர்கின்றதும் அதிககோரமானதும் ஸர்ப்பம்போன்றதும் உறையி

* கொல்லுகிறவன். † வேறுபாடம்.

னின்று வெளியில் உருவப்பட்டதும் வீசப்படுகின்றதுமான அந்த நகுலனுடைய சிறந்த கத்தியைத் தீட்டப்பட்ட நல்ல நுனியுள்ள ஆறுபாணங்களால் விரைவாக அறுத்தான். மறுபடியும், கூர்மையுள்ளபாணங்களால் பார்த்தனை நடுமார்பில் விரைவாக அதிகமாக அடித்தான். அவன் பீமஸேனனுடைய ரதத்தையும் நாடி மிக்ககோரமான சரமாரியையும் பொழிந்தான். பிறகு, நகுலன் வில்லும்கத்தியும் அறுக்கப்பட்டவனும் ரதத்தை இழந்தவனும் பகைவர்களால் பீடிக்கப்பட்டவனும் கர்ணபுத்திரனுடைய அஸ்திரங்களில் மூழ்கினவனுமாயிருப்பதைஅறிந்து,உத்தமபுருஷர்களால்ஏவப்பட்டவர்களும் ஸாத்யகியை ஆறுமவனாகக் கொண்டவர்களுமான சிறந்தஐந்துதுருபதராஜகுமாரர்களும் சத்துருக்களுடையவேகத்தை ஸஹிக்கிறவர்களான ஐந்து த்ரௌபதீபுத்திரர்களும், காற்றினால் அசைக்கப்பட்ட கொடித்துணிகளையுடையவர்களும் மனக்களிப்புள்ளவர்களும் துள்ளுகின்றகுதிரைகளுடன் கூடியவர்களும் உம்மைச்சேர்ந்த யானைகளையும் ரதங்களையும் மனிதர்களையும் குதிரைகளையும் நாசஞ்செய்துகொண்டு, ஆயுதங்களுடன்கூடினவர்களும் மகிமையுடையவர்களுமான பதினொரு ருத்திரர்கள்போல ரதங்களோடு சீக்கிரமாகச்சென்றார்கள். பிறகு, உம்முடைய ரதிகர்களுள்சிறந்தவர்களான கிருபர், க்ருதவர்மா, அஶ்வத்தாமா, துர்யோதனன், சகுனி, சுகன், விருகன், க்ராதன், தேவாவ்ருதன் இவர்கள் விரைவுள்ளவர்களாக யானைபோலவும் மேகம்போலவும் கர்ஜிக்கின்ற ரதங்களோடும் விற்களோடும் அவர்களை எதிர்த்துச்சென்றார்கள். பிறகு, உம்மைச்சேர்ந்த ரதிகஶ்ரேஷ்டர்கள் அந்தப்பதினொருவீரர்களையும் வஜ்ராயுதம்போன்ற பாணங்களால்அடித்துக்கொண்டு தடுத்தார்கள். குணிந்தர்கள் புதியமேகத்துக்குஸமமான நிறமுள்ளவைகளும் மலைகளின்சிகரங்களுக்கு ஒப்பானவைகளும் பயங்கரமானவேகமுள்ளவைகளுமான யானைகளால்அவர்களைச் சூழ்ந்துகொண்டார்கள்.

---

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

(ஸங்குல யுத்தம்.)

நன்கு பழக்கப்பட்டவைகளும் இமயமலையில்தோன்றியவைகளும் மிக்கமதங்கொண்டவைகளும் யுத்தம்பண்ணுவதில் விருப்பமுற்ற ஸமர்த்தர்களால் ஏறப்பட்டிருப்பவைகளும் பொன்விரிப்புகள் மேலே விரிக்கப்பட்டிருப்பவைகளுமான யானைகள், ஆகாயத்தில் மின்னலுடன்கூடினமேகங்கள் விளங்குவதுபோல விளங்கின. குணி

ந்தனுடையபுத்திரன், பெரியவையும் உருக்கினாற்செய்தவையுமான பத்துப்பாணங்களால் குதிரைகளோடும் ஸாரதியுடனும்கூடின கிருபரை அதிகமாகத் துன்பமடையும்படிசெய்தான். பிறகு, அவன் கிருபருடைய பாணங்களால் அடிக்கப்பட்டு யானையோடுகூடவே பூமியில் விழுந்தான். குணிந்தபுத்திரனுடைய இளையஸஹோதரனே, சூரியனுடைய கிரணங்கள்போன்றவைகளும் உருக்குமயமாயிருப்பவைகளுமான தோமரங்களால் போஜனனைகிருதவர்மாவினுடைய குதிரைகளைக்கொன்றான். பிறகு, கிருதவர்மாவினுடைய குதிரைகள் கொல்லப்பட்டு க்ஷணத்தில் விழுந்தன. பிறகு, எல்லா ஆயுதங்களுமுள்ள போர்வீரர்களோடும் கொடிகளோடுங்கூடின வேறு மூன்று பெரிய யானைகள் த்ரோணபுத்ரரால் அடிக்கப்பட்டவைகளாகப் பிரஜ்ஞையை இழந்து உயிர்துறந்து, வஜ்ரந்தினால் பிளக்கப்பட்ட பெருமலைகள்போலப் பூமியில் விழுந்தன. குணிந்தராஜனுடைய இளைய ஸஹோதரனை அடுத்துப்பிறந்திருப்பவன் உம்முடைய புத்திரனைச் சிறந்த பாணங்களால் நடுமார்பில் அடித்தான். உமது குமாரன் கூர்மையுள்ள பாணங்களால் அவனுடைய சரீரத்தையும் அந்த யானையையும் அடித்தான். அந்தச் சிறந்தயானையானது மாரிக்காலத்தில் மஹேந்திரனுடைய வஜ்ரத்தினாலேஅடிக்கப்பட்ட தாதுபர்வதமான து ஜலத்தைக்கக்குவதுபோல நாற்புறங்களிலும் ரக்தத்தை மிகுதியாகப் பெருக்கிக்கொண்டு ராஜபுத்திரனுடன் விழுந்தது. குணிந்தபுத்திரனால் ஏவப்பட்ட வேறொருயானையானது ஸாரதியோடும் குதிரைகளோடும் ரதத்துடனும்கூடின க்ராதனை மிக அடித்தது. பிறகு, அது க்ராதனுடைய பாணங்களால் கிழித்தடிக்கப்பட்டுத் தன்மீதுள்ள வீரனோடு வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட மலைபோல் விழுந்தது. பிறரால் வெல்லமுடியாத வீரனை க்ராதராஜன் யானையின்மீதிருக்கின்ற மலைநாட்டில் தோன்றின வீரனால் அம்புகளால் அடிக்கப்பட்டவனைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் விற்களோடும் கொடிகளோடும், பெருங்காற்றினால் முறிக்கப்பட்ட பெரிய மரம் போலக் கீழே விழுந்தான். விருகன், யானையின்மீதிருக்கின்றவனும் சிறந்த மலையில் வஸிக்கின்றவனுமான வீரனைப் பன்னிரண்டு பாணங்களால் நன்றாகப்பிளந்தான். பிறகு, மஹாகஜமானது குதிரைகளுடனும் ரதத்துடனுங்கூடின விருகனை நான்கு கால்களாலும் விரைவாகத் தாக்கியது. சிறந்தயானையினால் தாக்கப்பட்டவனும் வீர்யமுள்ளவனுமான அந்த விருகன் பன்னிரண்டு பாணங்களால் அதனைப் பிளந்தான். விருகனால் பாணங்களால் அடிக்கப்பட்ட அந்த யானையானது

பப்ருவினுடைய குமாரனோடு பூமியில் விழுந்தது. அப்பொழுது, குணிந்தராஜனுடைய வேறுஒருகுமாரன் போர்புரிந்தான். அந்தச் சூரனும் ஸுபலனுடைய குமாரனை சகுனியினால் பாணங்களால் விரைவாக அடிக்கப்பட்டுக் கீழே விழுந்தான். குணிந்தபுத்திரன் கொம்புகளாலும் வாலினாலும் பின்சரீரத்தினாலும் எதிரிகளை வீழ்த்து கின்ற யானையினால் சகுனியினுடையகுதிரைகளை யுத்தத்தில் யமனுடைய வீட்டுக்கு அனுப்பினான்; ரதத்தையும் கலகலக்கச்செய்து ஸிம்மநாதம் செய்தான். பிறகு, கர்ஜிக்கின்ற அவனுடையதலையைக் காந்தாராதிபதியான சகுனி அறுத்தான். பிறகு, அந்தக்குணிந்தர்கள் சென்றுவிடவே, உம்மைச்சேர்ந்த அந்த மகாரதர்கள் மிக்க மனக் களிப்புள்ளவர்களாக ஸமுத்திரத்தினின்றுஉண்டான சிறந்த சங்கங்களை ஊதினார்கள்; விற்களைக் கையில்கொண்டவர்களாக எதிர்த்தும் சென்றார்கள். கௌரவர்களுக்குப் பாண்டவர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடும் பாணங்களாலும் கத்திகளாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் கதைகளாலும் கோடாலிகளாலும் மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவற்றின் உயிரைவாங்குகின்றதும் மிக்க ஸங்குலமானதும் அதிகபயங்கரமாயிருப்பதுமான அப்படிப்பட்டயுத்தமானது திரும்பவும் நடந்தது. பிறகு, ரதங்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்களும் ஒன்றினால் ஒன்று அடிக்கப்பட்டுத் திக்குக்களினின்று உண்டான உக்கிரமான காற்றுக்களால் மின்னலுடன்கூடின மேகங்கள் போலப் பூமியில் விழுந்தார்கள். பிறகு, சதானீகனாலடிக்கப்பட்ட பெரியயானைகளும் குதிரைகளும் ரதங்களும் உம்முடைய காலாட்களுடைய கூட்டங்களும் கருடனுடையகாற்றினால் நன்றாக அடிக்கப்பட்டஸர்ப்பங்கள்போலப் பரவசமாகப் பூமியை அடைந்து பொடி செய்யப்பட்டன. பிறகு, அந்த விந்தனுடையகுமாரன் சிரித்துக் கொண்டு நகுலகுமாரனைக் கூர்மையுள்ள அனேகபாணங்களால் அடித்தான். பிறகு, நகுலகுமாரன் கோபத்தினால் தாமரை மலர் போன்றமுகத்துடன்கூடின விந்தபுத்திரனுடையதலையை க்ஷுரத்தினால் அறுத்தான். பிறகு, கர்ணபுத்திரன் சதானீகனை உருக்குமயமான மூன்று பாணங்களாலும் அர்ஜுனனை மூன்று பாணங்களாலும் பீமனையும் நகுலனையும் மூன்றுபாணங்களாலும் ஏழுபாணங்களாலும் ஜனார்த்தனரைப்பன்னிரண்டு பாணங்களாலும் அடித்தான். மனிதஇயற்கைக்கு மேற்பட்டசெய்கையுள்ள கர்ணபுத்திரனுடைய அந்தச்செய்கையைக்கண்டு கௌரவர்கள் களிப்படைந்து (அவனைப்) புகழ்ந்தார்கள். தனஞ்சயனுடைய பராக்கிரமத்தை அறிந்தவர்கள், 'இவன் அக்னியில்ஹோமம்செய்யப்பட்டவன்' என்றே எண்ணினார்கள்.

## தொண்ணூறாவது அத்யாயம்.

(அர்ஜுனன் கர்ணபுத்திரனை விருஷஸேனனைக் கொன்றது.)

பிறகு, சத்துருவீரர்களை அழிப்பவனும் புருஷஶ்ரேஷ்டனும் ஸூதபுத்திரனுக்கெதிரிலிருந்தவனுமான அந்தக்கிரீடியானவன், அப்பொழுது மாத்ரியின் புத்திரனை நகுலன் குதிரைகளை இழந்திருப்பதைக்கண்டு, ஜனங்களுடைய மத்தியில் அதிகமாக அடித்துக் காயம் பண்ணப்பட்ட கிருஷ்ணனையும் நன்றாகப்பார்த்து, யுத்தத்தில் விருஷஸேனனை நன்றாக எதிர்த்தான். பெரும்போரில் தன்னைநோக்கி வருகின்றவனும் புருஷஶ்ரேஷ்டனும் உக்கிரனும் ஆயிரம்பாணங்களைத் தரித்தவனும் மஹாரதனுமான அந்தக்கிரீடியை முற்காலத்தில், நமுசி மஹேந்திரனை எதிர்த்ததுபோலக் கர்ணபுத்திரன் எதிர்த்தான். சூரர்களும் ரதிகர்களுள் மேன்மைபெற்றவர்களுமான அந்தமஹாரதர்கள் இருவரும் அந்தயுத்தத்தில் பரஸ்பரம் நேரில்நின்று, அதிகமான பரபரப்புள்ளவர்களாக அப்பொழுது அநேக அம்புக்கூட்டங்களைப் பிரயோகித்தார்கள். பிறகு, மஹானுபாவனை கர்ணபுத்திரன் யுத்தத்தில் விரைவாகப் பார்த்தனைக் கூர்மையுள்ள ஓரம்பினால் அடித்து, வீரனை அந்தநமுசி இந்திரனை அடித்துக் கர்ஜித்ததுபோல உரக்கக் கர்ஜித்தான். மறுபடியும், அந்தவிருஷஸேனன் உக்கிரமான பாணங்களால் இடக்கைத்தோள்பட்டையில் அடித்தான். அவ்வாறே, கிருஷ்ணனை ஒன்பதுபாணங்களால் அடித்து மறுபடியும் பார்த்தனைப் பத்துப்பாணங்களால் அடித்தான். அர்ஜுனன், கர்ணபுத்திரனை விருஷஸேனனால் விடப்பட்ட அப்படிப்பட்ட அம்புகளால் முதலில் அடிக்கப்பட்டமையால் சிறிதுகோபமூட்டப்பட்டுப் பிறகு அவனைக் கொல்வதின்பொருட்டு மனத்தைச்செலுத்தினான். பிறகு, மஹாபலசாலியான கிரீடியானவன் யுத்தத்தில் கர்ணபுத்திரனைக் கொல்லும் விஷயத்தில் நிச்சயமுள்ளவனாக யுத்தமுனையில் கோபத்தினால் புருவத்தை முக்கோணவடிவமாக நெற்றியில் ஏறச்செய்து, பாணங்களை விரைவாகப் பிரயோகித்தான். யமனுக்குச்சத்துருவான ருத்திரரை அடித்த அர்ஜுனன் அப்பொழுது சிறிதுசிவந்தகண்களையுடையவனாகவும் உரக்கச்சிரிக்கின்றவனாகவும் கர்ணனையும் துர்யோதனனையும் துரோணபுத்ரரையும் முதன்மையாகக்கொண்டஎல்லாக்கௌரவவீரர்களையும் நோக்கி, 'கர்ண! இப்பொழுது நீ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே யுத்தத்தில் கூர்மையுள்ள அம்புகளால் யுத்தத்தில் உக்கிரனை வங்கவிருஷஸேனனைப் பரலோகத்தை

அடைவிக்கப்போகிறேன். ஸஹாயமில்லாதவனும் என்னை விட்டுப் பிரிந்தவனும் சிறந்த பலமுள்ளவனும் என்னுடைய குமாரனுமான அந்த அபிமன்யு உங்கள் அனைவர்களாலும் கொல்லப்பட்டானென்று ஜனங்கள் ஒரு குறையைச் சொல்லுகிறார்களன்றோ? ஆகையினால், நான் உங்களுக்கு முன்னிலையில் கொல்லப்போகிறேன். ரதங்களில் இருப்பவர்களே! இந்தக் கர்ணபுத்திரனைக் காப்பாற்றுங்கள். நான் உக்கிரனான (இந்த) விருஷஸேனனைக் கொல்லப்போகிறேன்.(கர்ண!) அர்ஜுனனென்கிற நான் யுத்தமத்தியில் மிக்க மதிமயக்கமடைந்தவனான உன்னையும் பிறகு கொல்லப்போகிறேன். துர்யோதனனை அடுத்திருப்பதினால் கொழுப்புள்ளவனும் கலகத்துக்குக் காரணமானவனுமான அப்படிப்பட்ட உன்னை இப்பொழுது நான் யுத்தத்தில் வலிந்து கொல்லப்போகிறேன். எவனுடைய அநீதியினால் இந்தப் பெரிதான அழிவு உண்டாயிற்றோ அந்தப் புருஷாதமனான இந்தத்துரியோதனனை யுத்தத்தில் பீமஸேனன் கொல்லப்போகிறான்' என்று சொன்னான். மஹாபலசாலியான அந்த அர்ஜுனன் இவ்வண்ணம் சொல்லிவிட்டு, வில்லைத்துடைத்து யுத்தகளத்தில் கர்ணபுத்ரனை விருஷஸேனனை லட்சியம் வைத்து அவனைக் கொல்வதின்பொருட்டு யுத்தத்தில் நல்ல கூரியபாணங்களைப் பிரயோகித்தான். கிரீடியானவன் உரக்கச் சிரித்துக்கொண்டு பயமற்றவனாகப் பத்துப்பாணங்களால் அவனை மர்மஸ்தானங்களில் அடித்துக் கூர்மையுள்ள நான்கு க்ஷுரங்களால் அவனுடைய வில்லையும் இரண்டுகைகளையும் தலையையும் அறுத்தான். பார்த்தனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டவனும் கைகளையும் தலையையும் இழந்தவனுமான அந்த விருஷஸேனன் நன்றாகப் பூத்திருந்த மிகப்பெரிய ஒருஸாலவிருக்ஷமானது இடியினால் தாக்கப்பட்டு அறுந்து முறிந்து கீழே விழுவதுபோல ரதத்தினின்று பூமியில் விழுந்தான். சுறுசுறுப்பாகக் காரியங்களைச் செய்பவனான கர்ணன், தன் புத்ரன் பார்த்தனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு விழுகிறதைக்கண்டு, புத்திரவதத்தினால் அதிகதாபத்தையடைந்து, கோபத்தினால் ரதத்தோடு கிரீடியினுடைய ரதத்தை விரைவாக அடுத்தான்.*

---

அதிகபாட அத்யாயம்.

கரை புரளுகின்ற கடலபோல வருகின்றவனும் கர்ஜிக்கின்றவனும் மிக்க பெரிய சரீரத்தையுடையவனும் தேவர்களாலும் தடுக்க முடியாதவனுமான அந்தக் கர்ணனைப்பார்த்துப் புருஷோத்தமரான தாசார்ஹர் உரக்கச்சிரித்துக்

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

**(கர்ணனும் அர்ஜுனனும் எதிர்த்ததும், ஆகாயத்தில் போர்காணவந்த தேவாஸுரர்கள் முறையே அர்ஜுன கர்ணர்களின் கக்ஷிகளைச்சார்ந்து இரண்டாகப்பிரிந்ததும்.)**

விருஷஸேனன் கொல்லப்பட்டதைப்பார்த்துக்கோபத்துடனும் பொறாமையுடனுங்கூடின கர்ணன் புத்திரசோகத்தினால் இரண்டு கண்களிலிருந்தும் நீரை மிகச்சொரிந்தான். தேஜஸ்வியான கர்ணன் கோபத்தினால் சிவந்த கண்களுடன், யுத்தத்தின்பொருட்டுத் தனஞ்சயனை அழைத்துக்கொண்டு ரதத்தோடு அவனுக்கு எதிராகச் சென்றான். ஸூர்யனுக்கு ஒப்பானவைகளும் புலித்தோலால் மூடப்பட்டவைகளும் நெருங்கியிருக்கின்றவைகளுமான அந்த இரண்டு ரதங்களையும் அந்தயுத்தரங்கத்தில் உதித்துவருகின்ற இரண்டுஸூர்யர்களைப்போலக் கண்டார்கள். வெண்மையானகுதிரைகளையுடையவர்களும்(ரதத்தில்)வீற்றிருப்பவர்களும் பகைவர்களை அழிப்பவர்களும் மஹாத்மாக்களுமானபுருஷஶ்ரேஷ்டர்கள் ஆகாயத்தில் சந்திரஸூர்யர்கள்போல விளங்கினார்கள். * பெரியவரே! மூவுலகொண்டு அர்ஜுனனைப்பார்த்துக் கூறலானார். 'தனஞ்சய! நீ உறுதியாக இரு. எந்த ரதத்தோடு நீ போர்புரியவேண்டுமோ, வெண்மையானகுதிரைகளையுடையதும் சல்யனை ஸாரதியாகக்கொண்டதுமான அந்த ரதமானது இதோ வருகிறது. பாண்டவ! பற்பலகொடிகளால் வியாபிக்கப்பட்டதும் கிண்கிணிகளுடைய ஸமூஹத்துடனும் மாலைகளுடனும் கூடியதும் வெண்மையான குதிரைகளால் ஆகாயத்தில் தாங்கப்படுகிற விமானம் போலிருக்கின்றதும் வெள்ளைக்குதிரைகள்பூட்டப்பட்டதும் ராதாபுத்திரனோடுகூடியதும் ஸன்னாஹத்துடனிருப்பதுமான இந்தக் கர்ணனுடைய ரதத்தைப் பார். இந்திரவிற்போலப் பிரகாசிக்கின்றதும் ஆகாயத்தைக் கீறுகின்றதுபோலிருக்கின்றதுமான மஹாத்மாவான கர்ணனுடைய யானைக்கச்சைக் கொடியையும் பார். நீர்த்தாரைகளைப் பொழிகின்றமேகம்போல் சரதாரைகளைப்பொழிந்துகொண்டு வருகின்றவனும் தார்த்தராஷ்டிரனுக்குப் பிரியத்தை விரும்புகின்றவனுமான கர்ணனைப் பார். "இதோ மத்ரதேசாதிபதியான சல்யராஜன் ரதத்தின் முகப்பில் இருந்துகொண்டு அளவில்லாத பராக்கிரமமுள்ள இந்தக்கர்ணனுடைய குதிரைகளை நடத்துகிறான். பாண்டவ! நாற்புறங்களிலும்தோன்றியிருக்கின்ற துந்துபிகளுடையபேரொலியையும் பயங்கரமான சங்கவாத்தியத்தின்ஓசையையும் பற்பல ஸிம்மநாதங்களையும் கேள். அளவில் அடங்காத தேஜஸுள்ள கர்ணனால் அடிக்கப்பட்டு அசையும்படி செய்யப்படுகின்ற தனுஸினுடையதும் பெரியசத்தங்களை மறைப்பதுமான சப்தத்தைக்கேள். பெரியகாட்டில் கோபங்கொண்ட ஸிம்மத்தைக்கண்டு மிரு

* முதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

கங்களையும் ஜயிப்பதற்காக முயற்சியுள்ள இந்திரனையும் பலியையும் போல (யுத்த) ஸன்னத்தர்களான அவ்விருவர்களையும்கண்டு எல்லாச் சேனைகளும் ஆச்சர்யத்தை அடைந்தன. எல்லா க்ஷத்திரியர்களும் தேரொலிகளாலும் நாணொலியினாலும் தலத்வனிகளாலும் அவ்வாறே பாணங்களுடைய சப்தங்களாலும் சங்கநாதங்களாலும் (திசைகளை) எதிரொலியிடும்படிசெய்துகொண்டு அந்த இரண்டுரதங்களையும் எதிர்த்துஓடினார்கள். கர்ணனுடைய யானைக்கச்சைக் கொடியையும் கிரீடியினுடைய வானரக்கொடியையும் கண்டு வீரர்களுக்கு ஆச்சர்யம் உண்டாயிற்று. பாரதரே! (யுத்தத்திற்காக) எதிர்த்திருக்கின்ற அந்த இரண்டுரதங்களையுங்கண்டு அரசர்கள் ஸிம்மநாதங்களின் சப்தங்களையும் 'நல்லது, நல்லது' என்கிற மிகுதியான சொற்களையும் வெளியிட்டார்கள். அந்தயுத்தரங்கத்தில் ஆயிரக்கணக்காயிருந்த யுத்தவீரர்கள் அவ்விருவர்களுடைய தவந்துவயுத்தத்தையும் கேட்டுக் கைச்சத்தங்களையும் அவ்வாறே பெரியபாணங்களின் சத்தத்தையும் உண்டுபண்ணினார்கள். கௌரவர்கள் அந்தயுத்தத்தில் நான்குபக்கத்திலும் வாத்தியங்களை முழக்கினார்கள். ராதேயனுக்கு நாற்புறத்திலும் லக்ஷக்கணக்காகச் சங்கங்களை முழக்கினார்கள். அவ்வாறே, பாண்டவர்களெல்லோரும் தனஞ்சயனை ஸந்தோஷிக்கச்

---

கங்கள் சிதறிஓடுவதுபோலச் சைன்யத்துடன் கூடின மஹாரதர்களான இந்தப் பாஞ்சாலர்கள் பிளக்கப்பட்டு ஓடுகின்றார்கள். குந்தீபுத்ர! எல்லாமுயற்சியுடனும் ஸூதபுத்திரனை நீ கொல்லவேண்டும். கர்ணனுடைய பாணங்களை வேறொரு மனிதன் ஸகிப்பதற்குச் சக்தியுள்ளவனல்லன். நீயோ, யுத்தத்தில் தேவர்களுடனும் அஸுரர்களுடனும் சந்தர்வர்களுடனும் கூடினவையும் ஜங்கமஸ்தாவரங்களுடன் கூடியவையுமான மூவுலகங்களையும் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவன். நான் அவ்விதமாகவே அறிந்திருக்கிறேன். பயங்கரரும் உக்ரஸ்வரூபியும் மஹாத்மாவும் மூன்று கண்களையுடையவரும் (தாரித்ரியத்தை) நாசம் செய்பவரும் ஜடையுள்ளவருமான ஈச்வரனைப் பார்ப்பதற்கே பிராணிகள் சக்தியுள்ளவைகளில்லை. அவ்வாறிருக்க, பிரபுவைஎதிர்த்துப் போர்புரிவதற்குச் சக்தியுள்ளவர்களாகார்களென்பதில் யாதுசந்தேகம்? எல்லாப் பிராணிகளுக்கும் மங்களகரமாயிருப்பவரும் மங்களரும் சர்வருமான ஸாக்ஷாத் மஹாதேவர் யுத்தத்தில் உன்னால் ஆராதிக்கப்பட்டார். தேவர்களும் உனக்கு வரத்தைக் கொடுத்தார்கள். பார்த்த! மகாபாகுபலமுள்ளவனே! தேவதேவரான அந்தச் சூலபாணியினுடைய அனுக்ரஹத்தினாலே, இந்திரன் நமுசியைக்கொன்றதுபோலக் கர்ணனைக் கொல்வாயாக. பார்த்த! எப்பொழுதும் உனக்கு நன்மை உண்டாகுக. யுத்தத்தில் ஜயம் அடைவாயாக' என்று கூறினார். அர்ஜுனன், 'மாதவரே! மதுவென்கிற அஸுரனை அழித்தவரே! எல்லா உலகங்களுக்கும் குருவான

செய்துகொண்டு தூர்யங்கள் சங்கங்கள் இவற்றின் கோஷத்தினால் எல்லாத்திசைகளையும் அதிகமாகச் சத்தமிடும்படி செய்தார்கள். கர்ணார்ஜுனர்களுடையயுத்தத்தில் ஸிம்மநாதங்களாலும் கைகளைக் கொட்டும் த்வனிகளாலும் உரத்தவீரவாதங்களாலும் சூரர்களுடைய தோள் தட்டும்ஒலிகளாலும் நான்குபக்கங்களும் நெருங்கினவாயின. அரசரே! புருஷஶ்ரேஷ்டர்களும் ரதங்களிலிருப்பவர்களும் ரதிகர்களுள் சிறந்தவர்களும் பெரியவிற்களைப்பிடித்தவர்களும் பாணங்களோடும் சக்திகளோடும் த்வஜங்களோடும் கூடியவர்களும் கவசத்தை அணிந்தவர்களும் கத்திகட்டிக்கொண்டவர்களும் வெள்ளைக்குதிரைகளையுடையவர்களும் சங்கங்களால் பிரகாசிக்கின்றவர்களும் சிறந்த அம்பறாத்தூணிகளையுடையவர்களும் நல்ல காட்சியுள்ளவர்களும் சிவந்த சந்தனத்தினால் பூசப்பட்ட மேனியையுடையவர்களும் மதங்கொண்ட இரண்டுகாளைகள்போன்றவர்களும் மின்னல்போன்ற விற்களையும் த்வஜங்களையுமுடையவர்களும் மிக்க ஆயுதங்களால் சண்டையிடுகின்றவர்களும் சாமரங்களுடனும் விசிறிகளுடனும் கூடியவர்களும் வெள்ளைக்குடைகளால் பிரகாசிப்பவர்களும் கிருஷ்ணனாலும் சல்யனாலும் (நடத்தப்பட்ட) ரதங்களுடன்கூடியவர்களும்

---

நீர் சந்தோஷமுள்ளவராயிருந்தால் எனக்கு ஜயம் நிச்சயமே. இதில் ஸம்சயமில்லை. ஹ்ருஷீகேசரே! மகாரதரே! என்தேரில் பூட்டியிருக்கிற குதிரைகளை ஓட்டும். பல்குனன் யுத்தத்தில் கர்ணனைக்கொல்லாமல் திரும்பமாட்டான். கோவிந்தரே! என்னுடைய பாணங்களாலே துண்டுதுண்டாகச் செய்யப்பட்டு உயிரை இழந்திருக்கின்ற கர்ணனை இப்பொழுது பாரும். அல்லது, கர்ணனால் அம்புகளால் கொல்லப்பட்ட என்னையாவது பார்ப்பீர். எந்த யுத்தத்தைப் பூமியுள்ளவரையில் ஜனங்கள் சொல்லப்போகிறார்களோ, மூவுலகங்களையும் மோஹிக்கச்செய்கின்ற கோரமான அந்தயுத்தமானது இதோ வந்துவிட்டது' என்று சொன்னான். பார்த்தன், இகழத்தகாத காரியங்களைச் செய்கிற கிருஷ்ணனைப் பார்த்து, அப்பொழுது இவ்வண்ணம் சொல்லிக்கொண்டு, ஒருயானையைப் பகையானை எதிர்ப்பதுபோல ரதத்தோடு விரைவாக (கர்ணனை) எதிர்த்துச் சென்றான். பகைவர்களை அடக்குகிறவரே! தேஜஸ்வியான பார்த்தன் மீண்டும் கிருஷ்ணனைப் பார்த்து, 'ஹ்ருஷீகேசரே! குதிரைகளை ஓட்டும். இந்த ஸமயம் சென்றுபோகிறது' என்றான். அப்பொழுது மகாத்மாவான அந்தப் பாண்டவனால் இவ்வாறு உரைக்கப்பட்ட அந்தவாஸுதேவர், அப்பொழுது பாண்டவனை 'ஜய' என்று சொல்லி வாழ்த்தி, மனோவேகமுள்ள குதிரைகளை ஓட்டினார். மனோவேகமுள்ள அந்தப் பாண்டுபுத்திரனுடைய ரதமானது ஒருக்ஷணத்திலுள் கர்ணனுடைய ரதத்தின் முன்னிலையை அடைந்தது.

ஒத்த உருவத்தையுடையவர்களும் மஹாரதர்களும் ஸிம்மத்தின் தோள்போன்ற தோள்களையுடையவர்களும் நீண்ட கைகளையுடையவர்களும் சிவந்த கண்களையுடையவர்களும் ஸ்வர்ணமாலையை அணிந்தவர்களும் அகன்றமார்பையுடையவர்களும் மகாபலசாலிகளும் ஒருவரைஒருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களும் ஒருவரைஒருவர் வெல்வதில் விருப்பமுற்றவர்களும் பசுக்கொட்டிலில் இரண்டுகாளைகள்போல ஒருவரைஒருவர் எதிர்த்து ஓடுகின்றவர்களும் மதப்பெருக்குள்ள யானைகள்போன்றவர்களும் மிக்க கோபங்கொண்ட இரண்டு மலைகள்போன்றவர்களும் ஸர்ப்பத்தின் குட்டிகள்போல் பிரகாசிப்பவர்களும் யமனுக்கும் காலனுக்கும் அந்தகனுக்கும் ஒப்பானவர்களும் கோபங்கொண்ட இந்திரனும் விருத்திரனும் போன்றவர்களும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் ஸமமான ஒளிபொருந்தியவர்களும் யுகத்தை முடிப்பதற்காகத் தோன்றிய கோபமுள்ள இரண்டு மஹாகிரகங்கள்போலிருப்பவர்களும் தேவகுமாரர்களும் தேவர்களுக்கொப்பானவர்களும் ரூபத்தினால் தேவர்களுக்கு ஸமானமாயிருப்பவர்களும் தற்செயலாகவந்திருக்கிற ஸூர்யனும் சந்திரனும் போன்றவர்களும் சிறந்த தேகபலமுள்ளவர்களும் யுத்தத்தில் கர்வங்கொண்டவர்களும் யுத்தத்தில் பற்பல சஸ்திரங்களை ஏந்தியவர்களும் பாய்கின்ற புலிகள் போன்றவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான அவ்விருவர்களையுங் கண்டு உம்மைச்சேர்ந்தவர்களுக்கு அதிகமான சந்தோஷம் உண்டாயிற்று. ஒன்றுசேர்ந்திருக்கின்ற புருஷஶ்ரேஷ்டர்களான கர்ணதனஞ்சயர்களைக்கண்டு எல்லாப் பிராணிகளுக்கும் வெற்றியில் ஸம்சயமுண்டாயிற்று. இருவர்களும் உத்தமமான ஆயுதங்களைத் தரித்தவர்கள். இருவர்களும் யுத்தத்தில் தகுந்த உழைப்புள்ளவர்கள். இருவர்களும் கைகளின்சத்தத்தினால் ஆகாயத்தை ஒலியிடும்படி செய்பவர்கள். இருவர்களும் பௌருஷத்தினாலும் பலத்தினாலும் பிரஸித்தமான செய்கையையுடையவர்கள். இருவர்களும் யுத்தத்தில் சம்பரனுக்கும் தேவராஜனுக்குமொப்பானவர்கள். இருவரும் கார்த்தவீர்யார்ஜுனனுக்கு ஸமானர்கள். இருவரும் தசரதகுமாரரான ராமருக்கு ஸமானர்கள். இருவரும் விஷ்ணுவின் வீர்யத்துக்கு ஸமமான வீர்யமுள்ளவர்கள். இருவரும் யுத்தத்தில் ருத்திரருக்கு ஸமானர்கள்.* அரசரே! இருவரும் வெள்ளைக்குதிரைகளையுடையவர்கள்; சிறந்த ரதங்களால் ஸஞ்சரிப்பவர்கள். சல்யன் கிருஷ்ணன் இரு

---

* இது மூலத்தில் இரண்டுமுறை வருகிறது.

வரும் மிகச்சிறந்த ஸாரதிகள். மகாராஜரே! பிறகு, பிரகாசிக்கின்ற அந்த இரண்டு மஹாரதர்களையும்கண்டு ஸித்தர்கள் சாரணர்கள் இவர்களின்கூட்டங்களுக்கு ஆச்சர்யமுண்டாயிற்று.பரதர்களில் சிறந்தவரே! பிறகு, கௌரவர்கள் மஹாத்மாவும். யுத்தத்தில் பிரகாசிப்பவனுமான கர்ணனை விரைவாகச் சேனையுடன் சூழ்ந்துகொண்டார்கள். அவ்வாறே, உத்ஸாஹமுள்ளவர்களான திருஷ்டத்யும்னனைமுதன்மையாகக்கொண்ட பாண்டவர்களும் நகுலஸஹதேவர்களும் சேகிதானனும் மிக்க ஸந்தோஷமுள்ளவர்களான ப்ரபத்ரகர்களும் பற்பலதேசத்தில் தோன்றியவர்களும் சூரர்களும் நன்னடையுள்ளவர்களும் யுத்தத்தில் களிப்பவர்களுமான (மற்றுமுள்ள) வீரர்களனைவரும் ஒன்றுசேர்ந்தவர்களாகவும் உத்ஸாஹமுள்ளவர்களாகவும் தனஞ்சயனைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் காலாட்களோடும் குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடும்கூடியவர்களும் சத்துருக்களைக் கொல்லுகின்றவர்களும் (அர்ஜுனனைப்) பாதுகாக்க எண்ணங்கொண்டவர்களும் அவனுடைய விஜயத்திலும் கர்ணனுடைய வதத்திலும் நோக்கமுள்ளவர்களுமாயிருந்தார்கள். அவ்வாறே துர்யோதனனைத் தலைமையாகக்கொண்ட உம்மைச்சேர்ந்தவர்கள் எல்லாரும் முயற்சியுடையவர்களும் ஸேனையைஅடிப்பவர்களுமாயிருந்துகொண்டு கர்ணனை யுத்தத்தில் பாதுகாத்தார்கள். மன்னரே! கர்ணன் யுத்தத்தில்உம்மைச்சேர்ந்தவர்களுக்குப்பந்தயப்பொருளானன். அவ்வாறே, பாண்டவர்களைச் சேர்ந்தவர்களுக்குப் பார்த்தன் அப்பொழுது பந்தயப்பொருளானன். அவ்விருவர்களுக்கும் அந்தப் போர்ச்சூதில் ஸப்யர்களும் பார்ப்பவர்களும் ஏற்பட்டார்கள். அந்தப்போர்ச்சூதில் சூதாடுகின்ற இவர்களுக்கு வெற்றிதோல்விகள் நிச்சயமாக இருந்தன. யுத்தமுனையிலிருக்கின்ற நம்மவர்களுக்கும் பாண்டவவீரர்களுக்கும் வெற்றிக்கோ தோல்விக்கோ அந்தக் கர்ணார்ஜுனர்களால் (போர்ச்)சூது ஆரம்பிக்கப்பட்டது. மஹாராஜரே! யுத்தத்தில் புகழ்பெற்றவர்களான அவ்விருவர்களும் ஒருவர்மற்றொருவரைக் குறித்துக்கோபமுள்ளவர்களாகவும் அன்யோன்யம் வதஞ்செய்வதில் விருப்பமுள்ளவர்களாகவும் யுத்தத்தில் நின்றார்கள். பிரபுவே! இந்திரவிருத்திரர்கள்போல அடிப்பதில் விருப்பமுற்றவர்களான அவ்விருவரும் இரண்டு கிரகங்கள்போலப் பயங்கரமான ரூபத்தைத் தரித்தவர்களாயிருந்தார்கள். பரதர்களுள் சிறந்தவரே! கர்ணனுக்கும் அர்ஜுனனுக்குமுள்ள தாரதம்யவிஷயத்தில் விவாதமானது ஆகாயத்தில் உண்டாயிற்று. பூதங்களுக்கு ஒன்றோடொன்று கலகங்கள் உண்

டாயின. பெரியவரே! எல்லாப்பிராணிகளும் இரண்டாக வேறு பட்டு வெவ்வேறான வகுப்பைஅடைந்தன. கர்ணார்ஜுனர்கள் எதிர்த்திருக்குங்கால், தேவர்களும் தானவர்களும் கந்தர்வர்களும் பிசாசங்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் (பரஸ்பரம்) விரோதிகக்ஷியை அடைந்தனர். வேந்தரே! இந்தயுத்தத்தில் நக்ஷத்திரங்களுடன் கூடிய ஆகாயமானது கர்ணனுடைய பக்ஷத்திலிருந்தது. பார்த்தனுக்கு * மாதாவான விசாலமானபூமியானது புத்திரனுக்கு ஜயத்தை விரும்பிற்று. நரஸ்ரேஷ்டரே! ஸமுத்திரங்களும் மலைகளும் நதிகளும் நிலத்திலுண்டானவைகளும் நீரிலுண்டானவைகளும் கிரீடியைஅடைந்தன. பகைவர்களைத் தவிக்கச்செய்பவரே! அஸுரர்களும் ராக்ஷஸர்களும் குஹ்யகர்களும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற பக்ஷிகளும் கர்ணனிருக்குமிடம்சேர்ந்தன. ரத்னங்களும் எல்லா நிதிகளும் ஆக்யாநங்களை ஐந்தாமவையாகக் கொண்ட வேதங்களும் உபவேதங்களும் உபநிஷத்துக்களும் கிரீடியைஅடுத்தன. வாஸுகியும், சித்திரஸேனனும், தக்ஷகனும், உபதக்ஷகனும், பூமியிலும் ஆகாயத்திலும் ஜலத்திலும் ஸஞ்சரிப்பவர்களும் வம்சத்துடன்கூடினவர்களுமான கத்ருபுத்திரர்களும், விஷமுள்ளவைகளும் நல்லவேகமுள்ளவைகளுமான மஹாநாகங்களும் அர்ஜுனனை அடைந்தனர். ஐராவதத்தினுடைய வம்சத்தில்தோன்றிய யானைகளும் காமதேனுவினிடத்தினின்று உண்டான பசுக்களும் விசாலாநகரியில்உண்டான ஸர்ப்பங்களும் அர்ஜுனனுடைய பக்கத்தைஅடைந்தன. பாபிகளான ஸர்ப்பங்கள் கர்ணனுடையகக்ஷியில் நின்றன. அரசரே! செந்நாய்கள், துஷ்டமிருகங்கள், மங்களகரமான மிருகபக்ஷிகள், மங்களகரமான பசுக்கள், அவ்வாறே ஸிம்மங்கள், புலிகள் எல்லாம் பார்த்தனுடைய வெற்றியில் பற்றுதலுடன் அவனைஅடைந்தன. வஸுக்களும், மருத்துக்களும், ஸாத்யர்களும், ருத்திரகணங்களும், அஸ்வினீதேவதைகளும், அக்னியும், ருத்திரரும், ஸோமனும், ஸர்ப்பங்களும், பத்துத்திசைகளும், நாய்களும், நரிகளும், பக்ஷிகளும் கர்ணனை அடைந்தனர். மஹேந்திரனோடுகூடின வஸுக்களும் அக்கினியுடன்கூடின மருத்துக்களும் தனஞ்சயன்பக்கத்தில் நின்றார்கள். ஆதித்யவர்க்கங்கள் கர்ணனைச்சார்ந்துநின்றன. பகைவர்களைத் தவிக்கச்செய்பவரே! பரதர்களில் சிறந்தவரே! பித்ருக்களுடனும் ரிஷிகளுடனும்கூடின தேவதைகளும், தும்புருவைத்தலைவனாகக்கொண்ட எல்லாக் கந்தர்வர்களும், யமனும், குபேரனும், வருணனும், அர்ஜுனனிருக்கும்பக்கத்

* 'தாய்போல' என்பது வேறுபாடம்.

தில் (ஒன்றுசேர்ந்தார்கள்.) தேவரிஷிகள் பிரம்மரிஷிகள் இவர்களின் கூட்டங்களும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றவரனைவரும் முனிவர்கூட்டங்களும் ப்ராலேயர்களும் மங்களகரமான அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் சுத்தர்களான அப்ஸரஸ்திரீகளும் தேவதூதர்களும் குஹ்யகர்களும் விரும்பத்தக்க புண்யகந்தங்களும் கிரீடியை அடைந்தனர். மனத்திற்கு அருவருப்பையுண்டுபண்ணத்தக்க கந்தங்களனைத்தும் கர்ணனை அடைந்தன. நாசமடையப்போகிறவர்களுக்கு விபரீதமான அனிஷ்டங்கள் உண்டாகின்றன. மரணகாலமானது அருகில் வந்திருக்கும் ஸமயத்தில் விபரீதஸ்வபாவத்தை அடைந்திருக்கின்ற மனிதனை முடிவுக்காலத்தில் எவைகள் விரைவாக அடைகின்றனவோ அப்படிப்பட்ட குறிகளெல்லாம் ஒன்றுசேர்ந்து ஸூதபுத்திரனை கர்ணனிடத்தில் பிரவேசித்தன. அரசர்களுட் சிறந்தவரே! புருஷஶ்ரேஷ்டரே! அவ்வாறே பலம், ஒளி, ஸித்தி, மிக்கமனக்கிளர்ச்சி, ஸத்யம், விக்ரமம், மனக்களிப்பு, ஜயம், ஆனந்தம் இப்படிப்பட்ட நல்லநிமித்தங்கள் அந்த யுத்தஸமுத்திரத்தில் போர்க்களத்தில் அர்ஜுனனை அடைந்தன. ப்ராம்மணர்களுடன் ரிஷிகள் கிரீடியை அடைந்தார்கள். மஹாராஜரே! பிறகு, தேவகணங்களுடனும் சாரணர்களுடனும்கூடின ஸித்தர்கள் இரண்டாகப்பிரிந்து புருஷஶ்ரேஷ்டர்களான கர்ணார்ஜுனர்களை அடுத்தார்கள். மஹாராஜரே! தேவர்களும் கந்தர்வர்களும் ராக்ஷஸர்களும் ஆகாயத்தில் நான்கு பக்கத்திலும் விசித்திரமான நல்லகுணமுள்ள விமானங்களின்மேலேறிக்கொண்டு கர்ணார்ஜுனர்களுடைய த்வந்த்வயுத்தத்தைக் குறித்து வந்தார்கள். பாரதரே! அப்பொழுது இவ்விதமாக எல்லாப்பிராணிகளும் இரண்டாகப்பிரிந்து ராதேயனுக்கும் அர்ஜுனனுக்கும் ஜயத்தை விரும்பிக்கொண்டிருக்கையில், ஆகாயமானது பதினாயிரம் விமானங்களால் நெருங்கியதாயிற்று. செந்நாய்களாலும் புலிகளாலும் யானைகளாலும் குதிரைகளாலும் ரதங்களின்வரிசைகளாலும் மேகங்களாலும் வாயுவினாலும் வஹிக்கப்படுகின்ற மற்ற அறிவுள்ளவர்களும் கர்ணார்ஜுனர்களுடைய த்வந்துவயுத்தத்தைப் பார்க்கஎண்ணங்கொண்டு வந்தார்கள். மஹாராஜரே! தேவர்களும், அஸுரர்களும், கந்தர்வர்களும், நாகர்களும், யக்ஷர்களும், பக்ஷிகளும், மஹரிஷிகளும், தேவகணங்களும், ஸ்வதாபோஜனம்பண்ணுகின்ற பித்ருக்களும், பற்பலரூபமுள்ள வஸ்திரங்களால் பிரகாசிக்கின்றவர்களும் தவத்தினாலும் வித்தையினாலும்ஔஷதிகளாலும் ஸித்திபெற்றவர்களுமான மகான்களும், ஆகாயத்தில்விவாதப்பட்டுக்கொண்டிருக்கின்றார்கள். பிரம்மதேவர், பிரம்ம

னும் வாஸனையுடனுங்கூடியவைகளும் மங்களகரமாயிருப்பவைகளுமான உத்தமமான பூமாரிகளும் காற்றினால் அலைக்கப்பட்டு (க்கீழே) விழுந்தன. அப்பொழுது, தேவர்களையும் மனிதர்களையும் ஸாக்ஷிகளாகவுடைய ஆச்சர்யகரமான அந்த யுத்தத்தைக்கண்டு பிராணிகள் ஆச்சர்யத்தை அடைந்தன.ஒரேநிச்சயமுள்ளவர்களான உம்முடைய புத்திரனும் ஸூதபுத்திரனும் துன்பத்தையாவது ஆச்சர்யத்தையாவது அடையவில்லை.

பிறகு, துரோணபுத்திரர் உமதுபுத்திரனுடையகையைத் தம்கையினால் உறுதியாகப்பிடித்து ஸமாதானப்படுத்திக்கொண்டு, 'துரியோதன! கிருபைபண்ணு. தணிந்துவிடு. பாண்டவர்களோடு விரோதம் வேண்டாம். யுத்தம் நிந்திக்கத்தக்கது. மஹாஸ்திரங்களை அறிந்தவரும் பிரம்மதேவருக்கு ஒப்பானவருமானகுருவும் அவ்வாறே பீஷ்மர்முதலான மகாரதர்களும் மாண்டார்கள். நானும் என்னுடைய மாதுலரான கிருபரும் கொல்லப்படத்தகாதவர்கள். பாண்டவர்களோடு சேர்ந்து நெடுங்காலம் ராஜ்யத்தை ஆளுவாயாக. தனஞ்சயன் என்னால் தடுக்கப்பட்டானாகில் நிற்பான். ஜனார்த்தனரும் விரோதத்தை விரும்பவில்லை. யுதிஷ்டிரர் எப்பொழுதும் பிராணிகளுடைய ஹிதத்தில் பற்றுதலுள்ளவர்.பீமஸேனன் அவருக்கு வசப்பட்டவன். நகுலஸஹதேவர்களும் அவ்வாறே. உன்னால் பார்த்தர்களோடு ஸமாதானமானது செய்யப்படுமேயாகில்,உன்னுடையஇச்சையினால் பிரஜைகள் மங்களத்தை அடைவனவாம். மிகுந்திருக்கிற அரசர்கள் நகரங்களை நோக்கிச் செல்லட்டும். போர்வீரர்கள் பகைமை நீங்கியவர்கள்ஆகட்டும். அரசே! என்னுடையவசனத்தைக் கேளாமற்போனால் நீ மனவருத்தத்தைஅடைந்து நிச்சயமாகவே பகைவர்களால் யுத்தத்தில் கொல்லப்படுவாய். கருணையுள்ளவரான தர்மராஜர் வேண்டப்பட்டால்,பிராயம்முதிர்ந்தபிதாவானதிருதராஷ்டிரரையும் கீர்த்தியுள்ளவளான காந்தாரியையும்பார்த்துச் சாந்தியை அடைவார். பிரபுவான தர்மநந்தனர் உசிதப்படி ராஜ்யத்தையும் உனக்குக்கொடுக்க ஸம்மதிப்பார். கற்றறிந்தவரும் நல்புத்தியுள்ளவரும் வீரரும் எல்லாச்சாஸ்திரார்த்தங்களுடைய தத்வத்தையும்அறிந்தவரும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரர் வைரத்தைப்பாராட்டமாட்டார்.அவர் பந்துவினிடத்தில் மீறிச்செல்வதில்லை. சண்டையில் எண்ணங்கொள்ளாதவளான த்ரௌபதியும் தன்பந்துஜனங்கள்விஷயத்தில் ஆனந்தமடைவாள். புருஷச்ரேஷ்டர்களும் பாண்டுநந்தனர்களுமான பீமார்ஜுனர்களும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும், வாஸுதேவர் புத்தி

சாலியான யுதிஷ்டிரர் இவ்விருவருடைய வசனத்தினது கௌரவத்தினாலும் (அவர்களுடைய) அபிப்ராயத்தில் நிற்பார்கள். துர்யோதன! (உனது) ஆன்மாவைக் காத்துக்கொள். எல்லாவற்றிற்கும் ஆன்மா பாத்திரமன்றோ? உயிரோடிருப்பதில் முயற்சிசெய். உயிரோடிருப்பவன் மங்களங்களைப்பார்க்கிறான். நீ உயிரோடிருப்பாயாகில் ராஜ்யமும் ஸம்பத்தும் மங்களமும் கிடைக்கும் குருவம்சத்திலுதித்தவனே! மரித்தவனுக்கு ராஜ்யமில்லை; ஸுகம் ஏது? பாரத! சென்றதும் செல்லுகின்றதுமான இந்தஉலகநடையைப் பார். நீபாண்டவர்களோடு பகைமை நீங்குவாயாக. குலத்தினதுமிச்சத்தைப் பாதுகாப்பாயாக. குருவம்சத்திலுதித்தவனே! நான் அஹிதமான வசனத்தைச் சொல்லக்கூடியகாலம் ஸம்பவிக்கவேண்டாம். மிக்கபுஜபலமுள்ளவனே! விருப்பதனைச் சொல்லுகிறேன்; என்னுடைய வசனத்தை அவமதிக்காதே. இது அதிகதர்மத்துடன் கூடியது. அரசனுக்கும் குலத்திற்கும் இஃதன்றோ அதிகமான க்ஷேமத்தை உண்டுபண்ணக் கூடியது? காந்தாரீபுத்திர! குலத்துக்கு ஸுகத்தைஉண்டுபண்ணுகிறவரான அந்தத்தர்மநந்தனரைக் குருவம்சத்தின் விருத்தியின்பொருட்டு அடைவாயாக. புருஷர்களுள் சிறந்தவனே! கர்ணனும், வழியைவிட்டு விலகாதவனும் வருங்காலத்து நன்மையுடன்கூடினவனுமான அர்ஜுனனை யுத்தத்தில் ஜயிக்கமாட்டானென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம். நரஸ்ரேஷ்டனே! மங்களகரமான என்னுடைய இந்தவசனமானது உனக்கு இனியதாகட்டும். ராஜேந்திரனே! இதற்கு நீ வேறுவிதமாக நடப்பாயாகில் மிக்கபெரிதான விநாசம் ஸம்பவிக்கும். இந்திரனாலும் யமனாலும் வருணனாலும் ஸ்ரீமானான குபேரனாலும் செய்யமுடியாததும் கிரீடிஒருவனால் செய்யப்பட்டதுமான இந்தக் காரியத்தை உலகத்துடன்கூட நீ பார்த்திருக்கிறாய். தன்னிடத்திலுள்ளகுணங்களால் இந்தக் கர்ணனைக்காட்டிலும் மேன்மைபெற்றவனான தனஞ்சயன் என்னுடையவசனம் அனைத்தையும் மீறிநடக்கமாட்டான். ராஜேந்திர! எப்பொழுதும் அவன் உன்னை அனுஸரித்தே நடப்பான். கிருபைசெய். நீ சாந்தியைஅடைவாயாக. எனக்கு எப்பொழுதும் உன்னிடத்தில் அபிமானம் அதிகம். அதனாலும் அதிகமான நேசத்தினாலும் உன்னைநோக்கிச் சொல்லுகிறேன். கர்ணனை யுத்தத்தினின்று தடுக்கப்போகிறேன். கர்ணனிடத்தில் எனக்கு அதிகமான அன்பு இருக்கிறதன்றோ? கற்றறிந்தவர்கள், ஸ்னேஹம் இயற்கையாக உண்டாகக்கூடியதென்றும் அவ்வாறே நல்லவார்த்தையினால் தேடத்தக்கதென்றும் தனத்தினால் தேடத்தக்கதென்றும் பிரதாபத்

தினுலே நேரக்கூடியதென்றும் நான்குவிதமாகச் சொல்லுகின்ருர்கள். அவையனைத்தும் உனக்குப் பாண்டவர்களிடத்திலிருக்கின்றன. வீரனே! பிரபுவே! உன்னுடைய அநதப்பந்துக்கள் ஸமாதானத்தினுல மீண்டும் ஹிதத்தை அடைவாாகள். நீ மனமகிழ்ந்து (பாண்டவர்களோடு) நேசத்தைஅடைந்தால, உன்னுல உலகததுக்கு ஒப்பறறதான நன்மையானது செயயபபட்டதாகும்' எனருா். ஸனேகிதர் இவ்வண்ணமாக நன்மையான இநதவசனததை உரைக்கக்கேட்டு, துரியோதனன் ஆலோசிததுப் பெருமூச்சுவிட்டு மனவருத்தமடைந்தவனுக உரைக்கலானுன்.

'மித்திரரே! நீர் சொலலியது உண்மையே. விஜ்ஞாபனம் செய்கின்ற என்னுடைய வசனததையும் கேளும். துஷ்டப்புததியுள்ள இந்தப் பீமன் புலிபோலப பலாதகாரததால துசசாஸனனைககொன்று அட்டஹாஸஞ்செய்து பலவார்ததைகளைச சொன்னுன். அது என உள்ளததிலிருக்கிறது. அது உமககுந தெரியாததன்று. சாநதி உமக்கு எதனுல உண்டாகும்? உககிரமான காறருனது மேருவென்கிற பெரியமலையை அடிக்கச சகதியுள்ளதாகாததுபோல, அர்ஜுனன் யுததததில கர்ணனை அடிக்கச் சக்தியுள்ளவனுகான். குந்திபுததிரர்களும் என்னிடத்தில பலாதகாரமாகப பலவாருன விரோதததை நினைத்து ஸமாதானததை அடையமாட்டார்கள் குருபுத்திரரே! வீரரே! கர்ணனை, 'யுத்தததினின்று ஒழிநதுவிடு' என்று சொலவதற்கும் நீா தகுந்தவரலலீா. இபபொழுது, பலகுணன் அதிகபராமத்துடன் கூடியவனுயிருககிருன். இநதககாணன் அர்ஜுனனைப் பலாத்காரமாகக் கொலலப்போகிருன். பூமி புரண்டாலும் புரளும்; மகரங்களுக்கு இருப்பிடமான ஸமுததிரமானது வறட்சியடைநதாலும் அடையும்; பெரியமலைகள் மஹாஸமுததிரததில மிதந்தாலும் மிதக்கும்; அர்ஜுனன் காணனை யுததததில (ஒருகாலும்) ஜயிக்கமாட்டான். ஜலம், பூமி, ஆகாயம், காறறு, அதிஉககிரமான காந்தியுள்ள அக்னி இவைகளுக்கு எங்கும் இலலாமை உண்டானுலும் உண்டாகும்; அர்ஜுனன் யுததததில காணனை ஜயிக்கமாட்டான்' என்று கூறினுன். உம்முடையகுமாரன் அந்தக் குருபுததிரரைப் பார்த்து இவ்வாறு சொலலிவிட்டு, அடிக்கடி அவரை ஸமாதானஞ்செய்து, பிறகு, தன்படைவீரர்களைப பாாதது, 'விரைவாகக கொல்லுங்கள்; இந்தச சத்துருக்களைக குறிதது எதிாதது ஓடுங்கள்; குறைவறற பலமுள்ளவர்களான நீங்கள் ஏன் பேசாமலிருககிறீர்கள்?' என்ருன்.

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

**(பீமன், போரில் கர்ணன் அர்ஜுனனை ஒத்திருத்தலைப்பொறாமல் கோபத்துடன் அர்ஜுனனைப் போருக்கு உத்ஸாகப்படுத்தியது.)**

அரசரே! புத்திரர்களுடன்கூடி நீர்செய்த துராலோசனையினால் ஏற்பட்டயுத்தத்தில் சங்கங்கள் பேரிகளுடைய முழக்கமானது நிரம்பியிருக்கும்போது, வெண்மையான குதிரைகளையுடையவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான அந்தச் சூரியபுத்திரனை கர்ணனும் அர்ஜுனனும் எதிர்த்தார்கள். நெருப்பைக் கக்குகின்றஸர்ப்பங்கள் போல முகங்களால பெருமூச்சை விடுகின்றவர்களும் கீர்த்திசாலிகளுமான அவ்விருவீரர்களும் நெய்யினால் ஹோமஞ்செய்யப்பட்ட இரண்டு அக்னிகள்போல யுத்தத்தில் அப்பொழுது ஜ்வலித்தார்கள். இமயமலையில் தோன்றியவைகளும் மதப்பெருக்குள்ளவைகளும் மிகநீண்ட தந்தங்களுள்ளவைகளுமான இரண்டுயானைகள் ஒரு பெண்யானையின் நிமித்தமாகச் சண்டைசெய்வதுபோல, உக்கிரமான வீர்யமுள்ளவர்களும் வீரர்களுமான தனஞ்சயனும் கர்ணனும் நன்கு எதிர்த்தார்கள். பெரியமேகத்தோடு பெரியமேகம் எதிர்ப்பதுபோலவும் தற்செயலாக மலையோடு மலை எதிர்ப்பது போலவும் வில், நாண்கயிறு, தலம், தேருருளைமுனை இவைகளின் சத்தத்துடன்கூடிய அவ்விருவீரர்களும் அம்புமழையைப் பொழிந்துகொண்டு எதிர்த்தார்கள். ஸர்ப்பங்கள்போன்ற பாணங்களுடனும் அஸ்திரங்களுடனும் சக்திகளுடனும் ரிஷ்டிகளுடனும் கதாயுதங்களுடனும் கத்திகளுடனும் கூடியவர்களும் கோபமாகிற காற்றினால் அலைக்கப்பட்ட அலைகள்போன்ற மாலைகளையுடையவர்களுமான அவ்விருவீரர்களும் இரண்டுமலைகள்போலவும் சதுர்யுகங்களின்முடிவில் இரண்டுஸமுத்திரங்கள்போலவும் விரைவாக எதிர்த்தார்கள். முனை நன்குவளர்ந்திருக்கின்ற மரங்களுடனும் கொடிகளுடனும் ஓஷதிகளுடனும் கூடியவைகளும், பெருகியிருக்கின்ற பற்பலவிதமான அருவிப்பெருக்குடன் கூடியவைகளும், அசைகின்றவைகளுமான இரண்டுமலைகள் மிக்கஜலத்தினால் மோதுவதுபோல மஹாஸ்திரங்களால் அவ்விருவீரர்களும் பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். அம்புகளால் விசேஷமாக உடல்பிளக்கப்பட்ட குதிரைகளும் ஸாரதிகளுமுள்ளவர்களும் பொறுத்தற்கு மிகஅரிய அஸ்திரங்களால் எல்லாப்பக்கத்திலும் உடல் பிளக்கப்பட்டவர்களுமான அவ்விரண்டு ரதிகர்களுக்கும் முற்காலத்தில் இந்திரன் விரோசனன் இவ்விருவர்களுக்கும் யுத்தம் நடந்தது போலப்பெரும்போர்நடந்தது. அதிகஷூண தாமரைமலர்களும் கருநெய்

தல்களும் மீன்களும் ஆமைகளும் நிரம்பியவைகளும் பக்ஷிகளுடைய கூட்டங்களால் ஒலியுள்ளவைகளாகச் செய்யப்பட்டவைகளுமான அதிக ஸமீபத்திலிருக்கின்ற இரண்டுபெரியமடுக்கள் காற்றினால் உயர எழுப்பப்பட்டுநெருங்குவதுபோல த்வஜத்துடன்கூடினஅந்தஇரண்டு தேர்களும் நெருங்கின. 'மஹேந்திரனுடைய பராக்கிரமம்போன்ற பராக்கிரமமுள்ளவர்களும் மகேந்திரனுக்குஒப்பானவர்களும் மஹாரதர்களுமான இருவரும், மகேந்திரன் விருத்திரன் இருவரும்போல மகேந்திரனுடைய வஜ்ராயுதத்துக்கு ஒப்பான பாணங்களால் அடித்துக்கொண்டார்கள். அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் யுத்தம்நேர்ந்திருக்கும்ஸமயத்தில்,யானைகளும் காலாட்களும் குதிரைகளும் ரதங்களுங் கூடியவைகளும், விசித்திரமான கவசங்களையும் ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் ஆயுதங்களையுமுடையவைகளுமான இரண்டு ஸேனைகளும் நடுக்கமுற்றன; ஆச்சர்யத்தினால் உரக்க ஸிம்ம நாதஞ்செய்தன; பூமியும் ஆகாயமும் நடுங்கின. மதங்கொண்ட ஒரு யானையானது மற்றொரு யானையை எதிர்ப்பதுபோலக் கர்ணன் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் அர்ஜுனனை எதிர்த்து வந்தபொழுது, ஸிம்மநாதத்துடன்கூடியவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களுமான பார்க்கவிருப்பமுள்ளவர்களால் வஸ்திரங்களைப் பிடித்திருக்கின்ற விரல்களுடன்கூடின கைகள் உயரத் தூக்கப்பட்டன. அந்தச்சமயத்தில் ஸோமகர்கள் பார்த்தனைப் பார்த்து, 'அர்ஜுன ! விரைவு பாராட்டுவாயாக. செல். கர்ணனைப் பிள. இவனுடைய தலையையும் திருதராஷ்டிரகுமாரனான துர்யோதனனுக்கு ராஜ்யத்திலிருக்கும் ஸ்ரத்தையையும் வெட்டுவாயாக. தாமதம் வேண்டாம்' என்று உரக்கக் கூச்சலிட்டார்கள். அவ்வாறே, அந்தச் சேனையிலிருந்த நம்மைச்சேர்ந்த அனேக யுத்தவீரர்கள் கர்ணனைப்பார்த்து, 'கர்ண ! செல், செல்; அர்ஜுனனைக் கொல்வாயாக. பிறகு, பார்த்தர்கள் மிக்க தைன்யமுற்றவர்களாக விளம்பமின்றி மறுபடியும் கானகம் செல்லட்டும்' என்று கூறினார்கள்.

பிறகு, கர்ணன் முதலில பத்துப்பாணங்களால் அர்ஜுனனை விரைவாக அடித்தான். பிறகு, கிரீடியானவன் நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட பதினெட்டுப்பாணங்களால் அப்பொழுது அந்தக்கர்ணனையும் அடித்தான்.மறுபடியும்,கர்ணன் விரைவுடன் அந்தப்பார்த்தனைத் தாழைமடலைப்போன்ற பத்துப்பாணங்களால் அடித்தான். பார்த்தனும் அந்தக்கர்ணனைத் தீட்டப்பட்ட நுனியுள்ளவையும் கூரியவாயுள்ளவையுமான பத்துப்பாணங்களால் கச்சையின் நடுவில் அடித்தான்

பாரதரே! பிறகு, கர்ணன், கோரமான யுத்தத்தில் வரம்புகடந்து (யுத்த வீரர்களை) நொறுக்கிக்கொண்டு முனைகூரிய ஒன்பது பாணங்களால் மதங்கொண்ட யானையைக் கச்சைகட்டுமிடத்தில் அடிப்பதுபோலப் பார்த்தனை அடித்தான். பிறகு, சுறுசுறுப்புடன் கார்யங்களைச் செய்பவனும் மகாபலசாலியுமான ஸூதபுத்திரன் யுத்தத்தில் வேறு இரண்டு க்ஷுரங்களால் நமுசியானவன் மஹேந்திரனை அடித்ததுபோல விரைவுடன் பலாத்காரமாக அடித்தான். பாண்டவன் அந்தக் கர்ணனை உருக்குமயமான முனையுள்ளவைகளும் காதுவரையில் இழுத்துவிடப்பட்டவைகளுமான ஐந்துபாணங்களால் அடித்தான். அந்தப் பார்த்தனுடைய பாணங்கள் காலதூதர்கள்போல அப்பொழுது அவனுடைய இரத்தத்தைப் பானஞ்செய்தன. பாரதரே! கர்ணனும், வாஸுதேவரையும் பார்த்தனையும் வத்ஸதந்தங்களால் நிரப்பினான். அந்த ஸூதபுத்திரனும் அர்ஜுனனுமாகிய இருவர்களும், பிரயோகிக்கப்படும் அம்புகளால் பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். அதிக ரோஷமுள்ளவர்களான அவ்விருவர்களும் பரஸ்பரம் துன்பம்விளைவிக்கக்கூடிய ஸமயத்தை நோக்கிக்கொண்டு அதிகபயங்கரமாக எதிர்த்தார்கள். பிறகு, தேவராஜகுமாரனை அர்ஜுனன், பகைவர்களைத் தவிக்கச்செய்கிற ஆக்னேயாஸ்திரத்தைக், கர்ணன்மீது பிரயோகித்தான். யுத்தமுனையில் தனஞ்சயனிடத்தினின்று வெளிப்பட்ட அந்தஉத்தமாஸ்திரமானது அப்பொழுது நன்றாக ஜ்வலித்தது. பிரதாபசாலியான அந்தக் கர்ணன், ஆக்னேயாஸ்திரம் எடுக்கப்பட்டதைக்கண்டு, யுத்தத்தில் அதைத் தணிப்பதற்காக, வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அதனால் நெருப்பைஅவித்தான். பலசாலியான கர்ணன் பர்ஜன்யாஸ்திரத்தினால் எல்லாத்திசைகளையும் இருளால்மூடப்பட்டவைகளாகச் செய்தான். பிறகு, நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட வாயவ்யாஸ்திரத்தினால் (அர்ஜுனன்) அந்தமேகஸமூகங்களை விலக்கித்தள்ளினான். பிறகு, சத்துருக்களைத் தவிக்கச்செய்பவனும் சத்துருக்களுடைய கூட்டத்தை நன்றாகநாசஞ்செய்யுந்தன்மையுள்ளவனுமான அந்தத் தனஞ்சயன் அதிககோபமுள்ளவனாகிக் காண்டீவத்தினது நாண் கயிற்றை உருவிக்கொண்டு தேவராஜனுக்குப்பிரியமான வஜ்ராஸ்திரத்தை வெளியிட்டான். காண்டீவத்தினிடமிருந்து மிக்ககூர்மையுள்ளவைகளான நாராசங்களும் நாளீகங்களும் வராஹகர்ணங்களும் தோன்றின. கோரமாயிருப்பவைகளும் வஜ்ராயுதத்துக்கு ஒப்பான வேகமுள்ளவைகளுமான ஆயிரக்கணக்கான அந்த

ஆயுதங்கள் நான்குபக்கத்திலும் சென்றன. பகலின்முடிவில் பக்ஷி களுடைய கூட்டங்கள் கீழ்நோக்குகின்றவைகளாகி இரவில் விரைவாக மரத்தை அடைவதுபோலப் பார்த்தனுடைய பாணங்கள் கர்ணனுடைய ரதத்தில் பாய்ந்தன. அவைகளை ஸூதபுத்திரனை கர்ணன் பாணங்களால் ஏற்றுக்கொண்டான். யுத்தபூமியில், அவ்வாறு தன்னுடைய பாணஸமூகங்கள் தள்ளப்பட்டதைப்பொருத தனஞ்சயன்மீது கர்ணன் கோபத்தினால் கவரப்பட்ட மனத்தையுடையவனும் யமனுக்குஒப்பான செய்கையையுடையவனுமானான். சூரியன் உதித்தவுடன் க்ஷணத்தில் நக்ஷத்திரங்களுடைய ஒளியை நாசம் செய்வதுபோலக் கர்ணன் போர்புரிகின்ற அந்தப் பார்த்தனுடைய எல்லாப் பாணஸமூகங்களையும் நாசஞ்செய்தான். பிறகு, மிகப்பெரிய சண்டையில் ரோஷத்தினால் நன்றாக ஜ்வலிக்கின்றவனும் கம்பீரஸ்வபாவமுள்ளவனுமான அந்தப்பீமன், கோபமுள்ளவனாகிக் கையைத் தன்கையினால் பிசைந்துகொண்டு ரோஷத்தினால் பொறுக்காதவனாகப் பார்த்தனைப்பார்த்துப் பின்வருமாறு வாக்கியத்தை உரைக்கலானான். 'கிரீடியே! ஸூதபுத்திரன் உன்னை முனைகூரிய தாழைமடல் போன்ற பாணங்களால் எவ்வாறு அடிக்கலாம்? நீ காண்டவவனத்தில் அக்னியின்பொருட்டு வாய்நிறைந்த ஆகாரத்தைக்கொடுத்து (அதிலுள்ள) பிராணிகளை ஜயித்த அந்தத்தைரியத்தினால் ஸூதபுத்திரனைக் கொல். அல்லது, நான் கதையினால் இவனை நொறுக்கிவிடுகிறேன். காலத்தினால் பக்வமானவனும் மிக்ககுரூரமான சொற்களையே உரைப்பவனுமான இந்தக்கர்ணன் பார்த்தனை எதிர்த்து உயிருடன் (மீண்டு) செல்லான்' என்றான்.

---

## தொண்ணூற்றாறாவது அத்யாயம்.

(கர்ணன் போரில்மிஞ்சக் கிருஷ்ணன் அர்ஜுனனை உத்ஸாகப்படுத்தியதும், அர்ஜுனன் தன்திறமையைக் காட்டியதும்.)

பிறகு, சக்ரபாணியான ஸ்ரீவாஸுதேவரும், திருப்பியடிக்கப்படுகின்ற அம்புகளைக்கண்டு, பார்த்தனைநோக்கி, 'கிரீடியே! இப்பொழுது நீ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே கர்ணன் உன்னுடைய அஸ்திரங்களை அஸ்திரகணங்களால் கவர்ந்துவிட்டான். ஒன்றுசேர்ந்தவர்களும் கர்ஜிக்கின்றவர்களுமான கௌரவர்களை நீ கண்டு (செய்யவேண்டியதை) அறிந்திருக்கிறாய். ஏன் மதிமயக்கமுற்றிருக்கிறாய்? எல்லாக்கௌரவர்களும் கர்ணனைமுன்னிட்டுக்கொண்டு, உன்னுடைய அஸ்த்ரத்தை அஸ்திரங்களால் நாசஞ்செய்யப்படுகின்றதாக

அறிகிறார்கள். கிரீடியே! பார்த்த! எந்தத்தைர்யத்தினால் அப்படிப் பட்ட யுத்தத்தில் *நீ தாமஸனையும், அதிகோரரூபிகளான தாமஸர்களை யும் கொழுப்பினால் அதிககர்வங்கொண்டவனும் வீர்யமுள்ளவனுமான தம்போத்பவன் என்கிற அஸுரனையும் யுத்தகளத்தில்கொன்றாயோ, யுத்தத்தில்அஸ்திரத்தைப் பிரயோகிப்பதில் ஸமர்த்தனான நீ அந்தத் தைரியத்தினால் இப்பொழுது கர்ணனைக் கொல்வாயாக. கத்திகளை ஓரத்தில் உடையதும் என்னால் கொடுக்கப்பட்டதுமான இந்தஸுதர் சனத்தினால் இப்பொழுது இந்தச்சத்துருவான கர்ணனுடைய தலை யை, சத்துருவான நமுசியினுடைய தலையை வஜ்ரத்தினால் இந்திரன் அறுத்ததுபோல் விரைவாக அறுப்பாயாக. வீர!வேடவேஷம்பூண்ட மஹாத்மாவான சிவபகவான் உன்னால் எந்தத்தைர்யத்தினால் மகிழ் விக்கப்பட்டாரோ, அப்படிப்பட்ட நீ மீண்டும் அந்தத் தைர்யத்தைக் கொண்டு, கர்ணனை அவனைச் சேர்ந்தவர்களுடன் நாசஞ்செய்வாயாக. பிறகு, பட்டணங்களோடும் கிராமங்களோடும்கூடியதும், ஐஸ்வர் யத்தினால் நிறைந்ததும், பகைவர்கூட்டங்கள் கொல்லப்பட்டதுமான கடல்சூழ்ந்த பூமியை நீ அரசருக்குக் கொடு. பார்த்த! ஒப்பற்ற கீர்த்தியையும் நீ அடைவாயாக. பரதர்களுள் சிறந்த வீர! வீரர்கள் அனைவரும் கர்ணனை முன்னிட்டுக்கொண்டு சிறந்தஉன்னுடைய அஸ் திரத்தை முறியஅடித்துக் கர்ஜிக்கின்றார்கள். நல்லமுயற்சியைச்செய். யுத்தத்தில் சிறந்த உத்ஸாகமுள்ளவனான கர்ணனையும் (பலத்தினால்) குறைவடையும்படி செய்யப்படுகிறவனான உன்னையும்பார்த்து, இந்த ஸ்ருஞ்சயர்களும் ஸோமகர்களும் இதோ ஓடுகிறார்கள்' என்று சொன் னார். பீமனாலும் ஜனார்த்தனராலும் நன்றாகத்தூண்டப்பட்ட அர்ஜு னன் அப்பொழுது தன்னை நினைத்து எல்லாவறறையும்அறிந்து அவ்வி டத்திறகுவந்ததின் பிரயோஜனத்தையுமுணர்ந்து, கேசவரை நோக்கி, இவ்வண்ணம் உரைக்கலானான். 'உலகம் க்ஷேமமடைவதற்காகவும் கர்ணனைக்கொல்வதற்காகவும் இதோ நான் உக்ரமான மஹாஸ்தி ரத்தைப் பிரயோகிக்கிறேன். அதற்கு நீரும் தேவர்களும் பிரம்ம தேவரும் சிவபெருமானும் ப்ரம்மஜ்ஞானிகளனைவர்களும் எனக்கு அனுமதியளிக்கவேண்டும்'என்றான். அளவைமீறிய வல்லமையுடை யவனும் இடக்கையினாலும் அம்புகளைப் பிரயோகிக்குந் திறமையுள் ளவனுமான அந்தப்பாண்டவன் இவ்வாறு சொல்லிவிட்டு ப்ரம்ம தேவருக்கு நமஸ்காரஞ்செய்து மனத்தினால் தியானித்து வெளியிடத் தக்கதும் ஸர்வோத்தமமானதும் ஸஹிக்கமுடியாததுமான பிரம்

* இரட்டித்தலால் ஒருசொல்விடப்பட்டது.

ரிஷிகளோடும் ஸ்ருஷ்டிகர்த்தர்களோடும்சேர்ந்து ஆகாயத்தில் தேஜோமயமான திவ்யவிமானத்தின்மீதேறி வந்துநின்றார். மஹாபுத்தியுள்ளவரே! பிறகு, யுத்தரங்கத்தில் அப்பொழுது கர்ணனுக்கும் பாண்டவனுக்கும் நடக்கின்ற அந்த த்வந்துவயுத்தத்தைப்பார்க்கப் பிரஜாதிபதியானவர் விரைவாகவந்தார். அவ்விருவர்களுடைய மஹாபலத்தையும்பார்த்துப் பிரஜைகளுக்கெல்லாம் நாதரான ஈஸ்வரருக்கும் கர்ணன்ஜயித்து இந்தப் பூமிமுழுமையையும் அடைவனோ, அல்லது, அர்ஜுனன்தான் இதனை அடைவனோ என்று ஸம்சயம் உண்டாயிற்று.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

(பிரஜாதிபதி இருவருக்கும் ஸமனானவெற்றியை விரும்பியதும், இந்திரன் அர்ஜுனனுக்கே வெற்றியை விரும்பினதும், பிரம்மருத்திரர்கள் அங்ஙனமே அங்கீகரிக்கப் பூமாரிபெய்ததும்.)

அரசரே! பிரஜாதிபதியோ, வந்திருக்கின்ற அந்தத் தேவர்களின் வகுப்பைக்கண்டு,பிறகு, ஸ்வயம்பு பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உரைக்கலானார். 'இருவரும் அதிரதர்கள்; சூரர்கள்; இருவரும் உறுதியான பராக்கிரமமுடையவர்கள்; இருவரும் ஒத்தசெய்கையையுடையவர்கள்; இந்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் ஒப்பானவர்கள். கர்ணார்ஜுனர்களுக்கு எதிர்ப்பு நேரும்பொழுது விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் நடந்ததுபோல மகாகோரமான பெரும்போர் நடக்கப்போகிறது. ஆ! ஆ! கஷ்டம்!' என்றார். பிரஜாதிபதியானவர் இவ்வாறு சொல்லிவிட்டு, பிறகு, ஸ்வயம்புவைப் பார்த்து, 'புருஷஸ்ரேஷ்டர்களான கர்ணன் அர்ஜுனன் இருவருக்கும் விஜயம் ஸமமாக இருக்கட்டும். கர்ணார்ஜுனர்களுடைய விவாதத்தினால் எல்லாஉலகமும் நசியாமலிருக்கட்டும். ஸ்வயம்புவே! இவ்விருவர்களுக்கும் விஜயமானது ஸமமாக இருக்கட்டும். அந்த வாக்கியத்தைச் சொல்லும்' என்று சொன்னார். மஹாராஜரே! இவ்வாறு சொல்லக்கேட்டவரும் ஷாட்குண்யபரிபூர்ணருமான மஹாப்ரம்மாவோ அவ்விருவருக்கும் ஜயமானது நிச்சயிக்கப்படாமலிருக்கவே, பிரஜாதிபதியைப்பார்த்து, 'இவர்கள்இருவரும் ஸமர்த்தர்கள்; இருவரும் அதிகபலத்தினால மேம்பட்டவர்கள். மூவுலகங்களுக்கும் பயங்கரமான யுத்தம் இவர்களுக்கு உண்டாகப்போகிறது' என்று இவ்வாறுகூறினார். பிறகு, அந்தச்சமயத்தில், ஆயிரம்கண்களையுடைய இந்திரன் பிரஜாதிபதியைப்பார்த்து, 'பார்த்தன் நல்லமனமுள்ளவன்;

சிறந்த பலமுடையவன்; சூரன்; வித்தையில் தேர்ச்சியடைந்தவன்; தவத்தைத் தனமாகக்கொண்டவன் ; மஹாதேஜஸ்ஸையுடையவன் ; தனுர்வேதத்தை முழுமையும் கற்றுணர்ந்திருக்கிறான். எவனிடத்தி னின்று இந்தத் தேவகார்யம் ஸம்பவித்திருக்கிறதோ (அப்படிப் பட்ட) பார்த்தன் எல்லாக்குணங்களையுமுடையவன். பாண்டவர்கள் வனவாஸமுதலியவைகளால் நித்தியம் அதிகமாகத் துன்பப்படுத்தப் படுகிறார்கள். புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனன் தவமுள்ளவன் ; போதுமான திறமையுள்ளவன் ; மிக்கமகிமையினால் தெய்வத்தைக் கூட ஆலோசியாமல் மீறுவான். மீறினால், நிச்சயமாக உலகங்களுக்கு நாசம்உண்டாகும். கோபமுள்ளவர்களான கிருஷ்ணார்ஜுனர்களுக்கு ஓரிடத்தில் இருப்பை நான் காணவில்லை. இவர்கள் உலகத்தைப் படைப்பவர்கள் ; அதனால், புருஷோத்தமர்கள். இவர்கள் நாநாரா யணர்கள்;புராதனர்கள்; ரிஷிகளுள் சிறந்தவர்கள்;(ஒருவருடைய) கட் டளைக்கும் உட்பட்டவர்களல்லர்; உலகத்தை அடக்கி ஆள்பவர்கள் ; புருஷர்களுள் சிறந்தவர்கள். இவ்விருவர்களுக்கும் ஒப்பவனான ஒரு வன் தேவர்களிலாவது மனிதர்களிலாவது இல்லை. தேவர்களோடும் ரிஷிகளோடும் சாரணர்களோடும் மூவுலகங்களும் எலலாத் தேவ கணங்களும் எலலாப்பூதங்களும் (இவர்களை) அனுஸரிக்கத்தக்கவை கள். இவ்விருவருடைய பிரபாவத்தினாலும் உலகமனைத்தும் இருக் கிறது. புருஷஶ்ரேஷ்டனும் ஸூர்யகுமாரனும் சூரனுமானகர்ணன் இஷ்டப்படி புண்ணிய உலகங்களை அடையட்டும். கிருஷ்ணார்ஜுனர் களுக்கு விஜயம் உண்டாகட்டும். கர்ணன் வஸுக்களுடன் ஸாலோக் யத்தையும் தேவதைகளுடைய வாஸஸ்தானமான ஸ்வர்க்கத்தை யும் அடையட்டும் ; துரோணருடனும் பீஷ்மருடனும் ஸ்வர்க்க லோகத்தில் பூஜிக்கப்படட்டும். பிதாமஹரே ! பார்த்தன் வனத்தில் நெடுங்காலமாகக் கிலேசத்தை அடைவிக்கப்பட்டானன்றோ ? ஆத லால், தவத்தினால் மேன்மைபெற்ற இந்தஅர்ஜுனன் யுத்தத்தில் ஜயத்தை அடையட்டும். பகவானான உம்மால், 'கிருஷ்ணார்ஜுனர்க ளுக்கு ஜயம் நிச்சயம்' என்று முந்தியே சொல்லப்பட்டுவிட்டது. பிரபுவே ! அது அப்படியே ஆகட்டும். உமக்கு வந்தனம். பிதா மஹரே ! சொல்லும் ' என்று வேண்டினான். அந்த இந்திரனுடைய வார்த்தையைக்கேட்டுப்பகவானான பிரபுவானவர் அந்தக்கர்ணன் கிரீடி இருவருக்கும் ஜயத்தை ஸமமாகச் சொல்லவில்லை. பிதாமஹர் மௌ னமாக இருக்கவே, அந்த மௌனத்தினால், 'பாண்டவனுக்கு விஜய மும் கர்ணனுக்கு வதமும் உண்டாகும்' என்று இந்திரன் ஆசையை

அடைந்தான். பிறகு, பிரம்மதேவரும் ஈஸ்வரரும் உலகங்களுக்கு நாதனுன இந்திரனைப்பார்த்து, 'மஹாத்மாவான பாண்டவனுக்கே விஜயம் நிச்சயமாக உண்டாகட்டும். பார்த்தன் மனோதைரியமுள்ள வன்; சூரன்; வித்தையில் தேர்ச்சியடைந்தவன்; தவத்தைத் தன மாகக்கொண்டவன்; அவன் ஜயம்பெறுக. மிக்க தேஜஸுள்ள அர்ஜுனன் தனுர்வேதம் முழுமையையும் கற்றுணர்ந்திருக்கிருன். தெய்வத்தைக்கூட ஆலோசியாமல் மகிமையினுல் தாண்டிச்செல் வான். அவ்வாறு கடந்து செல்வாஞுல், உலகங்களுக்கும் அழிவு நிச்சயமாக உண்டாகும். குரோதமுள்ளவர்களான கிருஷ்ணார்ஜு னர்களுக்கு ஓரிடத்தில் இருப்பை நாம் அறியோம். புருஷஶ்ரேஷ் டர்களான இவ்விருவர்களும் உலகத்தைப்படைத்து நிலைநிறுத்தின வர்கள். பகைவர்களைத் தவிக்கச்செய்கிறவனும் ஸூர்யபுத்திரனும் சூரனுமான இந்தக்கர்ணன் வேண்டியபடி புண்ணியஉலகங்களை அடையட்டும். நரஸ்வரூபியான அர்ஜுனனிடத்தில் நிச்சயமாக ஜயம் உண்டாகட்டும்' என்று கூறிஞர்கள். தேவதேவர்களால் அவ் வாறு சொல்லப்பட்டவுடனே, ஆயிரம் கண்களையுடைய இந்திரன், பிரம்மருத்திரர்களுடைய கட்டளையினுல் எல்லாப்பிராணிகளையும் அழைத்து, 'மஹிமைபொருந்திய பிரம்மதேவராலும் ஈசானராலும் உரைக்கப்பட்ட உலகங்களுக்கு ஹிதமான விஷயத்தை நீங்கள் கேட்டீர்களா? அஃது அப்படியே ஆகப்போகிறது. உங்களுடைய ரோகமானது விலகட்டும். துக்கத்தை விலக்கியவர்களாக மங்களத் தை அடைவீர்களாக' என்று கூறிஞன். பெரியவரே! அரசரே! இவ்விதமான இந்திரனுடைய வசனத்தைக்கேட்டு எல்லாப்பிராணி களும் அப்பொழுது ஆச்சரியமடைந்தன; புகழவும் புகழ்ந்தன. அப் பொழுது புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவர்களுக்கும் ஜயத்தை ஸமமாகச் சொன்ஞர்களில்லை. தேவர்கள் ஸந்தோஷமுள்ளவர்களாக நல்ல வாஸனைபொருந்திய பூமாரிகளைப் பொழிந்தார்கள். பற்பலவித மான தேவதூர்யங்களையும் வாசித்தார்கள். புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விரண்டு வீரர்களுடைய நிகரற்ற த்வந்துவயுத்தத்தையும் பார்க்க எண்ணங்கொண்டவர்கள் ஆச்சர்யத்தினுல் நன்ருகமலர்ந்த கண்களை யுடையவர்களாக வேறுசெய்கைகளை அறியவில்லை.

## தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

(சல்யனுக்கும் கர்ணனுக்கும் ஸல்லாபமும், கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸல்லாபமும், அர்ஜுனன் கிருஷ்ணனுக்குத் தனது வல்லமையைக் கூறியதும்.)

பாரதவம்சத்தில் உதித்தவரே! வெண்மையான குதிரைகளுடன் கூடினவையும் தேவஸம்பந்தம்பெற்றவையும் (யுத்தத்துக்குத்) தக்கவையும் பேரொலியுள்ளவையுமான இரண்டு ரதங்களின்மீதும் இருக்கின்ற லோகவீரர்களான வாஸுதேவார்ஜுனர்களும் கர்ணசல்யர்களும் தனித்தனி சங்கங்களை ஊதினார்கள். அந்யோந்யம் ஸ்பர்த்தையுள்ளவர்களான அவ்விருவருக்கும் உக்கிரமாயிருப்பதும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தைஉண்டுபண்ணுகிறதுமான யுத்தமானது முற்காலத்தில் இந்திரனுக்கும் சம்பரனுக்கும் நடந்ததுபோல் நடந்தது. அவ்விருவருடைய ரதத்திலுமிருக்கின்ற மாசற்ற இரண்டு த்வஜங்களும் உலகம் நாசமடையுங்காலத்தில் ஆகாயத்தில் உதித்த ராகுகேதுக்கள்போல விளங்கின. ஸர்ப்பம்போன்றதும் உயர்ந்த ரத்னங்களாலிழைக்கப்பட்டதும் திடமானதும் இந்திரனுடைய விற்போல ப்ரகாசிக்கின்றதுமான கர்ணனுடைய யானைகட்டும் கச்சைக்கொடியானது விளங்குகின்றது. பார்த்தனுடைய சிறந்தவானரமானது வாயைத்திறந்திருக்கும் அந்தகன்போலக் கோரப்பற்களால் (பார்ப்பவர்களைப்) பயமடையும்படி செய்துகொண்டு ஒளிகளால் சூரியன்போலப் பார்க்கமுடியாததாக இருக்கிறது. காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனுடைய த்வஜமாகிய வானரமானது யுத்தத்தில் விருப்பமுற்றதாகத் தன் இருப்பிடத்தைவிட்டு வேகத்துடன் கர்ணனுடைய த்வஜத்தை நாடிவிட்டது. அது மஹாவேகத்துடன்கூடியதாக உயரக்கிளம்பிக் கருடன் ஸர்ப்பத்தை அடிப்பதுபோல நகங்களாலும் பற்களாலும் (கர்ணனுடைய) கச்சைக்கொடியை எதிர்த்து அடித்தது. பிறகு, கிண்கிணிகளை ஆபரணங்களாகக் கொண்டதும் காலபாசத்துக்கு ஒப்பானதுமான அந்த யானைகட்டும் கச்சையானது மிக்க கோபமுள்ளதாக அப்பொழுது அந்தக்குரங்கை எதிர்த்துச் சென்றது. அப்பொழுது, அவ்விருவர்களுக்கும் மிக்க கோரமான த்வந்த்வயுத்தமாகிற சூதாட்டமானது ஏற்பட்டவுடன், முந்தியதும் மிகவும் முந்தியதுமான த்வஜங்களிரண்டும் யுத்தஞ்செய்தன. குதிரைகள் ஒன்றோடொன்று போட்டியுடன் குதிரைகளை நோக்கிக் கனைத்தன. செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய

கண்ணபிரான் சல்யனைக் கண்களாகிற பாணங்களால் அடித்தார். அப்படியே,சல்யனும் கண்ணபிரானை எதிர்த்து நன்றாகப்பார்த்தான். அந்த யுத்தத்தில் வாஸுதேவர் சல்யனைக் கண்களாகிற பாணங்களால் ஜயித்தார். குந்தீபுத்திரனான தனஞ்சயனும் கர்ணனைக் கண்ணால் ஜயித்தான். பிறகு, ஸூதபுத்திரன் சல்யனை அழைத்துப் புன் சிரிப்புடன், 'சல்ய! இப்பொழுது இந்தயுத்தத்தில் பார்த்தன் என்னை ஒருஸமயம் கொல்வானாகில் யுத்தத்தில் நீ என்னசெய்வாய்? உண்மையைச்சொல்' என்றுவினவினான். சல்யன், 'கர்ண! ச்வேத வாகனன் யுத்தத்தில் உன்னை இப்பொழுது கொல்வானாகில், மாதவன் பாண்டவன்இருவரையும் நான் ஒருரதத்தின் உதவியினாலேயே கொல்வேன்' என்று மொழிந்தான். அர்ஜுனன், கோவிந்தரைப் பார்த்து இவ்விதமாகவே வினவினான். கேசவர் உரக்கச்சிரித்துக் கொண்டு அந்தப் பார்த்தனைப்பார்த்துச் சிறந்த இந்தவசனத்தை உரைத்தார். 'தனஞ்சய! ஸூர்யன் தான்இருக்கும் இடத்தினின்று விழுந்தாலும் விழுவான்; பூமியானது பலவாறாகச் சிதறினாலும் சிதறும்; அக்னியானது குளிர்ச்சியைஅடைந்தாலும் அடையும்; கர்ணன் உன்னை (ஒருகாலும்) கொல்லான். இது எவ்விதத்தினாலாவது ஸம்பவிக்குமாகில் உலகத்துக்கு மாறாட்டம் நேரிடும். கர்ணனையும் சல்யனையும் யுத்தத்தில் நான் கைகளாலேயே அவ்வாறு கொன்றுவிடுவேன்' என்றார். இவ்வாறான வாஸுதேவருடைய வார்த்தையைக்கேட்டு வானரக்கொடியோனான அர்ஜுனன், உரக்கச் சிரித்துக்கொண்டு தக்கபடி கார்யங்களைச் செய்பவரான வாஸுதேவரைப்பார்த்து இவ்வாறு மறுமொழிகூறலானான்.

'ஜனார்த்தனரே! கர்ணனும் சல்யனும் எனக்கே போதாதவர்கள். கோவிந்தரே! கொடித்துணிகளுடனும் த்வஜத்துடனும் சல்யனுடனும் ரதத்துடனும் குதிரைகளுடனும் (நல்ல) குடையுடனும் கவசத்துடனும் சக்திகளுடனும் பாணங்களுடனும் வில்லுடனும் இப்பொழுது யுத்தத்தில் பாணங்களால் கர்ணன் பலவாறு அறுக்கப்பட்டதைப் பார்க்கப்போகிறீர். ரதத்துடனும் குதிரைகளுடனும் சக்திகளுடனும் கவசத்துடனும் ஆயுதங்களுடனும் இப்பொழுதே நன்றாக நொறுக்கப்பட்ட கர்ணனை, அரண்யத்தில் யானையினால் நொறுக்கப்பட்ட மரத்தைப்போல இப்பொழுது பாரும். மாதவரே! இப்பொழுது கர்ணனுடைய பெண்டுகளுக்கு விதவைத்தன்மையானது வந்துவிட்டது. அந்த ஸ்திரீகளால் நிச்சயமாக சொப்பனங்களில் அனிஷ்டங்கள் காணப்பட்டுவிட்டன. கர்ணனுடைய ஸ்திரீகளை இப்பொழுதே

விதவைகளாகப் பார்க்கப்போகிறீர். இது நிச்சயம். மூடனும் நீண்ட ஆலோசனையில்லாதவனும் நம்மை அவ்விதமாகப் பரிஹஸிக்கின்ற வனும் அடிக்கடி அவமதிப்பவனுமான இந்தக் கர்ணன் ஸபையை அடைந்த கிருஷ்ணையைக்கண்டு முந்திச்செய்த (செய்கையால் உண்டான) கோபமானது எனக்குத் தணியவில்லை. கோவிந்தரே! மதயானையினால் ஒடித்துத் தள்ளப்பட்டிருக்கிற பூத்தமரத்தைப்போல் என்னால் நன்றாக த்வம்ஸஞ்செய்யப்பட்ட கர்ணனை இப்பொழுது பார்க்கப்போகிறீர். மதுஸூதனரே! இப்பொழுது, மதுரமான அந்த வாக்குக்களைக் கேட்கப்போகிறீர். விருஷ்ணிவம்சத்திலுதித்தவரே! பாக்கியத்தினால் விளங்குகிறீர். கர்ணன் இவ்விதமாகத் தள்ளப்பட்ட பிறகு, நீர் ஸந்தோஷமுள்ளவராக அபிமன்யுவின் தாயான ஸுபத்ரையை இப்பொழுது ஸமாதானம் செய்யப்போகிறீர். ஜனார்த்தனரே! மிக்க மனக்களிப்புள்ளவராகப் பிதாவினுடைய ஸஹோதரியாகிய குந்தியையும் தேற்றப்போகிறீர். மாதவரே! இப்பொழுது, கண்ணீருள்ள முகத்துடன்கூடின த்ரௌபதியையும் பாண்டுநந்தனரான தர்மராஜரையும் அம்ருதம்போன்ற வாக்குக்களால் ஸமாதானஞ் செய்யப்போகிறீர்' என்று கூறினான்.

## தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

**(கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் யுத்தத்தொடக்கமும், அச்வத்தாமா துர்யோதனனுக்கு ஹிதமுரைத்ததும், அவன் அதைஅலக்ஷியம் செய்து யுத்தத்திற்காகச் சேனையை ஏவியதும்.)**

தேவர்களாலும் நாகர்களாலும் அஸுரர்களாலும் ஸித்தர்களாலும் யக்ஷர்களாலும், கந்தர்வர்கள் ராக்ஷஸர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடையகூட்டங்களாலும் பிரம்மரிஷிகளாலும் ராஜரிஷிகளாலும் கருடனாலும் அடையப்பட்ட ஆகாயமானது, ஆச்சர்யப்படத்தக்க உருவமுள்ளதாக விளங்கியது. மனத்துக்கு இனிமையான சப்தங்களாலும் பலவகை வாத்தியங்களாலும் கானங்களாலும் ஸ்தோத்திரங்களாலும் நடனங்களாலும் நகைப்புக்களாலும் அதிகமாகச் சத்தமுள்ளதாகச் செய்யப்பட்டதும் ஆச்சர்யகரமான ரூபத்துடன்கூடியதுமான அந்தஆகாயத்தை எல்லாமனிதர்களும் ஆகாயத்தில்இருப்பவர்களும் கண்டார்கள். பிறகு, கௌரவவீரர்களும் பாண்டவவீரர்களும் அதிக ஸந்தோஷத்தோடு கூடியவர்களாக நான்குவிதவாத்தியகோஷங்களாலும், சங்கங்களுடைய சப்தங்களா

லும் ஸிம்மநாதங்களாலும் பூமியையும் திக்குக்களையும் அதிகமாக ஒலியிடும்படி செய்துகொண்டு சத்தத்தினாலேயே எல்லாச் சத்துருக்களையும் கொன்றார்கள். மனிதர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் ரதங்களாலும் நெருக்கமுள்ளதும், பாணங்களும் கத்திகளும் சக்திகளும் ரிஷ்டிகளும் விழுவதினால் ஸஹிக்கமுடியாததும், தைர்யசாலிகளால் அடையப்பட்டதும், கொல்லப்பட்ட (பிராணிகளுடைய) தேகங்களால் வியாபிக்கப்பட்டதுமான யுத்தரங்கமானது அப்பொழுது ரக்தமயமாக நான்குபக்கத்திலும் பிரகாசித்தது. தேவர்களுக்கு அஸுரர்களோடு யுத்தம்நடந்ததுபோலப் பாண்டவர்களுக்குக் கௌரவர்களோடு யுத்தம் நடந்தது. நெருங்கிய மிக்க பயங்கரமான யுத்தம் அவ்வாறாக நடக்கவே, நன்றாகக் கவசம்பூண்டவர்களான தனஞ்சயனும் கர்ணனும் கூர்மையுள்ள நேராகச்செல்கின்ற பாணங்களால் திசைகளையும் ஒருவர் மற்றொருவருடையஸேனையையும் மறைத்துக்கொண்டார்கள். பிறகு, பாணங்களால் இருளானது உண்டுபண்ணப்பட்டிருக்கவே, உம்மைச்சேர்ந்தவர்களும் பிறர்களும் ஒன்றையும் காணவில்லை; பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகச் சிறந்த ரதிகர்களான கர்ணார்ஜுனர்களை ஆச்ரயித்தார்கள். பிறகு, நான்குபக்கத்திலும் ஆச்சர்யமே தோன்றியது. பிறகு,அவ்விருவர்களும் கீழ்த்திசையினின்றும் மேற்றிசையினின்றும் வருகின்ற இரண்டு காற்றுக்கள் போலப் பரஸ்பரம் அஸ்திரத்தினால் அஸ்திரத்தை விலக்கிக்கொண்டு, பரவியிருக்கின்ற நெருங்கினஇருளில் உதித்தசூரியசந்திரர்கள்போல மிகவிளங்கினார்கள். (யுத்தத்தைவிட்டு) விலகிப்போகக்கூடாதென்று கட்டளையிடப்பட்டவர்களான சத்துருவீரர்களும், அவ்வாறே உம்மைச்சார்ந்தவர்களும் (முற்காலத்தில்) சம்பரனையும் இந்திரனையும் சூழ்ந்துகொண்டு தேவாஸுரர்கள் நின்றதுபோல அந்தமஹாரதர்கள் இருவரையும் நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டு நின்றார்கள். ம்ருதங்கங்கள், பேரிகைகள்,பணவங்கள்,ஆனகங்கள் இவைகளுடைய சத்தங்களாலும் வாகனங்கள் சங்கங்கள் இவற்றின் சத்தங்களாலும் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்ட அந்தயுத்தரங்கத்தில் (சத்துருக்களால்) பொறுக்கமுடியாதவர்களும் புருஷச்ரேஷ்டர்களுமான அவ்விருவீரர்களும் ஸூர்யசந்திரர்கள்போல ஸிம்மநாதங்களோடு விளங்கினார்கள். பெரிய தனுர்மண்டலத்தின்மத்தியை அடைந்தவர்களும் நல்ல காந்தியையுடையவர்களும் கிரணங்கள்போன்ற ஆயிரம்பாணங்களையுடையவர்களுமான அவ்விருவர்களும் யுத்தத்தில் ஜங்கமஸ்தாவரங்

களுடன் கூடின உலகத்தைக் கொளுத்தஎண்ணங்கொண்டு யுகாந்த காலத்திலுதித்த இரண்டுசூரியர்கள்போல எவ்விதத்திலும்ஸஹிக்க முடியாதவர்களாக விளங்கினார்கள். இருவர்களும் ஜயிக்கத்தகாதவர் கள்; இருவர்களும் பகைவர்களுக்கு யமன்போன்றவர்கள்; ஒருவரை ஒருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களும், ஸமர்த்தர்களுமான பாண் டவன் கர்ணன் இருவரும்மஹாயுத்தத்தில் பயமற்றவர்களாக மஹேந் திரனும் ஜம்பனும்போல எதிர்த்தார்கள். அரசரே! பிறகு, பெரியவில் லைத் தரித்தவர்களும் மஹாரதர்களுமான அவ்விருவர்களும் மஹாஸ் திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு பயங்கரமான பாணங்களால் அபரிமிதமான மனிதர்களையும் குதிரைகளையும் யானைகளையும் கொன் றார்கள்; பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். பிறகு, புருஷஶ்ரேஷ் டர்களான கர்ணார்ஜுனர்களாலடிக்கப்பட்ட கௌரவ பாண்டவர் களைச் சார்ந்த வீரர்கள், யானைகளோடும் காலாட்களோடும் குதிரைக ளோடும் ரதங்களோடும், வனத்தில்வஸிக்கும் பிராணிகள் ஸிம்மத் தினால் ஹிம்ஸிக்கப்பட்டு ஓடுவதுபோலத் திக்குக்களில் ஓடினார்கள். பிறகு, மஹாயுத்தத்தில் துர்யோதனன், கிருதவர்மா, சகுனி, கிருபர், குருபுத்திரரானஅஶ்வத்தாமா இந்த ஐந்து மஹாரதர்களும் தனஞ்ச யனையும் அச்சுதனையும் சரீரத்துக்குத் துன்பத்தைஉண்டுபண்ணுகிற பாணங்களால் அடித்தார்கள். தனஞ்சயன், பகைவர்களையும் அவர் களுடைய விற்களையும் அம்புத் தூணிகளையும் த்வஜங்களையும் குதிரை களையும் ரதங்களையும் ஸாரதிகளையும் நான்குபக்கத்திலும்அம்புகளால் ஒரேஸமயத்தில் விரைவாக மிகஅடித்து ஸூதபுத்திரனை கர்ணனை யும் உத்தமமான பன்னிரண்டு பாணங்களால் அடித்தான். பிறகு, படையையேந்தியவர்களான நூறுரதிகர்கள் விரைவுடன் அர்ஜுனனை எதிர்த்து ஓடிவந்தார்கள். நூறுயானைகளும் எதிர்த்து ஓடிவந்தன. குதிரைவீரர்களான சகர்களும் துஷாரர்களும் யவனர்களும் கொல்ல வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு காம்போஜதேசத்தில் தோன் றின சிறந்த குதிரைகளுடன் எதிர்த்தார்கள். தனஞ்சயன் சிறந்த ஆயுதங்களையுடைய வீரர்களைக் கையிலிருக்கிற அம்புகளோடு க்ஷுரங்களால் அறுத்தான். அவர்களுடைய தலைகள் பூமியில் விழுந்தன. குதிரைகளையும் யானைகளையும் போர்புரிகின்ற ரதி கர்களையும் சத்துருக்களுடைய கூட்டங்களையும் யுத்த பூமியில் நாசஞ்செய்தான். பிறகு, ஆகாயத்தில், 'நல்லது, நல்லது' என் கிற வாக்குக்களுடன் தேவர்களுடைய தூர்யவாத்திய கோஷங் கள் மகிழ்ச்சியுள்ளவர்களால் வெளியிடப்பட்டன. நல்லருபத்துட

மாஸ்திரத்தை வெளியிட்டான். பிறகு, அதிக தேஜஸுள்ள அர்ஜுனன், காண்டவத்திலுல் விடப்பட்டவைகளும் ஸர்ப்பங்கள்போல உக்கிரமானவைகளும் சூரியனுடைய கிரணங்களுக்கு ஒப்பானவைகளும் ஜ்வலிக்கின்றவைகளுமான அம்புகளால் திசைகளையும் எல்லாத் திக்கோணங்களையும் நன்றாக மூடினன். பரதர்களுள் சிறந்த அர்ஜுனனால் நூறுநூறாக விடப்பட்டவைகளும் பயங்கரமான வாயுள்ளவைகளும் மிக்க கூர்மையுள்ளவைகளும் யுகம்முடியுங் காலத்தில் (பிரகாசிக்கின்ற) ஸூர்யனுடைய கிரணங்கள்போலப் பிரகாசிக்கின்றவைகளுமான பாணங்கள் க்ஷணத்திற்குள் கர்ணனுடைய தேரினை நன்றாக மூடிவிட்டன. அப்பொழுது, யுத்தமத்தியில் கர்ணனால் வேகத்துடன் ஆயிரமாயிரமாக விடப்பட்ட அந்தப் பாணக் கூட்டங்கள் குறைவற்றவைகளாகப் பர்ஜன்யனால் விடப்பட்ட நீர்த்தாரைகள்போலப் பாண்டவனை எதிர்த்துவந்து தாக்கின. பிறகு, நிகரில்லாத பிரபாவமுள்ளவனும் பயங்கரமான பலத்துடன்கூடியவனுமான அந்தக்கர்ணன், கிருஷ்ணனையும் கிரீடியையும் விருகோதரனையும் மும்மூன்றுபாணங்களால் அடித்து உரத்தநாதத்தோடு கோரமாகச் சப்தித்தான். பிறகு, பாணங்களால் அடிக்கப்பட்ட குந்தீபுத்திரனை அந்தக்கிரீடியானவன், பீமனையும் அவ்வாறே ஜனார்த்தனனையும் பார்த்து, மறுபடியுமே பொறாதவனாக, ஒரேஸமயத்தில் பதினெட்டுப்பாணங்களை வில்லினின்று பொழிந்தான். அந்த அர்ஜுனன், கொடியை ஒருபாணத்திலுலும் சல்யனை நான்குபாணங்களாலும் கர்ணனை மூன்றுபாணங்களாலும் அடித்துப் பிறகு நன்றாகவிடப்பட்ட பத்துப்பாணங்களால் பொற்கவசத்தை அணிந்திருக்கிற *சேனைபதியையும் அடித்தான். அந்தராஜகுமாரன், தலையை இழந்தவனாகவும் கைகளை இழந்தவனாகவும் குதிரைகள் ஸாரதி வில் கொடி இவைகளை இழந்தவனாகவும் கோடாலிகளால் வெட்டப்பட்ட ஸாலவிருக்ஷம்போல நன்றாகஅடிக்கப்பட்டுத் தேரிலிருந்து கீழே விழுந்தான். கிரீடி மறுபடியும் கர்ணனை மூன்றுபாணங்களாலும் எட்டுப்பாணங்களாலும் இரண்டுபாணங்களாலும் நான்குபாணங்களாலும் பத்துப்பாணங்களாலும் அடித்து நானூறு யானைகளைச்சாய்த்து ரதிகர்களையும் எட்டுரதங்களையும் ஆயிரங்குதிரைகளையும் மறுபடியும் எண்ணூயிரம் குதிரைவீரர்களையும்வீரர்களானகாலாட்களையும் கொன்றான். முக்கியர்களும் சூரர்களுள்சிறந்தவர்களும் உத்தமமானபாணங்களால் அதிகமாக அடிக்கப்படுகின்றவர்களும் பகைவர்களைக் கொல்

* 'ஸேனைபதி' என்பது மூலம் ; 'ஸுபாபதி' என்பது வேறுபாடம்.

லுகின்றவர்களுமான கர்ணனையும் பார்த்தனையும் கண்டு, சிறந்தவீரர்களான எல்லாவீரர்களும் குதிரைகளை இழுத்து நிறுத்திக்கொண்டு அங்கே நின்றார்கள். பிறகு, கர்ணன், பாணங்களால் காண்டீவத்திலுள்ள நாண்கயிற்றை ஒலியுண்டாகும்படி அறுத்து அர்ஜுனனை நன்றாகமூடினான். ஸூதபுத்திரன் இந்த க்ஷணத்தில் அவனை நூறுக்ஷுத்ரகங்களால் நிரப்பினான். சட்டையுரித்த பாம்புக்கொப்பானவைகளும் கூர்மையுள்ளவைகளும் எண்ணெயிட்டு நன்குதீட்டப்பட்டவைகளும் பக்ஷிகளினிறகுகளால் வேகமுள்ளவைகளுமான அறுபது பாணங்களால வாஸுதேவரையும் பிளந்தான். அச்சமயத்தில், ஸோமகர்களும் விரைவுடன் ஓடினார்கள் பிறகு, சுறுசுறுப்பாகக் காரியங்களைச் செய்பவனும் பெரியவில்லையுடையவனுமான கிரீடி மிக்கதிடமானதும் தன்கையினால இழுக்கப்படுவதைப் பொறுக்கக்கூடியதும் புதிதுமான நாண்கயிற்றையெடுத்து ஒரு நிமிஷத்திற்குள்ளாகக் காண்டீவத்தில் பூட்டினான். ஸூதபுத்திரனை கர்ணன் யுத்தத்தில பகைவர்களைக் கொல்லுகிறவனான அந்தப்பார்த்தனுடைய நாண்கயிறு அறுந்ததையும் லாகவத்தினால வேறுநாண்கயிறு பூட்டினதையும் அறியவேயில்லை. அரசரே! அஃது ஆச்சரியமாக இருந்தது. கர்ணனுடைய பாணங்களால காயப்படுத்தப்பட்ட அங்கங்களையுடையவனும் மிக்கரோஷமுள்ளவனுமான பார்த்தனும் அந்தநாண்கயிற்றை விரைவாகப்பூட்டிக் கர்ணனுடைய வில்லிலிருக்கின்ற நாண்கயிற்றைஅறுத்து யுத்தத்தில உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களை எதிர்த்தான். பார்த்தனுடைய அஸ்திரத்தினால இருள் உண்டுபண்ணப்பட்டபொழுது, ஆகாயத்தில பக்ஷிகளுடைய கூட்டமானது ஸஞ்சாரஞ்செய்யவேயில்லை. பார்த்தன் அட்டஹாஸஞ்செய்துகொண்டு ஒருநிமிஷத்திற்குள் பத்துப்பாணங்களால சல்யனைக் கவசத்தில நன்றாக அடித்தான். பிறகு, பார்த்தன், கர்ணனைப் பன்னிரண்டு பாணங்களால அடித்து மறுபடியும் ஏழுபாணங்களால அடித்தான். பார்த்தனுடைய வில்லினின்று வேகத்துடன் பிரயோகிக்கப்பட்டவைகளும் உக்கிரமானவேகமுள்ளவைகளுமான பாணங்களால திடமாக அடிக்கப்பட்டவனும் விசேஷமாகப பிளக்கப்பட்ட சரீரத்தையுடையவனும் இரத்தத்தினால நனைக்கப்பட்ட அங்கங்களையுடையவனுமான அந்தக் கர்ணன், முடிவுக்காலத்தில ருத்திரர்போல விளங்கினான். பிறகு, கர்ணன் மூன்று பாணங்களால தேவராஜனுக்கொப்பான தனஞ்சயனைப் பிளந்தான். கொல்ல எண்ணங்கொண்டவனான கர்ணன், அச்சுதர்மீது நெருப்புப்போன்றவைகளும் ஸர்ப்பம்போன்றவைகளுமான ஐந்து

அம்புகளைப் பிரவேசிக்கச் செய்தான். அரசரே! நல்ல புங்கங்களுள்ளவைகளான அந்தப்பாணங்கள் பொன்னால் விசித்திரமாயிருக்கிற புருஷோத்தமரான ஸ்ரீவாஸுதேவருடைய கவசத்தைப்பிளந்து பிறகு கீழே விழுந்து வேகத்துடன் பூமியில் பிரவேசித்தன. அவைகள் ஸ்நானஞ்செய்து கர்ணனிடம் வந்துசேர்ந்தன. பிறகு, தனஞ்சயன் அந்த ஐந்துபாணங்களையும் நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட பத்துப்பல்லங்களால் ஒவ்வொன்றையும் மும்மூன்றாகத் துண்டாக்கினான். அவைகள் கருடனுடைய மூக்கினால் துண்டாக்கப்பட்ட ஸர்ப்பங்கள்போலப் பூமியில்விழுந்தன. பிறகு, அர்ஜுனன், குரோதத்தினால் உலர்ந்த காட்டைஎரிக்கிற அக்னிபோல மிக ஜ்வலித்தான். அளவுபடாத தைரியமுள்ள அந்த அர்ஜுனன் காதுவரையில் இழுத்து விடப்பட்டவைகளும் சரீரங்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகின்றவைகளும் ஜ்வலிக்கின்றவைகளுமான பாணங்களால் கர்ணனை மர்மஸ்தானங்களில் அடித்தான். அவன் துக்கத்தினால் நிலைதவறினான்; தைரியத்தினால்மாத்திரம் நின்றான். பிறகு, மகாத்மாவான அர்ஜுனன் ஸூதபுத்திரனுடைய தேகத்தைத்தேடுகிறவன்போல அம்புகளை வெளிப்படுத்தினான். தங்கத்தினால் விசித்திரமான கட்டுக்களுடன் கூடியவைகளும் பெரியவைகளுமான அவ்வம்புகள் நூறுநூறாகப் பூமியில் விழுந்தன. அரசரே! பிறகு, தனஞ்சயன் கோபித்துக் கொள்ளவே, பாணஸமூகங்களால் திக்கோணங்களும் திக்குக்களும் ஸூரியனுடைய ஒளிகளும் கர்ணனுடைய ரதமும் குளிர்ந்தபனியினால் மூடப்பட்டமலைபோலப் பார்க்கத்தகாதனவாயின. பார்த்தனுடைய கையினால் நன்றாகவிடப்பட்ட பெரிய அம்புகளால் அடிக்கப்படுகின்ற சக்கரரக்ஷகர்களுடன்கூடின கர்ணனுடைய பின்புறத்தைக்காக்கின்றவர்களும் முந்திச்செல்லுகின்றவர்களும் பயந்துஓடினார்கள். பிறகு, பரதர்களுள்சிறந்தவீரனும் மகானுபாவனும்யுத்தத்தில(பகைவர்களைக்) கொல்லுகின்றவனுமான அர்ஜுனன், துர்யோதனனால் தூண்டப்பட்டவர்களும் மிக்கபெருமைவாய்ந்தவர்களும் ரதங்களையுடையவர்களும் ஸாரமாயிருப்பவர்களுமானவீரர்களை விசேஷித்து நாசஞ்செய்தான். ராஜரே! காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனும் கௌரவர்களுள் சிறந்தவனும் நிகரற்றவீரனுமான அர்ஜுனன், இரண்டாயிரம் சிறந்த கௌரவவீரர்களை எல்லோரையுமே ரதங்களோடும் ஸாரதிகளோடும் க்ஷணத்திற்குள் நாசத்தை அடையச்செய்தான். பிறகு, உம்முடைய குமாரர்களும் மிகுதியிருக்கிற கௌரவர்களும் கர்ணனை விட்டுவிட்டு ஓடினார்கள். இவர்களைச் சிதறிஓடும்படிசெய்து பாணங்

களால் காயப்படுத்தப்பட்டவர்களும் புலம்புகின்றவர்களுமான உமது புத்திரர்களை நன்றாகநொறுக்கினான். எல்லாக்கௌரவர்களும் பார்த்தனுடைய பாணங்களால் விசேஷித்துஅடிக்கப்பட்டும் மிக்க பரிதாபத்தைஅடைவிக்கப்பட்டும் நாசமடைந்தார்கள். பிறகு, சிறந்தவீரர்கள் கர்ணனுடைய ரதத்தைத் தொடர்ந்துசெல்லும் விஷயத்தில் துரியோதனனால் மறுபடியும் தூண்டப்பட்டார்கள். 'ஓ! க்ஷத்திரியர்களே! நீங்களனைவரும் சூரர்களுக்குள்சிறந்தவர்கள். க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்றவர்கள். ஸமீபத்திலிருக்கும் கர்ணனை விட்டுவிட்டு ஓடுவதென்பது உங்களுக்குத் தகுந்ததன்று' என்றான். உம்முடையபுத்திரனால் அவ்வாறுசொல்லப்பட்டும், பயத்தினால் நிறம் மாறியிருக்கின்ற அந்தக்கௌரவவீரர்கள் நிற்கவேயில்லை. பிறகு, எல்லாரும் திசைகளைச்சூன்யமாகப்பார்த்துத திக்கோணங்களையும் திக்குக்களையும்நோக்கி ஓடினார்கள். பாரதரே! பார்த்தனுடைய பாணங்களால் நன்கு வாட்டப்பட்டவனும் பயத்தினால்பிளக்கப்பட்டவனும் கௌரவர்களால் கைவிடப்பட்டவனுமானகர்ணன் அந்தயுத்தத்தில் மனவருத்தத்தை அடையவில்லை. பகைவனை அர்ஜுனனை எதிர்த்தே சென்றான்.

---

### தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

**(கர்ணன் நாகாஸ்திரம் எய்ததும், க்ருஷ்ணன் தேரைஅழுத்த நாகாஸ்திரம் அர்ஜுனன்கிரீடத்தைக் கவர்ந்ததும், தேருருளை பூமியில அழுந்தக் கர்ணன் ஒரு முகூர்த்தம் போரைநிறுத்த வேண்டினதும்.)**

**ந**ரேந்திரரே! எய்தஅம்புகள் விழக்கூடிய தூரத்தில்நின்ற கௌரவர்கள் அங்கிருந்தும் விலகிச்சென்றார்கள். மின்னல்போற்பிரகாசிப்பதும் நன்றாகவிருத்தியடைந்ததுமான தனஞ்சயனுடையஅஸ்திரத்தை நான்குபக்கத்திலும் கண்டார்கள். பிறகு, மஹாயுத்தத்தில் கோபங்கொண்ட பார்த்தனால் கர்ணனுடைய வதத்தின்பொருட்டு விடப்பட்டதும் ஆகாயத்தை அடைந்ததும் அதிகோரமானதுமான பார்த்தனுடைய அந்தப்பாணத்தை ஸூதபுத்திரன் பாணங்களால் விழுங்கினான். விருத்தியடைகின்றதும் கௌரவர்களை எரிக்கின்றதுமான அந்தஅஸ்திரத்தைத தங்கக்கட்டுக்களுள்ள பாணங்களால் அடித்தான். கர்ணனோ, திடமான நாண்கயிற்றுடன் கூடினதும் பயனற்றதாகாததுமான வில்லை நாணொலியிடும்படிசெய்து பாணஸமூகங்களைப் பிரயோகித்தான். அவன் பரசுராமரிடத்தினின்று

அணியப்பட்டதும் மஹாமகிமைபொருந்தியதும் பகைவர்களை நாசஞ்செய்கின்றதுமான அதர்வணவேதோக்தமான அஸ்திரத்தினால் எரிக்கின்ற அந்தஅர்ஜுனனுடைய அஸ்திரத்தை நாசஞ்செய்தான்; அர்ஜுனனையும் கூர்மையுள்ள பாணங்களால அடித்தான். அரசரே! பிறகு, அந்தஸமயத்தில் பரஸ்பரம் பாணங்களால் அடிப்பவர்களான அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் யுத்தத்தில் தந்தங்களால் ஒன்றோடொன்று முட்டுகின்ற இரண்டுயானைகளுக்கு நேர்வதுபோல மிக்கபெரிதான்சண்டை நேர்ந்தது. மன்னரே! பிறகு, கர்ணனும் பார்த்தனும் சரமாரியினுடைய கூட்டங்களால் ஆகாயத்தை இடைவெளியற்றதாகச்செய்தபொழுது, ரணரங்கமானது அஸ்திரங்களுடைய கூட்டத்தினால் நன்றாகமூடப்பட்டதும் நெருங்கியதும் ஆயிற்று. பிறகு, எல்லாக்கௌரவர்களும் ஸோமகர்களும் பாணமயமான பெரியவலையைக்கண்டார்கள். அவர்கள் அப்பொழுது நெருங்கிய பாணாந்தகாரத்தில் வேறு ஒருபிராணியையும் காணவில்லை. வேந்தரே! எப்பொழுதும் அம்புகளைத் தொடுக்கின்றவர்களும் அனேகபாணங்களை நன்றாகவிடுக்கின்றவர்களுமான அந்தவில்லாளிகள் இருவரும் யுத்தத்தில் பறபல திவ்யாஸ்திரங்களால் விசித்திரமான வழிகளைக் காண்பித்தார்கள். யுத்தமத்தியில் இவ்வாறு போர்புரிகின்றவர்களான அவ்விருவருள், ஸூதபுத்திரன் ஒருஸமயத்தில் (அர்ஜுனனைவிட) அதிகரித்தவனானான்; ப்ருதாபுத்திரனை கிரீடி ஒருஸமயத்தில் வீர்யத்தினாலும் அஸ்திரங்களாலும் மாயாபலத்தினாலும் ஆண்மையினாலும் மேலாக இருந்தான். யுத்தத்தில் ஒருவருக்கொருவர் ஸமயத்தை எதிர்பார்க்கின்றவர்களான அவ்விருவருடைய கோரமானதும் பிறர்களால் ஸஹிக்கமுடியாததுமான அந்தயுத்தத்தைக்கண்டு எல்லாயுத்தவீரர்களும் ஆச்சர்யத்தையடைந்தார்கள். அரசரே! பிறகு, ஆகாயத்திலுள்ள பிராணிகள் அந்தக் கர்ணனையும் பார்த்தனையும் புகழ்ந்தார்கள். ஆகாயத்தில் எல்லாஇடத்திலும், 'ஓ! கர்ண! நல்லது; ஓ! அர்ஜுன! நல்லது' என்கிறவாக்கானது கேட்கப்பட்டது. அரசரே! அப்பொழுது அந்தயுத்தத்தில் ரதங்களும் குதிரைகளும் யானைகளும் மிதித்தலால் பூமியானது பிளக்கப்படவே, அதிலிருந்து காண்டவவனம் கொளுத்தப்பட்டதருணத்தில் விடுபட்டு அப்பொழுது கோபத்தினால் பூமியில நுழைந்ததும் அர்ஜுனனால் உண்டுபண்ணப்பட்ட வைரத்துடன்கூடியதாகப் பாதாளப்ரதேசத்தில் படுத்திருந்ததுமான அந்த அஶ்வஸேனனென்கிற நாகமானது கர்ணார்ஜுனர்களுடைய யுத்

தத்தைக்கண்டு, பிறகு வேகத்துடனும் மேல்நோக்கியகதியுடனும் மேலேவந்து, 'துராத்மாவான இந்தப்பார்த்தனிடத்தில் உண்டாயிருக்கின்ற வைரத்தைத் தீர்த்துக்கொள்வதற்கு இதுதன்றே ஸமயம்' என்று நன்றாகஎண்ணி அம்புவடிவமாகிக் கர்ணனுடைய தூணியில் நுழைந்தது. பிறகு, யுத்தகளமானது அப்பொழுது அஸ்திரங்களுடைய கூட்டங்களால் நெருங்கியதும் அவற்றின் கிரணஸமூகங்கள் பரவினதுமாயிற்று. அப்பொழுது, அந்தக்கர்ணன் பார்த்தன் இருவரும் அம்புத்திரள்களுடைய மழைகளால் ஆகாயத்தை இடைவெளியற்றதாகச் செய்தார்கள். பெரிய பாணஸமூகமயமாயிருக்கின்ற அந்த யுத்தத்தைக்கண்டு எல்லாக்கௌரவர்களும் ஸோமகர்களும் பயந்தார்கள். நெருங்கின பாணாந்தகாரத்தில் ஸஞ்சரிக்கின்ற வேறு ஒருவஸ்துவையும் காணவில்லை. பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களும் எல்லா உலகங்களுள்ளும் சிறந்த வில்லாளிகளும் யுத்தத்தில் உயிரைஇழக்கத் துணிந்தவர்களுமான அந்த வீரர்கள் இருவரும் யுத்தம்செய்து களைப்புற்றார்கள். இருவர்களும் உயரக்கிளம்பிப் பாக்கின்றவர்களாகவும், சந்தனஜலத்தினால் நனைக்கப்பட்டவர்களாகவும், சாமரங்களுடன் கூடியவைகளும் தேவலோகத்தில்தோன்றியவைகளும் ஆகாயத்தில் நிற்கின்றவைகளுமான அப்ஸரஸுகளுடையகூட்டங்களால் (வீசப்பட்டவர்களாகவும்), இந்திரன் சூர்யன் இவர்களுடைய தாமரைமலர்போன்ற இருகைகளாலும் துடைக்கப்பட்ட முகங்களுள்ளவர்களாகவுமிருந்துகொண்டு, போர்புரிந்தார்கள். பிறகு, பார்த்தனால் அம்புகளால் அதிகமாகத்தவிக்கச்செய்யப்பட்டவனான கர்ணன் பார்த்தனை மீறுதபொழுது பாணங்களால் விசேஷமாகக் காயப்படுத்தப்பட்ட அங்கங்களையுடைய வீரனான அவன் அந்தப் பார்த்தனை ஒருகையுள்ளவனாகச்செய்வதில் மனவுறுதி செய்துகொண்டான். பிறகு,கர்ணன் சத்துருக்களை நாசஞ்செய்கின்றதும் நன்றாகச்சேர்த்துவைக்கப்பட்டதும் ஸர்ப்பமுகம்போன்ற முகமுள்ளதும் ஜ்வலிக்கின்றதும் பயங்கரமாயிருப்பதும் நன்றாகப்படிந்த கணுக்களுள்ளதும் உக்கிரமாயிருப்பதும் தீட்டப்பட்டதும் பார்த்தனைக்கொல்வதற்கென்றே பலநாளாகக்காப்பாற்றப்பட்டதும் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டதும் சந்தனப்பொடியில் படுக்கவைக்கப்பட்டுள்ளதும் ஸ்வர்ணமயமான அம்புத்தூணியில் படுத்திருப்பதும் மிக்க தேஜஸுள்ளதும் உக்கிரமானவேகமுள்ளதும் ஐராவதத்தின் வம்சத்தில் தோன்றியதும் நன்றாகஜ்வலிக்கின்றதுமான ஓர் அம்பை யுத்தத்தில் ஸவ்யஸாசியினுடையதலையை அபஹரிக்க எண்ணங்

கொண்டவனுகக் காதுவரையில் இழுத்தான். பிறகு, திக்குக்களும் ஆகாயமும் மிகஜ்வலித்தன. நூற்றுக்கணக்காகக் கோரமான குறைக் கொள்ளிகளும் விழுந்தன. அந்த நாகாஸ்திரமானது வில்லில்பூட்டப் பட்டவுடனே, இந்திரனுடன்கூடின லோகபாலர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். அந்தஸூதபுத்திரன் அந்தநாகாஸ்திரத்தைக் கோபத்தி ஞல் * கடைக்கண்பக்கத்தை (க்குறிவைத்துப்) பூட்டினன். சிறந்த அந்தப்பாணமானது, யுத்தத்தில் கடைக்கண்பக்கத்தில் மிக்கநோக்க முள்ளதாயிருத்தலைக் கர்ணன் அறியவில்லை. அந்தநாகம் யோகபலத் திஞல் பாணத்தில் பிரவேசித்ததையும் அறியவில்லை. ஆயிரம்கண்களை யுடையவனை இந்திரன், பாணத்தில்பிரவேசித்திருக்கிறஸர்ப்பத்தைக் கண்டு, 'என்பிள்ளை மாண்டான்' என்று எண்ணித்தளர்ச்சியடைந்த அங்கங்களையுடையவனுனன். தாமரைமலரில் தோன்றியவரும் சிறந்த மனேபாவத்துடன்கூடியவரும் மனத்தையடக்கியவருமான ப்ரம்மதேவர் தேவராஜனைப்பார்த்து, 'நீ மனவருத்தமடையாதே. விஜய னுக்கே ஜயலக்ஷ்மி' என்ருர். பிறகு, மகாத்மாவானசல்யன், பாணத் தைப் பூட்டினவனும் உக்கிரஸ்வரூபமுள்ளவனுமான அந்தக்கர்ண னைப்பார்த்து, 'கர்ண! (அர்ஜுனனுடைய)கழுத்தை லக்ஷ்யம்வைத்து உன்னுல் இந்தப்பாணம் பூட்டப்படவில்லை. பகைவனைக்கொல்லக் கூடியபாணத்தை நன்கு பார்த்துப் பூட்டுவாயாக' என்றுகூறினன். பிறகு, மனவுறுதியுள்ள ஸூதபுத்திரன், குரோதத்தினல் கண்கள் மிகச்சிவந்து, மத்திரராஜனைப்பார்த்து, 'சல்ய! கர்ணன் இரண்டுதட வை பாணத்தைக் குறிபார்த்துப்பூட்டான். என்னைப்போன்றவர்கள் கபட யுத்தம் செய்யமாட்டார்கள்' என்ருன். பலவானை கர்ணன், இவ்விதமாக இந்தவார்த்தையைச்சொல்லிவிட்டு அனேகவர்ஷகால மாகப் பூஜிக்கப்பட்ட அந்தப்பாணத்தைப்பிரயத்னத்துடன் பிரயோ கித்தான். 'அடே! பல்குன! நீ மாண்டாய்' என்று வைதுகொண்டு கடுமையான வசனத்தையும் உரக்கச்சொன்னன். கர்ணனுடைய கையினல் பிரயோகிக்கப்பட்டதும் நெருப்புக்கும்ஸூர்யனுக்கும் ஒப் பானதும் மிக்ககோரமானதும் நாண்கயிற்றினின்றும் விடுபட்டதும் கர்ணனுடையவில்லினின்றும் விடுபட்டதுமான அந்தப்பாணமானது ஆகாயத்தை அடைந்து அந்தரிக்ஷத்தில் ஜ்வலித்தது. விருஷ்ணி குலத்தில் சிறந்த வீரரான ஸ்ரீவாஸுதேவர் (அவ்வாறு) வருகின்ற தும் ஜ்வலிக்கின்றதும் ஆகாயத்தை அடைந்திருக்கின்றதுமான அந் தப் பாணத்தைக்கண்டு உடனே ரதத்தினுடையசக்கரத்தை அழுத்தி

* 'அபாங்கதேசே' என்பதும், 'அவாங்முகம்' என்பதும்மூலம்.

ஐந்துஅங்குலம் (பூமியில்) புதையும்படிசெய்தார். பிறகு, 'மதுஸூதனரைப் பூஜிப்பதற்காக அந்தரிக்ஷத்தில் மிக்கபெரிதான சத்தம் உண்டாயிற்று. மதுஸூதனருடையபிரயத்தினத்தினால் அந்த ரதமானது அவ்வாறு பூமியில் அமிழ்த்தப்பட்டவுடனே, தேவவாக்குக்களும் திவ்யபுஷ்பங்களும் ஸிம்மநாதங்களும் தோன்றின. பிறகு, அழகிய மொட்டுக்களுடனும் புஷ்பங்களுடனுங்கூடிய மரங்கள் அடர்ந்த மலையின்சிகரத்தை உத்தமமான இந்திரனுடையவஜ்ராயுதம் அபஹரிப்பதுபோல அந்தநாகாஸ்திரமானது அனேகரத்தினங்களால் சித்திரிக்கப்பட்டகிரீடத்தை அர்ஜுனனுடையதலையினின்று பலாத்காரமாக அபஹரித்தது. பிறகு, சிறந்தவேகமுள்ளஅந்தநாகாஸ்திரமானது பொன்னால்சித்திரவேலைசெய்யப்பட்டுள்ள கிரீடத்தைப் பார்த்தனுடைய முடியினின்று அபஹரித்தது. பொன்னால்இழைக்கப்பட்ட அந்தக்கிரீடமானது நன்றாகஜ்வலித்துக்கொண்டு பூமியில் மிகவும் பயங்கரமாகவிழுந்தது. பிறகு, ஸூதபுத்திரனைகர்ணன், அர்ஜுனனுடைய தலைக்கு அலங்காரமாயிருந்ததும், ஸ்வர்ணத்தினாலும் முத்துக்களாலும் மணிகளாலும் வஜ்ரங்களாலும் சித்திரவேலைசெய்யப்பட்டதும், பூமியிலும்ஆகாயத்திலும் ஸ்வர்க்கத்திலும் ஜலத்திலும் பிரஸித்திபெற்றதும்,ஸூரியன் சந்திரன் அக்னி ஜ்யோதிமண்டலங்கள் இவைகளுடைய காந்திபோன்றகாந்தியையுடையதுமான கிரீடத்தை எப்பொழுதும் இயற்கையான சிறந்தகோபத்தோடுகூடிய பாணத்தினால் அர்ஜுனனுடையதலையினின்று கவர்ந்தான். பொன்னாலும் முத்துக்களாலும் மணிகளாலும் வஜ்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்ட எந்தக்கிரீடமானது, தவத்தினால் (பிரஸன்னரான) ஸ்வயம்புவான ப்ரம்மதேவரால் இந்திரனுக்காகப் பிரயத்தினத்தினால் தம்மாலேயே செய்யப்பட்டதோ, மிக்கவிலைமதிக்கத்தக்க ரூபத்துடன்கூடியதும் பகைவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகிறதுமான எந்தக்கிரீடத்தைத் தேவராஜன் தேவசத்துருக்களான அஸுரர்களைநாசஞ்செய்த அர்ஜுனனுக்கு ஸந்தோஷத்தோடு தானே கொடுத்தானோ, தேவதைகளுள்சிறந்தவர்களும் பிநாகம், பாசம், அசனி, தண்டம் இவைகளை முறையே தரித்தவர்களுமான ருத்திரராலும் வருணனாலும் இந்திரனாலும் நிதிகளை ரக்ஷிக்கிற குபேரனாலும் எந்தக்கிரீடமானது பிடிப்பதற்கும் ஸாத்தியமாகாததோ அந்தக்கிரீடத்தைக் கர்ணன் நாகாஸ்திரத்தினால் பலாத்காரமாக அபஹரித்தான். உத்தமமான அம்பினால் அதிகமாகஅடிக்கப்பட்டதும் விஷமுள்ளநாகத்தினால் நன்றாகஜ்வலிக்கின்றதும் மிக்கஜ்வாலையுடன்கூடியதும் அழகியதுமான பார்த்தனு

டைய உத்தமமானகிரீடமானது ஜ்வலிக்கின்றஸூர்யன் அஸ்தகிரியி னின்றுவிழுவதுபோல விழுந்தது. உலகங்களில் அந்தச்சப்தத்தைக் கேட்ட ஜனங்கள், 'காற்றினால் பூமி, ஆகாயம், ஸ்வர்க்கம், ஜலம்இவை கள் பலாத்காரமாகப்புரட்டப்பட்டன ; அல்லது, சுழலும்படிசெய்யப் பட்டன' என்றுநிச்சயித்தார்கள். திசைகளும் கலங்கின. ஸரியநிறமுள் ளவனும் யௌவனமுள்ளவனுமான அந்தப்பார்த்தன் கிரீடமில்லா மல் மூன்றுசிகரங்களுடன் மலைவிளங்குவதுபோல விளங்கினான். * பிறகு, அர்ஜுனன் மனவருத்தமடையாதவனாக அப்பொழுது வெள்ளை வஸ்திரத்தினால் தன்தலைமயிர்களை நன்றாகத்தூக்கிக் கட் டிக்கொண்டு, ஸம்பூர்ணமானகலைகளுடன்கூடச் சிகரத்தைஅடைந் திருக்கிறசந்திரனால் உதயபர்வதம் ப்ரகாசிப்பதுபோலப்ரகாசித்தான். ராதேயனுடைய கையினால்ப்ரயோகிக்கப்பட்டதும் நெருப்புக்கும் சூரியனுக்கும்ஒப்பானகாந்தியுள்ளதும் மகிமைபொருந்தியதும் அர் ஜுனனால் உண்டுபண்ணப்பட்ட வைரத்துடன்கூடியதுமான அந்த மஹாஸர்ப்பமானது, அர்ஜுனனுடையகிரீடத்தை அபஹரித்துக் கொண்டு மேலே கிளம்பியது. ஆகாயத்தில் கிளம்புகின்ற அந்த ஸர்ப்பத்தைக்கண்டு, புருஷஸ்ரேஷ்டரான ஸ்ரீவாஸுதேவர் பார்த்

---

* இந்த கூஎ-வது அத்யாயத்தில் ச0-வது ஸ்லோகம் தொடங்கி-சச வது ஸ்லோகம் வரையில் [illegible] ஸ்லோகங்களின் ஸ்தானத்தில்,சிலபுஸ்த கத்தில் வேறு கக- ஸ்லோகங்கள் காணப்படுகின்றன அவற்றின்பொருள்:—

அறுத்த கிரீடமுள்ளவனும் யௌவனமுள்ளவனும் உயர்ந்த சிகரத்துடன் கூடின நீலபர்வதம்போன்றவனுமான அந்தப்பார்த்தன், கிரீடமின்றிவிளங்கினான். பிறகு, அவன் அப்பொழுது மனவருத்தமடையாதவனாக வெள்ளைவஸ்திரத்தி னால் தன்தலைமயிர்களை நன்றாகத் தூக்கிக்கட்டிக்கொண்டு சிகரத்தை அடைந் திருக்கின்ற சூரியனுடையகிரணத்தினால் உதயபர்வதம்போல நன்றாக விளங்கி னான். (வாயினால் அம்பனைக் [illegible] கிறட்டத்திரனைக்கௌவிக்கொண்டு, துள ளிக்குதித்துக் காண்டவவனத்தினின்றுவந்து அதை ரக்ஷித்ததினால்) மங்கள கரமானதும் முகத்துடன்கூடியதும் (தன்னால்) உண்டுபண்ணப்பட்டுப் பாண ரூபத்தையடைந்திருப்பதுமான [illegible] தகிரவடிவமாயிருப்பதும் ஸூர்யபுத்ரனால் ப்ரயோகிக்கப்பட்டதுமான பெண்ணாகமானது, நன்றாகவெளிப்பட்டிருக்கின்ற தேஜஸினாலும் பலத்தினாலும் மிகப்ரகாசிப்பவனும்*குதிரைகளின் கடிவாளத் துக்கு நேரானஇடத்தை அடைந்திருக்கிற தலையுடன்கூடினவனுமான அர்ஜுன னைக் [illegible] அதிதியின்புத்திரனை இந்திரன்கொடுத்த பூஷணமாக இருந்ததும் நன்றாக ஏற்படுத்தப்பட்டதும ஸூர்யகிரணங்களைப்போன்றகிரணங்களால் உலகத் தை நிரப்பும்தன்மையுள்ளதுமான அர்ஜுனனுடையமகுடத்தைக் கவர்ந்தது.

---

* கழுத்திருந்தஉயரத்தில் தலைவந்ததென்பது.

தனை நோக்கி, 'பாண்டு நந்தன! உன்னைக் கொல்வதற்காகப் பிர யோகிக்கப்பட்டதும் உக்கிரமாயிருக்கின்றதுமான மஹாஸாப்பத் தைப்பார்; பார்' என்று சொன்னார் மதுஸூதனரால் இவ்வண் ணம் உரைக்கப்பட்ட அர்ஜுனன், அவரைப் பார்த்து, 'கருட னுடைய வாயில் விழாமல் என்னை நாசஞ் செய்வதின்பொருட்டு இப்பொழுது வருகின்ற இந்த ஸாபமானது யாது?' என்று உக் கிரமான வாக்கினால் வினவினான். வாஸுதேவர், 'விற்பிடித்துக் காண்டவவனத்தில் அக்கினியைத் திருப்தியடையும்படிசெய்த உன் னால் (கொல்லாமல் விடப்பட்டு) ஆகாயத்தை அடைந்திருந்ததும் தாயினால் ரக்ஷிக்கப்பட்ட தேகத்துடன்கூடியதும் ஒரே உருவம் என்றெண்ணித் தன்னுடைய தாயானது கொல்லப்பட்டதுமான அந்த நாகமானது, அந்தவைரத்தை நினைத்துக்கொண்டு தன்விநாசத் தின்பொருட்டு நிச்சயமாக உன்னை வேண்டுகிறது. பகைவர்களைப் பொசுக்குகிறவனே! ஆகாயத்தினின்று நழுவிவிழுகின்றதும் மிக ஜ்வ லிக்கின்றதுமான எரிநக்ஷத்திரம்போல் ஆகாயத்தில் வருகின்ற இந்த ஸாபத்தைப் பார்' என்று சொன்னார். பிறகு, அந்த ஜிஷ்ணுவான வன், ரோஷத்தினால் திரும்பிக் கோபத்துடன் மேலே கிளம்பி வருகின்ற நாகத்தைக் கூருள்ளவையும் நல்ல முனையுள்ளவையுமான ஆறு [illegible] அந்த ஸர்ப்பத்தை [illegible] ரயோகத்தினால் அறுத்தனன் [illegible] அதனை அடையாமையால் [illegible] வாசத்தை அடையவில்லை. பிறகு, [illegible] புகழ்ந்து சூரிய [illegible] ஒப்பா [illegible] மான அந்த [illegible] (ஆகாயத்தில்) தானே [illegible] அர்ஜுனனுடைய [illegible] மறுபடி [illegible] அந்தக் காரணத் [illegible] 'கா[illegible]!' என் [illegible] உன்னை [illegible] பார்த்து, [illegible] நீ [illegible] பிரயோகஞ்செய்ய [illegible] கொன்றேன்' [illegible] யுத்தத்தில் இவ்வாறு சொல்லியதைக்கேட்டு அந்த [illegible], அந்த ஸாபத்தைப் பார்த்து, '[illegible] நாகமானது, 'காணு! பார்த்தா [illegible] சொல்லப்பட்ட [illegible] அறிவாயாக [illegible] தரிக்கிறதா இந்திரனோ [illegible] இவ [illegible] இவனை யம

பாணங்களால் அறுத்தான். அந்த நாகமானது உடலறுக்கப்பட்ட தாகப் பூமியில் விழுந்தது. அரசரே! பிறகு, அந்த ஸர்ப்பமானது கிரீடியினால் நாசஞ்செய்யப்பட்டவுடன், ஸர்வவியாபியும் புருஷோத் தமருமான ஸ்ரீவாஸுதேவர், அமிழ்ந்த ரதத்தை அந்தப் பூதலத்தி னின்று தாமே இருகைகளாலும் மீண்டும் விரைவாக மேலே தூக் கினார். அந்த முகூர்த்தத்தில், புருஷர்களுள் சிறந்த வீரனான கர்ணன், குறுக்காகப்பார்த்துக்கொண்டு சாணைக்கல்லில் தீட்டப்பட்டவை களும் மயிற்சிறகுகளை இறகுகளாகவுடையவைகளுமான பத்துப் பாணங்களால் தனஞ்சயனை அடித்தான். பிறகு, அர்ஜுனன், (கர் ணன்மீது) நன்றாக இழுத்துவிடப்பட்டவைகளும் கூருள்ளவைகளு மான பன்னிரண்டு வராஹகர்ணங்களைப் பிரயோகித்து ஸர்ப்பத்துக்கு ஸமமான வேகமுள்ள நாராசத்தைக் காதுவரையில் இழுத்துப் பிர யோகித்தான். நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட அந்த உத்தமமான பாணமானது கர்ணனுடைய விசித்திரமான கவசத்தைப் பிளந்து ப்ராணவாயுக்களை ஓட்டுகின்றதுபோல ரக்தத்தைக்குடித்து ரக்தத் தினால் பூசப்பட்ட இறகுகளுடன்கூடியதாகப் பூமியில் பிரவேசித் தது. பிறகு, சுறுசுறுப்பாகக் கார்யங்களைச் செய்பவனான கர்ணன்,

---

னுடைய வீடு செல்வான்' என்று மறுமொழி கூறியது. கர்ணன், 'ஓ! நாகமே! கர்ணன் இப்பொழுது யுத்தத்தில் பிறனுடையபலத்தை ஆதாரமாகக்கொண்டு ஜயத்தை அடைய விரும்பமாட்டான். ஓ! நாகமே! நூறு அர்ஜுனனை நான் கொல்லவதாயிருந்தாலும் இரண்டுதடவை ஒருபாணத்தை ஸந்தானம் செய்ய மாட்டேன்' என்றான். உத்தமனும் ஸூரியபுத்ரனுமான கர்ணன், அப்பொழுது யுத்தமத்தியில் மறுபடியும் அந்தநாகத்தைப்பார்த்து, 'நாக! வேறுகொடிய அஸ்திரப்பிரயோகத்தினாலும் உத்தமமான முயற்சியினாலும் கோபத்தினாலும் பார்த் தனைக் கொல்வேன். நீ நலமாகப் போகச் செல்வாயாக' என்று கூறினான். யுத்தத் தில் கர்ணனால் இவ்வாறு சொல்லப்பட்ட நாகராஜனானது, கோபத்தினால் அந்தக் கர்ணனுடைய வாக்கியத்தைப் பொறுக்கவில்லை. அரசரே! அந்தக் கொடியநாக மானது (பார்த்தனைக்) கொல்லக்கருதித் தன் சொந்தஉருவத்தை எடுத்துக் கொண்டு தானே பார்த்தனைக்கொல்வதன்பொருட்டுச் சென்றது. பிறகு, வாஸுதேவர், யுத்தத்தில் பார்த்தனைப் பார்த்து, 'அர்ஜுன! வைரத்துடன்கூடின இந்தமஹாஸர்ப்பத்தை நீ கொல்' என்று கூறினார். மதுஸூதனரால் இவ்வாறு சொல்லப்பட்டவனும் பகைவர்களுடையவீரியத்தை நாசஞ்செய்யும் காண் டீவத்தை வில்லாகக்கொண்டவனுமான அந்த அர்ஜுனன், 'இப்பொழுது என் பக்கத்தை நோக்கிவருகின்ற இந்தஸர்ப்பமானது யாது? இது கருடனுடைய வாயைத் தானாகவே அடையப்போகிறது' என்றான்.

தடியினலடிக்கப்பட்ட பெரிய ஸர்ப்பம்போல அம்பு வீழ்ந்ததி னல் கோபம் மூட்டப்பட்டவனுக அப்பொழுது அதிக விஷமுள்ள ஸர்ப்பமானது கொடிய விஷத்தைக் கக்குவதுபோலக் கொடிய பாணங்களைப் பிரயோகித்தான். அவன், ஜனார்த்தனரைப் பன்னிரண்டு பாணங்களாலும் அவ்வாறே அர்ஜுனனைப் புதிய தொண்ணூறு பாணங்களாலும் பிளந்து மறுபடியும் கோரமான பாணத்தினல் பாண்டவனைப் பிளந்து ஸிம்மநாதம்செய்து உரக்கச்சிரித்தான். இந்திரனுக்கு ஒப்பான விக்கிரமமுள்ள அர்ஜுனன், இந்தக் கர்ணனுடைய அந்த ஸந்தோஷத்தைப் பொறுக்கவில்லை. மர்மஸ்தானங்களைப்பிளக்கிறவனுன அர்ஜுனன், பிறகு, இந்தக் கர்ணனுடைய மர்மங்களை, இந்திரன் யுத்தத்தில் பராக்கிரமத்தினல் பலனை அடித்தது போல நூற்றுக்குமேற்பட்ட அம்புகளால் அடித்தான். பிறகு, அர்ஜுனன், யமனுடைய தண்டத்துக்கொப்பான தொண்ணூறு பாணங்களை அப்பொழுது கர்ணன்மீது பிரயோகித்தான். அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்ட சரீரத்துடன்கூடின அந்தக்கர்ணன், வஜ்ரத்தினல் பிளக்கப்பட்ட மலைபோலத் துன்பமடைந்தான். உத்தமமான மணிகளாலும் உத்தமமான வஜ்ரங்களாலும் பொன்னாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தக்கர்ணனுடைய சிரோபூஷணமான கிரீடமானது, தனஞ்சயனல் பிரயோகிக்கப்பட்ட பாணங்களாலடிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தது. உத்தமமானகுண்டலங்களும் விழுந்தன. அதிகவிலையுள்ளதும் சிறந்தசில்பிகளால் பிரயத்தினத்தினல் செய்யப்பட்டதும் காந்தியுள்ளதும் நெடுங்காலமாக இருக்கின்றதுமான கர்ணனுடைய கவசத்தைப் பாண்டவன் நொடிக்குள் பாணங்களால் பலவாருக உடைத்தான். அந்தஅர்ஜுனனுடையபாணங்களால் குண்டலங்கள் அறுக்கப்பட்டவனும் தேகத்தில் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டவனுமான அந்தக்கர்ணன், அப்பொழுது இரத்தத்தினல் சிவந்த அங்கங்களையும் காதுகளையுமுடையவனுக ஆகாயத்தில் அங்காரகனுடன் கூடின திருவோணம்போல விளங்கினன். பிறகு, அந்தஅர்ஜுனன் கோபங்கொண்டு, கவசத்தையிழந்தவனுன அந்தக்கர்ணனைக் கூர்மையுள்ள நான்குசிறந்தபாணங்களால் பிளந்தான். பகைவனல் மிகஅடிக்கப்பட்ட அந்தக்கர்ணன், ரோகியானவன் பித்தத்தினலும் கபத்தினலும் வாதத்தினலும் ஜ்வரத்தினலும் எவ்வாறு துன்பமடைவனே அவ்வாறு துன்பமடைந்தான். அர்ஜுனன், விரைவுடன் பெரிதான தனுமண்டலத்தினின்று வெளிப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் சிறந்தபுயிற்சியினலும் பிரயத்தினத்தினலும் பலத்தினலும்

பிரயோகிக்கப்பட்டவைகளுமான அனேகம் சிறந்தபாணங்களால் கர்ணனை அடித்து மர்மஸ்தானங்களையும் பிளந்தான். பார்த்தனால் கடிய வேகமுள்ளவையும் கூரியநுனியுள்ளவையும் பற்பலவிதமாயிருப்பவையுமான பாணங்களால் திடமாக அடிக்கப்பட்ட கர்ணன், கைரிகதாதுக்களால் சிவந்ததும் தாழ்வரைகளில் சிவந்தஜலத்தைப்பெருக்குகின்றதுமான மலைபோல விளங்கினான். பிறகு, அர்ஜுனன் நேராகப் போகின்றவைகளும் புதியவைகளும் பொற்புங்கமுள்ளவைகளும் மிக்க திடமானவைகளும் உருக்குமயமானவைகளும் யமனுடைய அக்னிமயமான தண்டம் போன்றவைகளுமான பாணங்களால் அக்னியினுடைய குமாரரான ஸுப்ரம்மண்யர் கிரௌஞ்சபர்வதத்தைப் பிளந்ததுபோலக் கர்ணனை நடுமார்பில் பிளந்தான். பிரபுவே! பிறகு, நன்றாக அடிக்கப்பட்ட ஸூதபுத்திரன், அம்புத்தூணியையும் இந்திரவில்லுக்கு ஒப்பான அந்தவில்லையும் எறிந்துவிட்டுப் பிறகு தடுமாற்றமுற்றவனாகிக் கைப்பிடி தளர்ந்து ரதத்திலிருந்தபடியே மூர்ச்சையடைந்தான். உத்தமனும் ஆண்மைவிரதத்தில் நிலைபெற்றவனுமான அர்ஜுனன், வியஸனத்தில் (அகப்பட்டிருக்கிற) அந்தக்கர்ணனை அப்பொழுது கொல்வதற்கு விரும்பவில்லை. பிறகு, உபேந்திரரான ஸ்ரீவாஸுதேவர் அர்ஜுனனைப்பார்த்து, 'பாண்டவ! ஏன் அஜாக்ரதையுடன் இருக்கிறாய்?' என்று மிக்கபரபரப்புடன் (பின் வருமாறு) கூறலானார். 'எப்பொழுதுமே கற்றறிந்தவர்கள் பலஹீனர்களாயிருந்தாலும் பகைவர்களுடைய (ஸமயத்தை) க்ஷணநேரங்கூட எதிர்பார்க்கமாட்டார்கள். விசேஷித்துப் பண்டிதன் வியஸனகாலங்களில் பகைவர்களைக்கொன்று தர்மத்தையும் கீர்த்தியையும் அடைகிறான். ஆதலால், நிகரற்றவீரனும் எப்பொழுதும் உனக்கு விரோதியுமான கர்ணனைச் சீக்கிரமாக நாசஞ்செய்வதற்கு விரைவுபடுவாயாக. ஸமர்த்தனான ஸூதபுத்திரன் உன்னை எதிர்த்துவருவான் இந்திரன் நமுசியைக்கொன்றதுபோல இவனைப்பிளந்துவிடு' என்றார். பிறகு, எல்லாக்கௌரவர்களுள்ளும் உத்தமனான அர்ஜுனன், 'அது அவ்விதமே' என்று ஜனார்த்தனரை விரைவாகப் பூஜித்து, முற்காலத்தில் சம்பரனைக்கொன்றவனான இந்திரன் பலியை அடித்ததுபோல உத்தமமான பாணங்களால் கர்ணனை அடித்தான். பாரதரே! கிரீடியானவன் குதிரைகளோடும் ரதத்தோடும் கூடிய கர்ணனை வத்ஸதந்தங்களால் நன்றாக நிரப்பினான். பொற்கட்டுக்களுள்ள பாணங்களால் முழுமுயற்சியினாலும் திசைகளையும் மூடினான். வத்ஸதந்தங்களால் நன்றாகநிறைக்கப்பட்டவனும் அகன்று பருத்த

மார்பையுடையவனுமான அந்தக்கர்ணன், நன்றாகப் பூத்திருக்கிற அசோகுடனும் பலாசுடனும் முள்ளிலவுடனுங்கூடியதும் சந்தனக் காட்டுடன் சேர்ந்ததுமான மலைபோல விளங்கினான். அரசரே! கர்ணன், யுத்தத்தில் சரீரத்திலபோடப்பட்ட அனேக பாணங்களால, மரங்களால நாற்பக்கத்திலும் நிரைக்கப்பட்ட தாழ்வரைகளுடனும் குகைகளுடனுங்கூடியதும் பிரகாசமான கர்ணிகார மரங்களுடன்கூடியதுமான சிறந்த மலைபோல விளங்கினான். அம்புக்கூட்டங்களைப் பலவாறு பிரயோகிக்கின்றவனும் அம்புக் கூட்டங்களாகிற கிரணங்களுடன் கூடியவனுமான அந்தக் கர்ணன், சிவந்தநிறமுள்ளவனும் சிவந்தகிரணமண்டலத்துடன் கூடியவனும் அஸ்தமிக்கப்போகிறவனுமான சூரியன்போல விளங்கினான். கர்ணனுடைய கைகளினிடையினின்று விடப்பட்டவைகளும் மஹாஸர்ப்பங்கள்போலப் பிரகாசிப்பவைகளுமான பாணங்களை, அர்ஜுனனுடைய கைகளினின்றுவிடுபட்டவைகளும் முனைகூரியவைகளுமான பாணங்கள் திசைகளை அடைந்து நாசஞ்செய்தன. பிறகு, அந்தக்கர்ணன், தைரியத்தை அடைந்து, கோபங்கொண்ட ஸர்ப்பங்களுக்கு ஒப்பான பாணங்களைப் பிரயோகிக்கின்றவனாகப் பத்துப்பாணங்களால அர்ஜுனனையும்,கோபித்துக்கொண்ட ஸர்ப்பங்களுக்கொப்பான ஆறு பாணங்களால கிருஷ்ணனையும் அடித்தான். பிறகு, மிக்கபுத்திசாலியான கிரீடியானவன், சக்தி மானம்பெரிய ஒலியுள்ளதும் ஸர்ப்பத்தினுடைய விஷாக்னிக்கு ஒப்பானதும் உருக்குமயமானதும் பயங்கரமான மஹாஸ்திரங்களால சூழப்பட்டதுமான மகிமைபொருந்திய பாணத்தை மஹாயுத்தத்தில பிரயோகிப்பதற்கு எண்ணங்கொண்டவனானான். அரசரே! கர்ணனுக்கு அந்தவதகாலமானது நெருங்கி வரவே, காலமானது கண்ணுக்குப் புலப்படாத ரூபத்துடன்கூடியதாகப் பிராம்மணசாபத்தினால் (ஸம்பவிக்கக்கூடிய அனர்த்தத்தை எடுத்துக்) காட்டிக்கொண்டும் காணனுடையவதத்தைச் சொல்லிக்கொண்டும், 'பூமியானது சக்கரத்தை உட்கொள்ளுகிறது' என்று சொல்லிற்று. நரவீரரே! அந்தவதகாலம் வந்தவுடனே, மஹாத்மாவான பரசுராமர் இவனுக்கு எந்தஅஸ்திரத்தைக் கொடுத்திருந்தாரோ அந்தக்கோரமான அஸ்திரமும் தோன்றவில்லை. பூமியும் இவனுடைய இடப்பக்கத்துச் சக்கரத்தை உட்கொண்டது. நரேந்திரரே! பிறகு, பிராம்மணஶ்ரேஷ்டருடைய சாபத்தினால அப்பொழுது ரதமானது சுழன்றது. பிராம்மணோத்தமருடைய சாபத்தினால முழுதும் நசிக்கின்ற அஸ்த்ரமும் நேர்ந்திருக்கின்ற வதத்தைக்

கூறியது. பிறகு, அவனுடைய சக்கரமானது பூமியில் அமிழ்ந்துவிட்டது. யுத்தத்தில் அந்தஸூதபுத்திரன் அதிகவளர்ச்சியுள்ளதும் மேடையுள்ளதும் நன்றாகப் புஷ்பித்திருக்கின்றதுமான தெருவிலிருக்கிற பெருமரமானது பூமியில் அமிழ்ந்தாற்போல மனக்கலக்கமடைந்தான். ரதமானது அமிழ்வே, பிராம்மணசாபத்தினால் மயங்கின கர்ணன், அந்த நாகாஸ்திரம்வீணானதையும் அந்த வ்யஸனங்களையும் பொறாமல் இருகைகளையும் உதறிக்கொண்டு தர்மத்தை நிந்தித்தான். 'தர்மத்தைப் பிரதானமாகக்கொண்டவனைத் தர்மம் எப்பொழுதுமே காக்கிறதென்றன்றோ தர்மத்தை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்? நாம் தர்மத்தில் நித்தியம் பிரயத்தினமுள்ளவர்களாகவே இருக்கிறோம். சக்திக்குத் தக்கபடியும் சாஸ்திரத்துக்குத்தக்கபடியும் கர்மத்தை அனுஷ்டிப்பதற்கும் முயல்கிறோம். அந்தத்தர்மமும் பக்தர்களை ஹிம்ஸிக்கின்றது; காப்பாற்றுகிறதில்லை. கர்மம் எப்பொழுதும் பாதுகாக்கிறதில்லையென்று எண்ணுகிறேன்' என்று நிந்தித்தான். இவ்வண்ணம் கூறுகின்றவனும் மிக்ககடுமாற்றமுற்ற குதிரைகளுடனும் ஸாரதியுடனுங்கூடியவனும் அர்ஜுனனுடைய பாணங்கள் விழுவதினால் நிலைதவறும்படி செய்யப்பட்டவனும் மர்மஸ்தானங்களில் அடிபட்டுத் தளர்ச்சியுற்றவனுமான அந்தக்கர்ணன் அடிக்கடி தர்மத்தை நிந்தித்தான். பிறகு, யுத்தத்தில் அவன் மிகபயங்கரமான மூன்றுபாணங்களால் கிருஷ்ணனைக் கையில் அடித்தான்; அவ்வாறே, பார்த்தனை ஏழுபாணங்களால் அடித்தான். பிறகு, அர்ஜுனன் தீவ்ரவேகமுள்ளவைகளும் நேராகச் செல்லுகின்றவைகளும் இந்திரனுடைய வஜ்ராயுதத்துக்கு ஒப்பானவைகளும் கோரமானவைகளும் அக்னிபோன்றவைகளுமான பதினேழுபாணங்களைப் பிரயோகித்தான். பயங்கரமான வேகமுள்ள அந்தப்பாணங்கள் (அவனைப்) பிளந்து பூமியில் விழுந்தன. பிறகு, மனநடுக்கமுற்றகர்ணன் வலலமையினால் (அஸ்திரவிஷயமான) செய்கையை வெளியில் காட்டலானான். பிறகு, அந்தக்கர்ணன் பலத்தினால் பகருமல ஸாவதானத்துடன் பரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். பிறகு, அர்ஜுனனும் அந்த ப்ரம்மாஸ்திரத்தைக்கண்டு ஐந்திராஸ்திரத்தை அபிமந்திரணம் செய்தான். பகைவர்களைத்தவிக்கச்செய்பவனை அந்த அர்ஜுனன், காண்டீவத்தையும் நாண்கயிற்றையும் பாணங்களையும் அபிமந்திரணஞ்செய்து, இந்திரன் மழையைப்பொழிவதுபோலச் சரமாரிகளைப்பொழிந்தான். பிறகு, தேஜோமயமாகவும் மிக்கவீர்யமுள்ளவைகளாகவுமிருக்கின்ற பாணங்கள் பார்த்தனுடைய ரதத்தினின்று வெளிப்பட்டுக் கர்ணனுடைய ரதத்துக்குஸமீபத்தில் தோன்

றின. மஹாரதனான அந்தக்கர்ணன் (எதிர்அஸ்திரத்தை) ப்ரயோகித்து அவனுடைய அஸ்திரத்தைக் கவர்ந்தான். பிறகு, வ்ருஷ்ணி வீரரான ஸ்ரீவாஸுதேவர், அந்த அஸ்திரமானது நாசஞ்செய்யப் படவே, (அர்ஜுனனைப்பார்த்து) 'பார்த்த! வேறு அஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணு. ராதேயன் பாணங்களை விழுங்குகிறான்' என்று மொழிந்தார். பிறகு, அர்ஜுனன் கர்ணனைப் பாணங்களால்மூடி மிக்க கடுமையான ப்ரம்மாஸ்த்ரத்தை மந்திரித்து (வில்லில்) பூட்டிப் பிரயோகிக்கலானான். பிறகு, கர்ணன் நன்றாகத்தீட்டப்பட்டகூர்மையுள்ள பாணங்களால் (பார்த்தனுடைய)நாண்கயிற்றை அறுத்தான். கர்ணன், (அர்ஜுனன்பூட்டிய) இரண்டாவதுநாண்கயிற்றையும் மூன்றாவதையும் நான்காவதையும் அவ்வாறே ஐந்தாவதையும் ஆறாவதையும் ஏழாவதையும் எட்டாவதையும் ஒன்பதாவதையும் பத்தாவதையும் அவ்வாறே பதினோராவதையும் அறுத்தான். நூறுதடவை அம்பு தொடுத்து அர்ஜுனனுடைய நாண்கயிற்றை அறுக்க அந்தக் கர்ணன், அர்ஜுனன் நூறு நாண்கயிறுகளைப்பூட்டியதையும் அறிய வில்லை. பிறகு, பாண்டுநந்தனன் வேறு ஒருநாண்கயிற்றை வில்லில் பூட்டி அபிமந்திரணம்செய்து ஜ்வலிக்கின்ற ஸர்ப்பங்கள்போன்ற பாணங்களைக் கர்ணன்மீது இறைத்தான். கர்ணன், அந்தஅர்ஜுனனுடைய நாண்கயிறு அறுந்ததையும் அவன்கவனத்துடன் வேறுநாண்கயிற்றைப்பூட்டியதையும்அவனுடையசுறுசுறுப்பினால் அறியவில்லை. அது ஆச்சர்யமாயிருந்தது. கர்ணன் தன் வீர்யத்தை அதிகமாகக் காண்பித்துக்கொண்டு ஸவ்யஸாசியினுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால்தடுத்து நாசஞ்செய்துகொண்டு அவனைவிட அதிகமானகாரியத்தைச் செய்தான். பிறகு, கர்ணன் தன்னுடையஅஸ்திரங்களால் அர்ஜுனன் பீடிக்கப்பட்டதைக்கண்டு அவனைப்பார்த்து, 'அப்யாஸம்செய்; அஸ்திரத்தை நன்றாகக்கற்றறிந்துகொள்; போ', என்று மொழிந்தான். பிறகு, பகைவரைவாட்டுபவனான கர்ணன், நெருப்புக்கொப்பானதும் கோரமாயிருப்பதும் ஸர்ப்பங்களுடைய விஷத்துக்குஒப்பானதும் உருக்குமயமானதும் தேவஸம்பந்தமுள்ளதுமான ஒருபாணத்தில் ரௌத்ராஸ்திரத்தை அபிமந்திரணம் பண்ணி நன்றாக ஸந்தானம்செய்து கிரீடியின்மீது பிரயோகிக்க எண்ணங்கொண்டவனானான். அரசரே! பிறகு, பூமியானது ராதேயனுடைய தேருருளையை அப்பொழுது கவர்ந்துகொண்டது. பிறகு, அந்தராதேயன், தேரினின்று விரைவாகக் கீழேஇறங்கி நல்லமுயற்சியுடன் சக்கரத்தை இருகைகளாலும் பிடித்து நன்றாக மேலே

தூக்குவதற்கு விருப்பங்கொண்டான். சக்கரத்தை விழுங்கின பூமியானது, ஏழுதீவுகளுடனும் பர்வதங்களுடனும் காடுகளுடனுங் கூடக் கர்ணனால் நான்குஅங்குலம் உயரத்தூக்கப்பட்டது. (பூமியினால்) சக்கரம்விழுங்கப்பட்ட ராதேயனே குரோதத்தினால் கண்ணீரைச் சொரிந்தான். அர்ஜுனனைப்பார்த்துப் பரபரப்புடன் இந்தவசனத்தை உரைக்கலானான்.

'ஓ! ஓ! பார்த்த! பெரியவில்லையுடையவனே! ஒரு முகூர்த்த காலம் பொறுத்திரு. அமிழ்ந்துபோயிருக்கிற இந்தச்சக்கரத்தைப் பூமியிலிருந்து உயரத்தூக்குகிறேன். பார்த்த! தெய்வவசத்தினால் என்னுடைய இந்த ரதத்தினது இடச்சக்கரம் பூமியில் புதைந்திருப்பதைக்கண்டு அற்பமனிதன் கொள்ளுகிற எண்ணத்தை விட்டுவிடு. அற்பமனிதர்களால் செல்லப்பட்ட வழியை அடைவதற்கு நீ தகுதியுள்ளவனல்லை. குந்தீபுத்திர! நீ பிரஸித்திபெற்றவன். யுத்த கார்யங்களில் (எல்லாவீரர்களையுங்காட்டிலும்) சிறந்தவன். பாண்டவ! (எவ்விதத்தினாலும்) மிக்கசிறப்புற்றகார்யத்தையே நீ செய்வதற்குத் தகுதியுள்ளவன். அர்ஜுன! நல்ல விரதத்தில் நிலைபெற்றவர்களான சூரர்கள், தலைமயிரவிழ்ந்திருக்கிறவன்மீதும் புறங்காட்டிஓடினவன் மீதும் பிராம்மணன்மீதும்கைகளைக்குவித்தவன்மீதும்சரணமடைந்தவன்மீதும் ஆயுதத்தைக்கீழேவைத்தவன்மீதும் யாசிப்பவன்மீதும் பாணங்களை இழந்திருப்பவன்மீதும் கவசம் நழுவினவன்மீதும் நழுவியும் ஒடிந்துமிருக்கிற ஆயுதங்களையுடையவன்மீதும் சஸ்திரங்களைப் பிரயோகிக்கமாட்டார்கள். பாண்டவ! நீயோ உலகத்தில் சிறந்த சூரன்; நன்னடையுள்ளவன்; யுத்ததர்மங்களை அறிந்தவன்; ஆதலால், ஒரு முகூர்த்தகாலம் பொறுத்துக்கொள். நீ திவ்யாஸ்திரங்களை அறிந்தவன்; அளவிடமுடியாத பலமுடையவன்; யுத்தத்தில் கார்த்தவீர்யார்ஜுனனுக்கு ஒப்பானவன். நீண்டகைகளுள்ளவனே! அமிழ்ந்திருக்கின்ற இந்தச் சக்கரத்தை உயரத்தூக்குகிறவரையில் பொறுத்துக்கொள். ரதத்திலிருக்கிற நீ, ரதமில்லாமல் பூமியிலிருக்கிற என்னைக் கொல்வது தகுதியன்று. பாண்டுநந்தன! வாஸுதேவரிடத்தினின்றாவது உன்னிடத்தினின்றாவது நான் பயப்படவில்லை. நீ க்ஷத்ரியபுத்திரனன்றோ? மஹா குலத்தை விருத்திபண்ணுகிறவனன்றோ? பாண்டவ! ஆதலால், இந்நிலைமையிலிருக்கும் நான் உன்னைநோக்கி (இந்தவசனத்தைச்) சொல்லுகிறேன். ஒருமுகூர்த்த காலம் பொறுத்துக்கொள்' என்றுகூறினான்.

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

**(அறங்கூறிய கர்ணனது தீச்செயல்களை மாதவர் அர்ஜுனனுக்கு அறிவுறுத்தியதும், கர்ணனடிகளால் அர்ஜுனன் சிறிது களைக்கக் கர்ணன் இறங்கித் தேருருளையைத் தூக்கியதும், மாதவர் ஏவலால் அர்ஜுனன் கர்ணனது தலையை அறுத்ததும்.)**

பிறகு, மஹாத்மாவான வாஸுதேவர் (ராதேயனைப்பார்த்து), ஏ! ராதாபுத்ர! பாக்யத்தினாலே இப்பொழுது தர்மத்தை நினைக்கிறாய். எப்பொழுதுமே பாண்டவர்கள் தர்மத்தில் கட்டுப்பட்டவர்கள். ஆதலால், இவர்களுக்கு அந்தத்தர்மம் விருத்தியைக்கொடுக்கிறது. (இவர்களுக்கு)விரோதிகளான அந்தக்கௌரவர்கள் தர்மத்தை விட்டு விலகினவர்கள். அக்காரணத்தினால், கௌரவர்கள் விநாசத்தை அடைந்தார்கள். நீசர்கள், பெரும்பான்மையாக வ்யஸனத்தில் மூழ்கித் தெய்வத்தை நிந்திக்கின்றார்கள்; தங்களுடையபாவத்தை நிந்திக்கிறதில்லை. கர்ண! நீயும் துர்யோதனனும் துச்சாஸனனும் ஸுபலனுடைய குமாரனான சகுனியும் சேர்ந்து, ஒற்றையாடையை உடுத்திருந்த த்ரௌபதியை ஸபையின்கண் (பலாத்காரமாகக்) கொண்டுவந்தீர்களே, அப்பொழுது, உனக்குத் தர்மமானது யாது காரணத்தினால் ருசிக்கவில்லை? எப்பொழுது சூதாட்டத்தை அறியாதவரான யுதிஷ்டிரராஜரை ஸபையில் அழைத்துவந்து அவரைத் தோல்வியடையச் செய்தீர்களோ, அப்பொழுது உனக்குத் தர்மம் எங்கேசென்றிருந்தது? கர்ண! வனவாஸந்தீர்ந்து பதின்மூன்றாவது வர்ஷமும் சென்றபின்னும், ராஜ்யத்தை நீ கொடுக்கமறுத்தபொழுது உனக்குத் தர்மம் எங்கேபோய்விட்டது? அரசனான துர்யோதனன் உன்னுடைய ஸம்மதத்தின்மேல் பீமஸேனனை ஸர்ப்பங்களாலும் விஷங்கலந்த போஜனங்களாலும் கொல்லமுயன்றானன்றோ; அப்பொழுது, உனக்குத் தர்மம் எங்கே போய்விட்டது? வாரணாவதத்தில் அரக்குமாளிகையில் தூங்கிக்கொண்டிருந்தபொழுது பார்த்தர்களை நீங்கள் கொல்வதற்கு எண்ணங்கொண்டீர்களே, அப்பொழுது உனக்குத் தர்மம் எங்கே போய்விட்டது? கர்ண! ரஜஸ்வலையும் துச்சாஸனனுடையவசத்தில் இருப்பவளுமான கிருஷ்ணையைப்பார்த்து ஸபையில் உரக்கச்சிரித்தாயன்றோ, அப்பொழுது உன்னுடையதர்மமானது எங்கே சென்றது? ராதாநந்தன! முற்காலத்தில் அயோக்யர்களால் பீடிக்கப்பட்டவளும் குற்றமற்றவளுமான த்ரௌபதியை நீயும் பக்கத்தில்நின்று பார்த்தாயே, அப்பொழுது உன்னுடையதர்மம் எங்கேசென்றுவிட்டது? ராதேய! யானைபோலச் செல்பவ

ளான கிருஷ்ணையைப்பார்த்து, 'கிருஷ்ணையே! பாண்டவர்கள் நாச மடைந்துவிட்டார்கள்; சாஸ்வதமான நரகத்தை அடைந்தார்கள். வேறுபர்த்தாவை வரித்துக்கொள்' என்று நீ சொல்லிக்கொண்டு பக் கத்திலிருந்து பார்த்தாயே, அப்பொழுது உன்னுடையதர்மமானது எங்கே சென்றுவிட்டது? கர்ண! எப்பொழுது நீ ராஜ்யத்தில் பேரா சையுள்ளவனுகச் சகுனியையடுத்துப் பாண்டவர்களைச் சூதாடு வதற்காக மீண்டும் அழைத்தாயோ, அப்பொழுது உனக்குத் தர்மம் எங்கே போய்விட்டது? அனேக மஹாரதர்கள் யுத்தத்தில் பாலனை அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்டு ரணகளத்தில் கொன்ருர்களே, அப் பொழுது உன்னுடையதர்மம் எங்கேபோயிற்று? இந்தத்தர்மமா னது அந்தவிஷயங்களில் இல்லாமற்போமாகில் எல்லாவிதத்திலும் வீணே வாய்வறட்சியை உண்டுபண்ணுகிற பேச்சினால் யாதுபயன்? ஸூத! இப்பொழுது, இந்த யுத்தரங்கத்தில் தர்மத்தைவிட்டு வில காத கார்யங்களையே செய். அப்படியிருந்தாலும், உயிரோடு நீ விடு படமாட்டாய். நளன் புஷ்கரனால் பாச்சிகைகளால் ஜயிக்கப்பட்டான்; மீண்டும் வீர்யத்தினால் கீர்த்தியையும் ராஜ்யத்தையும் அடைந்தான். அவ்வாறே, பேராசைஇல்லாதவர்களான பாண்டவர்கள் எல்லா ருடனும் ஒன்றுசேர்ந்தவர்களாகிக் கைவன்மையினால் (ராஜ்யத் தைஅடைய) வந்துவிட்டார்கள். அவர்கள் ஸோமகர்களோடுகூடி, யுத்தத்தில் அதிகவிருத்தியடைந்திருக்கின்ற பகைவர்களைக்கொன்று, ராஜ்யத்தை அடையப்போகிருர்கள். எப்பொழுதும் தர்மத்தினால் நான்குபக்கத்திலும் பாதுகாக்கப்பட்டிருக்கிற புருஷஶ்ரேஷ்டர் களான பாண்டவர்களால் தார்த்தராஷ்டிரர்கள் அவ்வாறு விநாசத் தை அடைந்தார்கள்' என்றுகூறினர்.

பாரதரே! வாஸுதேவரால் அப்பொழுது இவ்வாறு சொல்லப் பட்ட கர்ணன், வெட்கத்தினால் தலைகுனிந்தவனாகி யாதொரு மறு மொழியையும் உரைக்கவில்லை. பாரதரே! மிக்கவேகமுள்ள பராக்கிர மத்துடன்கூடின கர்ணன், கோபத்தினால் உதடுகள் நன்குதுடிக்க, வில் லைக்கையில் எடுத்துப் பார்த்தனைஎதிர்த்துப் போர்புரிந்தான். பிறகு, வாஸுதேவர் புருஷஶ்ரேஷ்டனான பல்குனனைப்பார்த்து, 'மஹாபல முள்ளவனே! திவ்யாஸ்திரத்தினாலேயே பிளந்து (இவனைத்) தள்ளு வாயாக' என்று கூறினர். வாஸுதேவரால் இவ்வாறு உரைக்கப் பட்டஅர்ஜுனனே அப்பொழுது கோபத்தை அடைந்தான். அவன் அதனைநினைத்துக் கோரமானகோபத்தை அடைந்தான். அரசரே! க்ரோதமுள்ளவனான அந்தஅர்ஜுனனுடைய எல்லாஇந்திரியங்

களினின்றும் அப்பொழுது அக்னிஜ்வாலைகள் வெளிப்பட்டன. அது ஆச்சர்யமாயிருந்தது. பிறகு, கர்ணன் அதைக்கண்டு ப்ரம்மாஸ்திரத்தினால் தனஞ்சயனையெதிர்த்து (ப்பாணங்களைப்) பொழிந்தான்; ரதத்தைத் தூக்குவதில் மறுபடியும் முயற்சியைச்செய்தான். பார்த்தன் அவன்மீது ப்ரம்மாஸ்திரத்தினாலேயே உண்டுபண்ணப்பட்ட சரமாரிகளைப் பொழிந்தான். பாண்டவன் அந்தக்கர்ணனுடைய அஸ்திரத்தை அஸ்திரத்தினாலேதடுத்து அவனையும் நன்றாகஅடித்தான். பிறகு, குந்தீபுத்திரன் அக்னிக்குப்பிரியமான வேறு அஸ்திரத்தை எடுத்துக் கர்ணனைக்குறித்துப் பிரயோகித்தான். அது தேஜஸினால் நன்றாகஜ்வலித்தது. பிறகு, கர்ணன் வாருணாஸ்திரத்தினால் நெருப்பைத் தணித்தான்; மேகங்களால் எல்லாத்திசைகளையும் இருளடர்ந்ததாகச்செய்தான். பாண்டுநந்தனனும் சிறந்தவீர்யமுள்ளவனுமான அர்ஜுனன் பரபரப்பில்லாதவனாக, ராதேயன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, வாயவ்யாஸ்திரத்தினால் (அந்தவாருணாஸ்திரத்தினால் உண்டான) மேகங்களை அப்பொழுது விலக்கித்தள்ளினான். பிறகு, ஸூதபுத்திரன் பாண்டுபுத்திரனைக் கொல்லும் எண்ணத்தினாலே அக்னிபோலஜ்வலிக்கின்றமகாகோரமான ஒருபாணத்தைஎடுத்தான். அரசரே! பிறகு, பூஜிக்கப்பட்டவில்லில் அந்தப்பாணமானது சேர்க்கப்படும்போது மலைகளுடனும் சிறுகாடுகளுடனும் காடுகளுடனுங்கூடின பூமியானது நடுக்கமுற்றது. பாரதரே! பரற்கற்களுடன் கூடின காற்று வீசியது. திசைகளும் புழுதியினால் மூடப்பட்டன. ஆகாயத்தில் தேவர்களுடைய 'ஆ! ஆ!' என்னும் ஒலியும் தோன்றியது. பெரியவரே! ஸூதபுத்திரனால் ஸந்தானம் செய்யப்பட்ட அந்தப்பாணத்தைக்கண்டு பாண்டவர்கள் மனத்தளர்ச்சியடைந்தவர்களாகி அதிக வ்யஸனத்தை அடைந்தார்கள். கர்ணனுடைய கையினால் நன்றாகவிடப்பட்டதும் இந்திரனுடைய வஜ்ராயுதத்துக்கொப்பான தேஜஸுள்ளதும் கூரிய முனையுள்ளதுமான அந்தப் பாணமானது தனஞ்சயனுடைய மார்பையடைந்து புற்றில் சிறந்த ஸர்ப்பம்நுழைவதுபோல நுழைந்துவிட்டது. மஹாபலசாலியும் பகைவர்களைத்துளைப்பவனுமான பீபத்ஸுவானவன், யுத்தத்தில் நன்றாக அடிக்கப்பட்டு நிலைதப்பிச் சுழன்று கையிலிருந்த காண்டீவத்தை நழுவவிட்டு, பூகம்பமுண்டாகுந் தருணத்தில் மலை அசைவதுபோல் அசைந்தான். மஹாரதனான கர்ணன் அந்த ஸமயத்தைப்பெற்றுப் பூமியில் அழுந்தியிருக்கிற சக்கரத்தைத் தூக்கிவிடக்கருதி ரதத்தினின்று கீழே குதித்து

இருகைகளாலும் (சக்கரத்தை) நன்ருகப்பிடித்துத்தூக்கியும் மஹா பலசாலியாயிருந்தும் தெய்வவசத்தினுல் முடியவில்லை. பிறகு, கிரீடதாரியான அர்ஜுனன் பிரஜ்ஞையை அடைந்து, யமதண்டத் துக்கொப்பானதுஅஞ்ஜலிகம் என்கிற சிறந்த பாணத்தை எடுத்தான். பிறகு, மஹாத்மாவான வாஸுதேவரும் பார்த்தனைப்பார்த்து, 'கர்ணன் ரதத்தில் ஏறுகிறதற்குள்ளேயே சத்துருவான இந்தக் கர்ணனுடைய தலையைப் பாணத்தால் பிள' எனமொழிந்தார். அந்த அர்ஜுனன், பிரபுவான ஸ்ரீவாஸுதேவருடைய அந்த வசனத்தை, 'அப்படியே ஆகட்டும்' என்று நன்ருகப்புகழ்ந்து, பிறகு, மிகஜ்வலிக்கின்ற ஓரம்பை எடுத்து, ரதசக்கரமானது அமிழ்ந்திருக்கவே, மஹாரதத்தில் நிர்மலனுன சூரியன்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற கச்சைக்கொடியை அடித்தான். கிரீடியானவன் பொன்னுலும் முத்துக்களாலும் மணிகளாலும் வஜ்ரங்களாலும் இழைக்கப்பட்டதும் சிற்ப வித்தையில் சிறந்த சில்பியின் முயற்சியினுல் உண்டுபண்ணப்பட்டதும் அழகிய உருவமுள்ளதும் தங்கத்தினுல் சித்திரிக்கப்பட்டதும் உமது ஸைன்யத்தினுடைய ஜயத்துக்கு எப்பொழுதும் ஆதாரமாயிருந்ததும் பகைவர்களைப் பயமடையும்படி செய்வதும் புகழத்தக்க உருவமுள்ளதும் உலகத்தில் பிரஸித்திபெற்றதும் காந்தியினுல் அக்னிக்கும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் ஒப்பானதும் மஹாரதனும் சூரியபுத்திரனுமான கர்ணனுடைய காந்தியினுல் ஜ்வலிக்கின்றதுமான சிறந்த யானைகட்டும் கச்சைவடிவமுள்ள அந்த உத்தமமான கொடியை, நன்ருகத் தீட்டப்பட்டதும் ஸ்வர்ணக்கட்டுக்களுள்ளதும் ஹோமஞ்செய்யப்பட்ட அக்னிபோல் ஜ்வலிக்கின்றதுமான ஒரு க்ஷுரப்ரத்தினுல் நாசஞ்செய்தான். அந்த த்வஜத்துடன்கூடவே கௌரவர்களுடைய கீர்த்தியும் கர்வமும் விருப்பமான எல்லாக் காரியங்களும் மனமும் விழுந்தன. பெரிதான 'ஆ ! ஆ !' என்கிற சத்தமும் தோன்றியது. பரதகுலத்திலுதித்தவரே ! சுறுசுறுப்புடன் காரியங்களைச் செய்பவனுன குருவீரனுல் யுத்தத்தில் அறுத்துத் தள்ளப்பட்ட த்வஜத்தைக்கண்டு உம்மைச்சார்ந்தவர்களனைவரும் அப்பொழுது ஸூதபுத்திரனுன கர்ணனுடைய ஜயத்தைப்பற்றி ஆசையை இழந்தார்கள். பிறகு, பார்த்தன் கர்ணனுடைய வதத்தின்பொருட்டு விரைவுள்ளவனுகி மகேந்திரனுடைய வஜ்ராயுதத்துக்கும்அக்னியினுடைய தண்டத்துக்கும் ஒப்பானதும் சூரியனுடைய உத்தமமான கிரணம்போன்றதும் மர்மங்களைப் பிளக்கின்றதும் ரக்தத்தினுலும் மாம்ஸத்தினுலும் பூசப்பட்டதும்அக்னிக்கும் சூரியனுக்கும் ஒப்

பானதும் பூஜிக்கத்தக்கதும் மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவர்களின் உயிரைவாங்குகின்றதும் மூன்றுஅரத்னி அளவுள்ளதும் ஆறு சிறகுகளுள்ளதும் விரைவாகச் செல்லுந்திறமையுள்ளதும் உக்கிரமான வேகத்துடன்கூடியதும் இந்திரனுடைய வஜ்ராயுதம் போன்ற வீரியமுள்ளதும் அதிகோரமாகப் பரவுகின்ற காலாக்னி போன்றதும் பிநாகத்துக்கும் விஷ்ணுசக்கரத்துக்கும் ஒப்பானதும் பிராணிகளுக்கெல்லாம் பயத்தை உண்டுபண்ணுகின்றதும் அழிப்பதுமான அஞ்சலிகம் என்கிற ஒருபாணத்தை அம்பறாத்தூணியிலிருந்து எடுத்தான். எது தேவஸமூகங்களாலும் தடுக்கமுடியாததோ, எது எப்பொழுதும் பூஜிக்கப்பட்டதோ, மஹா பலமுள்ள எந்த மகாபாணமானது தேவர்களையும் அஸுரர்களையும் ஜயிக்குமோ, அப்படிப்பட்ட பாணத்தைப் பார்த்தன் மகிழ்ச்சியோடு எடுத்தான். துடைக்கப்பட்டிருக்கிற அந்த அம்பைப்பார்த்துச் சராசரங்களுடன் கூடின உலகமனைத்தும் நடுக்கமுற்றது. எடுக்கப்பட்ட பெரிய போருக்கு ஏற்றதான பாணத்தைக்கண்டு, ரிஷிகள் உலகமனைத்தும் ஸௌக்கியத்தை அடையவேண்டி க்ஷேமகாரியத்தைச் செய்தார்கள். பிறகு, காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனன், எண்ணமுடியாத மகிமையுடன்கூடின அந்தப்பாணத்தை வில்லில் பூட்டினான். சிறந்த மஹாஸ்திரத்தோடு சேர்த்துக் காண்டீவம் என்கிற வில்லை விரைவாக இழுத்து, 'மகிமை பொருந்திய அஸ்திரமந்திரத்தினால் ஜபிக்கப்பட்டிருக்கின்ற மகிமைதங்கிய இந்தப் பாணமானது, சத்துருவினுடைய சரீரத்தையும் உயிரையும்வாங்கும் தன்மையுள்ளது. என்னால் தவம் செய்யப்பட்டிருக்குமானாலும், குருக்களும் ஸந்தோஷமடையும்படி செய்யப்பட்டிருப்பார்களானாலும், நல்ல ஆஹுதிகளுடன் ஹோமம் செய்யப்பட்டிருக்குமானாலும், சாஸ்திரங்கள் கற்கப்பட்டிருக்குமானாலும், இந்த ஸத்தியத்தினால் நன்றாகப் பூட்டப்பட்டிருக்கின்ற இந்தப்பாணமானது மிக்க பலமுள்ள என் சத்துருவான கர்ணனைக் கொல்லட்டும்' என்று சொன்னான். தனஞ்சயன் இவ்வாறு சொல்லிக்கொண்டே கர்ணனுடைய வதத்தின் பொருட்டுக் கோரமான அந்தப்பாணத்தைப் பிரயோகித்தான். கர்ணனைக் கொல்லஎண்ணங்கொண்டவனும் சூரியசந்திரர்களுக்கொப்பான ப்ரபாவமுள்ளவனும் மனத்தை வசப்படுத்தினவனும் சுறுசுறுப்புடன் காரியங்களைச்செய்பவனும் பாண்டு நந்தனனுமான கிரீடியானவன் அதிக ஸந்தோஷமுள்ளவனாக, 'அதர்வாங்கிரஸ் மந்திரத்தினால் உச்சாடனம் செய்யப்பட்ட *க்ருத்யை

* ஏவப்பட்ட பூதம்.

யானது எவ்வாறு சத்துருவைக் கொல்லுமோ அவ்வாறு நீ என்னுடைய சத்துருவைக் கொல்' என்று சொல்லிக்கொண்டு, தேவர்களுக்கு ஜயகாரணமான மகிமைபொருந்திய அந்தப்பாணத்தைப் பிரயோகித்தான். பிறகு, பலசாலியான அர்ஜுனனால் விடப்பட்ட அந்தமகாபாணமானது, ஆகாயத்தையும் திசைகளையும் நன்றாக ஜ்வலிக்கச் செய்தது. அரசரே! பிறகு, மகாத்மாவான அர்ஜுனன் காண்டீவத்தினின்று விடுபட்டிருக்கிற அந்தப்பாணத்தினால் அனேக ஸைன்யங்களை மிகுதியாக மயங்கச்செய்து ஸூதபுத்திரனை அந்தக்கர்ணனுடைய அந்தச் சிறந்ததலையை அறுத்தான். மன்னரே! பிறகு, மகேந்திரனுடைய குமாரனை பார்த்தன், அப்பொழுது மகாஸ்திரத்தினால் அபிமந்திரணம் செய்யப்பட்ட அஞ்சலிகமென்கிற சிறந்த பாணத்தினால் பிற்பகலில் கர்ணனுடைய தலையை அறுத்தான். அஞ்சலிகத்தினால் அறுக்கப்பட்ட தலையானது விரைவாகக் கீழே விழுந்தது. பிறகு, உடலும் பூமியில் விழுந்தது. உதித்திருக்கின்ற சூரியனுக்கு ஸமமான தேஜஸுள்ளதும் சரத்காலத்தில் ஆகாயத்தின் உச்சியை அடைந்திருக்கின்ற சூரியன்போன்றதுமான அந்தக்கர்ணனுடைய முடியானது, அஸ்தகிரியினின்று சிவந்த மண்டலத்துடன் கூடின ஸூர்யன்விழுவதுபோல் ஸேனாமுகத்தில் பூமியில்விழுந்தது. பிறகு, இவனுடைய தலையானது, எப்பொழுதும் ஸுகமாக வளர்க்கப்பட்டதும் நல்லஅழகுள்ளதும் மிக்க ஸுகத்துடன் சேர்ந்திருக்கின்ற நல்லவீரனை பொருந்தியதுமான (அவனுடைய) தேகத்தை, மிக்க செல்வம்நிறைந்த வீட்டை அதில் வஸிக்கும் பிரபு விடுவதுபோல அதிக பிரயாஸத்தினால் விட்டது. பாணங்களால் விசேஷமாகப் பிளக்கப்பட்டதும் உயிரை இழந்ததும் வளர்ந்திருக்கின்றதும் ரக்தம்பெருகும்காயங்களுள்ளதும் நல்லகாந்தியுடன்கூடியதுமான கர்ணனுடைய அந்தச்சரீரமானது, வஜ்ரத்தினால் பிளக்கப்பட்டவுடன் கைரிகதாதுரஸத்துடன் சேர்ந்த அருவிப்பெருக்குடன்கூடிய மலையினுடைய பெரிய சிகரம் விழுவதுபோல விழுந்தது. கீழே தள்ளப்பட்டிருக்கின்ற கர்ணனுடைய தேகத்தினின்று ஒரு தேஜஸானது ஆகாயத்தை (ப்ரகாசத்தினால்) வியாபித்துக்கொண்டு சூரியனை அடைந்தது. கர்ணன் கொல்லப்பட்டவுடனே, அந்த ஆச்சரியத்தை எல்லாயுத்த வீரர்களும் பார்த்தார்கள். பிறகு, பல்குனனால் கர்ணன் சாய்க்கப்பட்டதைக்கண்டு, பாண்டவர்கள் சங்கங்களை உரக்க ஊதினார்கள். அவ்வாறே, கேசவரும் தனஞ்சயனும் மகிழ்ந்தவர்களான நகுல ஸஹதேவர்களும் சங்கங்களை முழக்கினார்கள். கொல்லப்பட்டுப் படுத்தி

ருக்கின்ற கர்ணனைக்கண்டு ஸோமகர்கள் ஸைன்யங்களுடன் ஸிம்ம நாதங்களைச்செய்தார்கள்;மிக்க மகிழ்ச்சியுள்ளவர்களாகத் தூர்யங்களை அடித்தார்கள்; வஸ்திரங்களையும் கைகளையும் வீசினார்கள். அரசரே! யுத்தவீரர்கள் அதிகஸந்தோஷமுள்ளவர்களாகப் பார்த்தனை விருத்தி அடையச்செய்ய வந்தார்கள்.பெருங்காற்றினால் புரட்டித்தள்ளப்பட்ட மலைபோலவும் யஜ்ஞத்தினுடைய முடிவில் அவிந்த அக்னிபோலவும் விபத்துக்கு ஆள்பட்டு அர்ஜுனனுடைய பாணங்களால் ரதத்தி னின்று அறுத்துப் பூமியில் தள்ளப்பட்டிருக்கிற கர்ணனைக்கண்டு, ஸேனைகளுடன்கூடின மற்றவீரர்கள் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு கூத்தாடினார்கள். சத்தமிட்டுக்கொண்டு (அர்ஜுனனைப் பற்றிப்) பேசினார்கள். வேந்தரே ! அறுத்துத்தள்ளப்பட்ட ஸூர்ய புத்திரனான அந்தக்கர்ணனுடைய முகமானது காம்பில்லாத தாமரை மலர்போலவும், தலையானது அஸ்தமனத்தை அடைந்திருக்கின்ற ஸூர்யனுடைய மண்டலம்போலவும் விளங்கின. அம்புகளால் நாற் புறத்திலும் நிறைக்கப்பட்ட எல்லா அங்கங்களுடனுங்கூடியதும் ரக்தவெள்ளத்தினால் நான்குபக்கத்திலும் நனைக்கப்பட்டதுமான கர்ணனுடைய தேகமானது, சூரியன் தன்னுடைய கிரணங்களால் விளங்குவதுபோல விளங்கியது. கர்ணனாகிற ஸூர்யன், பிரகாசிக் கின்ற பாணங்களாகிற கிரணங்களால் பகைவர்களுடைய ஸேனையை நன்றாகத்தவிக்கச்செய்து பலசாலியான அர்ஜுனனாகிற காலத்தினால் அஸ்தமனத்தை அடையும்படி செய்யப்பட்டான். அஸ்தமனத்தை அடைகின்ற ஆதித்யன் ஒளியை எடுத்துக்கொண்டே போவது போல, அந்தப்பாணமானது கர்ணனுடைய உயிரை வாங்கிக்கொண் டே சென்றது. ஐயா! கடைசியான தினத்துடன்கூடின கர்ண னுடைய உயர்ந்த சரீரத்திலுள்ள தலையானது, பகலுடைய கடைசிப் பாகத்தில் அஞ்சலிகத்தினால் அறுக்கப்பட்டு யுத்தத்தில் வீழ்ந்தது. சேனைகளுள் மேல்மேல் இதரஜனங்களைக்கொன்று அந்தப்பாணமா னது உயர்ந்தசரீரத்துடன்கூடின கர்ணனுடைய தலையை விரைவா கக் கவர்ந்தது. சூரனும் பூமியில் விழுந்தவனும் அம்புகளால் நான்கு பக்கத்திலும் நிறைக்கப்பட்டவனும் ரக்தத்தினால் பூசப்பட்ட மேனியையுடையவனும் பூமியில் படுத்திருப்பவனுமான கர்ண னைக்கண்ட மத்ரராஜன், பிறகு, த்வஜம் அறுக்கப்பட்ட ரதத்தோடு சென்றான். கர்ணன் கொல்லப்படவே, பயத்தினால் பீடிக்கப்பட்ட வர்களும் யுத்தத்தில் நன்றாக அடிக்கப்பட்டவர்களுமான கௌரவர் கள், சரீரத்தினோடு ஜ்வலிக்கின்ற பெரிதான அர்ஜுனனுடைய த்வ

ஜத்தை அடிக்கடி பார்த்துக்கொண்டு யுத்தத்தை விட்டு ஓடினார்கள். பரதர்களுள்சிறந்தவரே! அவனுடைய தலையானது, தற்செயலாக விழுந்திருக்கின்ற சூரியனுடைய மண்டலம்போலப் பூமியை விளங்கச் செய்தது. போரில் மிகஅடிக்கப்பட்டதனால் தீர்க்கநித்திரையை அடைந்தவனும், உதடுகளைக் கடித்திருப்பவனும், ரக்தத்தினால் நிரம்பியவையும் பயமுற்றவையுமான கண்களையுடையவனும், சிறந்தரதத்தின் பின்பக்கத்தில் புரண்டுகிடப்பவனுமான அந்தராதேயனைப் பார்த்து, ஸூர்யன் ஒருமுகூர்த்தகாலம் கிரணங்கள் குறைந்தவனாயிருந்தான். தூர்யவாத்தியங்கள் ஒலிக்கப்பெருகதும் முக்கியர்களான யுத்தவீரர்கள்கொல்லப்பட்டதும் கர்வமடங்கினதும் ஸூர்யபுத்திரனால் விடுபட்டதுமான கௌரவஸைன்யமானது, சந்திரனை இழந்த ஜ்யோதிர்கிரஹங்களுடையகூட்டம்போல விளங்கவில்லை. ஆயிரம்கண்களையுடைய இந்திரனுக்கு ஸமமான செய்கையையுடையவனான கர்ணனுடைய ஆயிரம்இதழ்களுள்ள தாமரைமலருக்கு ஒப்பான முகத்துடன்கூடியதும் மங்களகரமாயிருப்பதுமான தலையானது பகலின்முடிவில் சூரியன் கீழேவிழுவதுபோலப் பூமியில் விழுந்தது. அகன்றமார்பையுடையவனும் தாமரைமலர்போன்ற முகத்துடன்கூடியவனும் புடம்போட்ட தங்கம்போலப் பிரகாசிப்பவனும் பார்த்தனுடையபாணங்களால் நாற்பக்கத்திலும் தபிக்கச்செய்யப்பட்டவனும் பூமியிலவிழுந்தவனும் புழுதியினால்மூடப்பட்டவனும் அழுக்கடைந்திருப்பவனும் புத்திரனுமான கர்ணனைச் சூரியன் அடிக்கடி பார்த்து, க்ஷீணித்திருக்கின்ற கிரணங்களுடன் கூடியவனை மெள்ளமெள்ளத் தன்இருப்பிடம் சென்றான்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

**(கர்ணவதத்தினால் துரியோதனன் துக்கிக்கச் சல்யன் தேற்றியதும், போர்க்களவர்ணனையும், தேவர்முதலியோர் திரும்பிச்சென்றதும்.)**

சூரனும், பூமியில விழுந்தவனும், பாணங்களால் நாற்புறங்களிலும் நிறைக்கப்பட்டவனும், ரக்தத்தினால பூசப்பட்டமேனியையுடையவனும், தறசெயலாகப் பூமியைஅடைந்திருக்கின்ற ஸூர்யனைப் போலிருப்பவனுமான கர்ணனைப் பார்க்க எண்ணங்கொண்டவர்கள் நன்றாகச் சூழ்ந்துகொண்டு நின்றார்கள். ராஜனே! யுத்தரங்கத்தில் அர்ஜுனன்முதலானவர்கள் மிகுந்தஸந்தோஷத்தை அடைந்தார்கள். பயப்படுகிறவர்கள் பயந்தார்கள். பகைவர்கள் துயரமுற்றார்கள்.

பார்ப்பவர்கள் ஆச்சர்யமடைந்தார்கள். அவ்வாறே, உம்மைச்சேர்ந்த சிலர் சோகத்தை அடைந்தார்கள். சேனையானது, வந்தவாறே இஷ்டப்படி சென்றுவிட்டது. நன்ருக அடிக்கப்பட்ட கவசத்தையும் ஆபரணங்களையும் ஆயுதங்களையும் வஸ்திரங்களையுமுடையவனும் தனஞ்சயனால் அழிக்கப்பட்டவனும் மகாரதனுமான கர்ணனைப்பார்த்துக் கௌரவர்கள், ஸிம்மத்திஞல் விருஷபம்கொல்லப்பட்டபசுக்கூட்டம்போல் ஓடினார்கள். அர்ஜுனனோடு அதிகமாகயுத்தம்செய்து ஸிம்மத்திஞல்கொல்லப்பட்ட யானைபோல்(அர்ஜுனனால்) கொல்லப்பட்டு யுத்தகளத்தில்படுத்திருக்கிற கர்ணனைக்கண்டு சல்யன் த்வஜம்அறுக்கப்பட்ட ரதத்தோடு சென்றான். சூரியகுமாரனை கர்ணன் கொல்லப்பட்டவுடனே, சல்யனுடன்கூடினகௌரவர்கள் கீர்த்தியினால் ஜ்வலிக்கின்ற பெரிதான அர்ஜுனனுடையகொடியை அடிக்கடி பார்த்துக்கொண்டவர்களாகவே பார்த்தனிடமிருந்துஉண்டானபயத்திஞல் விரைவாக ஓடினார்கள். சல்யனே, கர்ணார்ஜுனர்களுடையயுத்தத்தில் நொறுக்கப்பட்ட த்வஜங்களுடன்கூடின சேனைகளைக்கண்டு, ஸ்ருஞ்சயர்களாலும் ஸோமகர்களாலும் பரிஹஸிக்கப்பட்டவஞக அந்த ரதத்துடனே சீக்கிரமாகச்சென்றான். பீமனே, தள்ளப்பட்ட தேர்களுடனும் குதிரைகளுடனும் யானைகளுடனும் கூடியதும் கொல்லப்பட்ட ஸூதபுத்திரனோடு கூடியதுமான சேனையைப்பார்த்து, அப்பொழுது பயங்கரமான ஸ்வரத்திஞல் ஆகாயத்தையும் பூமியையும் நடுங்கும்படி செய்துகொண்டு உரக்கக் கர்ஜித்தான் கர்ணன்கொல்லப்பட்டவுடன், பீமன் கைகளைத்தோள்களில் தட்டிக் கொண்டு கூத்தாடினன்; தார்த்தராஷ்டிரர்களைப் பயப்படும்படி செய்துகொண்டு துள்ளினன். அரசரே! எல்லாஸ்ருஞ்சயர்களும் ஸோமகர்களும் அப்பொழுது சங்கங்களை ஊதிஞர்கள். (ஒருவரையொருவர்) கட்டிக்கொண்டார்கள். ஸூதபுத்திரன்கொல்லப்படவே, அப்பொழுது க்ஷத்ரியர்கள் பரஸ்பரம் அதிகஸந்தோஷத்தை அடைந்தார்கள். துர்யோதனன் கண்ணீரால்நிறைந்த நேத்திரங்களோடு கூடியவனும் தைன்யமுற்றவனும் அடிக்கடி பெருமூச்சுவிடுகிறவனும் மிக்கதுன்பத்தை அடைந்தவனுமானன். அரசரே! மத்ரராஜனும் விசேஷமாக மனமயக்கமடைந்து அந்த அர்ஜுனனால் த்வஜம் அறுக்கப்பட்ட ரதத்தோடு வேகத்துடன் துர்யோதனனிடம் வந்து அவனைப் பார்த்து அதிக துக்கத்திஞல் விரைவாகப் பின்வருமாறு கூறலானன்.

'ஒருவரைஒருவர் அணுகிக் கொல்லப்பட்டுப் படுத்திருக்கின்றவர்களும் மலையின்சிகரங்களுக்கு ஒப்பானவர்களுமான மனிதர்களா

லும், குதிரைகளாலும் யானைகளாலும் நிறைந்ததும், யானைகளும் குதிரைகளும் மிகச்சிறந்தரதிகர்களும் சிதறினதுமான உனதுசேனை யானது யமனுடையராஜ்யத்துக்குஸமானமாக இருக்கிறது.பாரத! கர்ணார்ஜுனர்களுக்குள் நடந்ததுபோன்றயுத்தம் (இதற்குமுன்) நடந்த தில்லை. சேர்ந்திருக்கின்ற கிருஷ்ணார்ஜுனர்களும் உன்னுடைய மற்ற எல்லாச் சத்துருக்களும் கர்ணனால் கவரப்பட்டார்கள். தெய்வமொன்றே ஸ்வதந்தரமாயிருந்துகொண்டு ப்ரவ்ருத்திக்கின்றது? பாண்டவர் களை ரக்ஷிக்கின்றது? நம்மைக் கொல்லுகின்றது? உன்னுடைய கார்ய ஸித்தியாகிற பிரயோசனத்தைத் தேடுகின்ற எல்லா வீரர்களும் பலாத்காரமாகப் பகைவர்களால் கொல்லப்பட்டார்கள். குபேரனுக் கும் யமனுக்கும் இந்திரனுக்கும் வருணனுக்கும் ஸமமான பிரபாவ முள்ளவர்களும் வீர்யத்தோடும் சௌர்யத்தோடும் பராக்கிரமத்தோ டும் அப்படிப்பட்ட குற்றமற்ற குணகணங்களோடும்கூடியவர்களும் பெரும்பாலும் பிறரால் கொல்லப்பட முடியாதவர்களும் உன் னுடைய கார்யஸித்தியிலேயே விருப்பமுள்ளவர்களுமான அரசர் கள், யுத்தத்தில் பாண்டவர்களைச் சேர்ந்தவர்களால் கொல்லப்பட்டார் கள். பாரத! ஆதலால், நீ துயரமடையவேண்டாம். இது தெய்வ ஸங்கல்பம். கார்யஸித்தியானது, மாறி மாறி உண்டாகிறது; (ஒருவ னுக்கே) நிச்சயமாக உண்டாகாது' என்று கூறினான். மத்ரநாத னுடைய இந்த வசனத்தைக்கேட்டும் தன்னுடைய தீச்செயலை மன த்தினால் நினைத்தும், துர்யோதனன் கண்ணீரால்நிறைந்த கண்களை யுடையவனாகவும் அடிக்கடி பெருமூச்சுவிடுபவனாகவும் மிக்க வருத்த மடைந்தான். *அரசரே! அதனை நினைத்ததனால் பேசாமலிருப்பவ

---

* அதிகபாடம்.

திருதராஷ்டிரன், "அந்தப் பயங்கரமான தினத்தில் கர்ணார்ஜுனர் களுக்கு நடந்த யுத்தத்தில் எரிக்கப்பட்டதும் (யுத்தத்தைவிட்டு) ஓடினதும் பாணங்களால் அதிகமாகப்பீடிக்கப்பட்டதுமான கௌரவர்கள் ஸ்ருஞ்சயர்கள் இவர்களின் படையினுடைய உருவமானது எவ்விதமாக இருந்தது?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! யுத்தத்தில் மனுஷ்யர்களுக்கும் யானைகளுக்கும் குதிரைகளுக் கும் கோரமான பெரியநாசமானது ஏற்பட்ட விதத்தை நீர் கவனத்துடன் கேளும். மன்னரே! கர்ணன் கொல்லப்பட்டவுடன், பார்த்தன் ஸிம்மநாதத் தைச் செய்தபொழுதே உம்முடைய புத்திரர்களைப் பெரும்பயம் வந்தடைந் தது. கர்ணன் கொல்லப்பட்டிருக்கையில், ஒரு ஸமயத்திலாவது உம்முடைய யுத்தவீரர்களுக்கு, ஸைன்யங்களை ஒன்றுசேர்ப்பதற்காவது பராக்கிரமத்தை விரைவாக வெளிப்படுக்கற்காவது புத்தியுண்டாகவில்லை. அம்பு கம் களை

னும் பலஹீனனும் மிக்க துன்பமுற்றவனுமான துர்யோதனனைப் பார்த்து * ஆர்த்தாயனியானவன் தீனமாக உரைக்கலானான். 'வீர! கொல்லப்பட்டிருக்கின்ற உக்கிரமான மனிதர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் நன்கு நிறைந்திருக்கின்ற இந்தயுத்தபூமியைப்பார். ஒருதடவைமுயன்றவைகளும் அம்புகளால் பிளக்கப்பட்டமேனியையுடையவைகளும் மலைகள்போலப் பிரகாசிப்பவைகளும் கீழே விழுந்திருப்பவைகளும் அதிகமாகத்துடிக்கின்றவைகளும் உயிரை இழந்தவைகளும் அதிகமாகஅழிக்கப்பட்ட கவசங்களும், ஆயுதங்களுமுள்ள எல்லாப்போர்வீரர்களுடனுங்கூடியவைகளும் வஜ்ரத்தினால் தள்ளப்பட்டவைகளும் கற்கள் மிருகங்கள் மரங்கள் இவைகளுடைய கூட்டங்களையுடையவைகளுமான பர்வதஸமூகங்கள்போன்றவைகளும் நன்றாகஅடிக்கப்பட்டிருக்கிற மணிகளுடனும் மாவெட்டிகளுடனும் தோமரங்களுடனும் தவஜங்களுடனும் கூடியவைகளும் பொன்மயமான மேல்விரிப்புக்களுடன்கூடியவைகளும் ரக்தவெள்ளத்தில் மிதக்கின்றவைகளுமான யானைகளாலும் பாணங்களாலும் விலக்கித் தள்ளப்பட்டவைகளும் விழுந்தவைகளும் கதறுகின்றவைகளும் தைன்யமுற்றவைகளும் ரக்தத்தைக் கக்குகின்றவைகளும் பரிதாபப்படக்கூடிய நிலைமையிலிருப்பவைகளும் பயமடைந்தவைகளும் புரண்டிருக்கிற விழிகளையுடையவைகளும் விழுந்திருக்கின்றவைகளுமான குதிரைகளாலும் யுத்தபூமியானது துக்கிக்கப்படத்

இல்லாதத்தும் தெப்பமில்லாதததுமான கடலில் கப்பல் உடைந்திருக்கையில் வியாபாரிகளுக்குத் தீவுபோல ஆதாரமான கா[illegible] [illegible]யிருந்து கொல்லப்பட்டவுடனே, (ஆபத்ஸமுத்திரத்தில் அமிழ்கின்ற கௌரவர்கள்) கலரயை விரும்பினார்கள். அரசரே! ஸமுத்ரதத்ர கொல்லப்பட்ட[illegible], [illegible]ம்மத்தினால் பீடிக்கப்பட்ட மிருகங்கள்போலச் சஸ்திரங்களால் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டவர்களும் மிக்க பயங்கொண்டவர்களும் நாதனில்லாதவர்களுமான கௌரவஸேனைவீரர்கள் நாதம் விருப்புற்றார்கள். பொய்யங்காலத்தில் ஸவ்யஸாசியினால் அடிக்கப்பட்ட (நாகங்கள்) கொம்பொடிந்த [illegible] [illegible] [illegible] [illegible]த்தைக் கொண்ட நாகங்கள்போல் [illegible] சென்றோம். மன்னரே! [illegible] தபுத்திரன் கொல்லப்பட்டவுடனே, உம்முடைய புத்திரர்கள், [illegible] [illegible]ர்கள் கொல்லப்பட்டவர்களும் [illegible] அடிக்கப்பட்டவர்களும் [illegible] அறுக்கப்பட்டவர்களுமாகிப் பத்தினர் ஓடினார்கள் விசேஷமாக [illegible]யிருக்கின்ற யந்திரங்களுடனும் கவசங்களுடனுங்கூடியவர்களும் யுத்தினால் ஓடுகின்றவர்களும் மனஉறுதியை இழந்தவர்களும் ஒருவரை ஒருவர் அடிக்கின்றவர்களும் பார்க்கின்றவர்களும் பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களும் '[illegible]யே

* கர்ணபர்வம் 98-ஆம் அத்தியாயம் முதற்பிரயோகம்.

தக்க நிலைமையை அடைந்ததாயிற்று. ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் விலக்கித் தள்ளப்பட்டவைகளும் அவ்விதமாக அடித்துத் துகைக்கப்பட்டவைகளும் குற்றுயிராயிருப்பவைகளும் உயிரை இழந்தவைகளுமான யானை குதிரைக்கூட்டங்களால் பூமியானது மறைவைத ரணிபோல விளங்கியது. அறுக்கப்பட்டிருக்கிற துதிக்கைகளின் பின்பாகத்துடனும் சரீரத்துடனும் கூடியவைகளும் அதிகநடுக்கமுற்றவைகளும் பூமியில் விழுந்திருப்பவைகளுமான யானைகளோடும், எதிரிலிநிற்கின்ற புருஷர்களால் கொல்லப்பட்டவர்களும் கவசங்களும் ஆபரணங்களும் ஆடைகளும் ஆயுதங்களும் சிதறினவர்களுமான சிறந்த ரதிகர்களோடும் சிறந்தயானைவீரர்களோடும் குதிரைவீரர்களோடும் காலாட்களோடும் கூடின பூமியானது, தணிந்திருக்கிற அக்னிகளுடன்கூடிய நம்போலஇருந்தது. பாணங்களால அடிக்கப்பட்டவர்களும் மகாபலசாலிகளும் மோஹத்தோடு பார்க்கின்றவர்களும் நாற்புறங்களிலும் விழுந்திருப்பவர்களும் முழுதும் பரஜ்ஞையையிழந்தவர்களும் மீண்டும் தேறுதலடைகின்றவர்களுமான யுத்தவீரர்களால பூமியானது, குடத்திலடங்கியிருக்கிற அக்னிகளால் விளங்குவதுபோல விளங்கியது. நழுவிவிழுந்திருக்கின்றவைகளும் மிக்க ஒளிபொருந்தியவைகளுமான ரத்னங்களால பூமியானது, இரவில (நன்றாகப்) பிரகாசிக்கின்ற ஜ்யோதிமண்டலங்களால ஆகாயம்விளங்குவதுபோல விளங்

பீபத்ஸு நிச்சயமாக வந்துவருகிறான்; விருகோதரன் என்னையே எதிர்த்து வருகிறான் என்று எண்ணிக்கொண்டவர்களுமாக விழுந்தார்கள்; பரபரப்பினால வாட்டமடைந்தார்கள். சிலமகாரதர்கள் குதிரைகளினிடத்தும் சில மகாரதர்கள் யானைகளினிடத்தும் சிலர் தேர்களினிடத்தும் ஏறிக்கொண்டு வேகமுள்ளவர்களாகப் பயத்தினால காலாட்களை விட்டு ஓடினார்கள். ஓடுகின்றவையும் பயத்தினால் பீடிக்கப்பட்டவையுமான யானைகளால ரதங்கள் பொடிபண்ணப்பட்டன. மகாரதர்களால் குதிரைகளும் குதிரைக்கூட்டங்களால காலாட்களின் கூட்டங்களும் பொடிசெய்யப்பட்டன. அரசரே! ஸூதபுத்திரன் கொல்லப்பட்டவுடனே, உம்முடைய யுத்தவீரர்கள் ஸர்ப்பங்களாலும் திருடர்களாலும் நிறைந்தகாட்டில் கூட்டத்தைவிட்டுப்பிரிந்த வர்த்தகர்களைப்போலஆனார்கள். வீரர்கள் கொல்லப்பட்ட யானைகளைப்போலவும் கை அறுபட்ட மனிதர்கள்போலவும் எல்லாவீரர்களும் உலகத்தைப் பார்த்தமயமாகப் பார்க்கின்றவர்களாகப் பயத்தினால் பீடிக்கப்பட்டார்கள். பீமஸேனனிடத்திலிருந்து உண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டு ஓடுகின்ற எல்லாஸைன்யங்களையும் கண்டு, பிறகு, துர்யோதனன் தன்னுடைய ஸாரதியைப்பார்த்து, 'ஆ! ஆ!' என்று கூவி இந்த வசனத்தை உரைக்கலானான். 'கையில் வில்லைப்பிடித்து நிற்கின்ற என்னைப் பார்த்தன் மிஞ்ச

கியது. கர்ணார்ஜுனர்களுடையகைகளாலவிடப்பட்ட பாணங்கள் யானைகளையும் மனுஷ்யதேகங்களையும் பிளந்து பிராணவாயுக்களை விரைவாக ஓட்டி மஹாஸர்ப்பங்கள் புற்றிலநுழைவதுபோல நேரில் சாய்ந்து பூமியில் பிரவேசித்தன. தனஞ்சயன் கர்ணர் இவர்களின் யுத்தமார்க்கத்தில் பூமியானது, கொல்லப்பட்டிருக்கின்ற மனிதர்களாலும் யுத்தத்தில பாணங்களால்பிளக்கப்பட்டவைகளும் ரக்தத்தினல் நன்ருகப்பூசப்பட்டவைகளுமான மரித்தயானைகளாலும் நடக்க முடியாததும் உட்செல்லுதற்கும் அரியதும் ஆகியது. பெரியபாணங்களால் நாசஞ்செய்யப்பட்டவையும், நன்ருகவுறபடுத்தப்பட்டவையும் யானைகளையும் போர்வீரர்களையும் குதிரைகளையும் சிறந்தஆயுதங்களையும் த்வஜங்களையுமுடையவையும், பூட்டாம்வார்கள் சிதறினவையும், கட்டுக்கள் மிகச்சிதறினவையும், சக்கரங்களும் அச்சுக்களும் நுகங்களும் த்ரிவேணுக்களும் அறுக்கப்பட்டவையும், பூட்டாம்வார்களை இழந்தவையும், துயரத்தைஉண்டுபண்ணுகின்றவையும், மாருகத்திருப்பப்பட்டிருக்கிற ஏர்க்காலகளுடன்கூடியவையும், விசேஷமாக ரதகுப்திகள்ஒடிந்தவையும் ரத்னங்களாலும் கனகத்தினலும் அலங்கரிக்கப்பட்டவையுமான ரதங்களாலும் தேருறுப்புக்களாலும் மூடப்பட்டிருக்கிறபூமியானது, சரத்காலத்திய மேகங்களால் ஆகாயம் விளங்குவதுபோல விளங்கியது. வேகமுள்ளகுதிரைகளால் நன்ருக இழுக்கப்படுகின்றவையும் தேராளிகள் கொல்லப்பட்டவையும்

---

மாட்டான். எல்லாடைகருக்கும் பின் கத்தில குதிரைகளை மெள்ள ஓட்டு. யுத்தஞ்செய்கின்ற கௌந்தேயனைக் கொல்லப்போகிறேன். ஸம்சயமில்லை. பெருங்கடலானது கரையைக்கடந்து செல்லமாட்டாததுபோல அர்ஜுனன் எல்லை மீறப்போவதற்கு வல்லமையுள்ளவனாகான். இப்பொழுது, கோவிந்தனுடன் கூடின அர்ஜுனனையும் காவ்யான ஸ்ருகோதரனையும் அவ்வாறே மகுதியிருக்கிற மற்றசத்துருக்களையும் கொல்லப்போகிறேன். காணன்விஷயத்தில கடனேரியாகாமையை அடையப்போகிறேன்' என்றான். சூரர்களுக்கும் மேன்மக்களுக்கும் தகுந்த குருராஜனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, ஸாரதியானவன் ஸ்வர்ணமயமான கடிவாளம்பூண்ட குதிரைகளை மெதுவாக நடத்தினன். பெரியவரே! ரதங்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் ...பட்டிருக்கப்பட்ட உடைமைசேர்ந்த இருபத்தையாயிரம் காலாட்கள் யுத்தத்தின்பொருட்டு என்னததாகளாகவே நின்ருர்கள். அவர்களை மிகக்கோபமுள்ள பீமஸேனனும் பார்ஷதனுன த்ருஷ்டத்யும்னனும் சதுரங்கஸேனையோடு சூழ்ந்துகொண்டு பாணங்களால கொன்ருர்கள். அவர்கள் பார்ஷதனுடன்கூடின பீமஸேனனை யுத்தத்தில எதிர்த்துப போர்புரிந்தார்கள். மற்றவர்களோ அந்த யுத்தத்தில பார்ஷதன் த்ருஷ்டத்யும்னன் இவர்களு

நன்கு அமைக்கப்பட்டவையுமான சிறந்த ரதங்கள் மனிதர்களின் மீதும் யானைகளின்மீதும் ரதங்களின்மீதும் குதிரைவீரர்களின்மீதும் விரைவாகச் சென்றுகொண்டு பலவாருகச் சுழன்றன. பொன்மயமான பின்புறமுள்ளவைகளும், கோடாலிகளுடனும் ஆயுதங்களுடனும் கூடினவைகளும், கூர்மையுள்ளவைகளுமான சூலங்களும் முத்கரங்களுடன்கூடின உலக்கைகளும் சித்திரமானகத்திகளும் *பளபளப்பானஉறைகளும் தங்கப்பட்டத்தால் கட்டப்பட்டயானைகளும் பொன்னால்அலங்கரிக்கப்பட்ட விற்களும் ஸ்வர்ணத்தினால் சித்திரிக்கப்பட்டகட்டுக்களுடன்கூடின பாணங்களும் துவையப்பட்டரிஷ்டிகளும் தங்கத்தினால் அதிகம்பிரகாசிக்கின்ற ஈட்டிகளும் தடிகளும் வெண்ணிறமுள்ள சாமரங்களும் சங்கங்களும் அறுக்கப்பட்டும் இறைக்கப்பட்டுமிருப்பனவும் காந்தியையிழந்தனவுமான மாலைகளும் கம்பளவிரிப்புக்களும் கொடிகளும் கொடித்துணிகளும் தலைப்பாகைகளும் கிரீடங்களின்வரிசைகளும் வெண்மைநிறமுள்ள மகுடங்களும் நான்குபக்கத்திலும் சிதறிக்கிடக்கின்ற சாமரங்களும் சிறந்த ஆபரணங்களுள் முக்கியமான பதக்கங்களும் ஹாரங்களும் தலைஅணிகளும் சிறந்ததோள்வளைகளும் பொற்கொடிகளுடன்கூடின பொன்மயமான கண்டாபரணங்களும் வைரத்துடனும் பொன்னுடனும் சேர்ந்திருக்கிற உத்தமமான மணிகளும் பற்பலவித மங்களகரமானரத்னங்களும் ஸுகத்திற்கேற்ற

டையிடையாகளை எடுத்துரைத்தார்கள். அப்பொழுது, பீமன் எதிரில் நிற்கின்ற அந்த வீரர்களோடு யுத்தத்தில் கோபங்கொண்டான். அவன் ரதத்தினின்று விரைவாகக் கீழே இறங்கிக் கதாயுதத்தைக் கையிற்கொண்டு யுத்தஞ்செய்தான். புஜபலத்தை ஆதாரமாகக்கொண்டவனும் தர்மத்தில் பற்றுதலுள்ளவனும் குந்தியின் புதல்வனுமான விருகோதரன் ரதத்திலிருந்துகொண்டு பூமியில் இருக்கிற அந்த வீரர்களை எதிர்த்துப் போர்புரியவில்லை. தங்கத்தினால் நான்கு பக்கத்திலும் மூடப்பட்ட பெரிதான கதையை எடுத்துக்கொண்டு தண்டத்தைக் கையிற்கொண்ட யமன்போல உம்மைச்சேர்ந்தவர்களனைவரையும் கொன்றான். காலாட்களான அந்தப் போர்வீரர்களுக்குப் பிரியமான உயிரில் பற்றைவிட்டு, நெருப்பை நோக்கி விட்டில்கள் ஓடுவதுபோல யுத்தத்தில் பீமனை எதிர்த்து ஓடினார்கள். கோபமுள்ளவர்களும் யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவர்களுமான அந்தப் பதாதிகள், யமனைக்கண்டு பிராணிவர்க்கங்கள் நாசமடைவதுபோலப் பீமஸேனனை எதிர்த்து உடனே நசித்தார்கள். மஹாபலசாலியான பீமன் கதையைக் கையில் ஏந்திக் கழுகுபோல ஸஞ்சரித்துக்கொண்டு உம்மைச்சேர்ந்த இருபத்தையாயிரம் போர்வீரர்களை நொறுக்கினான். ஸத்யபராக்கிரமமுள்ளவனும் மஹாபல

* இது இரண்டு முறை வருகிறது.

(வீரர்களுடைய) சரீரங்களும் சந்திரனுக்கொப்பான முகத்துடன் கூடின தலைகளும் விளங்கின. மனத்துக்கு இன்பமான வீரர்களுடையதேகங்களையும் போகங்களையும்) சத்ரம் சாமரம் கிரீடம் முதலான) விருதுகளையும் ஸுகங்களையும்விட்டு மகிழ்ச்சி பொருந்திய ஸ்வதர்மத்தில் நிலைபெற்றுக்கொல்லப்பட்டுக் கீர்த்தியினால் சிறந்த உலகங்களை அடைந்தார்கள். துர்யோதன! திரும்பு. அரசனே! கௌரவத்தை அழிப்பவனே! போர்வீரர்கள் பாசறைகளைநோக்கிச் செல்லட்டும். நீயும் செல். பிரபுவே! இதோ ஸூர்யனும் மேற்றிசையில் இறங்குகிறான். நரேந்திரனே! இந்தக்கார்யத்திலோ நீயே காரணமாக இருக்கிறாய்' என்றான். அரசரே! சல்யன் இவ்வளவுமட்டிலும் சொல்லித் துர்யோதனனையும் திரும்பும்படிசெய்து ஓய்ந்தான். யுத்தத்தில் மிக்கபற்றுள்ள புத்தியையுடையவனும் 'ஆ! கர்ண! ஆ! கர்ண!' என்று புலம்புகின்றவனுமான அந்தத்துர்யோதனனைத் துரோணபுத்திரனைமுதன்மையாகக்கொண்ட அரசர்களெல்லோரும் தேறுதலை அடையும்படிசெய்தபிறகு, திவ்யமாக இருப்பதும் யசஸினாலஜ்வலிக்கின்றதுமான அர்ஜுனனுடைய ரதத்தையும் கவசத்தையும்பார்த்துக்கொண்டே (தத்தம்இருப்பிடம்) சென்றார்கள். ராஜரே! மிகப்பிரகாசிக்கின்றபயங்கரமானமுகூர்த்தத்தில், மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவர்களின் சரீரங்களிலிருந்துண்டான சிவந்தரக்தத்தினால் நனைக்கப்பட்டிருப்பதும் சிவந்தவஸ்திரங்களாலும் மாலைகளாலும் ஸ்வர்ணங்களுடைய ஸம்பந்தத்தினாலும் பிரகாசிக்கின்றவளும் எல்லோருக

சாலியுமான [illegible] , அந்தக் காலாட்களுடைய படையைக்கொன்று [illegible] யுமனை [illegible] அந்த யுத்தத்தில் [illegible] சிறந்த [illegible] ளவனான தனஞ்சயன் சேனைப்படையை எதிர்த்தார் [illegible] மாதீபுத்திரர்களும் [illegible] ஸாத்யகியும் [illegible] [illegible] துர்யோதன னுடைய படையைக் கொன்று கொண்டே [illegible] எதிர்த்தார்கள் அவர்கள் கூர்மையுள்ள அம்புகளால் [illegible] அநேககுதிரைவீரர்களைக் கொன்று [illegible] அந்தச் சமயத்தில் [illegible] ம்போர் நடந்தது [illegible] ! [illegible] பிரஸித்திபெற்ற [illegible] அசையும்படி செய்துகொண்டு, [illegible] டையசேனையை [illegible] யாகவுடையதும் வெளுத்த குதிரைகள் [illegible] யுத்தம்செய்கிற வீரனான அர்ஜுனனைப் [illegible] விரைவாக ஓடினார்கள் [illegible] இழந்தவர்களும் அம்புகளால் அடிக்கப்பட்ட [illegible] பத்தையாயிரம்காலாட்களும் மரணமடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டனும் பாண்டவர்களுள் மஹாரதனும் பெரியமனமுள்ளவனும் பெரிய வில்லைத்தரித்தவனும் தேஜ

கும் இனியவளுமான பூமியைப்போலிருப்பதும், ரக்தத்தினால் நன்றாக மூடப்பட்ட உருவமுள்ளதுமான யுத்தபூமியைக்கண்டு, பாச்சிகைக்காய்களால் (வென்று) நாட்டைவிட்டு ஓட்டப்பட்ட அரசர்கள் போலக் கௌரவர்கள் நிற்கவேயில்லை. மன்னரே! அவர்கள் கர்ணனுடையவதத்தினால் மிக்கதுன்பமடைந்தவர்களாகவும் 'ஆ! கர்ண! ஆ! கர்ண!' என்று சொல்பவர்களாகவும் சிவந்தசூரியனைப்பார்த்துக்கொண்டு சேனைகள்தங்கியிருக்கும் இடங்களைநோக்கி விரைவாகச் சென்றார்கள். காண்டீவத்தினின்று விடப்பட்டவைகளும் தங்கமயமான கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கல்லில்தீட்டப்பட்டவைகளும் ரக்தத்தினால் பூசப்பட்ட இறகுகளுள்ளவைகளுமான அம்புகளால் நிறைக்கப்பட்ட அங்கங்களுடன்கூடின கர்ணன் கொல்லப்பட்டும், பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய சூரியன்போல விளங்கினான். அந்தத்தேவஸ்ரேஷ்டர்களும், 'புத்திரனிடத்தில் தயையுள்ள

ஸவியும் பகைவர்களுடையகூட்டத்தைத் தவிக்கச்செய்பவனும் பாஞ்சாலராஜனுடையபுதல்வனுமான திருஷ்டத்யும்னன், அவர்களைக்கொன்று பீமஸேனனை முன்னிட்டுக்கொண்டு விளம்பமின்றி எதிரில் காணப்பட்டான். புறாவுக்கு ஸமமானநிறமுள்ள குதிரைகளையுடையவனும் * கோவிதாரமரத்தைக் கொடியாகக்கொண்டவனுமான த்ருஷ்டத்யும்னனை யுத்தத்தில்கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் பயத்தினால் ஓடினார்கள். கீர்த்தியுள்ளவர்களும் ஸாத்யகியுடன் கூடியவர்களுமான மாத்ரீபுத்திரர்கள், சீக்கிரமாக அஸ்திரங்களையெய்கின்ற காந்தாரராஜனான சகுனியைக் காலதாமதமின்றி எதிர்ப்பவர்களாகக் காணப்பட்டார்கள். பெரியவரே! சேகிதானனும் சிகண்டியும் த்ரௌபதீபுத்திரர்களும் உம்முடைய மிக்கபெரிதானசேனையைக்கொன்று சங்கங்களை அவ்வாறு ஊதினார்கள். அவர்களனைவர்களும் புறங்காட்டிஓடுகின்ற உம்மைச்சேர்ந்தவர்களைப் பார்த்து, கோபமுள்ளவிருஷபங்களை எவ்வாறு விருஷபங்கள் ஜயித்துத் துரத்துமோ அவ்வாறு எதிர்த்துத் துரத்தினார்கள். அரசரே! பலமுள்ளவனும் இடக்கையாலும் அம்புகளைப்பிரயோகிப்பவனுமான பாண்டவன், உமது ஸைன்யத்தைச்சேர்ந்த அந்தமிச்சச்சேனையைக்கண்டு ஸன்னத்தனாகநின்றான்; குரோதத்தையும் அடைந்தான். வீர்யசாலியானதனஞ்சயன் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற காண்டீவமென்கிறவில்லை அசைத்துக்கொண்டு ரதிகர்களுடைய படையை எதிர்த்தான். பிறகு, அவர்களின்மீது பாணஸமூகங்களை விரைவாக இறைத்தான். இருளால் மூடப்படவே, ஒன்றுமே காணப்படவில்லை. மகாராஜரே! உலகம் இருளால் மூடப்பட்டுப் பூமிமுழுவதும் ஒரேபுழுதிஅடர்ந்திருக்கவே, உம்மைச்சேர்ந்த எல்லாயுத்தவீரர்களும் மிக்கபயத்தினால் ஓடினார்கள். ஜனநாதரே! ஸேனையானது நன்கு முறியஅடிக்கப்படவே, எதிரில்வருகின்ற

* காட்டாத்தி அல்லது குராமரம்.

வனை ஸூர்யபகவான் ரக்தஜலத்தினாலனனைக்கப்பட்டிருக்கிற கர்ணனுடையதேகத்தை ரக்தம்போலச் சிவந்தநிறமுள்ள *கராக்ரங்களால்தொட்டு ஸ்நானஞ்செய்வதற்காக அப்பொழுது மேற்கு ஸமுத்திரத்தை அடைந்தானோ' என்றுஎண்ணித் தத்தம்இருப்பிடத்தைக்குறித்துப் புறப்பட்டார்கள். ஆகாயத்திலும் பூமியிலுமிருந்த எல்லாஜனஸமூகமும், ஆச்சர்யகரமானதும் பிராணிகளுக்குப்பயத்தைஉண்டுபண்ணுகிறதுமான சிறந்தகுருவீரர்களான கர்ணார்ஜுனர்களுடைய யுத்தத்தைக்கண்டு, அதனையே நன்குசிந்தித்துக்கொண்டு ஸுகமாகச்சென்றார்கள். கர்ணனுடைய பாணங்களால் நன்றாகநிறைக்கப்பட்டவர்களும் பகைவர்களைத்தவிக்கச்செய்பவர்களுமான கிருஷ்ணார்ஜுனர்கள் இருவரும், இருளை நாசமடையும்படி செய்துகொண்டு உதித்திருக்கின்றவர்களும் கிரணஸமூகங்களுள்ளவர்களும் மாசற்றவர்களுமான ஸூர்யசந்திரர்கள்போல விளங்கினார்கள்.

சத்துருக்களை உம்முடையபுத்திரனை க்ரூரமாக நன்றாகஎதிர்த்து அருகில் சென்றான். பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, துர்யோதனன், முற்காலத்தில் பலியானவன் தேவர்களைச் சண்டைக்கு அழைத்ததுபோல எல்லாபாண்டவர்களையும் போருக்குஅழைத்தான். பரஸ்பரசஸ்திரங்களைத் தரித்தவர்களும் கோபமுள்ளவர்களும் அடிக்கடி வெருட்டுகின்றவர்களுமான அவர்கள் ஒன்றுசேர்ந்து எதிரில் கர்ஜித்துக்கொண்டு அருகில் வேகமாகவந்தார்கள். பிறகு, கோபங்கொண்ட துர்யோதனனும் பரபரப்பில்லாதவனாக யுத்தத்தில் கூரியபாணங்களால் அவர்களை நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கொன்றான். அந்தப் பாண்டவவீரர்களுடைய ஸேனையானது நாற்புறங்களிலும் போர்புரிந்தது. அப்பொழுது, ஒருவனாகஇருந்துகொண்டு, ஒன்றுசேர்ந்திருக்கின்ற எல்லாப் பாண்டவர்களையும் யுத்தத்தில் எதிர்த்துச் சண்டைசெய்ததாகிய ஆச்சர்யகரமான உமது புத்திரனுடைய பௌருஷத்தைக் கண்டோம். பிறகு, மஹாபலசாலியான அந்தத் துர்யோதனன் தன்ஸேனை அதிகதுக்கத்தை அடைந்திருக்கிறதைக் கண்டான். ராஜேந்திரரே! பிறகு, நிச்சயத்தையுடையவனான உம்முடைய புத்திரன், அந்தயுத்தவீரர்களை நிறுத்திச்செய்து ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு இந்தவசனத்தை உரக்கக்கூறினான்: 'பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாக நீங்கள் செல்லக்கூடிய இடத்தை நான் காணவில்லை. எங்கே சென்றாலும் பாண்டவனிடத்திலிருந்து உங்களுக்கு விடுதலை உண்டாகுமா? நீங்கள் ஓடுவதனால் யாது பயன்? இவர்களுடைய ஸேனையோ ஸ்வல்பமிருக்கிறது. கிருஷ்ணார்ஜுனர்கள் நன்றாகக் காயப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். இப்பொழுது எல்லோரையும் கொல்லப்போகிறேன். ஜயம் நிச்சயமாகவும் உண்டாகும்!

சிதறினவர்களும் ஓடுகின்றவர்களும் பாபத்தைச்செய்கின்றவர்களுமான உங்

கிரணங்கள்; கைகள்.

அந்த அம்புத்திரள்களை விலக்கிவிட்டு மஹாபலசாலிகளும் நண்பர்களால் சூழப்பட்டவர்களும் நிகரற்ற பராக்ரமமுள்ளவர்களும் ஸுகிகளும் ஸுகத்தைக்கொடுப்பவர்களுமான அவ்விருவர்களும, சிந்திக்கத்தகாத மகிமையுடன்கூடிய விஷ்ணுவும் இந்திரனும் ஸபையில் விளங்குவதுபோல விளங்கினார்கள். அப்பொழுது, மகாயுத்தத்தில் கர்ணனைக்கொன்று தேவர்களோடும் கந்தர்வர்களோடும் மனுஷ்யர்களோடும் சாரணர்களோடும்கூடின மஹரிஷிகளாலும் யக்ஷர்களாலும் மகோரகர்களாலும், 'உத்தமமான ஜயம் மேல்மேலும் உண்டாகுக' என்று சொல்லிப் பூஜிக்கப்பட்டார்கள். பிறகு, தக்கபடி அவர்களுக்குப் பிரதிமர்யாதைசெய்து நிகரில்லாதசெய்கைகளால் புகழப்படுகின்றவர்களும் ஸுஹ்ருத்துக்களால் சூழப்பட்டவர்களுமாகிப் பலனென்கிற அஸுரனைக் கொன்று கேசவரும் தேவராஜனும் ஸந்தோஷித்தது போல ஸந்தோஷமடைந்தார்கள்.

---

களைப் பாண்டவர்கள் பின்தொடர்ந்து கொல்லப்போகிறார்கள். நமக்கு யுத்தத்தில் வதம் நன்மையைப்பயக்கக்கூடியதன்றோ? க்ஷத்திரியதர்மத்தோடு யுத்தம் செய்கிறவர்களுக்கு யுத்தத்தில்நேருகின்ற மரணமானது ஸுககரமானது. மாண்டவன் துக்கத்தைஅறிகிறதில்லை; மரித்தும், மோக்ஷத்தை அடைகிறான். வந்திருக்கிறக்ஷத்ரியர்களாகிய நீங்களெல்லோரும் கேளுங்கள். பிராணிகளுடையஉயிரைவாங்குகிற யமன், சூரனையும் பயப்படுகிறவனையும் கொல்லுகிறானதலால, க்ஷத்திரியவிரதத்தையுடையவனான என்னைப்போன்ற எந்த விவேகிதான் யுத்தம்செய்யமாட்டான்? சினமுள்ளவனும் பகைவனுமான பீமஸேனனுடையவசத்தை அடையப்போகிறீர்கள். பாட்டன்மார்களால் அனுஷ்டிக்கப்பட்டுவந்த தர்மத்தை நீங்கள் விடுவது தகுதியன்று. க்ஷத்திரியனுக்கு ஓடுவதைவிட அதிகபாபமான அதர்மம்இல்லை. யுத்தமென்னும்தர்மத்தைக்காட்டிலும் மிகச்சிறந்ததும் இல்லை. (இது) ஸ்வர்க்கத்திற்கு வழி. கௌரவர்களே! ஓ! யுத்தவீரர்களே! நீங்கள், தாமதமின்றிக் கொல்லப்பட்டு இந்தநிமிஷத்திலேயே மேலானஉலகங்களை அடையுங்கள்' என்றுகூறினன். உம்முடைய புத்திரனனவன் இவ்வாறுசொல்லும்போது, அதிகமாகக் காயப்படுத்தப்பட்ட (உமது)போர்வீரர்கள் அந்தவாக்கியத்தைக் கவனியாமலே எல்லாத்திக்குக்களிலும் ஓடினார்கள். அதிகபயமடைந்தவனும் மிக்கமனமயக்கமுற்றவனும் மத்ரராஜனுமான சல்யன், உம்முடையபுத்திரனை துர்யோதனனால் தடுத்துத் திருப்பப்படுகின்ற ஸைன்யத்தைக்கண்டு, அப்பொழுது, அவனைப்பார்த்து இந்த வாக்கியத்தை உரைத்தான்.

## நூறுவது அத்யாயம்.

(கிருஷ்ணார்ஜுனர்கள் யுதிஷ்டிரரிடம் சென்றது.)

பாணங்களால் கவசம்அறுக்கப்பட்டவனும் இரத்தத்தினால் மார்புநனைக்கப்பட்டவனுமான ராதேயனை,உயிர்போயிருந்தும், காந்தியானது விடவேயில்லை. புடம்போடப்பட்ட தங்கத்துக்குநிகரானவனும் பாலசூரியனுக்குஒப்பான காந்தியுள்ளவனுமானஅந்தச்சூரனை எல்லாப்பிராணிகளும் உயிரோடிருப்பவனைப்போலவே எண்ணின. மஹாராஜரே! யுத்தத்தில் கொல்லப்பட்டிருந்தும், அவனைக் கண்டு நான்குபக்கத்திலுமுள்ள யுத்தவீரர்கள், ஸிம்மத்தைக்கண்டு மற்றமிருகங்கள் நடுங்குவதுபோல நடுக்கமுற்றார்கள். புருஷஶ்ரேஷ்டனான காணன், கொல்லப்பட்டிருந்தும், பேசுகிறவன்போலக் காணப்பட்டான். உயிரை இழந்திருந்தும், மஹாத்மாவான கர்ணனுக்கு ஒருவிதமான விகாரமும் உண்டாகவில்லை. அரசரே! அழகான வேஷத்தைத்தரித்ததும் அழகியதலையும்கழுத்துமுள்ளதுமான அந்த ஸூதபுத்திரனுடைய முகமானது பூர்ணசந்திரனுக்கு ஒப்பான காந்தியுடன்கூடியதாக இருந்தது. சிறந்த பொன்போன்றவனும் ஜ்வலிக்கின்ற அக்னிபோன்றவனும் புருஷஶ்ரேஷ்டனுமான அந்தக்கர்ணன், பார்த்தனுடைய பாணங்களாகிற ஜலத்தினால் தணிந்தான். ஜ்வலிக்கின்ற நெருப்பானது எவ்வாறு ஜலத்தை அடைந்து தணியுமோ அவ்வாறு யுத்தத்தில் கர்ணனாகிற நெருப்பானது, பார்த்தனாகிறமேகத்தினால் தணிக்கப்பட்டது. அந்தக்கர்ணன் நல்லயுத்தத்தினால் ஜ்வலிக்கின்றகீர்த்தியைத் தனக்குப் பூமியில் தேடிவைத்துவிட்டுப் புத்திரர்களோடுகூடப் பார்த்தனுடைய தேஜஸினால் யுத்தத்தில் தணிந்தான். அரசரே! பற்பலஆபரணங்களையணிந்தவனும் புடம்போடப்பட்ட தங்கத்துக்குஒப்பான ஒளிபொருந்தினவனும் ஸூர்யகுமாரனுமான கர்ணன், எல்லாப்பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் அஸ்திரதேஜஸினால் நன்றாகத்தவிக்கச்செய்து சரமாரிகளைப்பொழிந்து பகைவர்சேனையைத் தவிக்கச்செய்து சிறந்தஒளிபொருந்தினவனான சூரியன்போல விளங்கிக்கொண்டு, எல்லோரையும் வாட்டி, துளிர்த்தமரம்போல அடித்து வீழ்த்தப்பட்டான். எவன், 'கொடுக்கக்கடவேன்' என்றே எப்பொழுதும் ஸாதுக்களுக்குக் கொடுத்தானோ, யாசிக்கப்பட்டால், 'இல்லை' என்று சொன்னதில்லையோ, அந்தஸத்புருஷனான கர்ணன்*த்வைரத யுத்தத்தில் கொல்லப்

* இரண்டுதோராளிகள் ஒருவரையொருவர் எதிர்ப்பது.

பட்டான. மன்னரே! மஹாத்மாவான எவனுடைய தனமானது முழுதும் ப்ராம்மணாதீனமாக ஆயிற்றோ, எவனுக்குத் தன்னுயிரும் ப்ராம்மணவிஷயத்தில் கொடுக்கத்தகாததாகவில்லையோ, கொடுப்பவர்களுள் ப்ரியனும் விரும்பினவற்றைக் கொடுப்பவனுமான அந்தக் கர்ணன், பார்த்தனுடைய அஸ்திரத்தினால் மிச்சமின்றி எரிக்கப்பட்டு உத்தமகதியை அடைந்தான். எவனை ஆதாரமாகக்கொண்டு உம்முடையபுத்திரன் வைரத்தை உண்டுபண்ணினானோ அந்தக்கர்ணன், உமது புத்திரர்களுடைய ஜயத்திலிருந்த ஆசையையும் ஸுகத்தையும் கவசத்தையும் பறித்துக்கொண்டு ஸ்வர்க்கம்சென்றான். கர்ணன் கொல்லப்படவே, நதிகளும் பெருகியோடவில்லை. ஸூர்யனும் கலங்கினவனாக அஸ்தமனத்தை அடைந்தான். வெண்ணிறமுள்ள கிரகமும் ஜ்வலிக்கின்றஸூரியனுடையநிறம்போன்ற நிறமுடையதாயிற்று. யமனுடைய அந்தப் புத்திரனும் வக்ரமாக உதித்தான். பிறகு, ஆகாயம் நடுங்கியது. பூமியானது கர்ஜித்தது. க்ரூரமாகவும் கோரமாகவும் காற்றுக்கள் வீசின. திசைகள் ஜ்வலிக்கின்றவைகளும் புகையுள்ளவைகளுமாயின. மஹாஸமுத்திரங்கள் கர்ஜித்தன; கலங்கின. பெரியவரே! கானகங்களுடன்கூடப் பெருமலைகளும் நடுங்கின. பூதகணங்களும் அதிகமாகத் துன்பமடைந்தன. பிரஜைகளுக்கு நாதரே! ப்ருஹஸ்பதியானவர் ரோஹிணிநக்ஷத்திரத்தைத்தடுத்துக்கொண்டு சந்திரனுக்கும் ஸூரியனுக்கும் ஸமமாயினர். கர்ணன்கொல்லப்பட்டவுடன், திசைகள் பிராணிஸஞ்சாரமற்றவையாயின. சந்திரனுடனும் ஸூரியனுடனுங்கூடின ஆகாயமும் பூமியும் அசைவுற்றன. நெருப்புஜ்வாலைகளுடன்கூடின குறைக்கொள்ளியும் விழுந்தது. ராக்ஷஸர்கள் மிக்க ஸந்தோஷமுள்ளவர்களானார்கள். அர்ஜுனன், சந்திரனுடைய பிரகாசம்போன்ற பிரகாசமுள்ள முகத்துடன்கூடிய கர்ணனுடைய தலையைப் பாணத்தால் அறுத்தபொழுது, ஆகாயத்தில் தேவர்களால் உண்டுபண்ணப்பட்ட 'ஆ! ஆ!' என்னும் சப்தமானது உடனே தோன்றியது. வேந்தரே! அர்ஜுனன், தேவர்களாலும் கந்தர்வர்களாலும் மனிதர்களாலும் பூஜிக்கப்பட்ட சத்துருவான கர்ணனை யுத்தத்தில் வதஞ்செய்து, முற்காலத்தில் விருத்ரனைக்கொன்று இந்திரன் விளங்கினதுபோலச் சிறந்த காந்தியினால் விளங்கினான். மஹேந்திரனுடையவீர்யத்துக்கொப்பான வீர்யத்துடன்கூடியவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களும் யாதவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவர்களுமான அந்தக்கிருஷ்ணார்ஜுனரிருவரும் கொடித்துணிகளுடன்கூடிய

தும் பயங்கரமான சத்தத்துடன்கூடின கொடியுள்ளதும் சங்குபோல வும் ஸ்படிகம்போலவும் பிரகாசிக்கின்றதும் மஹேந்திரனுடைய வாக னத்துக்குஒப்பானதும் ஸ்வர்ணத்தினலும் முத்துக்களாலும் மணிக ளாலும் வஜ்ரங்களாலும் பவளங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் ஒப் பற்ற வேகத்துடன்கூடியதுமான தேருடன், இரண்டு சூரியர்கள்போ லவும் ஜ்வலிக்கின்ற இரண்டு அக்னிகள்போலவும் ஸமமானசேர்க்கை பெற்றிருக்கின்ற விஷ்ணுமஹேந்திரர்கள்போலவும் இருந்துகொண்டு யுத்தரங்கத்தில் பயமற்றவர்களாக விளங்கினார்கள். பிறகு, வானரத்வஜ னை அந்தஅர்ஜுனனும் கருடத்வஜரான ஸ்ரீவாஸுதேவரும், வில், நாண்கயிறு கையுறை சக்கரங்களின்நேமி இவைகளுடைய ஒலி களால் சத்துருக்களைப் பலாத்காரமாக ஒளியைஇழந்தவர்களாக்கி அவர்களைப் பாணஸமூகங்களால அழித்து அவர்களுடைய உள்ளங் களைத் தவிக்கச்செய்து மிக்கஒலியுள்ள சிறந்தசங்கங்களை உரக்கஊதி னார்கள். மனிதர்களுள் சிறந்தவர்களான கிருஷ்ணார்ஜுனர்கள், பொன்னலங்காரங்களால் நிரம்பினவையும் பேரொலியுள்ளவையும் பனிபோல வெண்ணிறமுள்ளவையுமான சிறந்த இரண்டுசெங்கங்களைக் கைகளால்பிடித்து மூவுலகங்களிலும் வெற்றியை வெளிப்படுத்திக் கொண்டு ஊதினார்கள். பாஞ்சஜன்யம், தேவதத்தம் என்கிற இரண்டு சங்கங்களுடைய ஒலியும், பூமியையும் ஆகாயத்தையும் திக் குக்களையும் நிரப்பிற்று. ராஜஸ்ரேஷ்டரே! சூரர்களான மாதவர் அர்ஜுனன் இருவருடையசங்கநாதத்தினலும் கௌரவர்களனைவரும் விசேஷமாக நடுக்கமுற்றார்கள். அவ்விருவரும் சங்கத்தினுடைய ஒலியினால் காடுகளையும் மலைகளையும் நதிகளையும் குகைகளையும் எதி ரொலியிடும்படி செய்துகொண்டும் உமதுபுத்திரனுடைய ஸேனையை மிக்க பயமடையும்படிசெய்துகொண்டும் யுதிஷ்டிரரை ஸந்தோஷப் படுத்துவதற்காகச் சென்றார்கள். பாரதரே! பிறகு, ஊதப்படு கின்ற சங்கங்களின்ஒலியைக் கேட்டவுடனே, கௌரவர்கள் மத்ர தேசாதிபதியான சல்யனையும் பாரதர்களுக்கு அரசனான துர்யோ தனனையும் விட்டுவிட்டு வேகத்துடன் ஓடிவிட்டார்கள். பிறகு, மேகக்கூட்டம்போலச் சத்தமிடுகின்றவையும் சரத்காலத்தில் பக லின் நடுவை அடைந்திருக்கின்ற சூரியனுடைய காந்திபோன்ற காந்தியுள்ளவையுமான தனஞ்சயன் கர்ணன்இவர்களின் ரதங்களினால் ஆச்சர்யமடைந்தவர்களாகி, அப்பொழுது மஹாயுத்தத்தில் அதிகமாக விளங்குகின்ற அர்ஜுனனைப் புகழ்ந்துகொண்டு சென்றார்கள். உதித் திருக்கிற இரண்டு சூரியர்கள்போன்ற அந்தத் தனஞ்சயனையும் கேச

வரையும் யுத்தவீரர்களுடைய கூட்டங்களோடுகூடின ஜனங்கள் அதிகமாகக் கொண்டாடினார்கள்.

## நாற்பத்தொன்றாவது அத்யாயம்.

(அர்ஜுனன் யுதிஷ்டிரரை வணங்கியதும், அவர் கிருஷ்ணார்ஜுனர்களைப் புகழ்ந்ததும், யுதிஷ்டிரருக்கும் வாஸுதேவருக்கும் ஸம்பாஷணையும்.)

ஸூதகுமாரனான கர்ணன் கொல்லப்பட்டவுடன், கௌரவர்கள் பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாக எல்லாத்திக்குக்களையும் பார்த்துக்கொண்டு ஆயிரமாயிரமாக ஓடினார்கள். ஸ்ரீராமரால் ராவணன் கொல்லப்பட்டதைக்கண்டு ராக்ஷஸர்கள் பயந்தோடினதுபோல உம்மைச் சேர்ந்தவர்கள் பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகத் திசைகளில் ஓடினார்கள். மன்னரே! பாரதரே! பிறகு, அதிகமாகப் பயந்திருக்கின்ற யுத்தவீரர்கள் உம்முடைய புத்திரனால் நாற்புறத்திலும் தடுக்கப்பட்டவர்களாகிப் பெருங்கூச்சலிட்டார்கள். பாரதரே! பிறகு, உமது புத்திரன், அவர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து, சல்யனுடைய ஸம்மதத்தின்மேல் யுத்தத்தை நிறுத்தினான். பாரதரே! க்ருதவர்மா, யுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவர்களால் விரைவாகச் சூழப்பட்டவனாக மிகுதியிருக்கின்ற நாராயணர்களோடு ஸேனை தங்கியிருக்கும் இடத்தை நோக்கியே விரைவாகச் சென்றான். பிறகு, சூரரான அச்வத்தாமா, பாண்டவர்களுடைய ஜயத்தைக்கண்டு அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு பாசறையையே நோக்கிச்சென்றார். அரசரே! பாரதரே! சரத்வானுடைய குமாரரான கிருபர், பெரியதும் மேகம்போன்றதுமான யானைப்படையுடன் சேனை தங்கியிருக்கும் இடத்தைக் குறித்தே விரைவாகச் சென்றார். அரசரே! சகுனி, ஆயிரம் காந்தாரர்களால் சூழப்பட்டுச் சென்றான். ஸுசர்மாவும், பயத்தினால் பீடிக்கப்பட்டவனாகப் பார்த்துக்கொண்டே சென்றான். அந்தத் துர்யோதனனும் எல்லாச் சொத்துக்களும் கவரப்பட்டவனாகவும் துக்கத்தால் பீடிக்கப்பட்டவனாகவும் ஞாதிகளுடைய (நாசத்தினால்) சோகத்தை அடைந்தவனாகவும் அடிக்கடி (அந்தக்கஷ்டங்களை) நினைத்துக்கொண்டு சென்றான். ரதிகர்களுள் உத்தமனான சல்யனோ, த்வஜம் அறுக்கப்பட்ட ரதத்துடன் பத்துத்திக்குக்களையும் பார்த்துக்கொண்டு பாசறையைக் குறித்தே சென்றான். பிறகு, பரதகுலத்திற்பிறந்த வீரர்களுள் இன்னும் மற்ற அநேக மஹாரதர்கள், பயந்தவர்களாகவும் பயத்தினால் மனம் தளர்ந்தவர்களாகவும் திசைகளில் ஓடினார்கள். கீழே தள்ளப்பட்டிருக்

கிற கர்ணனைக்கண்டு, கௌரவர்களெல்லாரும் கண்ணீர்நிறைந்தவர்களாகவும் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகவும் துடிக்கின்றவர்களாகவும் பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகவும் வேகமாக ஓடினார்கள். கௌரவர்களுள் உத்தமரே! சிலமகாரதர்கள் அர்ஜுனனைப் புகழ்ந்தார்கள். சிலர் கர்ணனைப் புகழ்ந்தார்கள். கௌரவர்கள் யுத்தத்தில் பயந்தவர்களாக வேகத்துடன்சென்றார்கள். அந்தமஹாயுத்தத்தில் ஆயிரக்கணக்கான உம்மைச்சேர்ந்தயுத்தவீரர்களுள் யுத்தத்தில்மனத்தைச் செலுத்தினபுருஷன் ஒருவனுமில்லை. மகாராஜரே! கர்ணன்கொல்லப்பட்டவுடன், கௌரவர்கள், உயிர்களிலும் ராஜ்யங்களிலும் மனைவிகளிடங்களிலும் பொருள்களிலும் ஆசையை இழந்தவர்களானார்கள். பிரபுவே! துக்கத்தோடும் சோகத்தோடுங்கூடின உம்முடையகுமாரன், பெரியமுயற்சியினால் அவர்களை ஒன்றுசேர்த்தழைத்து, தந்தம் இடங்களில் தங்கும்படிசெய்வதற்கு மனத்தைச் செலுத்தினான். அரசரே! தீனர்களான மகாரதர்கள், அவனுடைய ஆஜ்ஞையைத் தலையினால் ஏற்றுக்கொண்டு, மனத்தில் துக்கமுள்ளவர்களாகப் பயத்துடன் வாஸஸ்தானங்களில் அமர்ந்தார்கள். அவர்கள், யுத்தத்தில்நடந்த ஸூதபுத்திரனுடைய கோரமானவதத்தையும் யுத்தத்தில் அர்ஜுனனுடைய ஜயத்தையும் அடிக்கடி நினைத்துக்கொண்டு அங்கு வஸித்தார்கள். மஹாவில்லாளிகளும் சத்துருக்களைத் தவிக்கச்செய்கின்றவர்களும் மஹாரதர்களுமான எல்லாப்பாண்டவர்களும் சத்துருவை ஜயித்து மிக்கஸந்தோஷமுள்ள மனமுடையவர்களாக வீற்றிருந்தார்கள். பிறகு, அவ்விடத்தில் ஸந்தோஷத்துடனிருக்கின்ற யுதிஷ்டிரரை எல்லாப்பாஞ்சாலர்களும் அடைந்து விதிப்படி விருத்தியடையும்படி செய்தார்கள். மஹாகீர்த்திசாலியான அர்ஜுனனோ, ரதத்தினின்று விரைவாக இறங்கி ஸந்தோஷமுள்ளவனாகத் தர்மராஜருடைய இரண்டு கால்களையும் பிடித்துக்கொண்டான். மஹாராஜரே! சிறந்த பிரதாபமுள்ள தர்மபுத்திரர், பாரதஸ்ரேஷ்டனான அவனைத் தூக்கி நிறுத்தி அவனைக் கட்டிக்கொண்டு உச்சிமோந்து தடவிக்கொடுத்தார். நகுலனும் ஸஹதேவனும் பாண்டுபுத்திரனான வ்ருகோதரனும் மஹாராஜரை அபிவாதனம்பண்ணிப் பல்குனனைக் கட்டிக்கொண்டார்கள். ஸூதபுத்திரன்கொல்லப்பட்டவுடனே, த்ருஷ்டத்யும்னனும் சிகண்டியும் (மற்றப்) பாண்டவாதிகர்களும் அரசரை (மங்களவசனங்களால்) விருத்தியடையச்செய்தார்கள். மஹாராஜரே! பிறகு, ஸூதநந்தனன் கொல்லப்பட்டவுடனே, வாஸுதேவரும் ஸாத்வதகுலத்தில்தோன்றின ஸாத்யகியும் அரசரை (உத்ஸாஹத்தை) விருத்தியடையும்படி

செய்தார்கள். வாஸுதேவரும், குந்திபுத்திரரான யுதிஷ்டிரரைப் பார்த்து, நேசத்தினால் இந்தவசனத்தை உரைத்தார். 'அரசரே! ரதிகர்களுள் சிறந்தரதிகனும் ஸூர்யபுத்திரனுமான கர்ணன் கொல்லப்பட்ட பிறகு, ராஜஸிம்ஹங்களுடன்கூடின எல்லாக் கௌரவர்களும் இப்பொழுது கொல்லப்பட்டுவிட்டார்கள். இந்திரனுடன்கூடின மூவுலகங்களும்முழுமையும் போர்புரிந்தாலும் கர்ணன் ஜயிக்கப்படத்தகாதவன். அவ்வாறிருந்தும், உம்முடையகோபத்தால அழிக்கப்பட்டான்' என்றார். இவ்வாறு சொல்லக்கேட்ட தர்மராஜர், ஜனார்த்தனரைப்பார்த்து, 'கோவிந்தரே! உம்முடைய அனுக்கிரஹத்தினால் மிக்க புகழுள்ளவனான கர்ணன் கொல்லப்பட்டான்; பாண்டவர்களும் ஜயத்தை அடைந்தார்கள்; பகைவர்களும் நாசம்செய்யப்பட்டார்கள். நீர் யுத்தத்தில் எவனிடத்திலிருந்தும்உண்டாகிற பயத்தினின்றும் ரக்ஷிப்பதற்கு வல்லமையுள்ளவரன்றோ? நீர் இவ்வுலகத்திற்கு ரக்ஷகர்; எப்பொழுதுமே பாண்டவர்களுக்கு ரக்ஷகர். உம்மை அடுத்து இந்திரனும் தேவலோகத்தில் நித்யமாக ஆனந்தத்தை அடைந்துகொண்டிருக்கிறான். நீர் உலகத்திற்கு ரக்ஷகராயிருப்பதுபோலவே பாண்டுபுத்திரர்களுக்கும் ரக்ஷகராயிருக்கிறீர். பிரபுவே! எவர்களுக்கு உம்மிடத்தில பக்தி இருக்கிறதோ அவர்களுக்கு ஜயமுண்டாவது ஆச்சர்யமன்று. கோவிந்தரே! ஜனார்த்தனரே! முற்காலத்தில் தேவர்கள், உம்மாலும் இந்திரனாலும் எவ்வாறு ரக்ஷகருள்ளவர்களானார்களோ அவ்வாறே ரக்ஷகரானஉம்மால் யுத்தத்தில் நாங்கள் ரக்ஷகருள்ளவர்களாகிறோம். மாதவரே! இன்று ஸுகமாகத் தூங்கப்போகிறேன். நான் இரவில் நித்திரையைப் பெறுவேன். உம்முடைய அனுக்கிரஹத்தினால் இன்று என்னுடைய பயம் போய்விட்டது. ஸம்சயமில்லை' என்று மறுமொழியுரைத்தார். யுதிஷ்டிரர் இவ்வாறு உரைக்கக்கேட்ட கேசவர், பாண்டவரைப்பார்த்து, 'அரசரே! சூரர்களான பீமஸேனன்முதலான ஸஹோதரர்களும் அவ்வாறே இந்திரனுடைய வீர்யம்போன்ற வீர்யமுள்ள பார்ஷதனை முதன்மையாகக்கொண்ட ஸம்பந்திகளுமுள்ள உமக்கு ஸந்தோஷமுண்டாவதற்குக் காரணமான இக்காரியத்தில் நாம் நிமித்தமாத்திரமே. எப்பொழுதுமே என்னிடத்தினின்று பிரியத்தையும் ஹிதத்தையும் அடைவதற்கு நீர் தகுதியுள்ளவர். நரஸ்ரேஷ்டரே! நீர் இந்த வசனத்தினால் என்னுடைய பிரீதிக்குவிஷயமாக இருக்கிறீரன்றோ?' என்று கூறினர். இவ்வாறு சொல்லக்கேட்ட அரசரும் புருஷஸ்ரேஷ்டருமான தர்மராஜரோடு ஸ்வர்ணத்தாலலங்கரிக்கப்பட்டவைகளும் தந்

தத்தின் நிறம்போன்ற நிறமுடையவைகளும் கழுத்தில் வாலுள்ளவை களுமான குதிரைகள் பூட்டின தமது ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, தமது ஸேனையினால் சூழப்பட்டு, பலருடைய வ்ருத்தாந்தங்களைப் பார்ப்பதற்காக யுத்தகளத்தைக்குறித்துச் சென்றார். வீரரே! அந்த மாதவர் பாண்டவர் இருவரும் பேசிக்கொண்டே சென்றார்கள். அந்த யுதிஷ்டிரர், காண்டீவத்தினால் விடப்பட்ட பாணங்களால் நாற் புறங்களிலும் நன்றாகப் பிடிக்கப்பட்டவனும், யுத்தரங்கத்தில் படுத் திருப்பவனும் புருஷஶ்ரேஷ்டனுமான கர்ணனைக்கண்டார். யுதிஷ்டிர ராஜர், புத்திரனோடுகூடக்கொல்லப்பட்டிருக்கும் கர்ணனைக்கண்டு, புருஷஶ்ரேஷ்டர்களான மாதவரும் அர்ஜுனனுமாகிய இருவரையும் புகழ்ந்தார். 'மதுஸூதனரே! பூமிமுழுமைக்கும் இப்பொழுது நான் அரசனானேன். கோவிந்தரே! பாக்யத்தினாலே நீர் ஜயசீலராக இருக் கிறீர். சத்துருவானவன் பாக்கியத்தால் கீழே தள்ளப்பட்டான்' என்று கூறினார். 'வேந்தரே! கௌரவர்களுட் சிறந்தவரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர், இவ்வாறு ஜனார்த்தனரையும் அர்ஜுனனையும் பலபடப் புகழ்ந்தார். குருவம்சத்தைத் தாங்குபவரான யுதிஷ்டிரர், பார்த்த னுடைய அம்புகளால் புத்திரனோடுகூடக் கொல்லப்பட்டிருக்கிற கர்ணனைக்கண்டு, தம்மை மறுபடியும் பிறந்தவரைப்போலெண்ணி னார். மஹாரதர்களான மன்னர்கள், குந்திபுத்திரரும் குருஶ்ரேஷ்டரு மான யுதிஷ்டிரரை ஸந்தோஷத்துடன் வந்தடைந்து விருத்தி யடையும்படி செய்தார்கள். அரசரே! உம்முடைய துராலோச னையினாலுண்டானதும் மிகப்பெரிதும் மயிர்க்கூச்சத்தை உண்டு பண்ணக்கூடியதுமான இந்த அழிவானது இவ்வாறு நேர்ந்துவிட் டது. நீர் துரதிருஷ்டத்தால் நயப்படுகிறீர்" என்று சொன்னான்.

பூமிக்குப் பதியும் இந்தக் குருகுலத்துதித்தவனும் அரசனு மான திருதராஷ்டிரன், இந்த அப்பிரியமான வார்த்தையைக் கேட்டு அசைவற்று உத்தமமான ஆஸனத்திலிருந்து பூமியில் விழுந் தான். அவ்வாறே, ஸத்யமான விரதத்தையுடையவளும் திவ்ய திருஷ்டியுள்ளவளுமான காந்தாரிதேவியும் கீழே விழுந்தாள். பிறகு, விதுரரும் ஸஞ்சயனுமாகிய இவ்விருவருமே பூமியை ரக்ஷிக்கிற அரசனான அந்தத் திருதராஷ்டிரனைக் களை தெளிவித்தார் கள். அவ்வாறே, கௌரவஸ்திரீகளும் காந்தாரியைக் களை தெளிவித்தார் கள். அரசரே! பாரதரே! அவ்விருவர்களாலும் தேறுதலடையும் படி செய்யப்பட்ட அந்தத் திருதராஷ்டிரராஜன் தெய்வத்தையும் வரக்கூடியதையும் சிறந்தவையென்று நினைத்தான்; பேசாமலுமிருந்

நான். ராஜஸ்ரேஷ்டரே! மகாத்மாவான கர்ணன் கொல்லப்பட்ட புடன், ஸஞ்சயன் அரசனுக்கு இவ்வண்ணம் நடந்தவிருத்தாந் நத்தை உரைத்து மீண்டும் பாசறை சென்றான். அரசரே! அந்த ஸஞ் சயன், கொல்லப்பட்ட சல்யனையும் ராஜாவான துர்யோதனனையும் சகுனியையும் ஆயிரக்கணக்கான அனேக ஸைனிகர்களையும், அவ்வாறே ஸௌப்திகத்தில த்ரோணபுத்திரரால் கொல்லப்பட்ட குதிரைகளுடனும் மனிதர்களுடனும் யானைகளுடனும்கூடியதும் கொல்லப்பட்ட துமான பாண்டவஸேனையையும், நாற்புறத்திலும் கொல்லப்பட்டிருக்கிற எல்லாப்போர்வீரர்களையும் யுத்தத்தில்கண்டு, சோகத்தினால் பீடிக்கப்பட்டவனாகவும் பயத்தினால் சோர்வடைந்தவனாகவும் ஹஸ்தினாபட்டணத்தைக்குறித்துச் சென்றான். பிரஜைகளுக்கு நாதரே! மிகுதியான இந்தயானைகளும் குதிரைகளும் கொல்லப்படவே, பற்பல தேசங்களில் தோன்றினவர்களும் யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களுமான பாண்டவஸேனாவீரர்களும் கௌரவஸேனாவீரர்களும் அற்று அந்தக் குருக்ஷேத்திரம் முழுதுமே சூன்யமாயிற்று. ஸஞ்சயன், துர்யோதனனுடைய யுத்தவிருத்தாந்தம் நடந்தது முழுமையையும் நடந்தபடியும் முறைப்படியும் சொன்னான்.

மஹாத்மாவான தனஞ்சயனுக்கும் கர்ணனுக்கும் நடந்த இவ்விதமான மஹாயுத்தத்தை எவன் படிப்பனோ, எவன் நாள்தோறும் கேட்பனோ அவன் நன்குஅனுஷ்டிக்கப்பட்ட யாகத்துக்குரிய பலனை அடைவான். ஷாட்குண்யங்களால் நிறைந்தவரும் சாஸ்வதமாக இருப்பவரும் வாயுவினாலும் சந்திரனாலும் சூரியனாலும் வகிக்கப்படுபவருமான விஷ்ணுவே யாகரூபமாக இருக்கிறார். ஆதலால், அஸூயை இல்லாதவனாக இதனைப் படிப்பவனும் கேட்பவனுமான மனிதன் எல்லாஉலகங்களையும் ஜயிப்பான்; ஸுகியும் ஆவான்' என்று கூறினார்.

பதினேழாவதுநாள் யுத்தம் முடிந்தது.

---

கர்ணபர்வம் முற்றிற்று.

